# இஸ்லாம் கிறிஸ்தவம்

## 1000 சின்னஞ்சிறு கேள்வி பதில்கள்

**(பாகம் 1 - 500 கேள்விகள்/பதில்கள்)**



**ஆன்சரிங் இஸ்லாம் தமிழ் – Jan 2021**

(https://www.answering-islam.org/tamil & http://isakoran.blogspot.com/)

பொருளடக்கம்

**தலைப்பு: குர்ஆன் (90 கேள்வி பதில்கள்)** ........ 4
**தலைப்பு: பைபிள் (80 கேள்வி பதில்கள்)** ........ 67
**தலைப்பு: முஹம்மது (70 கேள்வி பதில்கள்)** ........ 192
**தலைப்பு: அல்லாஹ் – யெகோவா (30 கேள்வி பதில்கள்)** ........ 271
**தலைப்பு: கிறிஸ்தவம் (50 கேள்வி பதில்கள்)** ........ 292
**தலைப்பு: இஸ்லாமிய கலைச்சொற்கள்/அகராதி (60 கேள்வி பதில்கள்)** ........ 359
**தலைப்பு: இஸ்லாம் (60 கேள்வி பதில்கள்)** ........ 418
**தலைப்பு: ஹதீஸ்கள்/சீரா (30 கேள்வி பதில்கள்)** ........ 487
**தலைப்பு: பெண்கள் (30 கேள்வி பதில்கள்)** ........ 515

## இஸ்லாம் மற்றும் கிறிஸ்தவத்தை அறிய உதவும் சின்னஞ்சிறு கேள்வி பதில்கள் 1000

### முன்னுரை:

இஸ்லாமை கற்றுக்கொள்ள பல ஆய்வுக் கட்டுரைகள் தமிழில் பதித்துக்கொண்டு வருகிறேன். பல ஆண்டுகளுக்கு முன்பு தொடர்ந்த இந்த பயணத்தில் இன்றுவரை 800க்கும் அதிகமான கட்டுரைகள் நம் தளங்களில் (ஈஸா குர்ஆன் & ஆன்சரிங் இஸ்லாம்) பதிக்கப்பட்டுள்ளது.

இன்று மக்கள் சின்னத்திரையில் அதாவது மொபைள் போனில் அதிகமாக நேரத்தை செலவிடுகிறார்கள். மேலும், வாட்ஸப் மூலமாக அனேக விவரங்களை பகிர்ந்துக்கொண்டும், கற்றுக்கொண்டும் வருகிறார்கள். மக்கள் சுலபமாக இஸ்லாம் மற்றும் கிறிஸ்தவம் பற்றி அறிந்துக்கொள்ள வசதியாக இருக்கும் என்பதால், சின்னஞ்சிறு கேள்விகள் 1000+ என்ற தலைப்பில் கேள்வி பதில்களை எழுதலாம் என்று விரும்பினேன். இவைகளை சுலபமாக வாட்ஸப்பில் படிக்கமுடியும் மற்றும் மற்றவர்களுக்கும் அனுப்பமுடியும்.

இந்த தொடரின் பெரும்பான்மையான பதில்கள், ஒரு வார்த்தை அல்லது ஒரு வாக்கியமாகவே இருக்கும். சில கேள்விகள் மட்டும் அதிகபட்சமாக நான்கு பத்திகள் அதாவது ஒரு பக்கம் மட்டுமே இருக்கும். சில கேள்விகள் நீண்ட பதில்களாக இருக்கும், இப்படிப்பட்ட நீண்ட பதில்களும் தேவை. ஒருவர் இந்த 1000 கேள்விகளை படித்தால், இஸ்லாமையும், கிறிஸ்தவத்தையும் சுலபமாக அறிந்துக்கொள்ள முடியும். மேலும் இஸ்லாமையும் கிறிஸ்தவத்தையும் இன்னும் ஆழமாக கற்றுக்கொள்ள ஆர்வம் உண்டாகும்.

இப்போதைக்கு 1000 கேள்விகளை கீழ்கண்ட தலைப்புக்களில் தயார் செய்துள்ளேன்.

### தலைப்புக்கள்:

1. குர்ஆன்
2. அல்லாஹ் - யெகோவா
3. முஹம்மது
4. ஹதீஸ்கள் - சீரா(முஹம்மதுவின் வரலாறு)
5. இஸ்லாம்
6. பெண்கள்
7. பைபிள்
8. கிறிஸ்தவம்
9. கலைச்சொற்கள்
10. இஸ்லாமிய அறிஞர்கள்
11. இஸ்லாமிய புத்தகங்கள்/தளங்கள்

வாசகர்களுக்கு ஏதாவது கேள்விகள் தோன்றினால், **எனக்கு எழுதவும்** அவைகளுக்கும் பதில்கள் கொடுக்க முயலுவேன்.

---

## தலைப்பு: குர்ஆன் (90 கேள்வி பதில்கள்)

**கேள்வி 1:** குர்ஆனின் மூல மொழி என்ன?

**பதில் 1:** அரபி மொழி



**கேள்வி** 2: குர்ஆனில் எத்தனை அத்தியாயங்கள் மற்றும் வசனங்கள் உள்ளன?

**பதில் 2:** குர்ஆனில் 114 அத்தியாயங்கள் மற்றும் 6236 வசனங்கள் உள்ளன.



**கேள்வி 3:** ஸூரா மற்றும் ஆயத் என்றால் என்ன?

**பதில் 3:** அத்தியாயத்தை அரபியில் ஸூரா (சூரா) என்றும், வசனங்களை ஆயத் என்றும் அழைப்பார்கள். “ஆயா” என்றால் வசனம், “ஆயத்” என்றால் வசனங்கள் (பன்மை) ஆகும்.



**கேள்வி 4:** குர்ஆனில் 6666 வசனங்கள் உள்ளதாகச் சொல்கிறார்களே!

**பதில் 4:** இது தவறு, இன்றைய குர்ஆனில் 6236 வசனங்கள் மட்டுமே உள்ளன.



**கேள்வி 5:** அது என்ன இன்றைய குர்ஆனில் 6236 என்றுச் சொல்கிறீர்கள், அப்படியானால், ஆரம்பகால குர்ஆனில் 6236 வசனங்கள் இல்லையா?

**பதில் 5:** இல்லை, ஆரம்ப கால குர்ஆனில் இருந்த சில வசனங்கள் இன்றைய குர்ஆனில் இல்லை என்று ஹதீஸ்கள் சொல்கின்றன. இவைகள் பற்றி அடுத்தடுத்த கேள்விகளில் காண்போம்.



**கேள்வி 6:** குர்ஆனின் முதல் அத்தியாயத்தின் பெயர் என்ன?

**பதில் 6:** அல் ஃபாத்திஹா (தமிழில் இதன் பொருள்: தோற்றுவாய்)



**கேள்வி 7:** குர்ஆனின் கடைசி அத்தியாயத்தின் பெயர் என்ன?

**பதில் 7:** அந் நாஸ் (தமிழில் இதன் பொருள்: மனிதர்கள்). சிலர் ஸூரா (அத்தியாயம்) என்ற வார்த்தையோடு சேர்த்து "ஸூரத்துந் நாஸ்" என்று எழுதுகிறார்கள்.



**கேள்வி 8:** குர்ஆனின் மக்கீ, மதனீ வசனங்கள் என்றுச் சொல்கிறார்களே, அவைகளின் அர்த்தமென்ன?

**பதில் 8:** முஹம்மது முதலில் சில ஆண்டுகள் மக்கா நகரிலும், பிறகு மதினா நகரிலும் வாழ்ந்தார். அவர் மக்காவில் வாழ்ந்த காலத்தில் இறக்கப்பட்ட குர்ஆன் வசனங்களை மக்கீ என்றும், மதினா நகரில் வாழ்ந்த போது இறக்கப்பட்ட வசனங்களை மதனீ என்றும் அழைக்கிறார்கள்.



**கேள்வி 9:** குர்ஆனில் குறிப்பிடப்படும் “ஜபூர், தோறா மற்றும் இன்ஜில்” என்ற பெயர்கள் எவைகளை குறிக்கின்றன?

**பதில் 9:** இவைகள் பைபிளின் புத்தகங்கள் ஆகும்.

- **தோறா** - இது பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்து நூல்களை (ஐந்தாகமங்களை) குறிக்கிறது.
- **ஜபூர்** - இது சங்கீத நூலை குறிக்கிறது.
- **இன்ஜில்** - இது பைபிளின் நற்செய்தி (சுவிசேஷங்கள்) நூல்களை குறிக்கின்றது.

இன்ஜில் என்றால் வெறும் நற்செய்திகளை மட்டுமே குறிக்குமா? அல்லது புதிய ஏற்பாடு முழுவதையும் குறிக்குமா? என்று சில முஸ்லிம்களுக்கு சந்தேகம் உண்டு.



**கேள்வி 10:** குர்ஆன் மட்டும் போதாதா? ஹதீஸ்களும் தேவையா?

**பதில் 10:** முஸ்லிம்களுக்கு குர்ஆனும் ஹதீஸ்களும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள். ஒரே ஒரு பக்கத்தை வைத்திருந்தால் அந்த நாணயத்திற்கு மதிப்பில்லை. எப்படி ஒரு மனிதனுக்கு உயிரும் உடலும் முக்கியமோ, அது போன்றது தான் குர்ஆனும், ஹதீஸ்களும். ஒன்றை வைத்துக்கொண்டு மற்றதை

புறக்கணிக்கமுடியாது. இதில் ஏதாவது ஒன்றை புறக்கணித்தால், இஸ்லாம் அர்த்தமற்றதாகிவிடும்.



**கேள்வி 11:** அரபிமொழி தெய்வ மொழியா?

**பதில் 11:** அரபி தெய்வ மொழி இல்லை. உலகில் எந்த மொழியும் தெய்வ மொழி ஆகமுடியாது.



**கேள்வி 12:** குர்ஆன் என்ற வார்த்தையின் அர்த்தமென்ன?

**பதில் 12:** குர்ஆன் என்றால், ஓதுதல் (recitation) என்று பொருள்.



**கேள்வி 13:** முதன் முதலாக எந்த இரவில் குர்ஆன் இறக்கப்பட்டதாக குர்ஆன் சொல்கிறது?

**பதில் 13:** லைலத்துல் கத்ர் என்ற இரவில் குர்ஆன் இறங்கியதாக குர்ஆன் சொல்கிறது.

“நிச்சயமாக நாம் அதை (குர்ஆனை) கண்ணியமிக்க (லைலத்துல் கத்ர்) என்ற இரவில் இறக்கினோம்” (குர்ஆன் 97:1) என்று அல்லாஹ் கூறுகின்றான்.

[இந்த தொடர்களில் முஹம்மது ஜான் தமிழாக்கமே பிரதானமாக மேற்கோள் காட்டப்படுகின்றது.]



**கேள்வி 14:** குர்ஆனின் மிகவும் நீண்ட மற்றும் சிறிய அத்தியாயங்கள் எவை?

**பதில் 14:** இரண்டாவது அத்தியாயம் அல்-பகரா 286 வசனங்களை கொண்டது, மற்றும் 103, 108 மற்றும் 110 அத்தியாயங்கள் மூன்று வசனங்களைக் கொண்ட சிறிய அத்தியாயங்களாகும்.



**கேள்வி 15:** மக்காவில் மற்றும் மதினாவில் இறக்கப்பட்ட அத்தியாயங்களின் (ஸூராக்களின்) எண்ணிக்கை எத்தனை?

**பதில் 15:** மக்கீ அத்தியாயங்கள் 86, மதினா அத்தியாயங்கள் 28 என்று இஸ்லாமிய அறிஞர்கள் வகைப்படுத்தியுள்ளார்கள்
(பார்க்க: **http://www.tamililquran.com/suraindex.asp** ).

சில அறிஞர்களுக்கு இதில் முரண்பட்ட கருத்து உண்டு.



**கேள்வி 16:** குர்ஆனில் எந்த நபியின்(தீர்க்கதரிசியின்) பெயர் அதிகமாக வருகிறது?

**பதில் 16:** மூஸா என்கின்ற மோசே தீர்க்கதரிசியின் பெயர் அதிகமாக (115 முறை) வருகிறது என்று கூறப்படுகின்றது. சிலர் 136 முறை வருகிறது என்கிறார்கள்.



**கேள்வி 17:** குர்ஆனில் எத்தனை தீர்க்கதரிசிகளின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன?

**பதில் 17:** குர்ஆனில் 25 நபிமார்கள் பற்றி வருகின்றது என்று முஸ்லிம்கள் கூறுகிறார்கள் (பார்க்க: **http://www.tamililquran.com/nabinames.asp** ). பைபிளின் படி இவர்கள் அனைவரும் தீர்க்கதரிசிகள் அல்ல, உதாரணம்: ஆதாமை பைபிள் தீர்க்கதரிசி (நபி) என்று அழைப்பதில்லை மற்றும் முஹம்மதுவை பைபிள் படி தீர்க்கதரிசி என்று அழைக்கமுடியாது.



**கேள்வி 18:** குர்ஆன் வசனங்கள் அத்தியாயங்கள், முஹம்மதுவிற்கு இறக்கப்பட்ட வரிசையில் குர்ஆனில் அமைக்கப்பட்டுள்ளதா?

**பதில் 18:** இல்லை. முஹம்மது உயிரோடு இருக்கும் போது, அவர் குர்ஆனை ஒரு புத்தக வடிவில் தொகுக்கவில்லை. புத்தகமே இல்லாத போது, வரிசைப்படி முழு புத்தகத்தை அமைப்பது எப்படி?

முஹம்மதுவின் மரணத்திற்கு பிறகு, பல ஆண்டுகள் கழித்து, குர்ஆனை தொகுத்தபோது, பெரிய அத்தியாயங்கள் தொடங்கி சிறிய அத்தியாயங்கள் வரை வரிசைப்படுத்தி தொகுத்தார்கள். அதன் பிறகு வந்தவர்கள், வசனங்களாக பிரித்த போது, அத்தியாயங்களில் வசன எண்களின் எண்ணிக்கை மாறுபட்டது.



**கேள்வி 19:** முஹம்மதுவின் காலத்தில் அனேகர் குர்ஆனை 100% முழுவதுமாக மனனம் செய்திருந்ததாகச் சொல்கிறார்களே இது சரியா?

**பதில் 19:** பலர் குர்ஆனை 100% மனப்பாடம் செய்திருந்தார்கள் என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள், ஆனால் இது உண்மையல்ல.

முஹம்மதுவின் தோழர்கள் குர்ஆனை தொகுத்த போது, இவர்கள் பட்ட பாடு இருக்கின்றதே! அது யாரால் சொல்லிமுடியும்.

உண்மையாகவே, குர்ஆனை இவர்கள் 100% மனப்பாடம் செய்திருந்தால், ஒரே வாரத்தில் குர்ஆனை தொகுத்து இருந்திருக்கலாம். ஆனால், இந்த காரியத்தைச் செய்ய, ஒரு குழுவை அமைத்து, பல மாதங்கள் கழித்து தொகுப்பை முடித்தார்கள். இதன் மூலம் அறிவது என்னவென்றால், ஒருவரும் 100% குர்ஆனை மனப்பாடம் செய்யவில்லை, செய்யமுடியவில்லை என்பதாகும்.



**கேள்வி 20:** முஹம்மதுவிற்கு இறக்கப்பட்ட குர்ஆன் வசனங்கள் எழுதப்பட்ட எலும்புகள், இலைகள், தோல்கள் இன்று நம்மிடம் உள்ளனவா?

**பதில் 20:** இல்லை அவைகள் நம்மிடம் இப்போது இல்லை. அவைகள் எரிக்கப்பட்டுவிட்டன, தொலைந்துபோய் விட்டன. குர்ஆனின் ஆதி மூலம் நம்மிடம் இல்லை.



**கேள்வி 21:** குர்ஆன் தமிழாக்கங்கள் சிலவற்றை இணையத்தில் படிக்கமுடியுமா?

**பதில் 21:** குறைந்தபட்சம், ஐந்து தமிழாக்கங்களை நீங்கள் இணையத்தில் படிக்கலாம்.

தமிழில் குர்ஆன் ( **http://www.tamililquran.com/** ) என்ற தளத்தில் நான்கு தமிழாக்கங்களை படிக்கமுடியும். அவைகள்:

- டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்,
- அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்,
- இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம் மற்றும்
- மன்னர் ஃபஹத் வளாகம் (சவூதி) தமிழாக்கம்.

பீஜே அவர்களின் குர்ஆன் தமிழாக்கத்தை அவரது தளத்தில் ( **https://www.onlinepj.in/** ) படிக்கமுடியும்.



**கேள்வி 22:** குர்ஆனை அரபியில் படித்தால் தான் நன்மை என்றுச் சொல்வது சரியா?

**பதில் 22:** முஸ்லிம்கள் இப்படி நம்புகிறார்கள். ஆனல், உண்மையான இறைவன் என்றைக்கும் ஒரு குறிப்பிட்ட மொழியில் என்னை தொழுதால் தான், பூஜை செய்தால் தான் நான் அவைகளை ஏற்றுக்கொள்வோன் என்று சொல்லமாட்டான்.



**கேள்வி 23:** முஹம்மது உயிரோடு இருந்த போது, அவரிடம் ஒரு புத்தக வடிவில் குர்ஆன் ஒரு தொகுப்பாக இருந்ததா?

**பதில் 23:** இல்லை, முஹம்மது அப்படிப்பட்ட ஒரு புத்தகத்தை வைத்திருக்கவில்லை. குர்ஆனை ஒரு புத்தகமாக தொகுக்கவேண்டும் என்று அவர் விரும்பியதும் இல்லை. முஹம்மதுவின் மரணத்திற்கு பல ஆண்டுகள் கழித்து, குர்ஆனை ஒரு புத்தகமாக தொகுக்கவேண்டும் என்று முஹம்மதுவின் தோழர் ஒருவர் சொன்னபோது, முஹம்மது செய்யாத ஒரு காரியத்தை எப்படி செய்வதென்று மற்றொரு சஹாபா கேள்வி கெட்டார். இது மிகவும் கடினமான காரியம் என்றார். எனவே, முஹம்மதுவிடம் மரணம்வரை ஒரு முழு குர்ஆன் ஒரு புத்தகமாக இருந்ததில்லை.

இதற்கு இன்னொரு சான்றையும் கொடுக்கலாம். முஸ்லிம்களின் நம்பிக்கையின் படி, ஒவ்வொரு ஆண்டும், அந்த ஆண்டில் முஹம்மதுவிற்கு கொடுக்கப்பட்ட குர்ஆன் வசனங்களை சரி பார்க்க ஜிப்ரீல் தூதன் வந்து, சரி பார்த்துச் செல்வாராம். கடைசி ஆண்டு, இரண்டு முறை ஜிப்ரீல் தூதன் சரி பார்த்தாராம். ஒரு புத்தகமாக இருந்தால், இப்படி இரண்டு முறை சரி பார்க்கவேண்டிய அவசியம் இருந்திருக்காது. முஹம்மது ஞாபகத்திலிருந்து சொல்லச் சொல்ல, ஜிப்ரீல் சரி பார்த்து இருந்திருக்கவேண்டும். இது இன்னொரு உண்மையையும் எடுத்துக்காட்டுகின்றது, அது என்னவென்றால், முஹம்மது நம்மைப்போன்று மறதியுள்ளவர், அவர் குர்ஆனையும் மறப்பார் என்பதாகும்.



**கேள்வி 24:** குர்ஆனை முஹம்மது 100% முழுவதுமாக மனப்பாடம் செய்திருந்தாரா? அவர் ஒரு வசனத்தையும் மறக்கவில்லையா?

**பதில் 24:** முஹம்மது முழு குர்ஆனை மனப்பாடம் செய்திருந்தார் என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள். ஆனால், இது உண்மையில்லை. இதற்கும் எந்த ஒரு சான்றுமில்லை. சில வேளைகளில் முஹம்மது குர்ஆனின் சில வசனங்களை மறந்துள்ளார் என்பதற்கு ஆதாரங்கள் உண்டு.

முஹம்மதுவும் நம்மைப்போன்று மறதியுள்ளவர் தான் என்பதை **புகாரி ஹதீஸ் 401** கூறுகிறது.

முஹம்மது குர்ஆனின் சில வசனங்களை மறந்துவிட்டார், அதனை மற்றொருவர் ஞாபகப்படுத்தினார், **புகாரி நூல் எண் 5042:**

5042. ஆயிஷா(ரலி) கூறினார்: இரவு நேரம் பள்ளிவாசலில் ஒருவர் குர்ஆன் ஓதிக்கொண்டிருப்பதை நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அப்போது நபியவர்கள், 'அல்லாஹ் அவருக்குக் கருணை புரியட்டும்! **இன்ன அத்தியாயங்களிலிருந்து நான் மறந்துவிட்டிருந்த இன்ன இன்ன வசனங்களை அவர் எனக்கு நினைவூட்டிவிட்டார்**' என்று கூறினார்கள்.

குர்ஆனை யாராவது மறந்துவிட்டால், ' நான் மறந்துவிட்டேன் என்று சொல்லாமல்,அது மறக்கவைக்கப்பட்டுவிட்டது என்று சொல்லவேண்டும் என முஹம்மது கூறியுள்ளார். ஏனென்றால், "ஒட்டகங்களை விடவும் வேகமாக மனிதர்களின் நெஞ்சங்களிலிருந்து குர்ஆன் தப்பக்கூடியதாகும்" என்றும் அவர் கூறியுள்ளார்: **புகாரி நூல் எண்கள்: 5032, 5039**



**கேள்வி 25:** இஸ்லாமின் தூண்களில் ஒன்றான ஐந்து வேளை தொழுவது பற்றி குர்ஆனில் எந்த இடத்தில் சொல்லப்பட்டுள்ளது?

**பதில் 25:** முஸ்லிம்கள் இன்று தொழும் “ஐந்து வேளை தொழுகையை நிலைநிறுத்துங்கள்” என்று குர்ஆனில் எந்த ஒரு வசனத்திலும் சொல்லப்படவில்லை. குர்ஆனில் மூன்று வேளை தொழுகை பற்றித் தான் சொல்லப்பட்டுள்ளது .

ஹதீஸ்களிலிருந்து முஸ்லிம்கள் ஐந்து வேளை தொழுகையை கற்றுக்கொண்டு அதை பின்பற்றிக்கொண்டு இருக்கிறார்கள்.



**கேள்வி 26:** புனித ஹஜ் பயணத்தில் செய்யவேண்டிய கடமைகள் சட்டங்கள் பற்றி குர்ஆனில் எங்கு சொல்லப்பட்டுள்ளது?

**பதில் 26:** இஸ்லாமிய புனித யாத்திரையைப் பற்றிய அனைத்துச் சட்டங்களையும் குர்ஆன் சொல்லவில்லை. அவைகளை ஹதீஸ்களிலிருந்து கற்றுக்கொண்டு முஸ்லிம்கள் செய்கிறார்கள்.



**கேள்வி 27:** குர்ஆனை புரிந்துக்கொள்வதற்கு தேவையான பின்னணியை எங்கு காணலாம்?

**பதில் 27:** முஹம்மதுவின் சொல்லும் செயலும் அடங்கிய நூல்கள் என்றுச் சொல்லப்படும் ஹதீஸ்களிலிருந்தும், அவரது வாழ்க்கை சரித்திர நூல்களிலிருந்தும் அறியமுடியும், அதிலும் 100% அறியமுடியும் என்றுச் சொல்லமுடியாது.



**கேள்வி 28:** தௌஹீத் என்ற வார்த்தை குர்ஆனில் உள்ளதா?

**பதில் 28:** தௌஹித் அதாவது ஏகத்துவம் (ஒரே இறைவன்) என்ற பொருள் வரும் இந்த வார்த்தை குர்ஆனில் ஒரு முறையும் வருவதில்லை. ஆனால், ஆங்காங்கே இந்த கோட்பாடு சொல்லப்பட்டிருக்கும். உதாரணத்திற்கு, அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்ற வாக்கியத்தை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம்.



**கேள்வி 29:** குர்ஆன் மட்டும் (Quran Only Muslims) முஸ்லிம்கள் என்கிறார்களே! இவர்கள் யார்?

**பதில் 29:** இவர்கள் குர்ஆன் மட்டும் தான் இறைவேதம் என்று நம்புகிறவர்கள். முஹம்மதுவின் சொல்லும் சொயலும் அடங்கிய ஹதீஸ்களையும், இதர இஸ்லாமிய சரித்திர நூல்களையும் இவர்கள் இறைவேதம் என்று நம்புவதில்லை.



**கேள்வி 30:** குர்ஆனில் வரும் ஒரே பெண்ணின் பெயர் என்ன?

**பதில் 30:** குர்ஆனில் பெயர் குறிப்பிடப்பட்டிருக்கின்ற ஒரே ஒரு பெண் 'மர்யம்' ஆவார், அதாவது இயேசுவின் தாயின் பெயர் குர்ஆன் வருகிறது வேறு எந்த ஒரு பெண்ணின் பெயர் வருவதில்லை.

இன்னாருடைய மனைவி, இன்னாருடைய மகள், சகோதரி என்று சொல்லப்பட்டிருக்குமே தவிர, அந்த பெண்ணின் பெயர் குறிப்பிடப்படுவதில்லை, இதற்கு ஒரே ஒரு விதி விளக்கு மர்யம் என்ற பெயர் மட்டும் தான்.



**கேள்வி 31:** புதிய ஏற்பாட்டிற்கும் குர்ஆனுக்கும் இடையே எத்தனை ஆண்டுகள் இடைவெளி உள்ளது?

**பதில் 31:** பைபிளின் புதிய ஏற்பாடு, கி.பி. 100க்குள் முடிவடைந்துவிட்டது, மற்றும் குர்ஆனின் முதல் வெளிப்பாடு முஹம்மது அவர்களுக்கு கி.பி. 610ம் ஆண்டு வந்தது. இதன் படி கணக்கிட்டால், புதிய ஏற்பாட்டின் கடைசி வசனத்திற்கும், குர்ஆனின் முதல் வசனத்திற்கும் இடையே 510 ஆண்டுகள் இடைவெளி உள்ளது என்று கூறலாம்.

இன்னொரு கோணத்தில் கணக்கிடவேண்டுமென்றால், முஹம்மதுவிற்கு கடைசி குர்ஆன் வசனம் கி.பி 632ம் ஆண்டு வெளிப்பட்டது(இந்த ஆண்டு அவர் மரித்தார்). ஆக, புதிய ஏற்பாட்டிற்கும் குர்ஆனின் அனைத்து வசனங்களும் முடிவடைவதற்கும் இடையே 532 ஆண்டுகள் இடைவெளி உள்ளது எனலாம்.

சுருக்கமாக, ஒருவரில் கூறுவதென்றால் பைபிளுக்கும் குர்ஆனுக்கும் 500 ஆண்டுகள் இடைவெளி என்றுச் சொல்லலாம்.



**கேள்வி 32:** பைபிளில் வரும் நபர்களின் பெயர்கள் குர்ஆனில் வேறு வகையாக உச்சரிக்கப்படுகிறது என்கிறார்களே, ஒரு பட்டியலைத் தரமுடியுமா?

**பதில் 32:** ஒரு மொழியில் உள்ள பெயர்களை வேறு மொழியில் மொழியாக்கம் செய்யும் போது, பெரும்பான்மையாக உச்சரிப்பு மாறுபடும். பைபிளின் நிகழ்ச்சிகளை குர்ஆன் மறுபதிவு செய்யும் போது, பெயர்களின் உச்சரிப்பு மாறியுள்ளது, இந்த பட்டியலைப் பாருங்கள்.

நாம் தமிழ் பைபிளை கணக்கில் கொண்டுள்ளோம். சில பெயர்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

பைபிளில் உச்சரிப்பு - குர்ஆனில் உச்சரிப்பு

1. ஆதாம் - ஆதம்
2. நோவா - நூஹ்
3. ஏனோக்கு - இத்ரீஸ்
4. ஆபிரகாம் - இப்ராஹீம்
5. இஸ்மவேல் - இஸ்மாயீல்
6. ஈசாக்கு - இஸ்ஹாக்
7. யாக்கோபு - யஃகூப்
8. யோசேப்பு - யூஸுஃப்
9. லோத்து - லூத்
10. எத்திரோ - ஷுஐப் (மோசேயின் மாமனார் என்று அறியப்படுகின்றது)
11. மோசே - மூஸா
12. ஆரோன் - ஹாரூன்
13. தாவீது - தாவூத்
14. சாலொமோன் - ஸுலைமான்
15. யோபு - அய்யூப்
16. யோனா - யூனுஸ்
17. எலியா - இல்யாஸ்
18. எலிசா - அல்யஸவு
19. சகரியா - ஜகரிய்யா

20. யோவான் - யஹ்யா



**கேள்வி 33:** முஹம்மதுவிற்கு விருத்தசேதனம் (சுன்னத்து) செய்ததாக ஏதாவது குறிப்பு குர்ஆனிலோ அல்லது ஹதீஸ்களிலோ உள்ளதா?

**பதில் 33:** இல்லை, இவ்விரண்டிலும் முஹம்மதுவிற்கு விருத்தசேதனம் செய்ததாக குறிப்பு இல்லை.



**கேள்வி 34:** நான் ஒரு தமிழ் குர்ஆனை வாக்கியுள்ளேன். அதனை படித்து இஸ்லாமை புரிந்துக்கொள்ள எத்தனை நாட்கள் தேவைப்படும்?

**பதில் 34:** குர்ஆனில் 6236 வசனங்கள் உள்ளன, தினம் ஒரு மணிநேரம் ஓதுக்கினாலும், ஒரு மாதத்திற்குள் படித்துவிடலாம். ஆனால், புரிந்துக்கொள்வதற்கு வெறும் குர்ஆனை மட்டுமே படித்தால் போதாது, அதற்கு நீங்கள் ஹதீஸ்களையும், குர்ஆன் தஃப்ஸீர்களையும் (விளக்கவுரைகளையும்) படிக்கவேண்டும். இதற்கு சில மாதங்கள் அல்லது ஆண்டுகள் ஆகலாம், அதுவும் உங்களின் விருப்பத்தையும், நேரத்தையும் பொறுத்தது.



**கேள்வி 35:** அல்லாஹ் முஹம்மதுவிற்கு முதன் முதலாக இறக்கியதாகச் சொல்லப்படும் குர்ஆன் வசனங்கள் எவை?

**பதில் 35:** கி.பி. 610ம் ஆண்டு முஹம்மதுவிற்கு ஹிரா குகையில், இன்று குர்ஆன் 96ம் அத்தியாயத்தில் உள்ள ஐந்து வசனங்கள் இறக்கப்பட்டதாக கூறப்படுகின்றது.

அவை:

- 96:1. (யாவற்றையும்) படைத்த உம்முடைய இறைவனின் திரு நாமத்தைக் கொண்டு ஓதுவீராக.
- 96:2. “அலக்” என்ற நிலையிலிருந்து மனிதனை படைத்தான்.
- 96:3. ஓதுவீராக: உம் இறைவன் மாபெரும் கொடையாளி.
- 96:4. அவனே எழுது கோலைக் கொண்டு கற்றுக் கொடுத்தான்
- 96:5. மனிதனுக்கு அவன் அறியாதவற்றையெல்லாம் கற்றுக் கொடுத்தான்.



**கேள்வி 36:** குர்ஆனில் சில அத்தியாயங்களின் முதல் வசனத்தில் வார்த்தைகள் இல்லாமல், வெறும் சம்மந்தமில்லா எழுத்துக்கள் மட்டுமே உள்ளனவே, அவைகளுக்கு பொருள் உள்ளதா?

**பதில் 36:** குர்ஆனில் 29 அத்தியாயங்களில் பொருள் கொள்ளமுடியாத எழுத்துக்கள் முதல் வசனமாகவோ அல்லது வசனத்தின் ஒரு பகுதியாகவோ வரும். அவைகளின் பொருளை யாரும் அறியார்கள். சில முஸ்லிம் அறிஞர்கள் சில அர்த்தங்களை கொடுப்பார்கள், ஆனால் அவைகளெல்லாம் வெறும் யூகங்கள் தான் உண்மையில்லை.

இந்த 29 அத்தியாயங்கள் இவைகள்: 2–3, 7, 10–15, 19–20, 26–32, 36, 38, 40–46, 50 and 68

உதாரணம்:

- குர்ஆன் 2:1. அலிஃப், லாம், மீம்.
- குர்ஆன் 3:1. அலிஃப், லாம், மீம்.
- குர்ஆன் 7:1. அலிஃப், லாம், மீம், ஸாத்.



**கேள்வி 37:** மஸீஹ் என்ற வார்த்தையின் பொருளை குர்ஆன் விளக்குகின்றதா?

**பதில் 37:** இல்லை, குர்ஆன் மஸீஹ் என்ற வார்த்தையின் பொருளை விளக்குவதில்லை. இந்த வார்த்தை மேசியா(மஷியக்) என்ற எபிரேய வார்த்தையாகும். கிரேக்க மொழியில் இவ்வார்த்தை 'கிறிஸ்தோஸ்' என்று மொழியாக்கம் செய்துள்ளார்கள். இதற்கு தமிழில் "அபிஷேகம் செய்யப்பட்டவர்" என்று பொருள். குர்ஆன் இதனை பல முறை இயேசுவிற்கு பயன்படுத்தியுள்ளதே தவிர, இதன் பொருளை அது விளக்கவில்லை.



**கேள்வி 38:** குர்ஆனில் ஒருவரின் பெயர் அவரது தாயின் பெயரோடு பயன்படுத்தப்பட்டுள்ளது? அவர் யார்?

**பதில் 38:** இயேசுக் கிறிஸ்துவை குறிப்பிடும் போது "மரியமின் மகன் இயேசுக் கிறிஸ்து" என்று குர்ஆன் குறிப்பிடுகின்றது.

பார்க்க: குர்ஆன் 3:45

3:45. மலக்குகள் கூறினார்கள்; “மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் தன்னிடமிருந்து வரும் ஒரு சொல்லைக் கொண்டு உமக்கு (ஒரு மகவு வரவிருப்பது பற்றி) நன்மாராயங் கூறுகிறான். அதன் பெயர் **மஸீஹ்; மர்யமின் மகன் ஈஸா** என்பதாகும். அவர் இவ்வுலகத்திலும், மறு உலகத்திலும்

கண்ணியமிக்கோராகவும் (இறைவனுக்கு) நெருங்கி இருப்பவர்களில் ஒருவராகவும் இருப்பார்;



**கேள்வி 39:** மகா அலேக்சாண்டர் (Alexander the Great) பற்றி குர்ஆனில் வசனங்கள் உண்டு என்றுச் சொல்கிறார்கள்! இது உண்மையா?

**பதில் 39:** குர்ஆனில் **துல்கர்னைன்** என்ற பெயரில் ஒரு அரசன் பற்றி அல்லாஹ் சொல்கின்றான். அவனைப் பற்றிய சரித்திர விவரங்களை ஆய்வு செய்யும் போது, மகா அலேக்சாண்டருக்கு அருகாமையில் வருவதாக சில அறிஞர்கள் காண்கிறார்கள். ஆரம்பத்தில் முஸ்லிம் அறிஞர்கள், துல்கர்னைன் என்று குர்ஆன் சொல்வது அலேக்சாண்டரைத் தான் என்றுச் சொன்னார்கள். ஆனால், உண்மையில் அவர் ஒரு பல தெய்வ பழிப்பாட்டு நபராக இருந்தார் என்பதைக் கண்டு, துல்கர்னைன் அலேக்சாண்டர் அல்ல என்று சொல்கிறார்கள். குர்ஆனில் வரும் துல்கர்னைன் அல்லாஹ்வை தொழும் நபராக காட்டப்படுவதால், இந்த நிலைப்பாட்டிற்கு முஸ்லிம் அறிஞர்கள் தள்ளப்படுகிறார்கள்.

உண்மையில் இவர் மகா அலேக்சாண்டர் இல்லையென்றால், உலக சரித்திரத்தில் இந்த துல்கர்னைன் யார்? குர்ஆன் சொல்லும் துல்கர்னைன் ஒரு கற்பனைக் கதா பாத்திரமா? என்ற கேள்விகளுக்கு முஸ்லிம்களிடம் சரியான பதில் இல்லை.

பார்க்க: குர்ஆன் 18:83-98

குர்ஆன் 18:83 (நபியே!) அவர்கள் **துல்கர்னைனை** பற்றி உங்களிடம் வினவுகின்றனர்; "அவருடைய வரலாற்றில் சிறிது உங்களுக்கு நான் ஓதிக் காண்பிக்கிறேன்" என்று நீர் கூறுவீராக



**கேள்வி 40:** இரத்து (Arabic: Naskh, English: Abrogation) செய்வது என்றால் என்ன?

**பதில் 40:** இஸ்லாமில் இரத்து செய்வது என்றால், "குர்ஆனின் ஒரு வசனத்தை அல்லது வசனங்களை, வேறு வசனங்களைக் கொண்டு இரத்து செய்துவிடுவதாகும்". அல்லாஹ் குர்ஆனில் ஒரு சட்டத்தைப்போடுவான், சில நாட்கள் கழித்து முந்தைய சட்டத்தை நீக்கி, வேறு வசனங்களைக் கொண்டு வேறு சட்டத்தைக் கொடுப்பான்.

பார்க்க: குர்ஆன் 2:106 மற்றும் 16.101

2:106. ஏதேனும் **ஒரு வசனத்தை நாம் மாற்றினால்** அல்லது அதனை மறக்கச் செய்தால் அதைவிட சிறந்ததையோ அல்லது அது போன்றதையோ நாம்

கொண்டுவருவோம். நிச்சயமாக அல்லாஹ் அனைத்துப்பொருட்களின் மீதும் சக்தியுள்ளவன் என்பதை நீர் அறியவில்லையா?

16:101. (நபியே!) நாம் **ஒரு வசனத்தை மற்றொரு வசனத்தின் இடத்தில் மாற்றினால்**, (உம்மிடம்) "நிச்சயமாக நீர் இட்டுக்கட்டுபவராக இருக்கின்றீர்" என்று அவர்கள் கூறுகிறார்கள்: எ(ந்த நேரத்தில், எ)தை இறக்க வேண்டுமென்பதை அல்லாஹ்வே நன்கறிந்தவன், எனினும் அவர்களில் பெரும்பாலோர் (இவ்வுண்மையை) அறிய மாட்டார்கள்.

இது அல்லாஹ்விற்கும், முஹம்மதுவிற்கும் ஒரு சங்கடத்தை கொடுத்துள்ளது. இதனை 16:101ல் காணலாம். மனிதன் போடும் சட்டம் மாறலாம், ஆனால் இறைவன் போடும் சட்டம் அடிக்கடி மாற்றமடைந்தால் அவனின் ஞானம் மீது மக்களுக்கு சந்தேகம் வருகிறது.



**கேள்வி 41:** குர்ஆனின் வசனங்களை குர்ஆனே இரத்து செய்யுமா?

**பதில் 41:** ஆமாம், குர்ஆனின் வசனங்களை அல்லாஹ்வே இரத்து செய்கின்றான். உதாரணத்திற்கு, ஸுயுதி என்ற இஸ்லாமிய அறிஞரின் இரத்து செய்யப்பட்ட வசனங்களின் (21) பட்டியலை பார்க்கவும்.

**குர்ஆனில் எத்தனை வசனங்களை அல்லாஹ் இரத்துசெய்துள்ளான்? இஸ்லாமிய அறிஞர் ஸுயுதியின் பட்டியல்**



**கேள்வி 42:** ஒரே ஒரு மணி நேரத்தில் ஒரு குர்ஆன் வசனம் இரத்து செய்யப்பட்டது என்பது உண்மையா?

**பதில் 42:** ஆமாம், குர்ஆன் 58:12ம் வசனத்தை அல்லாஹ் இறக்கி, ஒரு மணி நேரத்திற்குள்ளாகவே அதனை 58:13ம் வசனத்தைக் கொண்டு அல்லாஹ் இரத்து செய்துள்ளான்.

இதன் பின்னணியை அறிய படிக்கவும்:

**பிறந்த ஒரு மணி நேரத்திற்குள் மரித்த (ரத்து செய்யப்பட்ட) குர்ஆன் வசனம் 58:12** (முஹம்மதுவிடம் தனிமையில் பேச பணம் தர வேண்டுமா?)



**கேள்வி 43:** குர்ஆனை பைபிளோடு ஒப்பிடும் போது, வசனங்களின் எண்ணிக்கையில் குர்ஆன் பெரியதா? சிறியதா?

**பதில் 43:** ஆமாம், வசனங்களின் எண்ணிக்கையில் பைபிளோடு ஒப்பிடும் போது குர்ஆன் 20% அளவுடையது.

குர்ஆன் வசனங்களின் எண்ணிக்கை = 6236

பைபிள் வசனங்களின்  எண்ணிக்கை = 31102

இதைப் பற்றி மேலும் அறிய கீழ்கண்ட கட்டுரையை படிக்கவும்:

**குர்-ஆன் பைபிளைவிட அளவில் சிறியதா? (அ) பெரியதா?**



**கேள்வி 44:** அரபி மொழி செமிட்டிக் மொழியா?

**பதில் 44:** ஆமாம், அரபி ஒரு செமிட்டிக் மொழி குடும்பத்தைச் சார்ந்ததாகும். இதே போல எபிரேயம் மற்றும் அராமிக் மொழிகளும் செமிட்டிக் மொழிகளாகும்(Semitic languages).



**கேள்வி 45:** இஸ்லாமிய ஆட்சியாளராகிய மூன்றாவது கலீஃபா உஸ்மான் ஏன் குர்ஆனை எரித்தார்?

**பதில் 45:** முஹம்மதுவின் மரணத்திற்கு 14 ஆண்டுகளுக்கு பிறகு உஸ்மான் அவர்கள் ஆட்சிக்கு வந்தார்கள். அப்போது குர்ஆனை மக்கள் வித்தியாசமாக ஓதிக்கொண்டு இருந்தார்கள். எனவே, இவர் ஒரு புத்தகமாக குர்ஆனை தொகுத்தார், புழக்கத்தில் இருந்த மற்ற குர்ஆன்களை (கையெழுத்துப் பிரதிகளை) இவர் எரித்துவிட்டார். ஆகையால், குர்ஆன்களை முதன் முதலில் எரித்த நிகழ்ச்சி, முஹம்மதுவின் சஹாபாக்களால் நடந்தேறியது.



**கேள்வி 46:** குர்ஆனை ஒரு புத்தகமாக தொகுக்கும் போது, அல்லாஹ் கொடுத்த பல வசனங்கள் கைவிடப்பட்டது என்ற கூற்று சரியா?

**பதில் 46:** ஆம், உஸ்மான் குர்ஆனை தொகுக்கும் போது பல வசனங்கள் குர்ஆனில் சேர்க்கப்படவில்லை, இதற்கு ஹதீஸ்களும், ஸுயூதி போன்ற இஸ்லாமிய அறிஞர்களின் நூல்களும் சான்றுகளாக உள்ளன, அடுத்த கேள்வியை படிக்கவும்.



**கேள்வி 47:** இப்னு மஸூத் என்ற முஹம்மதுவின் தோழர் தன் குர்ஆன் பிரதியை எரிக்க ஏன் அனுமதிக்க மறுத்தார்?

**பதில் 47:** முஹம்மதுவினால் குர்ஆனை கற்றுக்கொடுக்க நியமிக்கப்பட்டவர்களில் மஸூத் முக்கியமானவராக இருந்தார். தம்மிடம் உள்ள குர்ஆன் பிரதி தான் உண்மையான குர்ஆன் என்று இவர் நம்பினார், மேலும், குர்ஆனை தொகுத்தவர்களின் பிரதிகளில் தவறுகள் இருப்பதாக இவர் நம்பியபடியினால் தன் பிரதியை எரிக்க இவர் ஒப்புக்கொள்ளவில்லை.

குர்ஆன் பற்றி தனக்கு இருக்கும் ஞானம் பற்றி அவர் கூறியது, சஹீஹ் முஸ்லீம் நூல், எண் 4860ல் பதிவு செய்யப்பட்டுள்ளது:

சஹீஹ் முஸ்லீம் எண் 4860. ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது: (ஒரு முறை) **அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி)** அவர்கள், "யார் மோசடி செய்கிறாரோ அவர், தாம் மோசடி செய்தவற்றுடன் மறுமை நாளில் வருவார்" (3:161) எனும் இறைவசனத்தை ஓதிக்காட்டி விட்டு, "யாருடைய ஓதல் முறைப்படி நான் ஓத வேண்டுமெனக் கூறுகிறீர்கள்? நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எழுபதுக்கும் மேற்பட்ட அத்தியாயங்களை ஓதிக்காட்டியுள்ளேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்கள், **அவர்களிலேயே நான்தான் இறைவேதத்தை நன்கு கற்றவன் என்பதை அறிந்துள்ளார்கள்**. என்னைவிட (இறைவேதத்தை) நன்கு அறிந்த ஒருவர் இருக்கிறார் என நான் அறிந்தால், (அவர் எங்கு இருந்தாலும் சரி) அவரை நோக்கி நான் பயணம் மேற்கொள்வேன்" என்று கூறினார்கள்.

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்கள் கூடியிருந்த (அந்த) அவையில் வீற்றிருந்தேன். அவர்களில் எவரும் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதற்கு மறுப்பும் தெரிவிக்கவில்லை; அதற்காக அவரைக் குறை கூறவுமில்லை.

இதைப்பற்றிய ஆய்வுகளை அறிய கீழ்கண்ட கட்டுரைகளை படிக்கவும்:

- **குர்ஆன் ஏன் மற்றும் எப்படி தரப்படுத்தப்பட்டது?**
- **குர்ஆன் எழுத்துக்கு எழுத்து பாதுகாக்கப்பட்டுள்ளதா? ஸுயூதியும் தொலைந்த குர்ஆன் வசனங்களும் பாகம் 3 (தொலைந்த 157 குர்ஆன் வசனங்கள்)**



**கேள்வி 48:** குர்ஆன் எழுதப்பட்ட காலத்தில் இருந்த அரபி எழுத்துக்களில் உயிரெழுத்து இல்லையென்பது சரியான கூற்றா?

**பதில் 48:** ஆம், அக்கால அரபி எழுத்துக்களில் உயிர் எழுத்துக்கள் இல்லை. கி.பி. 786 காலக்கட்டத்தில், உயிரெழுத்துக்கள் சேர்க்கப்பட்டன.



**கேள்வி 49:** இஸ்லாமிய விசுவாச அறிக்கையாகிய 'அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை, முஹம்மது அல்லாஹ்வின் இறைத்தூதர்' இந்த வாக்கியம் எந்த குர்ஆன் வசனத்தில் உள்ளது?

**பதில் 49:** இந்த வாக்கியம் எந்த ஒரு குர்ஆன் வசனத்திலும் இல்லை.



**கேள்வி 50:** இஸ்லாமிய விசுவாச அறிக்கையை (ஷஹதா) குர்ஆனில் இல்லையென்றால், அதை ஏன் முஸ்லிம்கள் பயன்படுத்துகிறார்கள்?

**பதில் 50:** இஸ்லாமிய ஷஹதா எந்த ஒரு குர்ஆன் வசனத்திலும் முழுவதுமாக இல்லை. அது கீழ்கண்ட மூன்று வசனங்களில் வரும், சில வார்த்தைகளின் கூட்டுச் சொற்றொடர் தான் “ஷஹதா”.

குர்ஆன் 63:1; 10:90; 5:73; 3:62



**கேள்வி 51:** குர்ஆன் தமிழாக்கங்களில் (இதர மொழியாக்கங்களிலும்) ஏன் பல வார்த்தைகளை அடைப்பிற்குள் எழுதுகிறார்கள்?

**பதில் 51:** அரபி மொழியிலிருந்து குர்ஆனை மொழியாக்கம் செய்யும் போது, வார்த்தைக்கு வார்த்தை தமிழாக்கம் செய்தால், சில இடங்களில் பொருள் வராது, எனவே அடைப்பிற்குள் சில வார்த்தைகளை தமிழாக்கம் செய்பவர்கள் சொந்தமாக எழுதி, வசனத்திற்கு பொருள் வரும்படி செய்கிறார்கள்.

சிலவேளைகளில் தங்கள் சொந்த கருத்தையும் அடைப்பிற்குள் போட்டு தமிழாக்கம் செய்துவிடுகிறார்கள்.



**கேள்வி 52:** அல்லாவிற்கு 99 பெயர்கள் உள்ளன என்று குர்ஆன் சொல்கிறதா?

**பதில் 52:** இல்லை. ஹதீஸ்கள் தான் சொல்கின்றன. அல்லாஹ்விற்கு அனேக அழகிய பெயர்கள் உள்ளன என்று மட்டும் தான் குர்ஆன் சொல்கின்றது. ஆனால், அவைகள் 99 என்று ஹதீஸ்களில் வருகிறது, மேலும் ஒவ்வொரு அறிஞரும் வெவ்வேறு பட்டியலைத் தருகிறார்கள்.

பார்க்க குர்ஆன் 17:110:

17:110. “நீங்கள் (அவனை) அல்லாஹ் என்று அழையுங்கள்; அல்லது அர்ரஹ்மான் என்றழையுங்கள்; எப்பெயரைக் கொண்டு அவனை நீங்கள் அழைத்தாலும், **அவனுக்கு(ப் பல) அழகிய திருநாமங்கள் இருக்கின்றன**” என்று (நபியே!) கூறுவீராக; . . .



**கேள்வி 53:** குர்ஆனில் அல்லாஹ்வின் 99 பெயர்களில் வெறும் 81 பெயர்கள் மட்டுமே உள்ளன என்றுச் சொல்கிறார்களே, இது உண்மையா?

**பதில் 53:** அல்லாஹ்விற்கு 99 பெயர்கள் உள்ளன என்று ஹதீஸ்கள் சொன்னாலும், அவைகள் அனைத்தும் குர்ஆனில் காணப்படாது. அல்லாஹ்வின் ஒவ்வொரு குணத்தையும் ஒரு பெயராக அறிஞர்கள் கூறுகிறார்கள். ஒரு இஸ்லாமிய தளத்தில், அல்லாஹ்வின் 81 பெயர்கள் மட்டும் தான் குர்ஆனில் வருகிறது என்று குறிப்பிட்டுள்ளார்கள். பார்க்க:**Names of Allah mentioned in the Quran**



**கேள்வி 54:** ஹூருல் ஈன் என்பவர்கள் யார்?

**பதில் 54:** கீழ்கண்ட நான்கு குர்ஆன் வசனங்களையும், அவைகளைச் சுற்றியுள்ள வசனங்களையும் படித்தால், ஹூருல் ஈன்கள் என்பர்கள், முஸ்லிம் ஆண்களுக்கு அல்லாஹ் சொர்க்கத்தில் கொடுக்கும் பெண்களாகும்/மனைவிகளாகும். இவர்கள் பற்றி முஹம்மது கூறியவற்றை புகாரி ஹதீஸ்களிலும் காணுங்கள். கவனிக்கவும், இவர்கள் உலகத்தில் திருமணமாகியிருந்த மனைவிகள் அல்ல, அவர்கள் வெறு இவர்கள் வேறு.

குர்ஆன் 44:54. இவ்வாறே (அங்கு நடைபெறும்); மேலும் அவர்களுக்கு **ஹூருல் ஈன்களை** நாம் மண முடித்து வைப்போம்.

குர்ஆன் 52:20. அணி அணியாகப் போடப்பட்ட மஞ்சங்களின் மீது சாய்ந்தவர்களாக அவர்கள் இருப்பார்கள்; மேலும், நாம் அவர்களுக்கு, நீண்ட கண்களையுடைய (ஹூருல் ஈன்களை) மணம் முடித்து வைப்போம்.

குர்ஆன் 56:22. (அங்கு இவர்களுக்கு) **ஹூருல் ஈன்** (என்னும் நெடிய கண்களுடைய) கன்னியர் இருப்பர்.

குர்ஆன் 56:35. நிச்சயமாக (ஹூருல் ஈன் என்னும் பெண்களைப்) புதிய படைப்பாக, நாம் உண்டாக்கி;

**ஸஹீஹ் புகாரி எண் 2799**

2796. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இறைவழியில் காலையில் சிறிது நேரம் அல்லது, மாலையில் சிறிது நேரம் (போர் புரியச்) செல்வது உலகத்தையும் அதிலுள்ள பொருட்களையும் விடச் சிறந்தது. உங்களில் ஒருவரின் வில்லின் அளவுக்குச் சமமான, அல்லது ஒரு சாட்டையளவுக்குச் சமமான (ஒரு முழம்) இடம் கிடைப்பது உலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்தது. சொர்க்கவாசிகளில் **(ஹூருல் ஈன்களில்)** ஒரு பெண், உலகத்தாரை எட்டிப் பார்த்தால் வானத்திற்கும் பூமிக்குமிடையே உள்ள அனைத்தையும் பிரகாசமாக்கி விடுவாள்; பூமியை நறுமணத்தால் நிரப்பி விடுவாள். அவளுடைய தலையிலுள்ள முக்காடோ உலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்ததாகும். என அனஸ்(ரலி) அறிவித்தார்.

**ஸஹீஹ் புகாரி எண் 3254.**

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

சொர்க்கத்தில் முதலாவதாக நுழையும் அணியினர் பௌர்ணமி இரவின் சந்திரனைப் போன்று தோற்றமளிப்பார்கள். (அடுத்து) அவர்களின் சுவடுகளைப் பின்தொடர்ந்து சொர்க்கத்தினுள் நுழைபவர்கள், வானத்தில் நன்கு ஒளி வீசிப் பிரகாசிக்கும் நட்சத்திரத்தைப் போன்று (பிரகாசமாகவும் அழகாகவும்) இருப்பார்கள். அவர்களின் உள்ளங்கள் ஒரே மனிதரின் உள்ளத்தைப் போன்றிருக்கும். அவர்களுக்கிடையே பரஸ்பர வெறுப்போ, பொறாமையோ இருக்காது. ஒவ்வொரு மனிதருக்கும் **'ஹூருல் ஈன்'** எனப்படும் அகன்ற (மான் போன்ற) விழிகளையுடைய மங்கையரிலிருந்து இரண்டு மனைவிமார்கள் இருப்பார்கள். அவர்களின் கால்களின் எலும்பு மஜ்ஜைகள் (காலின்) எலும்புக்கும் சதைக்கும் அப்பாலிருந்து வெளியே தெரியும்.



**கேள்வி 55:** குர்ஆன் 47:19ஐ விளக்கமுடியுமா? இதில் அல்லாஹ் என்ன சொல்லவருகின்றான்?

**பதில் 55:** குர்ஆன் 47:19ம் வசனத்தின் முக்கியமான பகுதியை நான்கு தமிழாக்கங்களில் தருகிறேன். இந்த வசனத்தின் மூலம் அறிவது என்னவென்றால், உலக மக்களைப்போன்று, முஹம்மதுவும் பாவங்கள்/தவறுகள்/பிழைகள் செய்கின்ற ஒரு மனிதரே என்பதாகும். இது குர்ஆனின் சாட்சியாகும்.

47:19. . . .; இன்னும் உம்முடைய பாவத்திற்காகவும், முஃமின்களான ஆண்களுக்காகவும், பெண்களுக்காகவும் (பாவ) மன்னிப்புத் தேடுவீராக - . . .

47:19. . . . நீங்கள் உங்களுடைய தவறுகளை மன்னிக்கக் கோருவதுடன், நம்பிக்கை கொண்ட ஆண்களுக்கும், பெண்களுக்கும் மன்னிப்பு கோருங்கள்! (நம்பிக்கையாளர்களே!) . . .

47:19. . . . மேலும், உம் பிழைகளுக்காகவும் இறைநம்பிக்கைகொண்ட ஆண்கள், பெண்களுக்காகவும் மன்னிப்புக் கேளும்!. . .

47:19. . . . உம்முடைய பாவத்திற்காகவும், விசுவாசங்கொண்ட ஆண்களுக்காகவும், விசுவாசங்கொண்ட பெண்களுக்காகவும் பாவ மன்னிப்புக் கோருவீராக! . . .

மூலம்: **http://www.tamililquran.com/**



**கேள்வி 56:** முஹம்மது பாவமே செய்யாதவர் என்று சொல்கிறார்களே, இது உண்மையா?

**பதில் 56:** முந்தைய கேள்வியின் பதிலைப் பார்க்கவும். குர்ஆன் 47:19ன் படி முஹம்மது நம்மைப்போன்று பாவங்கள் செய்கின்றவரே ஆவார். அவருக்கும் அல்லாஹ்விடமிருந்து மன்னிப்பு தேவையாக இருக்கிறது. இதனை மறுப்பவர் குர்ஆனையும், அல்லாஹ்வையும் மறுப்பவராவார். யாராவது முஹம்மதுவிற்கு அல்லாஹ்விடமிருந்து மன்னிப்பு தேவைப்படாது என்று சொல்வாரானால், அவர் அல்லாஹ்விற்கு சமமாக முஹம்மதுவை வைக்கின்றார் என்று பொருள்.

**குர்ஆன் 40:55ஐயும் பார்க்கவும்:**

குர்ஆன் 40:55. ஆகவே, நீர் பொறுமையுடன் இருப்பீராக. நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்குறுதி உறுதியுடையதாகும். உம் பாவத்திற்காக மன்னிப்புக் கோருவீராக; மாலையிலும் காலையிலும் உம் இறைவனைப் புகழ்ந்து, தஸ்பீஹு (துதி) செய்து கொண்டு இருப்பீராக!

இதைப் பற்றி மேலும் அறிய கீழ்கண்ட ஆய்வுக் கட்டுரைகளை படிக்கவும்:

- **பாகம் 1: முஹம்மது ஒரு பாவியா? - குர்ஆனின் சாட்சி**
- **பாகம் 2: முஹம்மது ஒரு பாவியா? - ஹதீஸ்களின் சாட்சி**
- **பாகம் 3: முஹம்மது ஒரு பாவி, இயேசு பரிசுத்தர்**



**கேள்வி 57:** எல்லா நபிமார்களும் பாவம் செய்யாதவர்கள் என்று தான் குர்ஆன் சொல்கிறதே!

**பதில் 57:** குர்ஆனில் எந்த வசனத்தில் 'நபிமார்கள் அனைவரும் பாவமில்லாதவர்கள்' என்று சொல்லியுள்ளது? ஒரே ஒரு வசனத்தைக் காட்டுங்கள் பார்க்கலாம்!? நேரடியாக வேண்டாம் மறைமுகமாகவாவது குர்ஆன் சொல்வதில்லை.

உங்கள் இமாம் அல்லது அறிஞர்கள் உங்களிடம் பொய் சொல்கிறார்கள். குர்ஆன் இப்படி சொல்வதில்லை, ஆனால், இதற்கு பதிலாக, முஹம்மதுவின் பாவங்கள்(47:19, 40:55) பற்றி குர்ஆன் பேசுவது போன்று, நபிகளின் பாவங்களை குர்ஆன் சிட்டிக்காட்டுகின்றது.



**கேள்வி 58**: மற்ற நபிமார்கள் பாவம் செய்தார்கள் என்று குர்ஆன் எங்கே சொல்கிறது?

**பதில் 58:** முஹம்மதுவே பாவம் செய்தவர் என்று குர்ஆன் 47:19, 40:55 கூறும் போது, மற்ற நபிமார்கள் பாவம் செய்திருக்கமாட்டார்கள் என்று குர்ஆன் சொல்லும் என்று நீங்கள் எதிர்ப்பார்க்கிறீர்களா? சரி, உங்கள் திருப்திக்காக 2 உதாரணங்களைத் தருகிறேன்.

யூஸுஃப் பாவம் செய்பவர் தான், என்னால் தப்பித்தார் என்று அல்லாஹ் கூறுகின்றான்:

குர்ஆன் 12:24. ஆனால் அவளோ அவரைத் திடமாக விரும்பினாள்; **அவரும் தம் இறைவனின் ஆதாரத்தைக் கண்டிராவிட்டால் அவள் மீது விருப்பம் கொண்டே இருப்பார்;** இவ்வாறு நாம் அவரைவிட்டுத் தீமையையும் மானக்கேடான செயல்களையும் திருப்பிவிட்டோம் - ஏனெனில் நிச்சயமாக அவர் நம் தூய்மையான அடியார்களில் ஒருவராக இருந்தார்.

தாவூத் அல்லாஹ்விடம் மன்னிப்பு கோரினார்:

குர்ஆன் 38:24. (அதற்கு தாவூது:) “உம்முடைய ஆட்டை அவர் தம்முடைய ஆடுகளுடன் சேர்த்து விடும்படிக் கேட்டது கொண்டு நிச்சயமாக அவர் உம்மீது அநியாயம் செய்து விட்டார்; நிச்சயமாகக் கூட்டாளிகளில் பெரும்பாலோர் - அவர்களில் சிலர் சிலரை மோசம் செய்து விடுகின்றனர்; ஈமான் கொண்டு (ஸாலிஹான) நல்லமல்கள் செய்பவர்களைத் தவிர; இத்தகையவர் சிலரே” என்று கூறினார்; இதற்குள்: “நிச்சயமாக நாமே அவரைச் சோதித்து விட்டோம்” என்று **தாவூது எண்ணித் தம்முடைய இறைவனிடம் மன்னிப்பு கோரிக் குனிந்து விழுந்தவராக இறைவனை நோக்கினார்**.



**கேள்வி 59:** குர்ஆனில் வசனங்கள் எழுத்துக்கு எழுத்து மாறாமல் உள்ளது என்பது உண்மையா?

**பதில் 59:** அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. குர்ஆனில் அனேக வசனங்களே தொலைந்துவுள்ளது. அனேக வசனங்களில் எழுத்துப் பிழைகளும் உள்ளது. இஸ்லாமிய அறிஞர் ஸுயூதி தம்முடைய இத்கான் புத்தகத்தில் இதைப் பற்றி என்ன எழுதியுள்ளார் என்பதை கீழ்கண்ட கட்டுரையில் படிக்கவும். குர்ஆன்

பற்றி பொய்களைச் சொல்லும் இன்றைய முஸ்லிம் அறிஞர்களிடமிருந்து உங்களை காத்துக்கொள்ளுங்கள்.

- **குர்ஆன் எழுத்துக்கு எழுத்து பாதுகாக்கப்பட்டுள்ளதா? ஸுயூதியும் தொலைந்த குர்ஆன் வசனங்களும் பாகம் 3 (தொலைந்த 157 குர்ஆன் வசனங்கள்)**



**கேள்வி 60:** குர்ஆனில் ஏதாவது ஒரு இடத்தில் இயேசு (ஈஸா) பாவம் செய்தார் என்று நேரடியாகவோ மறைமுகமாவோ சொல்லப்பட்டுள்ளதா?

**பதில் 60:** முஹம்மதுவைப் பார்த்து அல்லாஹ் 'உம் பாவங்களுக்காக மன்னிப்பு கோரும்' என்று சொன்னான். மேலும் 'மற்ற நபிமார்கள் பாவமன்னிப்பு கோரினார்கள்' என்றும் சொன்னான், ஆனால் ஒரு இடத்திலும் இயேசு பற்றி குர்ஆன் இப்படி சொல்வதில்லை.

குர்ஆனோ ஹதீஸ்களோ இயேசு பாவமற்றவர் என்று தான் சொல்கின்றது.

குர்ஆன் 19:19. "நிச்சயமாக நான் உம்முடைய இறைவனின் தூதன்; **பரிசுத்தமான புதல்வரை** உமக்கு நன்கொடை அளிக்க (வந்துள்ளேன்") என்று கூறினார்.

புகாரி ஹதீஸிலும், ஆதாம் தொடங்கி அனைவரும் தம் பாவங்களை அறிக்கையிட்டார்களாம், ஆனால் இயேசு ஒரு பாவத்தையும் அறிக்கையிடவில்லையாம். இது எதைக் காட்டுகின்றது? இயேசு பாவமற்றவர் என்பதைக் காட்டுகின்றது:

4712. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

. . . அதற்கு ஈசா(அலை) அவர்கள், 'என் இறைவன் இன்று (என் மீது கடும்) கோபம்கொண்டுள்ளான். இதற்கு முன் அவன் இதைப்போல் கோபம் கொண்டதில்லை. இதற்குப் பிறகும் இதைப் போல் அவன் ஒருபோதும் கோபம் கொள்ளப்போவதுமில்லை - **(தாம் புரிந்துவிட்டதாக) எந்தப் பாவத்தையும் அவர்கள் குறிப்பிடாமல்** - . . .



**கேள்வி 61:** மஸீஹ் என்ற வார்த்தை குர்ஆனில் எத்தனை முறை வருகிறது, அது யாரை குறிக்கிறது?

**பதில் 61:** மஸீஹ் என்ற வார்த்தை குர்ஆனில் 9 வசனங்களில் 11 முறை வருகிறது. எல்லா இடங்களிலும் இயேசுக் கிறிஸ்துவைப் பற்றியே வருகின்றது.

மஸீஹ்: 3:45, 4:157, 4:171, 4:172, 5:17, 5:72, 5:75, 9:30 & 9:31

ஒரு வசனத்தை பார்க்கவும்:

> குர்ஆன் 3:45. மலக்குகள் கூறினார்கள்; “மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் தன்னிடமிருந்து வரும் ஒரு சொல்லைக் கொண்டு உமக்கு (ஒரு மகவு வரவிருப்பது பற்றி) நன்மாராயங் கூறுகிறான். அதன் பெயர் **மஸீஹ்**; மர்யமின் மகன் ஈஸா என்பதாகும். அவர் இவ்வுலகத்திலும், மறு உலகத்திலும் கண்ணியமிக்கோராகவும் (இறைவனுக்கு) நெருங்கி இருப்பவர்களில் ஒருவராகவும் இருப்பார்;

மஸீஹ் என்றால் என்னவென்று குர்ஆன் எங்கும் விளக்குவதில்லை. எபிரேய வார்த்தையாகிய 'மேசியா' என்ற வார்த்தையைத் தான் மஸீஹ் என்று குர்ஆன் அழைக்கிறது.



**கேள்வி 62:** ஃபுர்க்கான் என்றால் குர்ஆனா? அல்லது முந்தைய வேதங்களா?

**பதில் 62:** ஃபுர்க்கான் என்றால் நன்மை தீமைகளை பிரித்து அறியக்கூடிய ஞானம் அல்லது வேதம் என்று பொருள் கூறுகின்றனர். மேலும் ஃபுர்க்கான் என்ற பெயரில் குர்ஆனில் ஒரு அத்தியாயமும் (ஸூரா 25) உள்ளது.

ஃபுர்க்கான் என்ற பெயர் முந்தைய வேதங்களுக்கும் குர்ஆனுக்கும் சூட்டப்பட்டுள்ளது.

**1) மூஸாவிற்கு கொடுத்த தௌராத் ஒரு ஃபுர்க்கான் ஆகும்:**

ஸூரா 2:53 & 21:48 வசனங்களின் படி, மூஸாவிற்கு கொடுக்கப்பட்ட தௌராத் என்பது ஃபுர்க்கான் என்று குர்ஆன் சொல்கிறது. அதாவது தௌராத்தின் மூலம் மக்கள் “நன்மைகளை மற்றும் தீமைகளை” பிரித்து அறியமுடியும்.

> ஸூரா 2:53. இன்னும், நீங்கள் நேர்வழி பெறும்பொருட்டு **நாம் மூஸாவுக்கு வேதத்தையும் (நன்மை தீமைகளைப் பிரித்து அறிவிக்கக்கூடிய) ஃபுர்க்கானையும் அளித்தோம்** (என்பதையும் நினைவு கூறுங்கள்).

> ஸூரா 21:48. முன்பு நாம் **மூஸாவிற்கும், ஹாரூனுக்கும் (சத்தியத்தையும் அசத்தியத்தையும் வேறுபடுத்தக்கூடிய) ஃபுர்கானையும்**, ஒளியையும், அறிவுரையையும் அருளியிருந்தோம். இவை இறையச்சமுடையோருக்கு பயனளிக்கக் கூடியவையாகும். (இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்)

**2) குர்ஆன் ஒரு ஃபுர்க்கான் ஆகும்:**

குர்ஆனை ஃபுர்க்கான் என்று ஸூரா 25:1 கூறுகிறது. இங்கு குர்ஆன் என்று சொல்லப்படாமல், இவ்வேதம் என்று சொல்லியுள்ளதால், அது குர்ஆன் என்று அறிந்துக்கொள்ளலாம்.

> ஸூரா 25:1. உலகத்தார் யாவரையும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காக **(சத்தியத்தையும், அசத்தியத்தையும் தெளிவாகப்) பிரித்தறிவிக்கும்** இவ்வேதத்தைத் தன் அடியார் மீது இறக்கியவன் மிக்க பாக்கியமுடையவன்.

**3) நன்மை/தீமைகளை பிரிந்து அறியக்கூடிய வழி கூட ஃபுர்க்கான் ஆகும்:**

கீழ்கண்ட வசனத்தில் முந்தைய வேதங்களின் பெயர்களோ, அல்லது குர்ஆனின் பெயரோ குறிப்பிடவில்லை, "நேர்வழி" என்று பொதுவாகச் சொல்லப்பட்டுள்ளது. இங்கும் ஃபுர்க்கான் என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது.

> ஸூரா 8:29. ஈமான் கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்து கொள்வீர்களானால் அவன் உங்களுக்கு **(நன்மை தீமையைப்) பிரித்தறிந்து** நடக்கக்கூடிய நேர்வழி காட்டுவான்; இன்னும் உங்களை விட்டும் உங்கள் பாவங்களைப் போக்கி உங்களை மன்னிப்பான்; ஏனெனில் அல்லாஹ் மகத்தான அருட்கொடையுடையவன்.



**கேள்வி 63:** குர்ஆன் 3:4ன் படி, எது ஃபுர்க்கான்? குர்ஆனா? அல்லது முந்தைய வேதங்களா? ஏன் தமிழாக்கங்கள் குழப்புகின்றன?

**பதில் 63:** கீழ்கண்ட மூன்று தமிழாக்கங்கள், வேண்டுமென்றே உண்மையை மறைக்க முயற்சி எடுத்துள்ளார்கள்.

முந்தைய மக்களுக்கு நன்மை தீமைகளை பிரித்து அறிவதற்காக ஃபுர்க்கானை இறக்கினேன் என்று வசனம் தெளிவாகச் சொல்லும் போது, இதனை ஜீரணித்துக்கொள்ள முடியாத முஸ்லிம் அறிஞர்கள் இடையில் குர்ஆனை நுழைக்க முயலுகின்றனர்.

இந்த மூன்று தமிழாக்கங்களை படியுங்கள், அதன் பிறகு நம் கேள்விகளை காண்போம்.

**டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்:**

> ஸூரா 3:4. **இதற்கு முன்னால்** மனிதர்களுக்கு நேர்வழி காட்டுவதற்காக (நன்மை, தீமை இவற்றைப் பிரித்தறிவிக்கும் **ஃபுர்க்கா(ன் என்னும் குர்ஆ)னையும் இறக்கி வைத்தான்**. . . .

**இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:**

ஸூரா 3:4. இது தனக்கு **முன்னர் அருளப்பட்ட வேத** நூல்களை உண்மைப்படுத்துகிறது. மேலும் மக்களுக்கு நேர்வழி காட்டுவதற்காக இதற்கு முன் தவ்ராத்தையும் இன்ஜீலையும் அவன் இறக்கியிருக்கின்றான். மெய்யையும், பொய்யையும் வேறுபடுத்திக் காட்டும் (உரைகல்லான) இந்த **ஃபுர்கானையும்** இறக்கியுள்ளான். . . .

**மன்னர் ஃபஹத் வளாகம் (சவூதி) தமிழாக்கம்:**

ஸூரா 3:4. **முன்னர்** மனிதர்களுக்கு நேர்வழி காட்டுவதற்காக (வேதங்களை அவனே இறக்கிவைத்தான்.) மேலும் (நன்மை தீமைகளைப்) பிரித்தறிவிக்கக் கூடிய **புர்க்கா(ன் எனும் குர்ஆ)னையும்** அவனே இறக்கிவைத்தான். . . .

**மூல அரபியில் இவ்வசனத்தின் ஒரு வாக்கியத்தை கவனிப்போம்:**

**முஸ்லிம் அறிஞர்களின் வஞ்சகம்:**

| ஸூரா 3:4 | 5 | 4 | 3 | 2 | 1 |
|---|---|---|---|---|---|
| அரபி | اَلْفُرْقَانَ | وَاَنْزَلَ | لِّلنَّاسِ | هُدًى | مِنْ قَبْلُ |
| அரபி உச்சரிப்பு தமிழில் | ஃபுர்க்கான | வ அன்ஜல் | லிந்நாஸி | ஹுதன் | மின் கப்லு |
| தமிழ் | பிறித்தறிவிக்கக் கூடியதை | இன்னும் இறக்கினான் | மக்களுக்கு | நேர்வழியாக | (இதற்கு) முன்னர் |

1. "இதற்கு முன்பு மக்களுக்கு வழிகாட்ட ஃபுர்க்கானை இறக்கினான்" என்பது தான் இவ்வாக்கியத்தின் அரபி மொழியாக்கம்.

2. ஆனால், ஏன் முஸ்லிம் அறிஞர்கள் ஒரு சாதாரண மொழியாக்கத்தை செய்ய இவ்வளவு கஷ்டப்படுகிறார்கள்?

3. இந்த இடத்தில் குர்ஆன் என்ற வார்த்தை எங்கே இருக்கிறது?

4. இவர்களின் மொழியாக்கத்தின் படி, முன்னர் காலத்தில் இறக்கப்பட்ட தோறாவிற்கும், ஜபூருக்கும், இன்ஜிலுக்கும் "குர்ஆன்" என்ற பெயர் இருந்தது என்று சொல்வது போன்று உள்ளது?

5. அல்லது முஹம்மதுவிற்கு இறக்கப்பட்டதற்கு முன்பு குர்ஆனை அல்லாஹ் வேறு யாருக்கோ இறக்கியிருக்கிறான் என்று பொருள் வருகிறது?

6. இந்த வசனத்தில் வரும் **ஃபுர்க்கான்** என்ற சொல், "**குர்ஆனைத் தான் குறிக்கவேண்டும்**" என்பதற்காக, ஒரு வாக்கிய வசனத்தை இரண்டு

வாக்கியங்களாகவும் இவர்கள் பிரித்துக் காட்டுகிறார்கள். இது முஸ்லிம் அறிஞர்களின் வாஞ்சகம் ஆகும்.

இந்த வசனத்தை பொருத்தமட்டில், பீஜே அவர்களின் தமிழாக்கம் நேர்மையை கையாண்டுள்ளது எனலாம். இந்த வசனத்தில் வரும் ஃபுர்க்கான் என்பது "குர்ஆன் தான்" என்று எடுத்துக்காட்ட பீஜே முயலவில்லை.

**பீஜே தமிழாக்கம்:**

> 3:4. . . .முன் மனிதர்களுக்கு நேர்வழி காட்ட தவ்ராத்தையும், இஞ்சீலையும் அவன் அருளினான். (பொய்யை விட்டு உண்மையைப்) பிரித்துக் காட்டும் வழிமுறையையும் அவன் அருளினான். . . .

இதுவரை கண்ட விவரங்களின்படி, குர்ஆன் 3:4ல் சொல்லப்பட்ட "ஃபுர்க்கான்" என்பது முந்தைய வேதங்களை குறிக்கும் என்பது நிரூபனமானது. மேலும் தமிழாக்கம் செய்யும் முஸ்லிம் அறிஞர்கள் வாசகர்களை ஏமாற்ற முயன்றுள்ளார்கள், அல்லது அல்லாஹ்வையே ஏமாற்ற முயன்றுள்ளனர். அல்லாஹ் சொல்ல வந்தது ஒன்று இவர்கள் மொழியாக்கம் செய்வது வேறொன்று.



**கேள்வி 64:** பைபிளுக்கும் குர்ஆனுக்கும் இடையே இருக்கும் வேற்றுமைகளை பார்ப்பதை விட்டுவிட்டு, ஏன் ஒற்றுமைகளை மட்டுமே பார்க்கக்கூடாது?

**பதில் 64:** உங்களிடம் 2000 ரூபாய் இந்திய நோட்டுக்கள் இரண்டை கொடுத்து, இவைகளில் எது நல்ல நோட்டு (பணம்), எது கள்ள நோட்டு என்று கேட்டால், நீங்கள் எவைகளைப் பார்ப்பீர்கள்? ஒற்றுமைகளை பார்ப்பீர்களா அல்லது வேற்றுமைகளை (வித்தியாசங்களை) பார்ப்பீர்களா?

இந்த கீழ்கண்ட படத்தைப் பாருங்கள், ஒரு நல்ல நோட்டுக்கு இருக்கவேண்டிய எட்டு வகையான காரணிகளை கொடுத்து இருப்பார்கள்.

**m.economictimes.com/photo/55510584.cms**

ஒருவேளை உங்களிடம் கொடுக்கப்பட்ட இரண்டு நோட்டுக்களில் ஏழு ஒற்றுமைகள் இருந்து, ஒரே ஒரு ஒற்றுமை இல்லையென்று வைத்துக்கொள்வோம், அதனை நல்ல நோட்டு என்று அரசாங்கம் அல்லது மத்திய ரிசர்வ வங்கி ஒப்புக்கொள்ளுமா?

மஹாத்மா காந்திக்கு பதிலாக நேரு இருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். நேரு கூட நம்முடைய முதல் பிரதமர் தானே, சுதந்திர போராட்ட வீரர் தானே, மேலும் நல்ல நோட்டில் இருக்கின்ற 7 ஒற்றுமைகள் அப்படியே இருக்கின்றதல்லவா? இந்த நோட்டை கள்ள நோட்டு என்று ஏன் சொல்கிறீர் என்று கேட்டால், இது சரியானதாக இருக்குமா?

அனேக ஒற்றுமைகள் இருக்கும்போது, ஏன் ஒரு வேற்றுமையை பிடித்து தொங்குகிறீர்கள் என்று நாம் போலிஸிடம் சொல்லமுடியுமா? முட்டிக்கு முட்டி தட்டி சிறைச்சாலையில் அடைத்துவிடுவார்கள் அல்லவா?

இது போலத்தான், மேலோட்டமான விவரங்களில் பைபிளுக்கும் குர்ஆனுக்கும் அனேக ஒற்றுமைகள் இருந்தாலும், அடிப்படை சத்தியங்களில் வித்தியாசங்கள் இருப்பதினால், குர்ஆனை இறைவேதம் என்று ஏற்றுக்கொள்ளமுடியாது, அல்லாஹ் உண்மையான இறைவன் என்று ஏற்கமுடியாது, முஹம்மது ஒரு தீர்க்கதரிசி என்று ஒப்புக்கொள்ளமுடியாது.

ஒற்றுமைகள் 99.99% இருந்தாலும், அது கள்ள நோட்டு தான், உண்மை பிடிவாதமானது, அதற்கு 100% ஒற்றுமைகள் வேண்டும்.



**கேள்வி 65:** "குர்ஆனில் மக்கா நகரத்திற்கு கொடுக்கப்பட்ட இதர பெயர்கள் யாவை?

**பதில் 65:** குர்ஆனில் மக்கா நகரம் பற்றி மூன்று வகையான விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

**a) பக்கா:**

மக்காவிற்கு "பக்கா" என்ற பெயரை குர்ஆன் பயன்படுத்துகிறது.

> ஸூரா 3:96. (இறை வணக்கத்திற்கென) மனிதர்களுக்காக வைக்கப் பெற்ற முதல் வீடு நிச்சயமாக **பக்காவில்** (மக்காவில்) உள்ளது தான்; அது பரக்கத்து (பாக்கியம்) மிக்கதாகவும், உலக மக்கள் யாவருக்கும் நேர்வழியாகவும் இருக்கிறது.

குறிப்பு: சில முஸ்லிம்கள் சங்கீதம் 84:6ம் வசனத்தில் வரும் "பெகா" என்ற வார்த்தை தான் குர்ஆனில் வரும் "பக்கா" என்கிறார்கள். உண்மையில் இதுவேறு அது வேறு

> சங்கீதம் 84:6. **அழுகையின் பள்ளத்தாக்கை (பெகா)** உருவ நடந்து அதை நீரூற்றாக்கிக்கொள்ளுகிறார்கள்; மழையும் குளங்களை நிரப்பும்.

எபிரேய வார்த்தை பெகா என்றால், "அழுகையின் பல்லத்தாக்கு" என்று அர்த்தம், அதன் பெயர் "மெக்கா" இல்லை.

**b) அபயமளிக்கும் நகரம்:**

> ஸூரா 95:3. மேலும் அபயமளிக்கும் இந்த (மக்கமா) நகரத்தின் மீதும் சத்தியமாக-

**c) நகரங்களின் தாய்:**

ஸூரா 42:7. அவ்வாறே நகரங்களின் தாய்க்கும், (மக்காவுக்கும்) அதனைச் சுற்றியுள்ளவற்றுக்கும் அச்சமூட்டி எச்சரிப்பதற்காகவும், எவ்வித சந்தேகமுமின்றி (யாவரும்) ஒன்று சேர்க்கப்படும் நாளைப்பற்றி அச்சமூட்டி எச்சரிப்பதற்காகவும், அரபி மொழியிலான இந்த குர்ஆனை நாம் உமக்கு வஹீ அறிவிக்கிறோம்; ஒரு கூட்டம் சுவர்க்கத்திலும் ஒரு கூட்டம் நரகத்திலும் இருக்கும்.



**கேள்வி 66:** "குர்ஆனில் மக்கா என்ற வார்த்தை எத்தனை முறை பயன்படுத்தப்பட்டுள்ளது?

**பதில் 66:** குர்ஆனில் மக்கா என்ற வார்த்தை ஒரே ஒரு முறை கீழ்கண்ட வசனத்தில் வருகிறது.

ஸூரா 48:24. இன்னும், அவன்தான் உங்களுக்கு அவர்கள் மீது வெற்றி அளித்த பிறகு, **மக்காவினுள்** அவர்களுடைய கைகளை உங்களை விட்டும், உங்கள் கைகளை அவர்களை விட்டும் தடுத்துக் கொண்டான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றையெல்லாம் நன்கு பார்ப்பவனாக இருக்கின்றான்.

குர்ஆனில் வேறு இடங்களில் நீங்கள் "(மக்கா)" என்று அடைப்பிற்குள் இருப்பதைக் காண்பீர்கள், ஆனால் அந்த வார்த்தை அரபி மூல வசனத்தில் இல்லை. குர்ஆனை தமிழாக்கம் செய்யும் போது, மேலதிக விவரங்களுக்காக முஸ்லிம் அறிஞர்கள் சொந்தமாக சேர்ப்பதாகும்.



**கேள்வி 67:** "மதினா நகரத்திற்கு குர்ஆனில் பயன்படுத்தப்பட்ட வேறு பெயர் என்ன?

**பதில் 67:** குர்ஆன் மதினாவை **யஸ்ரிப்/யத்ரிப்** என்று அழைக்கிறது.

**டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்:**

33:13. மேலும், அவர்களில் ஒரு கூட்டத்தார் (மதீனாவாசிகளை நோக்கி) "**யஸ்ரிப்** வாசிகளே! (பகைவர்களை எதிர்த்து) உங்களால் உறுதியாக நிற்க முடியாது, ஆதலால் நீங்கள் திரும்பிச் சென்று விடுங்கள்" என்று கூறியபோது, அவர்களில் (மற்றும்) ஒரு பிரிவினர்: "நிச்சயமாக எங்களுடைய வீடுகள் பாதுகாப்பற்ற நிலையில் இருக்கின்றன" என்று - அவை பாதுகாப்பற்றதாக இல்லாத நிலையிலும் - கூறி, (போர்க்களத்திலிருந்து சென்றுவிட) நபியிடம் அனுமதி கோரினார்கள் -

இவர்கள் (போர்க்களத்திலிருந்து தப்பி) ஓடுவதைத் தவிர (வேறெதையும்) நாடவில்லை.

**இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:**

> 33:13. அப்போது அவர்களில் ஒரு பிரிவினர் “**யத்ரிப்** வாசிகளே! இனி, நீங்கள் இங்கு தங்கியிருக்க உங்களுக்கு எந்த வாய்ப்பும் இல்லை. திரும்பிச் சென்றுவிடுங்கள்!” என்று கூறினார்கள்; மேலும், அவர்களில் மற்றொரு பிரிவினர் “எங்களுடைய வீடுகள் ஆபத்திற்குள்ளாகி இருக்கின்றன” என்று கூறி, நபியிடம் அனுமதி கோரிக் கொண்டிருந்தனர். ஆனால், அவை ஆபத்திற்குள்ளாகியிருக்கவில்லை. உண்மை யாதெனில், அவர்கள் (போர்க் களத்திலிருந்து) ஓடிவிடவே விரும்பினார்கள்.

உண்மையில், மதினா என்பது "நபியின் நகரம்(மதினத் அந்நபி - *Madīnat an-Nabī* )" என்பதன் சுருக்கமாகும். இஸ்லாமுக்கு முன்பாக, யத்ரீப் என்பது தான் அதன் உண்மை பெயராக இருந்தது. இஸ்லாமில் முக்கிய இடத்தை இந்த பட்டணம் பெற்றதால், அதற்கு "நபியின் நகரம்" என்று பெயரிடப்பட்டது.



**கேள்வி 68:** முஹம்மது அற்புதம் செய்யமாட்டார் என்று குர்ஆன் எங்கேயாவது சொல்கின்றதா?

**பதில் 68:** முஹம்மது அற்புதங்கள் செய்யமாட்டார், அவர் எச்சரிக்கை செய்பவர் மட்டுமே என்று குர்ஆன் பல இடங்களில், பல வகைகளில் அடித்துச் சொல்கிறது .

முஸ்லிம்களின் நம்பிக்கைப்படி குர்-ஆன் பிழையற்ற வேதமாகும். குர்ஆனுக்கு அடுத்தபடியாகத் தான் ஹதீஸ்கள். இந்த ஹதீஸ்களில் சிலவற்றை இன்றும் முஸ்லிம்கள் மறுக்கிறார்கள் ஏனென்றால், அவைகளில் கட்டுக்கதைகளும், பொய்களும் அதிகமாக இருப்பதினால் தான்.

முஹம்மது தன் நபித்துவத்தை நிரூபிக்க எப்போதாவது அற்புதம் செய்தாரா? என்ற கேள்விக்கு குர்ஆன் சொல்லும் பதில் என்னவென்பதை முதலாவது பார்ப்போம்.

### அ) அற்புதங்கள் செய்யாமல் தட்டிக்கழிக்கும் அல்லாஹ்:

முஹம்மதுவிடம் குறைஷிகள் மற்றும் யூதர்கள் அற்புதங்களைக் கேட்டார்கள். நீங்கள் அற்புதங்களைச் செய்தால், உங்களை ஒரு நபி என்று நம்புவதற்கு வாய்ப்பு உண்டாகும் என்று அவர்கள் சொன்னார்கள். எத்தனை முறை இப்படி கேட்டாலும், அல்லாஹ் ஒரு அற்புதமும் செய்யாமல் எல்லா நேரங்களிலும் தட்டிக்கழித்தார். இதற்கு காரணங்களையும் சொன்னார், அதாவது, முந்தைய கால மக்களைப்போல, இவர்களும் நம் அத்தாட்சிகளை ஏற்கமாட்டார்கள் எனவே, அவைகளைச் செய்வதினால் ஒரு நன்மையும் இல்லை. எனவே,

முஹம்மதுவின் மூலமாக ஒரு அற்புதத்தையும் செய்வதில்லை என்று கராராக குர்-ஆனில் அல்லாஹ் சொல்லிக்காட்டுகின்றான். கீழ்கண்ட குர்-ஆன் வசனங்களில் அல்லாஹ் சொல்லும் காரணங்களைக் காணுங்கள். ஒரு பேச்சுக்காகவாவது ஒரே ஒரு அற்புதமும் கூட செய்துக் காட்ட அல்லாஹ் விரும்பவில்லை.

**முஹம்மது ஜான் டிரஸ்ட் தமிழாக்கத்திலிருந்து வசனங்கள்:**

ஸூரா 2:118. இன்னும் அறியாதவர்கள் கூறுகிறார்கள்: "அல்லாஹ் ஏன் நம்மிடம் பேசவில்லை; மேலும், நமக்கு **ஏன் அத்தாட்சி வரவில்லை?**" என்று; இவர்களுக்கு முன்னர் இருந்தவர்களும் இப்படியே - இவர்களின் சொற்களைப்போலவே - தான் கூறினார்கள். இவர்களின் இதயங்கள் அவர்களுடைய இதயங்களைப் போன்றவையே தான். ஈமானில் உறுதியுடைய மக்களுக்கு நம் அத்தாட்சிகளை (அவர்கள் மனதில் பதியும்படி) நாம் நிச்சயமாகத் தெளிவாய் விவரித்துள்ளோம்.

ஸூரா 2:145. வேதம் கொடுக்கப்பட்டவர்களிடம் நீர் எல்லாவிதமான **அத்தாட்சிகளையும்** கொண்டுவந்த போதிலும் அவர்கள் உம் கிப்லாவைப் பின்பற்ற மாட்டார்கள்;; நீரும் அவர்களுடைய கிப்லாவைப் பின்பற்றுபவர் அல்லர்; இன்னும் அவர்களில் சிலர் மற்றவர்களின் கிப்லாவைப் பின்பற்றுபவர்களும் அல்லர்; எனவே (இதைப் பற்றிய) ஞானம் உமக்குக் கிடைத்த பின் நீர் அவர்களுடைய விருப்பங்களைப் பின்பற்றி நடப்பீராயின், நிச்சயமாக நீர் அநியாயக்காரர்களில் ஒருவராக இருப்பீர்.

ஸூரா 6:37. (நமது விருப்பம் போல்) **ஓர் அத்தாட்சி அவருடைய இறைவனிடமிருந்து** அவர் மீது இறக்கப்பட வேண்டாமா? என்று அவர்கள் கேட்கிறார்கள்; (நபியே!) நீர் கூறும்: "நிச்சயமாக அல்லாஹ் (அத்தகைய) ஓர் அத்தாட்சியை இறக்கி வைக்க வல்லமையுடையவனே; எனினும் அவர்களில் பெரும்பாலோர் அதை அறிந்து கொள்வதில்லை"

ஸூரா 6:109. (நிராகரித்துக் கொண்டிருக்கும்) அவர்கள், அல்லாஹ்வின் மீது உறுதியான சத்தியம் செய்து, **தங்களுக்கு ஓர் அத்தாட்சி வந்துவிடுமானால்** தாம் நிச்சயமாக அதைக் கொண்டு ஈமான் கொள்வதாக கூறுகிறார்கள். (நபியே!) அவர்களிடம்) நீர் கூறும்: அத்தாட்சிகள் யாவும் அல்லாஹ்விடமே இருக்கின்றன. அந்த அத்தாட்சிகள் வரும்பொழுது நிச்சயமாக அவர்கள் ஈமான் கொள்ளமாட்டார்கள் என்பதை உங்களுக்கு எது அறிவித்தது?

முஹம்மது தம்மிடம் அற்புதம் எதிர்ப்பார்க்கும் மக்களிடம் என்ன சொல்லவேண்டும் என்று அல்லாஹ் முஹம்மதுவிற்கு இந்த பத்தாவது ஸூராவில் கட்டளையிடுகின்றான். அதாவது அற்புதங்கள் அல்லாஹ்விடம் உள்ளன,

அவைகளுக்காக நீங்களும் காத்திருங்கள், நானும் காத்திருக்கிறேன் என்று முஹம்மது சொல்லவேண்டுமாம்.

> ஸூரா 10:20. "மேலும் அவர்கள், இவர் மீது இவருடைய இறைவனிடமிருந்து (நாம் கோரும் ஏதேனும்) ஓர் **அத்தாட்சி இறக்கப்பட வேண்டாமா?**" என்று கூறுகிறார்கள். அதற்கு "மறைவான விஷயங்கள் அல்லாஹ்வுக்கு மட்டுமே (தெரியும்). நீங்கள் எதிர்பார்த்திருங்கள். நிச்சயமாக நானும் உங்களுடன் எதிர் பார்த்திருக்கிறேன்" என்று (நபியே!) நீர் கூறுவீராக.

இரண்டாவது ஸூரா மதினாவில் இறங்கியதாகும் (மதனீ). சந்திரன் பிளந்த அற்புதம் உள்ளது என்றுச் சொல்லும் ஸூரா (54) மக்காவில் இறங்கியதாகும். மக்காவிலேயே ஆரம்ப காலத்தில் (முஹம்மது தம்மை நபியாக காண்பித்துக்கொண்ட நான்கு ஆண்டுகளுக்குள்), முஹம்மது இந்த ஒரு அற்புதம் செய்திருந்தால், ஏன் மதினாவில் இருக்கும் போது இறங்கிய இரண்டாவது ஸூராவில் அற்புதங்கள் எல்லாம் செய்யமுடியாது என்று அல்லாஹ் சொல்லப்போகிறான்? இதிலிருந்து நாம் எவைகளை அறிகிறோம்? முஹம்மது மக்காவில் இருக்கும் போது நடந்ததாகச் சொல்லும் அற்புதம் நடக்கவில்லை என்பதைத் தானே.

மக்காவில் செய்த அற்புதத்தை அல்லாஹ் மறந்துவிட்டிருக்கலாம் அல்லவா? என்று முஸ்லிம்கள் கேட்கமாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

### ஆ) முஹம்மது வெறும் எச்சரிக்கை செய்பவர், அற்புதங்கள் செய்பவர் அல்ல

குர்-ஆன் 13:7ஐ பாருங்கள், முஹம்மது வெறும் "அச்சமூட்டி எச்சரிப்பவர் மட்டுமே" என்றுச் சொல்கிறது. மக்கள் எவ்விதமான அத்தாட்சி, அற்புதங்கள் கேட்டாலும், அதை முஹம்மது மூலமாக செய்துக் காட்ட முடியாது என்று அல்லாஹ் சொல்லிவிடுகின்றான்.

> ஸூரா 13:7. இன்னும் (நபியே! உம்மைப்பற்றி இந் நிராகரிப்போர் "அவருக்கு அவருடைய இறைவனிடமிருந்து (நாம் விரும்பும்) அத்தாட்சி இறக்கப்பட வேண்டாமா?" என்று கூறுகிறார்கள்; **நீர் அச்சமூட்டி எச்சரிப்பவரே ஆவீர்**, மேலும், ஒவ்வொரு சமூகத்தவருக்கும் ஒரு நேர்வழி காட்டியுண்டு.

"முஹம்மதுவே, மக்கள் ஓயாமல் அற்புதங்கள் கேட்கிறார்கள், ஆனால், நான் செய்வதில்லை, இதற்காக நீர் துக்கப்படவேண்டாம். ஒன்றை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும், உம்மை அற்புதம் செய்ய நான் அனுப்பவில்லை, வெறும் எச்சரிக்கை செய்யவே அனுப்பினேன் என்பதை மறக்கவேண்டாம்" என்று அல்லாஹ் முஹம்மதுவிடம் கூறி அவரை ஆறுதல்படுத்துகிறான், பார்க்க குர்-ஆன் 11:12.

> ஸூரா 11:12. (நபியே! நம் வசனங்களை அவர்கள் செவிமடுப்பதில்லையே எனச் சடைந்து) வஹீ மூலம் உமக்கு அறிவிக்கப்பட்டவற்றில் சிலவற்றை விட்டுவிட எண்ணவோ, “அவர் மீது ஒரு **பொக்கிஷம் இறக்கப்பட வேண்டாமா? அல்லது அவருடன் ஒரு மலக்கு வர வேண்டாமா?**” என்று அவர்கள் கூறுவதினால் உம் இதயம் (சஞ்சலத்தால்) இடுங்கியிருக்கவோ கூடும்; நிச்சயமாக நீர் அச்சமூட்டி எச்சரிப்பவரேயன்றி வேறில்லை; அல்லாஹ் எல்லா பொருட்களின் மீதும் பொறுப்பாளனாக இருக்கிறான்.

உம்மிடம் அற்புதங்கள் கேட்பவர்களிடம், ” நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவரை வழிகெடச்செய்கிறான்; தன் பால் எவர் திரும்புகிறாரோ அத்தகையோருக்கு நேர் வழிகாட்டுகிறான்” என்றுச் சொல்லிவிடுங்கள் என்று அல்லாஹ் சொல்கின்றான், பார்க்க 13:27.

> ஸூரா 13:27. “இவருக்கு இவருடைய இறைவனிடமிருந்து ஓர் **அத்தாட்சி இறக்கி வைக்கப்படக் கூடாதா**” என்று நிராகரிப்போர் கூறுகிறார்கள், (நபியே!) நீர் கூறும்: “நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவரை வழிகெடச்செய்கிறான்; தன் பால் எவர் திரும்புகிறாரோ அத்தகையோருக்கு நேர் வழிகாட்டுகிறான்” என்று

### இ) மக்களை அச்சமூட்டி எச்சரிப்பதற்காகவே அன்றி நாம் அனுப்புவதில்லை:

உம்முடைய நபித்துவத்தை நிரூபிக்க நான் அத்தாட்சிகளை அனுப்பமாட்டேன். ஆனால், மக்களை பயமுறுத்தவும், எச்சரிக்கைச் செய்யவுமே அற்புதங்களைச் செய்வேன் என்று தெளிவாக அல்லாஹ் சொல்கின்றான். பார்க்க குர்-ஆன் 17:59

> ஸூரா 17:59. (நம்முடைய அத்தாட்சிகளை இவர்களுக்கு) முந்தியவர்களும் பொய்ப்பித்ததைத் தவிர (வேறு எதுவும் இவர்கள் கோரும்) அத்தாட்சிகளை அனுப்ப நம்மைத் தடுக்கவில்லை; (இதற்கு முன்) நாம் “ஸமூது” கூட்டத்தாருக்கு ஒரு பெண் ஒட்டகத்தைக் கண்கூடான அத்தாட்சியாகக் கொடுத்திருந்தோம்; அவர்களோ (வரம்பு மீறி) அதற்கு அநியாயம் செய்தனர்; (மக்களை) **அச்சமூட்டி எச்சரிப்பதற்காவே அன்றி நாம் (இத்தகைய) அத்தாட்சிகளை அனுப்புவதில்லை**.

மக்கள் எத்தனை முறை கேட்டலும் சரி, முஹம்மதுவின் நபித்துவத்தை நிரூபிக்க அல்லாஹ் அற்புதங்களைச் செய்வதாக தெரியவில்லை. இதனை மேற்கண்ட வசனங்கள் தெளிவாக விளக்குகின்றன.

"குர்ஆன் சொல்வது தவறு" என்றுச் சொல்ல எந்த ஒரு முஸ்லிமுக்காவது தைரியமுண்டா?



**கேள்வி 69:** குர்ஆன் தான் முஹம்மதுவிற்கு கொடுக்கப்பட்ட அற்புதம் என்று குர்ஆன் எந்த வசனத்தில் சொல்கின்றது?

**பதில் 69:** முந்தைய கேள்வியின் பதிலையும் படித்துக்கொள்ளுங்கள்.

குர்-ஆன் மட்டுமே அற்புதமாகும், இது போதாதா அவர்களுக்கு?

ஒரு இடத்தில் அல்லாஹ் அற்புதம் செய்ய மறுப்பதைக் காணமுடியும். முஹம்மது வெறும் எச்சரிக்கை செய்பவர், அவர் மூலமாக நான் அற்புதங்கள் செய்யமாட்டேன், அதனால் பயனுமில்லை. ஆனால், குர்-ஆன் என்ற அற்புதத்தை அவர் மூலமாக கொடுத்து இருக்கிறேன். இந்த குர்-ஆன் அவர்களுக்கு போதாதா? என்று நச்சென்று அல்லாஹ் சொல்கிறான்.

> ஸூரா 29:50. "அவருடைய இறைவனிடமிருந்து அவர் மீது அத்தாட்சிகள் ஏன் இறக்கப்படவில்லை?" என்றும் அவர்கள் கேட்கிறார்கள்; "அத்தாட்சிகளெல்லாம் அல்லாஹ்விடம் உள்ளன; ஏனெனில் நான் வெளிப்படையாக **அச்ச மூட்டி எச்சரிக்கை செய்பவன் தான்**" என்று (நபியே!) நீர் கூறுவீராக.
>
> ஸூரா 29:51. அவர்களுக்கு ஓதிக்காட்டப்படும் இவ்வேதத்தை **நாம் உம் மீது இறக்கியிருக்கிறோம் என்பது அவர்களுக்குப் போதாதா?** நிச்சயமாக அ(வ் வேதத்)தில் ரஹ்மத்தும், ஈமான் கொண்ட சமூகத்தாருக்கு (நினைவூட்டும்) நல்லுபதேசமும் இருக்கின்றன. (முஹம்மது ஜான் டிரஸ்ட் தமிழாக்கம்)

மேற்கண்ட வசனங்களில், இஸ்லாமை நம்பாதவர்கள் சொல்லும் குற்றச்சாட்டை அல்லாஹ் மறுக்காமல் அதனை ஏற்றுக்கொள்கின்றான். முஹம்மதுவினால் அற்புதங்கள் செய்யமுடியாதது உண்மை தான், ஏனென்றால் அவர் வெறும் எச்சரிக்கை செய்பவர் மட்டுமே, அற்புதங்கள் செய்பவர் அல்ல என்று அல்லாஹ் சொல்கின்றான். மேலும், இதனை அற்புதங்கள் கேட்கும் மக்களிடம் சொல்லும் படி முஹம்மதுவிற்கும் கட்டளையிடுகின்றான்.

குர்ஆன் தான் தனக்கு அல்லாஹ் கொடுத்த அற்புதம் என்று முஹம்மது கூறியுள்ளார், இதனை புகாரி நூலில் காணலாம்.

**புகாரி எண்: 4981 & 7274**

4981. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

> ஒவ்வோர் இறைத்தூதருக்கும் சில அற்புதங்கள் வழங்கப்பட்டே இருந்தன. அவற்றைக் காணும் மக்கள் நம்பித்தான் ஆகவேண்டிய நிலை இருந்தது. **எனக்கு வழங்கப்பெற்ற அற்புதமெல்லாம், அல்லாஹ் எனக்கு அருளிய வேத அறிவிப்பு (வஹீ) தான்**. எனவே, நபிமார்களிலேயே மறுமை நாளில், பின்பற்றுவோர் அதிகம் உள்ள நபியாக நான்

இருக்கவேண்டும் என எதிர்பார்க்கிறேன். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

7274. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

ஒவ்வோர் இறைத்தூதருக்கும் சில அற்புதங்கள் வழங்கப்பட்டே இருந்தன. அவற்றைக் காணும் மக்கள் 'நம்பியே ஆகவேண்டிய' அல்லது 'பாதுகாப்புப் பெற்றே தீர வேண்டிய' நிலை இருந்தது. **எனக்கு வழங்கப்பெற்ற அற்புதமெல்லாம், அல்லாஹ் எனக்கு அருளிய வேத அறிவிப்பு (வஹீ) தான்**. எனவே, நபிமார்களிலேயே மறுமைநாளில், பின்பற்றுவோர் அதிகமுள்ள நபியாக நானே இருப்பேன் என எதிர்பார்க்கிறேன். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.



**கேள்வி 70:** குர்ஆனை பொய்யாக்கும் ஹதீஸ்கள் – முஹம்மது அற்புதங்கள் செய்தாரா?

**பதில் 70:** மேற்கண்ட இரண்டு கேள்விகளில் "முஹம்மது அற்புதங்கள் செய்யமாட்டார், குர்ஆன் தான் அவருக்கு கொடுக்கப்பட்ட அற்புதம்" என்று குர்ஆன் சொல்லும் சாட்சிகளை படித்தோம்.

குர்ஆன் சொல்வதற்கு எதிராக ஹதீஸ்கள் "முஹம்மது அற்புதங்கள்" செய்தார் என்று கூறுகின்றன. இப்போது நாம் யாரை நம்பவேண்டும்? குர்ஆனையா? அல்லது ஹதீஸ்களையா?

### a) சந்திரன் பிளக்கப்பட்டதைப் பற்றி முஸ்லிம் ஹஹீஸில் பதிவு செய்யப்பட்டுள்ள விவரங்கள்:

**முஸ்லிம் ஹதீஸ் நூல்: எண்கள்: 5395, 5396, 5397, 5398, 5399 & 5400:**

5395. அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "**(நான் இறைவனின் தூதர் என்பதற்கு) நீங்கள் சாட்சிகளாக இருங்கள்**" என்று சொன்னார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

### b) முஹம்மதுவின் விரல்களிலிருந்து தண்ணீர் வந்த அற்புதம்:

அற்புதங்கள் நபிகளின் நபித்துவத்தை நிருபிக்கும் சான்றுகள். இந்த சான்றுகளை அற்புதங்களை முஹம்மதுவினால் செய்யமுடியாது, மேலும் குர்ஆன் மட்டும் தான் முஹம்மதுவிற்கு கொடுக்கப்பட்ட அற்புதம் என்று குர்ஆனும் சொல்கிறது, முஹம்மதுவும் கூறியுள்ளார். இந்த ஹதீஸின் படி,

முஹம்மது தம் விரல்களிலிருந்து மற்றவர்கள் உளூ செய்ய தண்ணீர் வந்ததாகச் சொல்லப்படுகின்றது.

புகாரி எண்: 169 'அஸர் தொழுகையின் நேரம் நெருங்கியபோது நபி(ஸல்) அவர்களை பார்த்தேன். மக்கள் உளூச் செய்வதற்குத் தண்ணீரைத் தேடினார்கள். தண்ணீர் கிடைக்கவில்லை. நபி(ஸல்) அவர்களிடம் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வரப்பட்டது. தண்ணீர் உள்ள பாத்திரத்தில் நபி(ஸல்) அவர்கள் தங்களின் கையை வைத்து அப்பாத்திரத்திலிருந்து உளூச் செய்யுமாறு மக்களுக்குக் கட்டளையிட்டார்கள். **நபி(ஸல்) அவர்களின் விரல்களின் கீழேயிருந்தது அங்கிருந்த கடைசி நபர் உளூச் செய்து முடிக்கும் வரை தண்ணீர் சுரந்து கொண்டிருந்ததை பார்த்தேன்**' என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

### c) முஹம்மது "கொஞ்ச உணவை 1000 பேருக்கு மேல் சாப்பிடும்படி" செய்த அற்புதம்:

கீழ்கண்ட ஹதீஸின் படி, கொஞ்ச உணவை முஹம்மது 1000க்கும் அதிமானவர்கள் சாப்பிடும்படி அற்புதம் செய்ததாக கூறப்படுகின்றது. இவைகள் குர்ஆனுக்கு எதிரானவைகளாகும். முஹம்மதுவிற்கு பிறகு 200 ஆண்டுகளுக்கு பிறகு எழுதப்பட்ட ஹதீஸ்களில் கலந்துள்ள பொய்களாகும் இவைகள்.

**புகாரி எண்கள்: 4101 & 4102:**

4102. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

(போருக்காக) அகழ் தோண்டப்பட்டுக் கொண்டிருந்தபோது நபி(ஸல்) அவர்களின் வயிறு (பசியினால்) மிகவும் ஒட்டியிருப்பதைக் கண்டேன். உடனே நான் திரும்பி என் மனைவியிடம் வந்து, 'நபி(ஸல்) அவர்களின் வயிறு மிகவும் ஒட்டிப் போயிருப்பதைக் கண்டேன். உன்னிடம் ஏதேனும் (உண்ண) இருக்கிறதா?' என்று கேட்டேன். உடனே என்னிடம் என் மனைவி ஒரு பையைக் கொண்டு வந்தாள். அதில் ஒரு 'ஸாவு' அளவு வாற்கோதுமையிலிருந்தது. வீட்டில் வளரும் ஆட்டுக்குட்டி ஒன்றும் எங்களிடம் இருந்தது. அதை நான் அறுத்தேன். என் மனைவி அந்தக் கோதுமையை அரைத்தாள். நான் (அறுத்து) முடிக்கும்போது அவளும் (அரைத்து) முடித்துவிட்டாள். மேலும் அதனைத் துண்டுகளாக்கி அதற்கான சட்டியிலிட்டேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் திரும்பி வந்தேன். (நான் புறப்படும்போது என் மனைவி,) 'இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் அவர்களுடன் இருப்பவர்களுக்கும் முன்னால் என்னை நீங்கள் கேவலப்படுத்திவிடவேண்டாம். ('உணவு கொஞ்சம் தானிருக்கிறது' என்று கூறிவிடுங்கள்)' என்று சொன்னாள். நான் நபி(ஸல்) அவர்களிடம் வந்து இரகசியமாக, 'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் எங்களுக்குச் சொந்தமான ஆட்டுக் குட்டியொன்றை அறுத்து, எங்களிடம் இருந்த ஒரு 'ஸாவு' அளவு வாற்கோதுமையை அரைத்தும் வைத்துள்ளோம். எனவே, தாங்களும் தங்களுடன் ஒரு சிலரும் (என் இல்லத்திற்கு) வாருங்கள்' என்று அழைத்தேன். அப்போது

நபி(ஸல்) அவர்கள் உரத்த குரலில், 'அகழ்வாசிகளே! ஜாபிர் உங்களுக்காக உணவு தயாரித்துள்ளார். எனவே, விரைந்து வாருங்கள்' என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஜாபிர் - ரலி - அவர்களிடம்), 'நான் வரும் வரை நீங்கள் சட்டியை (அடுப்பிலிருந்து) இறக்கவேண்டாம். உங்கள் குழைத்த மாவில் ரொட்டி சுடவும் வேண்டாம்' என்று கூறினார்கள். நான் திரும்பி வந்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்களை அழைத்துக் கொண்டு) அவர்களுக்கு முன்னால் வந்து கொண்டிருந்தார்கள். நான் மனைவியிடம் வந்து சேர்ந்தேன். (நபி - ஸல் - அவர்கள் தோழர்கள் பலருடன் வருவதைப் பார்த்து என் மனைவி கோபமுற்று) என்னைக் கடிந்து கொண்டாள். உடனே நான், 'நீ நபி(ஸல்) அவர்களிடம் சொல்லச் சொன்ன விஷயத்தை நான் (அவர்களிடம்) சொல்லிவிட்டேன்' என்று கூறினேன். பிறகு நபி(ஸல்) அவர்களிடம் என் மனைவி குழைத்த மாவைக் கொடுத்தாள். நபி(ஸல்) அவர்கள் அதில் (தம் திரு வாயினால்) உமிழ்ந்தார்கள். மேலும், மாவில் பரக்கத் - பெருக்கம் ஏற்படப் பிரார்த்தித்தார்கள். பிறகு, எங்கள் இறைச்சிச் சட்டியை நோக்கி வந்தார்கள். பிறகு அதில் உமிழ்ந்து பரக்கத் - பெருக்கம் ஏற்படப் பிரார்த்தித்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள், (என் மனைவியை நோக்கி), 'ரொட்டி சுடுபவள் ஒருத்தியை (உதவிக்கு) அழை. அவள் என்னோடு ரொட்டி சுடட்டும். உங்களுடைய பாத்திரத்திலிருந்து நீ அள்ளிக் கொடுத்துக் கொண்டிரு. பாத்திரத்தை இறக்கி வைத்து விடாதே' என்று கூறினார்கள். அங்கு (வந்தவர்கள்) ஆயிரம் பேர் இருந்தனர்.

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்கள் அனைவரும் சாப்பிட்டுவிட்டு, அந்த உணவைவிட்டுத் திரும்பிச் சென்றனர். **அப்போது எங்கள் சட்டி நிறைந்து சப்தமெழுப்பியவாறு கொதித்துக கொண்டிருந்தது. அது (கொஞ்சம் குறையாமல்) முன்பிருந்தது போன்றே இருந்தது. மேலும், எங்கள் குழைத்தமாவும் (கொஞ்சமும் குறைந்து விடாமல்) முன்பு போன்றே ரொட்டியாகச் சுடப்பட்டுக் கொண்டிருந்தது**.

**குர்ஆன் சொல்கிறது** ==> **முஹம்மது ஒரு அற்புதம் கூட செய்யமாட்டார்**

**ஹதீஸ் சொல்கிறது** ==> **முஹம்மது பல அற்புதங்களைச் செய்தார்**

இப்போது கேள்வி என்னவென்றால், புகாரி ஹதீஸ் சொல்வது உண்மையென்றால், குர்ஆன் சொல்வது பொய்யாகும்? இதனை முஸ்லிம்கள் அங்கீகரிப்பார்களா?



**கேள்வி 71:** “குர்ஆனை படிக்கும் படி” என் நண்பன் வறுபுறுத்துகிறான். நான் குர்ஆனை படிக்கலாமா?

**பதில் 71:** நீங்கள் கிறிஸ்தவராக இருந்தால், ஒரே ஒரு கேள்வியை கேட்க விரும்புகிறேன். நீங்கள் பைபிளை படித்துள்ளீர்களா? குறைந்தபட்சம் புதிய ஏற்பாட்டை படித்துள்ளீர்களா? குர்ஆனை படிப்பதற்கு முன்பு, குறைந்தபட்சம் புதிய ஏற்பாட்டை படிக்கும் படி உங்களை கேட்டுக்கொள்கிறேன்.

பைபிளை படித்த பிறகு, புதிய ஏற்பாட்டை புரிந்துக்கொண்ட பிறகு நீங்கள் குர்ஆனை படித்தால், உங்களுக்கு ஓரளவிற்கு (கவனிக்கவும் ஓரளவிற்குத் தான்) குர்ஆன் புரியும்.

**குர்ஆனை முதன் முதலாக படிப்பவர்களுக்கு சில ஆலோசனைகள்:**

1) நீங்கள் முதலாவது புதிய ஏற்பாட்டை படித்துவிட்டு, அதன் பிறகு குர்ஆனை படிக்க முயலுங்கள். தமிழில் குர்ஆனை படிக்க விரும்பும் முஸ்லிம்கள் கூட, பைபிளை படித்துவிட்டு அதன் பிறகு குர்ஆனை படித்தால் அவர்களுக்கு நன்றாக குர்ஆன் புரியும்.

2) நான் கிறிஸ்தவன் அல்ல, நான் ஏன் முதலாவது புதிய ஏற்பாட்டை படிக்கவேண்டும் என்ற சந்தேகம் சிலருக்கு வரலாம். நீங்கள் யாராக இருந்தாலும் சரி, குறைந்தபட்சம் புதிய ஏற்பாட்டின் நற்செய்தி நூலை ஒரு முறையாவது படித்தால் தான் ஓரளவிற்கு குர்ஆன் புரியும், இல்லையென்றால் கண்ணைக் கட்டி காட்டிலே விட்ட கதையாக உங்கள் முயற்சி மாறிவிடும்.

3) உங்கள் தாய் மொழியில் (தமிழில்) குர்ஆனை படியுங்கள். உங்களுக்கு ஆங்கிலம் தெரிந்தால், ஆங்கிலத்திலும் குர்ஆனை படிக்கலாம்.

4) ஒரு புத்தகத்தில் பொதுவாக எதிர்ப்பார்க்கப்படும் விவரங்களாகிய முன்னுரை, கோர்வையாக எழுதுவது, மேலதிக விவரங்களைத் தருவது போன்றவைகள் குர்ஆனில் இருக்காது. குர்ஆன் ஒரு வித்தியாசமான புத்தகமாகும் என்பதை கவனத்தில் கொள்ளவும்.

5) குர்ஆனில் எந்த ஒரு விவரத்தை எடுத்துக்கொண்டாலும், அதற்கு ஒரு முன்னுரையோ, அறிமுகமோ, பின்னணி விவரங்களோ இருக்காது. இந்த அறிமுகத்தை பைபிள் கொடுக்கும். எனவே தான் பைபிளை மேலோட்டமாகவாவது தெரிந்துக்கொண்டு குர்ஆனுக்கு வாருங்கள் என்று ஆலோசனைச் சொல்கிறேன்.

6) ஆங்கிலம் உங்களுக்கு தெரிந்திருந்தால், குர்ஆனின் தஃப்ஸீர்களோடு (விளக்கவுரைகளோடு) சேர்ந்து படித்தால், சிறிது உபயோகமாக இருக்கும்.

7) முஹம்மதுவின் வாழ்க்கையோடு குர்ஆனின் வசனங்கள் சம்மந்தப்பட்டு இருப்பதினால், குர்ஆனை படிப்பதற்கு முன்பு, முஹம்மதுவின் சரித்திரத்தை படித்தல் நல்லது.

8) குர்ஆனை படிப்பது ஒரு சலிப்பு உண்டாக்கும் செயலாகும். அடிக்கடி குர்ஆனில் சொல்லப்பட்டும் விவரங்கள் திடீரென்று "பல நூற்றாண்டுகள் தாவும்", இதனை புரிந்துக்கொள்வது கொஞ்சம் கடினமே. எனவே, குர்ஆனை படிப்பதற்கு முன்பு, பைபிளை படிக்கவேண்டும், முஹம்மதுவின் வாழ்க்கை சரித்திரத்தைப் படிக்கவேண்டும், அதன் பிறகு குர்ஆனை படித்தால் தான் புரியும்.

**கடைசியாக, உங்களிடம் "குர்ஆனை படியுங்கள்" என்றுச் சொன்ன, அந்த இஸ்லாமிய நண்பரிடம், கீழ்கண்ட கேள்விகளைக் கேட்டுப்பாருங்கள்:**

1) அவர் குர்ஆனை தமிழில் படித்துள்ளாரா?

2) அவர் தமிழில் படிக்கவில்லை என்று சொல்வாரானால், ஏன் தமிழில் படிக்கவில்லை என்பதற்கு காரணங்களை அவர் சொல்லமுடியுமா?

3) அவர் தமிழில் அவரது வேதத்தை படிக்காமல், ஏன் அவர் உங்களை படிக்கச் சொல்கிறார்? தான் செய்யாத ஒன்றை ஏன் மற்றவர்கள் செய்யும்படி கேட்கிறார்?

4) ஒருவேளை அவர் தமிழில் படித்திருந்தால், குர்ஆனைப் பற்றியும், இஸ்லாமைப் பற்றியும், அவர் சுருக்கமாக உங்களுக்கு விளக்கமுடியுமே! அவரிடம் “குர்ஆனை உங்களுக்கு” விளக்கச் சொல்லுங்கள்?

5) ஒருவேளை, நீங்களும் அவரும் ஒன்றாக சேர்ந்து, வாரத்திற்கு சில மணித்துளிகளை ஒதுக்கி, குர்ஆனின் முதல் வசனத்திலிருந்து சேர்ந்து படிக்கலாமே! இது இருவருக்கும் பயனுள்ளதாக இருக்குமே!

6) நீங்கள் இருவரும் சேர்ந்து ஒவ்வொரு வசனமாக படித்து, தஃப்ஸீர்களில் விளக்கங்களை படித்து புரிந்துக்கொள்ள இந்த "ஐக்கிய வாசிப்பு" பயனுள்ளாதாக அமையும் என்பது என் கருத்து.

7) இன்னொரு ஆலோசனையும் உள்ளது. நீங்கள் குர்ஆனை படிப்பது போன்று அவரை பைபிளை படிக்கச் சொல்லுங்களேன். முக்கியமாக புதிய ஏற்பாட்டை அவர் படிக்கட்டும், நீங்கள் குர்ஆனை படியுங்கள்.

8) மேலும், குர்ஆனை ஒன்றாக சேர்ந்து படிப்பது போன்று, புதிய ஏற்பாட்டையும் நீங்கள் இருவரும் சேர்ந்து ஒவ்வொரு வசனங்களாக படிக்கலாமே! இதற்கு அவர் சம்மதிப்பாரா, கேட்டுப்பாருங்கள்.

9) நீங்கள் குர்ஆனை படியுங்கள், ஆனால் நான் பைபிளை படிக்கமாட்டேன் என்று அவர் சொன்னால், இது அநியாயம் என்று அவரிடம் சொல்லுங்கள்.

கடைசியாக, குர்ஆனை கிறிஸ்தவர்கள் படிப்பதினால் இயேசு கோபித்துக்கொள்ளமாட்டார். அதே போன்று பைபிளை முஸ்லிம்கள் படித்தால் அல்லாஹ் கோபித்துக்கொள்ளமாட்டான், ஏனென்றால் பைபிளை (தோரா,

சங்கீதம், நற்செய்தி நுல்களை) கொடுத்தது நானே என்று அல்லாஹ் சொல்கின்றான்.



**கேள்வி 72:** "குர்ஆனை தமிழில் படித்தீர்களா?" என்று முஸ்லிம் நண்பரிடம் கேட்டால், அவர்கள் கோபித்துக்கொள்ளமாட்டார்களா?

**பதில் 72:** ஏன் கோபித்துக்கொள்வார்கள்?

முஸ்லிமல்லாத உங்களிடம் குர்ஆனை படிக்கச் சொல்லும் போது, உங்களுக்கு கோபம் வந்ததா? இல்லையல்லவா?

முஸ்லிம்கள் உங்களிடம் "குர்ஆனை படியுங்கள்" என்றுச் சொன்னபோது உங்களுக்கு கோபம் வராத போது, அதே முஸ்லிம்களிடம் "குர்ஆனை படியுங்கள்" என்று நீங்கள் சொல்லும் போது, அவர்கள் ஏன் கோபம் கொள்வார்கள்?

குர்ஆனை படிக்கவேண்டியது ஒவ்வொரு முஸ்லிமுடைய கடமையாகும்! இல்லை என்று அவர்கள் சொல்லமுடியுமா?

குர்ஆனை தமிழில் படித்து, புரிந்துக்கொண்டு அதற்கு கீழ்படிவது முஸ்லிம்களின் தலையாய கடமையாகும். எனவே, குர்ஆனை படியுங்கள் என்று நீங்கள் சொன்னால், அவர்கள் கோபம் கொள்ளமாட்டார்கள், அப்படி அவர்கள் கோபம் கொண்டால் அவர்கள் முஸ்லிம்கள் இல்லை.



**கேள்வி 73:** குர்ஆன் இயேசுவிற்கு எந்தெந்த (பட்டப்)பெயர்களைக் கொண்டு அழைக்கிறது? வசன எண்கள் என்ன?

**பதில் 73:** குர்ஆன் கீழ்கண்ட ஆறுவகையான (பட்டப்)பெயர்களைக் கொண்டு இயேசுவை அழைக்கிறது.

**a) மர்யமின் மகன் (Son of Mary - இப்னு மர்யம்):**

> குர்ஆன் 3:45. மலக்குகள் கூறினார்கள்; “மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் தன்னிடமிருந்து வரும் ஒரு சொல்லைக் கொண்டு உமக்கு (ஒரு மகவு வரவிருப்பது பற்றி) நன்மாராயங் கூறுகிறான். அதன் பெயர் மஸீஹ்; **மர்யமின் மகன் ஈஸா** என்பதாகும். அவர் இவ்வுலகத்திலும், மறு உலகத்திலும் கண்ணியமிக்கோராகவும் (இறைவனுக்கு) நெருங்கி இருப்பவர்களில் ஒருவராகவும் இருப்பார்;

**b) இறைத்தூதர் (Prophet - தீர்க்கதரிசி/நபி - ரஸூல் அல்லாஹ்):**

குர்ஆன் 4:171. வேதத்தையுடையோரே! நீங்கள் உங்கள் மார்க்கத்தில் அளவு கடந்து செல்லாதீர்கள். அல்லாஹ்வைப் பற்றி உண்மையைத் தவிர (வேறெதையும்) கூறாதீர்கள்; நிச்சயமாக மர்யமுடைய மகனாகிய ஈஸா மஸீஹ் **அல்லாஹ்வின் தூதர் தான்;** . . ..

**c) அல்லாஹ்வின் அடிமை/ஊழியக்காரர் (Servant/Slave of God - அப்த் அல்லாஹ்):**

குர்ஆன் 19:30. "நிச்சயமாக நான் **அல்லாஹ்வுடைய அடியானாக** இருக்கின்றேன்; அவன் எனக்கு வேதத்தைக் கொடுத்திருக்கின்றான்; இன்னும், என்னை நபியாக ஆக்கியிருக்கின்றான்.

**d) மஸீஹ் (al-masih):**

மஸீஹ் என்ற வார்த்தை குர்ஆனில் 9 வசனங்களில் 11 முறை வருகிறது. எல்லா இடங்களிலும் இயேசுக் கிறிஸ்துவைப் பற்றியே வருகின்றது (பார்க்க குர்ஆன்: 3:45, 4:157, 4:171, 4:172, 5:17, 5:72, 5:75, 9:30 & 9:31)

குர்ஆன் 3:45. மலக்குகள் கூறினார்கள்; "மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் தன்னிடமிருந்து வரும் ஒரு சொல்லைக் கொண்டு உமக்கு (ஒரு மகவு வரவிருப்பது பற்றி) நன்மாராயங் கூறுகிறான். அதன் பெயர் **மஸீஹ்**; மர்யமின் மகன் ஈஸா என்பதாகும். அவர் இவ்வுலகத்திலும், மறு உலகத்திலும் கண்ணியமிக்கோராகவும் (இறைவனுக்கு) நெருங்கி இருப்பவர்களில் ஒருவராகவும் இருப்பார்;

**e) அல்லாஹ்வின் வார்த்தை Word of God (kalimat-hu):**

குர்ஆன் 4:171. வேதத்தையுடையோரே! நீங்கள் உங்கள் மார்க்கத்தில் அளவு கடந்து செல்லாதீர்கள். அல்லாஹ்வைப் பற்றி உண்மையைத் தவிர (வேறெதையும்) கூறாதீர்கள்; நிச்சயமாக மர்யமுடைய மகனாகிய ஈஸா மஸீஹ் அல்லாஹ்வின் தூதர் தான்; இன்னும் ("குன்" ஆகுக என்ற) **அல்லாஹ்வின் வாக்காக** (அதனால் உண்டானவராகவும்) இருக்கின்றார்; . . .

கடைசி வாக்கியத்தில் அடைப்பிற்குள் தமிழாக்கம் செய்தவர் எழுதியதை நீக்கி படித்தால் தான் உண்மை விளங்கும்.

"**இன்னும் அல்லாஹ்வின் வாக்காக இருக்கின்றார்**; . . ."

அல்லாஹ்வின் வார்த்தையாக இயேசு இருக்கின்றார் என்பதை மறைக்க, அடைப்பிற்குள் தங்கள் சுய விளக்கத்தை போடுகிறார்கள் தமிழாக்கம் செய்யும் முஸ்லிம்கள்.

கீழ்கண்ட தமிழாக்கம் "அல்லாஹ்வின் வாக்கும் ஆவார்" என்று சரியாக மொழியாக்கம் செய்துள்ளார்.

**மன்னர் ஃபஹத் வளாகம் (சவூதி) தமிழாக்கம்:**

> குர்ஆன் 4:171. வேதத்தையுடையவர்களே! உங்கள் மார்க்கத்தில், நீங்கள் அளவு கடந்து செல்லாதீர்கள், இன்னும், அல்லாஹ்வின் மீது உண்மையைத் தவிர (வேறெதையும்) கூறாதீர்கள், நிச்சயமாக மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹ், அல்லாஹ்வுடைய ஒரு தூதரும், **அவனுடைய வாக்கும் ஆவார்,** . . .

கீழ்கண்ட IFT, PJ தமிழாக்கங்கள், "**வார்த்தை**" என்பதை "**கட்டளை**" என்று மாற்றி தமிழாக்கம் செய்துள்ளார்.

**இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:**

> 4:171. . . . திண்ணமாக, மர்யமின் மகன் ஈஸாஅல்மஸீஹ், அல்லாஹ்வின் தூதரும் மர்யமுக்கு அவன் அனுப்பிய அவனுடைய **கட்டளையுமாவார்**. . . .

**பீஜே தமிழாக்கம்:**

> 4:171. . . . மர்யமின் மகன் ஈஸா எனும் மஸீஹ் அல்லாஹ்வின் தூதரும் அவனது கட்டளையா(ல் உருவானவருமா)வார். **அக்கட்டளையை** அவன் மர்யமிடம் போட்டான்.

"**கலிமதுஹூ**" என்ற சொல் எப்படி இவர்களுக்கு "**கட்டளை**" என்று புரிந்துள்ளது?

**f) அல்லாஹ்வின் ஆவி (A Spirit from God (ruhun minhu)):**

> 4:171. வேதத்தையுடையோரே! நீங்கள் உங்கள் மார்க்கத்தில் அளவு கடந்து செல்லாதீர்கள். அல்லாஹ்வைப் பற்றி உண்மையைத் தவிர (வேறெதையும்) கூறாதீர்கள்; நிச்சயமாக மர்யமுடைய மகனாகிய ஈஸா மஸீஹ் அல்லாஹ்வின் தூதர் தான்; இன்னும் ("குன்" ஆகுக என்ற) அல்லாஹ்வின் வாக்காக (அதனால் உண்டானவராகவும்) இருக்கின்றார்; அதை அவன் மர்யமின்பால் போட்டான்; (எனவே) **அவரும் அவனிடமிருந்து (வந்த) ஓர் ஆன்மா தான்;** . . ..( டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்)

"**ரூஹுன் மின்ஹு**" என்ற வார்த்தைகள் "அவனுடைய ஆவி/ஆத்துமா" என்று பொருள் தருகின்றது. ஆனால், கீழ்கண்ட தமிழாக்கம், அல்லாஹ் சொல்ல வந்ததை மாற்றி தமிழாக்கம் செய்துள்ளது.

**அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:**

> 4:171. . . .. அல்லாஹ் (தன்னுடைய) வாக்கை மர்யமுக்கு அளித்தான். **(மற்ற ஆத்மாக்களைப் போன்று அவரும்) அவனால் படைக்கப்பட்ட ஓர் ஆத்மாவே.**

கீழ்கண்ட தமிழாக்கங்களில், அடைப்பிற்குள் ஒரு பெரிய வாக்கியத்தையே எழுதுகிறார்கள். எதனை மறைக்க இவர்கள் இந்த பாடுபடுகிறார்கள்?

அல்லாஹ்வின் ஆவி ஈஸா இல்லை என்று நிருபிக்க இந்த பாடு படுகிறார்கள் இவர்கள்.

**இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:**

> 4:171. . .. மேலும், அல்லாஹ்விடமிருந்து வந்த ஒரு **ரூஹும்** ஆவார். (அது மர்யமின் கருவறையில் குழந்தையாக வடிவம் பெற்றது.)

**மன்னர் ஃபஹத் வளாகம் (சவூதி) தமிழாக்கம்:**

> 4:171. . . . (மற்ற ஆன்மாக்களைப் போன்று அவரும்,) அவனிடமிருந்து (படைக்கப்பட்ட) ஓர் **ஆன்மாவே**,



**கேள்வி 74:** இயேசு ஒரு நபி மட்டுமே என்று குர்ஆன் எங்கே சொல்கிறது? அதன் வசனம் என்ன?

**பதில் 74:** குர்ஆன் 4:171ம் வசனத்தில் "ஈஸா ஒரு தூதர்" என்று குர்ஆன் சொல்கிறது.

> 4:171. வேதத்தையுடையோரே! நீங்கள் உங்கள் மார்க்கத்தில் அளவு கடந்து செல்லாதீர்கள். அல்லாஹ்வைப் பற்றி உண்மையைத் தவிர (வேறெதையும்) கூறாதீர்கள்; நிச்சயமாக மர்யமுடைய மகனாகிய **ஈஸா மஸீஹ் அல்லாஹ்வின் தூதர் தான்**; . . .

இன்னும் வேறு வசனங்களில் "அல்லாஹ்வின் தூதர்" என்று ஈஸா பற்றி கூறப்பட்டுள்ளது.



**கேள்வி 75:** குர்ஆனில் "ஹவாரிய்யூன்" என்ற வார்த்தை யாரை குறிக்கிறது?

**பதில் 75:** இயேசுவின் சீடர்களை குர்ஆன் அரபியில் "ஹவாரிய்யூன்" என்று அழைக்கிறது.

> 3:52. அவர்களில் குஃப்ரு இருப்பதை (அதாவது அவர்களில் ஒரு சாரார் தம்மை நிராகரிப்பதை) ஈஸா உணர்ந்த போது: "அல்லாஹ்வின் பாதையில் எனக்கு உதவி செய்பவர்கள் யார்?" என்று அவர் கேட்டார்; (அதற்கு அவருடைய சிஷ்யர்களான) **ஹவாரிய்யூன்**: "நாங்கள் அல்லாஹ்வுக்காக (உங்கள்) உதவியாளர்களாக இருக்கிறோம், நிச்சயமாக

நாங்கள் அல்லாஹ்வின் மீது ஈமான் கொண்டுள்ளோம்; திடமாக நாங்கள் (அவனுக்கு முற்றிலும் வழிப்பட்ட) முஸ்லிம்களாக இருக்கின்றோம், என்று நீங்கள் சாட்சி சொல்லுங்கள்" எனக் கூறினர்.

3:53. "எங்கள் இறைவனே! நீ அருளிய (வேதத்)தை நாங்கள் நம்புகிறோம், (உன்னுடைய) இத்தூதரை நாங்கள் பின்பற்றுகிறோம்; எனவே எங்களை (சத்தியத்திற்கு) சாட்சி சொல்வோருடன் சேர்த்து எழுதுவாயாக!" (என்று சிஷ்யர்களான **ஹவாரிய்யூன்** பிரார்த்தித்தனர்.)

5:111. "என் மீதும் என் தூதர் மீதும் ஈமான் கொள்ளுங்கள்" என்று நான் **ஹவாரிய்யூன்** (சீடர்)களுக்கு தெரிவித்தபோது, அவர்கள், "நாங்கள் ஈமான் கொண்டோம்: நிச்சயமாக நாங்கள் முஸ்லிம்கள் (அல்லாஹ்வுக்கு வழிப்பட்டவர்கள்) என்பதற்கு நீங்களே சாட்சியாக இருங்கள்" என்று கூறினார்கள்.

5:112. "மர்யமுடைய மகன் ஈஸாவே! உங்கள் இறைவன் வானத்திலிருந்து எங்களுக்காக உணவு மரவையை (ஆகாரத் தட்டை) இறக்கி வைக்க முடியுமா?" என்று **ஹவாரிய்யூன்** (சீடர்)கள் கேட்டபோது அவர், "நீங்கள் முஃமின்களாக இருந்தால், அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்" என்று கூறினார்.

**ஹவாரிய்யு என்றால் உதவியாளர் என்று புகாரி ஹதீஸ் கூறுகின்றது.**

புகாரி நூல் எண்: 3719

3719. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒவ்வோர் இறைத்தூதருக்கும் ஒரு பிரத்யேக உதவியாளர் (**ஹவாரிய்யு**) உண்டு. என் பிரத்யேக உதவியாளர் ஸுபைர் இப்னு அவ்வாம் ஆவார். என ஜாபிர்(ரலி) அறிவித்தார்.



**கேள்வி 76:** இயேசுவின் வளர்ப்புத் தந்தை யோசேப்பு பற்றி ஏதாவது குறிப்பு குர்ஆனில் உண்டா?

**பதில் 76:** குர்ஆனில் இயேசுவின் வளர்ப்புத் தந்தை "யோசேப்பு" பற்றி ஒரு வார்த்தையும் எழுதப்படவில்லை.

ஒரு சில முஸ்லிம்கள், "யோசேப்போடு மரியாளுக்கு நிச்சயம் செய்யப்பட்டு இருந்தது, ஆனால், முக்கியத்தும் குறைந்த விவரங்களை அல்லாஹ் சொல்லவில்லை" என்று கூறுகிறார்கள்.

இது ஒரு ஆபத்தான வாதமாகும், அதாவது யோசேப்பு மரியாளின் வாழ்க்கையில் இருக்கிறார் என்று சொன்னால், "இயேசுவின் பிறப்பு" பற்றி குர்ஆன் சொல்வது அனைத்தும் பொய் என்று நிருபனமாகிவிடும்.

இதனை 2007ம் ஆண்டு நிஜாமுத்தீன் என்ற சகோதரருக்கு கொடுத்த பதிலை கீழ்கண்ட கட்டுரையில் படிக்கவும்: **இயேசுவின் வரலாறு - 5 : மறுப்புக் கட்டுரை பாகம் 2**

ஒருவேளை யோசேப்பு என்ற நபர் மரியாளின் வாழ்வில் இல்லை என்றுச் சொன்னாலும், குர்ஆன் கீழ்கண்ட கேள்விகளுக்கு பதில் சொல்லவேண்டி வரும்:

1) ஒரு யூதப்பெண் எப்படி கணவரில்லாமல் கர்ப்பம் ஆகமுடியும்? என்ற கேள்விக்கு மரியாள் என்ன பதில் சொன்னார்கள் என்று குர்ஆன் விளக்குகிறதா? இல்லை? குழந்தை பிறந்த பிறகு அல்ல, அதற்கு முன்பு மரியாள் என்ன பதில் சொன்னார்கள்?

2) யூத சமுதாயம் அப்பெண்ணை கல்லெரிந்து கொன்று இருக்கும் அல்லவா? ஏன் யூதர்கள் மரியாளை கொல்லவில்லை?

3) ஒன்பது மாதங்கள் எப்படி மரியாள் யாருடைய கண்களுக்கும் தெரியாமல் வாழ்ந்தார்கள்?

4) காட்டுக்குள் சென்று வாழ்ந்தார்கள் என்றுச் சொன்னாலும், ஜகரிய்யாவும், மற்றவர்களும் மரியாளை தேடாமல் விட்டுவிட்டார்களா?

5) எத்தனை ஆயிரம் மைல்களுக்கு அப்பாள் மரியாள் சென்று இருந்திருப்பார்கள்? ஏனென்றால், ஊரில் உள்ள மக்களும் ஜகரிய்யாவும் தேடினாலும் கிடைக்கக்கூடாது என்றுச் சொன்னால், அதிக தூரம் மரியாள் சென்று இருந்திருக்கவேண்டும். இதற்கு குர்ஆனிடம் பதில் இல்லை.

6) இதுமட்டுமல்லாமல், பல நூறு மைல்களுக்கு அப்பால் மரியாள் சென்று இருந்திருந்தால், பிள்ளை பிறந்த பிறகு கைக்குழந்தையை எடுத்துக்கொண்டு அத்தனை நூறு மைல்கள் தாண்டி வரவேண்டும் என்றால் அது சீக்கிரமாகவும்,சாதாரணமாகவும் நடக்கும் காரியமில்லை. இதற்கு குர்ஆன் பதில் சொல்வதில்லை.

இப்படி அனேக சிக்கல்கள் குர்ஆன் சொல்லும் இயேசுவின் பிறப்பு விவரங்களில் உள்ளது. ஆனால், பைபிள் சொல்லும் விவரங்களில் நடைமுறைக்கு ஏற்றபடி, சிக்கல் இல்லாமல் மஸீஹாவின் பிறப்பு நடக்கிறது.



**கேள்வி 77:** எந்த குர்ஆன் வசனத்தில் முஹம்மதுவின் பெயர் 'அஹமது' என்று வருகிறது?

**பதில் 77:** முஹம்மதுவின் பெயர் ஒரு முறை கூட பைபிளில் காணப்படவில்லை என்பதால் அனேக இஸ்லாமியர்கள் பைபிளை குற்றப்படுத்துகிறார்கள். யூத கிறிஸ்தவ வேதங்களில் முஹம்மதுவின் பெயர் காணப்படவேண்டும் என்று முஸ்லிம்கள் எதிர்ப்பார்க்கின்றனர். இப்படி இவர்கள் எதிர்ப்பார்ப்பதற்கு காரணம் குர்-ஆனில் காணப்படும் இரண்டு வசனங்களாகும்.

> மேலும், மர்யமின் குமாரர் ஈஸா, "இஸ்ராயீல் மக்களே! எனக்கு முன்னுள்ள தவ்ராத்தை மெய்ப்பிப்பவனாகவும்; எனக்குப் பின்னர் வரவிருக்கும் '**அஹமது**' என்னும் பெயருடைய தூதரைப் பற்றி நன்மாராயம் கூறுபவனாகவும் இருக்கும் நிலையில் அல்லாஹ்வின் தூதனாக உங்களிடம் வந்துள்ளேன்" என்று கூறிய வேளையை (நபியே! நீர் நினைவு கூர்வீராக!) எனினும், அவர்களிடம் தெளிவான அத்தாட்சிகளை அவர் கொண்டு வந்த போது, அவர்கள் "இது தெளிவான சூனியமாகும்" என்று கூறினார்கள். (குர்-ஆன் 61:6)

> எவர்கள் எழுதப்படிக்கத் தெரியாத நபியாகிய நம் தூதரைப் பின்பற்றுகிறார்களோ - அவர்கள் தங்களிடமுள்ள **தவ்ராத்திலும் இன்ஜீலிலும் இவரைப் பற்றி எழுதப் பட்டிருப்பதைக் காண்பார்கள்**; அவர், அவர்களை நன்மையான காரியங்கள் செய்யுமாறு ஏவுவார்; பாவமான காரியங்களிலிருந்து விலக்குவார்; ….(குர்-ஆன் 7:157)

இதனை படித்த அனேக இஸ்லாமியர்கள் பைபிளை முழுவதுமாக தேடிப்பார்த்தார்கள், ஆனால் அவர்களுக்கு எந்த வசனமும் தென்படவில்லை. ஆகையால், பரிசுத்த ஆவியானவர் பற்றி புதிய ஏற்பாட்டில் யோவான் சுவிசேஷத்தின் சில வசனங்களை எடுத்துக்கொண்டு, இவைகள் தான் முஹம்மது பற்றிய முன்னறிவிப்பு வசனங்கள் என்று இஸ்லாமியர்கள் வாதிக்கிறார்கள்.

யோவான் 14:16ல் வரும் வசனம் முஹம்மது பற்றிய முன்னறிவிப்பா? இதைப் பற்றி மேலும் அறிய கீழ்கண்ட தமிழ் கட்டுரையை படிக்கவும்:

- **"பைபிளிலிருந்து முஹம்மதுவின் பெயர் நீக்கப்பட்டுவிட்டது" என்ற இஸ்லாமியர்களின் வாதம்**



**கேள்வி 78:** உலகம் முழுவதும் ஒரே மூல அரபி குர்ஆன் உள்ளது என்கிறார்களே, இது உண்மையா?

**பதில் 78:** இது ஒரு மிகப்பெரிய பொய்யாகும். உலக நாடுகள் அனைத்திலும் உள்ள முஸ்லிம்கள் ஒரே மூல குர்ஆனை ஓதுகிறார்கள் என்ற பொய்யை முஸ்லிம் அறிஞர்கள் உரக்கச் சொல்கிறார்கள். இது உண்மை என்று நாமும் நம்பிவிடுகிறோம்.

உண்மையைச் சொல்வதானால், அரபி மூலத்தில் 20க்கும் அதிகமான குர்ஆன்கள் உள்ளன.

இந்திய அல்லது தமிழ் முஸ்லிம்களின் அறியாமைக்கு இன்னொரு உதாரணம் என்னவென்றால், பல்லாண்டு காலமாக தாங்கள் அரபியில் ஓதிக்கொண்டு இருக்கும் குர்ஆன் "ஹஃப்ஸ் கிராத்" குர்ஆனா? அல்லது "வர்ஷ" கிராத் குர்ஆனா? என்ற விவரம் கூட தெரியவில்லை என்பதாகும்..



**கேள்வி 79:** ஹஃப்ஸ் குர்ஆன் மற்றும் வர்ஷ் குர்ஆன் என்றால் என்ன?

**பதில் 79:** இன்று உலகில் உள்ள பெரும்பான்மையான முஸ்லிம்கள் ஓதும் குர்ஆன் என்பது "ஹஃப்ஸ் (Hafs)" கிராத்தில் உள்ள குர்ஆன் ஆகும்.

"**கிராத்**" என்றால் **ஓதுதல்** என்று பொருள். ஆக, ஹஃப்ஸ் என்ற இஸ்லாமிய அறிஞர் எப்படி குர்ஆனை ஓதினாரோ, அதன் அடிப்படையில் உள்ள குர்ஆன் தான் 'ஹஃப்ஸ் குர்ஆன்' ஆகும். உங்கள் வீட்டில் ஒரு குர்ஆன் இருந்து, அதை நீங்கள் அரபியில் ஓதினால், அது பெரும்பான்மையாக ஹஃப்ஸ் கிராத் குர்ஆனாகவே இருக்கும்.

இதே போன்று வர்ஷ் (Warsh) கிராத் குர்ஆனும் உள்ளது. அதாவது வர்ஷ் என்ற இஸ்லாமிய அறிஞர் எப்படி குர்ஆனை ஓதினாரோ, அதன் அடிப்படையில் உள்ள குர்ஆன் தான் "வர்ஷ் கிராத் குர்ஆன்" ஆகும்.



**கேள்வி 80:** ஹஃப்ஸ் மற்றும் வர்ஷ் என்ற இரண்டு மூல அரபி குர்ஆன்கள் மட்டும் தான் உலகில் உள்ளன என்று நாம் கருதலாமா?

**பதில் 80:** இல்லை, நாம் பார்த்த இரண்டு வகையான குர்ஆன்கள், இமாம் ஹஃப்ஸ் மற்றும் இமாம் வர்ஷ் என்பவர்கள் மூலமாக கிடைத்தவைகளாகும். இவர்களைப் போன்று அனேகர் இன்னும் இருக்கிறார்கள்.

இஸ்லாமிய அறிஞர்கள், இப்படிப்பட்ட "பல குர்ஆன் ஓதுபவர்களை" பட்டியலிட்டுள்ளார்கள்.

இவர்களில் 10 பேரை முஸ்லிம் அறிஞர்கள் முக்கியமானவர்களாக குறிப்பிடுகிறார்கள். இந்த 10 பேரிலிருந்து, 7 பேரை இன்னும் முக்கியப்படுத்தி தெரிவு செய்துள்ளார்கள். இந்த ஏழு ஓதுதலை அல்கிராத் அஸ்ஸப் (**al-qira'at as-sab - **The Seven Readings) என்று கூறுவார்கள்.

மேற்கண்ட 10 பேரிடம் பல மாணவர்கள் குர்ஆன் ஓதுதலை கற்றுக்கொண்டு, "அதனை தங்கள் சுய ஓதுதலின்படி" எழுத்து வடியில் அடுத்த சந்ததியினருக்கு

சேர்த்துள்ளார்கள். இந்த மாணவர்களில் இரண்டு பேருடைய ஓதுதல் முறையை (கிராத்) முஸ்லிம்கள் அங்கீகரித்துள்ளார்கள். ஆக, 10 ஆசிரியர்கள், ஒவ்வொரு ஆசிரியரிடமிருந்து கற்ற இரண்டு மாணவர்கள், மொத்தம் 10 x 2 = 20 குர்ஆன்கள் குறைந்தபட்சம் இன்று நம்மிடம் உள்ளன.

குர்ஆனை கற்றுக்கொடுத்த ஆசிரியரை "The Reader(ஓதுபவர்)" என்றும், அவரிடமிருந்து கற்று அடுத்த சந்ததிக்கு சேர்ந்த நபரை "The Transmitter (நம்மிடம் சேர்த்தவர்கள்)" என்றும் ஆங்கிலத்தில் கூறுவார்கள்.

கீழே தரப்பட்டுள்ள பட்டியலில், பொதுவாக எல்லாராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஓதுபவர்கள் (Readers) மற்றும் அவர்களது Transmistters மற்றும் அவைகள் தற்போது எந்த நாடுகளில் பயன்படுத்தப்படுகிறது என்பதை விளக்குகிறது.

**10 குர்ஆன் கிராத் விவரங்கள்**
**10 Quran Readings**

| Number எண் | The Reader ஓதுபவர் | The Transmitter சேர்த்தவர் | Current Area of Use பயன்படுத்தும் நாடுகள் |
|---|---|---|---|
| 1 | நஃபி Nafi` | வர்ஷ் Warsh | அல்ஜீரியா, மொராக்கோ, டுனிசியாவின் சில பகுதிகள், மேற்கு ஆப்ரிக்கா, மற்றும் சூடான். |
| 2 | | கலுன் Qalun | லிபியா, டுனிசியா மற்றும் கத்தரின் சில பாகங்கள். |
| 3 | இபின் கதிர் Ibn Kathir | அல் பஜ்ஜி al-Bazzi | |
| 4 | | குன்புல் Qunbul | |
| 5 | அபூ அமர் அல்-அலா Abu `Amr al-'Ala' | அல்துரி al-Duri | சூடானின் சில பாகங்கள்,மற்றும் மேற்கு ஆப்ரிக்கா. |
| 6 | | அல்சுரி al-Suri | |
| 7 | இபின் அமிர் Ibn `Amir | ஹிஷம் Hisham | யெமன் நாட்டின் சில பகுதிகள் |
| 8 | | இபின் தக்வான் Ibn Dhakwan | |
| 9 | ஹம்ஜா Hamzah | கலஃப் Khalaf | |
| 10 | | கல்லத் Khallad | |

| | | | |
|---|---|---|---|
| 11 | அல்கிசய் al-Kisa'i | அல்துரி al-Duri | |
| 12 | | அபுல் ஹரித் Abu'l-Harith | |
| 13 | அபூ பக்கர் அசிம் Abu Bakr `Asim | ஹஃப்ஸ் Hafs | உலக முஸ்லீம்கள் பொதுவாக பயன்படுத்துகிறார்கள் |
| 14 | | இபின் அய்யஷ் Ibn `Ayyash | |
| 15 | அபூ ஜப்பர் Abu Ja`far | இபின் வர்தன் Ibn Wardan | |
| 16 | | இபின் ஜமஜ் Ibn Jamaz | |
| 17 | யாகூப் அல்-ஹஷிமி Ya`qub al-Hashimi | ருவய்ஸ் Ruways | |
| 18 | | ரவ் Rawh | |
| 19 | கலஃப் அல்-பஜ்ஜர் Khalaf al-Bazzar | இஷாக் Ishaq | |
| 20 | | இத்ரிஷ் அல் ஹட்டட் Idris al-Haddad | |
| | Source: Abu Ammaar Yasir Qadhi, *An Introduction to the Sciences of the Qur'aan*, United Kingdom: Al-Hidaayah, 1999, p. 199. | | |

ஆக, 20க்கும் அதிகமான அரபி மூல குர்ஆன்கள் உள்ளன.



**கேள்வி 81:** இந்த 20+ வகையான குர்ஆன்கள் வெறும் ஒலியாக இருக்கிறது, எழுத்தில் அதாவது பேப்பரில் அச்சில் (Print) செய்து புத்தகமாக இல்லையல்லவா?

**பதில் 81:** இந்த 20+ குர்ஆன்களை இன்றும் முஸ்லிம்கள் ஓதுகிறார்கள் மேலும் இவைகளின் பிரிண்ட் பிரதியை கூட நாம் புத்தக வடியில் இன்றும் வாங்கலாம்.

குர்ஆன்களை ஆன்லையின் விற்கின்ற இரண்டு தளங்களை உங்களுக்கு இங்கு அறிமுகம் செய்கிறேன்.

1. ஈஸி குர்ஆன் ஸ்டோர் - www.easyquranstore.com
2. தர் அல் ஃபிகர் - www.daralfiker.com

இரண்டு தளங்களை இன்று (30 மே 2020) பார்க்கப்பட்டு, கீழ்கண்ட படங்கள் எடுக்கப்பட்டன.

**a) வர்ஷ், கலூன், கலஃப், அல்துரி, அல் கிசய், இபின் அமிர், இபின் கதிர் மற்றும் 10 கிராத்கள் ஒரே புத்தகத்தில்**

"ஈஸி குர்ஆன் ஸ்டோர்" தளத்தில் "நரேஷன்" என்ற மெனுவில் அவர்கள் பல வகையான கிராத் குர்ஆன்கள் பற்றி சிறப்பு அறிவிப்பை கொடுத்துள்ளார்கள். அந்த தொடுப்புக்களை சொடுக்கி, அப்புத்தகங்களை நாம் வாங்கலாம். வலப்பக்கம் மேலே உள்ள மெனுவில், இந்திய ரூபாவை தெரிவு செய்தால், நம் கரன்சியில் நாம் விலையை பார்க்கமுடியும்.

**b) பலவகையான கிராத் குர்ஆன்களை வாங்க:**

பலவகையான கிராத் குர்ஆன்களை வாங்க, தேவைப்படும் தொடுப்புக்களை சொடுக்கினால், கிழ்கண்ட படங்கள் இந்திய விலையுடன் தெரியும்.

easyquranstore.com/tajweed-quran-in-other-narrations-rewayat/

EASY QURAN STORE
COLOR CODED TAJWEED International

CART IS EMPTY | REGISTER | SIGN IN

Enter keyword... | Indian rupee | English

Call Us Now : +44 (0) 203 239 2600 We Accept Phone Orders

COVID19: We Are Working As Usual & Shipping Orders Everyday

NEW ARRIVALS | WHOLE QURAN | QURAN PARTS | LANGUAGES | NARRATIONS | READ PEN QURANS | QURANIC BOOKS | GIFTS

WARSH READING
QALOON READING

Home » Narrations

# NARRATIONS

We publish the **Tajweed Quran** in many readings and narrations. Beside Hafs, we have Warsh, Qaloon, Khalaf, Al-Doori, Qunbul, and the **three new releases**: Al-Kisai', Ibn Amer and Ibn Katheer.
Also please check the other two books: **Tajweed Quran** with the Facilitation on the Ten Readings, and **Tajweed Quran** with the Ten Reading on the Margins.

WARSH READING
QALOON READING

easyquranstore.com/tajweed-quran-in-other-narrations-rewayat/

AL KISAI' READING
Current price
Rs1716.23
Rs1906.92

TAJWEED QURAN - DOURI READING
Current price
Rs1716.23
Rs1906.92

TAJWEED QURAN - SHOBA FROM ASEM
Tajweed Quran - Shoba from Asem
Current price
Rs1716.23
Rs1906.92

TAJWEED QURAN - KHALAF READING
Current price
Rs1906.92

TAJWEED QURAN AL-SOOSI NARRATION
Current price
Rs1906.92

TAJWEED QURAN IBN AMER READING
Current price
Rs1906.92

TAJWEED QURAN IBN KATHEER READING
Current price
Rs1906.92

TAJWEED QURAN WITH FACILITATION OF THE TEN READINGS
Current price
Rs1906.92

easyquranstore.com/tajweed-quran-in-other-narrations-rewayat/



TAJWEED QURAN WITH THE TEN READINGS
Current price
Rs3813.84



TAJWEED QURAN WITH THE TEN READINGS
Current price
Rs3813.84

**c) தர் அல் ஃபிகர் தளத்தில் விற்கப்படும் கிராத் குர்ஆன்கள்:**

இந்த தளத்தில் பல பக்கங்களில் குர்ஆன் கிராத்கள் உள்ளன, நான் சில பக்கங்களை மட்டுமே கொடுத்துள்ளேன்.

|  |  |  |  |
|---|---|---|---|
| ~~0.00 $~~ | ~~10.00 $~~ | ~~10.00 $~~ | ~~10.00 $~~ |
| 0.00 $ | 8.50 $ | 8.50 $ | 8.50 $ |
| The Noble Qur'an, according to Al-Bazzi's narration on the authority of Ibn Katheer, and by the footnote | The Noble Qur'an, according to Ibn Gammaz's narration, and by margin, Ibn Wardan | The Holy Qur'an, narrated by Hafs, on the authority of Asim, and the margin is the reading of Jacob | The Holy Qur'an with a narration of a soul and by the margins of what Royce disagreed with regarding the reading of Jacob from the path of Al-Durrah |
| Printing year: 2011 | Printing year: 2011 | Printing year: 2011 | Printing year: 2011 |



~~10.00 $~~

8.50 $

The Noble Qur'an, narrated by Hafs, on the authority of Asim, and by the margin, Al-Douri's account, on the authority



~~10.00 $~~

8.50 $

The Noble Qur'an according to the narration of Hisham bin Ammar, and by the margins, Ibn Zakwan differed from it on



~~10.00 $~~

8.50 $

The Noble Qur'an narrated by Hafs on the authority of Asim and the Margin, by reciting the Imam Khalaf behind the



~~10.00 $~~

8.50 $

The Noble Qur'an, narrated by Hafs, on the authority of Asim, and the margin, the narration of al-Susi



~~10.00 $~~

8.50 $

The Noble Qur'an, narrated by Hafs, on the authority of Asim and the Margin, by Abu Ja`far

Printing year: 2019



~~10.00 $~~

8.50 $

The Noble Qur'an, on the authority of Khalaf on the authority of Hamzah, and by the footnote, Khalad's novel

Printing year: 2019



~~10.00 $~~

8.50 $

The Holy Qur'an, narrated by Hafs, on the authority of Asim, and the margin is the reading of Al-Kisae

Printing year: 2019



~~10.00 $~~

8.50 $

The Holy Qur'an with Hafs on the authority of Asim and the Margin by Ibn Katheer

Printing year: 2020




எனவே, உலக முஸ்லிம்கள் இந்த கிராத் குர்ஆன்களை வாங்கி வாசிக்கிறார்கள்.



**கேள்வி 82**: ஒரு முஸ்லிமுக்கு 10 கிராத்களும் தேவையென்றால், அவர் அனைத்து குர்ஆன்களையும் வாங்கவேண்டுமா?

**பதில் 82:** ஒருவர் இந்த 10 குர்ஆன்களையும் வாங்கியும் படிக்கலாம், ஆனால், இதே மேலேயுள்ள தளத்தில் '10 கிராத்துகளும் ஒரே குர்ஆனில் செர்த்து கொடுத்துள்ளார்கள்', இந்த ஒரு புத்தகத்தை வாங்கினால் போதும், அனைத்து கிராத்துகளில் உள்ள வித்தியாசங்களை பார்த்து படித்துக் கொள்ளலாம்.

இந்த புத்தகத்தின் சிறப்பு என்னவென்றால், ஒரு வசனத்தை எடுத்துக்கொண்டால், அது ஹஃப்ஸ் கிராத்தில் எப்படி இருக்கும், வர்ஷ் கிராத்தில் எப்படி இருக்கும் என்று 10 வகையான கிராத்தில் மார்ஜின் பக்கத்தில் கொடுத்திருப்பார்கள்.

இந்த புத்தகத்தையும் ஈஸி குர்ஆன் ஸ்டோர் தளத்தில் வாங்கமுடியும், கிட்டத்தட்ட ரூபாய் 4000 விலை கொடுத்து வாங்கவேண்டும் (தேதி 1 ஜூன் 2020யின் படி).

**கேள்வி 83:** கிராத்துக்கள் என்றால் குர்ஆனின் வார்த்தைகளில் உள்ள ஓசையை நீட்டி குறைத்து வாசித்தல் என்பது தானே அர்த்தம், இதன் மூலம் வார்த்தைகளின் பொருள் மாறாது அல்லவா? அப்படியென்றால், வெறும் ஒரே குர்ஆன் தான் உள்ளது என்று தானே பொருள்?

**பதில் 83:** கிராத்துகளில் ஒரே வார்த்தையை இராகத்திற்காக நீட்டியும்,குறைத்தும் ஓதுவதினால், குர்ஆன் வசனங்களின் பொருள் மாறுவதில்லை, இதனை நான் அங்கீகரிக்கிறேன்.

உதாரணத்திற்கு "அல்லாஹு அக்பர் (அல்லாஹ் பெரியவன்)" என்ற வார்த்தையை எடுத்துக்கொண்டால், இதனை 7 வகையாக நீட்டியும், ஓசையை குறைத்தும் ஓதினால், கீழ்கண்ட விதமாக வரும், ஆனால், அர்த்தம் மாறாது, இப்படி ஓதுவது தவறில்லை.

ஒரே வார்த்தையை இராகத்திற்காக பல வகைகளில்(பொதுவாக 7 முறையில்) ஓதுதல்

1) அல்லாஹு அக்பர்

2) அல்ல்ல்லாஹு அக்பர்

3) அல்லா.......ஹு அக்பர்

4) அல்லாஹூ...... அக்பர்

5) அல்லாஹு அக்க்க்பர்

6) அல்லாஹு அக்ப......ர்

7) அல்லாஹு அக்பர்ர்ர்ர்ர்ர்ர்

ஆனால், நாம் மேலே பார்த்த கிராத்துக்களில் "ஓசை" மட்டுமே மாறுவதில்லை, அதோடு கூட வார்த்தைகள் கூட மாறியுள்ளது. இது தான் கிராத்தில் உள்ள பிரச்சனை.



**கேள்வி 84:** குர்ஆன் 7 வட்டார மொழிகளில் இறங்கியது என்பதை ஹதீஸ்கள் உறுதிப்படுத்துகின்றன. எனவே பொருள் மாறாமல் வட்டார மொழியில் இருந்தால் என்ன பிரச்சனை?

**பதில் 84:** 2008ம் ஆண்டு, அபூமுஹை என்ற முஸ்லிம் சகோதரர் இதே கேள்வியைக் கேட்டிருந்தார், அவருக்கு நான் கொடுத்த பதிலிருந்து ஒரு பகுதிய இங்கு தருகிறேன், முழு பதிலையும் படிக்க, இந்த தொடுப்பை சொடுக்கி படிக்கவும்: **7 வட்டார மொழிகளில் குர்ஆனா? இருக்கின்றது, இருக்கிறது, இருக்குது, இருக்கு, இக்குது, இக்கு & கீது**

அபூமுஹை அவர்களின் வாதம் 1: வட்டார வார்த்தைகள்

//அபூமுஹை அவர்கள் எழுதியது

வட்டார மொழி

தமிழ்நாட்டில் ஒவ்வொரு மாநில மக்களும் பேசுவது தமிழ் என்றாலும் ஒவ்வொரு இடத்திலும் பேசும் தமிழில் வித்தியாசமிருக்கும். இதை வட்டார மொழி என்று சொல்வார்கள். பேசு பொருள் ஒன்றாக இருந்தாலும் பேசும் ஒலியில் ஏற்ற இறக்கமிருக்கும். ஒருவர் தமிழ் பேசுவதை வைத்தே அவர் எந்த மாநிலத்தைச் சேர்ந்தவர் என்று கூறிவிடலாம். இதில் இலங்கைத் தமிழ் வித்தியாசமான தனித் தமிழ் பேச்சாக இருக்கும். பயிற்சி எடுத்தாலே தவிர ஒரு வட்டாரப் பேச்சை இன்னொரு வட்டாரத்தைச் சேர்ந்தவர் பேசுவது கடினம். அந்த அளவுக்கு வட்டார மொழி ஒருவரின் பேச்சில் ஊறிப்போனதாகும்.//

மேலே அபூமுஹை அவர்கள் சொல்வதை நான் அங்கீகரிக்கிறேன், ஒரு சில வார்த்தைகள் ஒவ்வொரு வட்டாரத்திற்கும் வித்தியாசமாக பேசப்படும், பொருள் ஒன்றாக இருந்தாலும், வார்த்தைகளில் வித்தியாசம் இருக்கும். ஆனால், வட்டார மொழியில் குர்ஆனை அல்லா இறக்கினான் என்றுச் சொல்லி, குர்ஆனை அபூமுஹை அவர்களே கேலிக்கூத்தாக மாற்றியுள்ளார். வட்டார மொழியெல்லாம் இலக்கணப்படி சரியானதாக இருக்காது.

எப்படி என்று கேட்கிறீர்களா? தமிழில் உள்ள வட்டார வார்த்தைகளை உதாரணத்திற்காக எடுத்துக்கொள்வோம். கீழ் கண்ட வார்த்தைகளை பாருங்கள். இவைகள் அனைத்திற்கும் ஒரே பொருள் தான். ஆனால், பல வட்டாரங்களில் அல்லது இடங்களில் பயன்படுத்தப்படுகின்ற வார்த்தைகளாகும். இப்படிப்பட்ட வார்த்தைகளை நாம் அனைவரும் அவ்வப்போது ஆங்காங்கே கேட்டிருப்போம், பேசியும் இருப்போம்.

1) இருக்கின்றது

2) இருக்கிறது

3) இருக்குது

4) இருக்கு

5) இக்குது

6) இக்கு

7) கீது

**வட்டார வார்த்தைகளில் குர்ஆன் வசனங்கள்:**

அபூமுஹை அவர்கள் வட்டார மொழியில் குர்ஆன் இறங்கியது என்ற கருத்திற்காக ஒரு ஹதீஸை மேற்கோள் காட்டினார்.

> //அபூமுஹை தளம்:
>
> "ஒரேயொரு (வட்டார) மொழிவழக்குப்படி ஜிப்ரீல்(அலை) அவர்கள் (குர்ஆனை) எனக்கு ஓதக் கற்றுத்தந்தார்கள். அதை இன்னும் பல(வட்டார) மொழி வழக்குகளின் படி எனக்கு ஓதக் கற்றுத்தருமாறு அவர்களிடம் நான் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டேயிருந்தேன். (நான் கேட்க, கேட்க) எனக்கு அவர்கள் அதிகப்படுத்திக்கொண்டே வந்து இறுதியில் ஏழு (வட்டார) மொழி வழக்குகள் அளவிற்கு வந்து நின்றது" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறால்கள். (புகாரி, 3219, 4991)//

இந்த ஹதீஸ் சரியானதா இல்லையா என்பதை இஸ்லாமியர்கள் ஆராய்ச்சி செய்யட்டும், நமக்கு பிரச்சனை இல்லை. ஆனால், அபூமுஹை அவர்கள் இந்த ஹதிஸை ஆதாரமாக காட்டினபடியால், இந்த ஹதீஸ் உண்மையென்றே கருதி, இதனால் எழும் கேள்விகளைக் காண்போம். குர்ஆன் ஒரு இறைவேதம், இலக்கிய நூல்களில் சிறந்தது என்றுச் சொல்லும் இஸ்லாமியர்கள் இப்படிப்பட்ட வட்டார வார்த்தைகள் தங்கள் வேதத்தில் இருப்பதை ஏற்றுக்கொள்வார்களா? பாமர மக்கள் தங்கள் வழக்கத்திற்கு ஏற்ப இலக்கண முறைக்கு முரணாக சொந்தமாக உருவாக்கிக்கொள்ளும் வார்த்தைகளை இஸ்லாமின் இறைவன் தன் வேதத்திலும் புகுத்துவாரா? என்று இஸ்லாமியர்கள் சிந்திக்கட்டும்.

இந்த ஹதீஸின் படி குர்ஆன் வசனங்களை ஜிப்ராயீல் தூதன், அரபி வட்டார வழக்கப்படி முகமதுவின் வேண்டுகோளுக்கு இணங்க இறக்கினார் என்று அறிகிறோம்.

உதாரணத்திற்கு குர்ஆன் 2:115ல் உள்ள வசனத்தை நாம் எடுத்துக்கொள்வோம், நாம் மேலே கண்ட தமிழ் வட்டார வார்த்தைகளை( இருக்கின்றது, இருக்கிறது, இருக்குது, இருக்கு, இக்குது, இக்கு , மற்றும் கீது ) இட்டு இந்த வசனத்தை படித்தால் எப்படி இருக்கும் என்று இக்கட்டுரையை படிக்கும் வாசகர்கள் சிந்திக்கட்டும்.

> குர்ஆன் 2:115 கிழக்கும், மேற்கும் அல்லாஹ்வுக்கே (சொந்தம்) நீங்கள் எந்தப் பக்கம் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் **இருக்கிறது**. நிச்சயமாக அல்லாஹ் விசாலமானவன்;, எல்லாம் அறிந்தவன்.

மேற்கண்ட வசனத்தில் "இருக்கிறது" என்ற இடத்தில், **இருக்கின்றது, இருக்குது, இருக்கு, இக்குது, இக்கு , மற்றும் கீது** என்று மாற்றி படித்துப் பாருங்கள் தமிழ் முஸ்லீம் சகோதரர்களே.

இப்படித்தான் அல்லா குர்ஆனை பலவிதமான 7 வட்டார மொழிப்படி இறக்கினார் என்று அபூமுஹை சொல்லியுள்ளார். ஒரு எடுத்துக்காட்டிற்காக

நான் தமிழ் வட்டார வார்த்தைகளை எழுதினேன், இதே போல அரபியில் இருக்கும் வட்டார வார்த்தைகளில் இறக்கப்பட்டதாக அபூமுஹைறா அவர்கள் சொல்லியுள்ளார்கள்.

வட்டார மொழிகள் உள்ள குர்ஆன் இலக்கணப்படி சரியானதா?

அரபி இலக்கிய புத்தகங்களிலேயே குர்ஆன் ஒன்று மட்டும் தான் அதிக தகுதியுடனும், சிறப்புடனும் உள்ளது. இதன் இலக்கிய அழகிற்கு எதுவுமே ஈடாகாது என்பார்கள் முஸ்லீம்கள். ஆனால், இப்படி வட்டார மொழிகளோடு உள்ள புத்தகம் இலக்கணப்படி சரியானதாக இருக்குமா சிந்தியுங்கள்.

நாம் பேசும் போது நம் வழக்கப்படி, நாம் வாழும் வட்டாரப்படி பேசினாலும், எழுதும் போது, இலக்கணப்படி எழுதவேண்டும். உதாரணத்திற்கு, மேற்கண்ட குர்ஆன் வசனத்தில், வட்டார வழக்கச் சொற்கள் இட்டு படித்துப்பாருங்கள், எவ்வளவு கொச்சையாக இருக்கும்.

1. நீங்கள் எந்தப் பக்கம் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இருக்கின்றது
2. நீங்கள் எந்தப் பக்கம் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இருக்கிறது
3. நீங்கள் எந்தப் பக்கம் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இருக்குது
4. நீங்கள் எந்தப் பக்கம் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இருக்கு
5. நீங்கள் எந்தப் பக்கம் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இக்குது
6. நீங்கள் எந்தப் பக்கம் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இக்கு
7. நீங்கள் எந்தப் பக்கம் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் கீது

**தமிழ் வெர்சுவல் பல்கலைக் கழகம் (Tamil Virtual University) என்ற தளத்தில் "செந்தமிழ் சிறப்பு" என்ற கட்டுரையிலிருந்து ஒரு விளக்கம்:**

இருக்குது, இருக்கு, இக்குது, இக்கு, கீது என வெவ்வேறிடத்தில் வெவ்வேறு வடிவில் வழங்கினாலும், ஏடெடுத்தெழுதும் போதும் மேடையேறிப் பேசும் போதும், இருக்கின்றது அல்லது இருக்கிறது என்னும் வடிவையே ஆளவேண்டுமென்பது, தொல்லாசிரியர் கட்டளையிட்ட செம்மையென்னும் வரம்பாம்.

- Source: Tamil Virtual University **http://www.tamilvu.org/slet/lA46K/lA46Kd11.jsp?id=23**

எவ்வளவு வட்டார சொற்கள் இருந்தாலும், மேடையில் பேசும் போதும், புத்தகம் எழுதும் போதும், இலக்கணப்படி சரியாக உள்ள வார்த்தைகளை பேச/எழுத வேண்டும். மேடையில் பேசும் போது, வட்டார வார்த்தைகளைப் பேசினால், அது நகைச்சுவைக்காகவும், கேலிக்காகவும் இருக்குமே ஒழிய அது ஒரு இலக்கணப்படி சரியானதாக இருக்காது.

| 7 வட்டார வித்தியாசமான வார்த்தைகள் | ஒரே வார்த்தையை இராகத்திற்காக பல வகைகளில் (பொதுவாக 7 முறையில்) ஓதுதல் |
|---|---|
| 1) இருக்கின்றது | 1) அல்லாஹு அக்பர் |
| 2) இருக்கிறது | 2) அல்ல்ல்லாஹு அக்பர் |
| 3) இருக்குது | 3) அல்லா.......ஹு அக்பர் |
| 4) இருக்கு | 4) அல்லாஹுஉ...... அக்பர் |
| 5) இக்குது | 5) அல்லாஹு அக்க்க்பர் |
| 6) இக்கு | 6) அல்லாஹு அக்ப......ர் |
| 7) கீது | 7) அல்லாஹு அக்பர்ர்ர்ர்ர்ர்ர் |

எனவே, இலக்கணத்தின்படி அல்லாமல், கொச்சை வார்த்தைகள் கொண்ட புத்தகத்தை ஒரு சிறப்புடைய புத்தகம் என்று சொல்லமுடியாது.



**கேள்வி 85:** கிராத் குர்ஆன்களில் எப்படிப்பட்ட வித்தியாசங்கள் காணப்படுகின்றன?

**பதில் 85:** வெறும் வார்த்தைகளில் வித்தையாசங்கள் இருப்பதோடு மட்டுமில்லாமல், இன்னும் அனேக வித்தியாசங்கள் கீழ்கண்ட பட்டியலில் குறிப்பிட்டது போல குர்ஆன்களில் உள்ளது.

எனக்கு அடிக்கடி முஸ்லீம்கள் சொல்வார்கள், அதாவது பல குர்ஆன்களில் இருக்கும் இந்த வித்தியாசங்கள் வெறும் சப்தங்களில் இருக்கும் வித்தியாசமே(dialect or pronunciation) அன்று வேறில்லை என்பார்கள். ஆனால், உண்மையில் இது வெறும் சப்தங்களில் இருக்கும் வித்தியாசம் இல்லை. இதைப் பற்றி ஆய்வு செய்தவர் இஸ்லாமிய அறிஞராகிய சுபி அல்-சாலிஹ் என்பவராவார். அவர் இந்த வித்தியாசங்களை ஏழு வகைகளாக பிரிக்கிறார் (Subhii al-Saalih, Muhaahith fii `Ulum al-Qur'aan , Beirut: Daar al-`Ilm li al-Malaayiin, 1967, pp. 109ff.).

1. இலக்கண குறியீடுகளில் இருக்கும் வித்தியாசங்கள்.

2. மெய் எழுத்துக்களில் இருக்கும் வித்தியாசங்கள்.

3. பெயர்ச் சொற்களில் இருக்கும் வித்தியாசங்கள், அதாவது அவைகள் ஒருமையா, இரட்டையா அல்லது பன்மையா, ஆண்பாலா அல்லது பெண்பாலா போன்றவைகளில் இருக்கும் வித்தியாசங்கள்.

4. ஒரு வார்த்தைக்கு பதிலாக இன்னொரு வார்த்தையை பயன்படுத்துமிடத்தில் இருக்கும் வித்தியாசங்கள்.

5. ஒரு வாக்கியத்தில் உள்ள வார்த்தைகளை இடம் மாற்றும் விதத்தில் உள்ள வித்தியாசங்கள். அரபி மொழியில் பொதுவாக இப்படி வார்த்தைகளை எதிரமறையான ஒழுங்கில் அமைப்பது உள்ளது.

6. அரபியர்களின் பழக்கவழக்கங்களினால், சில சிறிய எழுத்துக்களை கூட்டுதல் மற்றும் குறைத்தலில் உள்ள வித்தியாசங்கள்.

7. எழுத்துக்களில் வைக்கும் புள்ளிகளினால் மாறும் சப்தங்களில் உள்ள வித்தியாசங்கள்.

மேலே நாம் பார்த்த பட்டியல் வெறும் சப்தங்களில் வரும் வித்தியாசங்களைச் சொல்லவில்லை, அதற்கும் மேலே இன்னும் பல வித்தியாசங்கள் குர்ஆனில் இருப்பதை தெளிவாக காட்டுகிறது.



**கேள்வி 86:** ஹஃப்ஸ் மற்றும் வர்ஷ் குர்ஆனில் உள்ள வார்த்தை வித்தியாசங்களில் சிலவற்றை இங்கு கொடுக்கமுடியுமா?

**பதில் 86:** கிராத் குர்ஆன்களுக்கு இடையே வார்த்தை மாறாமல் வெறும் ஓசை தான் மாறுகிறது என்றுச் சொல்வதெல்லாம் பச்சைப் பொய்களாகும்.

இந்த கட்டுரையில் ஹஃப்ஸ் மற்றும் வர்ஷ் குர்ஆன்களுக்கு இடையே இருக்கும் வார்த்தை வித்தியாசங்களை தருகிறேன். ஐந்து வித்தியாசங்களை மட்டுமே இங்கு தருகிறேன், மீதமுள்ள வித்தியாசங்களை அறிய கீழ்கண்ட கட்டுரைகளை படிக்கவும்:

வர்ஷ் மற்றும் ஹப்ஸ் குர்ஆனில் உள்ள வித்தியாசங்களின் சிறிய பட்டியல்

- **பல விதமான அரபி குர்ஆன்கள் (THE DIFFERENT ARABIC VERSIONS OF THE QUR'AN)**
- **குர்ஆனை ஓதுதல்**

குர்ஆனை ஓதுதல்

القراءات Readings

| روایة ورش عن نافع ـ دار المعرفة ـ دمشق<br><br>**Warsh narration-Dar Al Maarifah Damascus**<br><br>**குர்ஆன் வர்ஷ் ஓதுதலின்படி** | روایة حفص عن عاصم ـ مجمع الملك فهد ـ المدينة<br><br>**Hafs narration-King Fahd Complex Madinah**<br><br>**குர்ஆன் ஹப்ஸ் ஓதுதலின் படி** | குர்ஆன் வசன எண்கள் |
|---|---|---|
| يُغْفَرْ<br><br>he will forgive<br><br>அவன் மன்னிப்பான் | نَّغْفِرْ<br><br>We will forgive<br><br>நாம் மன்னிப்போம் | அல் பகரா<br><br>البقرة<br><br>**2:58** |
| يَعْمَلُونَ<br><br>they do<br><br>அவர்கள் செய்தார்கள் | تَعْمَلُونَ<br><br>(you) do<br><br>(நீங்கள்) செய்தீர்கள் | அல் பகரா<br><br>البقرة<br><br>**2:85** |
| لَوْ تَرَى الذِينَ ظَلَمُواْ<br><br>that you had known those who do evil<br><br>அநீதி இழைத்தோரை நீர் கண்டுக் கொள்வீர் | لَوْ يَرَى الَّذِينَ ظَلَمُواْ<br><br>that those who do evil had...known<br><br>அநீதி இழைத்தோர் ... கண்டு கொள்வார்கள் | அல் பகரா<br><br>البقرة<br><br>**2:165** |
| فَنُوَفِّيهِمُ<br><br>we will pay them<br><br>நாம் வழங்குவோம் | فَيُوَفِّيهِمْ<br><br>He will pay them<br><br>அவன் வழங்குவான் | ஆலு இம்ரான்<br><br>ال عمران<br><br>**3:57** |
| تَبْغُونَ<br><br>you seek<br><br>நீங்கள் தேடுகின்றீர்கள் | يَبْغُونَ<br><br>(they) Seek<br><br>(அவர்கள்) தேடுகின்றனர் | ஆலு இம்ரான்<br><br>ال عمران<br><br>**3:83** |

**வசனம் 2:165ன் கிராத் குரஅன் வித்தியாசம்:**

இங்கு ஒரே ஒரு வித்தியாசம் பற்றி சிறிது ஆய்வு செய்வோம். மேலேயுள்ள பட்டியலில் உள்ள மூன்றாவது வித்தியாசத்தை (2:165ஐ) எடுத்துக்கொள்வோம்.

**ஹஃப்ஸ் குர்ஆன்:**

> 2:165. . . ; இன்னும் (இணை வைக்கும்) அக்கிரமக்காரர்களுக்குப் பார்க்க முடியுமானால், (அல்லாஹ் தரவிருக்கும்) **வேதனை எப்படியிருக்கும் என்பதைக் கண்டு கொள்வார்கள்;** அனைத்து வல்லமையும் அல்லாஹ்வுக்கே சொந்தமானது; நிச்சயமாக தண்டனை கொடுப்பதில் அல்லாஹ் மிகவும் கடுமையானவன் (என்பதையும் கண்டு கொள்வார்கள்).

**வர்ஷ் குர்ஆன்:**

> 2:165. . . ; இன்னும் (இணை வைக்கும்) அக்கிரமக்காரர்களுக்குப் பார்க்க முடியுமானால், (அல்லாஹ் தரவிருக்கும்) **வேதனை எப்படியிருக்கும் என்பதைக் நீர் கண்டுக் கொள்வீர்;** அனைத்து வல்லமையும் அல்லாஹ்வுக்கே சொந்தமானது; நிச்சயமாக தண்டனை கொடுப்பதில் அல்லாஹ் மிகவும் கடுமையானவன் (என்பதையும் கண்டு கொள்வார்கள்).

நன்றாக கவனியுங்கள், "அக்கிரமக்காரர்களுக்கு அல்லாஹ் கொடுக்கும் தண்டனை எப்படி இருக்கும் என்று அவர்களே அறிந்துக்கொள்வார்கள்" என்று ஹஃப்ஸ் கிராத் குர்ஆன் சொல்கிறது. ஆனால், வர்ஷ் குர்ஆனின் படி, "அக்கிரமக்காரர்களுக்கு அல்லாஹ் கொடுக்கும் தண்டனை எப்படி இருக்கும் என்று முஹம்மது அறிந்துக்கொள்வாராம்". இதனை அறிந்துக்கொள்ள முஹம்மதுவை நரகத்துக்கு அல்லாஹ் அனுப்புவானா?

**வித்தியாசம் புரிகின்றதா?**

முஹம்மதுவிற்கு இந்த வசனத்தை அல்லாஹ் இறக்கும் போது, ஏதாவது ஒரு வகையில் தான் இறக்கப்பட்டு இருக்கவேண்டும். இரண்டு வகையில் இறக்கப்பட்டிருக்க வாய்ப்பு இல்லை. முஸ்லிம்கள் மனப்பாடம் செய்து இருப்பதினால், அடுத்த முறை மனப்பாடம் செய்யப்பட்டதை வெளியே கொண்டுவரும் போது, "அவன்" என்ற இடத்தில் "இவன்" என்றும், "அவர்கள்" என்ற இடத்தில் "நீர்" என்றும் வார்த்தைகள் மாறியுள்ளன.

இதில் எது உண்மை என்று முடிவு செய்யமுடியாதபடியினால், இப்படி 20க்கும் அதிகமான குர்ஆன் கிராத்துக்கள் உருவாகியுள்ளன. குர்ஆன் பாதுக்காக்கப்படவில்லை, தன் வேதத்தை பாதுகாக்க அல்லாஹ் தவறிவிட்டான் என்பதைத் தான் இதன் மூலம் அறியமுடிகின்றது.



**கேள்வி 87:** இப்படி அனேக குர்ஆன் கிராத் இருந்தால், அந்த கிராத்தில் உள்ள ஓதுதலை நாம் இன்று கேட்கமுடியுமா?

**பதில் 87:** ஆம், இன்றும் அனைத்து கிராத்திலும் ஓதுபவர்கள் இருக்கிறார்கள்.

**a) 10 கிராத்தில் ஆயத்துல் குர்ஸி வசனங்கள்**

இந்த கீழ்கண்ட தொடுப்பை சொடுக்கி, ஆயத்துல் குர்ஸி ஆயத்துக்களை(வசனங்களை) 10 கிராத்தில் ஓதியதை கேட்கலாம்.

- Ayat Al-Kursi 10 Different Qiraat By Qari Mishary Al-Rashid Al Afasy

**b) 7 கிராத்தில் ஸூரத்துல் ஃபாத்தியா ஓதுதல்:**

இந்த கீழ்கண்ட தொடுப்பை சொடுக்கி, ஸூரத்துல் ஃபாத்தியா ஆயத்துக்களை(வசனங்களை) 7 கிராத்தில் ஓதியதை கேட்கலாம்.

- Surah Fatiha in Seven Qir'aat Styles: Sheikh Hicham Ait Ben Ahmed - Teacher & Resident Imam

இந்த கீழ்கண்ட தொடுப்பில், 10 கிராத்துக்களில் ஃபாத்தியா வசனங்களை ஓதி, ஒவ்வொரு கிராத்தில் உள்ள வித்தியாசங்களையும் ஒரு இமாம் ஆங்கிலத்தில் விளக்குகிறார்.

- Surah Fatiha Recited in the 10 Qiraat

**c) கிராத் பற்றி முஸ்லிம்களின் உரையாடல்:**

கிராத் பற்றிய ஒரு சிறிய ஆங்கில உரையாடலை முஸ்லிம்கள் கீழ்கண்ட வீடியோவில் கொடுத்துள்ளார்கள், இதனையும் பார்த்துவிடுங்களேன்.

- Are There 7 or 10 styles of Quranic Recitation? | Quran Revolution

**d) குர்ஆன் ஸூரா 100 வை ஹஃப்ஸ் மற்றும் அல் ஸூஸி கிராயத்தில் வாசித்தல்:**

- Surat Al Adiyat 2 different recitations: Hafs vs. Al-Sousi

**e) 32 வகையான கிராத் பற்றி பேசும் விமர்சன வீடியோ:**

- 32 Different Qurans: Hafs, Warsh & Qaloon! [PART 1]

- 32 Different Qurans: Hafs, Warsh & Qaloon! [PART 2]



**கேள்வி 88:** குர்ஆன் கிராத்துக்கள் 20க்கும் அதிகமாக இருக்கும் போது, ஏன் ஹஃப்ஸ் கிராத் மட்டும் உலகில் அதிகமாக பயன்படுத்தப்படுகிறது (95% முஸ்லிம்கள் பயன்படுத்துகிறார்கள் என்று சொல்லப்படுகின்றது) ?

**பதில் 88:** 1923/24ம் ஆண்டுகளில் எகிப்து அச்சு இயந்திரத்தில் பிரிண்ட் செய்ய ஒரு கிராத் தெரிவு செய்யவேண்டி இருந்தது, அப்போது ஹஃப்ஸ் கிராத்தை தெரிவு

செய்தார்கள். மற்ற கிராத்துக்களும் கையெழுத்து பிரதிகளாகவும், வாய்வழியாக ஓதும் முறையாக இருந்துக்கொண்டு இருந்தது, ஆனால் காகிதத்தில் பிரிண்ட் எடுத்ததால் ஹஃப்ஸ் குர்ஆன் புகழ்பெற்றுவிட்டது.

ஒரு வேளை எகிப்து, தன் முதல் அச்சு இயந்திரத்தில் வேறு ஒரு கிராத் குர்ஆனை ஏற்றி இருந்தால், அந்த கிராத் உலகம் முழுவதும் சென்று இருந்திருக்கும். ஹஃப்ஸ் தவிர்த்து மற்ற கிராத்துக்களும் இஸ்லாமிய உலகில் பரவலாக பயன்பாட்டில் இருந்தது, தஃப்ஸீர்களும் அவைகளை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளன. ஆனால், எது பிரிண்ட் செய்யப்பட்டதோ, அது புகழ் பெற்றது.

- **https://en.wikipedia.org/wiki/Hafs**



**கேள்வி 89:** ஹஃப்ஸ் குர்ஆன் கிராத்துக்கு அடுத்தபடியாக, எது புகழ்பெற்ற கிராத்தாக முஸ்லிம்கள் பயன்படுத்துகிறார்கள்?

**பதில் 89:** ஹஃப்ஸ் கிராத்துக்கு பிறகு, வர்ஷ் குர்ஆன் முஸ்லிம்கள் அதிகமாக (~3%) பயன்படுத்தப்படுவதாக கூறப்படுகின்றது.



**கேள்வி 90:** குர்ஆனின் கிராத்தில் இத்தனை சிக்கல்கள், விவரங்கள் இருக்கும் போது, நம் தமிழ் நாட்டு அறிஞர்கள், இதைப் பற்றி முஸ்லிம்களுக்கு சொல்லிக்கொடுப்பதில்லையே! ஏன்?

**பதில் 90:** குர்ஆனின் சரித்திரம் பற்றி முஸ்லிம் அறிஞர்கள் அதிகம் பேசமாட்டார்கள். ஏனென்றால், உண்மை தெரிந்துவிட்டால், அதாவது ஒரு விஷயம் பற்றி ஞானம் வந்துவிட்டால், மக்கள் கேள்வி கேட்க ஆரம்பிப்பார்கள்.

முஸ்லிம் இமாம்களின், பீஜே போன்ற அறிஞர்களின் "வாழ்க்கை" என்பது குர்ஆனை உயர்த்திக் காட்டி பேசுவதினால் நடக்கிறது. உலகில் எந்த நாட்டில் சென்றாலும் ஒரே குர்ஆன் உள்ளது, ஒரு வரி, ஒரு வார்த்தை மற்றும் ஒரு எழுத்து கூட மாறாமல் குர்ஆன் அரபியில் அப்படியே உள்ளது என்று பல பொய்களைச் சொல்லி, தமிழ் முஸ்லிம்களை ஏமாற்றிக்கொண்டு இருக்கிறார்கள்.

எங்களைப் போன்ற கிறிஸ்தவர்கள் இதைப் பற்றி ஆய்வு செய்து, மக்களுக்கு புரியும் வண்ணம் விளக்கிவிட்ட பிறகு, முஸ்லிம் அறிஞர்கள் "இனி நாம் அமைதியாக இருந்தால், பயனில்லை" என்பதை உணர்ந்துக்கொண்டு இதைப் பற்றி எழுத ஆரம்பிப்பார்கள்.

கூர்ந்து கவனியுங்கள், இந்த நாளையும் தேதியையும் (1 ஜூன் 2020) குறித்துக்கொள்ளுங்கள். இந்த தேதிக்கு முன்பாக, நம் இஸ்லாமிய இணைய தளங்களில், ஆடியோ மற்றும் வீடியோக்களில் குர்ஆனின் 20 வகையான கிராத்

பற்றி எவைகள் பேசப்பட்டுள்ளன, எழுதப்பட்டுள்ளன என்பதை கவனியுங்கள். குறைந்த பட்சம் ஹஃப்ஸ் மற்றும் வர்ஷ் குர்ஆன் பற்றி என்ன சொல்லியுள்ளார்கள் என்று கவனித்துப் பார்த்தால், 1% கூட இருக்காது. இனி மேல் 20 கிராத்துக்கள் பற்றி எழுதவும், பேசவும் தொடங்குவார்கள்.

இதைப் பற்றி முஸ்லிம்கள் அதிகம் அறியவேண்டும் என்ற ஆர்வம் இனி உண்டாகிவிடும், இதனால் முஸ்லிம அறிஞர்கள் கிராத் பற்றி பேசித்தான் ஆகவேண்டும்.



---

## தலைப்பு: பைபிள் (80 கேள்வி பதில்கள்)

**கேள்வி 1:** பைபிளுக்கு முன்பிலிருந்து குர்ஆன் இருக்கிறது என்று என் நண்பன் சொல்கிறான், இது உண்மையா?

**பதில் 1:** உங்கள் நண்பருக்கு இவ்விரு புத்தகங்களின் காலக்கட்டம் தெரியவில்லை, அதனால் தான் அவர் அப்படிச் சொல்கிறார்.

கீழ்கண்ட விவரங்களை அவருக்கு விளக்குங்கள்.

1. பைபிளில் உள்ள பழைய ஏற்பாட்டை மோசே (மூஸா) எழுதினார். மூஸாவின் காலக்கட்டம் கி.மு. 1500 (தோராயமாக) ஆகும்.
2. புதிய ஏற்பாடு கி.பி. 100 க்குள் எழுதப்பட்டுவிட்டது.
3. முஹம்மது கி.பி. 570ல் பிறக்கிறார்.
4. முஹம்மது கி.பி. 610ல் (தம்முடைய 40வது வயதில்) தம்மை நபி என்று பிரகடனப்படுத்தினார்.
5. கி.பி. 610 முதல், 632 வரை, முஹம்மதுவிற்கு குர்ஆன் வசனங்கள் இறங்குகின்றன.
6. கி.பி. 632 முஹம்மது மரிக்கிறார்.
7. முஹம்மது மரித்து 14 ஆண்டுகளுக்கு பிறகு, உஸ்மான் மூன்றாம் கலிஃபாவாகிறார். இவரது காலகட்டத்தில் குர்ஆன் ஒரு புத்தகமாக முழுவடிவம் பெறுகிறது.

சுருக்கமாகச் சொல்லவேண்டுமென்றால், பைபிள் முடிவடைந்த காலக்கட்டத்தையும், குர்ஆன் முதலாவது எழுதப்பட்ட காலக்கட்டத்தையும் கணக்கிட்டால் 500 ஆண்டுகள் வித்தியாசம் உள்ளது.



**கேள்வி 2:** பைபிளின் நபர்களின் பெயர்கள் குர்ஆனில் அத்தியாயங்களாக உள்ளனவா? அவை யாவை?

**பதில் 2:** கீழ்கண்ட ஆறு குர்ஆன் அத்தியாயங்களுக்கு பைபிளில் வரும் நபர்களின் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளது.

- ஸூரா 10 - யூனுஸ் (யோனா)
- ஸூரா 12 - யூஸுஃப் (யோசேப்பு)
- ஸூரா 14 - இப்ராஹீம் (ஆபிரகாம்)
- ஸூரா 17 - பனீ இஸ்ராயீல் (இஸ்ராயீலின் சந்ததிகள்)
- ஸூரா 19 - மர்யம் (இயேசுவின் தாய் மரியாள்)
- ஸூரா 71 - நூஹ் (நோவா)



**கேள்வி 3:** முஹம்மதுவின் காலத்தில் பைபிள் அரபி மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்டு இருந்ததா?

**பதில் 3:** இல்லை, முஹம்மது வாழ்ந்த காலத்தில் பைபிள் அரபியில் மொழியாக்கம் செய்யப்படவில்லை. மேலும், நமக்கு கிடைத்துள்ள பழைய அரபி பைபிள் கையெழுத்துப் பிரதிகள் 9/10வது நூற்றாண்டுக்கு சம்மந்தப்பட்டது என்று அறியப்பட்டுள்ளது.



**கேள்வி 4:** பைபிள் என்ற வார்த்தை பைபிளில் இல்லை என்று முஸ்லிம்கள் குற்றம் சாட்டுவது சரியா?

**பதில் 4:** பைபிள் என்ற வார்த்தை பைபிளில் உள்ளது. பைபிள் என்ற வார்த்தை “பிப்லோஸ்(βίβλος)” என்ற கிரேக்க வார்த்தையிலிருந்து வந்ததாகும். பிப்லோஸ் என்ற கிரேக்க வார்த்தையின் பொருள் "புத்தகம்/சுருள்" என்பதாகும்.

புதிய ஏற்பாட்டின் முதல் புத்தகம், முதல் வசனம், முதல் வார்த்தை கீழ்கண்டவாறு ஆரம்பிக்கிறது. மூல கிரேக்க மொழியில் மத்தேயு 1:1

- **கிரேக்க மொழி**: Βίβλος Γενέσεως Ἰησοῦ Χριστοῦ υἱοῦ Δαυὶδ υἱοῦ Ἀβραάμ
- **ஆங்கிலம்**: [The] book of [the] genealogy of Jesus Christ son of David, son of Abraham:
- **தமிழ்**: ஆபிரகாமின் குமாரனாகிய தாவீதின் குமாரனான இயேசுகிறிஸ்துவினுடைய வம்சவரலாறு

Source: **biblehub.com/text/matthew/1-1.htm**

இன்னும் கீழ்கண்ட வசனங்களிலும், பிப்லோஸ் என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது (Source: **biblehub.com/greek/976.htm)**:

மாற்கு 12:26, லூக்கா 3:4;20:42, அப்போஸ்தலர் 1:20;7:42;19:19;பிலிப்பியர் 4:3, வெளி 3:5;20:15



**கேள்வி 5:** குர்ஆனில் பைபிளில் காணப்படும் அனேக நிகழ்ச்சிகள் காணப்படுவது ஏன்?

**பதில் 5:** பைபிளின் பழைய ஏற்பாட்டு மற்றும் புதிய ஏற்பாட்டு நிகழ்ச்சிகளை குர்ஆன் மறுபதிவு செய்திருக்கிறது. குர்ஆன் கி.பி. 610 லிருந்து 632வரை எழுதப்பட்டது. பைபிள் கி.மு. 1500 லிருந்து கி.பி 100 வரைக்குள் எழுதப்பட்டது. பிந்தையது (குர்ஆன்) முந்தையதிலிருந்து (பைபிளிலிருந்து) நிகழ்ச்சிகளை எடுத்து தன்னிடம் மறுபதிவு செய்திருப்பதினால் தான், பைபிளின் நிகழ்ச்சிகள், நபர்களின் பெயர்கள் குர்ஆனில் வருகின்றது.

குர்ஆன் இப்படி பைபிளின் நிகழ்ச்சிகளை மறுபதிவு செய்யும் போது, சில நிகழ்ச்சிகளை அப்படியே மாற்றாமல் பதிவு செய்துள்ளது, சில விவரங்களை குர்ஆன் மாற்றி எழுதியிருக்கிறது.



**கேள்வி 6:** முஹம்மதுவிடம் அரபி பைபிள் அல்லது பைபிளின் ஒரு புத்தகம் இருந்ததா?

**பதில் 6:** முஹம்மது வாழ்ந்த காலக்கட்டத்தில் (கிபி 570 - 632) அரபி மொழியில் பைபிள் மொழியாக்கம் செய்யப்படாமல் இருந்தது, மேலும், முஹம்மது வாழ்ந்த சமுதாயம் ஒரு படித்த சமுதாயமல்ல. முஹம்மதுவிற்கு எபிரெயம் மற்றும் கிரேக்க மொழி தெரியும் என்றும் சொல்லமுடியாது.



**கேள்வி 7:** இயேசுவைப் பற்றி பைபிள் சொல்வதை நம்பவேண்டுமா? குர்ஆன் சொல்வதை நம்பவேண்டுமா?

**பதில் 7:** முஹம்மதுவைப் பற்றி, இஸ்லாமைப் பற்றி குர்ஆனில் உண்மை விவரம் கிடைக்குமா? அல்லது அதன் பிறகு எழுதப்பட்ட புத்தகத்தில் கிடைக்குமா? புதிய ஏற்பாடு எழுதப்பட்டு 500 ஆண்டுகளுக்கு பிறகு வந்த குர்ஆனில் எப்படி இயேசுவின் உண்மை விவரங்கள் காணப்படும்?

இதுமட்டுமல்ல, இயேசுவைப் பற்றி எதிராக கருத்துக்கள் சொல்லவேண்டும் என்ற நோக்கில் எழுதப்பட்ட புத்தகத்தில் எப்படி இயேசுவைப் பற்றிய உண்மைகளை பார்க்கமுடியும்? உண்மையான இயேசு பற்றிய விவரங்கள் புதிய ஏற்பாட்டில் மட்டுமே கிடைக்கும், குர்ஆனில் கிடைக்காது.



**கேள்வி 8:** குர்ஆனில் வரும் "இயேசு செய்த பறவைக்கு உயிர் கொடுக்கும் அற்புதம்" பைபிளில் இல்லையே! ஏன்?

**பதில் 8:** இயேசு குழந்தையாக இருந்த போது, கலிமண்ணினால் ஒரு பறவை செய்து, அதற்கு உயிர்கொடுத்தார் என்று ஒரு அற்புதத்தை குர்ஆன் பதிவு செய்துள்ளது. இது பைபிளில் இல்லை, காரணம் என்னவென்றால், கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் பல தள்ளுபடி ஆகமங்கள் பலரால் எழுதப்பட்டன.

அப்படி எழுதப்பட்ட ஒரு புத்தகம் தான் ' "Infancy Gospel of Thomas(இன்பான்சி காஸ்பல் ஆஃப் தாமஸ்)', இதில் தான் அந்த அற்புதம் உள்ளது. இது ஒரு பொய்யான புத்தகம், இயேசுவின் சீடர்களால், எழுதப்பட்டதல்ல. புதிய ஏற்பாடு முழுவதும், கடைசி அப்போஸ்தலர் உயிரோடு இருக்கும்போதே எழுதப்பட்டாகிவிட்டது. இரண்டாம் மூன்றாம் நூற்றாண்டுகளில் பல கட்டுக்கதைகள் புனைந்து பல புத்தங்கள் எழுதப்பட்டன. அப்படிப்பட்ட புத்தகத்தில் எழுதப்பட்ட கற்பனைக் கதையையும் குர்ஆன் உண்மை என்று எண்ணி பதிவு செய்துவிட்டது.

குர்ஆனில் பல கட்டுக்கதைகள் பதிவு செய்யப்பட்டுள்ளது என்பதால் தான் கிறிஸ்தவ அறிஞர்கள் குர்ஆனை புறக்கணிக்கிறார்கள்.

அந்த தள்ளுபடி புத்தகத்தை கீழ்கண்ட தொடுப்பில் படிக்கலாம்:

**Infancy Gospel of Thomas**

**இந்த புத்தகத்திலிருந்து சில மேற்கோள்கள்:**

2. This child Jesus, when five years old, was playing in the ford of a mountain stream; and He collected the flowing waters into pools, and made them clear immediately, and by a word alone He made them obey Him. And having made some soft clay, **He fashioned out of it twelve sparrows**. And it was the Sabbath when He did these things. And there were also many other children playing with Him. And a certain Jew, seeing what Jesus was doing, playing on the Sabbath, went off immediately, and said to his father Joseph: Behold, thy son is at the stream, and has taken clay, and made of it twelve birds, and has profaned the Sabbath. And Joseph, coming to the place and seeing, cried out to Him, saying: Wherefore doest thou on the Sabbath what it is not lawful to do? **And Jesus clapped His hands, and cried out to the sparrows, and said to them: Off you go! And the sparrows flew, and went off crying.** And the Jews seeing this were amazed, and went away and reported to their chief men what they had seen Jesus doing.

**குர்ஆன் 3:49: குர்ஆன் சொல்வதை படியுங்கள்:**

3:49. இஸ்ராயீலின் சந்ததியினருக்குத் தூதராகவும் (அவரை ஆக்குவான்; இவ்வாறு அவர் ஆகியதும் இஸ்ரவேலர்களிடம் அவர்:) "நான் உங்கள் இறைவனிடமிருந்து ஓர் அத்தாட்சியுடன் நிச்சயமாக வந்துள்ளேன்; **நான் உங்களுக்காக களிமண்ணால் ஒரு பறவையின் உருவத்தை உண்டாக்கி நான் அதில் ஊதுவேன்; அது அல்லாஹ்வின் அனுமதியைக் கொண்டு (உயிருடைய) பறவையாகிவிடும்**. . . ." (என்று கூறினார்).

பைபிளின் படி இயேசு செய்த முதல் அற்புதம் கானா ஊர் திருமணத்தில் அவர் செய்த அற்புதம் தான் (யோவான் 2:1-11). குர்ஆன் கட்டுக்கதைகளை தன்னகத்தே கொண்டுள்ளது.



**கேள்வி 9:** பைபிளின் அரபி மொழியாக்கங்களில் யெகோவா தேவனுக்கு ஏன் அல்லாஹ் என்று மொழியாக்கம் செய்துள்ளார்கள்?

**பதில் 9:** அரபி மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்ட பைபிளில், யெகோவா என்ற பெயர் வரும் இடங்களில் 'ரப்' என்றும், 'அல்லாஹ்' என்றும் இரண்டு வகைகளில் 9ம் நூற்றாண்டிலிருந்து மொழியாக்கம் செய்துள்ளார்கள். அல்லாஹ் என்பது குர்ஆனை கொடுத்தவனின் தனிப்பெயர் என்று முஸ்லிம்கள் சொல்வதால், 'ரப்' என்றோ, 'யெகோவா'என்றொ மொழியாக்கம் செய்வது தான் சரியானது.

பைபிளின் யெகோவா தேவன், குர்ஆனின் அல்லாஹ் அல்ல. இவ்விருவரும் நேர் எதிர் துருவங்கள். இவ்விருவரும் ஒருவர் என்று முஸ்லிம்கள் சொல்லிக்கொள்ளலாம், ஆனால் அது தவறு. இந்த குழப்பம் தீர, அரபி பைபிள்களில் அல்லாஹ் என்ற பெயருக்கு பதில் 'ரப்' என்றோ, 'யெகோவா' என்றோ மொழியாக்கம் செய்வதே சரியானது.



**கேள்வி 10:** முஸ்லிம்கள் குர்ஆனை அதன் மூல மொழியில் படிப்பது போன்று, ஏன் கிறிஸ்தவர்கள் பைபிளை அதன் மூல மொழிகளாகிய எபிரேய மற்றும் கிரேக்க மொழிகளில் படிப்பதில்லை?

**பதில் 10:** தெரியாத மொழியில் புரியாமல் படிப்பதினால் என்ன நன்மை சொல்லுங்கள்?

சில நேரங்களில் நாம் பேருந்து அல்லது இரயிலில் பயணம் செய்யும் போது, நம் பக்கத்தில் உட்கார்ந்துக் கொண்டு, நமக்கு தெரியாத மொழியில் சிலர் பேசிக்கொண்டே இருப்பார்கள். நமக்கு ஒன்றுமே புரியாது, தலைவலியாக இருக்கும். ஏன் தெரியுமா? நமக்கு புரியவில்லை என்பதும் ஒரு காரணம் தான். அதுவே, நமக்கு புரியும் தமிழில் யாராவது தொன தொனவென்று பேசினால், தலைவலியாக இருந்தாலும், கொஞ்சமாவது தாக்குபிடிக்கலாம், புரியும் என்பதால்.

மேலும், குர்ஆனை அரபி மொழியில் படிப்பது படிப்பவரை முட்டாள்களாகவே வைத்திருக்கும் யுக்தி தான் அது. இமாம்கள், மார்க்க தலைவர்கள் மக்களை அறியாமையில் வைத்திருக்கவேண்டுமென்றால், புரியாத மொழியில் வேதங்களை படிக்க வைக்கவேண்டும், அப்போது தான் 'இந்த அரபியில் ஏதோ சக்தி இருக்கிறது, இதை நாம் கேள்வி கேட்கக்கூடாது, புரியும் மொழியில்

படித்தால் நன்மை கிடைக்காது' என்று மக்கள் எண்ணி அறியாமையில் இருப்பார்கள்.

கிறிஸ்தவர்களோ, போதகர்களோ இப்படியெல்லாம் மக்களை அறியாமையில் வைத்திருக்க விரும்புவதில்லை, எனவே, நாங்கள் எபிரேய மற்றும் கிரேக்க மொழியில் பைபிளை படிக்காமல், எங்களுக்கு தெரிந்த மொழியில் அல்லது தாய் மொழியில் படிக்கிறோம். பைபிள் கல்லூரிகளில் பட்டப்படிப்பு படிப்பவர்கள், ஆய்வு செய்ய விரும்புகிறவர்கள், இம்மொழிகளை படித்து ஆய்வு செய்கிறார்கள், ஆனால் தங்கள் அனுதின ஆன்மீக வளர்ச்சிக்கு புரியும் மொழியிலேயே படிக்கிறார்கள்.



**கேள்வி 11:** குர்ஆனை அரபியில் படித்தால் அதிக நன்மையை அல்லாஹ் தருவதாக முஸ்லிம்கள் நம்புகிறார்கள். இதுபோலவே பைபிளை எபிரேய கிரேக்க மொழிகளில் படித்தால், தேவன் நமக்கு அதிக நன்மைகளைத் தருவாரா?

**பதில் 11:** அல்லாஹ் ஒரு பொய்யான இறைவன் எனவே மக்கள் அறியாமையிலேயே இருக்கவேண்டுமென்று விரும்பி, புரியவில்லையென்றாலும் நீங்கள் குர்ஆனை அரபியில் படியுங்கள் என்று முஸ்லிம்களுக்கு கட்டளையிட்டான்.

பைபிளின் தேவன் மக்களை ஞானத்திற்கு நேராக அழைத்துச் செல்கிறார். நீதிமொழிகள் புத்தகத்தை படித்தால், ஞானத்திற்கு (உலக ஞானம், ஆன்மீக ஞானம்) எவ்வளவு முக்கியத்தும் கொடுக்கப்பட்டுள்ளது என்பதை அறியலாம்.

இறைவனுடைய வேதத்தை வாசிக்கவேண்டும், கேட்கவேண்டும் மற்றும் கீழ்படியவேண்டும், அரபியிலோ, எபிரேயம் மற்றும் கிரேக்க மொழியிலோ படித்தால் எப்படி புரியும்? புரியவில்லையென்றால் எப்படி கீழ்படியமுடியும்?

இதனை பைபிள் எப்படி அழகாகச் சொல்கிறது என்பதை கவனிக்கவும்:

வெளி 1:3 இந்தத் தீர்க்கதரிசன வசனங்களை வாசிக்கிறவனும், கேட்கிறவர்களும், இதில் எழுதியிருக்கிறவைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும் பாக்கியவான்கள், காலம் சமீபமாயிருக்கிறது.

மக்களுக்கு புரியவேண்டும் என்பதற்காகத் தான் இயேசுவும் "காது உள்ளவன் கேட்கக்கடவன்" என்றார். நமக்கு புரியும் மொழியில் கேட்கும் போது தான் அதனை நாம் உணர்ந்துக்கொள்ளமுடியும், அதன் பிறகு அக்கட்டளைகளை பின்பற்றுவதா அல்லது புறக்கணிப்பதா என்ற முடிவு எடுக்கலாம்.

ஞானம் மற்றும் அறிவு பற்றி இரண்டு வசனங்களை பாருங்கள். நமக்குள் இருக்கும் ஆவியானவர் ஞானத்தின் ஆவியானவர், நமக்கு புரியவைத்து, நாம் அதற்கு மனப்பூர்வமாக கீழ்படிய உதவி செய்கிறார்.

**நீதிமொழிகள் 15:14**

புத்திமானுடைய மனம் **அறிவைத்** தேடும்; மூடரின் வாயோ மதியீனத்தை மேயும்

**ஏசாயா 11:2**

**ஞானத்தையும் உணர்வையும் அருளும்** ஆவியும், ஆலோசனையையும் பெலனையும் அருளும் ஆவியும், **அறிவையும்** கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்தையும் அருளும் ஆவியுமாகிய கர்த்தருடைய ஆவியானவர் அவர்மேல் தங்கியிருப்பார்.

எனவே, நமக்கு புரியாத மொழியில் அதாவது அரபி, எபிரேயம், மற்றும் கிரேக்க மொழியில் படித்தால் நான் நன்மை செய்வேன் என்று பைபிளின் தேவன் சொல்லவில்லை, அவர் சொல்லவும் மாட்டார். **முஸ்லிம்களே! குர்ஆனை அரபியில் படித்து வஞ்சிக்கப்படாதிருங்கள்.**



**கேள்வி 12:** பழைய ஏற்பாட்டை புதிய ஏற்பாடு இரத்துசெய்கிறது, அதுபோல புதிய ஏற்பாட்டை குர்ஆன் இரத்து செய்கிறது. எனவே, குர்ஆனைத் தான் கிறிஸ்தவர்கள் படிக்கவேண்டும் என்று என் நண்பர் சொல்கிறார். இதற்கு பதில் என்ன?

**பதில் 12:** உங்கள் நண்பருக்கு வேதங்கள் பற்றிய ஞானமில்லை அல்லது அவர் பொய் சொல்கிறார்.

பழைய ஏற்பாட்டை புதிய ஏற்பாடு இரத்து செய்தது என்று யார் சொன்னார்கள்? புதிய ஏற்பாட்டில் அப்படி ஒன்றும் சொல்லப்படவில்லையே!

இயேசு நியாயப்பிரமாணங்களை, தீர்க்கதரிசனங்களை நிறைவேற்ற வந்தார் என்று கூறியுள்ளார், பார்க்க மத்தேயு 5:17:

5:17. நியாயப்பிரமாணத்தையானாலும் தீர்க்கதரிசனங்களையானாலும் அழிக்கிறதற்கு வந்தேன் என்று எண்ணிக்கொள்ளாதேயுங்கள்; அழிக்கிறதற்கு அல்ல, **நிறைவேற்றுகிறதற்கே** வந்தேன்.

புதிய ஏற்பாடு, பழைய ஏற்பாட்டின் நிறைவேறுதல் ஆகும். புதிய ஏற்பாட்டில் அனேக இடங்களில் பழைய ஏற்பாட்டின் “தீர்க்கதரிசனங்கள் நிறைவேறும் படி இப்படி நடந்தது” என்று பதிவு செய்யப்பட்டுள்ளது.

உங்கள் நண்பர் சொல்வது தவறு. மேலும், குர்ஆன் ஒரு இறைவேதமில்லை என்று இருக்கும் போது, அது எப்படி புதிய ஏற்பாட்டை இரத்து செய்யும். பைபிளின் படி, அல்லாஹ் ஒரு பொய் இறைவன், முஹம்மது ஒரு கள்ளத்தீர்க்கதரிசி ஆவார், இப்படி இருக்கும் போது, குர்ஆன் எப்படி இறைவேதமாகும்.



**கேள்வி 13:** இயேசுவிற்கும் தனக்கும் (முஹம்மதுவிற்கும்) இடையே எந்த ஒரு தீர்க்கதரிசியும் எழும்பவில்லை என்று முஹம்மது கூறியுள்ளாரே! இது உண்மையா?

**பதில் 13:** பைபிளின் படி, முஹம்மது ஒரு தீர்க்கதரிசி அல்ல. இப்படி இருக்கும் போது முஹம்மது எதை வேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளலாம்.

இதுமட்டுமல்ல, இயேசுவிற்கும் முஹம்மதுவிற்கும் இடையே (600 ஆண்டுகள்) ஒரு தீர்க்கதரிசியும் எழும்பவில்லை என்று முஹம்மது கூறுவது, இஸ்லாமிய கோட்பாடுகளுக்கு எதிரான கூற்றாகும். அதாவது இஸ்லாமின் படி, ஒவ்வொரு காலத்திலும், ஒவ்வொரு இனத்திற்கும் அல்லாஹ் நபிகளை அனுப்பி வழிநடத்துகின்றான். ஆனால், 600 ஆண்டுகள் ஒரு நபியும் எழும்பவில்லை என்று முஹம்மது கூறும் போது, இஸ்லாமுக்கு எதிரான கூற்றாக உள்ளது. எனவே முஹம்மதுவின் கூற்று அல்லாஹ்விற்கும் இஸ்லாமுக்கும் எதிரான கூற்றாகும்.

இன்னொரு வேடிக்கையைப் பாருங்கள், இயேசுவிற்கும் முஹம்மதுவிற்கும் 600 ஆண்டுகள் இடைவெளி உள்ளது, ஆனால், முஹம்மதுவிற்கும் இஸ்மாயீலுக்கும் (இப்றாஹீமின் மகன்) இடையே கிட்டத்தட்ட 2500 ஆண்டுகள் உள்ளது.

ஆக, அல்லாஹ் தன் மக்கா மக்களை வழி நடத்த 2500 ஆண்டுகளாக ஒரு நபியையும் அங்கு அனுப்பவில்லை என்று அறியும் போது, அல்லாஹ் மீது சிறிது சந்தேகம் வரத்தான் செய்கிறது.



**கேள்வி 14:** முஸ்லிம்கள் பைபிளை படித்தால் அல்லாஹ் கோபம் கொள்வானா?

**பதில் 14:** பைபிளில் நேர் வழி உள்ளது என்று குர்ஆன் சொல்கிறது, பைபிளின் நபிமார்கள் பற்றி பல நிகழ்ச்சிகளை குர்ஆன் மறுபதிவு செய்கிறது. இப்படி இருக்கும் போது, முஸ்லிம்கள் பைபிளை படிப்பதுதானே நியாயமான செயலாக இருக்கும்!

முந்தைய வேதங்களை கொடுத்தவனும் தானே என்று அல்லாஹ் சொல்கின்றான், தன் வேதங்களை யாராலும் மாற்றமுடியாது என்றும் அல்லாஹ் சொல்கின்றான். விஷயம் இப்படி இருக்கும் போது, ஏன் அல்லாஹ் கோபம் கொள்வான், சொல்லுங்கள்?

தவ்ராத், ஜபூர் மற்றும் இன்ஜில் பற்றி குர்ஆன் சொல்பவற்றை படியுங்கள், இதன் பிறகுமா நீங்கள் இவைகளை படிக்க தயங்குவீர்கள்?

குர்ஆன் 2:53. இன்னும், நீங்கள் நேர்வழி பெறும்பொருட்டு நாம் மூஸாவுக்கு வேதத்தையும் (நன்மை தீமைகளைப் பிரித்து அறிவிக்கக்கூடிய) ஃபுர்க்கானையும் அளித்தோம் (என்பதையும் நினைவு கூறுங்கள்).

குர்ஆன் 3:3. (நபியே! முற்றிலும்) உண்மையைக் கொண்டுள்ள இந்த வேதத்தைப் (படிப்படியாக) அவன் தான் உம் மீது இறக்கி வைத்தான்; இது-இதற்கு முன்னாலுள்ள (வேதங்களை) உறுதிப்படுத்தும் தவ்ராத்தையும் இன்ஜீலையும் அவனே இறக்கி வைத்தான்.

குர்ஆன் 5:44. நிச்சயமாக நாம் தாம் "தவ்ராத்"தை யும் இறக்கி வைத்தோம்; அதில் நேர்வழியும் பேரொளியும் இருந்தன. (அல்லாஹ்வுக்கு) முற்றிலும் வழிப்பட்ட நபிமார்கள், யூதர்களுக்கு அதனைக் கொண்டே (மார்க்கக்) கட்டளையிட்டு வந்தார்கள்; . . .

குர்ஆன் 5:46. இன்னும் (முன்னிருந்த) நபிமார்களுடைய அடிச்சுவடுகளிலேயே மர்யமின் குமாரராகிய ஈஸாவை, அவருக்கு முன் இருந்த தவ்ராத்தை உண்மைப்படுத்துபவராக நாம் தொடரச் செய்தோம்; அவருக்கு நாம் இன்ஜீலையும் கொடுத்தோம்; **அதில் நேர்வழியும் ஒளியும் இருந்தன;** அது தனக்கு முன்னிருக்கும் தவ்ராத்தை உண்மைப்படுத்துவதாக இருந்தது; அது **பயபக்தியுடையவர்களுக்கு நேர் வழிகாட்டியாகவும்** நல்லுபதேசமாகவும் உள்ளது.

குர்ஆன் 17:55. உம்முடைய இறைவன் வானங்களிலும் பூமியிலும் உள்ளவர்களைப் பற்றி நன்கு அறிவான்; நபிமார்களில் சிலரை வேறு சிலரைவிடத் திட்டமாக நாம் மேன்மையாக்கியிருக்கிறோம்; இன்னும் **தாவூதுக்கு ஜபூர் (வேதத்தையும்) கொடுத்தோம்**.



**கேள்வி 15:** முஸ்லிம்கள் குர்ஆனின் வசனங்களில் அடிக்கோடு இடுவது, பக்கங்களில் குறிப்பு எழுதுவது போன்று எதையும் செய்வதில்லை. ஆனால், கிறிஸ்தவர்கள் இதனைச் செய்கிறார்கள். இது தவறு தானே!

**பதில் 15:** இது தவறு இல்லை, இதனால் அனேக நன்மைகள் உள்ளன. முஸ்லிம்கள் அரபியில் குர்ஆனை படிக்கிறார்கள், அவர்கள் படிப்பது என்னவென்றே அவர்களுக்கு தெரிவதில்லை, எனவே எந்த வசனத்தை அவர்கள் அடிக்கோடு இடுவார்கள்?

ஆனால், கிறிஸ்தவர்கள் பைபிளை தாய் மொழியில் படிக்கிறார்கள். மேலும் பைபிளின் வசனங்களுக்கு உயிர் இருக்கிறது, அவைகளை படிக்கும்போது, நம்மோடு அவைகள் பேசும், அப்போது நாங்கள் உடனே அவ்வசனங்களை

அடிக்கோடு இடுவோம். சில மாதங்கள் கழித்து மறுபடியும் அதே வசனங்களை படிக்கும்போது, அடிக்கோடுகளை கண்டு கர்த்தருக்கு நாங்கள் நன்றிகளைச் சொல்லுவோம்.

பைபிளில் எச்சரிக்கைத் தரும் கட்டளைகள் இருக்கும், ஆசீர்வாதமான வாக்குத்தத்தங்கள் இருக்கும், அடிக்கோடு இட்ட இந்த வசனங்கள் பார்க்கும் போது, சில எச்சரிக்கைகள் ஞாபகத்திற்கு வந்து, நாங்கள் தொடர்ந்து மனந்திரும்பவோ, மற்றவர்களுடன் ஒற்றுமையடையவோ அவைகள் பயனுள்ளதாக இருக்கிறது. எனவே, அடிக்கோடு இடுவது, பைபிளின் பக்கங்களில் குறிப்புகளை எழுதுவது கிறிஸ்தவர்களுக்கு ஒரு ஆசீர்வாதமான செயலாகும்.



**கேள்வி 16:** முஸ்லிம்கள் குர்ஆனை குளித்துவிட்டு, உளு செய்துவிட்டு தொடுகிறார்கள், படிக்கிறார்கள். இதே போல கிறிஸ்தவர்கள் குளித்துவிட்டு பைபிளை படிப்பதில்லை ஏன்? சுத்தமாக இருப்பதில் தவறேதுமில்லையே!

**பதில் 16:** உடல் சுத்தமாக வைத்துக்கொண்டு வேதத்தை படிப்பது தவறில்லை, ஆனால், உடல் சுத்தம் தான் முக்கியம் என்று எண்ணுவது தான் தவறு. இயேசு போதிக்கும் போது, உடல் சுத்தத்தைவிட உள்ளம் சுத்தம் முக்கியம் என்று கூறினார்.

உடலை மட்டும் சுத்தம் செய்துக்கொண்டு, புரியாமல் குர்ஆனை படிப்பதினால் என்ன பயன்? உடலை சுத்தம் செய்துக்கொண்டு, இறை கட்டளைகளுக்கு கீழ்படிய விருப்பமில்லாமல் குர்ஆனை படிப்பதினால் என்ன பயன்?

கிறிஸ்தவம் மிகவும் தெளிவாக உள்ளது, கிறிஸ்தவர்களும் மிகவும் தெளிவாக இருக்கிறார்கள். கிறிஸ்தவர்கள் பைபிளை எப்போது வேண்டுமானாலும் படிப்பார்கள், மாலைவரை வியர்வை சிந்தி வேலை செய்துவிட்டு, வீடு திரும்பும் போது வியர்வை நாற்றம் உடலுக்குள் அடித்தாலும், பஸ்ஸில் அல்லது ரயிலில் உட்கார்ந்துக்கொண்டு, பைபிளை நாங்கள் படிப்போம். இயேசு அந்த நேரத்தில் எங்கள் வியர்வை நாற்றத்தை பார்ப்பதில்லை, மனதின் நற்கந்தத்தை பார்க்கிறார்.

இப்படி நான் எழுதுகின்றேன் என்பதற்காக, கிறிஸ்தவர்கள் குளிக்கவே மாட்டார்கள் என்று நான் சொல்லவரவில்லை. எல்லாவற்றையும் சோதித்துப் பார்த்து நலமானதை பிடித்துக்கொள்ள எங்களுக்குத் தெரியும் என்று சொல்லவருகிறேன்.

முஸ்லிம்களில் அனேகர் ஏன் குர்ஆன் பக்கமே தலைவைத்து படுப்பதில்லை தெரியுமா? இதற்கு முதல் காரணம், குர்ஆனை அரபியில் படிக்கச் சொல்வதினால், இரண்டாவது காரணம், குளித்துவிட்டு, உளு செய்துவிட்டு, ஒரு

குறிப்பிட்ட இடத்தில் உட்கார்ந்துக்கொண்டு, பயபக்தியால் நிரம்பி, குர்ஆனை படிக்கச்சொல்வதினால் தான்.



**கேள்வி 17:** குர்ஆனை மூல மொழியாகிய அரபி மொழியில் மனப்பாடம் செய்வதை இஸ்லாம் ஊக்குவிக்கிறது, இது போல ஏன் கிறிஸ்தவம் ஊக்குவிப்பதில்லை?

**பதில் 17:** கிறிஸ்தவம் பொருள் புரியாமல் எதையும் செய்ய ஊக்குவிப்பதில்லை. உண்மையில் இதனால் நன்மை ஒன்றுமில்லை. கிறிஸ்தவர்கள் படித்தவர்கள் அவர்கள் எபிரேய மற்றும் கிரேக்க மொழியில் பைபிள் வசனங்களை மனப்பாடம் செய்வதினால் என்ன நன்மையென்று கேட்கத்தெரிந்தவர்கள்.

அர்த்தம் தெரியாமல் குர்ஆனை மனப்பாடம் செய்வது என்பது ஒரு அறியாமையாகும். முஸ்லிம்களுக்கு இதனால் ஒரு பொய்யான திருப்தி உண்டாகுமே தவிர, வேறு ஒரு நன்மையும் இல்லை.

மெய்யான ஜீவனுள்ள பைபிள் வசனங்களை எங்களுக்கு புரியும் மொழியில் மனப்பாடம் செய்வதில் தான் உண்மையான ஆன்மீகம் என்று நாங்கள் அறிவோம்.



**கேள்வி 18:** இயேசு சிலுவையில் மரிப்பதற்கு முன்பு என்ன செய்தார்?

**பதில் 18:** இயேசு சிலுவையில் அறையப்பட்ட பிறகு, முக்கியமான ஒன்றைச் சொல்லவேண்டுமென்றால், "தன்னை சிலுவையில் அறைந்தவர்களை மன்னித்தார்". இயேசு இப்படி மன்னித்ததினால் தான், எந்நிலையிலும் எதிரிகளை மன்னிக்கவேண்டும் என்று கிறிஸ்தவர்கள் கற்றுக்கொண்டார்கள்.

இதே போல மரண படுக்கையில் முஹம்மது யூதர்களையும், கிறிஸ்தவர்களையும் சபித்தார், அதனால் தான் அவரை பின்பற்றுகின்ற முஸ்லிம்கள் மிகவும் கோபத்தோடும், எரிச்சலோடும் யூதர்களையும்,கிறிஸ்தவர்களையும் இன்று வெறுத்துக்கொண்டு இருக்கிறார்கள். மரம் எப்படியோ கனிகள் அப்படி.



**கேள்வி 19:** இயேசு அடிமைகளை வைத்திருந்தாரா?

**பதில் 19:** இல்லை, இயேசு அடிமைகளை வைத்திருந்ததில்லை.



**கேள்வி 20:** ஆபிரகாம் மக்காவிற்குச் சென்று அங்கு காபாவை கட்டியதாக ஏதாவது குறிப்பு பைபிளில் உள்ளதா?

**பதில் 20:** கி.மு. 2000/1900 காலக்கட்டத்தில் ஆபிரகாம் மக்காவிற்குச் சென்று அங்கு காபாவை கட்டியதாக இஸ்லாம் சொல்லும் விவரம் சரித்திர சான்று அற்றது. இப்படிப்பட்ட விஷயத்தை பைபிளில் காணமுடியாது. ஆபிரகாம் தனக்கு தேவன் சொன்ன பகுதியிலே கடைசி வரை வாழ்ந்து மரித்ததாக பைபிள் சொல்கிறது. அப்பொழுது ஈசாக்கும், இஸ்மவேலும் அவரை அடக்கம் செய்த விவரத்தை பைபிளில் காணலாம்:

**ஆதியாகமம் 25:7-9**

7. ஆபிரகாம் உயிரோடிருந்த ஆயுசுநாட்கள் நூற்று எழுபத்தைந்து வருஷம்.

8. பிற்பாடு ஆபிரகாம் நல்ல நரைவயதிலும், முதிர்ந்த பூரண ஆயுசிலும் பிராணன் போய் மரித்து, தன் ஜனத்தாரோடே சேர்க்கப்பட்டான்.

9. அவன் குமாரராகிய **ஈசாக்கும் இஸ்மவேலும்** மம்ரேக்கு எதிரே ஏத்தியனான சோகாரின் குமாரனாகிய எப்பெரோனின் நிலத்திலுள்ள மக்பேலா என்னப்பட்ட குகையிலே அவனை அடக்கம்பண்ணினார்கள்.

இஸ்லாமில் அனேக சரித்திர பிழைகள் உள்ளது, அவைகளில் இதுவும் ஒன்று.



**கேள்வி 21:** இஸ்மவேல் மக்காவில் சென்று வாழ்ந்தார் என்று இஸ்லாம் சொல்கிறது, பைபிள் இதைப் பற்றி என்ன சொல்கிறது?

**பதில் 21:** இஸ்மவேலும் ஈசாக்கும் அடுத்தடுத்த பகுதிகளில் வாழ்ந்ததாக பைபிள் கூறுகிறது. இஸ்மவேலுக்கு 12 பிள்ளைகள் பிறந்து அவர்களும், குழுத்தலைவர்களாக (பிரபுக்கள்) இருந்தார்கள். இஸ்மவேல் மக்காவிற்குச் செல்லவில்லை, காபாவை கட்டவில்லை என்பது தான் உண்மை.

**ஆதியாகமம் 25:12-17**

12. சாராளுடைய அடிமைப்பெண்ணாகிய எகிப்து தேசத்தாளான ஆகார் ஆபிரகாமுக்குப் பெற்ற குமாரனாகிய **இஸ்மவேலின் வம்சவரலாறு:** 13. பற்பல சந்ததிகளாய்ப் பிரிந்த இஸ்மவேலின் புத்திரருடைய நாமங்களாவன; இஸ்மவேலுடைய மூத்த மகன் நெபாயோத்; பின்பு கேதார், அத்பியேல், மிப்சாம்,14. மிஷ்மா, தூமா, மாசா, 15. ஆதார், தேமா, யெத்தூர், நாபீஸ், கேத்மா என்பவைகளே. 16. தங்கள் கிராமங்களிலும் அரண்களிலும் குடியிருந்த தங்கள் ஜனத்தாருக்குப் பன்னிரண்டு பிரபுக்களாகிய இஸ்மவேலின் குமாரர்கள் இவர்களே, இவர்களுடைய நாமங்களும் இவைகளே. 17. இஸ்மவேலின் வயது

நூற்று முப்பத்தேழு. பின்பு அவன் பிராணன் போய் மரித்து, தன் ஜனத்தாரோடே சேர்க்கப்பட்டான்.



**கேள்வி 22:** பைபிளின் அனேக நிகழ்ச்சிகள் குர்ஆனில் வருவதினால், ஏன் நீங்கள் குர்ஆனை ஏற்பதில்லை?

**பதில் 22:** இது அருமையான கேள்வி தான். இன்று ஒரு நபர் ஒரு புத்தகத்தை எழுதி, அதில் குர்ஆனில் உள்ள 90% சதவிகித விவரங்களை சேர்த்துவிட்டு, ஒரே ஒரு விவரத்தை மட்டும் மாற்றிச் சொல்வாரானால், அதனை முஸ்லிம்கள் ஏற்பார்களா? அதுவும், அந்த புத்தகத்தில் "முஹம்மது ஒரு நபி இல்லை" என்று எழுதியுள்ளார் என்று வைத்துக்கொள்வோம்.

குர்ஆனில் உள்ள 90% விவரங்கள் இந்த புதிய புத்தகத்தில் இருந்தாலும், இஸ்லாமின் அடிப்படை கோட்பாடு, முஹம்மது அல்லாஹ்வின் நபி என்பதாகும். இதனை இந்த புதிய புத்தகம் மறுத்தால் இது ஏற்றுக்கொள்ளப்படுமா?

இதே போன்று தான் பைபிளில் உள்ள எல்லா நிகழ்ச்சிகளையும், நபிமார்கள் பற்றியும் குர்ஆனில் சேர்த்தாலும், அதனை "மாற்றாமல் சேர்த்து இருந்தால்" அதனை ஏற்கமுடியும், ஆனால் குர்ஆன் பைபிளின் பல அடிப்படை கோட்பாடுகளை புறக்கணிப்பதால், அதனை ஏற்கமுடியாது.

கள்ள ரூபாய் நோட்டுக்கும், நல்ல நோட்டுக்கும் 9 ஒற்றுமைகள் இருந்தாலும், பார்ப்பதற்கு ஒரே மாதிரியாக இருந்தாலும், ஒரே ஒரு வித்தியாசம் இருந்தால் அது கள்ள நோட்டு என்று கருதப்படுமே ஒழிய நல்ல ரூபாய் நோட்டு என்று கருதப்படாது.



**கேள்வி 23:** பைபிள் மூல மொழிகளிலிருந்து வேறு மொழிகளுக்கு மொழியாக்கம் செய்தால், அது தன் தெய்வத்தன்மையை இழந்துவிடுகின்றதல்லவா?

**பதில் 23:** இல்லை, மொழியாக்கம் செய்யும் போது, பைபிள் தன் தெய்வத்தன்மையை ஒரு போதும் இழந்துவிடாது. ஆனால், முஸ்லிம்கள் இப்படி நம்புகிறார்கள் அதாவது, குர்ஆனை மொழியாக்கம் செய்தால், அது தான் தெய்வத்தன்மையை இழந்துவிடுகிறது, அதனால் தான் அரபியிலேயே குர்ஆனை படிக்க முஸ்லிம்கள் உற்சாகப்படுத்தப்படுகிறார்கள்.

பைபிளின் படி, பைபிளில் சொல்லப்பட்ட செய்தியை மூல மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு மாற்றும் போது, அந்த செய்தியை சொன்னால் போதும், இந்த புதிய மொழியிலும் அதே மூல வார்த்தைகளைக் கொண்டுச் சொல்லவேண்டும் என்பதல்ல.

உதாரணத்திற்கு, கீழ்கண்ட வசனத்தின்(**மத்தேயு 11:28**) 'முதல் வார்த்தையை கவனிக்கவும்'. தமிழ் மொழி தான் மூல மொழி என்று வைத்துக்கொள்ளுங்கள். இந்த வசனத்தை தமிழிலிருந்து, வேறு ஒரு மொழிக்கு மொழியாக்கம் செய்கிறோம் என்று வைத்துக்கொள்ளுங்கள். அந்த புதிய மொழியில் 'வருத்தப்பட்டு' என்ற வார்த்தைக்கு 100% இணையான வார்த்தை இல்லை என்று வைத்துக்கொள்ளுங்கள். அந்த புதிய மொழியில் 'துக்கப்பட்டு' என்ற வார்த்தை தான் உள்ளது, இது தமிழின் மூல வார்த்தைக்கு 90% மட்டுமே பொருந்துகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள்.

வேறு வார்த்தை இல்லை என்பதால், "துக்கப்பட்டு..." என்று அந்த புதிய மொழியில் மொழியாக்கம் செய்தாலும், அந்த புதிய மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்ட பைபிள் தன் தெய்வத்தன்மையை இழக்காது. ஏனென்றால், அந்த வசனத்தின் சுருக்கம் என்ன? வருத்தப்பட்டோ, துக்கப்பட்டோ, இயேசுவிடம் வந்தால், அவர் அவர்களுக்கு இளைப்பாறுதலைத் தருவார் என்பதாகும்.

**மத்தேயு 11:28**

வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்.

எனவே, மொழியாக்கம் செய்யும் போது சில வார்த்தைகள் மூல மொழிக்கு சமமாக கிடைப்பதில்லை, இருந்த போதிலும் செய்தி சரியாகச் சொன்னால் போதும். வார்த்தைக்கு வார்த்தை 100% சமமான வார்த்தைகளையே பயன்படுத்தவேண்டும் என்ற கோட்பாட்டை பைபிள் நிர்ணயிக்கவில்லை. வானத்திலிருந்து குதித்த எழுத்துக்களையே இயந்திரங்களைப் போன்று மக்கள் பொருள் தெரியாமல் படிக்கவேண்டும் என்று பைபிளின் தேவன் எதிர்ப்பார்க்கவில்லை, அர்த்தம் தெரிந்து செய்தியை புரிந்து படித்து அதற்கு கீழ்படிந்தால் போதும்.

ஒரு மனிதனுக்கு எதை கீழ்படியவேண்டும், எப்படி கீழ்படியவேண்டும் என்ற செய்தி தெளிவாக தெரிந்தால் போதும், அவன் இறைவனுக்கு அருகில் வந்துவிடுவான், இது இல்லாத பட்சத்தில் பல இடைத்தரகர்கள் மனிதனுக்கும் இறைவனுக்கும் இடையில் வந்து உட்கார்ந்துக்கொள்வார்கள்.



**கேள்வி 24:** "பைபிளிலிருந்து முஹம்மதுவின் பெயர் நீக்கப்பட்டுவிட்டது" என்ற இஸ்லாமியர்கள் கூறுகிறார்களே! இது உண்மையா?

**பதில் 24:** பைபிளில் முஹம்மதுவின் பெயர் வரவேண்டிய அவசியம் என்ன? அவர் யார்? நம்மிடம் இப்போது முஹம்மதுவின் காலத்துக்கு முன்பு இருந்த பைபிளின் கையெழுத்துப் பிரதிகள் உள்ளன, அதே போன்று அவரது காலத்துக்கு பின்பு எழுதப்பட்ட கையெழுத்துப் பிரதிகளும் உள்ளன.

இந்த குற்றச்சாட்டை வைக்கும் முஸ்லிம்கள் இவ்விரு கையெழுத்துப் பிரதிகளை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளட்டும். உலகில் எந்த ஒரு முஸ்லிமாலும் இந்த காரியத்தைச் செய்யமுடியாது.



**கேள்வி 25:** இஸ்லாம் சொல்வது போன்று ஏன் கிறிஸ்தவர்கள் இயேசுவை ஒரு 'தீர்க்கதரிசி' என்று மட்டுமே பார்க்கக்கூடாது.

**பதில் 25:** உலகத்தில் குர்ஆன் மட்டுமே இருந்திருந்தால், கிறிஸ்தவர்கள் இயேசுவை வெறும் தீர்க்கதரிசி என்று மட்டும் நம்பலாம். ஆனால், குர்ஆனுக்கு முன்பாகவே பைபிள் வந்துவிட்டதே, அதுவும் குர்ஆனுக்கு 500 ஆண்டுகளுக்கு முன்பே புதிய ஏற்பாடு வந்துவிட்டதால், இயேசுவை வெறும் நபி என்று கருதமுடியவில்லை.

முஸ்லிம்களுக்கு ஒரு சவால் விடுகிறேன், யாராவது புதிய ஏற்பாட்டை படியுங்கள், அதுவும் நற்செய்தி நூல்களை மட்டுமே படித்து, 'அதில் இயேசு தன்னை நபி என்று மட்டும் சொல்கிறார்' என்று நிருபியுங்கள், அப்போது நான் 'இயேசு ஒரு நபி' என்று ஏற்றுக்கொள்ளுவேன்.

இயேசு பேசிய வார்த்தைகளை படிக்கும்போது, அவர் தன்னை இறைவனுக்கு சமமாக கருதுவதாக தெரிகிறது. இதில் எந்த ஒரு சிறிய சந்தேகத்திற்கும் இடமளிக்கவில்லை.



**கேள்வி 26:** நான் ஒரு முஸ்லீம், பைபிளை படிக்கவேண்டும் என்று விரும்புகிறேன். எங்கேயிருந்து ஆரம்பிக்கட்டும், பழைய ஏற்பாடா அல்லது புதிய ஏற்பாடா?

**பதில் 26:** நீங்கள் புதிய ஏற்பாட்டிலிருந்து ஆரம்பியுங்கள். புதிய ஏற்பாட்டின் முதல் புத்தகத்திலிருந்து படிக்க ஆரம்பியுங்கள். புதிய ஏற்பாட்டை முடித்த பிறகு நீங்கள் பழைய ஏற்பாட்டை தொடங்கலாம்.



**கேள்வி 27:** இயேசுவிற்கு இன்ஜில் கொடுக்கப்பட்டதென்று குர்ஆன் சொல்கிறது? அது ஒரு புத்தகம் தான், ஆனால் நீங்கள் ஏன் நான்கு நற்செய்திகளை வைத்திருக்கிறீர்கள்?

**பதில் 27:** முஹம்மது கி.பி. 610ல் நபியாகிறார். புதிய ஏற்பாட்டின் நான்கு நற்செய்தி நூல்கள் (மத்தேயு, மாற்கு, லூக்கா & யோவான்) கி.பி. 100க்குள் முடிவடைந்துவிட்டது. 500 ஆண்டுகளுக்கு பிறகு வந்த குர்ஆன் இயேசுவிற்கு

இன்ஜில் கொடுக்கப்பட்டது என்றுச் சொல்லும் போது, அது அனைத்து நற்செய்தி நூல்களை குறிப்பதாகத் தானே அர்த்தம்?

கிறிஸ்தவர்களைப் பார்த்து குர்ஆன் நீங்கள் இன்ஜிலை பின்பற்றுங்கள் என்று கி.பி. 610க்கு பிறகு கட்டளையிடும் போது, அவர்களிடம் உள்ள நான்கு நற்செய்தி நூல்களைத் தானே அது குறிப்பதாக அமையும்?

ஒருவேளை குர்ஆனில் எங்கேயாவது, கிறிஸ்தவர்களிடம் உள்ள நான்கு நற்செய்தி நூல்களை நான் அனுப்பவில்லை, நான் ஒன்றைத் தான் அனுப்பினேன் என்று அல்லாஹ் சொல்லியுள்ளானா? இல்லையே!

5:47. (ஆதலால்) **இன்ஜீலையுடையவர்கள்**, அதில் அல்லாஹ் இறக்கி வைத்ததைக் கொண்டு தீர்ப்பு வழங்கட்டும்; அல்லாஹ் இறக்கி வைத்ததைக் கொண்டு யார் தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள் தான் பாவிகளாவார்கள்.

இந்த வசனத்தை அல்லாஹ் இறக்கும் போது கிறிஸ்தவர்களிடம் நான்கு நற்செய்தி நூல்கள் உள்ளன என்று அவனுக்குத் தெரியவில்லையா? நிச்சயம் தெரியும், ஆனால் முஸ்லிம்கள் தான் இதனை ஏற்கமனதில்லாமல் இருக்கிறார்கள்.



**கேள்வி 28:** பைபிளில் இயேசு எங்கேயாவது தன்னை இறைவன் என்று சொன்னதுண்டா?

**பதில் 28:** அனேக இடங்களில் அவர் தன்னை இறைவன் என்று கூறியுள்ளார். இயேசுவின் கீழ்கண்ட சில வார்த்தைகளை கவனியுங்கள், இதனை ஒரு மனிதன் சொல்லமுடியுமா? என்பதை ஆய்வு செய்யுங்கள்:

- இப்றாஹீமுக்கு முன்பே தாம் இருப்பதாகச் சொன்னார். (இயேசுவிற்கும் இப்றாஹீமுக்கு இடையே 2000 ஆண்டுகள் இடைவெளி உள்ளது)
- மக்களின் பாவங்களை மன்னிக்க தமக்கு அதிகாரம் உண்டென்றுச் சொன்னார்.
- கியாம் நாளன்று உலக மக்களை நியாயம் தீர்ப்பார் என்றார்.
- மக்களுக்கு நித்திய ஜீவனைத் தருவேன் என்றார்.
- ஓய்வு நாளுக்கு தாமே ஆண்டவர் என்றார்.
- தேவாலயத்தைவிட பெரியவர் என்றார்.
- சாலொமோன் அரசரை விட பெரியவர் என்றார்.

இன்னும் சொல்லிக்கொண்டே போகலாம். மேற்கண்டவைகளை ஒரு நபி சொல்லமுடியுமா? என்றுசிந்தித்துப் பாருங்கள்.



**கேள்வி 29:** பைபிளில் ஏன் இயேசு பற்றிய அங்க அடையாளங்கள் சொல்லப்படவில்லை?

**பதில் 29:** ஒரு மனிதன் இரட்சிக்கப்படுவதற்கு என்ன தேவை? இறைவன் மனிதனாக வந்தால், அவர் என்ன சொல்கிறார்? அவர் என்ன செய்கிறார்? இவை இரண்டு தான் முக்கியமே தவிர, அவரது வெளிப்புற அடையாளங்கள் அல்ல.

**இயேசுவின் வெளித்தோற்றமும் கிறிஸ்தவர்களும்:**

ஒரு கிறிஸ்தவனிடம் 'உங்கள் இயேசு என்ன உயரம்?' என்று கேட்டுப்பாருங்கள், "எனக்கு தெரியாது" என்று பதில் வரும்.

- இயேசு என்ன கலர்? என்று கேட்டால், "எனக்கு தெரியாது" என்று பதில் வரும்.
- இயேசுவின் கண்கள் எப்படி இருக்கும்? எனக்குத் தெரியாது.
- இயேசுவின் முகம் எப்படி இருக்கும்? எனக்குத் தெரியாது.
- இயேசு மீசை வைத்திருந்தாரா? எனக்குத் தெரியாது.
- இயேசு தாடி வைத்திருந்தாரா? எனக்குத் தெரியாது.
- இயேசுவின் பேச்சு எப்படி இருக்கும்? எனக்குத் தெரியாது.
- இயேசு பொதுவாக எப்படி பேசுவார், சத்தம் உயர்த்தி பேசுவாரா? தாழ்த்திப் பேசுவாரா? எனக்குத் தெரியாது.
- இயேசு எப்படி சாப்பிடுவார்? எனக்குத் தெரியாது.
- இயேசு எப்படி தண்ணீர் குடிப்பார்? எனக்குத் தெரியாது

இயேசுவின் வெளித்தோற்றம் பற்றி எந்த கேள்வியைக் கேட்டாலும் எனக்குத் தெரியாது என்றுச் சொல்கிறீர்களே! கிறிஸ்தவர்களே! இயேசுவைப் பற்றி என்னத்தான் தெரியும் உங்களுக்கு!?

இயேசுவே வழியும், சத்தியமும் ஜீவனுமாய் இருக்கிறார் என்றுத் தெரியும் என்று கிறிஸ்தவர்கள் பதில் சொல்வார்கள். மனிதன் இரட்சிக்கப்பட எவைகளை பதிவு செய்யவேண்டுமோ, அதை மட்டுமே பைபிள் பதிவு செய்துள்ளது, மற்றவைகள் தேவையில்லை.

இதைப் பற்றிய ஒரு கட்டுரையை இங்கு படியுங்கள்: **இயேசுவின் ஹலால், முஹம்மதுவின் ஹராம் 6: முஹம்மது என்னும் முஸ்லிம்களின் விக்கிரகம்**



**கேள்வி 30:** மத நல்லிணக்கத்திற்காக, குர்ஆனை உங்கள் ஞாயிறு ஆராதனையில் வாசிக்க அனுமதி கொடுப்பீர்களா?

**பதில் 30:** நீங்கள் மத நல் இலக்கணத்திற்காக உங்கள் வெள்ளிக்கிழமை தொழுகையில் மசூதிகளில், பைபிளிலிருந்து முக்கியமாக புதிய ஏற்பாட்டிலிருந்து சில வசனங்களை படிப்பீர்களா?



**கேள்வி 31:** நான் பைபிளை மூல மொழியில் படிக்காமல், தமிழில் படிப்பதினால் என் முஸ்லிம்கள் நண்பர் என்னை குற்றப்படுத்துகிறார். இதற்கு என்ன பதில் சொல்வது?

**பதில் 31:** வேதங்களை மூல மொழியில் படிப்பதால் எந்த தவறும் இல்லை, ஆனால் அதனால் என்ன பயன்?

பைபிள் என்பது தேவன் நமக்காக கொடுத்திருக்கும் வேதம், அதனை படிக்கவேண்டும், கேட்கவேண்டும், கீழ்படியவேண்டும்.

நாம் வேதம் சம்மந்தப்பட்டு எதை செய்தாலும், அது நமக்கு புரியவேண்டும், கண்மூடித்தனமாக எதையும் செய்யக்கூடாது.

வெளி 1:3. இந்தத் தீர்க்கதரிசன **வசனங்களை வாசிக்கிறவனும், கேட்கிறவர்களும்**, இதில் எழுதியிருக்கிறவைகளைக் **கைக்கொள்ளுகிறவர்களும்** பாக்கியவான்கள், காலம் சமீபமாயிருக்கிறது.

கீழ்படியவேண்டுமென்றால் புரியவேண்டுமல்லவா? புரியாமல் படித்தல் எப்படி கீழ்படியமுடியும்?

மூல மொழியில் படித்தால் தான் நல்லது என்று சொல்லும் வாதத்தில் உள்ள வேடிக்கை என்னவென்றால், "கட்டளை இன்னதென்று புரியவில்லையென்றால் அதற்கு எப்படி கீழ்படிவது"? சுவரில்லாமல் சித்திரம் வரைய முயலும் மடமைக்கு சமமாகும் இது.

பைபிளின் மூல மொழிகளாகிய எபிரேயம், கிரேக்கம் போன்றவைகளை படிக்க மட்டும் கற்றுக்கொண்டு, பைபிளின் வசனங்களின் பொருளை புரிந்துக்கொள்ளாமல் படித்தால் ஒரு பயனும் இல்லை. மேலும், எல்லா மக்களுக்கும் எபிரேய மற்றும் கிரேக்க மொழிகளை கற்றுக்கொடுக்க முயலுவது முட்டாள் தனமான செயலாகும்.

[யார் வேதாகம கல்லூரியில் படிக்கிறார்களோ, யாருக்கு எபிரேய, கிரேக்க மொழி கற்றுக்கொள்ளவேண்டும் என்று ஆர்வமுள்ளதோ, அவர்கள் மூல மொழிகளை கற்பது நல்லது. ஆனால், சாதாரண மக்கள் மூல மொழியை நிச்சயம் கற்கவேண்டும் என்றுச் சொல்வது சரியானது அல்ல]

இந்த முட்டாள் தனத்தை சில பொய்யான மதங்கள் செய்கின்றன, உதாரணத்திற்கு, இஸ்லாமைச் சொல்லலாம், அரபியில் குர்ஆனை படித்தால் தான் நன்மை என்று இஸ்லாம் சொல்கிறது, இந்திய முஸ்லிம்களில் 99% சதவிகித முஸ்லிம்களுக்கு அரபி தெரியாது. இவர்களில் அனேகர் அரபியை படிக்க மட்டும் கற்றுக்கொண்டு, குர்ஆனை படிக்கிறார்கள்.

கிறிஸ்தவம் உண்மையான மார்க்கம் ஆகும். நம் தேவனுக்கு உலகில் உள்ள அனைத்து மொழிகளும் தெரியும், அவரிடம் ஜெபிக்கும் போது, ஆராதிக்கும் போது நமக்கு என்ன மொழி தெரியுமோ அதனை பயன்படுத்தினால் போதுமானது.

எனவே, உங்கள் முஸ்லிம் நண்பரிடம் சென்று, "நாங்கள் தான் சரியான வழியில் வேதத்தை படிக்கிறோம், நீங்கள் செய்வது தவறானது என்றுச் சொல்லுங்கள்".

**குறிப்பு:** எந்த உலக மதங்களில் மூல மொழிக்கு முக்கியத்துவம் கொடுத்து, சாதாரண மக்கள் கூட அதே மூலமொழியில் மந்திரங்களை, ஸூராக்களை ஓதினால் தான் அது சாமியைச் சென்று அடையும், அல்லாஹ்வை அடையும் என்று சொல்கிறார்கள், அம்மார்க்கங்களில் அனேக ஏமாற்றுவேலைகள் நடக்கும்.

அப்படிப்பட்ட மதங்களை பின்பற்றும் மக்கள் அறியாமையிலேயே இருப்பார்கள், கேள்வி கேட்கமாட்டார்கள். புரிந்தால் தானே மனிதன் கேள்வி கேட்பான், ஒன்றுமே புரியவில்லையென்றால், கேள்வி கேட்காமல், தலையாட்டிக்கொண்டே இருப்பான். இந்த நிலை கிறிஸ்தவத்தில் இல்லை.

பைபிள் போதிக்காத ஒன்றை ஒரு போதகர் போதிக்கிறார் என்று வைத்துக்கொள்வோம், உடனே அடுத்த நாளே யுடியூபில் அந்த போதகருக்கு எதிராக அனேக கேள்விகள் குவியும் ஏன்? என்று இப்போது புரிகின்றதா?

மேலும், அந்த கேள்விகளை கேட்பவர்கள் சாதாரண விசுவாசிகளாக இருப்பதற்கு காரணம்! நமக்கு தெரிந்த மொழியில் நம் வேதத்தை வாசிப்பதினால் தான். இஸ்லாமிலும் சரி, இந்து மதத்திலும் சரி, இது சாத்தியமில்லை ஏனென்றால், அனேகருக்கு சமஸ்கிருதமும், அரபியும் தெரியாமல் இருப்பது தான்.



**கேள்வி 32:** பைபிள் விதியை ஆதரிக்கிறது என்று என் இஸ்லாமிய நண்பர் கூறுகிறார்? இது உண்மையா?

**பதில் 32:** ஒரு வார்த்தையில் இதற்கு பதில் சொல்வதாக இருந்தால், "பைபிள் விதியை நம்புவதில்லை, கிறிஸ்தவ இறையியலில் விதி என்ற கோட்பாடு இல்லை" என்பதாகும். இஸ்லாம் விதியை நம்புவதினால், உங்கள் இஸ்லாமிய நண்பர் இப்படி சொல்கிறார். மேலும், பைபிளின் சில வசனங்களை தனியாக எடுத்து முஸ்லிம்கள் தங்களுக்கு ஏற்றபடி பொருள் கூறுவதினால், சாதாரண முஸ்லிம்கள் விதியை பைபிள் ஆதரிக்கிறது என்று தவறாக நம்பிவிடுகிறார்கள்.

தேவைப்படும் போது விதியைப் பற்றி வேறு கேள்விகளில் பதில்களை காண்போம்.



**கேள்வி 33:** பைபிள் மறுமணத்தை ஆதரிக்கிறதா?

**பதில் 33:** ஆம், பைபிள் மறுமணத்தை ஆதரிக்கிறது.

மறுமணம் என்று வரும் போது, அதற்கு முன்பாக இரண்டு காரியங்கள் நடந்திருக்கவேண்டும். முதலாவது திருமணம், அடுத்ததாக, விவாகரத்து அல்லது ஒரு துணையின் மரணம்.

**a) விவாகரத்து நியாயமானதாக இருந்தால், மறுமணம் அனுமதிக்கப்பட்டதே:**

இயேசு விவாகரத்து பற்றி மிகவும் கடினமாக கட்டளையிட்டார், அதாவது தம்பதிகளில் யாராவது ஒருவர் இன்னொருவருக்கு நம்பிக்கைத் துரோகம் இழைத்துவிட்டால் தான் விவாகரத்து செய்யவேண்டும், வேறு எந்த காரணத்திற்காகவும் விவாகரத்து செய்யக்கூடாது என்றார். தன் துணைக்கு எதிரான நம்பிக்கை துரோகம் என்பது, “வேசித்தன பாவமாகும்”.

**மத்தேயு 5:**

31. தன் மனைவியைத் தள்ளிவிடுகிற எவனும், தள்ளுதற்சீட்டை அவளுக்கு கொடுக்கக்கடவன் என்று உரைக்கப்பட்டது.

32. நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; வேசித்தன முகாந்தரத்தினாலொழிய தன் மனைவியைத் தள்ளிவிடுகிறவன், அவளை விபசாரஞ் செய்யப்பண்ணுகிறவனாயிருப்பான்; அப்படித் தள்ளிவிடப்பட்டவளை விவாகம்பண்ணுகிறவனும் விபசாரஞ்செய்கிறவனாயிருப்பான்.

மேலே இயேசு சொன்ன வசனங்களில் அடங்கியிருக்கின்ற ஒரு சத்தியம் என்ன தெரியுமா? விவாகரத்து நியாயமானதாக இருந்தால் (ஒருவர் தன் துணைக்கு எதிரான வேசித்தன பாவம் செய்திருந்தால்), விவாகரத்து பெறலாம் மற்றும் மறுமணமும் செய்யலாம் என்பதாகும். "பைபிளின் அடிப்படையில்" விவாகரத்து நடந்திருந்தால், மறுமணமும் அனுமதிக்கப்பட்டதே என்று இயேசு கூறுகின்றார்.

**b) துணை மரித்துவிட்டால் மறுமணம் அனுமதிக்கப்பட்டதே:**

மறுமணம் பற்றி மேலே கண்டது முதலாவது காரணமாகும், இரண்டாவதாக, துணை மரித்துவிட்டால், அடுத்தவர் 'மறுமணம் செய்ய விடுதலையாக்கப்படுகின்றார்'. இதனை கீழ்கண்ட வசனங்களில் காணலாம்.

**ரோமர் 7:**

2. அதெப்படியென்றால், புருஷனையுடைய ஸ்திரீ தன் புருஷன் உயிரோடிருக்குமளவும் நியாயப்பிரமாணத்தின்படியே அவனுடைய

நிபந்தனைக்கு உட்பட்டிருக்கிறாள்; **புருஷன் மரித்த பின்பு புருஷனைப்பற்றிய பிரமாணத்தினின்று விடுதலையாயிருக்கிறாள்**.

3. ஆகையால், புருஷன் உயிரோடிருக்கையில் அவள் வேறொரு புருஷனை விவாகம்பண்ணினால் விபசாரியென்னப்படுவாள்; **புருஷன் மரித்தபின்பு அவள் அந்தப் பிரமாணத்தினின்று விடுதலையானபடியால்**, வேறொரு புருஷனை விவாகம்பண்ணினாலும் விபசாரியல்ல.

எனவே, கிறிஸ்தவத்தில் மறுமணம் தேவனால் அனுமதிக்கப்பட்டுள்ளது.

குறிப்பு: சில கிறிஸ்தவர்கள், ஒரு துணை மரித்துவிட்டால் அல்லது விவாகரத்து செய்துவிட்டால் மற்றவர் திருமணம் செய்யாமல் வாழ்நாள் முழுவதும் அப்படியே வாழவேண்டும் என்று போதிக்கிறார்கள். இந்த போதனை மேலேயுள்ள வசனங்களுக்கு எதிரானவைகளாகும். நான் மேலே காட்டிய வசனங்கள் புதிய ஏற்பாட்டிலிருந்து எடுத்தவைகள் என்பதை கவனிக்கவும். பழைய ஏற்பாட்டிலும் மறுமணம் உண்டு, ஆனால், புதிய ஏற்பாட்டில் இயேசு பல நிபந்தனைகளை திருமணம், விவாகரத்து மற்றும் மறுமணம் பற்றி சேர்த்துள்ளார். எனவே தான் புதிய ஏற்பாட்டிலிருந்து வசனங்களை மேற்கோள் காட்டினேன்.



**கேள்வி 34:** புதிய ஏற்பாட்டில் ஏன் பல புத்தகங்களுக்கு ஊர் பெயர்கள் வைக்கப்பட்டுள்ளது?

**பதில் 34:** நான் முதன் முதலாக புதிய ஏற்பாட்டை படித்த காலத்தில் இதே சந்தேகம் எனக்கு வந்தது.

புதிய ஏற்பாட்டின் சில புத்தகங்களுக்கு கொடுக்கப்பட்ட ஊர் பெயர்கள் பற்றி தெரிந்துக்கொள்ளும் இதே நேரத்தில், புதிய ஏற்பாட்டின் 27 புத்தகங்களின் பெயர்களையும் சிறிது அறிந்துக்கொள்ளலாம்.

கீழ்கண்ட அட்டவணையில், ஒவ்வோரு புதிய ஏற்பாட்டின் புத்தகத்தின் பெயர்க்காரணம் கொடுக்கப்பட்டுள்ளது.

| புதிய ஏற்பாடு - புத்தகங்கள் | | |
|---|---|---|
| **வகைகள்** | **புத்தகங்கள்** | **புத்தக பெயர்க் காரணம்** |
| **சுவிசேஷங்கள்** | 1. மத்தேயு<br>2. மாற்கு<br>3. லூக்கா<br>4. யோவான் | இயேசுவின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய சீடர்களின் பெயர்கள். |
| **சரித்திரம்** | 5. அப்போஸ்தலருடைய நடபடிகள் | சீடர்களின் (அப்போஸ்தலர்களின்) ஊழிய விவரங்கள் |
| **சபைகளுக்கு கடிதங்கள்** | 6. ரோமர்<br>7. 1 கொரிந்தியர்<br>8. 2 கொரிந்தியர்<br>9. கலாத்தியர்<br>10. எபேசியர்<br>11. பிலிப்பியர்<br>12. கொலோசெயர்<br>13. 1 தெசலோனிக்கேயர்<br>14. 2 தெசலோனிக்கேயர் | ஆரம்பகால கிறிஸ்தவ சபைகள் இருந்த பட்டணங்களின் பெயர்கள். இப்பட்டணங்களில் உள்ள சபை அங்கத்தினர்களுக்கு கடிதங்கள் எழுதப்பட்டன. எனவே, அக்கடிதங்களுக்கு /புத்தகங்களுக்கு அவ்வூர்களின் பெயர்களே சூட்டப்பட்டன. |
| **சபை தலைவர்களுக்கு கடிதங்கள்** | 15. 1 தீமோத்தேயு<br>16. 2 தீமோத்தேயு<br>17. தீத்து<br>18. பிலேமோன் | கிறிஸ்தவசபை அங்கத்தினர்களுக்கு & தலைவர்களுக்கு தனிப்பட்ட கடிதங்கள் எழுதப்பட்டன. யாருக்கு கடிதங்கள் எழுதப்பட்டதோ அவர்களின் பெயர்கள் |
| **குழுக்களுக்கு கடிதங்கள்** | 19. எபிரெயர்<br>20. யாக்கோபு<br>21. 1 பேதுரு<br>22. 2 பேதுரு<br>23. 1 யோவான்<br>24. 2 யோவான்<br>25. 3 யோவான்<br>26. யூதா | பல கிறிஸ்தவ சபைகளுக்கு & குழுக்களுக்கு கடிதங்கள் எழுதப்பட்டன. |
| **தீர்க்கதரிசன புத்தகம்** | 27. வெளிப்படுத்தின விசேஷம் | இயேசுவின் சீடர் யோவானுக்கு வெளிப்படுத்தப்பட்ட கடைசி கால நிகழ்வுகள் |
| | | www.answering-islam.org/tamil |



**கேள்வி 35:** முஹம்மது தம் வாழ்நாளில் ஒருமுறையாவது தௌராத்தை (தோரா, ஐந்தாகமங்களை) பார்த்திருக்கிறாரா?

**பதில் 35:** ஆமாம், அபூ தாவூத் ஹதீஸின் படி, முஹம்மது தோராவை (தௌராத்தை) பார்த்து இருக்கிறார்.

முஹம்மது தோராவைப் பற்றி என்ன கருதுகின்றார் என்பதை கீழ்கண்ட ஹதீஸ் நமக்கு தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. சில முஸ்லிம்கள், தோரா

மாற்றப்பட்டுவிட்டது என்று தவறாக குற்றம் சாட்டுகிறார்கள், அப்படிப்பட்டவர்கள், முஹம்மது தோராவை எப்படி கையாண்டார் என்பதை முதலாவது தெரிந்துக் கொள்ளவேண்டும்.

முஹம்மதுவும் தோராவும்

சுனான் அபூ தாவுத் புத்தகம் 38 (கிதாப் அல் ஹுதுத், நிர்ணயிக்கப்பட்ட தண்டனைகள்), எண் 4434 (ஆங்கில எண்):

**இப்னு உமர் அறிவித்ததாவது:**

ஒரு குறிப்பிட்ட யூத குழுவினர் வந்து அல்லாஹ்வின் தூதரை (அவர் மீது சாந்தி உண்டாகட்டும்) "குஃப்" என்ற இட்த்திற்கு வரும்படி அழைப்பு விடுத்தனர். இறைத்தூதரும் அவர்களின் இடத்திற்கு (பள்ளிக்கு) சென்றார்.

அவர்கள் இறைத்தூதரிடம் "அபூல் காசிம் அவர்களே, எங்களைச் சார்ந்த ஒரு மனிதன் ஒரு பெண்ணோடு விபச்சாரம் செய்துவிட்டான், எனவே, அவனுக்கு என்ன தண்டனை கொடுக்கவேண்டுமோ அதனை கொடுங்கள் என்று கேட்டார்கள். இறைத்தூதர் (அவர் மீது சாந்தி உண்டாகட்டும்) உட்காருவதற்கு ஒரு மென்மையான மெத்தையை அவர்கள் போட்டு இருந்தார்கள், அதன் மீது இறைத்தூதர் உட்கார்ந்தார்கள், மேலும் "**தோராவை கொண்டு வாருங்கள்**" என்று இறைத்தூதர் கூறினார்கள். அவரிடம் தோரா கொண்டு வரப்பட்ட்து. அப்போது அவர் அந்த மெத்தையிலிருந்து எழுந்தார், மேலும் அந்த மெத்தையின் மீது தோராவை வைத்து, "**நான் உன் (தோரா) மீது நம்பிக்கை கொள்கிறேன் மேலும் உன்னை அனுப்பியவர் மீதும் நம்பிக்கை கொள்கிறேன்" என்று கூறினார் (I believed in thee and in Him Who revealed thee)**.

அதன் பிறகு இறைத்தூதர் அவர்கள், உங்களில் படித்த ஒரு நபரை அழைத்து வாருங்கள் என்று கூறினார். ஒரு படித்த வாலிபர் கொண்டு வரப்பட்டார்.

நஃபியின் மாலிக் என்பவர் அறிவித்த கல்லெரிதல் தண்டனை போன்றதோரு விவரங்களே இந்த அறிவிப்பாளரும் இந்த ஹதீஸோடு அறிவித்தார்.

இந்த ஹதீஸின் படி, முஹம்மதுவின் காலத்தில் தோரா மாற்றப்படாமல் பாதுகாக்கப்பட்டு இருந்தது என்று தெரியவில்லையா?

**இந்த ஹதீஸின் படி நாம் கீழ்கண்ட விவரங்களை அறிந்துக்கொள்கிறோம்:**

1. முஹம்மது வாழ்ந்த காலத்தில், அதிகார பூர்வமான தோரா பரவலாக பயன்படுத்தப்பட்டு இருந்திருக்கின்றது. அன்று முஹம்மது அவர்களின் இருந்த பிரதியானது தங்களிடம் இருந்த பிரதிக்கு வேறுபடுகிறது என்றுச் சொல்லி யூதர்கள் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை. உண்மையைச் சொன்னால், இந்த தோரா பிரதியானது யூதர்களின் பிரதியாகவே இருந்திருக்கவேண்டும், ஏனென்றால்,

முஹம்மதுவோ அல்லது அவரது அரபி சகாக்களோ தோராவை படிக்கத் தெரியாதவர்களாக இருந்தனர். இந்த தோரா தான் இறைவனின் பிழையற்ற வார்த்தை. அல்லாஹ்வின் பிழையற்ற வார்த்தைகளில் எந்த ஒரு மாற்றமும் இல்லை (பார்க்க குர்-ஆன் 10:94).

2. தன்னிடம் கேள்வி கேட்ட போது முஹம்மது பரிசுத்த வேதத்தை என்னிடம் கொண்டு வாருங்கள் என்று கூறினார், இது இக்கால இஸ்லாமியர்களுக்கு ஒரு உதாரணமாக இருக்கிறது. மேலும் தான் உட்கார்ந்து இருந்த மெத்தையிலிருந்து எழுந்து, அந்த மெத்தையின் மிது தோராவை வைத்தார் என்பதை இங்கு கவனிக்கவேண்டிய முக்கியமான விஷயமாக இருக்கிறது. முஹம்மது செய்தது போலத் தான் ஒவ்வொரு உண்மையான முஸ்லிமும், அல்லாஹ்வின் முந்தைய வேதங்களை கனப்படுத்தவேண்டும்.

3. உங்கள் இறைத்தூதர் முஹம்மது இவ்விதமாக கூறினார்: "நான் உன் (தோரா) மீது நம்பிக்கை கொள்கிறேன் மேலும் உன்னை அனுப்பியவர் மீதும் நம்பிக்கை கொள்கிறேன்" (I believed in thee and in Him Who revealed thee) .

இந்த வார்த்தைகள் நம் அனைவரின் கவனத்தையும் ஈர்க்கும் வார்த்தைகளாக உள்ளது. அதாவது நாம் அனைவரும் பைபிளை விசுவாசிக்கவேண்டும். முஹம்மதுவின் உதாரணத்தை பின்பற்றவேண்டும் என்று நம்புகிற முஸ்லிம்கள் இப்படியே செய்யவேண்டும். இப்போது என்னிடம் "ஆனால், தீமோத்தேயு அவர்களே, இன்று நம்மிடம் அதிகார பூர்வமான தோரா இல்லையே" என்று அறியாமையில் என்னிடம் கேள்விகளை கேட்கவேண்டாம். ஏனென்றால், உங்கள் இறைத்தூதர் முஹம்மதுவிற்குக் தெரிந்ததை விட உங்களுக்கு அதிகமாக தெரியுமா? பல நூற்றாண்டுகளாக ஒவ்வொரு வம்சமாக பாதுகாக்கப்பட்டு, தன்னுடைய காலத்தில் தன் கையில் கிடைத்த பரிசுத்த இறை வார்த்தைகள் பற்றி உயர்வாக பேசி உங்கள் முஹம்மது அவர்களே அவைகளை கனப்படுத்தியுள்ளார். அப்படி இருக்கும் போது, அவரை விட சிறந்தவர்களாக நீங்கள் உங்களை கருதுகிறீர்களோ? மேலும் தற்போது நம்மிடமுள்ள பிரதிகள், முஹம்மதுவின் காலத்தில் இருந்த பிரதிகளோடு ஒத்திருப்பதை நாம் அகழ்வாராய்ச்சி மற்றும் தொல்பொருள் ஆராய்ச்சியின் மூலமாக அறிந்துக்கொள்ளலாம்.

மூலம் : முஹம்மதுவும் தோராவும் - **https://www.answering-islam.org/tamil/bible/mhd_torah.html**



**கேள்வி 36:** முஹம்மது தம் வாழ்நாளில் ஒருமுறையாவது புதிய ஏற்பாட்டை பார்த்திருக்கிறாரா?

**பதில் 36:** எனக்கு தெரிந்தவரை, முஹம்மது புதிய ஏற்பாட்டை பார்த்ததாக ஹதீஸ்களில் விவரங்கள் இல்லை.

ஆனால், முஹம்மது தாம் நபியாக நியமிப்பதற்கு முன்பு சிரியா போன்ற நாடுகளுக்கு வியாபார பயணம் பல முறை செய்துள்ளார். இந்த பயணங்களில் அவர் அனேக கிறிஸ்தவர்களையும், யூதர்களையும் சந்தித்து இருந்துள்ளார். வாய் வழியாக பல பைபிளின் நிகழ்ச்சிகளை அவர் கேள்விபட்டு இருக்கிறார்.

அந்த பயணங்களின் போது, அவர் புதிய ஏற்பாட்டையோ, அல்லது அதன் சில புத்தகங்களையோ பார்த்திருக்க வாய்ப்பு இருக்கிறது.

முக்கியமாக, குர்ஆனில் பதிவு செய்யப்பட்டுள்ள பைபிளின் நிகழ்ச்சிகளை கவனித்தால், அவர் அனேக கட்டுக்கதைகளை, தள்ளுபடி ஆகமங்களின் கதைகளை கேட்டு இருக்கிறார் என்று உறுதியாகச் சொல்லமுடியும். இயேசு சிறுவனாக இருந்த போது, கலிமண்ணினால் ஒரு பறவையைச் செய்து, அதற்கு உயிர்க்கொடுத்த நிகழ்ச்சி, கி.பி. இரண்டாம் நூற்றாண்டுகளில் உருவாக்கப்பட்ட கள்ள உபதேச கதையாகும், இதனை புதிய ஏற்பாட்டில் காணமுடியாது, ஆனால் 'தள்ளுபடி ஆகமங்களிலும், குர்ஆனிலும் காணலாம்'.

ஆகவே, ஒன்று மட்டும் தெளிவாகத் தெரிகின்றது, அது என்னவென்றால், முஹம்மது புதிய ஏற்பாட்டை பார்த்தும் இருக்கலாம், பார்க்காமலும் இருந்திருக்கலாம், ஆனால் பல பைபிளின் நிகழ்சிகளை அவர் வாய் வழியாக கேட்டுள்ளார், மற்றும் தள்ளுபடி ஆகமங்களின் கதைகளை உண்மையென்றும் நம்பியுள்ளார்.



**கேள்வி 37:** இயேசுவிற்கு நீண்ட தலைமுடி உள்ளது போன்று வரைபடங்கள் மற்றும் இதர படங்களில் காட்டுகிறார்களே, இது உண்மையா?

**பதில் 37:** இல்லை, இது உண்மையில்லை. இயேசுவின் உருவமும், அவரது வெளித்தோற்றமும் இன்னது என்று நற்செய்தி நூல்களில் எங்கும் காணமுடியாது.

ஓவியர்கள் தோராயமாக இயேசுவின் வெளிப்புறத் தோற்றத்தை தங்கள் கற்பனையின் படி வரைந்துவிட்டு சென்றுவிட்டார்கள், ஆனால் இது பைபிளின் படி சரியானதல்ல. 2000 ஆண்டுகளுக்கு முன்பு மக்கள் பெரும்பான்மையாக நம்மைப்போன்று நன்றாக கட்டிங் செய்துக்கொண்டு டிப்டாப்பாக இருக்கமாட்டார்கள் என்ற எண்ணத்தில் இப்படி வரைந்துவிட்டு சென்றுள்ளார்கள், அவ்வளவு தான்.

இயேசுவின் மற்றும் முஹம்மதுவின் வெளிப்புற தோற்றம் பற்றி ஒரு சிறிய கட்டுரையை கடந்த ஆண்டு எழுதியிருந்தேன், அதிலிருந்து ஒரு பகுதியை இங்கு பதிக்கிறேன்.

**இயேசுவின் வெளித்தோற்றமும் கிறிஸ்தவர்களும்:**

ஒரு கிறிஸ்தவனிடம் 'உங்கள் இயேசு என்ன உயரம்?' என்று கேட்டுப்பாருங்கள், "எனக்கு தெரியாது" என்று பதில் வரும்.

- இயேசு என்ன கலர்? என்று கேட்டால், "எனக்கு தெரியாது" என்று பதில் வரும்.
- இயேசுவின் கண்கள் எப்படி இருக்கும்? எனக்குத் தெரியாது.
- இயேசுவின் முகம் எப்படி இருக்கும்? எனக்குத் தெரியாது.
- இயேசு மீசை வைத்திருந்தாரா? எனக்குத் தெரியாது.
- இயேசு தாடி வைத்திருந்தாரா? எனக்குத் தெரியாது.
- இயேசுவின் பேச்சு எப்படி இருக்கும்? எனக்குத் தெரியாது.
- இயேசு பொதுவாக எப்படி பேசுவார், சத்தம் உயர்த்தி பேசுவாரா? தாழ்த்திப் பேசுவாரா? எனக்குத் தெரியாது.
- இயேசு எப்படி சாப்பிடுவார்? எனக்குத் தெரியாது.
- இயேசு எப்படி தண்ணீர் குடிப்பார்? எனக்குத் தெரியாது

இயேசுவின் வெளித்தோற்றம் பற்றி எந்த கேள்வியைக் கேட்டாலும் எனக்குத் தெரியாது என்றுச் சொல்கிறீர்களே! கிறிஸ்தவர்களே! இயேசுவைப் பற்றி என்னத்தான் தெரியும் உங்களுக்கு!?

இயேசுவே வழியும், சத்தியமும் ஜீவனுமாய் இருக்கிறார் என்றுத் தெரியும் என்று கிறிஸ்தவர்கள் பதில் சொல்வார்கள்.

முஹம்மதுவின் வெளித்தோற்றமும் முஸ்லிம்களும்:

ஒரு முஸ்லிமிடம் 'உங்கள் முஹம்மது என்ன உயரம்?' என்று கேட்டுப்பாருங்கள், உடனே அதற்கு பதில் வரும்.

- முஹம்மது என்ன கலர்? என்று கேட்டால்? உடனே பதில் வரும்.
- முஹம்மதுவின் கண்கள் எப்படி இருக்கும்? உடனே பதில் வரும்.
- முஹம்மதுவின் முகம் எப்படி இருக்கும்? உடனே பதில் வரும்.
- முஹம்மது மீசை வைத்திருந்தாரா? உடனே பதில் வரும்.
- முஹம்மது தாடி வைத்திருந்தாரா? உடனே பதில் வரும்.
- முஹம்மதுவின் பேச்சு எப்படி இருக்கும்? உடனே பதில் வரும்.
- முஹம்மது பொதுவாக எப்படி பேசுவார், சத்தம் உயர்த்தி பேசுவாரா? தாழ்த்திப் பேசுவாரா? உடனே பதில் வரும்.
- முஹம்மது எப்படி சாப்பிடுவார்? உடனே பதில் வரும்.
- முஹம்மது எப்படி தண்ணீர் குடிப்பார்? உடனே பதில் வரும்.
- முஹம்மது எப்போது வலதுகை பயன்படுத்துவார், எப்போது இடதுகை பயன்படுத்துவார்? என்று கேள்வி கேட்டால், உடனே பதில் வரும்.

இப்படி, முஹம்மதுவின் புறத்தோற்றம் மற்றும் அவருடைய அசைவுகள் அனைத்தையும் (நன்கு இஸ்லாமை அறிந்த) முஸ்லிம்கள் அறிவார்கள். அவர்கள் மிகவும் பெருமையாக, 'எங்கள் இறைத்தூதரின் ஒவ்வொரு அங்க அடையாளமும்

பதிவு செய்யப்பட்டுள்ளது. அதனைக் கொண்டு நாங்கள் அவரின் உண்மை உருவத்தை வரைய முடியும். இப்படிப்பட்ட விவரங்களை சரித்திரத்தில் வேறு எந்த நபர் பற்றியும் பதிவு செய்யப்படவில்லை.' என்றும் சொல்லுவார்கள்.

இயேசுவை நேசித்த சீடர்கள் ஏன் அவருடைய அங்க அடையாளங்களை உலகிற்கு சொல்லாமல் சென்றுவிட்டார்கள்?

இயேசுவை தங்கள் உயிரினும் மேலாக நேசித்த சீடர்கள் ஏன் அவருடைய அங்க அடையாளங்களை, அவருடைய வெளிப்புற செயல்களைப் பற்றி நமக்குச் சொல்லவில்லை? யாராவது இப்படி செய்வார்களா? நான்கு நற்செய்தி நூல்களை எழுதியவர்களில் ஒருவர் கூடவா? இயேசுவின் வெளிப்புற தோற்றம் பற்றி எழுதவில்லை! ஆச்சரியமாக இருக்கிறது? இயேசுவிற்கு பிறகு அவருடைய தாய் மரியாள், அனேக ஆண்டுகள் வாழ்ந்திருந்தார்கள். அவர்களிடம் இயேசுவின் குழந்தை மற்றும் இளமைப் பருவம் பற்றி பல கேள்விகளை சீடர்கள் கேட்டு பல சுவாரசியமான விவரங்களை அறிந்துக்கொண்டு இருந்திருப்பார்கள். ஆனாலும், எந்த ஒரு சுவிசேஷத்திலும் அவருடைய குழந்தை பருவத்தின் விவரங்களை எழுதவில்லை. ஏன் இப்படி தங்களுக்கு தெரிந்திருந்த செய்திகளையும் சீடர்கள் எழுதவில்லை?

**இயேசுவின் நற்செய்தி முக்கியத்துவம் பெறவேண்டுமே ஒழிய, அவரின் அங்க அடையாளங்கள் அல்ல:**

மக்கள் இரட்சிக்கப்படுவதற்கு அவர்களுக்கு என்ன வேண்டும்? இயேசுவின் நற்செய்தியா? போதனையா? அல்லது அவரின் அங்க அடையாளங்களா? பரிசுத்த ஆவியானவர் சீடர்களைக் கொண்டும், அவர்களின் சீடர்களைக் கொண்டும் புதிய ஏற்பாட்டை எழுதும் போது, இயேசுவின் உலக சரீரத்தைப் பற்றிய அங்க அடையாளங்களை எழுத விரும்பவில்லை, அதனை அவர் தடுத்துவிட்டார்.

எந்த மனிதனானாலும் சரி, தான் உயிரினும் மேலாக நேசிக்கும் குருவைப் பற்றிய வாழ்க்கை வரலாற்றை எழுதும் போது, அவரது அங்க அடையாளங்கள், அவரது பழக்கங்கள் போன்றவற்றைப் பற்றி நிச்சயம் எழுதுவார். ஆனால், இயேசுவின் விஷயத்தில் மட்டும் ஒரு விதிவிலக்கு அளிக்கப்பட்டது.

புதிய ஏற்பாட்டின் 27 புத்தகங்களில், பல்லாயிரக்கணக்கான வசனங்களில் ஒரு இடத்திலும் அவரது தோல் கலர், உயரம், முகம் போன்ற எந்த அடையாளத்தையும் எழுதவில்லை. இது தான் புதிய ஏற்பாடு வேதம் என்பதற்கு இன்னொரு நிரூபனம். இயேசு தன்னைப் பற்றி இப்படியெல்லாம் எழுதவேண்டும் என்று விரும்பவில்லை, அவைகள் உலக மக்களுக்குத் தேவையும் இல்லை என்பதை அவர் உணர்ந்திருந்ததால், அதனை தடுத்துப்போட்டார்.

இயேசு தன் வெளிப்புற தோற்றத்தை மக்கள் அணுவணுவாக பின்பற்றாமல், தான் காட்டிய வழியில் நடக்கவும், தான் போதித்த சத்தியத்தை பின்பற்றவும், அதன் மூலம் தான் கொடுக்கும் ஜீவனை பெறவுமே இயேசு விரும்பினார்.

மேற்கண்ட கட்டுரையின் தொடர்ச்சியை இந்த தொடுப்பில் படிக்கவும்: **https://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/2019ramalan/2019-ramalan-6.html**



**கேள்வி 38:** ஆண் நபிகளை மட்டுமே அல்லாஹ் அனுப்பியதாக குர்ஆன் சொல்கிறது, ஆனால் பைபிளில் பெண் நபிகள் கூட இருப்பதாக கேள்விப்பட்டேன், இது எப்படி சாத்தியமாகும்?

**பதில் 38:** இதற்கான பதிலை ஏற்கனவே ஒரு கட்டுரையில் விளக்கியுள்ளேன், அதனை இங்கு பதிக்கிறேன்.

குர்ஆனை மொழியாக்கம் செய்பவர்கள், குர்ஆனின் பலவகையான பிழைகளை மறைப்பதற்காக, அரபி மூலத்தில் சொல்லப்பட்டதற்கு மாற்றமாக மொழியாக்கம் செய்வதை நம்முடைய கட்டுரைகளில் நாம் எடுத்துக்காட்டுகிறோம். இந்த சிறிய கட்டுரையில் குர்ஆனின் 21:7ம் வசனத்தை ஆய்விற்காக எடுத்துக்கொள்வோம்.

**இக்கட்டுரையின் தலைப்புக்கள்:**

1) ஐந்து தமிழாக்கங்களில் குர்ஆன் 21:7 (மற்றும் 12:109 & 16:43) வசனங்கள்

2) அரபி மூலத்தில் குர்ஆன் வசனங்கள் - ரிஜாலன் மற்றும் நாஸ்

3) அல்லாஹ் ஆண்களையே நபிகளாக அனுப்பினானா?

4) முந்தைய வேதங்கள் என்ன சொல்கின்றன? யெகோவா தேவன் பெண் நபிகளை அனுப்பியுள்ளாரா?

5) குர்ஆன் மொழியாக்கங்களில் ஏன் இந்த வித்தியாசங்கள்

6) முடிவுரை

---

## 1) ஐந்து தமிழாக்கங்களில் குர்ஆன் 21:7 (மற்றும் 12:109 & 16:43) வசனங்கள்

முதலாவது, குர்ஆன் 21:7ம் வசனத்தை ஐந்து தமிழாக்கங்களில் படிப்போம். ஏதாவது ஒரு மொழியாக்கத்தை எடுத்துக்கொண்டு கிறிஸ்தவர்கள்

விளக்கமளிக்கிறார்கள் என்று முஸ்லிம்கள் குற்றம்சாட்டக்கூடாது என்பதற்காக, ஐந்து தமிழாக்கங்களில் இவ்வசனத்தை படிப்போம்.

**டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்:**

21:7. (நபியே!) உமக்கு முன்னரும் **மானிடர்களையே அன்றி (வேறெவரையும்) நம்முடைய தூதர்களாக நாம் அனுப்பவில்லை;** அவர்களுக்கே நாம் வஹீ அறிவித்தோம். எனவே "(இதனை) நீங்கள் அறியாதவர்களாக இருந்தால் (நினைவுபடுத்தும்) வேதங்களுடையோரிடம் கேட்டுத் (தெரிந்து) கொள்ளுங்கள்" (என்று நபியே! அவர்களிடம் கூறும்).

**அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:**

21:7. (நபியே!) உங்களுக்கு முன்னரும் **(மனிதர்களில்) ஆண்களையே தவிர வேறொருவரையும் நாம் நம்முடைய தூதராக அனுப்பவில்லை**. (உங்களுக்கு அறிவிப்பது போன்றே நம்முடைய கட்டளைகளை) அவர்களுக்கும் வஹீ (மூலம்) அறிவித்தோம். ஆகவே, (இவர்களை நோக்கி நீங்கள் கூறுங்கள்: இது) உங்களுக்குத் தெரியாதிருந்தால் முன்னுள்ள வேதத்தை உடையவரிடத்தில் கேட்டு அறிந்து கொள்ளுங்கள்.

**இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:**

21:7. மேலும் (நபியே!) உமக்கு முன்னரும் நாம் **மனிதர்களையே தூதர்களாக அனுப்பியுள்ளோம்**. அவர்களுக்கும் நாம் வஹி அருளியிருந்தோம். நீங்கள் ஞானமற்றவர்களாயிருந்தால் வேதம் அருளப்பட்டவர்களிடம் கேட்டுப் பாருங்கள்.

**மன்னர் ஃபஹத் வளாகம் (சவூதி) தமிழாக்கம்:**

21:7. மேலும், (நபியே!) உமக்கு முன்னரும் **(மனிதர்களிலிருந்து) ஆடவர்களையே அன்றி, வேறெவரையும் நாம் நம்முடைய தூதராக அனுப்பவில்லை**, (உமக்கு அறிவிக்கிற பிரகாரமே) அவர்களுக்கு நாம் வஹீ அறிவித்தோம், ஆகவே, (இவர்களிடம் நீர் கூறுவீராக! இதனை) நீங்கள் அறியாதவர்களாக இருந்தால் (வேதத்தை) அறிந்தோரிடம் கேட்டுக் கொள்ளுங்கள்.

**பிஜே தமிழாக்கம்:**

21:7. (முஹம்மதே!) உமக்கு முன் **ஆண்களையே தூதர்களாக அனுப்பினோம்**.239 அவர்களுக்கு தூதுச்செய்தி அறிவித்தோம். நீங்கள் அறியாதிருந்தால் அறிவுடையோரிடம் கேளுங்கள்!

இந்த ஐந்து தமிழாக்கங்கள் ஒரே விதமாக இவ்வசனத்தை விளக்கவில்லை. கீழே கொடுக்கப்பட்ட அட்டவணையில், இதனை தெளிவாக காணலாம்.

| எண் | தமிழாக்கம் | அல்லாஹ் யாரை தூதர்களாக அனுப்பினான்? |
|---|---|---|
| 1 | டாக்டர். முஹம்மது ஜான் | மானிடர்களையே |
| 2 | அப்துல் ஹமீது பாகவி | ஆண்களையே |
| 3 | இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) | மனிதர்களையே |
| 4 | மன்னர் ஃபஹத் வளாகம் (சவூதி) | ஆடவர்களையே |
| 5 | பிஜே தமிழாக்கம் | ஆண்களையே |

இதே விவரத்தை குர்ஆன் 12:109 & 16:43 வசனங்களிலும் காணலாம்.

**கவனிக்கவும்:** அப்துல் ஹமீது பாகவி, சௌதி தமிழாக்கம் & பீஜே தமிழாக்கம் போன்றவைகளில் '**அல்லாஹ் ஆண்களை தூதர்களாக அனுப்பினான்**' என்று உள்ளது. மீதமுள்ள இரண்டு தமிழாக்கங்களில் 'மானிடர்கள்' என்ற வார்த்தையை பயன்படுத்தி, ஆண்கள் பெண்கள் இருபாலாரிலும் அல்லாஹ் தூதர்களை அனுப்பியதாக பொருள்படும் படி செய்துள்ளார்கள். இவர்கள் ஏன் இப்படி 'மனிதர்கள்/மானிடர்கள்' என்று மொழியாக்கம் செய்துள்ளார்கள்? அரபி மூலத்தில் என்ன உள்ளது?

## 2) அரபி மூலத்தில் குர்ஆன் வசனங்கள் - ரிஜாலன் மற்றும் நாஸ்

அரபி மூலத்தில் இந்த வசனத்தில் "ஆண்கள் (அரபி - ரிஜாலன்)" என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது, ஆனால், தமிழாக்கங்களில் "மானிடர்கள் (அரபி - நாஸ்)" என்ற சொல்லை வேண்டுமென்றே பயன்படுத்தியுள்ளார்கள். ஒட்டுமொத்த மானிடவர்க்கத்தை (மனிதகுலத்தை) குறிக்க அரபியில் 'நாஸ்' என்ற வார்த்தை உள்ளது.

| தமிழ் வார்த்தை | அரபி வார்த்தை |
|---|---|
| ஆண்கள் | ரிஜாலன் |
| மானிடர்கள் | நாஸ் |

குர்ஆன் 21:7 அரபி மூலம்:

| Translation | Arabic word |
|---|---|
| (21:7:1) wamā And not | وَمَآ வமா |
| (21:7:2) arsalnā We sent | أَرْسَلْنَا அர்ஸல்னா |
| (21:7:3) qablaka before you | قَبْلَكَ கப்லகா |
| (21:7:4) illā except | إِلَّا இல்லா |
| (21:7:5) rijālan men, | رِجَالًا ரிஜாலன் |

**அரபியில் குர்ஆன் 21:7 - வமா அர்ஸல்னா கப்லகா இல்லா ரிஜாலன் . . .**

மூலம்: **http://corpus.quran.com/wordbyword.jsp?chapter=21&verse=7**

குர்ஆனின் 114வது அத்தியாயத்திற்கு "ஸூரத்துந் நாஸ்" என்று பெயர். இதன் பொருள் மனிதர்கள், மானிடர்கள் என்பதாகும். இதில் ஆண் பெண் அனைவரும் அடங்குவார்கள்.

**3) அல்லாஹ் ஆண்களையே நபிகளாக அனுப்பினானா?**

இதுவரை கண்ட விவரங்களிலிருந்து ஒன்று மட்டும் தெளிவாக புரிகின்றது, அதாவது, குர்ஆனை தமிழாக்கம் செய்தவர்களில் சிலர் "ஆண்கள் (ரிஜாலன்)" என்று வரும் மூல வார்த்தையை மாற்றி, "மானிடர்கள்/மனிதர்கள் (நாஸ்)" என்று மொழியாக்கம் செய்துள்ளார்கள்.

ஏன் இவர்கள் இப்படி செய்தார்கள்? என்று சிந்திக்கும் போது, பெண்களிலும் தூதர்களை அல்லாஹ் அனுப்பியிருக்கின்றான், ஆனால் இந்த வசனம் தவறாக உள்ளது, எனவே, 'ஆண்கள்' என்று உள்ளதை, மானிடர்கள் என்று மாற்றி மொழியாக்கம் செய்வோம் என்று எண்ணி இதனை செய்துள்ளார்கள்.

குர்ஆனின் அரபி மூலத்தின் படி, அல்லாஹ் ஆண்களையே தன் தூதர்களாக அனுப்பியிருக்கின்றான் என்று பொருள் வருகிறது. இதனை பிஜே போன்றவர்கள் விளக்கங்கள் கொடுக்கும் போது, குறிப்பிட்டுள்ளார்கள்.

பிஜே தம்முடைய குர்ஆன் தமிழாக்கத்தில் வசனம் 21:7, விளக்க குறிப்பு 239ல், இதைப் பற்றி குறிப்பிட்டுள்ளார். மேலும், ஏன் அல்லாஹ் ஆண்களை மட்டுமே தூதர்களாக அனுப்பினான், பெண்களை ஏன் அனுப்பவில்லை என்று தன்னால் முடிந்த விளக்கத்தை கொடுத்துள்ளார்.

**பிஜே தமிழாக்க விளக்கம் 239. பெண்களில் நபிமார்கள் இல்லாதது ஏன்?**

// இறைத்தூதுப் பணி மிகவும் கடினமான பொறுப்பாகும். இப்பொறுப்பை நிறைவேற்றுவது ஆண்களில் கூட அனைவராலும் சாத்தியமாகாததாகும்.

இறைத்தூதராக அனுப்பப்படுவோர் தமது சமூகத்தில் இருந்த அத்தனை கொள்கை கோட்பாடுகளையும் தனியொருவராக நின்று எதிர்க்க வேண்டும்.

- அவ்வாறு எதிர்க்கும்போது கொல்லப்படலாம்!
- நாடு கடத்தப்படலாம்!
- கல்லெறிந்து சித்திரவதை செய்யப்படலாம்!
- ஆடையைக் கிழித்து நிர்வாணப்படுத்தப்படலாம்!

இன்னும் சொல்லொணாத் துன்பங்களை அவர்கள் அனுபவித்து ஆக வேண்டும்.

பெண்களாக இருந்தால் இவை அனைத்துக்கும் மேலாக அவர்களிடம் பாலியல் பலாத்காரம் செய்து மேலும் துன்புறுத்துவார்கள்.

ஒட்டுமொத்த சமுதாயத்தையே தன்னந்தனியாக களத்தில் நின்று எதிர்ப்பதால் ஏற்படும் சிரமங்களை எந்தப் பெண்ணாலும் நிச்சயம் தாங்கிக் கொள்ளவே முடியாது. //

உண்மையாகவே, ஆண்களையே அல்லாஹ் தூதர்களையே அனுப்பினானா? என்று சந்தேகம் வந்தால் என்ன செய்வது? இதற்கு அதே 21:7ம் வசனம் பதில் தருகின்றது.

**மன்னர் ஃபஹத் வளாகம் (சவூதி) தமிழாக்கம்:**

21:7. மேலும், (நபியே!) உமக்கு முன்னரும்) மனிதர்களிலிருந்து) ஆடவர்களையே அன்றி, வேறெவரையும் நாம் நம்முடைய தூதராக அனுப்பவில்லை, (உமக்கு அறிவிக்கிற பிரகாரமே) அவர்களுக்கு நாம் வஹீ அறிவித்தோம், ஆகவே, (இவர்களிடம் நீர் கூறுவீராக! இதனை) **நீங்கள் அறியாதவர்களாக இருந்தால் (வேதத்தை) அறிந்தோரிடம் கேட்டுக் கொள்ளுங்கள்**.

அதாவது குர்ஆனில் சந்தேகம் வந்தால், முஸ்லிம்கள் யாரிடம் சென்று தெரிந்துக்கொள்ளவேண்டும்? முந்தைய வேதங்கள் கொடுக்கப்பட்ட யூதர்களிடமும், கிறிஸ்தவர்களிடம் சென்று தெரிந்துக்கொள்ளவேன்டும். முஹம்மதுவிற்கும் சந்தேகம் வந்தாலும் சரி, அவர் யூத கிறிஸ்தவர்களிடம் வரவேண்டியது தான்.

**முஹம்மது ஜான் தமிழாக்கம்:**

10:94. (நபியே!) நாம் உம் மீது இறக்கியுள்ள இ(வ்வேதத்)தில் சந்தேகம் கொள்வீராயின், உமக்கு முன்னர் உள்ள வேதத்தை ஓதுகிறார்களே அவர்களிடம் கேட்டுப் பார்ப்பீராக; நிச்சயமாக உம் இறைவனிடமிருந்து உமக்குச் சத்திய (வேத)ம் வந்துள்ளது - எனவே சந்தேகம் கொள்பவர்களில் நீரும் ஒருவராகி விட வேண்டாம்.

சரி, இப்போது நாம் முந்தைய வேதங்களில் பெண் தூதர்கள் பற்றி என்ன உள்ளது என்பதை அறிவோம்.

**4) முந்தைய வேதங்கள் என்ன சொல்கின்றன? யெகோவா தேவன் பெண் நபிகளை அனுப்பியுள்ளாரா?**

இந்த ஆய்வுக் கட்டுரையை படிப்பவர்கள், ஒரு விவரத்தை தெளிவாக புரிந்துக்கொள்வார்கள், அது என்னவென்றால், குர்ஆனின் அல்லாஹ்வும், பைபிளின் யெகோவா தேவனும் வெவ்வேறானவர்கள் என்பதைத் தான். அல்லாஹ் மூன்று இடங்களில், நான் ஆண்களை மட்டுமே தூதர்களாக அனுப்பினேன் என்று கூறுகின்றான், ஆனால் பைபிளின் தேவனோ, அனேக பெண் தீர்க்கதரிசிகளை, தூதர்களை அனுப்பியுள்ளார். இவ்விருவர்களும் எப்படி ஒருவராக முடியும்? ஒருவேளை, அல்லாஹ்விற்கு கடந்த கால நிகழ்ச்சிகளை மறந்துபோகும் வியாதி இருந்ததா? என்று கேட்கத்தோன்றுகிறது. அப்படி இல்லையென்றால், ஏன் அல்லாஹ் குர்ஆனில் வெறும் ஆண்களையே தூதர்களாக அனுப்பினேன் என்றுச் சொல்லமுடிந்தது? அல்லாஹ் மறந்தானா? அல்லது மறைத்தானா?

- அல்லாஹ் இறைவன் என்றால் அவனால் மறக்கமுடியுமா? முடியாது
- அல்லாஹ் தான் யெகோவா என்றால், எப்படி தான் பெண் தீர்க்கதரிசிகளை அனுப்பியதை மறைத்து, குர்ஆனில் எழுதமுடியும்?
- இதுவும் இல்லை, அதுவும் இல்லையென்றால், என்ன தான் பதில்?

இதற்கு பதில் சொல்வது மிகவும் சுலபம், அதாவது அல்லாஹ் யெகோவா தேவன் இல்லை என்பது தான் அது. இவ்விருவரும் நேர் எதிர் துருவங்கள். இது சரியான பதில் இல்லையென்றுச் சொல்லும் முஸ்லிம்களிடம் வேறு பதில் உண்டா?

[யூதர்கள் பைபிளை மாற்றிவிட்டார்கள் என்றுச் சொல்லி, உங்கள் முட்டாள்தனத்தை வெளியே காட்டிவிடாதீர்கள் முஸ்லிம்களே! தோராவில்

மரியாம் என்ற மோசேயின் சகோதரி ஒரு தீர்க்கதரிசி என்றுச் சொல்லி 2000 ஆண்டுகளுக்கு பிறகு தான் குர்ஆன் என்ற ஒன்று உலகில் வருகிறது. இப்படிப்பட்ட சரித்திர மற்றும் கால இடைவெளியை கவனத்தில் கொண்டு பதில் அளிக்கவேண்டும் முஸ்லிம்களே!]

பைபிளிலிருந்து சில பெண் தீர்க்கதரிசிகளை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அவைகளுக்கான வசன ஆதாரங்களையும் தருகிறேன், இவைகளை படித்த பிறகு குர்ஆன் 21:7ஐ படியுங்கள். உண்மையை புரிந்துக்கொள்ளுங்கள்.

பெண் நபி 1: மிரியாம்

யாத்திராகமம் 15:20

20. ஆரோனின் சகோதரியாகிய **மிரியாம் என்னும் தீர்க்கதரிசியானவளும்** தன் கையிலே தம்புரை எடுத்துக்கொண்டாள்; சகல ஸ்திரீகளும் தம்புருகளோடும் நடனத்தோடும் அவளுக்குப் பின்னே புறப்பட்டுப்போனார்கள்.

பெண் நபி 2: தெபொராள்

நியாயாதிபதிகள் 4:4

4. அக்காலத்திலே லபிதோத்தின் மனைவியாகிய **தெபொராள் என்னும் தீர்க்கதரிசியானவள்** இஸ்ரவேலை நியாயம் விசாரித்தாள்.

பெண் நபி 3: உல்தாள்

II இராஜாக்கள் 22: 13 -15 & 2 நாளாகமம் 34:21-22

13. கண்டெடுக்கப்பட்ட இந்தப் புஸ்தகத்தின் வார்த்தைகளினிமித்தம் நீங்கள் போய், எனக்காகவும் ஜனத்திற்காகவும் யூதாவனைத்திற்காகவும் கர்த்தரிடத்தில் விசாரியுங்கள்; நமக்காக எழுதியிருக்கிற எல்லாவற்றின்படியேயும் செய்ய நம்முடைய பிதாக்கள் இந்தப் புஸ்தகத்தின் வார்த்தைகளுக்குச் செவிகொடாதபடியினால், நம்மேல் பற்றியெரிந்த கர்த்தருடைய உக்கிரம் பெரியது என்றான்.

14. அப்பொழுது ஆசாரியனாகிய இல்க்கியாவும், அகீக்காமும், அக்போரும், சாப்பானும், அசாயாவும், அர்காசின் குமாரனாகிய திக்வாவின் மகனான சல்லூம் என்னும் வஸ்திரசாலை விசாரிப்புக்காரன் மனைவியாகிய **உல்தாள் என்னும் தீர்க்கதரிசியானவளிடத்திற்குப் போய்** அவளோடே பேசினார்கள்; அவள் எருசலேமின் இரண்டாம் வகுப்பிலே குடியிருந்தாள்.

15. அவள் அவர்களை நோக்கி: உங்களை என்னிடத்தில் அனுப்பினவரிடத்தில் நீங்கள் போய்: இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் உரைக்கிறது என்னவென்றால்:

பெண் நபி 4: ஏசாயாவின் மனைவி ஒரு தீர்க்கதரிசி

ஏசாயா 8:3

3. நான் **தீர்க்கதரிசியானவளைச் சேர்ந்தபோது**, அவள் கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெற்றாள்; அப்பொழுது கர்த்தர் என்னை நோக்கி: மகேர்-சாலால்-அஷ்-பாஸ் என்னும் பேரை அவனுக்கு இடு.

எபிரேய மொழியை ஆய்வு செய்தவர்களின் கூற்றின்படி, ஏசாயாவின் மனைவி கூட ஒரு தீர்க்கதரிசி தான். ஏசாயா என்பவர் ஒரு தீர்க்கதரிசி என்பதால், அவரது மனைவி சாதாரண பெண்ணாக இருந்தால், அவரையும் தீர்க்கதரிசி என்று பைபிள் அழைக்கவில்லை. உண்மையாகவே, அந்தப்பெண் தீர்க்கதரிசியாக இருந்தபடியினால் இங்கு இப்படி குறிக்கப்பட்டுள்ளது.

பெண் நபி 5: அன்னாள்

லூக்கா 2:36-38

36. ஆசேருடைய கோத்திரத்தாளும், பானுவேலின் குமாரத்தியுமாகிய **அன்னாள் என்னும் ஒரு தீர்க்கதரிசி இருந்தாள்**; அவள் கன்னிப்பிராயத்தில் விவாகமானதுமுதல் ஏழுவருஷம் புருஷனுடனே வாழ்ந்தவளும், அதிக வயதுசென்றவளுமாயிருந்தாள்.

37. ஏறக்குறைய எண்பத்துநாலு வயதுள்ள அந்த விதவை தேவாலயத்தை விட்டு நீங்காமல், இரவும் பகலும் உபவாசித்து, ஜெபம்பண்ணி, ஆராதனை செய்துகொண்டிருந்தாள்.

38. அவளும் அந்நேரத்திலே வந்து நின்று, கர்த்தரைப் புகழ்ந்து, எருசலேமிலே மீட்புண்டாக காத்திருந்த யாவருக்கும் அவரைக்குறித்துப் பேசினாள்.

பெண் நபி 5: இயேசுவின் சீடர் "பிலிப்புவின் மகள்கள்"

அப்போஸ்தலர் 21:9

9. தீர்க்கதரிசனஞ்சொல்லுகிற கன்னியாஸ்திரீகளாகிய நாலு குமாரத்திகள் அவனுக்கு இருந்தார்கள்.

பெண் நபி 6: புதிய ஏற்பாட்டு பெண் தீர்க்கதரிசிகள்

I கொரிந்தியர் 11:5:

5. ஜெபம்பண்ணுகிறபோதாவது, **தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறபோதாவது**, தன் தலையை மூடிக்கொள்ளாதிருக்கிற **எந்த ஸ்திரீயும்** தன் தலையைக் கனவீனப்படுத்துகிறாள்; அது அவளுக்குத் தலை சிரைக்கப்பட்டதுபோலிருக்குமே.

குறிப்பு: தீர்க்கதரிசனம் சொல்லும் போது பெண்கள் தலையை மூடவேண்டும் என்று இந்த வேதவசனம் கூறுகிறது. இதன் அர்த்தமென்ன? பெண் தீர்க்கதரிசிகள் திருச்சபைகளில் உண்டு என்பதாகும். பெண்கள் தலைமுடியை மூடாமல் ஜெபம் அல்லது தீர்க்கதரிசனம் உரைக்கும் போது, அவர்களின் தலைமுடி காற்றில் ஆடும் போது பார்ப்பதற்கு நன்றாக இருக்காது என்பதற்காக இப்படி தலையை மூடுங்கள் என்று சொல்லப்பட்டுள்ளது. பெண்கள் மூலமாக கர்த்தர் சொல்லும் தீர்க்கதரிசனங்களை மக்கள் கூர்ந்து கேட்பார்களா அல்லது அவர்களது தலைமுடி காற்றில் இங்கும் அங்கும் ஆடுவதை பார்ப்பார்களா? எனவே தான் இந்த ஆலோசனை.

தீர்க்கதரிசி (நபி) இஸ்லாமிலும் கிறிஸ்தவத்திலும்:

இஸ்லாமில் தீர்க்கதரிசி என்றுச் சொன்னால், அவர் கீழ்கண்டவைகளைச் செய்வார்:

- மக்களை எதிர்த்து தீர்க்கதரிசனம் உரைப்பார், தன் செய்தியைச் சொல்வார்.
- தேவைப்பட்டால் ஆயுதம் ஏந்தி சண்டை போடுவார்
- முஹம்மதுவைப் போன்று ஆட்களை சேர்த்துக்கொண்டு வேறு நாட்டவர் மீது யுத்தம் செய்வார். இஸ்லாமை ஏற்கமறுத்தால் யுத்தம், இஸ்லாமுக்கு அடிபணிந்தால் இஸ்லாமிய ஆட்சிக்கு கட்டவேண்டும்.
- அதாவது ஒரு தீர்க்கதரிசி என்றால் சண்டை போடுவது கட்டாயமாக இருக்கும். இதற்கு சிறந்த உதாரணம், இஸ்லாமிய நபியாகிய முஹம்மது தான்.

ஆனால், பைபிளின் படி தீர்க்கதரிசி என்றால் சண்டை போடுபவர் அல்ல. அவர் கர்த்தரின் வார்த்தைகளை தன் நாட்டு மக்களுக்கு, தன் ஊராருக்கு, தன் சபைக்குச் சொல்பவர் அல்லது சொல்பவள். பழைய ஏற்பாட்டில் சில நேரங்களில் மட்டுமே அவர் கர்த்தரின் திட்டத்தின் படி யுத்தத்தில் ஈடுபடுவார், மற்ற நேரங்களில் அவர் ஒரு சாதாரண மனிதராக மக்களுக்கு எச்சரிக்கை செய்தியை கொடுப்பார். இதைப் பற்றி தேவைப்படும் போது தனி கட்டுரையாக காண்போம்.

### 5) குர்ஆன் மொழியாக்கங்களில் ஏன் இந்த வித்தியாசங்கள்

முஸ்லிம் அறிஞர்களில் சிலர் முந்தையை வேதங்களை ஓரளவிற்கு அறிந்தவர்களாக இருப்பார்கள். இப்படிப்பட்டவர்கள், குர்ஆன் 21:7ம் வசனத்தை மொழியாக்கம் செய்யும் போது, அவர்கள் மனதுக்கு அது உறுத்தும் ஒன்றாக இருக்கும். இது எப்படி சாத்தியம்? முந்தைய வேதங்களை கொடுத்தவர் அல்லாஹ் என்றுச் சொன்னால், அவர் எப்படி குர்ஆனில் வெறும் ஆண்களை மட்டுமே நான் தூதர்களாக அனுப்பினேன் என்றுச் சொல்லமுடியும் போன்ற கேள்விகள் அவர்களுக்கு எழும்.

- இந்த தர்மசங்கட சூழ்நிலையில் அவர்களால் என்ன செய்ய முடியும்?
- முந்தைய வேதங்களை கொடுத்தவர் அல்லாஹ் இல்லை என்றுச் சொல்லமுடியுமா?
- அல்லாஹ்வும் யெகோவா தேவனும் வெவ்வேறானவர்கள் என்று சொல்லமுடியுமா?
- தங்கள் மனசாட்சிக்கு எதிராக 'ஆண்களை' மட்டுமே அல்லாஹ் தூதர்களாக அனுப்பினான் என்று தமிழாக்கம் செய்யமுடியுமா?

எனவே, 'ஆண்கள் (ரிஜாலன்)' என்ற வார்த்தைக்கு பதிலாக, மானிடர்கள் (நாஸ்) என்ற வார்த்தையை எழுதி கைகழுவிவிட்டார்கள், முஸ்லிம் அறிஞர்கள்.

**6) முடிவுரை:**

இதுவரை நாம் குர்ஆன் 21:7ம் வசனத்தை தமிழாக்கங்களிலும், அரபி மூலத்திலும் ஆய்வு செய்தோம்.

குர்ஆனை தமிழாக்கம் செய்தவர்களில் சிலர் 'ஆண்கள்' என்ற வார்த்தையை 'மானிடர்' என்று மொழியாக்கம் செய்துள்ளார்கள். முந்தைய வேதங்களை ஓரளவிற்கு அவர்கள் அறிந்தபடியினால், இந்த காரியத்தை அவர்கள் செய்தார்கள்.

இது உண்மையானால்,

1) முந்தைய வேதங்களில் பெண் தீர்க்கதரிசிகளையும் அல்லாஹ் அனுப்பியுள்ளான் என்றுச் சொல்வது பொய்யா?

2) அல்லாஹ் முந்தைய வேதங்களை அனுப்பவில்லையா?

3) ஒருவேளை அல்லாஹ்விற்கு ஞாபக மறதியா? தன்னுடைய முந்தைய செயல்களை மறந்துவிட்டானா?

4) ஏனென்றால், இந்த விஷயத்தில் (ஆண்களை தூதர்களாக அனுப்பிய விஷயத்தில்) சந்தேகம் இருந்தால், பைபிளை அறிந்தவர்களிடம் கேட்டு தெளிவு பெறும்படி ஏன் அல்லாஹ் அதே வசனத்தில் சொல்கிறான்?

5) உண்மையாகவே, குர்ஆன் 21:7ம் வசனத்தை கொடுத்தவனுக்கு முந்தைய வேதம் பற்றி தெரியவில்லை என்று தானே அர்த்தம்.

6) ஒருவேளை, 2000 ஆண்டுகளுக்கு பிறகு முஹம்மது என்பவர் வந்து, குர்ஆன் 21:7ல், ஆண்களை மட்டுமே அல்லாஹ் தூதர்களாக அனுப்பினான் என்ற வசனம் வரும் என்று யூதர்கள் அறிந்துக்கொண்டு மூஸாவின் காலத்திலேயே பெண் தீர்க்கதரிசிகளையும் தௌராத்தில் (ஐந்தாகமங்களில்) சேர்த்துவிட்டார்களா? இதே போல கிறிஸ்தவர்களும் செய்தார்களா? என்னே ஒரு ஞானம்! யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் இருக்கும் ஞானத்துக்கு முன்பாக அல்லாஹ்வின் ஞானம் ஒன்றுக்கும் உதவாது என்றுச் சொல்லத்தோன்றுகிறது.

குர்ஆனின் குழப்பத்திற்கும், குர்ஆன் 21:7ல் வரும் சரித்திர பிழைக்கும் முஸ்லிம்கள் பதில்களைச் சொல்ல கடமைப்பட்டிருக்கிறார்கள். தங்கள் கடமையைச் செய்வார்களா? முஸ்லிம்கள்.

மூலம்: **https://www.answering-islam.org/tamil/authors/umar/arabic_quran/quran-21-7-allah-sent-only-men.html**



**கேள்வி 39:** பைபிளின் 400 அமைதி ஆண்டுகள் என்கிறார்களே, இது என்ன?

**பதில் 39:** பைபிள், பழைய ஏற்பாடு என்றும், புதிய ஏற்பாடு என்றும் இரண்டு பிரிவுகளாக பிரிக்கப்பட்டுள்ளது என்பதை நாம் அறிவோம். இவ்விரு பிரிவுகளுக்கு இடையே 400 ஆண்டுகள் இடைவெளி உள்ளது. அதாவது பழைய ஏற்பாட்டின் கடைசி புத்தகத்திற்கு பிறகு, 400 ஆண்டுகள் தேவன் ஒரு தீர்க்கதரிசியையும் எழுப்பவில்லை, அதன் பிறகு புதிய ஏற்பாட்டில் முதன் முதலாக யோவான் ஸ்நானகன் வருகின்றார்.

பழைய ஏற்பாடு கடைசியாக கீழ்கண்ட வசனத்தால் முடிவடைகிறது, அது ஒரு எதிர்ப்பார்ப்போடு முடிகிறது:

**மல்கியா 4:5-6**

5 இதோ, கர்த்தருடைய பெரிதும் பயங்கரமுமான நாள் வருகிறதற்குமுன்னே நான் உங்களிடத்திற்கு எலியா தீர்க்கதரிசியை அனுப்புகிறேன்.

6 நான் வந்து பூமியைச் சங்காரத்தால் அடிக்காதபடிக்கு, அவன் பிதாக்களுடைய இருதயத்தைப் பிள்ளைகளிடத்திற்கும், பிள்ளைகளுடைய இருதயத்தை அவர்கள் பிதாக்களிடத்திற்கும் திருப்புவான்.

மேசியாவின் வருகைக்கு முன்பு எலியா போன்றதொரு தீர்க்கதரிசியை அனுப்பப்படுவதாக, இந்த வசனம் கூறுகிறது. இதன் படியே, யோவான் ஸ்நானகன் வந்தார், அதன் பிறகு மேசியாவாகிய இயேசு வந்தார்.

**அந்த 400 ஆண்டுகளில் (Inter-Testamental Period) பல காரியங்கள் இஸ்ரவேலில் நடந்தன.**

1) இந்த காலத்தில் பெர்சியர்கள், கிரேக்கர்கள், கடைசியாக ரோமர்கள் இஸ்ரவேலை ஆட்சி செய்தார்கள், பல எதிர்ப்புக்கள் எழும்பின, கலவரங்கள் நடந்தன.

2) கிரேக்க மொழி யூதர்களிடையே பரவியது, இதன் தாக்கத்தால் பழைய ஏற்பாடு முழுவதும் எபிரேய மொழியிலிருந்து கிரேக்கத்தில் மொழியாக்கம் செய்யப்பட்டது, இதனையே செப்டாஜிண்ட் மொழியாக்கம் என்பார்கள்.

3) இந்த கால கட்டத்தில் (கி.மு. 400 to 100 ) எழுதப்பட்ட கையெழுத்துப் பிரதிகள் தான், சவக்கடல் குகைகளில் 1945ம் ஆண்டுகளில் கண்டெடுக்கப்பட்ட "சவக்கடல் சுருள்கள்" ஆகும்.

4) பரிசேயர்கள் மற்றும் சதுசேயர்கள் என்ற யூத பிரிவுகள் இந்த காலத்தில் தான் உண்டானது.

இன்னும் பல சரித்திர நிகழ்வுகள் பழைய மற்றும் புதிய ஏற்பாட்டு கால இடைவெளியில் நடந்தன.



**கேள்வி 40:** வெளிப்படுத்தின விசேஷம் புத்தகம் புதிய ஏற்பாட்டில் இருப்பதினால் என்ன நன்மை?

**பதில் 40:** வெளிப்படுத்தின விசேஷம் என்ற புத்தகம் பைபிளின், புதிய ஏற்பாடின் கடைசி புத்தகமாகும். இது உலக கடைசியில் நடக்கவிருக்கும் காரியங்களைப் பற்றி பேசுகின்றது. பைபிளின் முத்திரையாக இப்புத்தகம் அமைந்துள்ளது, அதாவது இதன் பிறகு வேறு ஒரு வேதமோ, கோட்பாடுகளோ, மதங்களோ வரவேண்டிய அவசியமில்லை என்று இது சொல்கிறது. இதில் சொல்லப்பட்ட விவரங்கள் விடுகதைகளாக உவமைகளாக அல்லது நேரடியாகச் சொல்லாமல், மறைமுகமாக விஷயங்களை சொல்வது போன்று அமைந்துள்ளது.

இயேசுவின் இரண்டாம் வருகைப் பற்றியும், உலகத்தின் முடிவு பற்றியும், நியாயத்தீர்ப்பு பற்றியும் இது பேசுகின்றது. சுருக்கமாகச் சொல்வதென்றால், பைபிளின் முதல் புத்தகமாகிய "ஆதியாகமம்" புத்தகத்தில் சொல்லப்பட்ட கேள்விகளுக்கு பதில் இப்புத்தகத்தில் கிடைக்கும்.

- 'பாவம்' முதன் முதலாக நுழைவது பற்றி ஆதியாகமத்தில் படிக்கலாம், வெளிப்படுத்தின விசேஷத்தில், அந்த 'பாவம்' நிவர்த்தி ஆனது பற்றி பார்க்கலாம்.
- ஆதியாகமத்தில் தொடங்கப்பட்ட தேவ குடும்பத்தின் கதையின் க்ளைமாக்ஸ் இந்த புத்தகத்தில் காணலாம்.

- ஆதியாகமத்தில் வானமும் பூமியும் படைக்கப்பட்டதை படிக்கலாம், இந்த புத்தகத்தில் புதிய வானம் புதிய பூமி படைக்கப்பட்டது பற்றி காணலாம்.
- ஆதியாகமத்தில் முதல் ஆதாமின் தோல்வியை பார்க்கலாம், இந்த புத்தகத்தில் இரண்டாம் ஆதாமாகிய இயேசுக் கிறிஸ்துவின் வெற்றியைக் காணலாம்.
- பரலோகம் மற்றும் நரகத்தைப் பற்றிய சிறு குறிப்பும் இந்த புத்தகத்தில் காணமுடியும்.

இப்படி இன்னும் பல விவரங்களைச் சொல்லிக்கொண்டு போகலாம்.

குர்ஆனை கிறிஸ்தவர்கள் ஏற்றுக்கொள்ளாததற்கு அனேக காரணங்கள் உண்டு, அவைகளில் இந்த புத்தகம் ஒரு காரணமாகும்.

ஒரு நபர் புதிய ஏற்பாட்டை முழுவதுமாக படித்து வந்து, கடைசியாக இந்த புத்தகத்தையும் (வெளிப்படுத்தின விசேஷம்) படித்துவிட்டால், அதன் பிற்கு அவர் கீழ்கண்டவைகளை நம்பமாட்டார்.

1) ஒரு புதிய வேத புத்தகத்தை அவர் ஏற்கமாட்டார், ஏனென்றால், மனிதனின் மரணத்திற்கு பிறகு நடக்கும் நியாயத்தீர்ப்பு விவரங்கள் அனைத்தும் இந்த புத்தகத்தில் இருப்பதினால், இன்னொரு வேதம் புதிதாக வந்து புதிய ஒன்றை சொல்லத் தேவையில்லை. எனவே, குர்ஆனை வேதம் என்று கிறிஸ்தவர்கள் ஏற்பதில்லை.

2) புதிய நபியையும் (தீர்க்கதரிசியையும்) நம்பமாட்டார். இந்த புத்தகத்தின் படி, இன்னொரு சுவிசேஷம் தேவையில்லை, இதுவே அனைத்து நபிமார்களுக்கும் முத்திரையாக உள்ளது. இதனால் தான் முஹம்மதுவை நபி என்று கிறிஸ்தவர்கள் நம்புவதில்லை.



**கேள்வி 41: ஆபிரகாமுக்கும் சாராளுக்கும் பிள்ளைகள் பிறக்காத போது, ஈசாக்குக்கு பிறகு எப்படி ஆபிரகாமுக்கு மட்டும் அனேக பிள்ளைகள் பிறந்தார்கள் (ஆதியாகமம் 16:1)?**

**பதில் 41:** பைபிள் வசனத்தை சிறிது கூர்ந்து கவனித்தால், ஆபிரகாமுக்கு எந்த பிரச்சனையும் இல்லை, சாராளுக்கு மட்டும் தான் 'பிள்ளை பெறாத பலவீனம்' இருந்ததாக அறியமுடியும்.

ஆதியாகமம் 16: 1. ஆபிராமுடைய மனைவியாகிய சாராய்க்குப் பிள்ளையில்லாதிருந்தது. எகிப்து தேசத்தாளாகிய ஆகார் என்னும் பேர்கொண்ட ஒரு அடிமைப்பெண் அவளுக்கு இருந்தாள்.

சாராளுக்கு பிறகு ஆபிரகாமுக்கு கேதுராள் என்ற இன்னொரு மனைவியும் இருந்தார்கள், இவ்விருவருக்கும் அனேக பிள்ளைகள்

பிறந்துள்ளார்கள். இதுமட்டுமல்ல, சாராள் தன் மூலமாக பிள்ளை பிறக்காதபடியினால் தான் தன் அடிமைப்பெண்ணை ஆபிரகாமுக்கு மனைவியாக கொடுக்கிறார்கள். இங்கு சரீர பிரச்சனை ஆபிரகாமுக்கு அல்ல, சாராளுக்கு ஆகும்.

ஆனால், தேவன் இடைப்பட்டு சாராள் மூலமாகவே ஆபிரகாமுக்கு சந்ததியை உருவாக்க சித்தம் கொண்டு, அற்புதமான முறையில் வயதான ஆபிரகாமுக்கும், சாராளுக்கும் ஈசாக்கு பிறக்கும்படி செய்தார்.



**கேள்வி 42: ஆபிரகாம் ஆகாரோடு விபச்சாரம் புரிந்தாரா? (ஆதியாகமம் 16:1 - 4)?**

**பதில் 42:** இல்லை, ஆபிரகாம் ஆகாரோடு விபச்சாரம் செய்யவில்லை, இஸ்மவேல் ஒரு தவறான முறையில் பிறந்தவர் அல்ல.

இதற்கு கீழ்கண்ட காரணங்களை சான்றுகளாகச் சொல்லமுடியும்:

**1) அக்காலத்தில் வைப்பாட்டிகள் அனுமதிக்கப்பட்டு இருந்தார்கள்:**

நாம் பேசிக்கொண்டு இருக்கும் நபர் ஆபிரகாம், இன்றிலிருந்து 4000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த நபராவார். அக்காலத்தில் பலதாரமணம் அனுமதிக்கப்பட்டு இருந்தது. அதனால் தான் "ஆகாரோடு சேர்ந்து குடும்பம் நடத்தி, ஆபிரகாமுக்கு சந்ததியை உண்டாக்கவேண்டும் என்ற ஐடியா சாராளுக்கு வந்தது". அதனால், ஆபிரகாம் அந்த காலத்தில் இருந்த வழக்கத்தின்படியே நடந்துக்கொண்டார், அது அப்போது தவறான செயல் அல்ல.

தேவன் கூட அதனை தவறாக எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால், தாம் அற்புதமாக செய்ய இருந்த ஒரு செயலுக்காக காத்திருக்காமல், சாராள் செய்த தவறை அவர் அனுமதித்து சாராளுக்கு ஒரு பாடத்தை கற்றுக்கொடுத்துவிட்டார். ஆகாருக்கு இஸ்மவேல் பிறந்த பிறகு, அந்த பாடத்தை சரியாக கற்றுக்கொண்டார் சாராள்.

**2) ஆகாரும் பெருமைக்கொண்டார்:**

தம்முடைய எஜமானுக்கு மனைவியாக அல்லது வைப்பாட்டியாக வருவதைப் பற்றி ஆகாரும் பெருமையடைந்தார். அவர் தடை ஒன்றும் செய்யவில்லை, ஒரு வீட்டில் அடிமையாக இருப்பதைவிட, இது மேலானது என்று அவர் கருதினார். மேலும் அந்தச் செயல் அக்கால சமுதாயத்தில் அனுமதிக்கப்பட்டு இருந்தது.

அதன் பிறகு தனக்கு பிள்ளை பிறந்தவுடன், தன் எஜமாட்டியை ஏளனமாக பார்த்ததற்கான கூலியை ஆகார் பெற்றார். ஆகார், பாவம்! தான் ஏறிவந்த

படியை தானே அறியாமையில் தள்ளிவிட முயன்றார், அதற்கான பலனை அனுபவித்தார்.

**ஆதியாகமம் 16 : 4-6**

4. அவன் ஆகாரோடே சேர்ந்தபோது, அவள் கர்ப்பந்தரித்தாள்; அவள் தான் கர்ப்பவதியானதைக் கண்டபோது, தன் நாச்சியாரை அற்பமாக எண்ணினாள்.

5. அப்பொழுது சாராய் ஆபிராமை நோக்கி: எனக்கு நேரிட்ட அநியாயம் உமதுமேல் சுமரும்; என் அடிமைப்பெண்ணை உம்முடைய மடியிலே கொடுத்தேன்; அவள் தான் கர்ப்பவதியானதைக் கண்டு என்னை அற்பமாக எண்ணுகிறாள்; கர்த்தர் எனக்கும் உமக்கும் நடுநின்று நியாயந்தீர்ப்பாராக என்றாள்.

6. அதற்கு ஆபிராம் சாராயை நோக்கி: இதோ, உன் அடிமைப்பெண் உன் கைக்குள் இருக்கிறாள்; உன் பார்வைக்கு நலமானபடி அவளுக்குச் செய் என்றான். அப்பொழுது சாராய் அவளைக் கடினமாய் நடத்தினபடியால் அவள் அவளைவிட்டு ஓடிப்போனாள்.

குறிப்பு: மனைவிக்கும் வைப்பாட்டிக்கும் இருக்கும் வித்தியாசத்தை இங்கு கவனிக்கலாம். ஆகார் தாம் எங்கிருந்து இந்த நிலைக்கு வந்தோம் என்பதை மறந்து செயல்பட்டார், ஆபிரகாமோ மனிததன்மையையே மறந்தார். இன்று நாம் வாழும் சூழ்நிலையை கணக்கில் கொண்டால், ஆகாரிடம் நான் பேசி, இப்படி நடக்காத பார்த்துக்கொள்ளும்படி நான் செய்கிறேன், நான் பார்த்துக்கொள்கிறேன், இனி இப்படி நடக்காது என்று சாராளிடம் சொல்லாமல், “உன் அடிமை உன் இஷ்டம்” என்று சொல்லி மனுஷன் ஜகா வாங்கிவிட்டார். என்ன ஆம்பளைங்களோ!

இன்னொரு முக்கியமான விஷயம், பழைய ஏற்பாட்டின் படி ஒரு அடிமையை திருமணம் செய்துக்கொண்டு அவளோடு குடும்பம் நடத்துவது அனுமதிக்கப்பட்டுள்ளது, ஆனால், எந்த ஒரு இடத்திலும், "அடிமைப்பெண்களிடம் திருமணத்திற்கு வெளியே உடலுறவு கொள்வது" தடுக்கப்பட்டதாகும், பெரும் பாவமாகும்.

### 3) இஸ்லாமில் விபச்சாரம்/கற்பழிப்பு:

மேலே சொன்னதற்கு எதிராக இஸ்லாம் கட்டளையிடுகிறது. குர்ஆன் மற்றும் முஹம்மதுவின் படி, ஒரு முஸ்லிம் தன் அடிமைப்பெண்களிடம் திருமணம் புரியாமல், உடலுறவு கொள்ளலாம். இதனை அல்லாஹ்வே அனுமதிக்கிறான், ஆனால் யெகோவா தேவன் இதனை அனுமதிப்பதில்லை என்பதை கவனத்தில் கொள்ளவேண்டும்.

குர்ஆன் 23:6. ஆனால், அவர்கள் தங்கள் மனைவிகளிடமோ அல்லது தங்கள் வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்டவர்களிடமோ தவிர - (இவர்களிடம் உறவு கொள்வது கொண்டும்) நிச்சயமாக அவர்கள் பழிக்கப்படமாட்டார்கள்.

குர்ஆன் 4:3. அநாதை(ப் பெண்களைத் திருமணம் செய்து அவர்)களிடம் நீங்கள் நியாயமாக நடக்க முடியாது என்று பயந்தீர்களானால், உங்களுக்குப் பிடித்தமான பெண்களை மணந்து கொள்ளுங்கள் - இரண்டிரண்டாகவோ, மும்மூன்றாகவோ, நன்னான்காகவோ; ஆனால், நீங்கள் (இவர்களிடையே) நியாயமாக நடக்க முடியாது என்று பயந்தால் ஒரு பெண்ணையே (மணந்து கொள்ளுங்கள்), அல்லது உங்கள் வலக்கரங்களுக்குச் சொந்தமான (ஓர் அடிமைப் பெண்ணைக் கொண்டு) போதுமாக்கிக் கொள்ளுங்கள் - இதுவே நீங்கள் அநியாயம் செய்யாமலிருப்பதற்குச் சுலபமான முறையாகும்.

இதுவரை பார்த்த விவரங்களின்படி, ஆபிரகாம் அக்கால வழக்கத்தின்படியே நடந்துக்கொண்டார், அவர் விபச்சாரம் செய்யவில்லை. ஆனால், குர்ஆன் முஸ்லிம்களை விபச்சரம் செய்ய அனுமதிக்கிறது என்பதை கவனத்தில் கொள்ளவேண்டும்.



**கேள்வி 43: முறையற்ற உடலுறவு பற்றி ஏன் பைபிள் பேசவேண்டும்? அதைப் பற்றி பேசாமல் அமைதியாக இருந்திருக்கலாம் அல்லவா? (பார்க்க லேவியராகமம் 18:8-18; 20:11-14; 17-21)**

**பதில் 43:** தவறான உடலுறவு பற்றி பேசி, அதை எச்சரிப்பது தவறு என்று சொல்லக்கூடாது.

லேவியராகமம் லேவியராகமம் 18:8-18; 20:11-14; 17-21 போன்ற வசனங்களில் குடும்ப நபர்களோடு தவறான முறையில் உடலுறவு கொள்வது பற்றி கூறி, அவர்களுக்கு கொடுக்கப்படும் தண்டனைகளும் விவரிக்கப்பட்டுள்ளன.

இவைகள் படிப்பதற்கு தர்மசங்கடமாக இருந்தாலும், இந்த எச்சரிக்கையும் தண்டனையும் தேவை. அக்காலத்தில் எகிப்திய அரச குடும்பத்திலும், பெர்சிய அரச குடும்பத்திலும் அடிக்கடி இப்படிப்பட்ட நிகழ்வுகள் நடந்துள்ளன, அவைகளைப் பற்றி எச்சரிக்கையாக இருக்கும்படி பைபிள் இதைப் பற்றிச் சொல்வதில் தவறு இல்லை.

**லேவியராகமம் 20:17-19**

17. ஒருவன் தன் தகப்பனுக்காவது தன் தாய்க்காவது குமாரத்தியாயிருக்கிற தன் சகோதரியைச் சேர்த்துக்கொண்டு, அவன் அவளுடைய நிர்வாணத்தையும், அவள் அவனுடைய நிர்வாணத்தையும் பார்த்தால், அது பாதகம்; அவர்கள் தங்கள் ஜனங்களின் கண்களுக்கு முன்பாக அறுப்புண்டு போகக்கடவர்கள்; அவன் தன் சகோதரியை நிர்வாணப்படுத்தினான்; அவன் தன் அக்கிரமத்தைச் சுமப்பான்.

18. ஒருவன் சூதகஸ்திரீயோடே சயனித்து, அவளை நிர்வாணமாக்கினால், அவன் அவளுடைய உதிர ஊற்றைத் திறந்து வெளிப்படுத்தினபடியால், இருவரும் தங்கள் ஜனத்தில் இராதபடிக்கு அறுப்புண்டுபோகவேண்டும்.

19. உன் தாயினுடைய சகோதரியையும் உன் தகப்பனுடைய சகோதரியையும் நிர்வாணமாக்காயாக, அப்படிப்பட்டவன் தன் நெருங்கிய இனத்தை அவமானமாக்கினான்; அவர்கள் தங்கள் அக்கிரமத்தைச் சுமப்பார்கள்.



**கேள்வி 44: உடலில் பச்சை(tattoo) குத்திக்கொள்வதை இவ்வசனம் (லேவி 10:28) எதிர்க்கின்றதா?**

**பதில் 44:** பச்சை குத்துதல் என்ற பழக்கம் பல நாடுகளில் பல்லாண்டு காலமாக இருந்துள்ளது. பொதுவாக பச்சை குத்திக்கொள்வதற்கு பல காரணங்கள் சொல்லப்படுகின்றன, அவைகளில் சில:

1. அதிகமாக நேசிக்கும் ஒன்றை, நபர்களின் பெயர்களை பச்சை குத்திக்கொள்வார்கள்.
2. சில நேரங்களில் மக்களுக்கு தெரியவேண்டும் என்பதற்காக, கைகளிலும், கழுத்திலும் குத்திக்கொள்வார்கள்.
3. சில ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு விஷயத்தை எதிர்ப்பதாக இருந்தால், அதனை பச்சையாக குத்திக்கொண்டு, தம் எதிர்ப்பை தெரிவிப்பார்கள்.
4. கிறிஸ்தவர்களிடத்திலும் இன்று இது பரவியுள்ளது, இயேசு, சிலுவை என்று பல சின்னங்களை பச்சையாக குத்திக்கொள்கிறார்கள்.

புதிய ஏற்பாடு நேரடியாக இதைப் பற்றி சொல்லவில்லை, ஆனால் பழைய ஏற்பாடு நேரடியாக கீழ்கண்ட வசனத்தின் மூலம் கண்டிக்கிறது, ஏனென்றால் அக்காலத்தில் பல தெய்வவழிப்பாட்டு மக்கள் தங்கள் தெய்வங்களை உடலில் பச்சையாக குத்திக்கொள்வார்கள். இப்படி செய்யவேண்டாம் என்று தேவன் கட்டளையிட்டார்.

லேவி 10:28 செத்தவனுக்காக உங்கள் சரீரத்தைக் கீறிக்கொள்ளாமலும், அடையாளமான எழுத்துக்களை உங்கள்மேல் குத்திக்கொள்ளாமலும் இருப்பீர்களாக; நான் கர்த்தர்.

28 "'Do not cut your bodies for the dead or put tattoo marks on yourselves. I am the LORD.

மத காரியங்களுக்காக உடலை கிழித்துக்கொள்வது (ஷியா முஸ்லிம்கள் இப்படி செய்கிறார்கள்), உடலை காயப்படுத்திக்கொள்வது (இந்துக்களில் சிலர் வேலை கன்னத்திலும், நாக்கிலும் குத்திக்கொள்கிறார்கள்), போன்றவை கூடாது என்று தேவன் கட்டளையிடுகின்றார். இது பக்தியாக கருதப்படாது, முழு இருதயத்தோடு, பலத்தோடு அன்பு கூறுவதே அர்த்தமுள்ள பக்தியாக உள்ளது.

சரி பக்திக்காகத் தானே உடலில் பச்சை குத்திக்கொள்ளாதீர்கள் என்று மேற்கண்ட வசனம் கூறுகின்றது. ஒருவர் மீது நாம் வைத்திருக்கும் அன்பை வெளிக்காட்ட ஏன் பச்சை குத்திக்கொள்ளக்கூடாது? என்ற கேள்வி எழும்.

உடலில் ஒரு நிரந்தரமான அடையாளம் வைத்துக்கொள்வது சரியல்ல. அன்பு நிரந்தரமாக இருப்பதில்லை, இன்று நீங்கள் சார்ந்துள்ள கட்சியைவிட்டு வேறு கட்சிக்கு தாவமாட்டீர்கள் என்று என்ன நிச்சயம்? நாம் நேசிக்கும் தலைவர், நடிகர் அல்லது கலைஞர், நாளைக்கு ஒரு தீய காரியத்தைச் செய்யும் போது, அந்த பச்சை குத்திக்கொண்டதை மறைக்க நாம் முயலுவோம். மறுபடியும் பச்சைக் குத்திக்கொண்டதை மாற்றவேண்டுமென்றால், அது ஒரு கடினமான காரியமாக இருக்கும். எனவே பச்சை குத்திக்கொள்வதை விட்டுவிட்டால் நல்லது.

இயேசு மற்றும் சிலுவையைக் கூட பச்சை குத்திக்கொள்ளக்கூடாதா? என்று கேள்வி கேட்டால், இல்லை என்பது தான் என் பதில்.

ஒருவேளை இந்த கேள்வியை இயேசுவிடம் கேட்டு இருந்தால் என்ன பதில் வந்திருக்கும்?

1) என் மீது நீ வைத்திருக்கும் அன்பை பச்சை குத்திக்கொள்வதின் மூலம் வெளிக்காட்ட விரும்புகின்றாயா? என்று அவர் கேட்பார்.

2) உலக மக்கள் பார்க்கும் படி, உன் பக்தியை காட்ட விரும்புகிறாயா? என்று கேட்பார்.

என் மீது அன்பாகவும், ஒருவரில் ஒருவர் அன்பாகவும் நீங்கள் இருந்தால், அதை உலகம் பார்க்கட்டும், அதைப் பார்த்து அவர்கள் "இவர்கள் இயேசுவின் சீடர்கள் அல்லது கிறிஸ்தவர்கள்" என்று அறியட்டும் என்று இயேசு கூறுவார்.

யோவான் 13:34. நீங்கள் ஒருவரிலொருவர் அன்பாயிருங்கள்; நான் உங்களில் அன்பாயிருந்ததுபோல நீங்களும் ஒருவரிலொருவர் அன்பாயிருங்கள் என்கிற புதிதான கட்டளையை உங்களுக்குக் கொடுக்கிறேன்.

35. நீங்கள் ஒருவரிலொருவர் அன்புள்ளவர்களாயிருந்தால், அதினால் நீங்கள் என்னுடைய சீஷர்களென்று எல்லாரும் அறிந்துகொள்வார்கள் என்றார்.



**கேள்வி 45: இன்றைக்கும் எகிப்திலுள்ள காப்டிக் கிறிஸ்தவர்கள் தங்கள் கைகளில் சிலுவையை பச்சைக் குத்திக்கொள்கிறார்களே, இது தவறு என்று சொல்கிறீர்களா?**

**பதில் 45:** எகிப்திலுள்ள கிறிஸ்தவர்கள் தங்கள் கைகளில் சிலுவையை பச்சையாக குத்திக்கொள்வதற்கு ஒரு வரலாறு உண்டு. முதல் நூற்றாண்டு தொடங்கி இயேசுவின் சீடர்கள் மூலமாக நற்செய்தி அறிவிக்கப்பட்டு இயேசுவை

பின்பற்றியவர்கள் தான் காப்டிக் கிறிஸ்தவர்கள். இன்று எகிப்தில் பிறந்து இரண்டே மாதங்கள் கூட ஆகாத குழந்தைக்கும் அவர்கள் கையில் ஒரு சின்ன சிலுவையை பச்சையாக குத்துகிறார்கள், இதற்கு பல காரணங்கள் உண்டு.

1) இஸ்லாமியர்கள் வேறு நாடுகளை பிடிக்கும் போது, முஸ்லிமாக மாறுகின்றாயா? அல்லது ஜிஸ்யா வரி கட்டுகின்றாயா? என்று யூத கிறிஸ்தவர்களை கட்டாயப்படுத்தினார்கள். இஸ்லாமிய நபி முஹம்மதுவிற்கு பிறகு, கலிஃபாக்கள் எகிப்தை கைப்பற்றிய போது, முஸ்லிம்களாக மாறாத கிறிஸ்தவர்களின் கைகளில் சிலுவை அடையாளம் போட்டார்கள். இதன் மூலம் அவர்களிடமிருந்து ஜிஸ்யா வரி வாங்குவதற்கு வசதியாக அது இருந்தது.

2) இந்த பழக்கம் முஸ்லிம்களின் ஆட்சியிலிருந்து விடுபட்ட பிறகும் கிறிஸ்தவர்கள் இந்த பழக்கத்தை இன்றளவும் பின்பற்றுகிறார்கள். இப்போது இதற்கு வேறு காரணமுண்டு, அதாவது முக்கியமாக எகிப்து நாட்டில், கிறிஸ்தவ குழந்தைகளை கடத்திக்கொண்டு, அவர்களை முஸ்லிம்களாக மாற்றிவிடுகிறார்கள் இன்றைய முஸ்லிம்கள்.

3) குழந்தைகளை கடத்தினாலும், அவர்கள் கிறிஸ்தவர்கள் என்ற அடையாளம் நிச்சயம் இருக்கவேண்டும் என்பதற்காக, எகிப்திய கிறிஸ்தவர்கள் இன்றளவும், சின்ன குழந்தைகளின் கைகளில் சிலுவை படத்தை பச்சையாக குத்திவிடுகிறார்கள்.

4) இன்றைய கிறிஸ்தவர்கள் இதனால் இன்னொரு பிரச்சனையிலும் மாட்டிக்கொண்டிருக்கிறார்கள். அதாவது, பல வன்முறை தாக்குதல்களுக்கும், கேலிபரியாசங்களுக்கும் முஸ்லிம்களால் ஆளாகிறார்கள். கையில் சிலுவை உள்ளதா, இவன் ஒரு கிறிஸ்தவன், இவனை பிடி, அவமானப்படுத்து என்று பெரும்பான்மை முஸ்லிம்கள் இருக்கும் எகிப்து நாட்டில் அடிக்கடி துன்பத்திற்கு ஆளாகிறார்கள் கிறிஸ்தவர்கள்.

கீழ்கண்ட செய்திகளை படிக்கவும்:

- **Tattoos aren't just a fashion statement for Egypt's Copts**
- **Egypt: Copts' cross tattoos lead to harassment, insults**
- **Coptic Christians in Egypt tattoo their children as a sign of their faith**

எனவே, எகிப்திய காப்டிக் கிறிஸ்தவர்களின் நிலைப்பாடு இந்த விஷயத்தில் வேறு விதமாக உள்ளது.

பரிசுத்த வேதாகமத்தின் படி, எந்த காரணத்திற்காகவும் பச்சை குத்திக்கொள்வது நல்லதல்ல.



**கேள்வி 46: ஏன் அந்நியனுக்கும், யூதனுக்கும் ஒரே சட்டத்தை தேவன் கொடுத்தார்? (எண்ணாகமம் 15:14-16)?**

**பதில் 46:** யூதர்கள் எகிப்திலிருந்து புறப்பட்டப்போது அவர்களோடு யூதரல்லாத அந்நியர்களும் வந்தார்கள். மோசேயின் மூலமாக சட்டங்களை கொடுக்கும் போது தேவன் "உங்களுக்கும் உங்களிடத்தில் தங்குகிற அந்நியனுக்கும் ஒரே பிரமாணமும் ஒரே முறைமையும் இருக்கக்கடவது " என்றார் , இதனை கீழ்கண்ட வசனங்களில் காணலாம்.

**எண்ணாகமம் 15:14-16**

14. உங்களிடத்திலே தங்கியிருக்கிற அந்நியனாவது, உங்கள் நடுவிலே உங்கள் தலைமுறைதோறும் குடியிருக்கிறவனாவது, கர்த்தருக்குச் சுகந்த வாசனையான தகனபலி செலுத்தவேண்டுமானால், நீங்கள் செய்கிறபடியே அவனும் செய்யவேண்டும்.

15. சபையாராகிய உங்களுக்கும் உங்களிடத்தில் தங்குகிற அந்நியனுக்கும் ஒரே பிரமாணம் இருக்கவேண்டும் என்பது உங்கள் தலைமுறைகளில் நித்திய கட்டளையாயிருக்கக்கடவது; கர்த்தருக்கு முன்பாக அந்நியனும் உங்களைப்போலவே இருக்கவேண்டும்.

16. உங்களுக்கும் உங்களிடத்தில் தங்குகிற அந்நியனுக்கும் ஒரே பிரமாணமும் ஒரே முறைமையும் இருக்கக்கடவது என்று சொல் என்றார்.

இது ஒரு அருமையான பகுதியாகும். ஒரு யூதரல்லாதவர் யெகோவா தேவனை ஆராதிக்க வரும்போது, அவனுக்கு சம உரிமை தரப்படவேண்டும். மற்ற சடங்குகளில், தண்டனை சட்டங்களில் யூதனுக்கும், அந்நியனுக்கும் வித்தியாசம் இருந்தாலும், தேவனிடத்தில் வரும் போது வித்தியாசம் இருக்கக்கூடாது என்பதைத் தான் இந்த பகுதி விளக்குகிறது.

**மாத்யூ ஹென்றி, விளக்கவுரை :**

Natives and strangers are here set upon a level, in this as in other matters (v. 13-16): "One law shall be for you and for the stranger that is proselyted to the Jewish religion.'' Now, 1. This was an invitation to the Gentiles to become proselytes, and to embrace the faith and worship of the true God. In civil things there was a difference between strangers and true-born Israelites, but not in the things of God; as you are, so shall the stranger be before the Lord, for with him there is no respect of persons. See Isa. 56:3 . This was an obligation upon the Jews to be kind to strangers, and not to oppress them, because they saw them owned and accepted of God. Communion in religion is a great engagement to mutual affection, and should slay all enmities. 3. It was a mortification to the pride of the Jews, who are apt to be puffed up with their birthright privileges. "We are Abraham's seed.'' God let them know that the sons of the stranger were as welcome to him as the sons of Jacob; no man's birth or parentage shall turn either to his advantage or his prejudice in his acceptance with God. This likewise intimated that, as believing strangers should be accounted Israelites, so unbelieving Israelites should be accounted strangers. 4. It was a happy presage of the calling of the Gentiles, and of their admission into the church. If the law made so little difference between Jew and

Gentile, much less would the gospel make, which broke down the partition-wall, and reconciled both to God in one sacrifice, without the observance of the legal ceremonies

Source: **www.biblestudytools.com/commentaries/matthew-henry-complete/numbers/15.html**

**அந்நியர்கள் ஒடுக்கப்படும் போது, அவர்களின் ஜெபத்தை கர்த்தர் கேட்பார்:**

**யாத்திராகமம் 22: 21-23**

21. **அந்நியனைச் சிறுமைப்படுத்தாமலும் ஒடுக்காமலும் இருப்பீர்களாக;** நீங்களும் எகிப்துதேசத்தில் அந்நியர்களாயிருந்தீர்களே. 22. விதவையையும் திக்கற்ற பிள்ளையையும் ஒடுக்காமல் இருப்பீர்களாக; 23. அவர்களை எவ்வளவாகிலும் ஒடுக்கும்போது, அவர்கள் என்னை நோக்கி முறையிட்டால், அவர்கள் முறையிடுதலை நான் நிச்சயமாய்க் கேட்டு,

**அந்நியர்களை ஒடுக்காதே:**

யாத்திராகமம் 22:21 **அந்நியனைச் சிறுமைப்படுத்தாமலும் ஒடுக்காமலும் இருப்பீர்களாக;** நீங்களும் எகிப்துதேசத்தில் அந்நியர்களாயிருந்தீர்களே.

உபாகமம் 24: 14. உன் சகோதரரிலும், உன் தேசத்தின் வாசல்களிலுள்ள **அந்நியரிலும்** ஏழையும் எளிமையுமான கூலிக்காரனை ஒடுக்காயாக.

**அந்நியனுக்கும் நீதியின்படி தீர்ப்புச்செய்யுங்கள்:**

உபாகமம் 1:16 அக்காலத்திலே உங்களுடைய நியாயாதிபதிகளை நான் நோக்கி: நீங்கள் உங்கள் சகோதரரின் வியாச்சியங்களைக் கேட்டு, இருபட்சத்தாராகிய உங்கள் சகோதரருக்கும், அவர்களிடத்தில் தங்கும் **அந்நியனுக்கும், நீதியின்படி தீர்ப்புச்செய்யுங்கள்**.

**ஏசாயா 56:3**

3. **கர்த்தரைச் சேர்ந்த அந்நியபுத்திரன்:** கர்த்தர் என்னைத் தம்முடைய ஜனத்தைவிட்டு முற்றிலும் பிரித்துப் போடுவாரென்று சொல்லானாக; அண்ணகனும்: இதோ, நான் பட்டமரமென்று சொல்லானாக.

இப்படி பல விவரங்களைச் சொல்லிக்கொண்டு போகலாம். யூதர்களை தேவன் தெரிவு செய்தது, மேசியா அவர்களிடமிருந்து வரவேண்டும் என்பதற்காக மட்டுமேயன்றி, வேறு எந்த வகையிலும் அவர்கள் மற்றவர்களைக் காட்டிலும் மேலானவர்கள் அல்ல,கர்த்தரின் பார்வையில்.



**கேள்வி 47: கழுதை பேசுமா? இது வேடிக்கையாக இல்லையா? (எண்ணாகமம் 22:27-28)**

**பதில் 47:** இறை நம்பிக்கையுள்ளவன் அற்புதங்களையும் நம்புவான். தேவனால் எதுவும் சாத்தியம்.

**எண்ணாகமம் 22:28-31**

28. **உடனே கர்த்தர் கழுதையின் வாயைத் திறந்தார்;** அது பிலேயாமைப் பார்த்து: நீர் என்னை இப்பொழுது மூன்று தரம் அடிக்கும்படி நான் உமக்கு என்ன செய்தேன் என்றது.

29. அப்பொழுது பிலேயாம் கழுதையைப் பார்த்து: நீ என்னைப் பரியாசம் பண்ணிக்கொண்டு வருகிறாய்; என் கையில் ஒரு பட்டயம்மாத்திரம் இருந்தால், இப்பொழுதே உன்னைக் கொன்றுபோடுவேன் என்றான்.

30. கழுதை பிலேயாமை நோக்கி: நீர் என்னைக் கைக்கொண்ட காலமுதல் இந்நாள்வரைக்கும் நீர் ஏறின கழுதை நான் அல்லவா? இப்படி உமக்கு எப்போதாகிலும் நான் செய்தது உண்டா என்றது. அதற்கு அவன்: இல்லை என்றான்.

31. அப்பொழுது கர்த்தர் பிலேயாமின் கண்களைத் திறந்தார்; வழியிலே நின்று உருவின பட்டயத்தைத் தம்முடைய கையிலே பிடித்திருக்கிற கர்த்தருடைய தூதனை அவன் கண்டு, தலைகுனிந்து முகங்குப்புற விழுந்து பணிந்தான்.

இயற்கையாகவே கழுதை பேசியது என்று சொன்னால், அது எப்படி சாத்தியம் என்று கேட்கலாம், ஆனால், மேற்கண்ட வசனத்தில் "கர்த்தர் கழுதையின் வாயைத் திறந்தார்" என்று சொல்லப்பட்டுள்ளது. எனவே, கர்த்தர் செய்த அற்புதத்தின் மூலமாகத் தான் கழுதை பேசியதே தவிர, இயற்கையான நிகழ்ச்சி அல்ல அது.

இந்த கேள்வியை ஒரு முஸ்லிம் சகோதரர் கேட்டதால், இஸ்லாமிலிருந்து ஒரு விவரத்தை காட்ட விரும்புகிறேன்.

**மரம் அழுதது, முஹம்மது ஆறுதல் சொன்னார்**

ஸஹீஹ் புகாரி 3583. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (பள்ளிவாசலில் தூணாக இருந்த) ஒரு பேரீச்ச மரத்தின் அடிப்பகுதியின் மீது சாய்ந்தபடி உரை நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள் (மிம்பர்) உரைமேடையை அமைத்த பின்னால் அதற்கு மாறிவிட்டார்கள். எனவே, (நபி-ஸல்- அவர்கள் தன்னைப் பயன்படுத்தாததால் வருத்தப்பட்டு) அந்த மரம் ஏக்கத்துடன் முனகியது. உடனே, நபி(ஸல்) அவர்கள் அதனிடம் சென்று (அதை

அமைதிப்படுத்துவதற்காக) அதன் மீது தன் கையை வைத்து (பரிவுடன்) வருடிக் கொடுத்தார்கள்.

மேற்கண்ட நிகழ்ச்சியில், மரம் அழுதது என்றுச் சொல்லப்படுவது ஒரு சாதாரண நிகழ்ச்சியாக சொல்லப்பட்டுள்ளது. அல்லாஹ் ஒரு அற்புதம் செய்து இதனை நிகழ்த்தியதாகச் சொல்லப்படவில்லை.

கழுதை பேசிய நிகழ்ச்சி என்பது, தேவைப்பட்ட நேரத்தில் தேவன் வந்து செய்த அற்புதமாகும். ஆனால், முஹம்மது பற்றிய நிகழ்ச்சி 'முஹம்மதுவின் பெயரை உயர்த்திக்காட்டுவதற்காக இஸ்லாமுக்கு 200 ஆண்டுகளுக்கு பிறகு இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸாகும்'.

அல்லாஹ் ஒரு இறைவனாக இருந்திருந்தால், அவனால் மரத்தை பேசவைக்க முடியும், இதனை நான் மறுக்கவில்லை, ஆனால் மேற்கண்ட ஹதீஸில் சொல்லப்பட்டது ஒரு இட்டுக்கட்டப்பட்ட நிகழ்ச்சி என்று சொல்கிறேன். அதுவும் எந்த ஒரு தகுந்த காரணமும் இல்லாமல் நடந்த நிகழ்ச்சியாக அது சொல்லப்பட்டுள்ளது, இது இட்டுக்கட்டவையேயாகும்.



**கேள்வி 48: பத்து கட்டளைகளில் கடைசி கட்டளையில் ஏன் மனைவிமார்கள் ஆண்களின் சொத்துக்கள் போன்று சொல்லப்பட்டுள்ளது, இது தவறு இல்லையா? (உபாகமம் 5:21)**

**பதில் 48:** இந்த வசனம் 'பெண்கள் ஆண்களின் உடைமைகள்" என்று சொல்லவில்லை.

உபாகமம் 5:21 பிறனுடைய மனைவியை இச்சியாதிருப்பாயாக; பிறனுடைய வீட்டையும், அவனுடைய நிலத்தையும், அவனுடைய வேலைக்காரனையும், அவனுடைய வேலைக்காரியையும், அவனுடைய எருதையும், அவனுடைய கழுதையையும், பின்னும் பிறனுக்குள்ள யாதொன்றையும் இச்சியாதிருப்பாயாக என்றார்.

ஒரு மனிதன் இன்னொரு மனிதனின் மனைவியையோ, மற்ற உடைமைகளையோ "இச்சிக்காமல், ஆசைப்படாமல்" இருக்கவேண்டும் என்று சொல்கிறதே ஒழியே, ஆண்களுக்கு பெண்கள் உடைமைகள் என்றுச் சொல்லவில்லை.

மேலும் கடைசி வார்த்தைகளைப் பாருங்கள் "பின்னும் பிறனுக்குள்ள யாதொன்றையும் இச்சியாதிருப்பாயாக". அதாவது இவ்வசனத்தில் சொல்லப்படாத மற்றவனுக்குள்ளதை எதையுமே இச்சிக்கூடாது.

மற்றவனின் மனைவியை "இச்சிக்கக்கூடாது" என்று சொல்லப்பட்டுள்ளது, அதனால் "மற்றவனுடைய மகளை, மருமகளை, சகோதரிகளை" இச்சிக்கலாம் என்று அர்த்தம் கொள்ளமுடியுமா? இல்லையல்லவா?

ஆண்களுக்கு சொல்லப்பட்டது போன்று இவ்வசனம் பெண்களுக்கும் பொருந்துமல்லவா? வேறு ஒருவருடைய மனைவியை இச்சிக்கக்கூடாது என்பது போன்று, மற்ற பெண்ணின் 'கணவனை' இச்சிக்கக்கூடது அல்லவா? மேற்கண்ட வசனம் இருவருக்கும் பொருந்தும்.

எனவே, பத்தாவது கட்டளை பெண்களை 'சொத்துக்கள்' என்ற நிலையில் பழைய ஏற்பாடு வைக்கவில்லை என்பது தான் உண்மை.

## குர்ஆனின் படி மனைவிகள் தான் முஸ்லிம்களின் விளைநிலங்கள் (சொத்துக்கள்)

2:223. உங்கள் மனைவியர் உங்கள் விளைநிலங்கள் ஆவார்கள்; எனவே உங்கள் விருப்பப்படி உங்கள் விளை நிலங்களுக்குச் செல்லுங்கள்; உங்கள் ஆத்மாக்களுக்காக முற்கூட்டியே (நற்கருமங்களின் பலனை) அனுப்புங்கள்; அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; (மறுமையில்) அவனைச் சந்திக்க வேண்டும் என்பதை உறுதியாக அறிந்து கொள்ளுங்கள். நம்பிக்கை கொண்டவர்களுக்கு நற்செய்தி கூறுவீராக! (முஹம்மது ஜான்).

இஸ்லாமில் பெண்கள், ஆண்களின் சொத்துக்கள் ஆவார்கள். மனைவியை அடிப்பதற்கு அல்லாஹ் முஸ்லிம்களுக்கு உரிமை கொடுத்துள்ளார். விவாகரத்து என்று வந்தால், பெண்களுக்கு ஒரு சட்டம் ஆண்களுக்கு ஒரு சட்டம். பெண்களின் சாட்சி, ஆண்களின் சாட்சியைவிட பாதி மட்டுமே. பெண்கள் தான் நரகத்தில் அதிகமாக இருப்பார்கள். இவைகள் எல்லாம் இஸ்லாமில் பெண்களின் நிலை.

தபரி சரித்திரத்தில் முஹம்மது என்ன கூறியுள்ளார் என்பதை கவனியுங்கள்:

முஹம்மது தமது கடைசி செய்தியிலே முஸ்லிம்களுக்கு சொன்ன அறிவுரைகளில் ஒன்று, கீழே கொடுக்கப்பட்டுள்ளது. ஆண்களே, பெண்கள் உங்களுடைய வீட்டு மிருகங்கள் போன்றவர்கள், அவர்களுக்கு எந்த சொத்துக்களையும் கொடுக்காதீர்கள் என்று அறிவுரை கூறுகின்றார்.

"Now then, O people, you have a right over your wives and they have a right over you. You have [the right] that they should not cause anyone of whom you dislike to tread your beds; and that they should not commit any open indecency (fahishah). **If they do, then God permits you to shut them in separate rooms AND TO BEAT THEM, but not severely.** If they abstain from [evil], they have the right to their food and clothing in accordance with custom (bi'l ma'ruf)." **Treat women well, FOR THEY ARE [like] DOMESTIC ANIMALS ('awan) WITH YOU AND DO NOT POSSESS ANYTHING FOR THEMSELVES.** (The History of Al-Tabari: The Last years of the Prophet, translated and annotated by Ismail K. Poonawala [State University of New York Press, Albany], Volume IX, p. 113; capital emphasis ours)



**கேள்வி 49: உபாகமம் 33:2ல் சொல்லப்பட்டவர் முஹம்மது தானே! மக்காவை 10 ஆயிரம் இராணுவத்துடன் சென்று கைப்பற்றிய நிகழ்ச்சியைத் தானே இவ்வசனம் சொல்கிறது?**

**பதில் 49:** இல்லை, இந்த வசனத்தில் சொல்லப்பட்டவர் கர்த்தர் ஆவார், முஹம்மது அல்ல.

குர்ஆனில் அல்லாஹ் பற்றி வரும் ஒரு இடத்தில், "இல்லை, இது அல்லாஹ் பற்றி அல்ல, முஹம்மது பற்றி என்று முஸ்லிம்கள் கூறினார்" அது மிகப்பெரிய குற்றமாகாதா? இதே போன்று தான் இந்த வசனத்திலும் கர்த்தர் பற்றிச் சொல்லப்பட்டதை அறியாமையில் முஸ்லிம்கள் "முஹம்மது" என்று கூறுகிறார்கள்.

இதைப் பற்றி கீழ்கண்ட கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளது, படிக்கவும்:

- **உபாகமம் 33:1-2 வசனங்கள் குறிப்பிடுவது, "கர்த்தரையா" அல்லது "முகமதுவையா"?**



**கேள்வி 50: கர்த்தர் சாலொமோனின் அனேக மனைவிகள் பற்றி எச்சரிக்காமல், கடைசியாக அவர் வேறு தேவர்களை சேவித்ததைப் பற்றி மட்டும் ஏன் அக்கரை கொள்கிறார்? பார்க்க: 1 இராஜாக்கள் 11:11 - 13.**

**பதில் 50:** இல்லை, கர்த்தர் ஆரம்பத்திலிருந்தே இஸ்ரேல் மக்களுக்கு அனேக மனைவிகளை திருமணம் செய்யவேண்டாம், மேலும் மற்ற அந்நிய தெய்வங்களை வணங்கும் பெண்களை திருமணம் செய்யாதீர்கள், அவர்கள் உங்களை பல தெய்வ வழிப்பாட்டுக்கு இழுப்பார்கள் என்று எச்சரித்தார்.

கீழ்கண்ட வசனங்களில் நாம் காண்பது, சாலொமோன் செய்த தவறின் உச்சக்கட்டம், அதனால் தேவன் கொடுத்த தண்டனையாகும்.

**I இராஜாக்கள் 11: 7-13**

7. அப்பொழுது சாலொமோன் எருசலேமுக்கு எதிரான மலையிலே மோவாபியரின் அருவருப்பாகிய காமோசுக்கும், **அம்மோன் புத்திரரின் அருவருப்பாகிய மோளோகுக்கும் மேடையைக் கட்டினான்**.

8. இப்படியே தங்கள் தேவர்களுக்குத் தூபங்காட்டிப் பலியிடுகிற அந்நியஜாதியாரான தன் **ஸ்திரீகள் எல்லாருக்காகவும் செய்தான்.**

9. ஆகையால் இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் சாலொமோனுக்கு **இரண்டுவிசை தரிசனமாகி, அந்நியதேவர்களைப் பின்பற்றவேண்டாம் என்று கட்டளையிட்டிருந்தும்**, அவன் கர்த்தரை விட்டுத் தன் இருதயத்தைத் திருப்பி,

10. அவர் கற்பித்ததைக் கைக்கொள்ளாமற்போனதினால் **கர்த்தர் அவன்மேல் கோபமானார்**.

11. ஆகையால் கர்த்தர் சாலொமோனை நோக்கி: நான் உனக்குக் கட்டளையிட்ட என் உடன்படிக்கையையும் என் கட்டளைகளையும் நீ கைக்கொள்ளாமற்போய் இந்தக் காரியத்தைச் செய்தபடியினால், **ராஜ்யபாரத்தை உன்னிடத்திலிருந்து பிடுங்கி**, அதை உன் ஊழியக்காரனுக்குக் கொடுப்பேன்.

12. ஆகிலும் உன் தகப்பனாகிய தாவீதினிமித்தம், நான் அதை உன் நாட்களிலே செய்வதில்லை; உன் குமாரனுடைய கையினின்று அதைப் பிடுங்குவேன்.

13. ஆனாலும் ராஜ்யம் முழுவதையும் நான் பிடுங்காமல், என் தாசனாகிய தாவீதினிமித்தமும், நான் தெரிந்துகொண்ட எருசலேமினிமித்தமும், ஒரு கோத்திரத்தை நான் உன் குமாரனுக்குக் கொடுப்பேன் என்றார்.

இதற்கு முன்பாக, இதே அத்தியாயத்தின் முதல் இரண்டு வசனங்களில், தேவனின் எச்சரிக்கையை நாம் பார்க்கலாம். கர்த்தர் எது நடக்கும் என்று எச்சரித்தரோ, அதே நடந்தது, அதற்காகத் தான் 13ம் வசனத்தில் இராஜ்ஜியத்தை நீக்குவதாக கர்த்தர் கூறுகின்றார்.

**I இராஜாக்கள் 11: 1-2**

1. ராஜாவாகிய சாலொமோன், பார்வோனின் குமாரத்தியை நேசித்ததுமல்லாமல், மோவாபியரும், அம்மோனியரும், ஏதோமியரும், சீதோனியரும், ஏத்தியருமாகிய அந்நிய ஜாதியாரான அநேகம் ஸ்திரீகள்மேலும் ஆசைவைத்தான்.

2. கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரை நோக்கி: **நீங்கள் அவர்களண்டைக்கும் அவர்கள் உங்களண்டைக்கும் பிரவேசிக்கலாகாது; அவர்கள் நிச்சயமாய்த் தங்கள் தேவர்களைப் பின்பற்றும்படி உங்கள் இருதயத்தைச் சாயப்பண்ணுவார்கள் என்று சொல்லியிருந்தார்; சாலொமோன் அவர்கள்மேல் ஆசைவைத்து, அவர்களோடு ஐக்கியமாயிருந்தான்**.

இது மட்டுமல்ல, மோசேயின் மூலமாகவும், இந்த கட்டளையை கர்த்தர் கொடுத்திருக்கின்றார், ஒரு இஸ்ரவேல் ராஜா என்பவன், மண்ணாசை, பெண்ணாசை இல்லாதவனாக இருக்கவேண்டும் என்று தோறாவில் தேவன் கட்டளை கொடுத்துயிருந்தார்.

**உபாகமம் 17:17** **அவன் இருதயம் பின்வாங்கிப் போகாதபடி அவன் அநேகம் ஸ்திரீகளைப் படைக்கவேண்டாம்**; வெள்ளியும் பொன்னும் தனக்கு மிகுதியாய்ப் பெருகப்பண்ணவும் வேண்டாம்.

சாலொமோன் மிகப்பெரிய ஞானி, தனக்கு அனைத்தும் தெரிந்திருக்கிறது, தாம் இடது புறமும், வலது புறமும் சாயாமல் இருக்கமுடியும் என்ற மமதையில் அனேக பெண்களை திருமணம் செய்து பாவத்தில் விழுந்தார்.

இது ஒரு அருமையான பாடத்தை நமக்கு கற்றுத் தருகின்றது, நாம் ராஜாவாக இருந்தாலும், மிகப்பெரிய ஞானியாக இருந்தாலும், தேவனின் கட்டளைகளுக்கு கீழ்படிந்து வாழ்ந்தால் தான் வெற்றியுள்ள வாழ்க்கையை வாழமுடியுமே தவிர, ஓவர் கான்பிடன்ஸ் வேலைக்கு உதவாது.

ரோமர் 11:20 நல்லது, அவிசுவாசத்தினாலே அவைகள் முறித்துப்போடப்பட்டன, நீ விசுவாசத்தினாலே நிற்கிறாய்; மேட்டிமைச் சிந்தையாயிராமல் பயந்திரு.

I கொரிந்தியர் 10:12 இப்படியிருக்க, தன்னை நிற்கிறவனென்று எண்ணுகிறவன் விழாதபடிக்கு எச்சரிக்கையாயிருக்கக்கடவன்.



**கேள்வி 51: உபாகமத்தில் தேவன் ஏன் ஒரு மனைவியை நேசித்து, இன்னொரு மனைவியை வெறுக்கச் சொல்கிறார்? இது நியாயமா? (பார்க்க உபாகமம் 21:15)?**

**பதில் 51:** முஸ்லிம் நண்பரே நீங்கள் மேற்கோள் காட்டிய வசனம் நீங்கள் சொல்வது போல சொல்லவில்லை. ஒருவனுக்கு இரண்டு மனைவிகள் இருந்தால், ஒரு பெண்ணை நேசித்து, இன்னொரு பெண்ணை வெறுக்கும்படி தேவன் சொல்லவில்லை.

இவ்வசனத்தின் பின்னணி வேறு விதமாக உள்ளது, அதாவது தேவன் நீதி செய்கின்ற இறைவன் என்பதைத் தான் இவ்வசனமும் இதற்கு அடுத்து வரும் வசனங்களும் சொல்கின்றன.

உண்மையில் இவ்வசனங்கள் 'ஆண்களுடைய அநியாயமான செயல்பாட்டை தடுக்கும் வண்ணமாக உள்ளன'. சரி, வாருங்கள், இவ்வசனங்களை படிப்போம்:

**உபாகமம் 21:15-17**

15. **இரண்டு மனைவிகளையுடைய ஒருவன், ஒருத்தியின்மேல் விருப்பாயும் மற்றவள்மேல் வெறுப்பாயும் இருக்க**, இருவரும் அவனுக்குப் பிள்ளைகளைப் பெற்றார்களேயாகில், முதற்பிறந்தவன் வெறுக்கப்பட்டவளின் புத்திரனானாலும்,

16. **தகப்பன் தனக்கு உண்டான ஆஸ்தியைத் தன் பிள்ளைகளுக்குப் பங்கிடும்நாளில், வெறுக்கப்பட்டவளிடத்தில் பிறந்த முதற்பேறானவனுக்கு**

**சேஷ்டபுத்திர சுதந்தரத்தை கொடுக்கவேண்டுமேயல்லாமல், விரும்பப்பட்டவளிடத்தில் பிறந்தவனுக்குக் கொடுக்கலாகாது**.

17. **வெறுக்கப்பட்டவளிடத்தில் பிறந்தவனை சேஷ்டபுத்திரனாக அங்கிகரித்து**, தனக்கு உண்டான ஆஸ்திகளிலெல்லாம் இரண்டு பங்கை அவனுக்குக் கொடுக்கவேண்டும்; அவன் தன் தகப்பனுடைய முதற்பலன், சேஷ்டபுத்திர சுதந்தரம் அவனுக்கே உரியது.

அக்காலத்தில் ஒரு ஆணுக்கு முதலாவதாக பிறக்கும் ஆண் பிள்ளைக்கு, தகப்பனின் சொத்துக்களில் இரண்டு பங்குகள் கொடுக்கவேண்டும் என்ற சட்டம் இருந்தது. ஒருவேளை ஒரு ஆணுக்கு இரண்டு மனைவிகள் இருந்து, ஏதோ ஒரு காரணத்திற்காக ஒரு மனைவியை அந்த ஆண் அதிகமாக நேசித்து, இன்னொரு மனைவியை வெறுத்து இருந்திருந்தாலும், முக்கியமாக இந்த வெறுக்கப்பட்ட பெண்ணுக்கு முதலாவதாக ஒரு ஆண் மகன் பிறந்திருந்தால். இந்த ஆண், தன் சொத்துக்களை பங்கிடும் போது, இந்த மகனுக்கு அவன் இரண்டு மடங்கு கொடுக்கவேண்டும் என்று தேவன் கட்டளையிடுகின்றார்.

**இவ்வசனங்களின் மூலம் நமக்கு வெளிப்படும் விவரங்கள் இவைகள் தான்:**

1) ஆண்கள் விரும்பி பல திருமணங்களைச் செய்தாலும், தங்களுடைய வக்கிர புத்தியினால், யார் அழகாக இவர்களுக்கு தென்படுவார்களோ, அவர்களுக்கே அதிக முக்கியத்துவம் கொடுப்பார்கள். இதை இஸ்லாமிய நபி முஹம்மதுவின் வாழ்விலும் காணலாம். முஹம்மது தமக்கு 53 வயது ஆகும் போது, 9 வயது சிறுமி ஆயிஷாவை திருமணம் செய்தார். இவருக்கு மொத்தம் 11 மனைவிகள். முதல் மனைவி இறந்த விட்டார்கள். இவருக்கு மற்ற மனைவிகளைக் காட்டிலும் இந்த பேத்தி வயது மனைவி தான் மிகவும் பிடித்தமான மனைவி (இந்த ஆயிஷா அவர்கள் தான் முஹம்மது கன்னிப்பெண்ணாக இருக்கும் போது திருமணம் செய்தார்). ஆயிஷா அவர்களுக்கு முஹம்மது அதிக முக்கியத்துவம் கொடுத்திருந்தார்.

2) ஒரு ஆண் தான் அதிகமாக நேசிக்கும் மனைவிக்கு பிறந்த பிள்ளைகளுக்கு அதிகமான சொத்துக்களை கொடுப்பதற்கு அதிக வாய்ப்பு உள்ளது. தன்னை தன் கணவர் மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாக நேசிக்கிறார் என்று அந்தப் பெண் பார்க்கும் போது, தன் பிள்ளைகளுக்கு அதிக சொத்துக்கள் வருவதற்கு அப்பெண், தன் கணவனிடம் பேசி, மற்றவர்களுக்கு அநீதி நடக்கும் படி செய்ய வாய்ப்பு உள்ளது.

3) இந்த அநீதியை தடுக்கவே மேற்கண்ட வசனங்களை தேவன் கட்டளையாக கொடுத்தார்.

4) மேலும் இந்த வசனங்களில் தேவன் நீங்கள் இப்படி பல திருமணம் செய்யுங்கள், சிலரை நேசித்து, சிலரை வெறுத்துவிடுங்கள் என்று சொல்லவில்லை. தேவனின் திட்டம் "ஒரு ஆணுக்கு ஒரு பெண்" என்பது தான், மனிதனின் ஆசையினால் அவன் பல திருமணங்களைச் செய்தான். இப்படிப்பட்ட நிலையிலும் சில சட்டங்களை மனிதன் மீறக்கூடாது, அநீதி நடக்கக்கூடாது என்பதற்காகத் தேவன் மேற்கண்ட அருமையான சட்டங்களைக் கொடுத்தார்.

முஸ்லிம்களே, பைபிளில் ஒரு வசனத்தை மட்டும் படிக்காமல், அதைச் சுற்றியுள்ள வசனங்களையும் படித்தால், பதில் கிடைக்கும். ஆனால், குர்ஆனில் அல்லாஹ் முஹம்மதுவின் மனைவிகளை பயமுறுத்துகிறார், "நீங்கள் பிரச்சனைகள் செய்தால், உங்களை முஹம்மது விவாகரத்து செய்துவிடுவார்" என்று பயமுறுத்தியுள்ளார்.

இதைப் பற்றி அறிய கீழ்கண்ட கட்டுரைகளை படியுங்கள்:

1. **தலாக் 3 – முஸ்லிம்களின் அன்னையர்களை மிரட்டிய (blackmail) அல்லாஹ்**
2. **தலாக் 4 – இஸ்லாமிய அன்னையர்களுக்கு இரண்டாம் (தலாக்) மிரட்டல் விடுத்த அல்லாஹ்**
3. **தலாக் 5 – நபிவழி: மனைவிக்கு வயதாகிவிட்டால் விவாகரத்து செய்யலாம்**



**கேள்வி 52: விக்கிரகங்களை செதுக்கி அவைகளை நமஸ்கரிக்கக்கூடாது என்று மோசேயின் சட்டத்தில் சொல்லியிருக்கும் போது, ஏன் சாலொமோன் கேருபீன்களை செதுக்கி தேவாலயத்தில் வைத்தார்? II நாளாகமம் 3:7**

**பதில் 52:** இந்த கேள்விக்கான பதில் மிகவும் சுலபமானது, அதாவது விக்கிரகங்களை, உருவங்களை வணங்குவதற்காக உருவாக்கக்கூடாது. ஆனால், அலங்காரத்திறகாக செய்யலாம்.

கீழ்கண்ட வசனத்தில், தேவாலயத்தின் சுவர்களில் அலங்காரத்திற்காக சாலொமோன் கேருபீன்களை செய்வித்தார், அந்த கேருபீன்களை வணங்குவதற்காக அல்ல.

II நாளாகமம் 3:7. அந்த மாளிகையின் உத்திரங்களையும், நிலைகளையும், அதின் சுவர்களையும், அதின் கதவுகளையும் பொன்தகட்டால் மூடி, **கொத்துவேலையால் சுவர்களிலே கேருபீன்களைச் செய்வித்தான்**.

இப்போது விக்கிரகங்களை வணங்கக்கூடாது என்று மோசேயின் சட்டத்தில் உள்ள விவரங்களை பார்ப்போம்:

யாத்திராகமம் 20:4. மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின்கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான **ஒரு சொரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம்**;

5. **நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம்**; உன் தேவனாகிய கர்த்தராயிருக்கிற நான் எரிச்சலுள்ள தேவனாயிருந்து, என்னைப் பகைக்கிறவர்களைக்குறித்துப் பிதாக்களுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறேன்.

மேலும் பார்க்க உபாகமம் 5:8-9

மோசே உருவாக்கிய உடன்படிக்கை பெட்டியிலும் கூட மேலே கேருபீன்கள் வைக்கப்பட்டு இருந்தது.

நான்காம் வசனத்தின் கடைசி பாகம், மற்றும் ஐந்தாம் வசனத்தின் முதல் வாக்கியத்தைப் பாருங்கள், "**ஒரு சொரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம், நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம்**".

அலங்காரங்களுக்காக, வியாபாரங்களுக்காக ஓவியங்களை வரைவதும், சிற்பங்களைச் செய்வதும் தவறு இல்லை. அவைகளை நாம் வணங்குவதற்காக வரைவதும், செதுக்குவதும் தான் தவறு, இது தேவனுக்கு கோபத்தை உண்டாக்கும் செயலாகும். விக்கிரகங்களை, ஓவியங்களை ஆராதனைக்குரிய இடத்தில் வைப்பது தான் தவறானதாகும்.

ஆக, தேவனுடைய ஆலயத்தின் சுவர்களில் அலங்காரத்திற்காக சாலொமோன் கேருபீன்களைச் செய்து வைத்தது தவறானதன்று.



**கேள்வி 53: கேதுராள் என்ற பெண் ஆபிரகாமின் மனைவியா அல்லது மறுமனையாட்டியா(வைப்பாட்டியா)? 1 நாளாகமம் 1:32ல் மறுமனையாட்டி என்றும், ஆதியாகமம் 25:1ல் "மனைவி" என்றும் சொல்லப்பட்டுள்ளதே! ஏன் இந்த முரண்பாடு?**

**பதில் 53:** இது முரண்பாடு இல்லை, இவ்விரு வசனங்களையும் கூர்ந்து ஆய்வு செய்தால், உண்மை புரியும்.

**ஆதியாகமம் 25**

25:1. ஆபிரகாம் கேத்தூராள் என்னும் பேர்கொண்ட ஒரு **ஸ்திரீயையும்(ishshah)** விவாகம் பண்ணியிருந்தான்.

25:6. ஆபிரகாமுக்கு இருந்த **மறுமனையாட்டிகளின்(pilegesh)** பிள்ளைகளுக்கோ ஆபிரகாம் நன்கொடைகளைக் கொடுத்து, தான் உயிரோடிருக்கும்போதே அவர்களைத் தன் குமாரனாகிய ஈசாக்கைவிட்டுக் கிழக்கே போகக் கீழ்தேசத்துக்கு அனுப்பிவிட்டான்.

**பொது மொழிப்பெயர்ப்பு:**

ஆதியாகமம் 25:1 ஆபிரகாம் மீண்டும் **திருமணம்** செய்தான். அவனது **மனைவியின்** பெயர் கேத்தூராள்.

I நாளாகமம் 1:32. **ஆபிரகாமின் மறுமனையாட்டியாகிய(pilegesh) கேத்தூராள்** பெற்ற குமாரர், சிம்ரான், யக்ஷான், மேதான், மீதியான், இஸ்பாக், சூவா என்பவர்கள்; யக்ஷானின் குமாரர், சேபா, தேதான் என்பவர்கள்.

எபிரேய மொழியில் "பெண்,மனைவி" போன்ற அர்த்தங்களுக்கு "இஷ்ஷாஹ்(ishshah – H802)" என்ற வார்த்தை பயன்படுகின்றது. "வைப்பாட்டி" என்ற வார்த்தைக்கு " பிலெகெஷ்- piylegesh - H6370 " என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆதியாகமம் 25ம் அத்தியாயம் 1ம் வசனத்தில், கேதுராள் என்ற பெண்ணை (இஷ்ஷாஹ்) ஆபிரகாம் எடுத்துக்கொண்டான் என்று உள்ளது, அதனை தமிழில் "விவாகம் பண்ணியிருந்தான்" என்று மொழியாக்கம் செய்துள்ளார்கள்.

ஆங்கிலத்தில் "Took a wife" என்று மொழியாக்கம் செய்திருப்பார்கள். இந்த வசனத்தில் "விவாகம்" என்ற வார்த்தை வருவதில்லை. அதே போன்று ஆங்கிலத்தில் "மனைவி(Wife)" என்ற வார்த்தை பயன்படுத்தியிருப்பார்கள்.

இஷ்ஷாஹ் என்ற வார்த்தை மனைவிக்கும் பயன்படுத்துவார்கள், பெண்ணுக்கும் (ஸ்திரிக்கும்) பயன்படுத்துவார்கள். இவ்வசனத்தின் படி, கேதுராள் என்பவர் ஆபிரகாமின் மனைவியா? அல்லது வைப்பாட்டியா? என்பதை எப்படி அறிவது?

இதனை அறிய, இதே 25வது அத்தியாயம், ஆறாம் வசனத்தை கவனிக்கவேண்டும்.

ஆதியாகமம் 25: 6. ஆபிரகாமுக்கு இருந்த **மறுமனையாட்டிகளின்(pilegesh)** பிள்ளைகளுக்கோ ஆபிரகாம் நன்கொடைகளைக் கொடுத்து, தான் உயிரோடிருக்கும்போதே அவர்களைத் தன் குமாரனாகிய ஈசாக்கைவிட்டுக் கிழக்கே போகக் கீழ்தேசத்துக்கு அனுப்பிவிட்டான்.

இந்த வசனத்தில் ஆபிரகாம், மற்ற மறுமனையாட்டிகளுக்கு பிறந்த பிள்ளைகளுக்கு பரிசுகளை கொடுத்து ஈசாக்கை விட்டு தூரமாக அனுப்பிவிட்டதாக காண்கிறோம். முதல் வசனத்தில் வரும் கேதுராள் கூட இந்த இடத்தில் மறுமனையாட்டியாகத் தான் கருதப்பட்டு, அவர்களின் பிள்ளைகளுக்கு பரிசுகளை கொடுத்து அனுப்பிவிட்டான் ஆபிரகாம்.

இந்த வசனத்தில் எபிரேய வார்த்தை "பிலெகெஷ்" என்பது தான் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆக, கேதுராள் என்ற பெண் ஆபிரகாமின் மறுமனையாட்டி ஆவார் என்பது புரியும்.

இதைத் தான் 1 நாளாகமம் 1:32ல், "ஆபிரகாமின் மறுமனையாட்டியாகிய (pilegesh) கேத்தூராள் " என்று குறிப்பிடப்பட்டுள்ளது, மேலும், இவ்வசனத்திலும் "பிலெகேஷ்" என்ற வார்த்தைத் தான் பயன்படுத்தப்பட்டுள்ளது.

முடிவுரையாக, கேதுராள் என்பவர் ஆபிரகாமின் மறுமனையாட்டியாவார், இதை ஆதியாகமம் 25:6 மற்றும் 1 நாளாகமம் 1:32ல் தெளிவாக சொல்லப்பட்டுள்ளது. இதில் முரண்பாடு எதுவுமே இல்லை.

**பழைய ஏற்பாட்டின் படி மனைவி மற்றும் மறுமனையாட்டி:**

பழைய ஏற்பாட்டின் காலத்தில் மனைவி மற்றும் மறுமனையாட்டி என்ற இரண்டு பிரிவுகளுக்கு உள்ள வித்தியாசம் என்னவென்றால், தகப்பனின் சொத்துக்களில் "மனைவி" என்ற ஸ்தானத்தில் உள்ள பெண்களுக்கு பிறந்த பிள்ளைகளுக்கு அதிக உரிமை உண்டு. ஆனால், மறுமனையாட்டி என்ற ஸ்தானத்தில் இருக்கும் பெண்களுக்கு பிறந்த பிள்ளைகளுக்கு அவ்வளவு உரிமைகள் இல்லை, அதனால் தான் "ஆபிரகாம் கேதுராளின் பிள்ளைகளுக்கு பரிசுகளை கொடுத்து தூரமாக அனுப்பிவிட்டான்".

ஆகார் யார்? இஸ்மாயீல் யார்: மறுமனையாட்டி கேதுராளுக்கு நடந்தது போன்று தான், ஆகாருக்கும் இஸ்மவேலுக்கும் நடந்தது. ஆபிரகாமின் சொத்துக்களில் (வாக்குதத்தங்களில்) ஈசாக்கிற்கு தான் உரிமையே ஒழிய, இஸ்மாயீலுக்கு அல்ல. சாராள் ஆபிரகாமின் மனைவி, ஆகார் மற்றும் கேதுராள் ஆபிரகாமின் மறுமனையாட்டியாவார்கள்.

**இஸ்லாமின் படி மனைவி மற்றும் செக்ஸ் அடிமைகள்:**

பைபிளின் படி பழைய ஏற்பாட்டு காலத்தில், ஒரு ஆணுக்கு மனைவி இருப்பார்கள், சிலருக்கு மறுமனையாட்டிகளும் (வைப்பாட்டிகளும்) இருப்பார்கள்.

ஆனால், குர்ஆனின் படி முஸ்லிமுக்கு மனைவி இருப்பார்கள், உடலுறவு மட்டும் வைத்துக்கொள்வதற்கு அடிமைப்பெண்களும் இருப்பார்கள். இதனை குர்ஆன் "வலக்கரத்துக்கு சொந்தமானவர்கள்" என்று அழைக்கிறது. முஹம்மதுவிற்கு மரியம் என்ற ஒரு காப்டிக் கிறிஸ்தவ பெண் அடிமைப்பெண்ணாக இருந்தார். சில முஸ்லிம்கள் இவர் முஹம்மதுவின் மனைவி என்றார்கள், சிலர் இல்லை இவர் செக்ஸ் அடிமைத் தான் என்கிறார்கள்.

செக்ஸ் அடிமைத்தனத்தை யெகோவா தேவன் பைபிளில் தடுத்து இருக்கிறார். போரில் பிடிபட்ட அடிமைப் பெண்களை திருமணம் செய்து, மனைவியாக்கிய பிறகு தான் அவளை தொடவேண்டும். திருமணத்திற்கு வெளியே உடலுறவு கொண்டால், அது விபச்சாரமாகும்.

ஆனால், இஸ்லாமில் இது விபச்சாரமாகாது, இது ஹலால் ஆகும். எனவே தான் கிறிஸ்தவர்கள் "யெகோவா தேவன் வேறு, அல்லாஹ் வேறு" என்று சொல்கிறார்கள். ஒரே விவரத்தை ஒருவர் விபச்சார பாவம் என்கிறார், இன்னொருவர் "அது பாவமில்லை, அது அனுமதிக்கப்பட்டது" என்கிறார். இது எப்படி சாத்தியமாகும்? யெகோவாவும், அல்லாஹ்வும் வெவ்வேறானவர்கள் என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும்.

**எபிரேய பைபிள் அகராதி தொடுப்புக்கள்:** Hebrew Bible Lexicon Links:

- Genesis 25:1 **www.blueletterbible.org/kjv/gen/25/1/t_conc_25001**
- H802 Ishshah: **www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm**
- H6370 – piylegesh: **www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm**



**கேள்வி 54: ஏன் பெண்கள் சுத்திகரிக்கப்படவேண்டும் என்று பைபிள் கூறுகிறது, அவர்கள் அழுக்காக இருக்கிறார்கள் என்று பொருளா? பார்க்க எஸ்தர் 2:9 -12.**

**பதில் 54:** இவ்வசனங்களில் பெண்கள் 'சுத்திகரிப்பு' செய்வதற்காக 12 மாதங்கள் செலவழித்தார்கள் என்று சொல்லப்பட்டது, இது தேவன் கொடுத்த கட்டளையன்று, இது பெர்சிய அரசாங்கம் விதித்த கட்டளையாகும். பைபிளில் குற்றம் பிடிப்பதற்கென்றே வேண்டுமென்றே சரியாக ஆய்வு செய்யாமல், முஸ்லிம்கள் இந்த கேள்வியை கேட்டிருக்கிறார்கள்.

எஸ்தர் 2:9. அந்தப் பெண் அவன் பார்வைக்கு நன்றாயிருந்ததினால், அவளுக்கு அவன் கண்களிலே தயை கிடைத்தது; **ஆகையால் அவளுடைய சுத்திகரிப்புக்கு வேண்டியவைகளையும்**, அவளுக்குத் தேவையான மற்றவைகளையும் அவளுக்குக் கொடுக்கவும், ராஜ அரமனையிலிருக்கிற ஏழு தாதிமார்களை அவளுக்கு நியமிக்கவும் ஜாக்கிரதைப்பட்டு கன்னிமாடத்தில் சிறந்த ஒரு இடத்திலே அவளையும் அவள் தாதிமார்களையும் வைத்தான்.

பெர்சிய அரசாங்கமோ, அல்லது பைபிளோ பெண்கள் அழுக்காக இருக்கிறார்கள் என்று இங்கு சொல்லவில்லை. இங்கு அரசருக்கு முன்பாக பெண்கள் வருவதற்கு முன்பாக, செய்யப்பட்டவேண்டிய "**அழகு சுத்திகரிப்பு ஆகும்**" இது.

**பெண்களின் அழகு நிலையங்கள்:** இன்றும் பெண்களுக்கென்று அழகு நிலையங்கள் இருக்கின்றன அல்லவா? பொதுவாகவே வசதி படைத்த பெண்கள் இன்றும், வாரம் ஒருமுறை

அல்லது மாதம் ஒருமுறை அழகு நிலையங்களுக்குச் சென்று தங்கள் தலைமுடி, நகங்கள், முகம், கை கால்கள் போன்றவைகளை மேலும் அழகுபடுத்திக்கொள்கிறார்கள்.

முக்கியமாக, திருமணத்திற்கு முன்பு மணப்பெண்ணை அழகு நிலையத்துக்குச் அழைத்துச் சென்று, பல மணி நேரம் அலங்காரம் செய்து, தயார் படுத்துகிறார்கள் அல்லவா! இதைத் தான் நாம் எஸ்தர் புத்தகத்தில் "**சுத்திகரிப்பு**" என்று பார்க்கிறோம்.

இதனை 12ம் வசனம் தெளிவாக விளக்குகிறது, இங்கு சுத்திகரிப்பு என்பது அழுக்கை நீக்குவது அல்ல, இன்னும் அழகாக மாற்றுவது.

எஸ்தர் 2:12. **ஒவ்வொரு பெண்ணும் ஆறுமாதம் வெள்ளைப்போளத் தைலத்தினாலும், ஆறுமாதம் சுகந்தவர்க்கங்களினாலும்**, ஸ்திரீகளுக்குரிய மற்றச் சுத்திகரிப்புகளினாலும் ஜோடிக்கப்படுகிற நாட்கள் நிறைவேறி, இவ்விதமாய் ஸ்திரீகளின் முறைமைப்படி பன்னிரண்டு மாதமாகச் செய்யப்பட்டுத் தீர்ந்தபின்பு, ராஜாவாகிய அகாஸ்வேருவினிடத்தில் பிரவேசிக்க, அவளவளுடைய முறை வருகிறபோது,

முஸ்லிம்கள் பைபிளிலிருந்து ஒரு கேள்வியை எழுப்புவதற்கு முன்பு, முழு அத்தியாயத்தையும் படித்தால், கேள்வி கேட்கவேண்டிய அவசியம் ஏற்படாது என்பது என் கருத்து.

**இஸ்லாம் தான் பெண்களை அழுக்கானவர்களாக பாவிக்கிறது:**

இஸ்லாமில் பெண்கள் தங்கள் மாதவிடாய் நேரங்களில் குர்ஆனை தொடக்கூடாது, தொழக்கூடாது, மசூதிக்கு வரக்கூடாது, நோன்பு நோர்க்கக்கூடாது ஏன்? ஏனென்றால் அல்லாஹ் அவர்களை அந்த சமயத்தில் அழுக்கானவர்களாக பார்க்கிறார்.

ஆனால், கிறிஸ்தவத்தில் பெண்கள் அப்படிப்பட்ட நேரங்களில் ஜெபம் செய்யலாம், சர்சுக்குச் சென்று எல்லா மக்களோடு சேர்ந்து தேவனை தொழுதுக்கொள்ளலாம், ஆராதனை செய்யலாம், பைபிளும் படிக்கலாம், ஏனென்றால், சரீர சூழ்நிலைகளை தேவன் பார்ப்பதில்லை, அவர் இருதயத்தை மட்டுமே பார்க்கிறார்.

இதை படித்துக்கொண்டு இருக்கின்ற நீங்கள் ஒரு முஸ்லிம் பெண்ணாக இருந்தால், 'உண்மையைச் சொல்லுங்கள், உங்களை அழுக்கானவர்கள் என்று முத்திரை குத்துவது யார்? அல்லாஹ்வா? அல்லது இயேசுவா?'



**கேள்வி 55: சங்கீதம் 45:3-5 வசனங்கள் முஹம்மதுவை குறிக்கிறது என்று சில முஸ்லிம்கள் கூறுகிறார்கள், இது சரியா?**

**பதில் 55:** இல்லை, இந்த வசனங்கள் முஹம்மது பற்றிய முன்னறிவிப்பு பற்றியதல்ல. இந்த சங்கீதம் இஸ்ரவேலர்கள் ராஜாவைப் பற்றியதாக இருக்கிறது என்கிறார்கள், முக்கியமாக சாலொமோன் ராஜாவைப் பற்றியது என்று வேத அறிஞர்கள் விளக்கவுரை எழுதுகிறார்கள்.

**சங்கீதம் 45:3-5**

3. சவுரியவானே, உமது மகிமையும் உமது மகத்துவமுமாகிய உம்முடைய பட்டயத்தை நீர் உம்முடைய அரையிலே கட்டிக்கொண்டு,

4. சத்தியத்தினிமித்தமும், நீதியுடன் கூடிய சாந்தத்தினிமித்தமும், உமது மகத்துவத்திலே ஜெயமாக ஏறிவாரும்; உமது வலதுகரம் பயங்கரமானவைகளை உமக்கு விளங்கப்பண்ணும்.

5. உம்முடைய அம்புகள் கூர்மையானவைகள், அவைகள் ராஜாவுடைய சத்துருக்களின் இருதயத்திற்குள் பாயும்; ஜனசதளங்கள் உமக்குக் கீழே விழுவார்கள்.

**இது மேசியாவைப் பற்றிய சங்கீதம்:** இந்த சங்கீதத்தில் மேசியாவைப் பற்றிச் சொல்லப்பட்டுள்ளது, மேலும் புதிய ஏற்பாட்டிலும், எபிரேயர் என்ற புத்தகத்தின் முதல் அத்தியாயத்தில், இச்சங்கீதத்தின் வசனங்கள் மேசியாவிற்காக மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.

**சங்கீதம் 45:6-7**

6. **தேவனே, உமது சிங்காசனம் என்றென்றைக்குமுள்ளது, உமது ராஜ்யத்தின் செங்கோல் நீதியுள்ள செங்கோலாயிருக்கிறது**.

7. **நீர் நீதியை விரும்பி, அக்கிரமத்தை வெறுக்கிறீர்; ஆதலால் தேவனே, உம்முடைய தேவன் உமது தோழரைப்பார்க்கிலும் உம்மை ஆனந்த தைலத்தினால் அபிஷேகம்பண்ணினார்.**

**எபிரேயர் 1:8-9**

8. குமாரனை நோக்கி: **தேவனே, உம்முடைய சிங்காசனம் என்றென்றைக்குமுள்ளது, உம்முடைய ராஜ்யத்தின் செங்கோல் நீதியுள்ள செங்கோலாயிருக்கிறது**.

9. **நீர் நீதியை விரும்பி, அக்கிரமத்தை வெறுத்திருக்கிறீர்; ஆதலால், தேவனே, உம்முடைய தேவன் உமது தோழரைப்பார்க்கிலும் உம்மை ஆனந்த தைலத்தினால் அபிஷேகம்பண்ணினார் என்றும்**;

மாத்யூ ஹென்றி போன்ற வேத பண்டிதர்கள், இது மேசியாவைப் பற்றிய சங்கீதம் என்று விளக்கம் அளிக்கிறார்கள்.

Matthew Hendry Commentary: Psalm 45

This psalm is an illustrious prophecy of **Messiah the Prince:** it is all over gospel, and points at him only, as a bridegroom espousing the church to himself and as a king ruling in it and ruling for it. It is probable that our Saviour has reference to this psalm when he compares the kingdom of heaven, more than once, to a nuptial solemnity, the solemnity of a royal nuptial, Mt. 22:2; 25:1. We have no reason to think it has any reference to **Solomon's marriage with Pharaoh's daughter;** if I thought that it had reference to any other than the mystical marriage between Christ and his church, I would rather apply it to some of David's

marriages, because he was a man of war, such a one as the bridegroom here is described to be, which Solomon was not. But I take it to be purely and only meant of Jesus Christ; of him speaks the prophet this, of him and of no other man; and to him (v. 6, 7) it is applied in the New Testament (Heb. 1:8), nor can it be understood of any other. The preface speaks the excellency of the song (v. 1).

Source: **https://www.blueletterbible.org/Comm/mhc/Psa/Psa_045.cfm**

"தேவனே, உம்முடைய சிங்காசனம் என்றென்றைக்குமுள்ளது" இது இறைவனைக் குறிக்கும், மனிதனைக் குறிக்காது. முஹம்மதுவின் "சிங்காசனம் என்றென்றைக்குமுள்ளது" என்று சொல்லமுடியுமா? நிச்சயமாக முடியாது.

இந்த சங்கீதத்திற்கும் முஹம்மதுவும் முன்னறிவிப்பிற்கும் சம்மந்தமில்லை.



**கேள்வி 56: ஒரு முஸ்லிம் கேட்டார்: "ஒரு பெண் பெண்ணாக இருப்பதால், அவளை நரகத்தில் தள்ளுவது தேவனுக்கு தகுமோ"? பார்க்க நீதிமொழிகள் 5:3-5.**

**பதில் 56:** இந்த கேள்வியை கேட்ட முஸ்லிம் சகோதரர், தவறாக புரிந்துக்கொள்வதற்கென்றே டிப்ளமா வாங்கி இருப்பார் போல் தெரிகின்றது.

கீழ்கண்ட மூன்று வசனங்களை படித்து, "பெண்கள் நரகத்திற்குச் செல்வார்களென்று இவ்வசனங்கள் சொல்கின்றன" என்று யாராவது சொல்லமுடியுமா? நிச்சயமாக முடியாது.

**நீதிமொழிகள் 5:3-5:**

3. **பரஸ்திரீயின்** உதடுகள் தேன்கூடுபோல் ஒழுகும்; அவள் வாய் எண்ணெயிலும் மிருதுவாயிருக்கும்.

4. **அவள் செய்கையின் முடிவோ எட்டியைப் போலக் கசப்பும், இருபுறமும் கருக்குள்ள பட்டயம் போல் கூர்மையுமாயிருக்கும்.**

5. **அவள் காலடிகள் மரணத்துக்கு இறங்கும்; அவள் நடைகள் பாதாளத்தைப் பற்றிப்போகும்.**

இந்த வசனங்கள் சொல்கின்ற பெண், தீய காரியங்களைச் செய்கின்ற ஸ்திரி ஆவாள். உதாரணத்திற்கு, பணத்திற்காக தங்கள் உடல்களை விற்கும் பெண்கள் பற்றியது இந்த பகுதி.

"**அவள் செய்கையின் முடிவோ எட்டியைப் போலக் கசப்பும்**" என்ற வாக்கியத்தின் படி, அப்படிப்பட்ட பெண்ணின் செய்கையின் முடிவு, கசப்பு, அதாவது **தீமை செய்வது** என்று சொல்லப்பட்டதிலிருந்து, இது சாதாரண பெண்கள் பற்றிய பொதுவான அறிக்கையில்லை, இது தீய பெண்களைப் பற்றியது என்று புரியும், விபச்சாரம் போன்றவைகளைச் செய்யும் பெண்கள் பற்றியதாகும்.

இதே அத்தியாயத்தின் ஆறாவது வசனம் இன்னும் ஒருபடி மேலே சென்று, நல்ல பாதையை (ஜீவ பாதையை) தெரிந்துக்கொள்ள அவள் தடைசெய்வாள், குழப்புவாள் என்று எச்சரிக்கப்பட்டுள்ளது.

**நீதிமொழிகள் 5:6**

6. நீ **ஜீவமார்க்கத்தைச் சிந்தித்துக்கொள்ளாதபடிக்கு**, அவளுடைய நடைகள் மாறிமாறி விகாரப்படும்; அவைகளை அறியமுடியாது.

இதே நீதிமொழிகள் **31வது அத்தியாயம் 10 லிருந்து 31வது வசனம் வரை** படித்துப் பாருங்கள், பாரதியின் புதுமைப்பெண் தெரிவாள். இன்றிலிருந்து 2500 ஆண்டுகளுக்கு முன்பே, பழைய ஏற்பாடு பெண்கள் பற்றி இப்படி எழுதியிருப்பதை கவனித்தால், இந்திய வேத நூல்களிலும், மனுஸ்மிருதி, மற்றும் குர்ஆனிலும் பெண்கள் பற்றி எழுதப்பட்டவைகள் மனித கற்பனைகள் என்பது புரியும்.

**நரகத்தில் பெண்கள் தான் அதிகமாக போவார்கள் என்று முஹம்மது சொல்லியுள்ளார்:**

முஹம்மதுவிற்கு நரகம் காட்டப்பட்டதாம். அதில் பெரும்பாலோர் பெண்களாக இருந்தார்கள் என்று அவர் கூறுகிறார். இதற்கு காரணம் என்னவென்று கேட்டபோது பெண்கள் தங்கள் "'கணவனை நிராகரிக்கிறார்கள். உதவிகளை நிராகரிக்கிறார்கள். அவர்களில் ஒருத்திக்குக் காலம் முழுவதும் நீ நன்மைகளைச் செய்து கொண்டேயிருந்தது, பின்னர் (அவளுக்குப் பிடிக்காத) ஒன்றை உன்னிடம் கண்டுவிட்டாளானால் 'உன்னிடமிருந்து ஒருபோதும் நான் ஒரு நன்மையையும் கண்டதில்லை' என்று பேசிவிடுவாள்" என்று முஹம்மது பதில் அளித்துள்ளார். பெண்கள் பற்றி மிகவும் கேவலமாக முஹம்மது விமர்சித்துள்ளார்.

முஹம்மதுவிற்கு தெரிந்த ஒரு சில பெண்கள் புரியும் சில செயல்களை அடிப்படையாகக் கொண்டு, உலகில் உள்ள அனைத்து பெண்களும் அப்படியே நடந்துக்கொள்வார்கள் என்று முஹம்மது நினைத்துவிட்டார். இஸ்லாமிய சமுதாயத்தில் பெண்கள் எல்லாவற்றிற்கும் ஆண்கள் மீது ஆதாரப்பட்டு இருப்பார்கள். ஆகையால், இஸ்லாமிய பெண்களை மனதில் வைத்துக்கொண்டு முஹம்மது, 'இது தான் உலக சத்தியம்' என்பது போல போதித்துவிட்டார். ஆண்களின் நிலை என்ன? ஆண்கள் தங்கள் மனைவிகளை நிராகரிப்பதில்லையா? நோகடிப்பதில்லையா? அடிப்பதில்லையா? ஒரு ஆண் மூன்று முறை "விவாகரத்து" என்று சொல்லிவிட்டால், விவாகரத்து நடந்துவிடும் என்றுச் சொல்லும் முஹம்மது, இதே அனுமதியை பெண்களுக்கு கொடுப்பாரா? நல்லவர்கள் கெட்டவர்கள் இருபாலாரிடமும் உண்டு, முக்கியமாக சொல்லவேண்டுமென்றால், தீய செயல்களைச் செய்வதில் பெண்களை விட ஆண்களின் சதவிகிதம் அதிகமாக இருக்கலாம். இதையெல்லாம் அறிந்துக்கொள்ளாமல், தன் மனதில் தோன்றியபடி போதனைச் செய்து, பெண்களை இழிவுப்படுத்தும் முஹம்மதுவை கிறிஸ்தவர்கள் தீர்க்கதரிசி என்று நம்புவார்களா?

**ஸஹீஹ் புகாரி எண்: 29**

29. 'எனக்கு நரகம் காட்டப்பட்டது. **அதில் பெரும்பாலோர் பெண்களாகக் காணப்பட்டனர்.** ஏனெனில், அவர்கள் நிராகரிப்பவர்களாக இருந்தனர்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியபோது, 'இறைவனையா அவர்கள் நிராகரிக்கிறார்கள்?' எனக் கேட்கப்பட்டதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், '**கணவனை நிராகரிக்கிறார்கள். உதவிகளை நிராகரிக்கிறார்கள். அவர்களில் ஒருத்திக்குக் காலம் முழுவதும் நீ நன்மைகளைச் செய்து கொண்டேயிருந்தது, பின்னர் (அவளுக்குப் பிடிக்காத) ஒன்றை உன்னிடம் கண்டுவிட்டாளானால் 'உன்னிடமிருந்து ஒருபோதும் நான் ஒரு நன்மையையும் கண்டதில்லை**' என்று பேசிவிடுவாள்' என்றார்கள்'' என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.



**கேள்வி 57: உன்னதப்பாட்டு 5:16ல் முஹம்மது பற்றி முன்னறிவிப்பு உண்டு முஸ்லிம்கள் சொல்கிறார்கள், இது உண்மையா?**

**பதில் 57:** "பழைய ஏற்பாட்டில் முஹம்மதுவைப் பற்றிய முன்னறிவிப்புக்கள் உண்டு, உன்னதப்பாட்டு 5:14-16 வரையுள்ள வசனங்களில், "முஹம்மது" என்ற பெயர் அப்படியே கொடுக்கப்பட்டுள்ளது என்றும், இந்த வசனத்தில் வரும் பெயர் எபிரேய மொழியில் அப்படியே முஹம்மது என்பதாகும் என்றும் முஸ்லிம்கள் கூறுகிறார்கள்".

ஆகையால், பைபிளில் முன்னறிவிக்கப்பட்ட தீர்க்கதரிசியை ஏன் நீங்கள் விசுவாசிக்கக்கூடாது என்று முஸ்லிம்கள் கேட்கிறார்கள்.

**முஸ்லிம்களுக்கு சில கேள்விகள்:**

1) பைபிள் திருத்தப்பட்டது என்று இஸ்லாமியர்கள் குற்றம் சாட்டுகிறார்கள் , ஆனால், ஏன் பைபிளிலிருந்து சில வசனங்களை எடுத்துக்கொண்டு, இதோ இங்கே எங்கள் நபி பற்றி கூறியுள்ளது என்று சொல்கிறார்கள்?

2) உங்களுக்கு தேவைப்பட்டால், பைபிளிலிருந்து வசனங்களை காட்டுவீர்கள், தேவையில்லையானால் பைபிள் மீது குற்றம் சுமத்துவீர்கள்? ஏன் இந்த இரட்டை வேஷம்?

3) முக்கியமாக உன்னதப்பாட்டு என்ற பழைய ஏற்பாட்டு நூல் மிகவும் ஆபசமாக உள்ளது என்று காது கிழிய மேடையில் பேசுகிறீர்கள், ஆனால், அதே உன்னத்தப்பாட்டில் உங்கள் நபியை தேடுகிறீர்கள்? இப்படி சொல்ல உங்களுக்கு கூச்சமாகவும் வெட்கமாகவும் தெரியவில்லையா? ஆபாசமாக இருக்கிறது என்று குற்றம் சுமத்தும் புத்தகத்தில் எங்கள் முஹம்மதுவை நாம் காட்டுகின்றோமே, இது சரியானதா என்று இஸ்லாமியர்கள் சுயமாக சிந்திப்பார்களா?

ஆக, உங்களுக்கு தேவையான பைபிள் வசனங்களை பிடித்துக்கொண்டு இவைகள் திருத்தப்படாத வசனங்கள் என்று சொல்லுவீர்கள், அதே பைபிளின் அடுத்தடுத்த வசனங்கள் திருத்தப்பட்டுள்ளது என்று சொல்லுவீர்கள், இது என்ன நியாயம்?

**இப்போது நேரடியாக பதிலை காணலாம்.**

முதலாவதாக, முஹம்மது பற்றிய எந்த ஒரு முன்னறிவிப்பும் பைபிளில் இல்லை, அது பழைய ஏற்பாடாக இருக்கட்டும், அல்லது புதிய ஏற்பாடாக இருக்கட்டும், இரண்டிலும் உங்கள் நபி பற்றி ஒரு சிறு குறிப்பும் இல்லை.

இரண்டாவதாக, உன்னத்தப்பாட்டிற்கு வரும் போது, அது கணவன் மனைவி அல்லது காதலன் காதலிக்கு இடையே நடைபெற்ற ஒரு உரையாடலாக உள்ளது. இப்போது நீ மேற்கோள் காட்டிய வசனங்களை படிப்போம்:

**உன்னதப்பாட்டு 5:14-16**

5:14 அவர் கரங்கள் படிகப்பச்சை பதித்த பொன் வளையல்களைப் போலிருக்கிறது; அவர் அங்கம் இந்திரநீல இரத்தினங்கள் இழைத்த பிரகாசமான யானைத் தந்தத்தைப்போலிருக்கிறது.

5:15 அவர் கால்கள் பசும்பொன் ஆதாரங்களின்மேல் நிற்கிற வெள்ளைக்கல் தூண்களைப்போலிருக்கிறது; அவர் ரூபம் லீபனோனைப்போலவும் கேதுருக்களைப்போலவும் சிறப்பாயிருக்கிறது.

5:16 அவர் வாய் மிகவும் மதுரமாயிருக்கிறது; அவர் முற்றிலும் **அழகுள்ளவர்**. இவரே என் நேசர்; எருசலேமின் குமாரத்திகளே! இவரே என் சிநேகிதர்.

மேற்கண்ட வசனங்களை முழுவதுமாக முதலாம் வசனத்திலிருந்து படித்துப்பார்த்தால், ஒரு பெண் தன் நாயகனைப் பற்றி வர்ணிக்கும் வர்ணனையை காணலாம். இந்த விவரங்களில் திடீரென்று 7ம் நூற்றாண்டில் வந்த முஹம்மது எங்கே வந்தார்?

**இப்போது 16ம் வசனத்தை எபிரேய மொழியில் பார்க்கலாம்:**

எபிரேய மொழியில் இந்த வார்த்தையின் எண்: **H4261**

எபிரேய வார்த்தை: **מַחְמָד (machmad)**

அர்த்தம்: **1) desire, desirable thing, pleasant thing – ஆசையான, விருப்பமுள்ள, அழகான.**

இந்த தொடுப்பை சொடுக்கி, எபிரேய அகராதியில் இந்த விளக்கத்தை தெரிந்துக்கொள்: **http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H4261&t=KJV**

**மக்மத்:** என்ற வார்த்தை எங்கு வந்தாலும் அங்கு உங்கள் முஹம்மது இருக்கிறார் என்றுச் சொல்வது அறியாமையாக உள்ளது. முஸ்லிம்கள் வெறும் உன்னதப்பாட்டு வசனத்தை மட்டுமே மேற்கோள் காட்டுகிறார்கள், இந்த வார்த்தை வரும் இதர வசனங்களையும் காண்போம். இந்த ஒவ்வொரு இடத்திலும் உங்கள் முஹம்மது பற்றியே முன்னறிவிப்பு செய்யப்பட்டுள்ளது முஸ்லிம்கள் சொல்லமுடியுமா?

**1) பழைய ஏற்பாட்டிலிருந்து 1 இராஜாக்கள் 20:6ம் வசனத்தை ஒரு முறை படிப்போமா?**

ஆனாலும் நாளை இந்நேரத்தில் என் ஊழியக்காரரை உன்னிடத்தில் அனுப்புவேன்; அவர்கள் உன் வீட்டையும் உன் ஊழியக்காரரின் வீடுகளையும் சோதித்து, உன் கண்ணுக்குப் **பிரியமானவைகள்** எல்லாவற்றையும் தங்கள் கைகளில் எடுத்துக்கொண்டு போவார்கள் என்றார் என்று சொன்னார்கள். ( 1 இராஜாக்கம் 20:6)

இந்த வசனத்தில் "பிரியமானவைகள்" என்ற தமிழ் வார்த்தையின் எபிரேய வார்த்தை, முஸ்லிம்கள் சொல்லுகின்ற "மக்மத்" என்பதாகும். ஒரு இராஜா இன்னொரு இராஜாவிடம் சொல்லியனுப்பிய மிரட்டுகின்ற செய்தி தான் இந்த வசனமாகும். உன் வீட்டில் இருக்கும் நல்லவைகள் அனைத்தையும் என் சேவகர்கள் எடுத்துக்கொள்வார்கள் என்று

சொல்லியனுப்புகிறார். இந்த இடத்திலும் உங்கள் முஹம்மது பற்றி முன்னறிவிப்பு உண்டா? முழு அதிகாரத்தையும் படித்துப் பாருங்கள்.

முஸ்லிம்களின் லாஜிக்கின் படி பார்த்தால், முஹம்மது ஒரு வீட்டில் இருக்கும் ஃபர்னிச்சர் மற்றும் அலங்கார பொருள், அல்லது தங்கம் போன்ற விலையுயர்ந்த பொருள் ஆவார். எனவே ஒரு அரசன் ஒரு நாட்டை கைப்பற்றும் போது அவைகளை (அதாவது முஹம்மதுவை) கொள்ளையடித்துக்கொண்டுச் செல்வதாக இவ்வசனம் உள்ளது. இது முஹம்மதுவிற்கு பொருந்துமா?

**2) அதே பழைய ஏற்பாட்டில், 2 நாளாகமம் 36:19ம் வசனத்தை படிப்போமா?**

இந்த வசனத்தில் "திவ்வியமான" என்ற தமிழ் வார்த்தையின் எபிரேய வார்த்தை தான் "மக்மத்" என்பது, அதாவது ஆலயத்தை தீயிட்டு கொளுத்தி, அதில் கணப்பட்ட அழகான பணிமுட்டுக்களையும் அழித்துவிட்டார்கள் என்று இந்த வசனம் சொல்கிறது.

அவர்கள் தேவனுடைய ஆலயத்தைத் தீக்கொளுத்தி, எருசலேமின் அலங்கத்தை இடித்து, அதின் மாளிகைகளையெல்லாம் அக்கினியால் சுட்டெரித்து, அதிலிருந்த **திவ்வியமான** பணிமுட்டுகளையெல்லாம் அழித்தார்கள். (2 நாளாகமம் 36:19)

இந்த இடத்தில் உங்கள் முஹம்மதுவை சேர்த்து எழுதினால் "அதிலிருந்த முஹம்மதுவான பணிமுட்டுகளையெல்லாம் அழித்தார்கள்" என்று வரும். இதன் பொருள் உங்கள் முஹம்மதுவை அழித்தார்கள் என்று வருகிறது. இது சரியான ஒன்றாகுமா? உங்கள் இஸ்லாமியர்களின் வாதஞானம் எவ்வளவு கெடுதியை முஹம்மதுவிற்கு உண்டாக்குகிறது என்று பார்த்தீர்களா?

இந்த மக்மத் வார்த்தை வரும் வசனங்கள் அனேகம் உள்ளன, அவைகளை இந்த தொடுப்பில் படிக்கவும்: **http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H4261&t=KJV**

இந்த வார்த்தை இடம்பெறும் வசனங்கள்: **உன்னதப்பட்டு 5:16, ஏசாயா 64:11, புலம்பல் 1:10,11, எசேக்கியேல் 24:16, 21, 25, ஓசியா 9:6, 16 , யோவேல் 3:5**

**இஸ்லாமிய அறிஞர்களின் ஏமாற்றுவேலை:**

"மக்மத்" என்றால், "நல்ல, பிரியமான, இனிமையான" போன்ற அர்த்தங்கள் கொண்ட வார்த்தையாகும். இது அனேக இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது, ஆனால், இஸ்லாமிய அறிஞர்கள் நம்மிடம் வந்து முஹம்மது குறித்த முன்னறிவிப்புக்கள் பைபிளில் உள்ளது என்றுச் சொல்லும் போது, அவர்கள் உண்மையை மறைத்துக்கூறுவார்கள். உன்னதப்பாட்டில் முஹம்மதுவின் முன்னறிவிப்பு உள்ளது என்று சொல்லும் முஸ்லிம்கள், இதர வசனங்களில் கூட அந்த வார்த்தை உள்ளது என்று ஏன் தெரிவிக்கவில்லை?

ஆக, உன்னதப்பாட்டில் முஹம்மதுவின் முன்னறிவிப்பு உள்ளது என்றுச் சொல்வது, சொந்த வீட்டில் தானே குண்டு வைப்பதற்கு சமமாகும்.



**கேள்வி 58: தேவன் முடிதிருத்தம்(பார்பர்) செய்தார் என்று ஏசாயா 7:20 சொல்கிறதே! இது இறைத்தன்மைக்கு ஏற்றதா?**

இந்த கேள்வியை இஸ்லாமியர் அஹமத் தீதத் கேட்டார்.

**பதில் 58:** இந்த வசனம் தேவன் முடிதிருத்தம் செய்கின்றார் என்றுச் சொல்லவில்லை, அதற்கு பதிலாக, "தீய காரியங்களைச் செய்த, இஸ்ரவேலர்கள் மற்ற அரசர்களால் தாழ்த்தப்படுவார்கள்" என்பதைத் தான் சொல்கிறது.

**ஏசாயா 7:20**

20. அக்காலத்திலே ஆண்டவர் கூலிக்குவாங்கின சவரகன் கத்தியினால், அதாவது, நதியின் அக்கரையிலுள்ள அசீரியா ராஜாவினால், **தலைமயிரையும் கால்மயிரையும் சிரைப்பித்து, தாடியையும் வாங்கிப்போடுவிப்பார்.**

அக்காலத்தில் ஒரு அரசன் இன்னொரு அரசனை வென்று அவன் நாட்டை கைப்பற்றினால், அந்த மாட்டிக்கொண்ட அரசனை அவமானப்படுத்த "அவருக்கு மொட்டையடிப்பார்கள், தாடியை சவரம் செய்வார்கள்", இது அவமானமாக கருதப்படும்.

இன்று கூட ஒருவரை அவமானப்படுத்த, "மொட்டையடித்து கரும்புள்ளி, செம்புள்ளி இட்டு கழுதை மீது ஊர்வளமாக கொண்டுப்போகப்படுவார்கள்" என்று சொல்வோமில்லையா! இதே போன்று தான் தீமை செய்யும் இஸ்ரவேல் அரசர்களை அசீரிய அரசர்கள் அவமானப்படுத்துவார்கள் என்று உவமையாக சொல்லப்பட்டுள்ளது.



**கேள்வி 59: தேவன் ஏன் ஏசாயா தீர்க்கதரிசியை நிர்வாணமாக உலாவச் சொன்னார்? (ஏசாயா 20:2-3).**

இந்த கேள்வியை இஸ்லாமியர் அஹமத் தீதத் கேட்டார்.

**பதில் 59:** தேவன் ஒரு போதும் மக்களை நிர்வாணமாக்குகிறவர் அல்ல. இந்த இடத்தில் மேலாடையில்லாமல், செருப்பு இல்லாமல் நடப்பதைப் பற்றி தான் இவ்வசனங்கள் சொல்கின்றன.

**ஏசாயா 20:2-3**

2. கர்த்தர் ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயாவை நோக்கி: நீ போய் உன் **அரையிலிருக்கிற இரட்டை அவிழ்த்து, உன் கால்களிலிருக்கிற பாதரட்சைகளைக் கழற்று என்றார்;** அவன் அப்படியே செய்து, வஸ்திரமில்லாமலும் வெறுங்காலுமாய் நடந்தான்.

3. அப்பொழுது கர்த்தர்: எகிப்தின்மேலும் எத்தியோப்பியாவின்மேலும் வரும் மூன்றுவருஷத்துக் காரியங்களுக்கு அடையாளமும் குறிப்புமாக **என் ஊழியக்காரனாகிய ஏசாயா வஸ்திரமில்லாமலும் வெறுங்காலுமாய் நடக்கிறதுபோல,**

இஸ்ரவேலர்கள் மற்ற அரசர்களால் அவமானப்படுத்தப்படுவார்கள், என்பதைக் காட்டவே தம் தீர்க்கதரிசியை அரை நிர்வாணத்தோடு நடக்கச்சொன்னார்.

அரை நிர்வாணமென்றால் என்ன? மேல் சட்டை இல்லாமல், செருப்பு இல்லாமல், வெறும் ஜட்டியோடு (அக்காலத்தில் கோவனம் மாதிரியான உள்ளாடை அணிந்து இருந்திருக்கக்கூடும்) நடப்பதே, மேற்கண்ட வசனம் சொல்லும் நிர்வாணம் ஆகும்.

வேதபண்டிதர் மாத்யூ ஹென்றி (Matthew Hendry) அவர்களின் விளக்கவுரையை மேலதிக விவரங்களுக்காக இங்கு தருகிறேன்.

II. The making of Isaiah a sign, by his unusual dress when he walked abroad. He had been a sign to his own people of the melancholy times that had come and were coming upon them, by the sackcloth which for some time he had worn, of which he had a gown made, which he girt about him. Some think he put himself into that habit of a mourner upon occasion of the captivity of the ten tribes. Others think sackcloth was what he commonly wore as a prophet, to show himself mortified to the world, and that he might learn to endure hardness soft clothing better becomes those that attend in king's palaces (Matthew 11:8) than those that go on God's errands. Elijah wore hair-cloth (2 Kings 1:8), and John Baptist (Matthew 3:4) and those that pretended to be prophets supported their pretension by wearing rough garments (Zechariah 13:4) but **Isaiah has orders given him to loose his sackcloth from his loins, not to exchange it for better clothing, but for none at all--no upper garment, no mantle, cloak, or coat, but only that which was next to him, we may suppose his shirt, waistcoat, and drawers and he must put off his shoes,** and go barefoot so that compared with the dress of others, and what he himself usually wore, he might be said to go naked. This was a great hardship upon the prophet it was a blemish to his reputation, and would expose him to contempt and ridicule the boys in the streets would hoot at him, and those who sought occasion against him would say, The prophet is indeed a fool, and the spiritual man is mad, Hosea 9:7. It might likewise be a prejudice to his health he was in danger of catching a cold, which might throw him into a fever, and cost him his life but God bade him do it, that he might give a proof of his obedience to God in a most difficult command, and so shame the disobedience of his people to the most easy and reasonable precepts. When we are in the way of our duty we may trust God both with our credit and with our safety. The hearts of that people were strangely stupid, and would not be affected with what they only heard, but must be taught by signs, and therefore Isaiah must do this for their edification. If the dress was scandalous, yet the design was glorious, and what a prophet of the Lord needed not to be ashamed of.

Source: **https://www.studylight.org/commentaries/mhm/isaiah-20.html**



**கேள்வி 60: ஏசாயா 21:13ல் வரும் "அரபியாவின் பாரம்" என்பது, முஹம்மது அரேபியாவில் தோன்றி பாரப்பட்டு, அவர் உலகத்திற்கு கொடுத்த செய்தியைக் குறிக்கும் என்று முஸ்லிம்கள் சொல்வது சரியா?**

இந்த கேள்வியை இஸ்லாமியர் அஹமத் தீதத் கேட்டார்.

**பதில் 60:** இது முஸ்லிம்களின் மிகப்பெரிய அறியாமையாகும்.

**ஏசாயா 21:13**

**13. அரபியாவின் பாரம்.** திதானியராகிய பயணக்கூட்டங்களே, நீங்கள் அரபியாவின் காடுகளில் இராத்தங்குவீர்கள்.

அஹ்மத் தீதத் போன்றவர்கள் இப்படிப்பட்ட முட்டாள்தனமான ஆய்வுகளை செய்வார்கள் என்று முஸ்லிம்கள் எதிர்ப்பார்த்து இருந்திருக்கமாட்டார்கள்.

இந்த வசனத்தில் அரபியாவின் பாரம் என்றுச் சொன்னால், அந்த நாட்டினருக்கு வரும் ஆபத்து அல்லது தீர்க்கதரிசனம் என்று பொருள், தேவன் அந்த மக்கள் மீது, அவர்களின் குற்றங்களுக்குத் தக்கதாக தண்டனை அளிக்கப்போகிறார் என்று பொருள்.

முஸ்லிம்களின் படி, "அரபியாவின் பாரம்" என்றால் "முஹம்மதுவின் இறைச்செய்தியை அறிவிப்பது என்பது பற்றியது" என்று அவர்கள் கருதினால், அதே ஏசாயா தீர்க்கதரிசன புத்தகத்தில் கீழ்கண்ட "நாடுகளின் பாரமும்" சொல்லப்பட்டுள்ளது. இப்போது முஸ்லிம்கள் தான் பதில் சொல்லவேண்டும், கீழ்கண்ட நாடுகளிலும் தீர்க்கதரிசிகள் எழும்பி இறைச்செய்தியை அறிவித்தார்களா? அந்த நபிகள் யார் என்று முஸ்லிம்கள் கூறுவார்களா? அவர்களை முஸ்லிம்கள் நம்புவார்களா?

**ஏசாயா புத்தகத்தில் வரும் சில தண்டனைகள்/தீர்க்கதரிசன நாடுகள்/பகுதிகள்:**

- பாபிலோன்மேல் வரக்கண்ட பாரம். (13:1)
- மோவாபின் பாரம் (15:1)
- தமஸ்குவின் பாரம். (17:1)
- எகிப்தின் பாரம் (19:1)
- கடல் வனாந்தரத்தின் பாரம். (21:1)
- தூமாவின் பாரம் (21:11)
- **அரபியாவின் பாரம் (21:13)**
- தரிசனப் பள்ளத்தாக்கின் பாரம் (22:1)
- தீருவின் பாரம் (23:1)

கடந்த நூற்றாண்டின் சிறந்த இஸ்லாமிய அறிஞர் என்று அழைக்கப்பட்ட அஹமத் தீதத் (மறைவு 2005) எவ்வளவு கீழ்தரமாக ஆய்வு செய்துள்ளார் பார்த்தீர்களா? இவருடைய பாணியில் வந்த இவருடைய சீடர் தான் ஜாகிர் நாயக் அவர்கள். இவர் நாட்டை விட்டு வெளி நாடுகளில் தலைமறைவாக வாழுகின்றார்.

**அடுத்த கட்டுரையில் மேலதிக பைபிள் கேள்விகளுக்கு பதில்களைக் காண்போம்.**

---

இந்த கட்டுரையின் கேள்விகள் இந்த தளத்திலிருந்து எடுக்கப்பட்டன: **https://biblequery.org/**

**இஸ்லாமிய அறிஞர் அஹமத் தீதத்:**

இக்கட்டுரையில் வரும் பெரும்பான்மையான கேள்விகளை கேட்டவர், தென் ஆப்ரிக்காவில் வாழ்ந்த காலஞ்சென்ற இஸ்லாமிய அறிஞர் அஹமத் தீதத் ஆவார். நான் இயேசுவை என் சொந்த தெய்வமாக அங்கீகரித்த பிறகு, இவரது புத்தகங்களை படித்தேன், இவர் கேட்ட கேள்விகளுக்கு பதில்களை தேட ஆரம்பித்தேன், இதன் விளைவு தான், **ஈஸா குர்ஆன்** மற்றும் **ஆன்சரிங் இஸ்லாம் தமிழ் தளம்**.



**கேள்வி 61: நீதிமொழிகள் 31:6,7ல், மதுபானத்தை குடிக்ககொடுங்கள் என்று சொல்லப்பட்டுள்ளதே இது நியாயமான கட்டளையா?**

இந்த கேள்வியை அஹமத் தீதத் என்ற இஸ்லாமியர் கேட்டுயிருந்தார்.

**பதில் 61:** கீழ்கண்ட வசனங்களை தனியாக எடுத்து படிக்கும் போது, சாகின்றவனுக்கும், மனஉளைச்சல் உள்ளவனுக்கும் மதுபானம் கொடுங்கள், அவன் தன் துன்பத்தை மறக்கட்டும் என்று பைபிள் கட்டளையிடுவது போல தோன்றும். ஆனால், இது உண்மையில்லை. இவ்வசனங்களின் பின்னணி முதல் ஐந்து வசனங்களில் கொடுக்கப்பட்டுள்ளது. இந்த பின்னணியோடு பார்க்கும் போது, வேறு ஒரு செய்தி நமக்கு தெரியும், வாருங்கள் அதனைப் பார்ப்போம்.

**நீதிமொழிகள் 31:6-7**

6. மடிந்துபோகிறவனுக்கு மதுபானத்தையும், மனங்கசந்தவர்களுக்குத் திராட்சரசத்தையும் கொடுங்கள்;

7. அவன் குடித்துத் தன் குறைவை மறந்து, தன் வருத்தத்தை அப்புறம் நினையாதிருக்கட்டும்.

**ராஜ மாதா, தன் மகன் இளவரசனுக்கு கொடுக்கும் அறிவுரை:**

நீதிமொழிகள் 31வது அத்தியாயத்தில், சாலொமோனின் தாய் கொடுக்கும் அறிவுரையாக இந்த அத்தியாயம் தொடங்கும். சாலொமோனுக்கு இருக்கும் இன்னொரு பெயர், “லேமுவேல்” என்பதாகும்.

**நீதிமொழிகள் 31:1-5**

1. ராஜாவாகிய **லேமுவேலுக்கடுத்த** வசனங்கள்; அவன் **தாய்** அவனுக்குப் போதித்த உபதேசமாவது:

2. என் மகனே, என் கர்ப்பத்தின் குமாரனே, என் பொருத்தனைகளின் புத்திரனே,

3. ஸ்திரீகளுக்கு உன் பெலனையும், ராஜாக்களைக் கெடுக்கும் காரியங்களுக்கு உன் வழிகளையும் கொடாதே.

4. **திராட்சரசம் குடிப்பது ராஜாக்களுக்குத் தகுதியல்ல**; லேமுவேலே, அது ராஜாக்களுக்குத் தகுதியல்ல; **மதுபானம் பிரபுக்களுக்குத் தகுதியல்ல**.

5. **மதுபானம் பண்ணினால்** அவர்கள் நியாயப் பிரமாணத்தை மறந்து, சிறுமைப்படுகிறவர்களுடைய நியாயத்தையும் புரட்டுவார்கள்.

இங்கு சலொமோன் அரசனின் தாய், ஒரு ராஜா "எப்படியெல்லாம் தீமையை விட்டு விலகவேண்டும், எவைகளை செய்யக்கூடாது" என்பதைச் சொல்லி எச்சரிக்கிறார்கள்.

1) பெண்களுக்கு உன் பெலனை கொடுக்காதே

2) ராஜக்களை கெடுக்கும் காரியங்களுக்கு விலகியிரு

3) திராட்சரசம் குடிப்பது ராஜாக்களுக்குத் தகுதியல்ல, மகனே அது ராஜாக்களுக்குத் தகுதியல்ல.

4) மதுபானம் பிரபுக்களுக்குத் தகுதியல்ல

**ஒருவேளை ராஜாக்கள் குடித்தால் என்ன நடக்கும்? அதே தாய் அதன் விளைவுகளையும் கூறுகின்றார்கள்.**

5) மதுபானம்பண்ணினால் அவர்கள் நியாயப்பிரமாணத்தை (சட்டத்தை) மறந்துவிடுவார்கள்

6) சிறுமைப்படுகிறவர்களுடைய நியாயத்தையும் புரட்டுவார்கள்

இதுவரை சொன்ன அறிவுரைகளின் படி அறிவது என்ன? மதுபானம் ராஜாக்களுக்கு நல்லதல்ல, நாட்டுக்கு நல்லதல்ல, அந்த அரசனின் ஆட்சியில் வாழும் மக்களுக்கு நல்லதல்ல என்பதாகும்.

இதன் பிறகு தான் இந்த கேள்வியில் கேட்ட 6வது மற்றும் 7வது வசனம் வருகின்றது.

இவ்விரு வசனங்களில் அறிவது என்ன? தற்கொலை எண்ணமுடையவன் குடித்துவிட்டு கொஞ்சம் அவன் எண்ணத்தை மாற்றிக்கொள்ளட்டும், மனம் கசந்தவன் (மன உளைச்சல்) உள்ளவன் குடித்து, தன் துக்கத்தை விட்டு கொஞ்சம் தன் வலி நீங்கி இருக்கட்டும், ஆனால், "நீ ராஜா, உனக்கு இந்த மதுபானம் தேவையில்லை, அதன் பக்கம் போகாதே! நீ என்ன தற்கொலை எண்ணமுடையவனா? மனஉளைச்சல் உள்ளவனா? இல்லையல்லவா. எனவே மதுபாத்தை விட்டு தூரமாக இரு".

ஒரு அரசன் குடிப்பதற்கும், சாதாரண மனிதன் அதாவது தற்கொலை எண்ணமுடையவன், அதிக வலி உள்ளவன் குடிப்பதற்கும் வித்தியாசம் உள்ளது.

அவன் குடித்தால் அவனது தற்காலிக வலி, குறைவு நீங்கி சிறிது நிம்மதியாக இருப்பான், நீ (ராஜா) குடித்தால், நீ சட்டத்தை மீறுவாய், ஏழைகளுக்கு அநீதி செய்வாய், எனவே அதன் பக்கம் போகாதே. இது தான் சாலொமோன் அரசனின் தாய் அவனுக்கு கொடுத்த அறிவுரை.

எனவே, நீதிமொழிகள் 31:6,7ம் வசனங்கள் குடிக்கச் சொல்லி அறிவுரை கூறவில்லை என்பது இதன் மூலம் அறியலாம். இவ்வசனங்கள் அவைகளின் முந்தைய 5 வசனங்களோடு சேர்த்து படிக்கவேண்டியவைகளாகும்.

பைபிளில் இன்னும் நீதிமொழிகளில் மதுபானத்திற்கு எதிரான சில எச்சரிக்கைகள்:

**ஓசியா 4:11**

11. வேசித்தனமும் **திராட்சரசமும்** மதுபானமும் இருதயத்தை மயக்கும்.

**நீதிமொழிகள் 20:1**

1. திராட்சரசம் பரியாசஞ்செய்யும், **மதுபானம் அமளிபண்ணும்;** அதினால் மயங்குகிற ஒருவனும் ஞானவானல்ல.

**நீதிமொழிகள் 23:20,21,29-33**

20. **மதுபானப்பிரியரையும் மாம்சப் பெருந்தீனிக்காரரையும் சேராதே.**

21. **குடியனும்** போஜனப்பிரியனும் தரித்திரராவார்கள்; தூக்கம் கந்தைகளை உடுத்துவிக்கும்.

29. ஐயோ! யாருக்கு வேதனை? யாருக்குத் துக்கம்? யாருக்குச் சண்டைகள்? யாருக்குப் புலம்பல்? யாருக்குக் காரணமில்லாத காயங்கள்? யாருக்கு இரத்தங்கலங்கின கண்கள்?

30. மதுபானம் இருக்கும் இடத்திலே தங்கித் தரிப்பவர்களுக்கும், கலப்புள்ள சாராயத்தை நாடுகிறவர்களுக்குந்தானே.

31. மதுபானம் இரத்தவருணமாயிருந்து, பாத்திரத்தில் பளபளப்பாய்த் தோன்றும்போது, நீ அதைப் பாராதே; அது மெதுவாய் இறங்கும்.

32. **முடிவிலே அது பாம்பைப்போல் கடிக்கும், விரியனைப்போல் தீண்டும்.**

33. உன் கண்கள் பரஸ்திரீகளை நோக்கும்; உன் உள்ளம் தாறுமாறானவைகளைப் பேசும்.

**எபேசியர் 5: 18**

18. துன்மார்க்கத்திற்கு ஏதுவான **மதுபான வெறிகொள்ளாமல்**, ஆவியினால் நிறைந்து;

**1 தீமோ 3:3**

**அவன் மதுபானப்பிரியனும்**, அடிக்கிறவனும், இழிவான ஆதாயத்தை இச்சிக்கிறவனுமாயிராமல், பொறுமையுள்ளவனும், சண்டைபண்ணாதவனும், பணஆசையில்லாதவனுமாயிருந்து,

---

**பதில் முற்றிற்று, ஆனால் முஸ்லில்கள் சிந்திக்க அவர்கள் வேதத்திலிருந்து இந்த மதுபான தலைப்பு பற்றிய சில விவரங்கள்:**

**பின் குறிப்பு:**

1) இஸ்லாமில் முஸ்லிம்கள் குடித்து, மதி மயங்கி தொழுதுக்கொண்டு இருந்தார்கள், அதன் பிறகு தான் அல்லாஹ் மதுபான தடை சட்டம் கொடுத்தான். இதன் படி பார்த்தால், இஸ்லாமில் அல்லாஹ் மதுபானத்தை தடை செய்யும் வரை, அது அனுமதிக்கப்பட்டு இருந்தது என்று அர்த்தம் தானே!

இதைப் பற்றி சில ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு இஸ்லாமியருக்கு(அபூ அப்திர்ரஹ்மான்) பதில் கொடுத்துள்ளேன், அதன் ஒரு பகுதிய இங்கு பதிக்கிறேன்.

**கிறிஸ்தவன் பார்வையின்: "பைபிள் கூறும் பயங்கரவாதம் (2)" கட்டுரைக்கு பதில்: 2**

**அபூ அப்திர்ரஹ்மான் (முஸ்லிம்கள் கூறியது):**

"மதுபானம் அருந்தாதீர்கள்" என்று பைபிள் உபதேசம் செய்தாலும் அந்தத் தீமையை தீர்க்கதரிசிகளே செய்து வந்தார்கள் என்றும் இயேசு கிறிஸ்து கூட கல்யாண விருந்தில் அதை பரிமாறியிருக்கிறார் என்று புரோகிதர்கள் எழுதி வைத்துள்ளதால் இது குறித்தும் தார்மீக வழிகாட்டுதல் இல்லாமல் பாஸ்டர் கூட மதுப்பழக்கத்துக்கு அடிமையாவதும் கிறிஸ்தவத்திலேயே நடக்கின்றன.

**ஈஸா குர்ஆன்:**

இயேசு தண்ணீரை திராட்சை இரசமாக மாற்றிய அற்புதம் பற்றி எழுப்பப்பட்ட கேள்விக்கு கீழ் கண்ட பதிலை நாம் ஏற்கனவே கொடுத்துள்ளோம்.

Answering Islamkalvi : **இயேசுவும் திராட்சைரசமும், குடித்த மயக்கத்தில் நமாஜ் செய்ய அனுமதித்தவரும்**

அல்லாஹ் கொஞ்சம் கொஞ்சமாக மதுபானத்தை தடை செய்தார், அதுவரையில் இஸ்லாமியர்கள் குடித்தார்கள் என்று இஸ்லாமியர்கள் சொல்வார்கள். திடீரென்று குடிப்பழக்கத்தை நிறுத்தமுடியாது, அதற்காக மனிதனின் மனநிலையை புரிந்துக்கொண்டு தான் அல்லாஹ் இப்படி அழகாக செய்தார்

என்றுச் சொல்வார்கள். இஸ்லாமியர்களின் இப்படிப்பட்ட பலவீனமான வாதங்கள் அனைத்தும் ஒன்றுக்கும் உதவாத வாதங்களாக மாறிவிடுகின்றன, எப்படி என்பதை கீழ் கண்ட கட்டுரைகளை படித்துப்பார்க்கவும்.

• **Islam And Wine Consumption - Examining Muslim Arguments against The Bible in light of Islam's Gradual Prohibition of Wine Consumption**

• **Muhammad, the Quran, and Prohibition: Islam's punishments for drinking and gambling**

• **WINE IN ISLAM**

## குடித்தபோதையில் ஒட்டக எலும்பால் அடித்துக்கொண்டு காயப்பட்ட இஸ்லாமிய ஆரம்பகால மாமனிதர்கள்:

இஸ்லாமிய அறிஞரான இபின் கதிர், ஏன், எப்போது அல்லாஹ் மதுபான தடை வசனங்களை இறக்கினார் என்பதை குறிப்பிடுகிறார். குடித்த போதையில் ஒருவர் ஒரு ஒட்டகத்தின் எலும்பை எடுத்து, போட்டார் ஒரு போடு, மூக்கில் காயம், இறங்கியது வசனம்.

**Causes of Its Revelation**

Ibn Abi Hatim has recorded some reports about the incident of its revelation: Sa`d said, "Four Ayat were revealed concerning me. A man from the Ansar once made some food and invited some Muhajirin and Ansar men to it, and we ate and drank until we became intoxicated. We then boasted about our status." Then a man held a camel's bone and injured Sa`d's nose, which was scarred ever since. This occurred before Al-Khamr was prohibited, and Allah later revealed,

(O you who believe! Approach not As-Salat (the prayer) when you are in a drunken state). Muslim recorded this Hadith, and the collectors of the Sunan recorded it, with the exception of Ibn Majah.

Source: **https://www.wordofallah.com/tafseer** select 4:43 verse - Tafsir Ibn Kathir

## குடித்துவிட்டு, போதையில் தொழுகை செய்யும் போது வாய் குழம்பிய பே(போ)தையர்:

ஒரு இஸ்லாமியர் குடித்தார், போதை ஏறியது (சென்னைத் தமிழில் அழகாக மப்பு என்பார்கள்), குடித்த மயக்கத்திலேயே தொழுகை செய்ய ஆரம்பித்தார். மற்றவர்களை தொழுகையில் நடத்தும்படி, முன்னின்று தொழுகை செய்ய ஆரம்பித்தார்.

## அவர் கீழ் கண்டவாறு குர்ஆன் சூராவை ஓதினார்:

"காஃபிர்களே! நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்கமாட்டேன்,

ஆனால், நீங்கள் வணங்குபவற்றை நாங்கள் வணங்குவோம்"

**இதற்காகவே இறங்கியது இன்னொரு வசனம்,**

Another Reason Ibn Abi Hatim narrated that `Ali bin Abi Talib said, "Abdur-Rahman bin `Awf made some food to which he invited us and served some alcohol to drink. When we became intoxicated, and the time for prayer came, they asked someone to lead us in prayer. He recited `Say, `O disbelievers! I do not worship that which you worship, but we worship that which you worship [refer to the correct wording of the Surah: 109].'" Allah then revealed,

(O you who believe! Do not approach Salah when you are in a drunken state until you know what you are saying). " This is the narration collected by Ibn Abi Hatim and At-Tirmidhi, who said "Hasan [Gharib] Sahih." Allah's statement,

Source: **https://www.wordofallah.com/tafseer** select 4:43 verse - Tafsir Ibn Kathir

மேலே உள்ள விவரங்கள் இஸ்லாமிய ஆதாரங்களாகும், அதாவது குர்ஆன் விரிவுரைகளாகும், எனவே, எங்கள் மீது யாரும் கோபம் கொள்ளவேண்டாம்.

ஆக, இந்த குடி போதையில் அடித்துக்கொள்ளும் வேலையை அந்த இஸ்லாமிய குடிமகன்கள் பல ஆண்டுகளுக்கு பின்பாக செய்ததால், தடை சிறிது சிறிதாக வந்தது என்று பெருமையாக இஸ்லாமியர்கள் இப்போது சொல்லிக்கொள்கிறார்கள், ஆனால், அவர்கள் அந்த வேலையை ஆரம்பத்திலேயே செய்திருந்தால், தடை ஆரம்பத்திலேயே வந்திருக்கும். மேலும் விவரங்களுக்கு மேலே தரப்பட்ட கட்டுரைகளை படிக்கவும்.

அபூ அப்திர் ரஹ்மான் அவர்களிடம் கேட்க விரும்பும் கேள்விகள்:

• பைபிளில் மதுபானம் தடைசெய்யப்பட்டு இருந்தால், ஏன் கிறிஸ்தவத்திற்கு பிறகு 600 ஆண்டுகளுக்கு பின்பு வந்த இஸ்லாமில் அந்த தடை ஆரம்பத்திலிருந்தே இல்லாமல் இருந்தது?

• பழைய ஏற்பாட்டில் பன்றி மாமிசம் கூடாது என்று மோசேயின் மூலமாக தேவன் (அல்லாஹ் - உங்கள் நம்பிக்கைப்படி) தடை செய்திருக்கும் போது, 2000 ஆண்டுகளுக்கு பின்பும் அது இஸ்லாமில் அமுலில் இருக்குமானால், அதே தேவன் கொடுத்த மதுபான தடை ஏன் இஸ்லாமில் ஆரம்பத்திலிருந்தே சொல்லுபடியாகாது?

• இன்னும் பல நூற்றாண்டுகள் பின்னுக்குச் சென்று, ஆபிரகாமுக்கு தேவன் கட்டளையிட்ட விருத்தசேதனம் என்பது, கி.பி. 600க்கு அடுத்து செல்லுபடியாகுமானால், அதே தேவன் விதித்த மதுபான தடை ஏன் செல்லுபடியாகாது?



**கேள்வி 62: கர்த்தர் "கெர்ச்சிக்கிறார்" என்றுச் சொல்வது, இறைவனது இலக்கணத்துக்கு அடுக்குமா? பார்க்க: ஏசாயா 42:13 & எரேமியா 25:30**

**பதில் 62:** கர்த்தர் “சிங்கம் போல கெர்ச்சிக்கிறார்” என்றுச் சொல்வது, இறைவனது இலக்கணத்துக்கு எதிரானது அல்ல. சிங்கம் அதிகாரத்திற்கும், வலிமைக்கும் உதாரணமாக காட்டப்படுகின்றது. சிங்கத்தின் கெர்ச்சிப்பு பலசாலிகளின் வெற்றியை குறிக்கிறது. தம்மை பல இடங்களில் சிங்கத்திற்கு தேவன் ஒப்பிட்டு பேசுகின்றார்.

ஒரு சிங்கம் எப்படி கெர்ச்சித்து காட்டு மிருகங்களை கலங்கடிக்குமோ, அதே போன்று கர்த்தரும் தம் எதிர்களை கலங்கடிக்கிறார் என்பதைத் தான் இதன் மூலம் புரிந்துக்கொள்ள வேண்டும்.

**ஏசாயா 42:13**

13. கர்த்தர் பராக்கிரமசாலியைப்போல் புறப்பட்டு, யுத்தவீரனைப்போல் வைராக்கியமூண்டு, **முழங்கிக் கெர்ச்சித்து**, தம்முடைய **சத்துருக்களை மேற்கொள்ளுவார்**.

**எரேமியா 25:30**

30. ஆதலால் நீ அவர்களுக்கு விரோதமாக இந்த வார்த்தைகளையெல்லாம் தீர்க்கதரிசனமாக உரைத்து, அவர்களை நோக்கி: **கர்த்தர் உயரத்திலிருந்து கெர்ச்சித்து**, தமது பரிசுத்த வாசஸ்தலத்திலிருந்து தம்முடைய சத்தத்தைக் காட்டி, தம்முடைய தாபரத்துக்கு விரோதமாய்க் **கெர்ச்சிக்கவே கெர்ச்சித்து**, ஆலையை மிதிக்கிறவர்கள் ஆர்ப்பரிப்பதுபோல் பூமியினுடைய எல்லாக் குடிகளுக்கும் விரோதமாக ஆர்ப்பரிப்பார் என்று சொல் என்றார்.

யுத்த வீரனைப்போன்று, பராக்கிரசாலியைப்போன்று கர்த்தர் கெர்ச்சித்து தம் வல்லமையை காட்டுகின்றார், தம் எதிர்களை கலங்கடிக்கிறார் என்று மேற்கண்ட வசனங்கள் கூறுகின்றன. இவைகள் இறைவனின் இலக்கணத்திற்கு முரண்பட்டதன்று, இவைகள் இறைவனுக்கு ஏற்ற குணமாகும். மக்கள் மீது தாயைப்போல அன்பு செலுத்தவும், அதே நேரத்தில் தவறான வழியில் நடக்கின்ற மக்களை தன் நீதியான வழியில் கொண்டுவர சிங்கத்தைப்போன்று கெர்ச்சித்து, அவர்களை தண்டிக்க அவருக்கு உரிமையுண்டல்லவா! நம் தகப்பனும் தாயும், அண்ணன் அக்காளும் நம் மீது அன்பு செலுத்தியது போன்று, நாம் தவறு செய்யும் போது, 'சிங்கத்தைப்போன்று கெர்ச்சித்து, சத்தம் போட்டு சில வேளைகளை நம்மை அடித்து திருத்தியிருக்கிறார்கள்'.

தேவன் பல இடங்களில் தம்மை தந்தைக்கு, தாய்க்கு, நண்பனுக்கு, எஜமானனுக்கு என்று பலவாறு ஒப்பிடுகின்றார், இதே போன்று, எதிர்களோடு சண்டையிடுவதை காட்டும் போது தம்மை சிங்கத்தின் கெர்ச்சிப்புக்கு ஒப்பிடுகின்றார்.

**யோவேல் 3:16**

**கர்த்தர் சீயோனிலிருந்து கெர்ச்சித்து**, எருசலேமிலிருந்து சத்தமிடுவார்; வானமும் பூமியும் அதிரும்; ஆனாலும் கர்த்தர் தமது ஜனத்துக்கு அடைக்கலமும் இஸ்ரவேல் புத்திரருக்கு அரணான கோட்டையுமாயிருப்பார்.

**ஆமோஸ் 1:2**

**கர்த்தர் சீயோனிலிருந்து கெர்ச்சித்து**, எருசலேமிலிருந்து சத்தமிடுவார்; அதினால் மேய்ப்பரின் தாபரங்கள் துக்கங்கொண்டாடும்; கர்மேலின் கொடுமுடியும் காய்ந்துபோகும்.

சிங்கத்தின் கெர்ச்சிப்பு தேவனுக்கு மட்டுமல்ல, சாதாரண ராஜாவிற்கும், சில இடங்களில் பலசாலியான தீயவர்களுக்கும் ஒப்பிட்டு பேசப்பட்டுள்ளது.

**நீதிமொழிகள் 19:12**

ராஜாவின் கோபம் **சிங்கத்தின் கெர்ச்சிப்புக்குச் சமானம்**; அவனுடைய தயை புல்லின்மேல் பெய்யும் பனிபோலிருக்கும்.

**நீதிமொழிகள் 20:2**

ராஜாவின் உறுக்குதல் **சிங்கத்தின் கெர்ச்சிப்புக்குச் சமானம்**; அவனைக் கோபப்படுத்துகிறவன் தன் பிராணனுக்கே துரோகஞ்செய்கிறான்.

**I பேதுரு 5:8**

தெளிந்த புத்தியுள்ளவர்களாயிருங்கள், விழித்திருங்கள்; ஏனெனில், உங்கள் எதிராளியாகிய பிசாசானவன் **கெர்ச்சிக்கிற சிங்கம்போல்** எவனை விழுங்கலாமோ என்று வகைதேடிச் சுற்றித்திரிகிறான்.

எனவே, ஏசாயா 42:13 & எரேமியா 25:30 வசனங்களில் "கர்த்தர் கெர்ச்சிக்கிறார்" என்ற வார்த்தைகள் வருவது இறைவனது இலக்கணத்திற்கு இழுக்கு அல்ல என்பது இதன் மூலம் நாம் அறிந்துக்கொள்ளமுடியும்.



**கேள்வி 63: எரேமியா தன் தாயின் வயிற்றில் உருவாகுமுன்னே தீர்க்கதரியானார் என்று எரேமியா 1:5 சொல்கிறது, இது எப்படி சாத்தியமாகும்?**

இந்த கேள்வியை இஸ்லாமிய அறிஞர் அஹமத் தீதத் கேட்டார்

**பதில் 63:** இந்த வசனத்தில் "எரேமியா தன் தாயின் வயிற்றில் இருந்தது முதல் மக்களுக்கு நபியாக/தீர்க்கதரிசியாக இருந்தார்" என்றுச்

சொல்லவில்லை. அதற்கு பதிலாக, தேவன் அவரை "தீர்க்கதரியாக நியமித்தார்" என்று மட்டும் தான் சொல்கிறது.

எரேமியா 1:5.

நான் உன்னைத் தாயின் வயிற்றில் **உருவாக்கு முன்னே உன்னை அறிந்தேன்;** நீ கர்ப்பத்திலிருந்து வெளிப்படுமுன்னே நான் உன்னைப் பரிசுத்தம்பண்ணி, உன்னை ஜாதிகளுக்குத் தீர்க்கதரிசியாகக் கட்டளையிட்டேன் என்று சொன்னார்.

எரேமியா பிறந்தவுடன், "**பாருங்கள் மக்களே, நான் உங்கள் தீர்க்கதரிசி**" என்று சொல்லவில்லை. அவர் வாலிப வயது ஆகும்வரை, அவருக்கே "தன்னை கர்த்தர் ஒரு தீர்க்கதரிசியாக ஊழியம் செய்ய அழைப்பார் என்று தெரியாது". கர்த்தர் நம்மை ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக ஊழியத்திற்காக, நாம் பிறப்பதற்கு முன்பே முடிவு செய்வார். ஆனால், நாம் பிறந்த பிறகு பல ஆண்டுகள் கழித்து, அதற்கான நேரம் வரும் போது தான் "அந்த ஊழிய அழைப்பை நமக்கு வெளிப்படுத்துவார்". இதே போன்று தான் எரேமியா பற்றியும் தேவன் கூறுகின்றார்.

இஸ்லாம் நம்பும் "விதிப் பற்றிச் நான் இங்கு சொல்லவில்லை". விதியை பைபிள் எதிர்க்கிறது, அதனை ஏற்பதில்லை. எரேமியாவை நியமித்தது "விதியல்ல", இது சிலரை சில விசேஷித்த வேலைக்காக தேவன் நியமிப்பது பற்றியதாகும்.

இதில் எந்த ஒரு முரண்பாடோ, குழப்பம் அடைவதற்கான காரணமோ இல்லை. இந்த சிறிய விஷயம் கூட அஹமத் தீதத் போன்ற பெரிய அறிஞருக்கு தெரியவில்லை என்பதை அறியும் போது, வேதனையாகத் தான் உள்ளது.

பைபிளை பொருத்தமட்டில், தேவன் ஒருவரை ஊழியத்திற்காக நியமித்தாலும், மனிதனுக்கு சுயமாக தெரிவு செய்கின்ற திறமையை(Free Will) பிறந்ததிலிருந்து கொடுத்து இருப்பதினால், மனிதன் எந்நேரத்திலும் தன் முடிவை மற்றிக்கொள்ளலாம். இதனால் தான் 'பைபிள் விதியை அங்கீகரிப்பதில்லை'. கிறிஸ்தவ இறையியலில் 'விதி' என்ற கோட்பாடு இல்லை.



**கேள்வி 64: தேவனுக்கு எப்படி இரண்டு சேஷ்டபுத்திரர்கள் இருக்கமுடியும்? யாத் 4:22ன் படி யாக்கோபு, எரேமியா 31:9ன் படி எப்பிராயீம் சேஷ்ட புத்திரன்? இது முரண்பாடு அல்லவா?**

இந்த கேள்வியை இஸ்லாமிய அறிஞர் அஹமத் தீதத் கேட்டார்

**பதில் 64:** இஸ்லாமிய அறிஞர் பைபிளை சரியாக படிக்கவில்லை, ஆய்வு செய்யவில்லை என்று இதன் மூலம் அறியமுடிகின்றது.

ஒரு விவரத்தை மனதில் வைக்கவேண்டும், தேவன் ஒருவரைப் பார்த்து "இவன் என் குமாரன், என் சேஷ்ட புத்திரன், என் மகள்" என்று சொல்கிறார் என்று வைத்துகொண்டால், அவர் ஆவிக்குரிய/ஆன்மீக வகையில் சொல்கிறார் என்று பொருளே தவிர, மனித முறையில் (உடலுறவு மூலமாக) பிறந்த பிள்ளைகள் என்று சொல்கிறார் என்று பொருள் கொள்ளக்கூடாது. முஸ்லிம்களிடம் பேசும் போது, இந்த விவரத்தை நாம் முதலாவது தெளிவு படுத்தவேண்டும். தேவனுக்கு சேஷ்ட புத்திரன் என்றுச் சொன்னால், அவருக்கும் அந்த மனிதனுக்கும் இடையே இருக்கும் விசேஷித்த உறவுமுறையை, உரிமையை வெளிப்படுத்துவதாக அது உள்ளது.

சரி, இப்போது பதிலுக்குச் செல்வோம், முதலாவது அஹமத் தீதத் அவர்கள் குறிப்பிட்ட வசனங்களை வாசிப்போம்.

**யாத்திராகமம் 4:22**

அப்பொழுது நீ பார்வோனோடே சொல்லவேண்டியது என்னவென்றால்: **இஸ்ரவேல் என்னுடைய குமாரன், என் சேஷ்டபுத்திரன்**.

**எரேமியா 31:9**

அழுகையோடும் விண்ணப்பங்களோடும் வருவார்கள்; அவர்களை வழிநடத்துவேன்; அவர்களைத் தண்ணீருள்ள நதிகளண்டைக்கு இடறாத செம்மையான வழியிலே நடக்கப்பண்ணுவேன்; இஸ்ரவேலுக்கு நான் பிதாவாயிருக்கிறேன், **எப்பிராயீம் என் சேஷ்டபுத்திரனாயிருக்கிறான்**.

யாக்கோபு/இஸ்ரவேல்:

ஈசாக்கு மற்றும் ரெபேக்கள் தம்பதியினருக்கு பிறந்த இரண்டாவது மகன் தான் யாக்கோபு (இஸ்ரவேல் என்ற இன்னொரு பெயரை தேவன் இவருக்கு பிறகாலத்தில் கொத்தார்). ஈசாக்குக்கு பிறந்த **இரண்டாவது மகனைத் தான் தேவன் "என் சேஷ்ட புத்திரன்" என்கிறார்**.

எப்பிராயீம்:

யாக்கோபுக்கு பிறந்த முதலாவது மகன் "ரூபன்" என்பவர், ஆனால் இங்கே தேவன் "எப்பிராயீம்" என் சேஷ்ட புத்திரன் என்கிறார்.

ஈசாக்கின் முதல் மகன் ஏசாவை விட்டுவிட்டு, ஏன் இரண்டாவது மகன் யாக்கோபை தேவன் தெரிவு செய்தார்? இதே போன்று, யாக்கோபின் முதல் மகனாகிய "ரூபனை" விட்டுவிட்டு, ஏன் யாக்கோபின் பேரனை (எப்பிராயீமை) தெரிவு செய்தார்? ஆவிக்குரிய விதத்தில் அவர் மக்களை தெரிவு செய்கின்றார்.

சில வேளைகளில் வேறு காரணங்களும் இருக்கும், உதாரணத்திற்கு, யாக்கோபின் முதல் மகன், "ரூபன்" ஒரு கட்டளையை மீறி பெரும் பாவத்தை செய்தான், அதனால் சேஷ்ட புத்திர உரிமை "யோசேப்பின் குடும்பத்துக்கு" கொடுக்கப்பட்டது. பார்க்க I நாளாகமம் 5:1.

**I நாளாகமம் 5:1**

ரூபன் இஸ்ரவேலுக்கு முதற்பிறந்த சேஷ்டபுத்திரன்; ஆனாலும் அவன் தன் தகப்பனுடைய மஞ்சத்தைத் தீட்டுப்படுத்தினபடியினால், கோத்திரத்து அட்டவணையிலே அவன் முதற் பிறந்தவனாக எண்ணப்படாமல், அவனுடைய சேஷ்டபுத்திர சுதந்தரம் **இஸ்ரவேலின் குமாரனாகிய யோசேப்பின் குமாரருக்குக் கொடுக்கப்பட்டது**.

யோசேப்பிற்கு மனாசே என்பவர் தான் முதல் மகன் (சேஷ்ட புத்திரன்), அவனை விட்டுவிட்டு, இரண்டாவது மகன் "எப்பிராயீம்" என்பவரை தெரிவு செய்தார் தேவன் ஏன்? **இதன் காரணத்தை அறிய கீழ்கண்ட வசனங்களையும் பார்க்கவும்.**

யாக்கோபு மரிக்கும் நேரம் வந்தது, அவர் அனைவரையும் அழைத்து ஆசீர்வதிக்கிறார், அந்த நேரத்தில் யோசேப்பின் பிள்ளைகளை ஆசீர்வதிக்கும் போது, என்ன நடந்தது என்பதை பாருங்கள்.

**ஆதியாகமம் 48: 13-20**

13. பின்பு, யோசேப்பு அவ்விருவரையும் கொண்டுவந்து, எப்பிராயீமைத் தன் வலது கையினாலே இஸ்ரவேலின் இடது கைக்கு நேராகவும், மனாசேயைத் தன் இடதுகையினாலே இஸ்ரவேலின் வலதுகைக்கு நேராகவும் விட்டான்.

14. அப்பொழுது இஸ்ரவேல், மனமறிய, தன் வலதுகையை நீட்டி, இளையவனாகிய எப்பிராயீமுடைய தலையின்மேலும், மனாசே மூத்தவனாயிருந்தும், தன் இடதுகையை மனாசேயுடைய தலையின்மேலும் வைத்தான்.

. . .

17. தகப்பன் தன் வலதுகையை எப்பிராயீமுடைய தலையின்மேல் வைத்ததை யோசேப்பு கண்டு, அது தனக்குப் பிரியமில்லாதபடியால், எப்பிராயீமுடைய தலையின்மேல் இருந்த தன் தகப்பனுடைய கையை மனாசேயினுடைய தலையின்மேல் வைக்கும்படிக்கு எடுத்து:

18. என் தகப்பனே, அப்படியல்ல, இவன் மூத்தவன், இவனுடைய தலையின்மேல் உம்முடைய வலதுகையை வைக்கவேண்டும் என்றான்.

19. **அவன் தகப்பனோ தடுத்து: அது எனக்குத் தெரியும், என் மகனே, எனக்குத் தெரியும்; இவனும் ஒரு ஜனக்கூட்டமாவான், இவனும் பெருகுவான்; இவனுடைய தம்பியோ இவனிலும் அதிகமாய்ப் பெருகுவான்; அவனுடைய சந்ததியார் திரளான ஜனங்களாவார்கள் என்றான்.**

20. இவ்விதமாக அவன் அன்றைத்தினம் அவர்களை ஆசீர்வதித்து: தேவன் உன்னை எப்பிராயீமைப்போலவும் மனாசேயைப்போலவும் ஆக்குவாராக என்று இஸ்ரவேலர் உன்னை முன்னிட்டு வாழ்த்துவார்கள் என்று சொல்லி, எப்பிராயீமை மனாசேக்கு முன்னே வைத்தான்.

இதன் படி, முதலாவது தேவனுக்கு 'யாக்கோபு' சேஷ்ட புத்திரன், அதன் பிறகு யாக்கோபின் பிள்ளைகளில் ரூபனை விட்டுவிட்டு, அது யோசேப்பின் இரண்டாவது மகனுக்கு 'சேஷட புத்திர உரிமை' கொடுக்கப்பட்டது.

எனவே, தேவனுக்கு 'யாக்கோபு சேஷ்ட புத்திரன்', அதன் பிறகு 'எப்பிராயீம் சேஷ்ட புத்திரன்'. இந்த விவரம் தோறாவில் (ஐந்தாகமங்களில்) இருப்பதினால் யூதர்களுக்கு எந்த குழப்பமும் இல்லை. அஹமத் தீதத் போன்ற முஸ்லிம்கள் பைபிளை சரியாக படிக்காததினால், ஆய்வு செய்யாததினால் இப்படி குழம்புகிறார்கள்.



**கேள்வி 65: ஏன் தேவன் ஓசியா என்ற தீர்க்கதரிசியை விபச்சாரம் செய்ய கட்டளையிட்டார் (ஓசியா 1:2-3)? ஒரு முஸ்லிம் இந்த கேள்வியை கேட்டார்.**

**பதில் 65:** இந்த கேள்வியைக் கேட்ட முஸ்லிம் சகோதரர், சரியாக ஓசியா புத்தகத்தை படிக்கவில்லை.

இந்த புத்தகத்தில் தேவன் ஓழியாவை விபச்சாரம் செய்யச் சொல்லவில்லை. இஸ்ரவேல் மக்கள் சோரம் போனார்கள், அதாவது மெய்யான தெய்வமாகிய யெகோவாவை தொழுதுக்கொள்ளாமல், அந்நிய தெய்வங்களை வணங்கினார்கள். இருந்தபோதிலும் தம் அன்பினால் தேவன் அவர்களை மறுபடியும் தம்மிடம் சேர்த்துக்கொண்டார், அவர்களின் துன்பங்களை நீக்கினார். ஆனால், அவர்கள் மறுபடியும் அந்நிய தெய்வங்களை வணங்க ஆரம்பித்தார்கள்.

இதனை விளக்கவும், இஸ்ரேல் மக்களின் கீழ்படியாமையையும் விளக்கவே, தம் தீர்க்கதரிசி ஓசியாவிடம் "**நீ போய் ஒரு சோரம் போன ஸ்திரியை திருமணம் செய்துக்கொள்**" என்றார். இங்கு திருமணம் பற்றி பேசப்படுகின்றது, விபச்சாரம் பற்றியல்ல.

**ஓசியா 1:2-3**

2. கர்த்தர் ஓசியாவைக்கொண்டு உரைக்கத்தொடங்கினபோது, கர்த்தர் ஓசியாவை நோக்கி: **நீ போய், ஒரு சோர ஸ்திரீயையும் சோரப்பிள்ளைகளையும் உன்னிடமாகச் சேர்த்துக்கொள்**; **தேசம் கர்த்தரை விட்டு விலகிச் சோரம்போயிற்று என்றார்**.

3. அவன் போய், திப்லாயிமின் குமாரத்தியாகிய கோமேரைச் சேர்த்துக்கொண்டான்; அவள் கர்ப்பந்தரித்து, அவனுக்கு ஒரு குமாரனைப் பெற்றாள்.

ஓசியா தீர்க்கதரிசி தேவனுக்கு ஒப்பாகவும், அவர் திருமணம் செய்த அந்த சோரம் போன பெண், இஸ்ரேல் மக்களுக்கு ஒப்பாகவும் பாவித்து வசனங்கள் சொல்லப்பட்டுள்ளது. ஒரு தீய பெண்ணை திருமணம் செய்து, அவளுக்கு நல்ல வாழ்க்கை கொடுத்த பிறகு, அவள் மறுபடியும் தன் பழைய வாழ்க்கைக்கே திரும்பினால், தன் கணவருக்கு எவ்வளவு துக்கம் வருமோ, அதே போன்று, இஸ்ரவேல் மக்களின் செயல்களினால் தேவனின் மனதும் துக்கப்படுகின்றது என்பதைக் காட்டுகின்றது இந்த ஓசியா புத்தகம்.

தேவனின் சிறந்த நிபந்தனையற்ற அன்பைக் காட்டும் சிறப்பான புத்தகம் தான் ஓசியா. பரிசுத்தமான இறைவனுக்கு முன்பாக நாம் அனைவரும் 'பரிசுத்தமில்லாதவர்கள் என்றும், நாம் தவறு செய்துவிட்டு, மறுபடியும் மனந்திருந்தும் போது, நம்மை சேர்த்துக்கொள்கின்ற இறைவனாக' தேவன் இருக்கிறார் என்பதைத் தான் இந்த புத்தகம் காட்டுகின்றது.

எனவே, இந்த கேள்வியைக் கேட்ட முஸ்லிம் சகோதரர் ஓசியா புத்தகம் முழுவதையும் படிக்கும் படி நான் கேட்டுக்கொள்கிறேன்(**ஓசியா புத்தகத்தில் 14 அத்தியாயங்கள்** மட்டுமே உள்ளன, எனவே, சுலபமாக படித்து புரிந்துக்கொள்ளலாம்).



**கேள்வி 66: முஹம்மது பற்றி ஆபகூக் 3:3 வசனம் முன்னறிவிக்கிறது என்கிறார்களே, இது உண்மையா?**

**பதில் 66:** முஹம்மது இறைத்தூதுவராக வந்தார் என்று இஸ்லாமியர்கள் நம்புகின்றனர். அது மட்டுமல்ல, மற்ற வேதங்களில் அவர் வருகைப் பற்றி எழுதப்பட்டுள்ளது என்று அவர்கள் தேடிக்கொண்டும், மாற்று மத வேதங்களில் சில வசனங்கள எடுத்துக்கொண்டு, இந்த வசனம் முஹம்மதுவின் வருகைப் பற்றி சொல்கிறது என்று தவறாக சொல்லிக்கொண்டு வருகின்றனர்.

இப்படி இஸ்லாமியர்கள் சொல்கின்ற வசனங்களில் "பைபிளின் பழைய ஏற்பாட்டின்" ஆபகூக் புத்தகமும் ஒன்று. ஆபகூக் 3:3ம் வசனத்தில் வரும் "பரிசுத்தர் பாரான் வனாந்திரத்திலிருந்து வந்தார்" என்ற வாக்கியம் "முஹம்மதுவை" குறிக்கும் என்று இஸ்லாமியர்கள் சொல்கின்றனர்.

இவர்களின் இந்த வாதம் தவறானது. இந்த வசனம் குறிப்பிடும் நபர் தேவனாவார் . இவர்களின் இந்த வாதம் சரியானதா இல்லையா என்பதை பார்ப்போம்.

**ஆபகூக் 3:3ம் வசனம் குறிப்பிடுவது "தேவனைத்/இறைவனைத் தான், முஹம்மதுவை அல்ல" என்பதற்கான காரணங்கள்:**

இது தான் இஸ்லாம் மற்றும் தமிழ் முஸ்லீம் தளம் முன்வைத்த வாதம்:

பரிசுத்தர் பாரான் மலையிலிருந்து வந்தார் என்று ஆபகூக் கூறுகின்றது. முஹம்மத் அவர்கள் பாரான் மலையில் இருந்த போதுதான் கேப்ரீல் (ஜிப்ரீல்) என்ற தேவதூதர் முஹம்மதிடம் வந்து வேத வசனங்களை வெளிபடுத்தினார். கேப்ரீலை இஸ்லாம் பல்வேறு இடங்களில் 'அவர் பரிசுத்தர்' என்று சொல்லிக் காட்டுகின்றது.

**1. அல்லா அனுப்பியது "தோரா, ஜபூர், இஞ்ஜில்" மட்டும் தான் என்று இஸ்லாமியர்கள் நம்புகின்றனர், பின் ஏன் ஆபகூக் லிருந்து ஆதாரம்?**

இஸ்லாமியர்களின் நம்பிக்கைப் படி மோசேவிற்கு "தோராவையும் (ஆதியாகமம் – உபாகமம்)", தாவீதுக்கு "ஜபூர் - சங்கீதம் " என்ற வேதத்தையும், இயேசுவிற்கு "இஞ்ஜில்" என்ற வேதத்தையும் அல்லாஹ் இறக்கினான். இவைகள் தவிர பைபிளில் உள்ள மற்ற தீர்க்கதரிசன புத்தகங்கள் அல்லாஹ் இறக்கவில்லை என்றும், இன்னும் புதிய ஏற்பாட்டில் சுவிசேஷங்களுக்கு அடுத்துள்ள புத்தகங்கள் வேதங்கள் அல்லாஹ் என்றும் நம்புகின்றனர்.

இஸ்லாமியர்கள் ஒன்றை கவனிக்கவேண்டும், அதாவது "ஆபகூக்" என்ற புத்தகம் என்றும் இறக்கியதாக நம்பும் "தோரா, ஜபூர் மற்றும் இஞ்ஜில்" போன்ற மூன்று வேதங்களிலும் வராது.

**என் கேள்விகள்:**

1. இஸ்லாமியர்கள் பைபிளில் உள்ள மற்றும் அல்லாஹ் இறக்கியதாகச் சொல்லும் தோரா(ஆதியாகமம் -உபாகமம்), ஜபூர் ( சங்கீதம் ) மற்றும் இஞ்ஜில் வேதத்தையே நம்புவதில்லை. ஆனால், அல்லாஹ் இறக்கியதாகச் சொல்லாத "ஆபகூக்" என்ற பைபிள் புத்தகத்திலிருந்து மட்டும் ஏன் அவர்கள் ஆதாரத்தை முன்வைக்கின்றனர்? வேடிக்கையாக உள்ளதல்லவா?

2. பைபிளின் "ஆபகூக்" புத்தகத்தைப் பற்றி, ஏதாவது வசனத்தை அல்லாஹ் குர்-ஆனில் சொல்லியுள்ளானா?

3. ஆபகூக் 3:3ம் வசனத்தை நம்பும் இஸ்லாமியர்கள், இந்த ஆபகூக் புத்தகம் முழுவதும் திருத்தப்படவில்லை என்று நம்புகிறார்களா?

4. தீர்க்கதரிசி ஆபகூக் போல பைபிளின் மற்ற தீர்க்கதரிசிகளாகிய ஏசாயா, எரேமிய, தானியேல் இன்னும் பல தீர்க்கதரிசிகள் புத்தகங்களையும் இஸ்லாமியகள் நம்புகிறார்கள் என்று நாம் நினைக்கலாமா?

### 2. ஆபகூக் புத்தகத்தின் சாராம்சம் (சாராம்சத்திற்கு வெளியே பொருள் தேடும் இஸ்லாமியர்கள்):

ஆபகூக் புத்தகம் முழுவதும் ஒரு முறை படித்துப்பாருங்கள். மக்களின் துன்மார்க்க வாழ்க்கையை பார்த்து தேவனிடம் முறையிடுகிறார்(ஆபகூக் அதிகாரங்கள் 1, 2) மற்றும் மூன்றாம் அதிகாரத்தில் தேவனின் அதிசய செயலை நினைத்து அவர் மீது சார்ந்துக்கொள்கிறார். தேவன் மூலமாக வரும் இரட்சிப்பை நினைத்து துதிபாடுகிறார்.

**ஆபகூக் 1:2-4**

2. கர்த்தாவே, நான் எதுவரைக்கும் உம்மை நோக்கிக் கூப்பிடுவேன். நீர் கேளாமலிருக்கிறீரே! கொடுமையினிமித்தம் நான் எதுவரைக்கும் உம்மை நோக்கிக் கூப்பிடுவேன், நீர் இரட்சியாமலிருக்கிறீரே!

3. நீர் எனக்கு அக்கிரமத்தைக் காண்பித்து, என்னைத் தீவினையைப் பார்க்கப்பண்ணுகிறதென்ன? கொள்ளையும் கொடுமையும் எனக்கு எதிரே நிற்கிறது; வழக்கையும் வாதையும் எழுப்புகிறவர்கள் உண்டு.

4. ஆகையால் நியாயப்பிரமாணம் பெலனற்றதாகி, நியாயம் ஒருபோதும் செல்லாமற்போகிறது; துன்மார்க்கன் நீதிமானை வளைந்துகொள்கிறான்; ஆதலால் நியாயம் புரட்டப்படுகிறது

எதிர்காலத்தில் ஒரு தீர்க்கதரிசி வருவார் என்று ஆபகூக் 3:3ல் சொல்லப்படவில்லை. தேவன் கடந்த காலத்தில் செய்த அற்புதத்தைப் பற்றி சொல்லப்பட்டுள்ளது. இஸ்லாமியர்கள் சொல்வது போல, முஹம்மது பாரானிலிருந்து வருவார் என்று ஆபகூக் சொல்லவில்லை, இது இஸ்லாமியர்களின் கற்பனையே தவிர வேறில்லை.

ஆபகூக் புத்தகத்தில் உள்ள மூன்று அதிகாரங்களை படிக்கும்படி இஸ்லாமியர்களை கேட்டுக்கொள்கிறேன். அப்போது தான் சில இஸ்லாமிய அறிஞர்களின் இந்த வாதம் தவறானது என்பது புரியும்.

### 3. ஆபகூக் 3ம் அதிகாரம் ஒரு பாடலே (விண்ணப்பம்) ஒழிய, முஹம்மது வருகையின் தீர்க்கதரிசனமல்ல?

ஆபகூக 3:1ம் வசனம் தெளிவாகச் சொல்கிறது, இந்த மூன்றாம் அதிகாரம் " ஒரு பாடலாகிய விண்ணப்பம்" என்று, இஸ்லாமியர்களின் கூற்றுப்படி இது ஒரு "எதிர் காலத்தில் நடக்க இருக்கின்ற தீர்க்கதரிசன வார்த்தைகள் அல்ல ". பார்க்க ஆபகூக் 3:1

ஆபகூக் 3:1 ஆபகூக் தீர்க்கதரிசி சிகாயோனில் பாடின விண்ணப்பம்.

A prayer of Habakkuk the prophet upon Shigionoth

இந்த பாடல் ஒரு வகையான வாத்தியத்தில் (அல்லது) ஒரு குறிப்பிட்ட இராகத்தில் பாடின பாடலாகும். அந்த வாத்தியம் அல்லது இராகம் சிகாயோனில் என்று குறிப்பிடப்படுகிறது. இந்த வாத்தியத்தில் தாவீது இராஜா கூட ஒரு சங்கீதம் பாடினார், இதை ஏழாம் சங்கீதம் தலைப்பு பகுதியில் காணலாம். இந்த வார்த்தை ஏழாம் சங்கீதத்தில் ஒருமையில் கொடுக்கப்பட்டுள்ளது. (Note: Shiggaion = singular, Shigionoth = Plural)

சங்கீதம் 7ன் தலைப்பு பகுதி: பென்யமீனியனாகிய கூஷ் என்பவனுடைய வார்த்தைகளினிமித்தம் தாவீது கர்த்தரை நோக்கி பாடின சீகாயோன் என்னும் சங்கீதம்.

A shiggaion of David, which he sang of the LORD concerning Cush, a Benjamite. (NIV Study Bible)

இந்த ஆபகூக் மூன்றாம் அதிகாரத்தின் முதல் சில வசனங்கள்(13 வசனங்கள்) ஒரு பாடல் தான் என்பதற்கு இன்னும் ஒரு ஆதாரம், ஆபகூக் 13ம் & 3:3 ம் வசனத்தின் கடைசியில் உள்ள "சேலா" என்ற வார்த்தையை பார்த்தால் புரியும் .

**ஆபகூக் 3:13**

உமது ஜனத்தின் இரட்சிப்புக்காகவும் நீர் அபிஷேகம் பண்ணுவித்தவனின் இரட்சிப்புக்காவுமே நீர் புறப்பட்டீர். கழுத்தளவாக அஸ்திபாரத்தைத் திறப்பாக்கி, துஷ்டனுடைய வீட்டிலிருந்த தலைவனை வெட்டினீர்; சேலா.

இந்த "சேலா " என்ற வார்த்தை ஐபூர் என்ற சங்கீத புத்தகத்தில் 39 சங்கீதங்களுக்கு வருகிறது (சங்கீதம் 3,4,7,9,20, 140,143 etc…). இது பாடல்களுக்கு, அல்லது இசைக்கு சம்மந்தப்பட்ட ஒரு வார்த்தையாகும். இதனை சங்கீதத்தை(Psalm) படிப்பவர்கள் கவனிக்கலாம்.

இந்த ஆபகூக் 3ம் அதிகாரம் ஒரு விண்ணப்பம் அல்லது பாடலாகிய விண்ணப்பம் என்று இந்த விவரங்கள் நமக்கு தெளிவாகச் சொல்கிறன. எனவே, ஆபகூக் 3:3ம் வசனம் முஹம்மதுவினுடைய வருகையின் தீர்க்கதரிசனம் அல்ல என்பது தெளிவு.

### 4. ஆபகூக் 3:3 வசன "பரிசுத்தர்" என்பது தேவதூதரோ அல்லது மனிதனோ அல்ல, அவர் "கர்த்தர்"

இந்த வசனத்தில் ஆபகூக் தேவனைப் பற்றியும் அவருடைய மகிமையைப் பற்றியும் பேசுகிறார். இந்த இடத்தில் பரிசுத்தர் என்பது முஹம்மதுவோ அல்லது

இது தான் இஸ்லாம் தள கட்டுரை சொல்வது போல தேவதூதரோ அல்ல, இந்த வசனத்தில் சொல்லப்பட்ட பரிசுத்தர் "தேவன்" ஆவார் .

பாரான் என்பது மக்கா அல்ல. இது சீனாய் தீபகர்பத்தில் உள்ள பாரான் வனாந்திரமாகும். (**பாரான் என்பது மக்கா அல்ல என்ற கட்டுரையை இங்கு படிக்கவும்**.)

ஆபகூக் 3:3

**தேவன் தேமானிலிருந்தும், பரிசுத்தர் பாரான் பர்வதத்திலிருந்தும் வந்தார்;** சேலா . அவருடைய மகிமை வானங்களை மூடிக்கொண்டது; அவர் துதியினால் பூமி நிறைந்தது.

இந்த இடத்தில் ஆபகூக் கடந்த கால(Past not Future) நிகழ்ச்சியை குறிப்பிடுகிறாரே தவிர, தன் காலத்திலிருந்து 1200 ஆண்டுகளுக்கு பிறகு வரும் முஹம்மதுவை குறித்து அவர் குறிப்பிடவில்லை. (ஆபகூக் காலம் கி.மு. 6ம் நூற்றாண்டாகும்). "வந்தார்" என்ற வார்த்தை கடந்த காலத்தை குறிக்கும், "வருவார்" என்று ஆபகூக் கூறவில்லை என்பதை கவனிக்கவும்.

இந்த ஆபகூக் பலமுறை கர்த்தர், தேவன், தேவரீர் என்று அடிக்கடி சொல்வதை காணலாம். அதாவது இவர் தேவனிடம் தொடர்ந்து விண்ணப்பம் செய்கிறதை பார்க்கலாம்.

பரிசுத்தர் என்ற வார்த்தையை தேவன் தன்னை குறிப்பிட பலமுறை பயன்படுத்தியுள்ளார். சில நேரங்களில் பக்தர்கள் "தேவன்" என்ற வார்த்தையும், "பரிசுத்தர்" என்ற வார்த்தையையும் சேர்த்தே (அடுத்ததடுத்து) பயன்படுத்தியுள்ளனர்.

**ஆபகூக் 1:12-13**

12 **கர்த்தாவே**, நீர் பூர்வகாலமுதல் என் தேவனும்
என் **பரிசுத்தருமானவர்** அல்லவா ? நாங்கள் சாவதில்லை, கர்த்தாவே, நியாயத்தீர்ப்பு செய்ய அவனை வைத்தீர்; கன்மலையே, தண்டனை செய்ய அவனை நியமித்தீர்.
13 தீமையைப் பார்க்கமாட்டாத சுத்தக்கண்ணனே, அநியாயத்தை நோக்கிக்கொண்டிருக்கமாட்டீரே; பின்னை துரோகிகளை நீர் நோக்கிக்கொண்டிருக்கிறதென்ன? துன்மார்க்கன் தன்னைப் பார்க்கிலும் நீதிமானை விழுங்கும்போது நீர் மௌனமாயிருக்கிறதென்ன?

12 O LORD, are you not from everlasting? My God, my **Holy One**, we will not die. O LORD, you have appointed them to execute judgment; O Rock, you have ordained them to punish.

13 Your eyes are too pure to look on evil; you cannot tolerate wrong. Why then do you tolerate the treacherous? Why are you silent while the wicked swallow up those more righteous than themselves?

**எசேக்கியேல்: 39:7**

இவ்விதமாய் நான் என் ஜனமாகிய இஸ்ரவேலின் நடுவிலே என் பரிசுத்த நாமத்தைத் தெரிவிப்பேன்; என் பரிசுத்த நாமத்தை இனிப் பரிசுத்தக்குலைச்சலாக்கவொட்டேன்; அதினால் நான் இஸ்ரவேலில் **பரிசுத்தராகிய கர்த்தர்** என்று புறஜாதிகள் அறிந்துகொள்வார்கள்.

Ezekiel 39: 7 " 'I will make known my holy name among my people Israel. I will no longer let my holy name be profaned, and the nations will know that I the LORD am the **Holy One** in Israel.

ஓசியா: 11:9

என் உக்கிர கோபத்தின்படியே செய்யமாட்டேன்; எப்பிராயீமை அழிக்கும்படித் திரும்பமாட்டேன்; ஏனென்றால் நான் மனுஷனல்ல, தேவனாயிருக்கிறேன்; நான் உன் நடுவிலுள்ள **பரிசுத்தர்**; ஆகையால் பட்டணத்துக்கு விரோதமாக வரேன்.

Hosea 11:9 I will not carry out my fierce anger, nor will I turn and devastate Ephraim. For I am God, and not man— the **Holy One** among you. I will not come in wrath

இந்த மேலே சொல்லப்பட்ட வசனங்களைக் கண்டும் நீங்கள் இன்னும் "பரிசுத்தர்" என்று ஆபகூக் 3:3ல் சொல்லப்பட்டது "தேவன்" தான் என்பதை நம்பவில்லையானால், நான் இன்னும் எத்தனை வசனங்களை ஆதாரமாக காட்டினாலும் நம்பமாட்டீர்கள்.

### 5. " தேவன்" என்பதை "முஹம்மது" என்று சொல்வது இஸ்லாமியர்களுக்கு "ஷிர்க்" ஆகும்

இஸ்லாமியர்கள் தொடர்ந்து செய்துக்கொண்டு வரும் ஒரு பெரிய தவறு என்னவென்றால், பைபிளில் எங்கெல்லாம் (தங்களுக்கு சாதகமான வசனங்களில்) "தேவன்" அல்லது "இறைவன்" என்று வருகிறதோ, அங்கெல்லாம் அந்த வார்த்தை குறிப்பிடுவது "முஹம்மது" தான் என்று சொல்லிவருகிறார்கள்.

இது இஸ்லாமியர்களின் நம்பிக்கையின்படி "ஷிர்க் - SHIRK" ஆகும். அதாவது, அல்லாஹ்விற்கு இணையாக மனிதனை ஒப்பிடுவது. இதை இவர்கள் தெரிந்து செய்கிறார்களோ தெரியாமல் செய்கிறார்களோ எனக்கு தெரியாது. முஹம்மதுவை நபி என்று நிருபிக்க வேறு வழி ஏதாவது தேடினால் அவர்களுக்கு நல்லது, இல்லையென்றால் இறைவனுக்கு இணைவைத்த பாவத்திற்கு ஆளாகவேண்டி வரும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

### 6. பாரான் மலை அரேபியாவின் "ஹிரா" மலை அல்ல.

பாரான் என்பது மக்கா அல்ல என்பதை நாம் முன்பே பார்த்தோம். இங்கு இது தான் இஸ்லாம் தள நண்பர் எழுதுகிறார், பாரான் மலை என்பது "ஹிரா" மலையாகும் என்று. இதற்கு எந்த ஆதாரமும் காட்டமுடியாது.

இஸ்லாமியர்களின் வாதம் தவறானது என்று இது வரை நாம் பார்த்த விவரங்கள் மிகத்தெளிவாகச் சொல்கிறது. இவர்களுடைய வாதம் வெறும் ஆதாரமில்லாத வாதமே ஒழிய வேறில்லை.

### 7. ஆபகூக் இந்த வாதத்தைப் பற்றி இதர இஸ்லாமிய அறிஞர்கள்:

டாக்டர் ஜமால் பதாவி: இவர் இந்த வசனத்தைப் பற்றி பேசும் போது ஒருபடி மேலே சென்று, பைபிளின் பொருள் மாறும்படி சில வார்த்தைகளை அடைப்பிற்குள் எழுதி தன் வாதத்தை முன்வைக்கிறார் .

Dr. Jamal Badawi also claimed that, "Habakkuk 3:3 speaks of God (God's help) coming from Te'man (an Oasis North of Medina according to J. Hasting's Dictionary of the Bible), and the holy one (coming) from Paran. That holy one who under persecution migrated from Paran (Mecca) to be received enthusiastically in Medina was none but prophet Muhammad." Source : **www.bibleandquran.com/quran-word-of-god8.htm**

தேவன் என்று வரும் வார்த்தையை தேவனின் உதவி அதாவது God's Help என்று அடைப்பு குறிக்குள் போட்டுவிட்டு இவர் பொருள் கூறுகிறார். "God's Help" என்று எழுதினால் தான், முஹம்மதுவிற்கு உதவியாக இருக்கும் என்று இவர் எழுதுகிறார்.

இன்னொரு இஸ்லாமிய சகோதரர் தேவன் என்ற வார்த்தைக்கு பக்கத்தில் His Guidance என்று எழுதி வசனத்தை வெளியிடுகிறார். உண்மையில் அந்த வசனத்தில் தேவன் என்ற வார்த்தை உள்ளதே தவிர "தேவனின் உதவி" அல்லது God's Guidance என்று இல்லை. இவைகள் எல்லாம் இஸ்லாமிய அறிஞர்களின் திருவிளையாடல்கள். Source: **www.answering-islam.de/Main/Muhammad/Foretold/mish1a.html**

முடிவாக முஹம்மதுப் பற்றி ஒரு வசனமும் பைபிளில் இல்லை. அப்படி இருந்து இருந்தால், அதை கிறிஸ்தவர்கள் தான் முதலாவது நம்பியிருப்பார்கள். மாற்று மத வேதங்களை எப்படியெல்லாம் திருத்திச் சொல்லவேண்டுமோ அப்படியெல்லாம் இஸ்லாமிய அறிஞர்களில் சிலர் திருத்திச் சொல்கிறார்கள். இதனால் ஒரு பிரயோஜனமும் இருக்காது.

இயேசுவிற்கு அடுத்து இன்னொருவர் வரவேண்டிய அவசியமே இல்லை. வேண்டுமானால், கள்ள தீர்க்கதரிசிகள் வருவார்கள், பல பொய்யைச் சொல்வார்கள், ஏன் பல அற்புதங்களையும் செய்வார்கள் என்று பைபிள் சொல்கிறது. இயேசு தான் வழியும் சத்தியமும் ஜீவனுமாய் இருக்கிறார் என்பதை இஸ்லாமிய அன்பர்கள் தெரிந்துக்கொள்ள வேண்டும் என்ற ஜெபத்துடன் முடிக்கிறேன்.



**கேள்வி 67: பைபிளில் வரும பாரான் என்பது மக்கா என்று முஸ்லிம்கள் கூறுகிறார்கள் (ஆபகூக் 3:3 & உபாகமம் 1:1)? இது சரியா?**

**பதில் 67:** பைபிளில் வரும் பாரான் வனாந்திரம் மக்கா அல்ல. இதற்கான பதில் கீழ்கண்ட கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளது.

- **பாரான் என்பது மக்கா அல்ல!**



**கேள்வி 68: அஹமத் தீதத் அவர்கள் கேட்ட கேள்வி: பரிசுத்த ஆவியை பெறுவதற்கு இயேசு 30 ஆண்டுகள் காத்திருந்தார் (மத்தேயு 3:16), ஆனால் யோவான் ஸ்நானகன் பிறந்ததிலிருந்தே பரிசுத்த ஆவியினால் நிரம்பியிருந்தார் (லூக்கா 1:15). “மறுபடியும் பிறந்த கிறிஸ்தவர்கள்”, பரிசுத்த ஆவியானவரை மலிவுவிலை போன்று மிகவும் சுலபமாக பெற்றுக் கொள்கிறார்கள். இது வேடிக்கையாக உள்ளதல்லவா?**

**பதில் 68:** அஹமத் தீதத் அவர்கள் பெரிய இஸ்லாமிய அறிஞர், ஆனால் இவரது கேள்விகளைப் பார்த்தால், வேடிக்கையாகவும், சிந்திக்காமல், ஆய்வு செய்யாமல் மேலோட்டமாக கேட்கப்பட்டதாகவும் தெரிகின்றது.

**இலவசம் வேறு - மலிவானது வேறு:**இவ்விரண்டிற்கும் உள்ள வித்தியாசம் தெரியாத முஸ்லிம்கள்:

அஹமத் தீதத் அவர்களுக்கு 'இலவசம்' மற்றும் 'மலிவு' இவ்விரண்டிற்கு இடையேயுள்ள வித்தியாசத்தை புரிந்துக்கொள்ள குழப்பம் உள்ளது என்பதை அறியமுடிகின்றது. மேலும் இயேசுவின் தெய்வீகத்தன்மைப் பற்றி பைபிள் என்ன சொல்கிறது என்பதையும் அவர் சரியாக அறிந்துக்கொள்ளவில்லை.

அஹமத் தீதத் அவர்கள் பரிசுத்த ஆவியானவர் என்ற தேவனின் விலைமதிப்பில்லாத பரிசை பெறாதபடியினால், அவருக்கு "மக்கள் பார்க்கும் விதமாக பரிசுத்த ஆவியானர் ஒரு வெளிச்சமாக, புறாவைப்போன்று இயேசு மீது வந்து அமர்ந்ததை புரிந்துக்கொள்ளமுடியாமல் போகிறது".

**இலவசம் தான் ஆனால், மலிவானதல்ல:**

ஒரு மனிதன் இயேசுவை தன் சொந்த தெய்வமாக விசுவாசிக்கும் போது, தன் பாவங்களை அறிக்கையிட்டு மனந்திரும்பும் போது, அவனுக்குள் பரிசுத்த ஆவியானவர் வாசம் செய்ய ஆரம்பிக்கிறார். இந்த பரிசு இலவசமானது தான், ஆனால் விலைமதிக்கமுடியாதது, அதாவது, 'இயேசுவின் மரணம் இதற்கு, அதாவது இந்த இரட்சிப்பிற்கு விலையாக கொடுத்து வாங்கப்பட்டதாகும்'. இந்த பரிசுத்த ஆவியானவர் ஒரு விசுவாசியின் உள்ளத்தில் வாசம் செய்து, நாலொரு

மேனி பொழுதொரு வண்ணம் என்று சொல்வதுபோன்று, அந்த மனிதனை ஒவ்வொரு நாளும் சுத்திகரித்து, நீதியில் நடக்கவைத்து, அம்மனிதனின் கடைசி மூச்சு வரைக்கும் கூட இருந்து பரிசுத்தத்தில் நடக்க உதவி செய்கின்றார். இதைத் தான் ஒவ்வொரு "**மறுபடியும் பிறந்தவர்கள்**" பெற்றுக்கொள்வது, இதற்கு அந்த மனிதன் விலை கொடுக்கவில்லை, இயேசு கொடுத்தார். அந்த மனிதனுக்கு இரட்சிப்பு இலவசம், ஆனால் அது இயேசுவின் இரத்தம் கொடுத்து உயிர் கொடுத்து சம்பாதிக்கப்பட்டது.

எனவே, இலவசமாக கிடைப்பதெல்லாம் மலிவானது முக்கியமில்லாதது என்று கருதுவது தவறு. காற்று இலவசம் தான், மலிவானது அல்ல. இலவசமாக கிடைக்கும் காற்று நின்றுவிட்டால், இல்லாமல் போனால், மனிதன் அழிந்துவிடுவான்.

**இயேசுவின் தெய்வீகத்தன்மையும் பரிசுத்த ஆவியானவரும்:**

இயேசு பரிசுத்த ஆவியானவரின் நிறைவிற்காக 30 ஆண்டுகள் காத்திருந்தார் என்று கூறுவது தவறான புரிதலாகும். ஏனென்றால்,

- சிறு வயதிலிருந்தே "தேவனுடைய கிருபையும் அவர்மேல் இருந்தது" (லூக்கா 2:40).
- இயேசுவே இறைவனாக இருக்கிறார், மனிதர்களாகிய நாம் பரிசுத்த ஆவியானவரால் நிரப்பப்படுவது போன்று அவருக்குத் தேவையில்லை.

**மேலும்:**

**இயேசு பரிசுத்த ஆவியானவரை தம் விசுவாசிகளுக்காக அனுப்புவார்:**

யோவான் 16:7. நான் உங்களுக்கு உண்மையைச் சொல்லுகிறேன்; நான் போகிறது உங்களுக்குப் பிரயோஜனமாயிருக்கும்; நான் போகாதிருந்தால், தேற்றரவாளன் உங்களிடத்தில் வரரார்; நான் போவேனேயாகில் **அவரை உங்களிடத்திற்கு அனுப்புவேன்**.

**இயேசுவின் பெயரிலே, பிதா பரிசுத்த ஆவியானவரை அனுப்புவார்:**

யோவான் 14:

16. நான் பிதாவை வேண்டிக்கொள்ளுவேன், அப்பொழுது என்றென்றைக்கும் உங்களுடனேகூட இருக்கும்படிக்குச் சத்திய ஆவியாகிய வேறொரு தேற்றரவாளனை அவர் உங்களுக்குத் தந்தருளுவார்.

26. **என் நாமத்தினாலே பிதா அனுப்பப்போகிற பரிசுத்த ஆவியாகிய தேற்றரவாளனே** எல்லாவற்றையும் உங்களுக்குப் போதித்து, நான் உங்களுக்குச் சொன்ன எல்லாவற்றையும் உங்களுக்கு நினைப்பூட்டுவார்.

பிதா, இயேசு மற்றும் பரிசுத்த ஆவியானவர் ஒன்றாகவே எப்போதும் இருப்பார்கள், அவர்களை வேறு பிரிக்கமுடியாது.

**இயேசுவின் மீது பரிசுத்த ஆவியானவர் புறாவைப் போல இறங்கியது, யாருக்காக?**

பிதாவும், இயேசுவும், பரிசுத்த ஆவியானவரும் ஒருவருக்குள் ஒருவர் இருப்பார்கள் என்று மேலே பார்த்தோம்.

மத்தேயு 3:16ல் "தேவ ஆவி புறாவைப்போல இறங்கி, தம்மேல் வருகிறதைக் கண்டார்" என்று சொல்லப்பட்டதை அஹமத் தீதத் தவறாக புரிந்துக் கொண்டுள்ளார்.

மத்தேயு 3:16. இயேசு ஞானஸ்நானம் பெற்று, ஜலத்திலிருந்து கரையேறினவுடனே, இதோ, வானம் அவருக்குத் திறக்கப்பட்டது; **தேவ ஆவி புறாவைப்போல இறங்கி, தம்மேல் வருகிறதைக் கண்டார்**.

17. அன்றியும், வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாகி, **இவர் என்னுடைய நேசகுமாரன், இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று உரைத்தது**.

தேவ ஆவியானவர் ஒரு புறாவைப்போல இறங்கிவந்து இயேசு மீது அமர்ந்தது, இயேசுவிற்காக அல்ல, அது மற்றவர்களுக்காக ஆகும். அதே போன்று வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்டானதும் இயேசுவிற்காக அல்ல, அது மற்றவர்களுக்காக ஆகும்.

குறிப்பாக சொல்லவேண்டுமென்றால், யார் மேசியா என்று யோவான் ஸ்நானகன் அறிந்துக்கொள்வதற்காக பரிசுத்த ஆவியானவர் வெளிப்படையாக காணும்படி வந்தார். யோவான் சொல்லும் சாட்சியை கவனியுங்கள்:

மேசியாவை கண்டுபிடிப்பதற்கு யோவானுக்கு தேவன் ஒரு அடையாளத்தைக் கொடுத்து இருந்தார், அது என்னவென்று பாருங்கள்:

**யோவான் 1:29-34**

29. மறுநாளிலே யோவான் இயேசுவைத் தன்னிடத்தில் வரக்கண்டு: இதோ, உலகத்தின் பாவத்தைச் சுமந்துதீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டி.

30. எனக்குப்பின் ஒருவர் வருகிறார், அவர் எனக்கு முன்னிருந்தபடியால் என்னிலும் மேன்மையுள்ளவரென்று நான் சொன்னேனே, அவர் இவர்தான்.

31. **நானும் இவரை அறியாதிருந்தேன்;** இவர் இஸ்ரவேலுக்கு வெளிப்படும் பொருட்டாக, நான் ஜலத்தினாலே ஞானஸ்நானங் கொடுக்க வந்தேன் என்றான்.

32. பின்னும் யோவான் சாட்சியாகச் சொன்னது: ஆவியானவர் புறாவைப்போல வானத்திலிருந்திறங்கி, இவர்மேல் தங்கினதைக் கண்டேன்.

33. **நானும் இவரை அறியாதிருந்தேன்; ஆனாலும் ஜலத்தினால் ஞானஸ்நானங்கொடுக்கும்படி என்னை அனுப்பினவர்: ஆவியானவர் இறங்கி யார்மேல் தங்குவதை நீ காண்பாயோ, அவரே பரிசுத்த ஆவியினால் ஞானஸ்நானங்கொடுக்கிறவரென்று எனக்குச் சொல்லியிருந்தார்.**

34. அந்தப்படியே நான் கண்டு, இவரே தேவனுடைய குமாரன் என்று சாட்சி கொடுத்துவருகிறேன் என்றான்.

இயேசுக் கிறிஸ்து பரிசுத்த ஆவியால் ஞானஸ்நானம் கொடுக்கின்றவர், அவரோடு எப்போதும் பரிசுத்த ஆவியானவர் இருக்கிறார். புறாவைப்பற்றிய அடையாளம் யாருக்கு தேவையாக இருந்தது? யோவான் ஸ்நானனுக்கு தேவையாக இருந்தது என்பதைத் தான் மேலே பார்த்தோம்.

**இதுவரை கண்ட விவரங்களிலிருந்து நாம் அறிவது:**

1) இஸ்லாமிய அறிஞர் அஹமத் தீதத் ஒரு இறையியலில் ஒரு அரைவேக்காடு ஆவார். அரைகுறையாக மற்றவர்களின் வேதங்களை படித்து, தனக்கு சாதகமான பொருளை கூறுபவர்கள் அரைகுறை ஞானமுள்ளவர்கள் தானே!

2) இயேசுவிற்குள், இயேசுவோடு எப்போதும் பரிசுத்த ஆவியானவர் இருக்கிறார்.

3) தேவ ஆவி புறாவைப்போல வந்து இயேசு மீது அமர்ந்ததும், வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாகி, இவர் என்னுடைய நேசக்குமாரன் என்றுச் சொன்னதும், இயேசுவிற்காக அல்ல, அது மற்றவர்களுக்கான அடையாளங்கள் ஆகும்.

4) இயேசுவை ஏற்றுக்கொள்கின்ற ஒவ்வொருவருக்கும் பரிசுத்த ஆவியானவர் தங்குகிறார், அந்த மனிதனுக்குள் வாசம் செய்து, அந்த நபரை தேவனுடைய ராஜ்ஜியத்துக்கு ஏற்ற நபராக அவர் மாற்றுகின்றார். இதைத் தான் பரிசுத்த ஆவியானவரின் வழிநடத்துதல் என்கிறோம்.

5) இந்த இடத்தில் பரிசுத்த ஆவியானவரின் வரங்களில் ஒன்றான "அந்நிய பாஷைகளை" பேசுதல் பற்றி நான் கூறவில்லை, இதைப் பற்றி வேறு கேள்விகளில் அறிந்துக்கொள்ளலாம். பரிசுத்த ஆவியானவர் ஒவ்வொருவரின் உள்ளங்களில் வாழுகின்றார், வழிநடத்துகின்றார், இது ஒவ்வொருவருக்குள்ளும் நடப்பதாகும்.

ஆக, பைபிளை ஆய்வு செய்து கேள்வி கேட்க விரும்பும் அருமையான முஸ்லிம் சகோதர சகோதரிகளிடம் நான் வேண்டிக்கொள்வது என்னவென்றால், நீங்கள் கேள்விகளை கேட்பதற்கு முன்பாக, சுயமாக நீங்களே பைபிளை படித்துப் பாருங்கள், உங்களுக்கு சுலபமாக புரியும். அதன் பிறகும் புரியவில்லையென்றால் கேள்விகளை கேளுங்கள் பதில்களைச் சொல்கிறோம்.

அஹமத் தீதத், ஜாகிர் நாயக் மற்றும் பீ ஜைனுல் ஆபீதீன் போன்ற முஸ்லிம் அறிஞர்கள் சொல்லும் விவரங்களை "**நீங்கள் ஆய்வு செய்யாமல் நம்பாதீர்கள்**", இது ஆபத்தானதாகும்.



**கேள்வி 69: அமஹதியா முஸ்லிம்கள் 'இயேசு யூதர்களுக்கு மட்டுமல்ல, அனைத்துலகத்துக்கும் வந்த இரட்சகர்' என்று நிருபித்தால் $20,000 அமெரிக்க டாலர்கள் கொடுப்பதாக சவால் விட்டுள்ளார்களே, இதற்கு என்ன பதில்? மத்தேயு 10 5-6**

**பதில் 69:** இன்று இவர்கள் இந்த கேள்வியை கேட்கவில்லை, பல ஆண்டுகளுக்கு முன்பாக கேட்டுள்ளார்கள். இன்றுள்ள முஸ்லிம்கள் இப்படி பணத்தைக்கொண்டு சவால் விடுவதில்லை என்றாலும், அவர்கள் இந்த கேள்வியை கேட்கிறார்கள். முஹம்மது முழு உலகத்துக்கும் வந்த இறைத்தூதர், ஆனால், இயேசு யூதர்களுக்காக மட்டுமே வந்தவர் என்று சொல்கிறார்கள்.

இது ஒரு முக்கியமான கேள்வி, இதற்கு பதில் சொல்லியே ஆகவேண்டும்.

பைபிளில் அதாவது பழைய ஏற்பாட்டு புத்தகம் தொடங்கி, வெளிப்படுத்தின விசேஷம் என்ற கடைசி புத்தகம் வரை, மேசியா அதாவது இயேசுக் கிறிஸ்து முழு உலகத்துக்கும் வந்த இரட்சகர் என்றுச் சொல்கிறது.

**மத்தேயு 10:5-6**

5. இந்தப் பன்னிருவரையும் இயேசு அனுப்புகையில், அவர்களுக்குக் கட்டளையிட்டுச் சொன்னது என்னவென்றால்: **நீங்கள் புறஜாதியார் நாடுகளுக்குப் போகாமலும், சமாரியர் பட்டணங்களில் பிரவேசியாமலும்,** 6. **காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்குப் போங்கள்.**

மேற்கண்ட இரண்டு வசனங்களை மட்டுமே வைத்துக்கொண்டு ஆய்வு செய்யக்கூடாது, இதைப் பற்றி இதர வசனங்களையும ஆய்வு செய்யவேண்டும், அப்போது தான் உண்மை புரியும்.

**இவைகளை கிழ்கண்ட தலைப்புக்களில் ஆய்வு செய்வோம்:**

1) பழைய ஏற்பாடு மேசியா முழு உலகத்துக்கும் இரட்சகர் என்றுச் சொல்கிறது

2) இயேசு சமாரியர்களிடமும் சென்று தம் இரட்சிப்பின் செய்தியை பரப்பினார்

3) இயேசு இஸ்ரவேலுக்கு வெளியே சென்று யூதரல்லாவதவர்களுக்கும் தம் செய்தியைச் சொன்னார்

4) இயேசு தம்முடைய செய்தி உலகமனைத்திற்கும் செல்லவேண்டும் என்று கட்டளையிட்டார்

5) கடைசியாக, இயேசுவின் சீடர்கள் அவரின் உண்மையான செய்தியை சரியாக புரிந்துக்கொண்டு ஊழியம் செய்தார்கள்

இப்பொழுது மேற்கண்ட தலைப்புக்கள் ஒவ்வொன்றிற்கும் சான்றுகளைப் பார்ப்போம்.

---

**1) பழைய ஏற்பாடு மேசியா முழு உலகத்துக்கும் இரட்சகர் என்றுச் சொல்கிறது**

**ஏசாயா 9:1-7** வசனங்கள், மேசியாவின் ஊழியம் பற்றிய துள்ளியான தீர்க்கதரிசனமாக உள்ளது.

**ஏசாயா 9:1** முதல் வசனத்தின் இரண்டாம் பாகம், என்ன சொல்கிறது என்பதை கவனியுங்கள், யூதரல்லாத புறஜாதி(மற்ற நாடுகள்) மக்களுக்கும் அவர் ஊழியம் செய்வார்:

"9:1.. . . ஏனென்றால் அவர் கடற்கரையருகிலும், யோர்தான் நதியோரத்திலுமுள்ள **புறஜாதியாருடைய கலிலேயாவாகிய அத்தேசத்தைப் பிற்காலத்திலே மகிமைப்படுத்துவார்**."

**ஏசாயா 42:1-9** கூட மேசியாவின் தீர்க்கதரிசனமாகும்: 6,7ம் வசனங்களில் பல ஜாதிகளுக்கு (நாடுகளுக்கு) என்றுச் சொல்லப்பட்டுள்ளது, இஸ்ரவேல் என்ற ஒரு நாட்டுக்கு மட்டுமல்ல. தமிழ் பைபிளில் "ஜாதி" என்ற வார்த்தை "நாடு (Nation, Country)" என்ற வார்த்தைக்கான மொழியாக்கமாகும். இன்று இந்தியாவில் பயன்படுத்தும் "ஜாதி(Caste)" என்ற பொருளில் இவ்வசனங்கள் வரவில்லை என்பதை புரிந்துக்கொள்ளவேண்டும்.

**ஏசாயா 42:6** நீர் குருடருடைய கண்களைத் திறக்கவும், கட்டுண்டவர்களைக் காவலிலிருந்தும், இருளில் இருக்கிறவர்களைச் சிறைச்சாலையிலிருந்தும் விடுவிக்கவும்,

7. கர்த்தராகிய நான் நீதியின்படி உம்மை அழைத்து, உம்முடைய கையைப்பிடித்து, உம்மைத் தற்காத்து, உம்மை ஜனத்திற்கு உடன்படிக்கையாகவும், **ஜாதிகளுக்கு(நாடுகளுக்கு-Nations, Countries) ஒளியாகவும் வைக்கிறேன்**.

**ஏசாயா 49:1-7 கூட மேசியாவின் தீர்க்கதரிசனமாகும்:**

ஏசாயா 49:6. யாக்கோபின் கோத்திரங்களை எழுப்பவும், இஸ்ரவேலில் காக்கப்பட்டவர்களைத் திருப்பவும், நீர் எனக்குத் தாசனாயிருப்பது அற்பகாரியமாயிருக்கிறது; நீர் பூமியின் கடைசிபரியந்தமும் என்னுடைய இரட்சிப்பாயிருக்கும்படி, **உம்மை ஜாதிகளுக்கு(நாடுகளுக்கு-Nations, Countries) ஒளியாகவும் வைப்பேன் என்கிறார்**.

இன்னும் பழைய ஏற்பாட்டிலிருந்து மேசியாவைப் பற்றிய அனேக வசனங்களை மேற்கோள் காட்டலாம். இப்போது அடுத்த தலைப்பிற்குச் செல்வோம்.

### 2) இயேசு சமாரியர்களிடமும் சென்று தம் இரட்சிப்பின் செய்தியை பரப்பினார்

**யோவான் 1:1-42** வசனங்களின் படி, இயேசு சமாரியார்களுக்கும் நற்செய்தியை அறிவித்தார். இந்த சமாரியர்கள் என்பவர்கள் பழைய ஏற்பாட்டின் கடைசி காலத்திலிருந்து அந்நிய ஜனங்களோடு சேர்ந்துவிட்ட யூதர்கள் ஆவார்கள். ஆனால், இவர்கள் யூதர்கள் என்று அறியப்படாதவர்கள் ஆவார்கள்.

லூக்கா 17:16. அவருடைய பாதத்தருகே முகங்குப்புற விழுந்து, அவருக்கு ஸ்தோத்திரஞ்செலுத்தினான்; அவன் சமாரியனாயிருந்தான்.

17. அப்பொழுது இயேசு: சுத்தமானவர்கள் பத்துப்பேர் அல்லவா, மற்ற ஒன்பதுபேர் எங்கே?

18. தேவனை மகிமைப்படுத்துகிறதற்கு, **இந்த அந்நியனே ஒழிய மற்றொருவனும் திரும்பிவரக்காணோமே** என்று சொல்லி,

ஆனால், சமாரியர்களில் ஒரு பெண்ணுக்கு மட்டும் நற்செய்தி சொல்லவில்லை, சமாரிய கிராமங்களில் உள்ள அனைவருக்கும் இயேசு தம்மை மேசியாவாக அறிவிக்கிறார்.

**யோவான் 4:8,9**

8. அப்பொழுது சமாரியா நாட்டாளாகிய ஒரு ஸ்திரீ தண்ணீர் மொள்ள வந்தாள். இயேசு அவளை நோக்கி: தாகத்துக்குத் தா என்றார்.

9. **யூதர்கள் சமாரியருடனே சம்பந்தங்கலவாதவர்களானபடியால்**, சமாரியா ஸ்திரீ அவரை நோக்கி: நீர் யூதனாயிருக்க, சமாரியா ஸ்திரீயாகிய என்னிடத்தில், தாகத்துக்குத்தா என்று எப்படிக் கேட்கலாம் என்றாள்.

34வது வசனத்தில் "**சமாரியர்களுக்கு நற்செய்தி சொல்வதே தேவனின் சித்தம்** என்று இயேசு தம் சீடர்களுக்குச் சொல்கிறார்". இயேசு யூதர்களுக்கு மட்டுமே வந்தால், எப்படி மற்ற மக்களுக்குச் சொல்வது 'தேவனின் சித்தமாக இருக்கும்?'.

யோவான் 4:34. இயேசு அவர்களை நோக்கி: நான் என்னை **அனுப்பினவருடைய சித்தத்தின்படி செய்து** அவருடைய கிரியையை முடிப்பதே என்னுடைய போஜனமாயிருக்கிறது.

இயேசுவை சமாரியர்கள் வேண்டிக்கொண்டபடியே, அவர் அவர்களோடு **இரண்டுநாள்** தங்கினார். அம்மக்கள் கூட அவர்மீது நம்பிக்கைக் கொண்டனர், உலக இரட்சகர் என்றனர்.

**யோவான் 4:40.** சமாரியர் அவரிடத்தில் வந்து, தங்களிடத்தில் தங்கவேண்டுமென்று அவரை வேண்டிக்கொண்டார்கள்; **அவர் இரண்டுநாள் அங்கே தங்கினார்**.

41. அப்பொழுது அவருடைய உபதேசத்தினிமித்தம் இன்னும் அநேகம்பேர் விசுவாசித்து,

42. அந்த ஸ்திரீயை நோக்கி: உன் சொல்லினிமித்தம் அல்ல, அவருடைய உபதேசத்தை நாங்களே கேட்டு, அவர் மெய்யாய்க் கிறிஸ்துவாகிய உலகரட்சகர் என்று அறிந்து விசுவாசிக்கிறோம் என்றார்கள்.

இயேசு வெறும் யூதர்களுக்காக மட்டுமே வந்த இரட்சகர் என்றால், ஏன் அவர் சமாரியர்களிடம் **இரண்டு** நாட்கள் தங்கி, அவர்களுக்கு ஊழியம் செய்கிறார், தம்மை வெளிப்படுத்துகிறார்?

### 3) இயேசு இஸ்ரவேலுக்கு வெளியே சென்று யூதரல்லாவதவர்களுக்கும் தம் செய்தியைச் சொன்னார்

மாற்கு 7ம் அத்தியாயத்தில், கிரேக்க மக்களுக்கும் இயேசு தம் நற்செய்தியைச் சொல்லி, சுகமாக்கினார் என்று காண்கின்றோம்.

இந்த நிகழ்ச்சியில் வரும் பெண் ஒரு கிரேக்கப்பெண்ணாக இருந்தாள் (ஸ்திரீ சீரோபேனிக்கியா தேசத்தாளாகிய கிரேக்க ஸ்திரீயாயிருந்தாள்) என்பதைக் காண்கிறோம். அந்த நாடும் இஸ்ரேல் நாடு அல்ல, அந்தப் பெண்ணும் யூதப்பெண் அல்ல.

**மாற்கு 7:24-26**

24. பின்பு, அவர் எழுந்து அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, தீரு சீதோன் பட்டணங்களின் எல்லைகளில் போய், ஒரு வீட்டுக்குள் பிரவேசித்து, ஒருவரும் அதை அறியாதிருக்க விரும்பியும், அவர் மறைவாயிருக்கக் கூடாமற்போயிற்று.

25. அசுத்த ஆவி பிடித்திருந்த ஒரு சிறு பெண்ணின் தாயாகிய ஒரு ஸ்திரீ அவரைக்குறித்துக் கேள்விப்பட்டு, வந்து அவர் பாதத்தில் விழுந்தாள்.

26. அந்த **ஸ்திரீ சீரோபேனிக்கியா தேசத்தாளாகிய கிரேக்க ஸ்திரீயாயிருந்தாள்**; அவள் தன் மகளைப் பிடித்திருந்த பிசாசைத் துரத்திவிடவேண்டுமென்று அவரை வேண்டிக்கொண்டாள்.

**பன்றிகளை வளர்க்கும் யூதரல்லாத நாட்டில் (கதரேனருடைய நாட்டில்) இயேசுவின் ஊழியம்: மாற்கு 5:1-20**

1. பின்பு அவர்கள் கடலுக்கு அக்கரையிலுள்ள **கதரேனருடைய நாட்டில்** வந்தார்கள்.

2. அவர் படவிலிருந்து இறங்கினவுடனே, அசுத்த ஆவியுள்ள ஒரு மனுஷன் பிரேதக்கல்லறைகளிலிருந்து அவருக்கு எதிராக வந்தான்.

யூதர்களின் நாட்டில் பன்றிகளை வளர்க்கமாட்டார்கள். மேற்கண்ட கிரேக்க நாட்டில் இயேசு சென்று ஒரு மனிதனை சுகமாக்கினார், இன்னும் அனேக அற்புதங்கள் செய்ய விரும்பினார், ஆனால் அவரது ஊழியத்தை விரும்பவில்லை, எனவே திருப்பி அனுப்பிவிட்டார்கள்.

இரட்சிப்பின் செய்தியை இயேசு யூதரல்லாத கிரேக்க நாடுகளுக்கும் சொல்லியுள்ளார்.

மேலும் பார்க்க: **மாற்கு 7:31-37 மற்றும் மாற்கு 8:1-10**

இவைகள் எல்லாம் அந்நிய நாடுகள் ஆகும், அங்கும் இயேசு சென்று தம் நற்செய்தியைச் சொல்லி, அற்புதங்களைச் செய்தார்.

**4) இயேசு தம்முடைய செய்தி உலகமனைத்திற்கும் செல்லவேண்டும் என்று கட்டளையிட்டார்**

இயேசு தம் சீடர்களிடம் தம் நற்செய்தியை வெறும் யூதர்களுக்கு மட்டுமல்ல, உலக நாடுகள் அனைத்திற்கும் சென்று அறிவியுங்கள் என்றார்.

**a) மனந்திரும்புதலும் பாவமன்னிப்பும் எருசலேம் தொடங்கிச் சகல தேசத்தாருக்கும் பிரசங்கிக்கப்பட வேண்டும்:**

**லூக்கா 24: 45-47**

லூக்கா 24:45. அப்பொழுது வேதவாக்கியங்களை அறிந்துகொள்ளும்படி அவர்களுடைய மனதை அவர் திறந்து அவர்களை நோக்கி:

46. எழுதியிருக்கிறபடி, கிறிஸ்து பாடுபடவும், மூன்றாம்நாளில் மரித்தோரிலிருந்தெழுந்திருக்கவும் வேண்டியதாயிருந்தது;

47. அன்றியும் மனந்திரும்புதலும் பாவமன்னிப்பும் **எருசலேம் தொடங்கிச் சகல தேசத்தாருக்கும் அவருடைய நாமத்தினாலே பிரசங்கிக்கப்படவும் வேண்டியது**.

**மத்தேயு 28:18-20**

மத்தேயு 28:18. அப்பொழுது இயேசு சமீபத்தில் வந்து, அவர்களை நோக்கி: வானத்திலும் பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

19. ஆகையால், நீங்கள் புறப்பட்டுப்போய், **சகல ஜாதிகளையும் (சகல நாடுகளுக்கும் - All Nations, countries) சீஷராக்கி,** பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து,

20. நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்; இதோ, உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனேகூட இருக்கிறேன் என்றார். ஆமென்.

**மத்தேயு 8: 10-12 :** பல நாடுகளிலிருந்து தம்மை நம்பியவர்கள் வருவார்கள், ஆனால், ராஜ்ஜியத்தின் புத்திரர் (யூதர்கள்) தண்டிக்கப்படுவார்கள் என்று இயேசு இங்கு சுட்டிக்காட்டுகின்றார். வேறு நாட்டிலிருந்து வந்த ஒருவருக்கு 'உன் வேண்டுதலை கேட்டேன், உன் விசுவாசத்தின் படி நடக்கும் என்று நம்பிக்கைகொடுத்து, அற்புதம் செய்கின்றார்'

மத்தேயு 8:10. இயேசு இதைக் கேட்டு ஆச்சரியப்பட்டு, தமக்குப் பின் செல்லுகிறவர்களை நோக்கி: இஸ்ரவேலருக்குள்ளும் நான் இப்படிப்பட்ட விசுவாசத்தைக் காணவில்லை என்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

11. **அநேகர் கிழக்கிலும் மேற்கிலுமிருந்து வந்து, பரலோகராஜ்யத்தில் ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்களோடே பந்தியிருப்பார்கள்**.

12. **ராஜ்யத்தின் புத்திரரோ புறம்பான இருளிலே தள்ளப்படுவார்கள்**; அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்குமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

மேசியாவாகிய இயேசு கைக்குழந்தையாக இருந்தபோது, அவரைப் பற்றி சிமியோன் என்ற தீர்க்கதரிசி சொன்ன வார்த்தைகள்: “**புறஜாதியாருக்கு (மற்ற நாடுகளுக்கு) ஒளி, யூதருக்கு மகிமையாக இயேசு இருப்பார்**:”

**லூக்கா 2:28-32**

28. அவன் அவரைத் தன் கைகளில் ஏந்திக்கொண்டு, தேவனை ஸ்தோத்திரித்து:

29. ஆண்டவரே, உமது வார்த்தையின்படி உமது அடியேனை இப்பொழுது சமாதானத்தோடே போகவிடுகிறீர்;

30. **புறஜாதிகளுக்குப் பிரகாசிக்கிற ஒளியாகவும்**, உம்முடைய ஜனமாகிய இஸ்ரவேலுக்கு மகிமையாகவும்,

31. தேவரீர் சகல ஜனங்களுக்கும் முன்பாக ஆயத்தம்பண்ணின

32. உம்முடைய இரட்சணியத்தை என் கண்கள் கண்டது என்றான்.

**யோவானின் சாட்சி:** யூதர்களின் பாவங்களை அல்ல, உலகத்தின் பாவங்களை தீர்க்கிறவர் இயேசு.

**யோவான் 1:29.** மறுநாளிலே யோவான் இயேசுவைத் தன்னிடத்தில் வரக்கண்டு: இதோ, **உலகத்தின் பாவத்தைச் சுமந்துதீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டி**.

இன்னும் அனேக வசனங்களை சொல்லமுடியும், இப்போதைக்கு இதோடு முடித்துக்கொள்ளலாம்.

**5) கடைசியாக, இயேசுவின் சீடர்கள் அவரின் உண்மையான செய்தியை சரியாக புரிந்துக்கொண்டு ஊழியம் செய்தார்கள்**

இன்று நாம் இயேசுவிற்கு 2000 ஆண்டுகளுக்கு பிறகு வாழ்கிறோம், ஆனால் அவரோடு இருந்த சீடர்கள், இயேசுவின் செய்தியை எப்படி புரிந்துக்கொண்டார்கள்? அவர்களுக்கு அவர் எவைகளைக் கற்றுக்கொடுத்தார், அச்சீடர்களின் சாட்சி என்னவென்பதை இப்போது காண்போம்.

**சீடர் பேதுருவின் கூற்று:** மனிதன் இரட்சிக்கப்படுவதற்கு பூமியில் ஒரே வழி இயேசு மட்டுமே:

அப்போஸ்தலர் நடபடிகள் 4:12. அவராலேயன்றி வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை; நாம் இரட்சிக்கப்படும்படிக்கு **வானத்தின் கீழெங்கும், மனுஷர்களுக்குள்ளே அவருடைய நாமமேயல்லாமல் வேறொரு நாமம் கட்டளையிடப்படவும் இல்லை** என்றான்.

**சீடர் யோவானின் சாட்சி: சர்வ லோகத்திற்காக பலியானவர் இயேசு:**

I யோவான் 2:2. நம்முடைய பாவங்களை நிவிர்த்திசெய்கிற கிருபாதாரபலி அவரே; நம்முடைய பாவங்களை மாத்திரம் அல்ல, **சர்வலோகத்தின் பாவங்களையும் நிவிர்த்திசெய்கிற பலியாயிருக்கிறார்**.

ஏன் ஒவ்வொரு சீடர்களும் வெவ்வேறு நாடுகளுக்குச் சென்று இயேசுவின் நற்செய்தியை அறிவித்தார்கள், இவர்கள் அனைவருக்கும் 'வெறும் யூதர்களுக்கு

மட்டுமே ஊழியம் செய்யவேண்டும்' என்றும் தெரியாதா? இயேசுவின் செய்தியை அவர்கள் சரியாக புரிந்துக்கொண்டார்கள், சிலர் இஸ்ரேலில் யூதர்களுக்கு ஊழியம் செய்தார்கள், சிலர் பல நாடுகளுக்குச் சென்று அந்நிய ஜனங்களுக்கும் ஊழியம் செய்தார்கள்.

**முஸ்லிம்களின் அறியாமை:**

இதுவரை பைபிளிலிருந்து பல வசனங்களை மேற்கோள் காட்டி, இயேசு யூதர்களுக்கு மட்டுமல்ல, முழு உலகத்திற்கும் வந்த இரட்சகர் என்பதை விளக்கினோம். முஸ்லிம்கள் ஒரு சில வசனங்களை மட்டும் எடுத்து பொருள் கூறுகிறார்கள், ஆனால், முழு விவரங்களை படித்து வியாக்கீனம் செய்வது தான் சரியான ஆய்வு ஆகும்.

உண்மையை அறிய விரும்புகிறவர்கள், புதிய ஏற்பாட்டில் வரும் இயேசுவின் **சரிதையை** படித்து புரிந்துக்கொள்ளட்டும்.



**கேள்வி 70:** ஏன் இயேசு யூத மத குருக்களை அதிகமாக தாக்கி பேசினார் (மத்தேயு 23:13-33; 21:45; 16:4) இந்த கேள்வியை அஹமத் தீதத் கேட்டார்.

**பதில் 70:** இந்த கேள்விக்கு பதிலை கொடுப்பதற்கு முன்பு, ஒரு முக்கியமான விவரத்தையும் சொல்லிவிடுகிறேன். இயேசு தம்மை ஏற்றுக்கொள்ளாத மத குருக்களை, தலைவர்களை எதிர்த்தது மட்டுமல்ல, அவர்கள் செய்கின்ற (தம்மை புறக்கணிக்கின்ற) செயலினால், நரகத்தில் தள்ளப்படுவார்கள் என்றும் எச்சரித்துள்ளார். இப்படி வெறும் வார்த்தைகளோடு இயேசு நின்றுவிடவில்லை, ஒரு சாட்டையை தயார் செய்து, தேவாலயத்தில் வியாபாரம் செய்கின்றவர்களை தாக்கினார், ஆம், வியாபாரிகளின் கடைசிகளை உடைத்து தும்சம் செய்தார், தேவனுடைய ஆலயத்தை கள்ளர் குகை ஆக்காதீர்கள் என்றுச் சொல்லி கடினமாக நடந்துக்கொண்டார்.

இதனை மனதில் வைத்துக்கொள்ளவும், இப்போது ஏன் இப்படி இயேசு செய்தார் என்பதற்கான பதிலைக் காண்போம்.

**முதலாவதாக,** யூத மத தலைவர்களைக் காட்டிலும் இயேசுவிற்கு அதிகபடியான அதிகாரம் உள்ளது. யூதர்களின் மேசியாவாக வந்த இயேசுவிற்கு தம் 'மேசிய அதிகாரத்தை' பயன்படுத்தி, அவர்களுக்கு வழிகாட்ட அவருக்கு அதிகாரம் உள்ளது. மேலும் தாம் மேசியா என்பதை நிருபிக்க பல அற்புத அடியாளங்களை இயேசு செய்துக் காட்டினார். உண்மையான இறைவன் "நாம் நம் வாழ்வில் எந்த ஒரு பிரச்சனையில் மாட்டிக்கொண்டாலும், நம்முடைய அனுமதியின்று அவைகளை சரி செய்ய அவருக்கு அதிகாரம் உண்டு'. ஏன் யூத தலைவர்களை அவர் கடிந்துகொண்டார்? மனிதனை படைத்த இறைவனுக்கு மனிதனின் தவறான வழியை சுட்டிக்காட்ட உரிமை உள்ளது.

**இரண்டாவதாக,** தாங்கள் மட்டும் நரகத்திற்குப் போகாமல், மற்றவர்களையும் அங்கு அழைத்துச் செல்ல அந்த மத தலைவர்கள் முயன்றதால், இன்னும் அதிகமாக அவர்களை கடிந்துகொள்ள மெய்யான தெய்வத்திற்கு உரிமையுண்டு, இதனை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

மத்தேயு 23:15. மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ, ஒருவனை உங்கள் மார்க்கத்தானாக்கும்படி சமுத்திரத்தையும் பூமியையும் சுற்றித்திரிகிறீர்கள்; **அவன் உங்கள் மார்க்கத்தானானபோது அவனை உங்களிலும் இரட்டிப்பாய் நரகத்தின் மகனாக்குகிறீர்கள்.**

ஆபிரகாமைக் காட்டிலும், மோசேயைக் காட்டிலும், சாலொமோனைக் காட்டிலும், தேவாலயத்தைக் காட்டிலும், அவ்வளவு ஏன் பழைய ஏற்பாட்டிற்கும் மேலாக இருக்கும் மேசியாவிற்கு, தன் முழு அதிகாரத்தை பயன்படுத்த உரிமையுண்டு என்பதை நாம் அறிந்துக்கொள்ளவேண்டும். அதனால் தான் மாய்மாலம் செய்த யூத தலைவர்களை கண்டித்தார், அதே நேரத்தில் நேர்மையாக நடந்துக்கொண்ட யூத மத தலைவர்களை மெச்சிக்கொண்டார், அவர்களை உற்சாகப்படுத்தினார்.

யோவான் 1:47 இயேசு நாத்தான்வேலைத் தம்மிடத்தில் வரக்கண்டு அவனைக்குறித்து: **இதோ, கபடற்ற உத்தம இஸ்ரவேலன் என்றார்**.

இதன் மூலம் நாம் பெறும் பாடம் என்ன? தவறான மத தலைவர்களை நாம் பின்பற்றக்கூடாது. இந்த வகையில் வந்தவர் தான் 'இஸ்லாமிய நபி முஹம்மது', இவர் ஒரு கள்ளத் தீர்க்கதரிசி.

தீத்து 1:13. இந்தச் சாட்சி உண்மையாயிருக்கிறது; இது முகாந்தரமாக, அவர்கள் யூதருடைய கட்டுக்கதைகளுக்கும், சத்தியத்தை விட்டு விலகுகிற மனுஷருடைய கற்பனைகளுக்கும் செவிகொடாமல்,

14. விசுவாசத்திலே ஆரோக்கியமுள்ளவர்களாயிருக்கும்படி, **நீ அவர்களைக் கண்டிப்பாய்க் கடிந்துகொள்.**

பொய்யான மத தலைவர்களை நாம் கடிந்துக்கொள்ளவேண்டும், அவர்களை உலகத்திற்கு அடையாளப்படுத்தி காட்டவேண்டும். ஒரு துக்ககரமான விஷயம் என்னவென்றால் தங்கள் மத தலைவர் எப்படிப்பட்டவர் என்று தெரிந்துக்கொள்ளாமல், கோடிக்கணக்கான மக்கள், அப்படிப்பட்டவர்களை பின்பற்றுவது தான். இந்த நிலையில் தான் முஸ்லிம்கள் உள்ளார்கள், அவர்கள் அறியாமையில் இருக்கிறார்கள், அவர்களின் அறியாமை போக்கப்படவேண்டும்.

ஆக, நேர்மையற்ற யூத மதத்தலைவர்களை இயேசு கடிந்துக்கொண்டதில் தவறு இல்லை. இதே போன்று இஸ்லாமிய நபியாகிய முஹம்மது போன்றவர்களின் உண்மை முகத்தை உலகிற்கு காட்டி, கடிந்துக்கொள்ளவேண்டியது நம்

கடமையாகும். தவறான வழியில் செல்கின்ற முஸ்லிம்களுக்கு நேரான வழியை அதாவது இயேசுவைக் காட்டவேண்டியது நம் கடமையாகும்.

அடுத்த கட்டுரையில் மேலதிக பைபிள் கேள்விகளுக்கு பதில்களைக் காண்போம்.

---

இந்த கட்டுரையின் கேள்விகள்/பதில்கள் இந்த தளத்திலிருந்து எடுக்கப்பட்டன: **https://biblequery.org/**

**இஸ்லாமிய அறிஞர் அஹமத் தீதத்:**

இக்கட்டுரையில் வரும் பெரும்பான்மையான கேள்விகளை கேட்டவர், தென் ஆப்ரிக்காவில் வாழ்ந்த காலஞ்சென்ற இஸ்லாமிய அறிஞர் அஹமத் தீதத் ஆவார். நான் இயேசுவை என் சொந்த தெய்வமாக அங்கீகரித்த பிறகு, இவரது புத்தகங்களை படித்தேன், இவர் கேட்ட கேள்விகளுக்கு பதில்களை தேட ஆரம்பித்தேன், இதன் விளைவு தான், ஈஸா குர்ஆன் மற்றும் ஆன்சரிங் இஸ்லாம் தமிழ் தளம்.



**கேள்வி 71: இயேசு பழைய ஏற்பாட்டை அழிப்பதற்காக வரவில்லை என்று சொல்லியிருக்கும் போது (மத் 5:17), ஏன் கிறிஸ்தவர்கள் முஸ்லிம்களைப் போன்று பழைய ஏற்பாட்டின் உணவு பற்றிய கட்டளைகளை (Old Testament dietary laws) பின்பற்றக்கூடாது?**

**பதில் 71:** முஸ்லிம்கள் பழைய ஏற்பாட்டின் உணவு சம்மந்தப்பட்ட கட்டளைகளை பின்பற்றுகிறார்கள் என்றுச் சொல்வது சுத்தப்பொய்யாகும். பழைய ஏற்பாட்டை முழுவதுமாக பின்பற்றுகிறார்கள் என்பதை உலகிற்கு காட்ட இப்படி சொல்கிறார்கள், உண்மையில் மூஸாவின் சட்டங்களில் ஒன்று "ஒட்டக கறியை உண்ணக்கூடாது" என்பதாகும், ஆனால் முஸ்லிம்கள் அதனை உண்கிறார்கள்.

**கீழ்கண்ட மூஸாவின் கட்டளைகளைப் பாருங்கள்**

லேவியராகமம் 11:4. ஆனாலும், அசைபோடுகிறதும் விரிகுளம்புள்ளதுமானவைகளில் **ஒட்டகமானது** அசைபோடுகிறதாயிருந்தாலும், அதற்கு விரிகுளம்பில்லாதபடியால், அது உங்களுக்கு அசுத்தமாயிருக்கும்.

உபாகமம் 14:7. அசைபோடுகிறவைகளிலும், விரிகுளம்புள்ளவைகளிலும், நீங்கள் புசிக்கத்தகாதவைகள் எவையென்றால்: **ஒட்டகமும்**, முசலும், குழிமுசலுமே; அவைகள் அசைபோட்டும் அவைகளுக்கு விரிகுளம்பில்லை; அவைகள் உங்களுக்கு அசுத்தமாயிருப்பதாக.

இப்படி அவர்களே, மூஸாவின் கட்டளைகளை பின்பற்றாத போது, கிறிஸ்தவர்கள் ஏன் பின்பற்றுவதில்லை என்று கேட்பது வேடிக்கையானது.

சரி, இப்பொழுது மேற்கண்ட கேள்விக்கான பதிலைக் காண்போம்.

**மத்தேயு 5:17**

17. நியாயப்பிரமாணத்தையானாலும் தீர்க்கதரிசனங்களையானாலும் அழிக்கிறதற்கு வந்தேன் என்று எண்ணிக்கொள்ளாதேயுங்கள்; அழிக்கிறதற்கு அல்ல, நிறைவேற்றுகிறதற்கே வந்தேன்.

இயேசுவும் அவரது சீடர்களும் யூதர்களாக இருந்தபடியினால் அவர்கள் அனைவரும் 'பழைய ஏற்பாட்டின் உணவு கட்டுப்பாடுகள்' அனைத்தையும் பின்பற்றினார்கள். யூதரல்லாதவர்கள் இந்த உணவுக்கட்டுப்பாடுகளை பின்பற்றத்தேவையில்லை, இதனை மூஸா (மோசே) கட்டளையிடவும் இல்லை.

இந்த நிலை மேசியாவாகிய இயேசு சிலுவையில் மரித்து, உயிர்த்தெழுவதற்கு முன்பு வரை இருந்தது. இயேசு உயிர்த்தெழுந்த பிறகு, இது மாறியதை, இதனை நாம் புதிய ஏற்பாட்டில் காணலாம். மேசியாவின் தியாக பலியின் மூலமாக பிதாவாகிய தேவன் 'இரண்டு வகையான மக்களையும், அதாவது யூதர்களையும் யூதரல்லாதவர்களையும் ஒரே வகையில் கொண்டுவந்தார்', இது தான் ஆதிமுதல் தேவனின் திட்டமாக இருந்தது.

**கிறிஸ்தவர்கள் பழைய ஏற்பாட்டின் உணவு கட்டுப்பாட்டுக்குள் ஏன் வரமாட்டார்கள் என்பதற்கு கீழ்கண்ட சான்றுகளைச் சொல்லலாம்:**

**1) எல்லா உணவுகளையும் உண்ணலாம் என்று தேவன் கட்டளைகொடுத்தார்:**

சீடர் பேதுருவிற்கு இயேசு ஒரு தரிசனம் கொடுக்கின்றார். அதில் உலகில் உள்ள எல்லா உணவுகளையும் "தேவன் சுத்தமாக்கியதாக" தரிசனத்தில் தெரிவிக்கின்றார்.

பார்க்க: அப்போஸ்தலர்: 10:9-16

இதில் முக்கியமாக கவனிக்கவேண்டிய வசனங்கள் 14,15,16 ஆகும்:

14. அதற்குப் பேதுரு: அப்படியல்ல, ஆண்டவரே, தீட்டும் அசுத்தமுமாயிருக்கிற யாதொன்றையும் நான் ஒருக்காலும் புசித்ததில்லை என்றான். 15. அப்பொழுது: **தேவன் சுத்தமாக்கினவைகளை நீ தீட்டாக எண்ணாதே** என்று இரண்டாந்தரமும் சத்தம் அவனுக்கு உண்டாயிற்று. 16. மூன்றாந்தரமும் அப்படியே உண்டாயிற்று. பின்பு அந்தக் கூடு திரும்ப வானத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

இங்கு கவனிக்கும் போது, மூன்று முறை "தேவன் சுத்தமாக்கினவைகளை நீ தீட்டாக எண்ணாதே" என்று வருகிறது.

அதன்பிறகு ஒரு யூதனல்லாத ஒருவரின் வேண்டுதலுக்கு இணங்க பேதுரு சென்று அவருக்கு நற்செய்தியை அறிவிக்கிறார். இங்கு உணவு மீதுள்ள கட்டுப்பாடும் நீக்கப்படுகின்றது, மக்கள் மீதிருந்த கட்டுப்பாடும் நீக்கப்படுகின்றது.

**2) வாய்க்குள்ளே போகிறது மனுஷனைத் தீட்டுப்படுத்தாது**

கிறிஸ்தவர்கள் இயேசுவின் கட்டளைகளை பின்பற்றவேண்டும் என்பது தான் எல்லோருடைய எதிர்ப்பார்ப்பும் கூட. உணவு பற்றி ஒரு சிறப்பான உண்மையை இயேசு இங்கு குறிப்பிடுகின்றார். வாய்க்குள் போகிறது மனிதனையும் இறைவனையும் வேறுபிரிக்காது, அவன் வாயிலிருந்து அதாவது அவனது இதயத்திலிருந்து புறப்படுகின்ற தீயவைகள் தான் இறைவனிடமிருந்து மனிதனை பிரிக்கும் என்கிறார்.

மத்தேயு 15:11. வாய்க்குள்ளே போகிறது மனுஷனைத் தீட்டுப்படுத்தாது; வாயிலிருந்து புறப்படுகிறதே மனுஷனைத் தீட்டுப்படுத்தும் என்றார்.

மத்தேயு 15:11. ஒருவன் வாய்க்குள்ளே போகிறது அவனை அசுத்தமாக்காது. மாறாக, ஒருவன் பேசும் சொற்களாலேயே அசுத்தமடைகிறான்" என்று சொன்னார். (பொது மொழியாக்கம்)

**மாற்கு 7:18-23**

18. அதற்கு அவர்: நீங்களும் இவ்வளவு உணர்வில்லாதவர்களா? புறம்பேயிருந்து **மனுஷனுக்குள்ளே போகிறதொன்றும் அவனைத் தீட்டுப்படுத்தமாட்டாதென்று** நீங்கள் அறிந்துகொள்ளவில்லையா? 19. அது அவன் இருதயத்தில் போகாமல் வயிற்றிலே போகிறது; அதிலிருந்து எல்லாப் போஜனங்களின் அசுத்தங்களையும் கழிக்கிற ஆசனவழியாய் நீங்கிப்போகும். 20. மனுஷனுக்குள்ளே இருந்து புறப்படுகிறதே மனுஷனைத் தீட்டுப்படுத்தும். 21. எப்படியெனில், மனுஷருடைய இருதயத்திற்குள்ளிருந்து பொல்லாத சிந்தனைகளும், விபசாரங்களும், வேசித்தனங்களும், கொலைபாதகங்களும், 22. களவுகளும், பொருளாசைகளும், துஷ்டத்தனங்களும், கபடும், காமவிகாரமும், வன்கண்ணும், தூஷணமும், பெருமையும், மதிகேடும் புறப்பட்டுவரும். 23. பொல்லாங்கானவைகளாகிய இவைகளெல்லாம் உள்ளத்திலிருந்து புறப்பட்டு மனுஷனைத் தீட்டுப்படுத்தும் என்றார்.

இறைபக்தி என்று வரும் போது, 'வெளிப்படையான காரியங்கள், மற்றும் வயிற்றுக்கும் வாய்க்கும் சம்மந்தப்பட்ட உணவு காரியங்கள்' முக்கியமானவை அல்ல, உள்ளத்தின் ஆழத்திலிருந்து அன்பு கூறி பக்தி செய்வது தான் உண்மையான 'ஆராதனை' என்பது தான் இயேசுவின் மற்றும் கிறிஸ்தவத்தின் போதனை.

புதிய ஏற்பாட்டில் கொரிந்தியர் புத்தகத்தில், ஒரு முக்கியமான விசயம் சொல்லப்பட்டுள்ளது

I கொரிந்தியர் 8:8. போஜனமானது நம்மை தேவனுக்கு உகந்தவர்களாக்கமாட்டாது; என்னத்தினாலெனில், புசிப்பதினால் நமக்கு ஒரு மேன்மையுமில்லை, புசியாதிருப்பதினால் நமக்கு ஒரு குறைவுமில்லை.

இதன் பொருள் என்னவென்றால், நாம் ஒரு குறிப்பிட்ட உணவை உண்பதினால், நம்மிடம் தேவன் வந்து நம்மை மெச்சிக்கொண்டு, "சூப்பர், நீ இந்த உணவை உண்டதினால், உனக்கு இந்த நன்மை செய்வேன்" என்று சொல்லப்போவதில்லை. இதே போன்று, வேறு நபரிடம் வந்து "நீ இந்த குறிப்பிட்ட உணவை உண்ணாததினால், உனக்கு இந்த தீமை நடக்கும்" என்று சொல்லப்போவதில்லை.

பாருங்கள் எவ்வளவு அருமையான போதனை! இன்றைய மதங்கள் பொய்யான போதனைகளைச் செய்து, உணவு, காலம் நேரம் பார்ப்பது என்றுச் சொல்லி தேவையில்லாத காரணங்களைக் காட்டி மக்களை பயமுறுத்துகின்றன.

ரோமர் 14:17. தேவனுடைய ராஜ்யம் புசிப்பும் குடிப்புமல்ல, அது நீதியும் சமாதானமும் பரிசுத்த ஆவியினாலுண்டாகும் சந்தோஷமுமாயிருக்கிறது.

மனிதன் வாழுவதற்கும், ஆரோக்கியமாக இருப்பதற்கும், வளருவதற்கும் உணவு வேண்டுமே ஒழிய, பக்திக்காக அல்ல.



**கேள்வி 72: ஒரு விலையுயர்ந்த வாசனை தையலத்தை ஒரு பெண் இயேசுவின் பாதங்களில் ஊற்றும் போது, அந்த வீண் செலவு வேண்டாம் என்று இயேசு தடுக்கவில்லை ஏன் (பார்க்க மத்தேயு 26:7-11)? (இந்த கேள்வியை அஹமத் தீதத் கேட்டார்)**

**பதில் 72:** இதே கேள்வியை நம் தமிழ் நாட்டின் இஸ்லாமிய அறிஞர் பி ஜைனுல் ஆபீதீன் அவர்கள் "இது தான் பைபிள்" என்ற புத்தகத்தில் கேள்வியாக எழுப்பியிருந்தார். 2008ம் ஆண்டில் அவருக்கு கொடுத்த பதிலை இங்கு தருகிறேன்.

இயேசு கடவுள் என்றால் ஏன் அவர் நறுமணம் பூசிக்கொள்ள ஆசைப்பட்டார் ? என்பது தான் பிஜே அவர்கள் கேட்கும் கேள்வி. பிஜே அவர்கள் "இயேசு இறைமகனா?" என்ற புத்தகத்தை பைபிளின் வசனங்களை சரியாக ஆராயாமல் மேலோட்டமாக படித்து எழுதியுள்ளார். இந்த புத்தகத்தில் அவர் முன்வைக்கின்ற கேள்விகளுக்கு தொடர் கட்டுரைகளாக நான் பதில் எழுதிக்கொண்டு வருகிறேன்.

இந்த வரிசையில் இயேசு ஏன் நறுமணம் பூசிக்கொள்ள ஆசைப்பட்டார்? என்று பிஜே அவர்கள் கேட்கும் கேள்விக்கு பதிலை இக்கட்டுரையில் பார்க்கலாம்.

**பிஜே அவர்கள் எழுதியது:**

**27. கடவுள் நறுமணம் பூசிக்கொள்ள ஆசைப்படுவாரா?**

ஒரு ஸ்திரீ விலையேறப்பெற்ற பரிமள தைலமுள்ள வெள்ளைக்கல்பரணியைக் கொண்டுவந்து, அவர் போஜனபந்தியிலிருக்கும்போது, அந்தத் தைலத்தை அவர் சிரசின்மேல் ஊற்றினாள். அவருடைய சீஷர்கள் அதைக்கண்டு விசனமடைந்து: இந்த வீண் செலவு என்னத்திற்கு? இந்தத் தைலத்தை உயர்ந்த விலைக்கு விற்று, தரித்திரருக்குக் கொடுக்கலாமே என்றார்கள்.

இயேசு அதை அறிந்து, அவர்களை நோக்கி: நீங்கள் இந்த ஸ்திரீயை ஏன் தொந்தரவு படுத்துகிறீர்கள்? என்னிடத்தில் நற்கிரியையைச் செய்திருக்கிறாள். (மத்தேயு 26:7-10 மூலம் : இயேசு இறைமகனா?

**1. சில விவரங்களை வேண்டுமென்றே குறிப்பிடாமல் விட்டுவிடும் இஸ்லாமிய அறிஞர்கள்**

சாதாரணமாக பைபிளிலிருந்து ஒரு நிகழ்ச்சியை குறிப்பிடும் போது அந்த நிகழ்ச்சி சம்மந்தப்பட்ட எல்லா விவரங்களையும் பைபிள் அதே இடத்தில் சொல்லிவிடும். ஆனால் குர்ஆன் அப்படி அல்ல, அல்லா சொன்ன வசனங்களை குர்ஆனில் பார்க்கவேண்டும், இவ்வசனங்கள் எந்த சூழ்நிலையில் சொல்லப்பட்டது என்று அறிய ஹதீஸ்களின் உதவியை நாடவேண்டும். ஹதீஸ்கள் இல்லாமல் குர்ஆனின் வசனங்களை புரிந்துக்கொள்வது மிகவும் கடினம்.

குர்ஆனை படிப்பது போல, புரிந்துக்கொள்வது போல பிஜே அவர்கள் பைபிளை புரிந்துக்கொண்டுள்ளார். அதாவது, ஒரு நிகழ்ச்சியை குறிப்பிடும் போது, அவருக்கு (பிஜே) தேவையான வசனங்களை மட்டுமே எடுத்துக்கொண்டு அந்நிகழ்ச்சியின் அடுத்தடுத்துள்ள வசனங்களை வேண்டுமென்றே, பைபிளுக்கு, இயேசுவிற்கும் விரோதமாக வித்தியாசமான பொருள் கொண்டுவரவேண்டும் என்று விட்டுவிட்டார் நம்முடைய இஸ்லாமிய அறிஞர், பல ஆண்டுகள் இஸ்லாமிய ஊழியம் செய்துகொண்டு வந்துக்கொண்டு இருக்கும் மதிப்பிற்குரிய பிஜே அவர்கள்.

பிஜே அவர்கள் எந்த வசனங்களை வேண்டுமென்றே குறிப்பிடாமல் விட்டுவிட்டார் என்பதை அறிய மேலும் படியுங்கள்.

**2. பிஜே அவர்கள் சொல்வது உண்மையா?**

பிஜே அவர்கள் குறிப்பிட்ட வசனங்களை இன்னொரு முறை படியுங்கள். அவர் குறிப்பிட்ட வசன எண்கள்: மத்தேயு 26:7-10 இவைகள் ஆகும்.

ஒரு ஸ்திரீ விலையேறப்பெற்ற பரிமள தைலமுள்ள வெள்ளைக்கல்பரணியைக் கொண்டுவந்து, அவர் போஜனபந்தியிலிருக்கும்போது, அந்தத் தைலத்தை அவர் சிரசின்மேல் ஊற்றினாள். அவருடைய சீஷர்கள் அதைக்கண்டு விசனமடைந்து:

இந்த வீண் செலவு என்னத்திற்கு? இந்தத் தைலத்தை உயர்ந்த விலைக்கு விற்று, தரித்திரருக்குக் கொடுக்கலாமே என்றார்கள்.

இயேசு அதை அறிந்து, அவர்களை நோக்கி: நீங்கள் இந்த ஸ்திரீயை ஏன் தொந்தரவு படுத்துகிறீர்கள்? என்னிடத்தில் நற்கிரியையைச் செய்திருக்கிறாள். (மத்தேயு 26:7-10)

- இயேசு சீமோன் என்பவனுடைய வீட்டில் இருந்தார்.
- அந்த சமயத்தில் ஒரு பெண் மிகவும் விலை உயர்ந்த தைலத்தை(நறுமணத்தை) கொண்டு வந்து இயேசுவின் தலையிலே ஊற்றுகிறாள்.
- இதைக்கண்டு இயேசுவின் சீடர்கள் இந்த வீண் செலவு எதற்கு, அந்த பணத்தை ஏழைகளுக்கு கொடுக்கலாம் அல்லவா? என்று கேட்கிறார்கள்.
- இயேசு அப்போது அவர்களுக்கு பதில் தருகிறார்.

### 3. இயேசு பேசிய வசனங்களில் பாதியை மட்டும் குறிப்பிட்ட பிஜே அவர்கள்

பிஜே அவர்கள் உண்மையில் நேர்மையாக பைபிள் வசனங்களுக்கு பொருள் கூறுவதாக இருந்தால், இந்த நிகழ்ச்சி நடக்கும் போது தன் சீடர்களுக்கு இயேசு என்ன பதில் சொன்னாரோ அதை முழுவதுமாக குறிப்பிட்டு இருக்கவேண்டும். ஆனால், பிஜே அவர்கள் இயேசு பேசிய நான்கு வசனங்களில் ஒரு வசனத்தை மட்டும் குறிப்பிட்டுள்ளார். இப்படி செய்வது ஏமாற்றுவேலை ஆகுமா? அல்லது நேர்மையாக நடந்துக்கொண்டு செயல்படுவது ஆகுமா? என்பதை இக்கட்டுரையை படிக்கும் நீங்களே முடிவு செய்யுங்கள். இப்படிப்பட்ட செயல்கள் ஒரு மிகப்பெரிய புகழ்பெற்ற இஸ்லாமிய ஊழியரிடம் மக்கள் எதிர்பார்க்கமாட்டார்கள்.

சரி பிஜே அவர்கள் குறிப்பிடாமல் விட்ட அந்த வசனங்கள் என்னவென்று பாருங்கள்.

மத்தேயு 26:10 இயேசு அதை அறிந்து, அவர்களை நோக்கி: நீங்கள் இந்த ஸ்திரீயை ஏன் தொந்தரவு படுத்துகிறீர்கள்? என்னிடத்தில் நற்கிரியையைச் செய்திருக்கிறாள்.

மத்தேயு 26:11 தரித்திரர் எப்போதும் உங்களிடத்திலிருக்கிறார்கள். நானோ எப்போதும் உங்களிடத்தில் இரேன்.

மத்தேயு 26:12 இவள் இந்தத் தைலத்தை என் சரீரத்தின் மேல் ஊற்றினது **என்னை அடக்கம் பண்ணுவதற்கு எத்தனமான செய்கையாயிருக்கிறது**.

மத்தேயு 26:13 இந்தச் சுவிசேஷம் உலகத்தில் எங்கெங்கே பிரசங்கிக்கப்படுமோ அங்கங்கே இவளை நினைப்பதற்காக இவள் செய்ததும் சொல்லப்படும் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

இயேசு பேசிய நான்கு வசனங்களில் (மத்தேயு 26:10, 11, 12,13) ஒரு வசனத்தை (மத்தேயு 26:10) மட்டும் பிஜே குறிப்பிட்டார்கள். அதாவது, இயேசு பேசிய 100% ல், 25% மட்டும் குறிப்பிட்டு, மீதி 75% வேண்டுமென்றே மறைத்துள்ளார் பிஜே அவர்கள்.

### 4. சரி, பிஜே அவர்கள் மறைத்த வசனங்களில் இயேசு என்ன சொல்கின்றார்?

முதலாவது நறுமணத்தைப் பற்றிய சில விவரங்களை அறிந்துக்கொள்ளலாம்.

### அ) நறுமணத்தை எப்போது பயன்படுத்துவார்கள்?

முக்கியமாக இயேசு வாழ்ந்த காலத்தில் வாழ்ந்த மக்கள் நறுமணத்தை கீழ் கண்ட காரணங்களுக்காக பயன்படுத்தினார்கள்:

1) தேவனுடைய வேலைக்காக ஒரு ஆசாரியனை அல்லது அரசனை பிரதிஷ்டை செய்ய பயன்படுத்துவார்கள் ( 1 சாமுவேல் 16:1 , 2 இராஜாக்கள் 9:6 சங்கீதம் 89:20)

2) மகிழ்ச்சியான நேரங்களில் பயன்படுத்துவார்கள் (நீதிமொழிகள் 27:9, ஏசாயா 61:3)

3) அரசர்களை, பெரியவர்களை சந்திக்கப்போகும் பொது மரியாதைக்காக விலை உயர்ந்த தைலத்தை நறுமணங்களைக் கொண்டுச்செல்வார்கள் (ஆதியாகமம் 43:11, மத்தேயு 2:11)

4) இறைவனுடைய ஆலய வேலைகளில் நறுமணமுள்ள தைலத்தை பயன்படுத்துவார்கள் (யாத்திராகமம் 30:25-32).

5) ஒருவர் மரித்துவிட்டால், அவரை அடக்கம் செய்யும் போது நறுமண தைலத்தை பூசி துணிகளால் சுற்றி அடக்கம் செய்வார்கள் (மத்தேயு 26:12, லூக்கா 23:55, 56, லூக்கா 24:1).

### ஆ) தன் மரண அடக்க சடங்கிற்காக இயேசு இந்த நறுமணம் பூசப்பட்டது என்றார்

ஏன் பிஜே அவர்கள் இயேசு சொன்ன மற்ற வசனங்களை குறிப்பிடவில்லை? என்பது இப்போது புரிந்திருக்கும். அதாவது, அந்தப்பெண் தன் பாவங்களை இயேசு மன்னிக்கவேண்டும் என்பதற்காகவும், மதிப்பின் அடிப்படையிலும் அந்த தைலத்தை அவர் மீது ஊற்றினாலும், இயேசு அதை தன் மரணத்தின் பின்பு அடக்கத்தின் போது பயன்படுத்தும் நறுமணமாகவே எடுத்துக்கொண்டார் , அதையே அவர்கள் எல்லாருக்கும் முன்பாக அறிக்கையும் செய்தார். அதாவது இயேசு, தன் மீது ஊற்றப்பட்ட நறுமணத்தை கல்யாண வீட்டு சந்தோஷ நறுமணமாகக் கருதாமல், சாவு வீட்டில் வரும் நறுமணமாகவே அவர் கருதினார். ஆனால், பிஜே அவர்களுக்கு மட்டும், இயேசு அழகாக மேக் அப் (Make Up) செய்துக்கொண்டு, பணம் கொடுத்து நறுமணம் வாங்கி உடலெல்லாம்

பூசிக்கொண்டது போல் இந்நிகழ்ச்சி தெரிந்து இருக்கிறது. எப்படி மற்றவர்களின் வேதங்களை இஸ்லாமிய அறிஞர்கள் வியாக்கீனம் செய்கிறார்கள் பார்த்தீர்களா?

சாவு வீட்டில் கூட வாசனைக்கு சில நறுமணங்களை தெளிப்பார்கள், அது ஏன் என்று எல்லாருக்கும் தெரியும் என்று நினைக்கிறேன். அதாவது இந்தியாவில் ஒரு பிணத்தின் மீது தெளிக்கும் ரோஸ் வாடர் (Rose Water) என்று சொல்லக்கூடிய நறுமணத்திற்கு நிகராக இயேசு பேசியுள்ளார். ஆனால், அதை மறைப்பதற்காக பிஜே அவர்கள் வசனத்தை மறைத்தார்கள்.

மத்தேயு 26:11-13 வசனங்களை தன் புத்தகத்தில் குறிப்பிட்டால், தான் சொன்னவந்த செய்திக்கு அது எதிராக இருக்கும் என்பதற்க்காகவே, பிஜே அவர்கள் அதை குறிப்பிடவில்லை என்பது இப்போது புரிந்திருக்கும். இப்படித்தான் இஸ்லாமிய அறிஞர்கள் தவறான விவரங்களை சொல்லிக்கொண்டு முஸ்லீம்களையும், மற்றவர்களையும் முட்டாள்களாக்கிக் கொண்டு வருகிறார்கள் .

தன் மரணத்தைப் பற்றித் தான் இயேசு பேசினார் என்பதற்கு பிஜே அவர்கள் குறிப்பிட்ட அதே அதிகாரத்திலிருந்து(26) இன்னும் சில விவரங்கள் :

1. மத்தேயு 26ம் அதிகாரம் 1-2ம் வசனங்களில், தன்னை சிலுவையில் யூதர்கள் அறைவார்கள் என்று இயேசு முன்னுரைக்கிறார்.

2. அப்படியே ஆசாரியர்களும் இயேசுவை பிடித்துகொலை செய்ய திட்டம் தீட்டுகிறார்கள் (மத்தேயு 26:3-5).

3. பிறகு தான் இந்த நறுமணம் பற்றிய நிகழ்ச்சி நடக்கிறது (மத்தேயு 26:7-13) இதில் வசனங்கள் 11லிருந்து 13 வரை பிஜே அவர்கள் வேண்டுமென்றே குறிப்பிடாமல் மறைத்தார்.

4. இந்த வாய்ப்பை பயன்படுத்தி இயேசு மறுபடியும் தன் மரணத்தைப்பற்றி முன்னுரைக்கிறார். ஏழைகள் உங்களிடத்தில் எப்போதும் இருப்பார்கள், ஆனால், நான் இருக்கமாட்டேன் என்று இயேசு சொல்கிறார்.

5. பிற்கு யூதாஸ் காரியோத்து என்ற சீடன் இயேசுவை காட்டிக்கொடுக்க யூதர்களிடம் பேசுகிறான் (மத்தேயு 26:14-16)

இப்படி ஆதாரங்களை அடுக்கிக்கொண்டுப் போகலாம்.

### பிஜே அவர்களுக்கும் மற்ற அறிஞர்களுக்கும் சிந்திக்க சில கேள்விகள்:

1. எந்த சூழ்நிலையிலாவது இயேசு சீடர்களை அனுப்பி நறுமணங்களை கொண்டுவரும்படிச் சொல்லி, தினமும் பூசிக்கொண்டார் என்று உங்களால் ஆதாரம் காட்டமுடியுமா?

2. இயேசுவின் சீடர்கள் இந்த குறிப்பிட்ட நிகழ்ச்சியில் "ஏன் இந்த வீண் செலவு ?" என்று விசனப்பட காரணமென்ன? காரணத்தை நான் சொல்கிறேன், இயேசு ஒரு முறை கூட இப்படி அதிக விலை உயர்ந்த தைலத்தை பணம் செலவு செய்து வாங்கிக்கொண்டு வரும்படி தன் சீடர்களுக்கு சொல்லவில்லை என்பதும், இயேசு இப்படி வீணான செலவுகள் அனைத்திற்கும் அப்பாற்பட்டவர் என்பதையும் சீடர்கள் அறிந்திருந்தனர்.

3. மட்டுமல்ல, இந்த சீடர்கள் அந்த பெண்ணின் மீது கோபப்பட்டார்களே தவிர இயேசுவின் மீதல்ல? காரணம் இயேசு அவராகவே ஏற்பாடு செய்துக்கொண்டு தைலத்தை தன் உடலில் பூசிக்கொள்ளவில்லை என்பதும், அந்தப்பெண் தானாகவே வந்து இப்படி செய்தாள் என்பதும் சீடர்கள் அறிந்திருந்தார்கள். எனவே தான் இயேசு அந்தப் பெண்ணின் மீது கோபப்படாதீர்கள், இது என் மரண சடலத்தின் மிது பூசப்படப்போகும் நறுமணம் என்று சீடர்களுக்குச் சொன்னார்.

4. எல்லாரும் இயேசுவோடு சாப்பிட உட்கார்ந்து இருக்கும் போது, மரணத்தைப் பற்றியும், அடக்க ஆராதனைப் பற்றியும் யாராவது பேசுவார்களா? பேசமாட்டார்கள். ஆனால், இயேசு பேசினார். காரணம் பிஜே அவர்கள் சொல்வது போல, இயேசு விரும்பி நறுமணங்களை பூசிக்கொள்ள ஆசைப்படவில்லை. எல்லா சூழ்நிலைகளையும் தன் மரணத்தைப்பற்றிப் பேச இயேசு பயன்படுத்திக்கொண்டார் என்பது தான் உணமை.

5. அரசாங்கத்திற்கு வரி கட்ட, தூண்டில் போட்டு அதில் முதலாவது பிடிக்கும் மீனின் வயிற்றில் இருக்கும் நாணயத்தை எடுத்து கட்டும் படி இயேசு பேதுருவிடம் சொன்னார்(மத்தேயு 17:24-27). ஒருவேளை இயேசு அதிக விலையுள்ள நறுமணங்களை பூசிக்கொண்டு, பணத்தை வீண் செலவு செய்துக்கொண்டு இருந்து, ஆனால், அரசாங்கத்திற்கு வரிகட்ட மட்டும் பேதுருவிற்கு மீன்பிடித்து கட்டுங்கள் என்று சொல்லியிருந்தால், சீடர்கள் என்ன சொல்லியிருப்பார்கள் என்பதை நீங்களே சிந்தித்துக்கொள்ளுங்கள். "இவர் மட்டும் வீண்செலவு செய்துக்கொண்டு விலை உயர்ந்த நறுமணத்தை பூசிக்கொள்வார், ஆனால், வரி கட்ட மட்டும், நாங்கள் உழைத்து கட்டவேண்டுமா?" என்று கேட்டு இருப்பார்கள். அவரை யாரும் பின்பற்றி இருக்கமாட்டார்கள்.

முடிவாக பிஜே அவர்களே, முதலாவது நேர்மையான முறையில் எல்லா வசனங்களையும் படித்து கேள்வி கேளுங்கள். உண்மை பாதி பொய் பாதி என்பது உம்மைப்போன்ற மக்கள் மத்தியில் ஊழியம் செய்பவர்களுக்கு அழகல்ல என்பது என் கருத்து.

நீங்கள் கேட்ட கேள்வி தவறானது, அதற்கு நீங்கள் காட்டிய வசனங்களும் முழுமையாக காட்டப்படவில்லை. உங்கள் அல்லா போல, பாதி விவரங்கள் குர்ஆனில் சொல்லிவிட்டு, மீதி விவரங்கள் ஹதீஸ்களில் சொல்வது போல பைபிள் இல்லை. எல்லா விவரங்களும் ஒரே இடத்தில் சொல்லப்பட்டிருக்கும், இந்த வசனத்திற்கு ஏற்ற ஹதீஸ் எது என்று மற்ற புத்தகங்களில் தேடி

கண்டுபிடிக்க வேண்டிய கஷ்டம் இல்லை. எனவே, முழுவதுமாக படித்து கேள்விகள் கேளுங்கள்.

ஒரு வேளை இயேசு நறுமணம் விருப்பமாக பூசிக்கொண்டாலும் சரி, அது உங்கள் "அல்லா" உண்மையான இறைவன் என்பதையும், "குர்ஆன் " என்பது இறைவேதம் என்பதையும் நிருபிக்க உதவாது என்பதை சொல்லிக்கொள்கிறேன்.

எங்களுக்கு அல்லாவைப்பற்றியும், முகமதுவைப்பற்றியும் சொல்வதற்கு முன்பாக உங்களிடம் நாங்கள் எதிர்ப்பார்ப்பது நேர்மையும், உண்மையையும் தான் என்பதை முதலாவது புரிந்துக்கொள்ளுங்கள்.

உங்கள் மார்கத்திற்காக மற்றவர்களின் வேதங்களில் (நாங்கள் தினமும் படிக்கும், தியானிக்கும் வேதத்தில்) இல்லாததை கற்பனை செய்துக்கொண்டுச் சொல்லும் நீங்கள், உங்கள் வேதத்தைப் பற்றி(நாங்கள் தினமும் படிக்காத, தியானிக்காத குர்ஆன் பற்றி) எங்களுக்கு விவரிக்கும் போது எவ்வளவு பொய்யான தகவல்களை சொல்லுவீர்கள் என்பதை கற்பனை கூட செய்துப்பார்க்க முடியாது.

ஈஸா குர்-ஆனில் இக்கட்டுரை வெளியிடப்பட்ட தேதி: புதன், 23 ஜனவரி, 2008

**மூலம்: Answering - PJ: இயேசு நறுமணம் பூசிக்கொள்ள ஆசைப்படுவாரோ?**



**கேள்வி 73: சமாதான பிரபு என்று அழைக்கப்படும் இயேசு ஏன், பூமியில் சமாதானத்தை அல்ல, பிரிவினையை உண்டாக்க வந்தேன் என்று சொல்கிறார்? (லூக்கா 12:51) இந்த கேள்வியை அஹமத் தீதத் கேட்டார்.**

**பதில் 73:** முதலாவது கேள்வியில் கேட்கப்பட்ட வசனத்தை கவனிப்போம்.

லூக்கா 12:51. நான் பூமியிலே சமாதானத்தை உண்டாக்க வந்தேன் என்று நினைக்கிறீர்களோ? சமாதானத்தையல்ல, பிரிவினையையே உண்டாக்க வந்தேன் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

இயேசு சமாதானத்தை உண்டாக்க வந்தார் என்பது உண்மையே. ஆனால் அவைகளை கீழ்கண்ட நான்கு பிரிவுகளில் நாம் பிரிக்கலாம்.

**1) இயேசு நமக்கும் தேவனுக்கும் இடையே சமாதானத்தை உண்டாக்க வந்தார்.**

நமக்கும் தேவனுக்கும் இடையே இருந்த மிகப்பெரிய பிளவை (பாவங்களை) நீக்கி, நம்மை தேவனோடு சமாதானம் அடைய உதவினார் இயேசு. ஆகையால் நமக்கு தேவனோடு சமாதானம் உண்டு.

இதனை தெளிவாக கீழ்கண்ட வசனங்கள் சொல்கின்றன:

**எபேசியர் 2: 13-16**

13. முன்னே தூரமாயிருந்த நீங்கள் இப்பொழுது கிறிஸ்து இயேசுவுக்குள் கிறிஸ்துவின் இரத்தத்தினாலே சமீபமானீர்கள். 14. எப்படியெனில், அவரே நம்முடைய சமாதான காரணராகி, இருதிறத்தாரையும் ஒன்றாக்கி, பகையாக நின்ற பிரிவினையாகிய நடுச்சுவரைத் தகர்த்து, 15. சட்டதிட்டங்களாகிய நியாயப்பிரமாணத்தைத் தம்முடைய மாம்சத்தினாலே ஒழித்து, **இருதிறத்தாரையும் தமக்குள்ளாக ஒரே புதிய மனுஷனாகச் சிருஷ்டித்து, இப்படிச் சமாதானம்பண்ணி,** 16. பகையைச் சிலுவையினால் கொன்று, அதினாலே இருதிறத்தாரையும் ஒரே சரீரமாக தேவனுக்கு ஒப்புரவாக்கினார்.

**2) நம்முடைய மற்ற சகோதர/சகோதரிகளோடு நமக்கு சமாதானம் உண்டாக்கினார்**

இயேசுவின் சிலுவை மரணம் மற்றும் உயிர்த்தெழுதலுக்கு முன்பு, யூதர்கள் என்றும் யூதரல்லாதவர்கள் என்று ஒரு வித்தியாசம் இருந்தது, ஆனால், இயேசுவின் உயிர்தெழுதலுக்கு பிறகு, அதாவது மேசியா வந்து தம்முடைய திட்டமிட்ட செயல்களைச் செய்துவிட்ட பிறகு, இரு மக்களுக்கும் இடையே சமாதானம் உண்டாக்கப்பட்டது.

**எபேசியர் 2: 17-20**

17. அல்லாமலும் **அவர் வந்து, தூரமாயிருந்த உங்களுக்கும், சமீபமாயிருந்த அவர்களுக்கும், சமாதானத்தைச் சுவிசேஷமாக அறிவித்தார்**. 18. அந்தப்படியே நாம் இருதிறத்தாரும் ஒரே ஆவியினாலே பிதாவினிடத்தில் சேரும் சிலாக்கியத்தை அவர்மூலமாய்ப் பெற்றிருக்கிறோம். 19. ஆகையால், நீங்கள் இனி அந்நியரும் பரதேசிகளுமாயிராமல், பரிசுத்தவான்களோடே ஒரே நகரத்தாரும் தேவனுடைய வீட்டாருமாயிருந்து, 20. அப்போஸ்தலர் தீர்க்கதரிசிகள் என்பவர்களுடைய அஸ்திபாரத்தின்மேல் கட்டப்பட்டவர்களுமாயிருக்கிறீர்கள்; அதற்கு இயேசுகிறிஸ்து தாமே மூலைக்கல்லாயிருக்கிறார்;

மேற்கண்ட வசனங்கள் யூதர்கள் பற்றியும், யூதரல்லாத மற்ற கிறிஸ்தவர்கள் பற்றியும் சொல்லப்பட்டாலும், நாம் அனைவரும் அதாவது இயேசுவை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்ட அனைத்து உலக கிறிஸ்தவர்களும் ஒரே குடும்பத்தாராக மாறுவதற்கு இயேசு வழி செய்துள்ளார். ஆகையால், கிறிஸ்தவ சபைகளின் பெயர்கள் பலவாறாக இருந்தாலும், அனைவரும் இயேசு என்னும் ஒரே சரீரத்தில் அவயங்கள் தான், இந்த நினைவு மனதில் கொண்டு பல சபை கிறிஸ்தவர்கள் சமாதானத்துடன் வாழ பரிசுத்த ஆவியானவர் உதவி செய்கிறார். இது தான் இயேசு கொடுக்கும் இரண்டாவது சமாதானம்.

**3) முடிந்த அளவு, எல்லா மனிதர்களுடன் சமாதானம்**

மூன்றாவதாக, இயேசு கொடுக்கும் சமாதானம் என்னவென்றால், உலக மக்கள் அனைவரோடும் கிறிஸ்தவர்கள் கொண்டிருக்கவேண்டிய சமாதானம் ஆகும்.

இயேசுவின் மூலமாக, தேவனோடு சமாதானம் அடைந்த கிறிஸ்தவன், தன்னைப்போன்று நம்பிக்கையுள்ள கிறிஸ்தவர்களோடு சமாதானம் அடைந்த கிறிஸ்தவன், நிச்சயம் மற்ற மக்களோடும் சமாதானமாக வாழ முயலவேண்டும்.

**ரோமர் 12:14-21**

14. உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களை ஆசீர்வதியுங்கள்;
ஆசீர்வதிக்கவேண்டியதேயன்றி சபியாதிருங்கள். 15.
சந்தோஷப்படுகிறவர்களுடனே சந்தோஷப்படுங்கள்; அழுகிறவர்களுடனே
அழுங்கள். 16. ஒருவரோடொருவர் ஏகசிந்தையுள்ளவர்களாயிருங்கள்;
மேட்டிமையானவைகளைச் சிந்தியாமல், தாழ்மையானவர்களுக்கு
இணங்குங்கள்; உங்களையே புத்திமான்களென்று எண்ணாதிருங்கள். 17.
ஒருவனுக்கும் தீமைக்குத் தீமைசெய்யாதிருங்கள்; எல்லா
மனுஷருக்குமுன்பாகவும் யோக்கியமானவைகளைச் செய்ய நாடுங்கள்.
18. **கூடுமானால் உங்களாலானமட்டும் எல்லா மனுஷரோடும்
சமாதானமாயிருங்கள்.** 19. பிரியமானவர்களே, பழிவாங்குதல் எனக்குரியது,
நானே பதிற்செய்வேன், என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று
எழுதியிருக்கிறபடியால், நீங்கள் பழிவாங்காமல், கோபாக்கினைக்கு
இடங்கொடுங்கள். 20. அன்றியும், உன் சத்துரு பசியாயிருந்தால், அவனுக்கு
போஜனங்கொடு; அவன் தாகமாயிருந்தால், அவனுக்குப் பானங்கொடு; நீ
இப்படிச் செய்வதினால் அக்கினித்தழலை அவன் தலையின்மேல் குவிப்பாய். 21.
நீ தீமையினாலே வெல்லப்படாமல், தீமையை நன்மையினாலே வெல்லு.

மேற்கண்ட வசனங்களை ஒரு முறை படித்துப் பாருங்கள், முக்கியமாக 18வது வசனம் சொல்வதை கவனியுங்கள்.

"**கூடுமானால் உங்களாலானமட்டும் எல்லா மனுஷரோடும் சமாதானமாயிருங்கள்**" இது தான் ஒரு கிறிஸ்தவன் செய்யவேண்டியது. முடிந்த அளவிற்கு நாம் சமாதானமாக இருக்கவே முயலவேண்டும். நம்மிடம் ஒருவர் தவறான நடந்துக்கொண்டால், முடிந்த அளவிற்கு அவரை மன்னிக்க முயலவேண்டும்.

நமக்கு சொந்தமான வீட்டை ஒருவர் எடுத்துக்கொண்டால் சட்டத்தின் படி, அவரிடம் சமாதானமாக நடந்துக்கொள்ளுங்கள். அவரது தவறை உணர்த்துங்கள், சண்டையில்லாமல் பிரச்சனை தீர்க்கமுடியுமா என்று பாருங்கள். அவர் அடங்காபிடாரியாக இருந்தால், கடைசியாக நீதிமன்றத்தில் அவர் மீது வழக்கு தொடரலாம். ஒரு கிறிஸ்தவன் சமாதானம் செய்ய முயலும்

போதும், மற்றவன் ஒப்புக்கொள்ளவில்லை என்றுச் சொன்னால் என்ன தான் செய்யமுடியும்? சட்டத்தின் உதவியை நாடவேண்டி வரும்.

ஆக, இயேசுவின் மூலமாக மற்றவர்களோடும் நாம் சமாதானமாக நடந்துக்கொள்ள அழைக்கப்பட்டுள்ளோம்.

**4) சத்தியத்திற்கு எதிராக நடந்துக்கொள்பவர்களோடு சமாதானமாக இருக்கமுடியாமல் போகட்டும்**

இந்த கேள்வியில் குறிப்பிடப்பட்ட வசனத்திற்கு பதில் இந்த பாயிண்டில் தான் உள்ளது.

தேவனோடு சமாதானம், முடியும். மற்ற சகோதர/சகோதரிகளோடு (கிறிஸ்தவர்களோடு) சமாதானம், முடியும், மற்ற உலக மக்களோடு சமாதானம், முடிந்த அளவிற்கு கடைபிடிக்கவேண்டும்.

ஆனால், நம் நம்பிக்கைக்கு சத்தியத்திற்கு எதிராக ஒருவர் நடந்துக்கொண்டால், நாம் 'எப்படி நம் சத்தியத்தை' விட்டுக்கொடுக்கமுடியும். இந்த இடத்தில் தான் இயேசுவின் வார்த்தைகள் வருகின்றன. 51வது வசனத்தோடு கூட,அடுத்த இரண்டு வசனங்களையும் படித்துப் பாருங்கள்.

லூக்கா 12: 51. நான் பூமியிலே சமாதானத்தை உண்டாக்க வந்தேன் என்று நினைக்கிறீர்களோ? சமாதானத்தையல்ல, பிரிவினையையே உண்டாக்க வந்தேன் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். 52. எப்படியெனில், இதுமுதல் ஒரே வீட்டிலே ஐந்துபேர் பிரிந்திருப்பார்கள், இரண்டுபேருக்கு விரோதமாய் மூன்றுபேரும், மூன்றுபேருக்கு விரோதமாய் இரண்டுபேரும் பிரிந்திருப்பார்கள். 53. தகப்பன் மகனுக்கும் மகன் தகப்பனுக்கும், தாய் மகளுக்கும் மகள் தாய்க்கும், மாமி மருமகளுக்கும் மருமகள் மாமிக்கும் விரோதமாய்ப் பிரிந்திருப்பார்கள் என்றார்.

ஒரு குடும்பத்தில் ஒருவர் இயேசுவை பின்பற்ற முடிவு செய்தால், மற்றவர்கள் அதாவது அந்த குடும்பத்தின் மற்ற அங்கத்தினர்கள், நிச்சயமாக இதனை ஏற்கமாட்டார்கள்.

**என் வாழ்க்கையையே உதாரணமாக எடுத்துக்கொள்ளலாம்.**

ஒரு முஸ்லிம் குடும்ப பின்னணியிலிருந்த நான், இயேசுவை என் தெய்வமாக ஏற்றுக்கொண்ட பிறகு என் குடும்பத்தார்கள், என் முடிவை எதிர்த்தார்கள். என் தகப்பனார் வீட்டை விட்டு வெளியே சென்றுவிடு என்றார். இயேசுவை பின்பற்றுவதை விட்டுவிடுகிறாயா? அல்லது வீட்டைவிட்டு வெளியே செல்கிறாயா? என்று கேட்டார்கள்.

எனக்கு இரண்டு அண்ணன்கள் இருந்தாலும் அவர்கள் தனியாக வாழ்ந்துக்கொண்டு இருந்தார்கள், என் பெற்றோர்களை அவர்கள்

கவனித்துக்கொள்ளவில்லை. என் குடும்பத்தில் நாங்கள் 6 பேர். என் சகோதரிகள் மூவரும் திருமணமாகி செட்டில் ஆகிவிட்டார்கள். என் இரு அண்ணன்கள், தனிக்குடித்தனம் சென்றுவிட்டார்கள். என் வயதான பெற்றோர்களை நான் தான் பார்த்துக்கொண்டு அவர்களோடு இருந்தேன். இந்த நிலையில் என்னை வீட்டை விட்டு வெளியே சென்று விடு என்று அவர்கள் 'கோபத்தில்' சொன்னாலும், என்னால் எப்படி செல்லமுடியும்? நான் சென்றுவிட்டால் இவர்களை பார்த்துக்கொள்வது யார்?

நான் மிகப்பெரிய தர்ம சங்கடத்தில் இருந்தேன்.

- இயேசுவை புறக்கணித்துவிட்டு பெற்றோர்களுடன் இருப்பதா(சமாதானம் அடைந்துவிடுவதா)?

அல்லது

- பெற்றோர்களை புறக்கணித்துவிட்டு, வெளியே சென்றுவிட்டு இயேசுவை விட்டுக் கொடுக்காமல் வாழ்வதா?

நான் செய்த காரியம், ஒன்றும் பேசாமல், விவாதிக்கலாம், அமைதியாக திட்டுக்களை வாங்கிக்கொண்டு பெற்றோர்களுடனேயே இருந்தேன். அவர்களை கண்கலங்காமல் பார்த்துக்கொண்டேன். அவர்கள் பணத்திற்காக யாரிடமும் மதிப்பிழந்து கெஞ்சாமல், தலை நிமிர்ந்து வாழும்படி செய்தேன். இன்றைக்கு இதோ 25 ஆண்டுகள் ஆகிவிட்டது, அவர்கள் சொல்லும் சாட்சி "என் கடைசி மகன் இல்லையென்றால் நாங்கள் நடுத்தெருவில் விழுந்திருப்போம்" என்பது தான்.

என் சொந்தங்களும் சொல்லும் சாட்சி இது தான்: "அவனோடு நமக்கு அல்லாஹ் பற்றிய (நான் அல்லாஹ்வை வணங்காத) குறைபாடு இருந்தாலும், தன் பெற்றோர்களை, குடும்ப நபர்களை நன்கு கவனித்துக்கொண்டான்" என்பதாகும்.

நான் இயேசுவை விட்டுக்கொடுக்கவில்லை, அதே நேரத்தில் குடும்பத்தையும் விட்டுக்கொடுக்கவில்லை.

ஒரு வேளை, என் இரண்டு அண்ணன்கள், என் பெற்றோர்களோடு இருந்திருந்து, என்னை வீட்டைவிட்டு வெளியே பிடிவாதமாக தள்ளியிருந்தால், நான் என்ன செய்திருக்கமுடியும்? இயேசுவை விட்டுக்கொடுக்காமல், வெளியே சென்று இருந்திருக்கவேண்டும்.

இதைத் தான் இயேசு "இதுமுதல் ஒரே வீட்டிலே ஐந்துபேர் பிரிந்திருப்பார்கள், இரண்டுபேருக்கு விரோதமாய் மூன்றுபேரும், மூன்றுபேருக்கு விரோதமாய் இரண்டுபேரும் பிரிந்திருப்பார்கள்." என்று கூறுகின்றார். இவர்கள் சத்தியத்திற்காக, இயேசுவிற்காக பிரிந்திருப்பார்களே தவிர, மற்ற காரியங்களுகாக அல்ல. ஒருவேளை இயேசுவை பின்பற்றுவதினால்

வீட்டைவிட்டு வெளியே துரத்தப்பட்டாலும், அவர்கள் குடும்பத்தோடு சமாதானமாக இருக்க வேண்டுமே தவிர, விரோதிக்கக்கூடாது. ஏனென்றால் நம் இயேசு ஏற்கனவே இப்படி நடக்கும் என்று சொல்லியுள்ளார். தன்னை விசுவாசிக்கும் நபர்கள் சத்தியத்தை விட்டுக்கொடுக்காதபடியினால், இந்த ஒரு காரியத்தில் மட்டுமே மற்றவர்களோடு சமாதானமாக அவர்களால் இருக்கமுடியாது, என்கிறார் இயேசு, இது தான் அவரது வார்த்தைகளின் பொருள்.

இயேசு சமாதானப் பிரபு தான். அவர் சமாதானத்தை உண்டாக்க வந்தவர் தான்.

மேற்கண்ட வசனத்தை சரியான வெளிச்சத்தில் விளக்கும் போது நமக்கு தெளிவு உண்டாகும்.



**கேள்வி 74: "மனுஷகுமாரனேயல்லாமல் பரலோகத்துக்கு ஏறினவன் ஒருவனுமில்லை" என்று யோவான் 3:13 சொல்கிறது, அப்படியானால் எலியா மற்றும் ஏனோக்கு பற்றி என்ன? மேலும் பழைய ஏற்பாட்டின் பரிசுத்தவான்கள் பரலோகத்திற்குச் செல்லவில்லையா? அவர்கள் பரலோகில் இல்லையா? (இந்த கேள்வியை அஹ்மத் தீதத் அவர்கள் கேட்டார்கள்).**

**பதில் 74:** முதலாவது யோவான் 3:13வது வசனத்தை படிப்போம்.

பரலோகத்திலிருந்திறங்கினவரும் பரலோகத்திலிருக்கிறவருமான மனுஷகுமாரனேயல்லாமல் பரலோகத்துக்கு ஏறினவன் ஒருவனுமில்லை. (யோவான் 3:13)

இந்த வசனம் இயேசுக் கிறிஸ்துவைப் பற்றிச் சொல்கிறது. இந்த வசனத்தின் படி இயேசுவிற்கு முன்பாக பரலோகத்திற்கு ஏறினவர்கள் யாருமில்லை என்றுச் சொல்லப்படுகின்றது. ஆனால், எலியா என்ற தீர்க்கதரிசியும், ஏனோக்கு என்பவரும் அப்படியே பரலோகத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டதாக பழைய ஏற்பாடு சொல்கிறது, அப்படியானால், இயேசுவிற்கு முன்பாக இருவர் பரலோகத்திற்கு மரணமில்லாமல் சென்று இருப்பதினால், ஏன் இயேசு மட்டும் தான் பரலோகத்திற்குச் சென்றார் என்று கேள்வி எழுப்பப்படுகின்றது.

**எலியா:**

II இராஜாக்கள் 2:11. அவர்கள் பேசிக்கொண்டு நடந்துபோகையில், இதோ, அக்கினிரதமும் அக்கினிக் குதிரைகளும் அவர்கள் நடுவாக வந்து இருவரையும் பிரித்தது; எலியா சுழல்காற்றிலே பரலோகத்திற்கு ஏறிப்போனான்.

**ஏனோக்கு:**

ஆதியாகமம் 5:24. ஏனோக்கு தேவனோடே சஞ்சரித்துக்கொண்டிருக்கையில், காணப்படாமற்போனான்; தேவன் அவனை எடுத்துக்கொண்டார்.

மற்றவர்கள் பரலோகத்திற்குச் சென்றதற்கும், இயேசு பரலோகத்திற்கு சென்றார் என்று சொல்வதற்கும் மிகப்பெரிய வித்தையாசம் உள்ளது. அதனை சுருக்கமாக காண்போம்.

எலியா தம்முடைய சொந்த வல்லமையினாலே, தெய்வீகத்தன்மையாலே பரலோகத்திற்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை, தேவன் அவரை எடுத்துக்கொண்டார். ஆனால் இயேசுவே சுயமாக பூமியிலிருந்து அவர் சென்றார், அதற்காக அதிகாரம் அவருக்கு உள்ளது. இதே போன்று ஏனோக்கு கூட தம் சுய சக்தியால் பரலோகத்திற்கு செல்லவில்லை, தேவன் அவரை எடுத்துக்கொண்டார்.

**பரதீசு மற்றும் பரலோகம்:**

இயேசு சிலுவையில் தொங்கும் போது கூட தம்மீது நம்பிக்கை வைத்த திருடனிடம், "இன்றைக்கு நீ என்னுடனேகூடப் பரதீசிலிருப்பாய்" என்றார், பரலோகத்தில் அல்ல. பரதீசு என்பது பரலோகத்திற்கு முன்பாக இருக்கின்ற இன்னொரு இடமாகும்.

லூக்கா 23;43. இயேசு அவனை நோக்கி: இன்றைக்கு நீ என்னுடனேகூடப் பரதீசிலிருப்பாய் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

பழைய ஏற்பாட்டு நீதிமான்கள்/நபர்கள் அனைவரும் பரதீசுக்கு கொண்டுச் செல்லப்பட்டார்களே ஒழிய பரலோகத்திற்கு அல்ல. மேலும் எலியா ஏனோக்கு கூட பரதீசுக்கு கொண்டுச் செல்லப்பட்டார்கள். இயேசு மரித்து உயிர்த்தெழுந்தவுடன் பரதீசுக்குச் சென்று, அங்கிருந்த பரிசுத்தவான்களை பரலோகத்திற்குச் அழைத்துச் சென்றார்.

**இதைப் பற்றிய வேறு வசனங்கள்**

**I பேதுரு 3:18-19**

18. ஏனெனில், கிறிஸ்துவும் நம்மைத் தேவனிடத்தில் சேர்க்கும்படி அநீதியுள்ளவர்களுக்குப் பதிலாக நீதியுள்ளவராய்ப் பாவங்களினிமித்தம் ஒருதரம் பாடுபட்டார்; அவர் மாம்சத்திலே கொலையுண்டு, ஆவியிலே உயிர்ப்பிக்கப்பட்டார். 19. **அந்த ஆவியிலே அவர் போய்க் காவலிலுள்ள ஆவிகளுக்குப் பிரசங்கித்தார்**.

**எபேசியர் 4:8**

8. ஆதலால், அவர் உன்னதத்திற்கு ஏறி, **சிறைப்பட்டவர்களைச் சிறையாக்கி**, மனுஷர்களுக்கு வரங்களை அளித்தார் என்று சொல்லியிருக்கிறார்.

மரித்தவர்கள் ஒரு தற்காலிய இடத்தில் இருப்பார்கள் (அதை சிறை) என்று அவர்கள் அழைத்தார்கள், அது நரகமல்ல. அந்த இடத்திற்கு புதிய ஏற்பாட்டில் இயேசு பரதீசு என்று அழைக்கிறார், மேற்கண்ட வசனங்கள் பழைய ஏற்பாட்டின் முறையின் படி "சிறை" என்றுச் சொல்கின்றன.

இந்த நிகழ்ச்சியில் ஒரு முக்கியமான விவரமும் அடங்கியுள்ளது. இயேசு நிக்கொதேமு என்ற யூத மத தலைவரிடம் பேசும் போது தான் 13ம் வசனத்தில் இப்படி கூறினார்.

உண்மையில் முதல் வசனத்திலிருந்து 13வது வசனம் வரை நாம் வாசித்தால், இயேசு சொல்வது எப்படி உள்ளதென்றால், "யூத ரபீக்களாகிய நீங்கள் பரலோகத்திற்குச் செல்லவில்லை, அப்படியானால், அங்குள்ளவைகள் பற்றி அவர்களுக்கு எப்படித் தெரியும். ஆனால், நான் அங்கிருந்து தான் வந்தேன், எனவே பரலோகத்தில் உள்ளதைப் பற்றி எனக்கு தான் அதிக அனுபவம் உள்ளது, எனவே நான் பூமிக்கு சம்மந்தப்பட்டவைகளைச் சொன்னாலும் சரி, பரலோகம் பற்றிச் சொன்னாலும் சரி, அதில் உண்மையிருக்கும் எனவே, நீ நம்பவேண்டும்" என்று இயேசு சொல்கிறார்.

**யோவான் 3:11-13**

11. மெய்யாகவே மெய்யாகவே நான் உனக்குச் சொல்லுகிறேன், நாங்கள் அறிந்திருக்கிறதைச் சொல்லி, நாங்கள் கண்டதைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறோம்; நீங்களோ எங்கள் சாட்சியை ஏற்றுகொள்ளுவதில்லை.

12. பூமிக்கடுத்த காரியங்களை நான் உங்களுக்குச் சொல்லியும் நீங்கள் விசுவாசிக்கவில்லையே, பரமகாரியங்களை உங்களுக்குச் சொல்வேனானால் எப்படி விசுவாசிப்பீர்கள்?

**13. பரலோகத்திலிருந்திறங்கினவரும் பரலோகத்திலிருக்கிறவருமான மனுஷகுமாரனேயல்லாமல் பரலோகத்துக்கு ஏறினவன் ஒருவனுமில்லை.**

ஆக, வானத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட பரிசுத்தவான்கள் அனைவரும் "பரதீசுக்குத் தான்" சென்றார்கள், "பரலோகத்துக்கு அல்ல". மேலும அவர்கள் அனைவரும் தங்கள் சுயசக்தியினால் வானத்துக்குச் செல்லவில்லை, அவர்களை தேவன் எடுத்துக்கொண்டார். ஆனால், இயேசு மட்டுமே பரலோகத்துக்குச் சென்றவர்களில் முதலாமானவர் மேலும் அதனை தம் சுய தெய்வீகசக்தியால் செய்தார். இது போன்று மற்றவர்கள் செய்யமுடியாது.

கடைசியாக இந்த வசனங்களை கவனியுங்கள், தம் உயிரை கொடுக்கவும் அதனை மறுபடியும் எடுத்துக்கொள்ளவும் தனக்கு அதிகாரம் உண்டென்று இயேசு சொல்கிறார். பொதுவாக மனிதர்களுக்கு ஒரு அதிகாரம் தான் இருக்கும் அதாவது "தற்கொலை செய்து தங்கள் உயிரை மாய்த்துக்கொள்ளலாம், ஆனால் கொடுத்த உயிரை மறுபடியும் எடுத்துக்கொண்டு உயிரோடு வரமுடியாது".

யூதர்கள் தம் உயிரை எடுக்கவில்லை, தாமே அதனை விருப்பமுற்று கொடுக்கிறேன், அதனை மறுபடியும் பெற்றுக்கொள்ளவும்(உயிர்த்து எழுவும்) என்னால் முடியும் என்று இயேசு கூறுகின்றார்.

**யோவான் 10:17-18**

17. நான் என் ஜீவனை மறுபடியும் அடைந்துகொள்ளும்படிக்கு அதைக் கொடுக்கிறபடியினால் பிதா என்னில் அன்பாயிருக்கிறார்.

18. ஒருவனும் அதை என்னிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளமாட்டான்; நானே அதைக் கொடுக்கிறேன், அதைக் கொடுக்கவும் எனக்கு அதிகாரம் உண்டு, அதை மறுபடியும் எடுத்துக்கொள்ளவும் எனக்கு அதிகாரம் உண்டு. இந்தக் கட்டளையை என் பிதாவினிடத்தில் பெற்றுக்கொண்டேன் என்றார்.



**கேள்வி 75: இயேசு தெய்வமானால் அவர் ஏன் மற்றவர்களுக்காக அழுதார்? இறைவன் அழமுடியுமா? அவர் ஏன் தாகமாக இருந்தார்? உணவு உண்டார்? இறைவனுக்கு தாகமுண்டாகுமா? பார்க்க யோவான் 11:35, 19:28. (இந்த கேள்வியை அஹமத் தீதத் அவர்கள் கேட்டார்கள்)**

**பதில் 75:** இயேசு பூமியில் மனிதனாக வந்தார். அதே நேரத்தில் அவர் இறைவனாகவும் இருந்தார்.

மனிதன் என்ற முறையில், நம்மைப்போன்று இயற்கைக்கு உட்பட்டு தாகமடைதல், பசியடைதல் போன்றவற்றை அவரும் அனுபவித்தார். அதே போன்று தெய்வமாக பல இயற்கைக்கு அப்பாற்பட்ட அற்புதங்களையும் செய்தார்.

முதலாவதாக முஸ்லிம்கள் கவனிக்கவேண்டியது என்னவென்றால், இயேசு பூமியில் மனிதனாக வந்த பிறகு “அவர் தாகமாக இருக்கமாட்டார், உணவு உண்ணமாட்டார்” என்று பைபிள் சொல்லவில்லை. மனிதனாக வந்த பிறகும், எந்த ஒரு மனித இயல்புக்கும் உட்படாமல் இயேசு வாழ்வார் என்று பைபிள் சொல்லவில்லை. அதே போன்று, அவர் தெய்வமாகவும் இருப்பதினால், தம் நற்செய்தியை அறிவிப்பதற்கு சான்றாக அவர் பல அற்புதங்களைச் செய்தார். எனவே, இயேசு தாகமாக இருக்கலாமா? பசியாக இருக்கலாமா என்று கேட்பது அறியாமையாகும்.

அடுத்தபடியாக, "**இயேசு கண்ணீர் விட்டார்**" என்ற விஷயத்துக்கு வருவோம்.

இயேசு அன்புள்ளவர், அவர் தாம் உண்டாக்கிய மக்களை நேசிக்கிறார்.

எருசலேம் மேசியாவின் வருகையை புரிந்துக்கொள்ளாததினால், அது அனுபவிக்கப்போகும் கொடுமைகளை நினைத்து, இயேசு கண்ணீர் விட்டார்.

**லூக்கா 19: 41.**

41 அவர் சமீபமாய் வந்தபோது நகரத்தைப்பார்த்து, அதற்காகக் கண்ணீர்விட்டழுது,

தம்முடைய நண்பன் லாசரு மரித்துவிட்டதினால், அவனுக்காக மற்றவர்கள் அழுவதைக் கண்டும் அவரும் அழுதார்.

**யோவான் 11:33-36**

33. அவள் அழுகிறதையும் அவளோடேகூட வந்த யூதர்கள் அழுகிறதையும் இயேசு கண்டபோது ஆவியிலே கலங்கித் துயரமடைந்து: 34. அவனை எங்கே வைத்தீர்கள் என்றார். ஆண்டவரே, வந்து பாரும் என்றார்கள். 35. **இயேசு கண்ணீர் விட்டார்**. 36. அப்பொழுது யூதர்கள்: இதோ, இவர் அவனை எவ்வளவாய்ச் சிநேகித்தார் என்றார்கள்!

இயேசு தெய்வமாகவும் இருந்தார், மனிதராகவும் இருந்தார், தாம் நேசிப்பவர்களுக்காக அவர் அழுதார், இதில் தவறேதுமில்லை.

கண்ணீர் விடுவது தெய்வத்தின் இலக்கணத்திற்கு தகாது என்று முஸ்லிம்கள் சொல்வார்களானால், கோபம் கொள்வதும் தெய்வத்துக்கு தகாது தானே!

ஒரு மனிதன் தம்மை விட்டு தூரமாகச் சென்றால், இயேசு கண்ணீர் விடுகின்றார், ஒரு மனிதன் தம்மைவிட்டு (இஸ்லாமைவிட்டு) தூரமாகச் சென்றால், அல்லாஹ் கோபம் கொள்கின்றான்.

கோபம் என்பது மனித குணமா? இறைவனது குணமா? தவறு செய்பவர்கள் மீது அல்லாஹ் கோபம் கொள்கின்றான், இதே போன்று மனிதர்களும் கோபம் கொள்கிறார்கள். மனிதனின் ஒரு குணத்தை அல்லாஹ் பிரதிபலிப்பதினால் அதுவும் சொர்க்கத்தில் இருந்துக்கொண்டே கோபத்தை பிரதிபலிப்பதினால், அல்லாஹ் இறைவன் இல்லை என்று முஸ்லிம்கள் சொல்வார்களா?

குர்ஆன் 1:7. (அது) நீ எவர்களுக்கு அருள் புரிந்தாயோ அவ்வழி. (அது) **உன் கோபத்திற்கு** ஆளானோர் வழியுமல்ல நெறி தவறியோர் வழியுமல்ல.

குர்ஆன் 4:93. எவனேனும் ஒருவன், ஒரு முஃமினை வேண்டுமென்றே கொலை செய்வானாயின் அவனுக்கு உரிய தண்டனை நரகமே ஆகும். என்றென்றும் அங்கேயே தங்குவான். **அல்லாஹ் அவன் மீது கோபம் கொள்கிறான்**; இன்னும் அவனைச் சபிக்கிறான். அவனுக்கு மகத்தான வேதனையையும் (அல்லாஹ்) தயாரித்திருக்கிறான்.

குர்ஆன் 5:80. .. . ஏனெனில் **அல்லாஹ்வின் கோபம் அவர்கள் மீதுள்ளது;** மேலும் வேதனையில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள்.

குர்ஆன் 16:106. எவர் ஈமான் கொண்டபின் அல்லாஹ்வை நிராகரிக்கிறாரோ அவர் (மீது அல்லாஹ்வின் கோபம் இருக்கிறது) - அவருடைய உள்ளம் ஈமானைக் கொண்டு அமைதி கொண்டிருக்கும் நிலையில் யார் நிர்ப்பந்திக்கப்படுகிறாரோ அவரைத் தவிர - (எனவே அவர் மீது குற்றமில்லை) ஆனால் (நிர்ப்பந்தம் யாதும் இல்லாமல்) எவருடைய நெஞ்சம் குஃப்ரைக்கொண்டு விரிவாகி இருக்கிறதோ - **இத்தகையோர் மீது அல்லாஹ்வின் கோபம் உண்டாகும்**; இன்னும் அவர்களுக்குக் கொடிய வேதனையும் உண்டு.

குர்ஆன் 40:10. நிச்சயமாக நிராகரிப்பவர்களிடம்: "இன்று நீங்கள் உங்கள் ஆன்மாக்களைக் கோபித்துக் கொள்வதைவிட **அல்லாஹ்வுடைய கோபம் மிகப் பெரியதாகும்**; ஏனென்றால் நீங்கள் நம்பிக்கையின் பால் அழைக்கப்பட்ட போது (அதை) நிராகரித்து விட்டீர்களே" என்று அவர்களிடம் கூறப்படும்.

அல்லாஹ் "மனிதர்களை இஸ்லாமுக்கு அழைக்கும் போது" மனிதன் வராதபோது 'அல்லாஹ் கோபம் கொள்வது' ஒரு வகையான மனித குணம், இதே போன்று அந்த மனிதன் இஸ்லாமை ஏற்றால் 'அல்லாஹ் மகிழுவான் அல்லவா'? மகிழுவது கூட ஒரு குணம் தானே! இதுவும் மனித குணம் தானே!

அல்லாவிற்கு கோபம் கொள்வது, மகிழுவது, மெச்சிக்கொள்வது, வாழ்த்துவது போன்ற குணங்கள் இல்லையென்று சொல்லமுடியுமா?

இதே போன்று, இயேசு மாய்மாலக்காரர்களிடம் கோபம் கொண்டார், மக்களிடம் அன்பு செலுத்தினார், மகிழ்ந்தார், சிரித்தார் இவைகளெல்லாம் அவர் செய்யக்கூடாது என்று நாம் எப்படி சொல்லமுடியும்? இறைவனாக இருந்தாலும் இவைகளை செய்ய அவருக்கு உரிமையுண்டு அல்லவா? இதே போன்று தான் அல்லாஹ்விற்கும் உரிமையுண்டு.

எனவே, அன்பாகவே இருக்கும் இறைவனாகிய இயேசு கண்ணீர் விட்டதில் எந்த ஒரு ஆச்சரியமும் இல்லை!



**கேள்வி 76: ஒரே சரீரமும், ஒரே ஆவியும் உண்டு (எபே 4:4) என்று பைபிள் சொல்லும் போது, ஏன் பல பெயர்களில் திருச்சபைகள் உருவாகியுள்ளன?**

**பதில் 76:** இயேசுவின் திருச்சபை ஒரே திருச்சபை தான், ஆனால் சிறிய வித்தியாசங்கள் மற்றும் கருத்து வேற்றுமைகளினால் பல பெயர்களில் திருச்சபைகள் இயங்குகின்றன.

முதலாவதாக, சில திருச்சபை தலைவர்கள் தங்கள் சொந்த விளக்கங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்துவிடுகிறார்கள். இவர்களின் இந்த புதிய விளக்கங்களை கேள்வி கேட்பவர்களைவிட்டு தனியே சென்று திருச்சபை தொடங்கிவிடுகிறார்கள். எனவே புதிய திருச்சபைகள் உருவாகிவிடுகின்றன.

பைபிளின் அடிப்படை கோட்பாடுகளை ஏற்றுக்கொண்டாலும், தங்கள் சொந்த மேலதிக விளக்கங்களை அந்த திருச்சபை பல ஆண்டுகளாக பின்பற்றுவதினால், அவைகள் சபை பாரம்பரியங்களாக காலப்போக்கில் மாறிவிடுகின்றன.

இரண்டாவதாக, தற்காலத்தில் பல கள்ள உபதேசங்கள் வந்துக்கொண்டு இருக்கின்றன. இவர்கள் பைபிளில் சொல்லப்பட்ட அடிப்படை கோட்பாடுகள் சிலவற்றை மறுப்பார்கள், இவர்களினாலும் திருச்சபைகள் பல பெயர்களில் உருவாகின்றன.

கருத்து வேறுபாடுகள் எல்லா மதங்களிலும் உண்டு, இதே போன்று பல பிரிவுகளாக அவர்கள் பிரிந்துள்ளார்கள். ஆனால், இந்த கருத்து வேறுபாட்டினால் ஒருவரை ஒருவர் சண்டையிட்டுக்கொண்டும், கொலை செய்துக்கொண்டும் இருக்கக்கூடாது. இந்த வகையில் கிறிஸ்தவ திருச்சபைகள் தற்காலத்தில் கட்டுப்பாட்டுடன் இருக்கிறார்கள் எனலாம். இந்த இடத்தில் "சபை பிரிவுகள் (Denominations) என்பது வேறு, மற்றும் பல பெயர்களில் திருச்சபைகள் இருப்பது வேறு" என்பதை புரிந்துக்கொள்ளவேண்டும். முதலாவதைப் பற்றி தான் நான் இங்கு குறிப்பிட்டேன். பல பெயர்களில் சபை இருப்பது பிரச்சனை இல்லை, ஆனால் டினாமினேஷன் என்றுச் சொல்லக்கூடிய சபை பிரிவு பற்றி தான் நான் மேலே விளக்கினேன்.

ஆனால், ஷியா சன்னி முஸ்லிம் பிரிவினர் ஒருவரை ஒருவர் கொலை செய்துக்கொண்டு இருக்கிறார்கள், இன்றும் இது தொடர்கிறது. என்பதை கவனத்தில் கொள்ளவேண்டும்.



**கேள்வி 77: யாக்கோபு 1:13ன் படி தேவன் யாரையும் சோதிப்பதில்லை, ஆனால் வேறு சில வசனங்களில் தேவன் சோதித்தார் என்று வருகிறதே? ஏன் இந்த முரண்பாடு? இந்த கேள்வியை அஹமத் தீதத் என்பவர் கேட்டார்**

**பதில் 77:** முதலாவதாக, யாக்கோபு 1:13ம் வசனத்தை படிப்போம்.

யாக்கோபு 1:13 சோதிக்கப்படுகிற எவனும், நான் தேவனால் சோதிக்கப்படுகிறேன் என்று சொல்லாதிருப்பானாக; **தேவன் பொல்லாங்கினால் சோதிக்கப்படுகிறவரல்ல**, ஒருவனையும் அவர் சோதிக்கிறவருமல்ல.

“சோதனை” என்ற வார்த்தை பல சூழ்நிலைகளில் பல பொருள்களில் பயன்படுத்தப்படுகின்றது.

ஆங்கிலத்தில் “**Tempting**” and “**Testing**” என்றுச் சொல்கிறோம், இவ்விரண்டும் ஒன்றா என்று பார்த்தால், "இல்லை" என்பது தான் பதில்.

- **Tempt -**"ஒருவர் ஒரு தீமையில் விழுந்துவிடும்படி இன்னொருவர் சோதித்தல், தடைகளை உண்டாக்குதல் அல்லது தவறு என்று தெரிந்தும் செய்ய விரும்புதல்" (இணையத்தில் கிடைத்த பொருள் - A feeling that you want to do something, even if you know that it is wrong. a thing that attracts you to do something wrong or silly).
- **Test -** "ஒருவர் முன்னேறுவதற்கு வைக்கப்படும் பரிட்சை என்று பொருள்" (இணையத்தில் கிடைத்த பொருள் - To examine somebody's knowledge or skill in something).

தேவன் ஒரு போதும் "மனிதன் விழுந்து போகும்படி சோதிக்கிறவர் (Tempting) அல்ல" என்பதைத் தான் மேற்கண்ட வசனம் சொல்கிறது.

ஆனால், அதே தேவன் நாம் விசுவாசத்தில் முன்னேறும்படியாகவும், இதர காரியங்களில் சிறப்பாக விளங்கவேண்டும் என்பதற்காக "அவர் நம்மை Test செய்வார் அதாவது பரிட்சை வைப்பார்".

நாம் படிக்கும் போது, பரிட்சை எழுதுகிறோம், அது டெம்ட் கிடையாது, அது டெஸ்ட்.

பரிட்சைக்கு பிறகு என்ன நடக்கும், நமக்கு ஒரு சான்றிதழ் கொடுக்கப்படும், நாம் முன்னேறுவதற்கு வேலை பெறுவதற்கு அது உதவும். எனவே தேவன் நமக்கு பரிட்சை வைப்பார் (நம்மை ஆசீர்வதிப்பதற்காக), ஆனால், சாத்தான் தான் நம்மை சோதிப்பான் (நாம் தவறு செய்யவேண்டுமென்பதற்காக).

எனவே, இதில் எந்த ஒரு முரண்பாடும் இல்லை.



**கேள்வி 78: இயேசு தம் தாயை "ஸ்திரியே" என்று ஏன் அழைத்தார், மேலும் விபச்சாரத்தில் கண்டுபிடிக்கப்பட்ட பெண்ணையும் "ஸ்திரியே" என்று தான் இயேசு அழைத்தார், இது சரி தானா? பார்க்க யோவான் 2:4, 8:10. இந்த கேள்வியை அஹமத் தீதத் கேட்டார்**

**பதில் 78:** இயேசு தம் தாயை ஸ்திரியே என்று அழைத்து அவமானப்படுத்திவிட்டார் என்று அஹமத் தீதத் என்ற முஸ்லிம் கருதிவிட்டார்.

இயேசு தம் தாயை அவமதிக்கவில்லை, முதல் நூற்றாண்டு அராமிக் பேசும் யூத கலாச்சாரத்தில், ஸ்திரியே என்று அழைத்தால், ஆங்கிலத்தில் இன்று நாம் "லேடி" என்றுச் சொல்லக்கூடிய வார்த்தை இருக்கிறதே, அதை விட மதிப்பு மிக்க வார்த்தையாகும்.

இயேசு யாரையும் அவமானப்படுத்தவில்லை, பெண்களை மிகவும் கேவலமாக பார்த்த யூத மத தலைவர்களுக்கு சரியான பதிலடி கொடுத்து, அந்த விபச்சார குற்றத்தில் பிடிபட்ட பெண்ணுக்காக பரிந்து பேசினார்.

யோவான் 2:4. அதற்கு இயேசு: **ஸ்திரீயே**, எனக்கும் உனக்கும் என்ன, என் வேளை இன்னும் வரவில்லை என்றார்.

யோவான் 8:10. இயேசு நிமிர்ந்து அந்த **ஸ்திரீயைத்** தவிர வேறொருவரையுங் காணாமல்: ஸ்திரீயே, உன்மேல் குற்றஞ்சாட்டினவர்கள் எங்கே? ஒருவனாகிலும் உன்னை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கவில்லையா என்றார்.

இயேசுவோடு எப்பொழுதும் சமுதாயத்தின் அடிமட்ட நிலையில் இருக்கும் மக்கள், பெண்கள் உட்பட சூழ்ந்திருந்தார்கள். பாவிகள் என்று யூதர்கள் குற்றப்படுத்தப்பட்ட மக்களோடு இயேசு உலாவினார். இயேசு பெண்களை அவமதிக்கின்றவராக இருந்திருந்தால், சமாரியா ஊரிலிருந்து வந்த அந்த ஒரு பெண்ணோடு பேசமாட்டார், அப்பெண் தன் கடந்த கால வாழ்க்கையில் ஐந்து திருமணங்கள் புரிந்திருந்தாலும், அப்பெண்ணை அவர் கேவலப்படுத்தவில்லை. அப்பெண்ணின் கடந்த கால வாழ்க்கையை தெரிந்திருந்தும், அப்பெண்ணின் மூலம் அவ்வூரில் நற்செய்தியை பரப்பினார்.

தீய காரியங்களில் ஈடுபட்டிருந்த பெண்களும் ஆண்களும் நேர்வழியில் வரவேண்டும் என்று விரும்பிய இயேசு எப்படி தன்னை பெற்றெடுத்த தாயாரை (அவர் தான் மரியாளை தெரிந்துக்கொண்டார்) அவமானப்படுத்துவார்?

கானா ஊர் திருமணத்தில் தன் தாயை "ஸ்திரியே" என்று அழைத்தது தவறு என்று முஸ்லிம்கள் சொல்வார்களானால், தாம் சிலுவையில் அறையப்படும் போது கூட ஏன் அவர் "தம் தாயைப் பார்த்து ஸ்திரியே" என்று அழைத்தார்? அந்த நேரத்தில் இயேசு மரியாளின் மீது கோபமாக இருந்தாரா? இல்லையல்லவா?

**பார்க்க: யோவான் 19:25-27**

25. இயேசுவின் சிலுவையினருகே அவருடைய தாயும், அவருடைய தாயின் சகோதரி கிலெயோப்பா மரியாளும், மகதலேனா மரியாளும் நின்றுகொண்டிருந்தார்கள்.

26. அப்பொழுது இயேசு தம்முடைய தாயையும் அருகே நின்ற தமக்கு அன்பாயிருந்த சீஷனையும் கண்டு, தம்முடைய தாயை நோக்கி: **ஸ்திரீயே, அதோ, உன் மகன் என்றார்.**

27. பின்பு அந்தச் சீஷனை நோக்கி: அதோ, உன் தாய் என்றார். அந்நேரமுதல் அந்தச் சீஷன் அவளைத் தன்னிடமாய் ஏற்றுக்கொண்டான்.

ஆக, இயேசு தன் தாயை ஒருபோதும் அவமதிக்கவில்லை என்பது இதன் மூலம் அறியலாம்.



**கேள்வி 79: ஒரு கிறிஸ்தவன் முஸ்லிமாக மாறி சில ஆண்டுகள் கழித்து, மறுபடியும் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டு வாழுவது சாத்தியமா? இதற்கு பைபிளில் சான்றுகள் உண்டா?**

**பதில் 79:** ஆம், இது சாத்தியமே. இப்படி அனேகரை நான் கண்டு இருக்கிறேன். என் நண்பர்கள் மூலமாகவும் அனேகரை இப்படி அறிந்திருக்கிறேன்.

உதாரணத்திற்கு சொல்லவேண்டுமென்றால், தற்காலத்திலும் முஸ்லிம்கள் பல கிறிஸ்தவர்களை சந்தித்து அவர்கள் மனதை குழப்பி, இயேசு தெய்வமில்லை, அவர் ஒரு தீர்க்கதரிசி மட்டும் தான் என்றுச் சொல்லி, வாலிப கிறிஸ்தவர்களை அல்லது அறியாமையில் இருப்பவர்களை முஸ்லிம்களாக மாற்றுகிறார்கள்.

பைபிள் பற்றியும், இயேசுவின் தெய்வீகத்தைப் பற்றியும் அறியாத கிறிஸ்தவர்கள் முஸ்லிம்கள் சொல்வதை நம்பிவிடுகிறார்கள். மேலும் முஸ்லிம்கள் சொல்வதை சரி பார்க்கும் அளவிற்கு இவர்களுக்கு பைபிளின் இறையியலும், குர்ஆனின் இறையியலும் தெரியாமல் இருப்பதினால், இவர்கள் இஸ்லாமை தழுவுகிறார்கள்.

ஆனால், நாட்கள் செல்லச்செல்ல, முஸ்லிம்கள் இஸ்லாம் பற்றிச் சொன்னவைகளையும், பைபிள் பற்றி சொன்னவைகளையும் ஆழமாக அறிய முற்படும் போது, இவர்களுக்கு உண்மை புரிய ஆரம்பிக்கிறது. முஹம்மது உலகத்திலேயே மிகவும் நல்லவர் என்று முஸ்லிம்கள் ஆரம்பத்தில் சொல்லியிருப்பார்கள், ஆனால், குர்ஆனையும் ஹதீஸ்களையும் இவர்கள் இஸ்லாமுக்குள் இருந்துக்கொண்டு அறியும் போது, இது பொய் என்பதை இவர்கள் உணர்ந்துக்கொள்கிறார்கள்.

முஹம்மது என்பவர் உண்மையாகவே ஒரு நபியாக இருக்கமுடியாது என்பதை அறிந்துக்கொள்கிறார்கள், இதே போன்று பைபிள் பற்றிய விவரங்களையும் அறியும் போது, எது சத்தியம் என்பதை இவர்கள் உணர்ந்துக்கொண்டு, கடைசியாக இஸ்லாமை விட்டு வெளியேறுகிறார்கள்.

இந்த நிலையை ஒரு ஆண் அடைந்தால், அவருக்கு சிறிதாவது இஸ்லாமை விட்டு வெளியேற வாய்ப்பு கிடைக்கும். ஆனால், ஒரு பெண் இப்படி இஸ்லாமுக்குச் சென்று மறுபடியும் கிறிஸ்தவளாக வரவேண்டுமென்றால் கடினம் தான். அதிலும், ஒரு முஸ்லிமை திருமணம் செய்துக்கொண்டு இருந்தால், அவளால் தன் முஸ்லிம் கணவனையும், பிள்ளைகளையும் விட்டு வருவது கடினமே.

பைபிளில் இதற்கு சான்று உள்ளதா? என்று கேட்டால், உள்ளது என்பது தான் பதில். பைபிளின் அடிப்படை கோட்பாடே "மனந்திரும்புங்கள்" என்பது தான். மனிதன் ஒரு விஷயத்தை நம்புகிறான், அதையே பின்பற்றுகிறான். தனக்கு சத்தியம் தெரிந்தபிறகு திரும்பி வருகிறான், இதைத் தான் இயேசு யோவான் 8:32ல் கீழ்கண்டவாறு கூறியுள்ளார்:

யோவான் 8:32. சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும் என்றார்.

இதனால் தான் "அறிவை உணர்த்தவும், சத்தியத்தை புரியவைக்கவும்" நான் இந்த கேள்வி பதில்களை எழுதிக்கொண்டு இருக்கிறேன்.



**கேள்வி 80: ஒரு கிறிஸ்தவர் முஸ்லிமாக மாறிவிட்டால், அவரை திருச்சபையில் தேவனை ஆராதிக்க அனுமதிப்பீர்களா?**

**பதில் 80:** இந்த கேள்வியில் பல குழப்பங்கள் உள்ளன.

ஒருவர் இஸ்லாமை தழுவும் போது, அவர் "அல்லாஹ் தான் இறைவன்" என்றும் இயேசு தெய்வம் இல்லை என்றும் அறிக்கை கொடுத்தபிறகு தான் முஸ்லிமாக மாறுகின்றார். இந்த நிலையில் அவர் கிறிஸ்தவ திருச்சபையில் என்ன செய்யப்போகிறார்? இயேசுவே தெய்வம் என்று பாடல் பாடமுடியுமா? இயேசுவை தொழுதுக்கொள்ளமுடியுமா? இல்லையல்லவா? எனவே இந்த கேள்வி தவறான கேள்வியாகும்.

ஒருவேளை நான் "இயேசுவை ஆராதிக்கமாட்டேன்" வெறும் திருச்சபையில் உட்கார்ந்துக்கொள்கிறேன் என்று ஒரு முஸ்லிம் சொன்னால், இதையும் ஏற்கமுடியாது, ஏனென்றால், அவர் சும்மா இருக்கமாட்டார் அல்லவா? திருச்சபை விசுவாசிகளை குழப்புவார் அல்லவா? தன் இஸ்லாமிய கோட்பாடுகளை நம்பிக்கைகளை, பைபிளுக்கு எதிரான கோட்பாடுகளை பரப்ப ஆரம்பிப்பார் அல்லவா? எனவே, இவர்களை தூரமாக வைப்பது தான் சரியானது.

ஒரு திருச்சபையில் முதிர்ச்சி அடைந்த விசுவாசிகள் இருப்பார்கள், பைபிள் பற்றிய ஆழமான அறிவு இல்லாதவர்கள் இருப்பார்கள், இஸ்லாம் பற்றி ஒரு சதவிகித விவரங்களும் தெரியாதவர்கள் இருப்பார்கள், ஒரு முஸ்லிமை திருச்சபையில் அமர அனுமதித்தால், அவர் குழப்பம் தான் உண்டாக்குவார்.

இதே நிலை எனக்கும் தான். என்னை ஒரு மசூதியில் இருக்கும் மக்களோடு உரையாட அனுமதித்தால், நான் நிச்சயம் இயேசு பற்றித் தான் சொல்லுவேன், இஸ்லாமை நிச்சயம் விமர்சிப்பேன்.

எனவே, சாதாரண விசுவாசிகளை, முஸ்லிம்களை முன்னாள் கிறிஸ்தவர் அல்லது முன்னாள் முஸ்லிமுக்கு தூரமாக வைப்பது நல்லது என்பது என் கருத்து.

## தலைப்பு: முஹம்மது (70 கேள்வி பதில்கள்)

**கேள்வி 1:** முஸ்லிம்கள் முஹம்மதுவை வணங்குகிறார்களா?

**பதில் 1:** இதற்கு இரண்டு பதில்கள் உண்டு.

முதலாவது பதில்: முஸ்லிம்களின் கூற்றின்படி, அவர்கள் அல்லாஹ்வைத் தான் தொழுதுக்கொள்கிறார்கள் முஹம்மதுவை அல்ல.

இரண்டாவது பதில்: ஆனால் முஸ்லிம்களை வெளியிலிருந்து காண்கின்றவர்களுக்கு, "முஸ்லிம்கள் முஹம்மதுவை வணங்குகிறார்களோ" என்ற எண்ணம் வருகிறது.

ஏன் முஸ்லிம்களைக் கண்டால் மற்றவர்கள் இப்படி கருதுகிறார்கள் என்று சிறிது யோசிக்கும் போது, "முஸ்லிம்கள் முஹம்மதுவிற்கு கொடுக்கின்ற அளவுக்கு அதிகமான முக்கியத்தும் தான், மற்றவர்களை இப்படி சிந்திக்க வைக்கிறதற்கு" காரணமாக இருக்கிறது. முஸ்லிம்கள் முஹம்மதுவை அணுவணுவாக பின்பற்றுவது, அவரை யாராவது அவமானப்படுத்தும் படி பேசினால், பேசுபவரை கொலை செய்வது அல்லது மிரட்டுவது போன்றவைகளை பார்ப்பவர்கள் இப்படி எண்ணுகிறார்கள்.

மூன்றாவது பதிலும் ஒன்று உள்ளது, இது சாதாரண மக்களுக்கு புலப்படாது. அது என்னவென்றால், குர்ஆனையும், ஹதீஸ்களையும் ஆய்வு செய்பவர்கள் "அல்லாஹ்விற்கு சமமாக முஹம்மது கருதப்பட்டு இருக்கிறார்" என்று அவர்கள் கண்டுபிடித்து இருப்பது தான் அது. இதைப் பற்றி ஒரு சில வரிகளில் எழுதமுடியாது, ஆய்வு கட்டுரைகளைத் தான் எழுதமுடியும், அதை எழுதும் போது, உங்களுக்கு அறிமுகம் செய்வேன். அதற்கு முன்பாக, இந்த சிறிய கட்டுரையை ஒரு முறை படித்துப்பாருங்கள்.

**இயேசுவின் ஹலால், முஹம்மதுவின் ஹராம் 6: முஹம்மது என்னும் முஸ்லிம்களின் விக்கிரகம்**



**கேள்வி 2:** முதல் 12 ஆண்டுகள் முஹம்மதுவும் முஸ்லிம்களும் எருசலேமை நோக்கியே தொழுதார்களா?

**பதில் 2:** ஆம், முஹம்மதுவிற்கு கிபி 610ல் முதல் குர்ஆன் வசனம் இறங்கிய காலம் தொடங்கி, அவர் மதினாவிற்கு ஹிஜ்ரி செய்த பிறகு கூட, 1.5 ஆண்டுகள் மதினாவில், அவரும் மற்றும் அனைத்து முஸ்லிம்களும் எருசலேமையே தங்கள் கிப்லா (வணக்க திசையாக) வைத்து தொழுகை புரிந்தார்கள்.

**கீழ்கண்ட வசனத்தின் மூலமாக கிப்லா மாற்றப்பட்டது:**

ஸூரா 2:144. (நபியே!) நாம் உம் முகம் அடிக்கடி வானத்தை நோக்கக் காண்கிறோம்; எனவே நீர் **விரும்பும் கிப்லாவின் பக்கம்** உம்மைத் திடமாக திருப்பி விடுகிறோம்; ஆகவே நீர் இப்பொழுது **(மக்காவின்) மஸ்ஜிதுல் ஹராம் பக்கம் உம் முகத்தைத் திருப்பிக் கொள்ளும்.** (முஸ்லிம்களே!) இன்னும் நீங்கள் எங்கிருந்தாலும் (தொழுகையின் போது) உங்கள் முகங்களை அந்த (கிப்லாவின்) பக்கமே திருப்பிக் கொள்ளுங்கள்; நிச்சயமாக எவர்கள் வேதம்

கொடுக்கப்பட்டிருக்கின்றார்களோ அவர்கள், இது அவர்களுடைய இறைவனிடமிருந்து வந்த உண்மை என்பதை நிச்சயமாக அறிவார்கள்; அல்லாஹ் அவர்கள் செய்வது பற்றிப் பராமுகமாக இல்லை.

**ஏன் கிப்லா மாற்றப்பட்டது?**

ஆரம்பத்தில் "யூதர்களும் கிறிஸ்தவர்களும்" தன்னை நபியாக ஏற்பார்கள் என்று முஹம்மது எதிர்ப்பார்த்தார். மக்காவில் இறங்கிய குர்ஆன் வசனங்கள் யூத கிறிஸ்தவர்களுக்கு சாதகமான வசனங்களாகவே பெரும்பான்மையாக இருந்தன.

நீங்கள் என்னதான் செய்தாலும் அற்புதம் செய்துக் காட்டவில்லையென்றால் நாங்கள் உம்மை நம்புவதாக இல்லை என்று ஒரே போடு போட்டார்கள் யூதர்கள். முஹம்மதுவிற்கும், அற்புதங்களுக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது. கிறிஸ்தவர்களோ, இயேசுவின் சிலுவை மரணம், மற்றும் உயிர்த்தெழுதலோடு ஃபெவிகால் இணைப்பு போன்று ஒட்டிக்கொண்டு இருந்தார்கள், முஹம்மது என்ன செய்தாலும், யூதர்களையும், கிறிஸ்தவர்களையும் இவரை நபியாக ஏற்பதாகத் தெரியவில்லை.

சரி, இனி இவர்களுடைய எருசலேமை நோக்கி ஏன் தொழவேண்டும்? "நாட்டமை தீர்ப்பை மாற்றிச்சொல்லுங்க" என்று அல்லாஹ்வை அடிக்கடி வேண்டிக்கொள்ள, இறங்கியது குர்ஆன் 2:144, மாறியது கிப்லா.



**கேள்வி 3:** முஹம்மது ஆபிரகாமின் மகனாகிய இஸ்மாவேலின் சந்ததியா?

**பதில் 3:** முஹம்மது இஸ்மாயீலின் (இஸ்மவேலின்) சந்ததியில் வந்தவர் அல்ல, இதற்கு சரித்திர ஆதாரங்கள் ஒன்றுமில்லை. இதுவரை கிடைத்துள்ள சான்றுகளின் படி, முஹம்மதுவிற்கும் இஸ்மவேலுக்கும் சம்மந்தமில்லை.

பல கிறிஸ்தவ தலைவர்கள், ஊழியர்கள் கூட இதனை அறியாமல், ஆபிரகாமின்/ஆகாரின் சந்ததி தான் முஹம்மது என்று சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள். இவர்கள் மீது கோபம் கொள்ளமுடியாது, ஏனென்றால், பெரும்பான்மையானவர்கள் சொல்வதைத் தான் அனேகர் நம்புகிறார்கள், ஆனால் ஆய்வுகள் வேறுவகையில் நம்மை கொண்டுச் செல்கிறது.

இந்த தலைப்பு பற்றிய யூடியூப் வீடியோக்கள்(தமிழ்) மற்றும் கட்டுரைகளை கீழே கொடுக்கப்பட்டுள்ள தொடுப்புக்களில் பார்க்கலாம்:

- **முஹம்மது நபி இஸ்மாயில் சமுதாயத்தில் வரவில்லை- குர்ஆன் சொல்லுகிறது:** (Youtube - Tamil)
- **முஸ்லீம்கள் இஸ்மவேல் சந்ததி அல்ல !!!! ஏன்????** (Youtube - Tamil)

- [**மைபிள் புகழும் இஸ்மவேல் (இது தான் இஸ்லாம் தள கட்டுரைக்கு): மறுப்புக் கட்டுரை**]
- [**பைபிள் புகழும் இஸ்மவேல் (இது தான் இஸ்லாம் தள கட்டுரைக்கு): மறுப்புக் கட்டுரை - பாகம் 2**]



**கேள்வி 4:** முஹம்மது அவர்கள் உயிரோடு இருக்கும் போது, ஹதீஸ்கள் எழுத்துவடிவில் கொண்டு வரப்பட்டதா?

**பதில் 4:** இல்லை, முஹம்மது அவர்கள் இன்று நாம் பயன்படுத்தும் எந்த ஒரு ஹதீஸ் தொகுப்பையும் அவர் பார்க்கவில்லை. அவரது மரணத்திற்கு 200 ஆண்டுகளுக்கு பிறகு தான் ஹதீஸ்கள் எழுத்து வடிவில் கொண்டுவரப்பட்டது. அதற்கு இடைப்பட்ட காலத்தில் சிலர் சில ஹதீஸ்களை எழுதிவைத்திருக்கலாம், ஆனால், அவைகளை முழுவதுமாக தொகுத்து வைத்தவர்கள் புகாரி போன்றவர்கள் தான்.

ஹதீஸ்கள் பற்றிய காலக்கட்ட விவரங்களை கீழ்கண்ட கட்டுரையில் படங்களின் மூலமாக சுலபமாக அறிந்துக்கொள்ளலாம்.

[**200+ ஆண்டுகள் மனிதர்கள் தன் வஹியை கறைப்படுத்த அல்லாஹ் ஏன் அனுமதித்தான் (ஹதீஸ்களின் நிலை)?**]



**கேள்வி 5:** முஹம்மதுவிற்கு எழுத படிக்க தெரியுமா?

**பதில் 5:** முஸ்லிம்களின் நம்பிக்கையின் படி முஹம்மதுவிற்கு எழுதப்படிக்கத்தெரியாது. ஆனால், ஹதிஸ்களை ஆய்வு செய்யும் போது, முஹம்மதுவிற்கு குறைந்த பட்சம் எழுதவும், படிக்கவும் தெரிந்திருக்க வேண்டும் என்று அறியமுடிகின்றது.

**ஸஹீஹ் புகாரி நூலில், எண் 7366ல் பதிவு செய்யப்பட்ட நிகழ்ச்சியை கவனித்தால், முஹம்மதுவிற்கு எழுதப்படிக்க தெரியும் என்று புரியும்.**

7366. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்கு இறப்பு நெருங்கிவிட்டபோது, அவர்களின் இல்லத்தில் உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்கள் உள்பட பலர் இருந்தனர். **அப்போது நபி(ஸல்) அவர்கள் 'வாருங்கள்; உங்களுக்கு நான் ஒரு மடலை எழுதித் தருகிறேன். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழிதவறமாட்டீர்கள்' என்றார்கள்.** உமர்(ரலி) அவர்களை (நோயின்) வேதனை மிகைத்துவிட்டது. (எழுதித் தருமாறு அவர்களை தொந்தரவு செய்யாதீர்கள்.) எங்களிடம் தான்

குர்ஆன் இருக்கிறதே! நமக்கு (அந்த) இறைவேதமே போதும்' என்றார்கள். வீட்டிலிருந்தவர்கள் கருத்து வேறுபட்டு சச்சரவிட்டுக் கொண்டார்கள். அவர்களில் சிலர், **'(நபியவர்கள் கேட்ட எழுது பொருளை அவர்களிடம்) கொடுங்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உங்களுக்கு ஒரு மடலை எழுதித் தருவார்கள்**. அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழிதவறமாட்டீர்கள்' என்றார்கள். வேறு சிலர் உமர்(ரலி) அவர்கள் சொன்னதையே சொன்னார்கள். நபி(ஸல்) அவர்களுக்கு அருகே மக்களின் கூச்சலும் குழப்பமும் சச்சரவும் மிகுந்தபோது நபி(ஸல்) அவர்கள், 'என்னைவிட்டு எழுந்து செல்லுங்கள்' என்றார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் (இந்த ஹதீஸை அறிவித்துவிட்டு), 'மக்கள் கருத்து வேறுபட்டு கூச்சலிட்டுக் கொண்டதால் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் **அவர்கள் எழுதித்தர நினைத்த மடலுக்கும் இடையே குறுக்கீடு ஏற்பட்டதுதான்** சோதனையிலும் பெரும் சோதனையாகும்' என்று கூறுவார்கள்.

உண்மையாகவே, முஹம்மதுவிற்கு எழுதவும், படிக்கவும் தெரியாமல் இருந்தால், 'நான் சொல்வதை கேளுங்கள்' என்று சொல்லி இருப்பார், எழுதித்தருகிறேன் என்றுச் சொல்லமாட்டார்.

இன்னும் சில சான்றுகள் உள்ளன, அவைகளை தேவையான கேள்விக்கு பதிலாக காண்போம்.



**கேள்வி 6:** முஹம்மதுவிற்கு ஒரு யூதப்பெண் விஷம் வைத்தை மாமிசத்தை கொடுத்தாளாமே! இது உண்மையா?

**பதில் 6:** ஆம், ஒரு யூதப்பெண் விஷயம் தோய்த்த உணவை முஹம்மதுவிற்கு கொடுத்தாள்.

இதனை ஸஹீஹ் புகாரி நூலில் காணலாம்: எண்: 4428, 4249 & 3169

4428. ஆயிஷா(ரலி) அறிவித்தார்: நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது, 'ஆயிஷாவே! **கைபரில் (யூதப் பெண்ணொருத்தியால் விஷம் கலந்து தரப்பட்ட) அந்த உணவை நான் உண்டதால் ஏற்பட்ட வேதனையை நான் தொடர்ந்து அனுபவித்து வருகிறேன்**. அந்த **விஷத்தின் காரணத்தால்** என் இருதய இரத்தக்குழாய் அறுந்து போவதை நான் உணரும் நேரமாகும் இது' என்று கூறினார்கள்.

4249. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்: கைபர் வெற்றி கொள்ளப்பட்டபோது இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு **விஷம் கலந்த ஆடு ஒன்று அன்பளிப்பாக தரப்பட்டது**.

மேலும் பார்க்க எண்: 3169.



**கேள்வி 7:** முஹம்மதுவின் மரணம் எதனால் உண்டானது? இயற்கையா? விஷமா? வியாதியா?

**பதில் 7:** ஒரு யூதப்பெண் கொடுத்த உணவை முஹம்மது உண்டதால், அது அவரை சிறிது சிறிதாக வேதனையை உண்டாக்கி கொன்றது. இதனை புகாரி ஹதீஸில் காணலாம். மேற்கண்ட கேள்விக்கான பதிலையும் படிக்கவும்.

இந்த ஹதீஸை முஹம்மதுவின் பிரியமான மனைவியாகிய ஆயிஷா அவர்கள் அறிவித்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

4428. ஆயிஷா(ரலி) அறிவித்தார்: நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது, 'ஆயிஷாவே! கைபரில் (யூதப் பெண்ணொருத்தியால் விஷம் கலந்து தரப்பட்ட) அந்த உணவை நான் உண்டதால் ஏற்பட்ட வேதனையை நான் தொடர்ந்து அனுபவித்து வருகிறேன். அந்த விஷத்தின் காரணத்தால் என் இருதய இரத்தக்குழய் அறுந்து போவதை நான் உணரும் நேரமாகும் இது' என்று கூறினார்கள்.



**கேள்வி 8:** எத்தனையாவது வயதில் முஹம்மது தன்னை நபி என்று பிரகடணப்படுத்தினார்?

**பதில் 8:** முஹம்மது தம்முடைய 40வது வயதில் தம்மை நபியாக பிரகடணப்படுத்தினார்.



**கேள்வி 9:** முஹம்மது எப்போது மரித்தார்?

**பதில் 9:** முஹம்மது தம்முடைய 63வது வயதில் மரித்தார். அவர் மரித்த சமயத்தில், பெரும்பான்மையான அரேபிய தீபகர்ப்பத்தை தம்முடைய கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து இருந்தார்.



**கேள்வி 10:** முஹம்மது எத்தனை யுத்தங்களில் பங்கு பெற்றார்?

**பதில் 10:** இந்த கேள்விக்கு அனேக பதில்கள் உள்ளன. யாரிடம் இந்த கேள்வியை கேட்போமோ, அவரைப் பொருத்து எண்ணிக்கை அமையும்.

**சராசரி முஸ்லிமின் பதில்:**

ஒரு சராசரி முஸ்லிமிடம் இந்த கேள்வியை கெட்டால், அவர் முழிப்பார். மனதுக்குள் "இது என்ன கேள்வி?", நம் நபி ஒரு யுத்தமும் செய்யவில்லையே என்று எண்ணுவார். இன்னும் சிலர், "ஒன்று அல்லது இரண்டு" என்றுச் சொல்லுவார்கள்.

**புகாரி ஹதீஸின்படி 19 போர்களில் முஹம்மது பங்கு பெற்றார்:**

புகாரி ஹதீஸ்: 3949. அபூ இஸ்ஹாக்(ரஹ்) அறிவித்தார்

நான் ஸைத் இப்னு அர்கம்(ரலி) அவர்களுக்கும் அருகிலிருந்தபோது, 'நபி(ஸல்) அவர்கள் புரிந்த போர்கள் எத்தனை?' என்று அவர்களிடம் வினவப்பட்டது. '**பத்தொன்பது**' என்று அவர்கள் பதிலளித்தார்கள். 'நபி(ஸல்) அவர்களுடன் நீங்களும் பங்கெடுத்த போர்கள் எத்தனை?' என்று வினவப்பட்டபோது, 'பதினேழு' என்றார்கள். 'இவற்றில் முதல் போர் எது?' என்று நான் அவர்களிடம் கேட்டேன். அவர்கள், 'உஸைரா' அல்லது 'உஷைர்' என்று பதிலளித்தார்கள்.

**சரித்திர புள்ளி விவரங்கள் (மொத்தம் 95 வன்முறைகள்):**

கீழ்கண்ட அட்டவணையைப் பார்க்கவும். முஹம்மது மதினாவில் வாழ்ந்த 10 ஆண்டுகளில் அவர் கட்டளையிட்ட வன்முறைகள் பட்டியலிடப்பட்டுள்ளன. மொத்தம் 95 வன்முறைகள் என்று புள்ளிவிவரங்கள் சொல்கின்றன.

10 ஆண்டுகளில், 95 வன்முறைகள் என்றால், ஒரு ஆண்டுக்கு 9.5 வன்முறைகள் என்று கணக்கு வருகின்றது. புரியும் படி சுருக்கமாகச் சொல்லவேண்டுமென்றால், முஹம்மது மதினாவிற்கு வந்த பிறகு ஒவ்வொரு ஆறு வாரங்களுக்கு (ஒன்றரை மாதத்தில்) ஒரு வன்முறையில் ஈடுபட்டுள்ளார்.

கீழ்கண்ட விக்கிபீடியா தொடுப்பில் முஹம்மதுவின் வன்முறைச் செயல்கள் 95ஐ வரிசைப் படுத்தி கொடுக்கப்பட்டுள்ளது. அதனை நான் ஹிஜ்ரி ஆண்டு வரிசையில் தயாரித்துள்ளேன். கிழேயுள்ள அட்டவணையை காணவும்.

| ஹிஜ்ரி ஆண்டு | மொத்தம் | முஹம்மது பங்கு பெற்றவைகள் | முஹம்மது பங்கு பெறாதவைகள் |
|---|---|---|---|
| 1 | 4 | 1 | 3 |
| 2 | 9 | 6 | 3 |
| 3 | 7 | 5 | 2 |
| 4 | 6 | 2 | 4 |
| 5 | 5 | 4 | 1 |
| 6 | 17 | 2 | 15 |
| 7 | 10 | 3 | 7 |
| 8 | 20 | 4 | 16 |
| 9 | 12 | 1 | 11 |
| 10 | 5 | 0 | 5 |
| மொத்தம் | 95 | 28 | 67 |

https://en.wikipedia.org/wiki/List_of_expeditions_of_Muhammad

Source: **List of expeditions of Muhammad – Wikipedia**

முஹம்மது மட்டும் பங்கு பெற்ற வன்முறைகளை கூட்டினால், அது 28 வருகின்றது. அதாவது மதினாவில் வாழ்ந்த 10 ஆண்டுகளில், முஹம்மது பங்கு பெற்ற வன்முறைகள் 28 ஆகும். மீதமுள்ள 67 வன்முறைகளில் முஹம்மது பங்கு பெறவில்லை, தம்முடைய சஹாபாக்களின் தலைமையில் சண்டையிடும் படி கட்டளையிட்டார்.

மூலம்: **முஹம்மது முதல் சிலுவைப்போர் வரை - வரைபடங்கள் மற்றும் விளக்கங்கள்: பாகம் 3**



**கேள்வி 11:** முஹம்மதுவின் தாய் தந்தை பெயர்கள் என்ன?

**பதில் 11:** முஹம்மதுவின் தாயின் பெயர் அமீனா மற்றும் தந்தையின் பெயர் அப்துல்லாஹ் ஆகும்.



**கேள்வி 12:** முஹம்மது பழைய ஏற்பாட்டையோ, புதிய ஏற்பாட்டையோ பார்த்திருக்கின்றாரா?

**பதில் 12:** முஹம்மது பழைய ஏற்பாட்டின் ஐந்தாகமங்களை(தோராவை) பார்த்ததாக ஹதீஸ்கள் சொல்கின்றன. முஹம்மது நபியாக மாறுவதற்கு முன்பு, மக்காவிலிருந்து சிரியாவிற்கு வியாபார பயணம் செய்யும் போது, அவர் அனேக கிறிஸ்தவர்களை, யூதர்களைக் கண்டு பேசியுள்ளார். அந்த நேரங்களில் அவர் புதிய ஏற்பாட்டையோ, அல்லது அதன் ஒரு பகுதியையோ பார்த்து இருந்திருக்கலாம். அந்த நேரத்தில் அவர் பைபிளை அரபியில் கண்டு இருந்திருந்தால், ஒரு பிரதியை வாங்கிக்கொண்டு மக்காவிற்கு வந்திருப்பார்,

இப்படி நடந்திருந்தால், உலகம் இன்று காண்பது போன்று இல்லாமல், வேறு மாதிரியாக இருந்திருக்கும்.

சரியான நேரத்தில் சரியான மொழியாக்கங்கள் இல்லாமல்போனால், விளைவுகள் படுமோசமாக இருக்கும் என்பதை உணர்ந்ததால் தான், நான் தமிழ் மொழியில் கட்டுரைகளை மொழியாக்கம் செய்து பதிக்க ஆரம்பித்தேன். தமிழ் மொழியில் இஸ்லாம் கிறிஸ்தவம் பற்றிய விழிப்புணர்வு உண்டாக்கப்படவேண்டும்.



**கேள்வி 13:** கிறிஸ்தவர்கள் முஹம்மதுவை நபி (தீர்க்கதரிசி) என்று நம்புகிறார்களா?

**பதில் 13:** இஸ்லாம் பற்றி அடிப்படை அறிவு கிடைக்காதவர்கள், முஹம்மதுவை ஒரு நபி / தீர்க்கதரிசி என்று நம்புவார்கள். இஸ்லாம் பற்றி அறிந்தவர்கள் 'முஹம்மது ஒரு கள்ள நபி என்று' நம்புவார்கள். முஹம்மதுவை பைபிளின் நபிமார்களின் வரிசையில் வைத்து பார்க்க பைபிள் அனுமதிப்பதில்லை.

"முஹம்மது ஏன் ஒரு தீர்க்கதரிசி ஆகமுடியாது" என்று கிறிஸ்தவர்கள் கருதுகிறார்கள் என்ற கட்டுரையை கீழே கொடுத்துள்ளேன். இந்த கட்டுரையில் ஒவ்வொரு காரணத்திற்கும் குர்ஆன், ஹதீஸ்கள் மற்றும் பைபிளிலிருந்து சான்றுகள் முன்வைக்கப்பட்டுள்ளது. குர்ஆன் மற்றும் ஹதீஸ்களில் இதுவரை படிக்காத விவரங்கள் இந்த கட்டுரையில் உள்ளது.

**101 காரணங்கள்: முஹம்மது ஒரு கள்ளத்தீர்க்கதரிசி என்று கிறிஸ்தவர்கள் கருதுவது ஏன்?**



**கேள்வி 14:** எழுத படிக்க தெரியாத ஒருவர் சிறப்பாக வியாபாரம் செய்யமுடியுமா? அப்படியானால், முஹம்மது எப்படி வியாபாரத்தை சிறப்பாகச் செய்தார்?

**பதில் 14:** எழுதுக்களை பேப்பரில் எழுதமுடியவில்லையென்றாலும், எழுதியதை கூட்டிகூட்டி படிக்கமுடிந்தவரால் தான் சிறப்பாக வியாபாரம் செய்யமுடியும்.

வியாபாரம் என்று வந்தால், கூட்டல் கழித்தல், பெருக்கல், வகுத்தல் என்ற குறைந்தபட்ச கணக்கு போடத்தெரியவேண்டும். வியாபார ஒப்பந்தங்கள் எழுதப்படும் போது, சரியாகத் தான் எழுதுகின்றார்களா? அல்லது ஏமாற்றுகின்றாரா என்பதை எப்படி அறியமுடியும்? எந்நேரமும் ஒரு படித்தவரை கூட வைத்துக்கொள்ளலாம், ஆனால் அந்த நபரே இவரை ஏமாற்றமாட்டார் என்று நம்புவது எப்படி?

குறைந்தபட்சம் முஹம்மதுவிற்கு கூட்டிக்கூட்டி படிக்கவோ, எழுதவோ தெரிந்திருக்கவேண்டும், மேலும் கணக்கு விஷயத்தில் அவருக்கு கூட்டல் கழித்தல் பெருக்கல், வகுத்தல் தெரிந்திருக்கவேண்டும்.



**கேள்வி 15:** முஹம்மதுவின் பெயர் குர்ஆனில் எத்தனை முறை வருகிறது?

**பதில் 15:** முஹம்மது என்ற பெயர் குர்ஆனில் 4 முறை வருகிறது, அஹமது என்ற பெயர் ஒரு முறை வருகிறது.

**கீழ்கண்ட வசனங்களை பார்க்கவும்:**

1. ஸூரா 3:144 - முஹம்மது
2. ஸூரா 33:40 - முஹம்மது
3. ஸூரா 47:2 - முஹம்மது
4. ஸூரா 48:29 - முஹம்மது
5. ஸூரா 61:6 - அஹமது



**கேள்வி 16:** முஹம்மதுவை 100% முஸ்லிம்கள் பின்பற்ற முடியுமா?

**பதில் 16:** முஹம்மதுவை முஸ்லிம்கள் 100% பின்பற்ற முடியாது.



**கேள்வி 17:** முஹம்மதுவை 100% முஸ்லிம்கள் பின்பற்றும்படி குர்ஆன் முஸ்லிம்களுக்கு கட்டளையிடுகின்றதா?

**பதில் 17:** இல்லை, முஸ்லிம்கள் முஹம்மதுவை 100% பின்பற்றக்கூடாது என்பதில் குர்ஆன் மிகவும் எச்சரிக்கையாக உள்ளது.

முஸ்லிம்களுக்கு ஒரு வகையான கட்டளைகள், முஹம்மதுவிற்கு வேறு வகையான கட்டளைகள் குர்ஆனில் அல்லாஹ் கொடுத்துள்ளான். எப்போதெல்லாம் முஹம்மதுவிற்கு மட்டும் தனிப்பட்ட சலுகைளை கொடுக்கும்போது, இக்கட்டளைகள் முஹம்மதுவிற்கு பிரத்யோகமாக கொடுக்கப்பட்டவை, முஸ்லிம்களுக்கு இல்லை என்று அல்லாஹ் கூறிவிடுகின்றான். அப்படியானால், அந்த கட்டளைகளை முஸ்லிம்கள் பின்பற்றக்கூடாது என்று தானே பொருள், அதன்படி முஹம்மதுவை முஸ்லிம்கள் 100% பின்பற்றமுடியாதே!

**இது முஸ்லிம்களுக்கு மட்டும் கொடுக்கப்பட்ட கட்டளை (முஹம்மது இக்கட்டளையை பின்பற்றமுடியாது):**

4:3. அநாதை(ப் பெண்களைத் திருமணம் செய்து அவர்)களிடம் நீங்கள் நியாயமாக நடக்க முடியாது என்று பயந்தீர்களானால், உங்களுக்குப் பிடித்தமான பெண்களை மணந்து கொள்ளுங்கள் - **இரண்டிரண்டாகவோ, மும்மூன்றாகவோ, நன்னான்காகவோ**; ஆனால், நீங்கள் (இவர்களிடையே) நியாயமாக நடக்க முடியாது என்று பயந்தால் ஒரு பெண்ணையே (மணந்து கொள்ளுங்கள்), அல்லது உங்கள் வலக்கரங்களுக்குச் சொந்தமான (ஓர் அடிமைப் பெண்ணைக் கொண்டு) போதுமாக்கிக் கொள்ளுங்கள் - இதுவே நீங்கள் அநியாயம் செய்யாமலிருப்பதற்குச் சுலபமான முறையாகும்.

**முஹம்மதுவிற்கு மட்டும் கொடுக்கப்பட்ட விதி விலக்கு (முஸ்லிம்கள் இக்கட்டளையை பின்பற்றமுடியாது):**

33:50. நபியே! எவர்களுக்கு நீர் அவர்களுடைய மஹரை கொடுத்து விட்டீரோ அந்த உம்முடைய மனைவியரையும், உமக்கு(ப் போரில் எளிதாக) அல்லாஹ் அளித்துள்ளவர்களில் உம் வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்டவர்களையும், நாம் உமக்கு ஹலாலாக்கி இருக்கின்றோம்; அன்றியும் உம் தந்தையரின் சகோதரர்களின் மகள்களையும், உம் தந்தையரின் சகோதரிகள் மகள்களையும், உம் மாமன் மார்களின் மகள்களையும், உம் தாயின் சகோதரிமாரின் மகள்களையும் - இவர்களில் யார் உம்முடன் ஹிஜ்ரத் செய்து வந்தார்களோ அவர்களை (நாம் உமக்கு விவாகத்திற்கு ஹலாலாக்கினோம்); அன்றியும் முஃமினான ஒரு பெண் நபிக்குத் தன்னை அர்ப்பணித்து, நபியும் அவளை மணந்து கொள்ள விரும்பினால் அவளையும் (மணக்க நாம் உம்மை அனுமதிக்கின்றோம்); **இது மற்ற முஃமின்களுக்கன்றி உமக்கே (நாம் இத்தகு உரிமையளித்தோம்; மற்ற முஃமின்களைப் பொறுத்தவரை) அவர்களுக்கு அவர்களுடைய மனைவிமார்களையும், அவர்களுடைய வலக்கரங்கள் சொந்தமாக்கிக் கொண்டவர்களையும் பற்றி நாம் கடமையாக்கியுள்ளதை நன்கறிவோம்;** உமக்கு ஏதும் நிர்ப்பந்தங்கள் ஏற்படாதிருக்கும் பொருட்டே (விதி விலக்களித்தோம்); மேலும் அல்லாஹ் மிக மன்னிப்பவன்; மிக்க அன்புடையவன்.



**கேள்வி 18:** முஹம்மது மக்காவில் மதினாவில் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்தார்?

**பதில் 18:** முஹம்மது மக்காவில் 12-13 ஆண்டுகள், மதினாவில் 10 ஆண்டுகள் வாழ்ந்தார்.



**கேள்வி 19:** முஹம்மது மது அருந்தினாரா?

**பதில் 19:** மது தடை சட்டம் வரும் வரை முஹம்மதுவும், முஸ்லிம்களும் நன்றாக மது அருந்தினார்கள்.

எந்த அளவிற்கு மது அருந்தினார்கள் என்றால், அவர்கள் தொழுகையில் போதை தலைக்கு ஏறி, உளர ஆரம்பித்துவிட்டார்கள், அந்த அளவிற்கு **'குடி'மக்களாக** முஸ்லிம்கள் இருந்தார்கள்.

**கீழ்கண்ட ஸூராவை கவனிக்கவும், நான் நான்கு தமிழாக்கங்களில் கொடுத்துள்ளேன், படியுங்கள், தெளிவு உண்டாகும்:**

**டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்:**

4:43. நம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் ஓதுவது இன்னது என்று நீங்கள் அறிந்து கொள்ள முடியாதவாறு நீங்கள் போதையில் இருக்கும்போது தொழுகைக்கு நெருங்காதீர்கள்; . . ..

**அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:**

4:43. நம்பிக்கையாளர்களே! நீங்கள் கூறுவது இன்னதென்று நீங்கள் அறிந்துகொள்ள முடியாதவாறு நீங்கள் போதையாயிருக்கும் சமயத்தில் தொழுகைக்குச் செல்லாதீர்கள். அன்றி, நீங்கள் முழுக்காயிருந்தால் குளிக்கும் வரையிலும் (தொழுகைக்குச் செல்லாதீர்கள்.). . .

**இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:**

4:43. இறைநம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் போதையோடிருக்கும் நிலையில் தொழுகையை நெருங்காதீர்கள்; நீங்கள் என்ன கூறுகின்றீர்கள் என்பதை அறிகின்ற போதுதான் தொழ வேண்டும்.. .

**மன்னர் ஃபஹத் வளாகம் (சவூதி) தமிழாக்கம்:**

4:43. விசுவாசங்கொண்டோரே! நீங்கள் போதையுடையோராகயிருக்கும் நிலையில், நீங்கள் கூறுவது இன்னதென்று நீங்கள் அறிந்து கொள்ளும் வரை, தொழுகைக்கு நெருங்காதீர்கள், . . .



**கேள்வி 20:** முஹம்மதுவிற்கு மிகவும் பிரியமான மனைவி யார்?

**பதில் 20**: முஹம்மதுவிற்கு அவரது மூன்றாவது மனைவியாகிய ஆயிஷா என்றால் மிகவும் பிரியம்.

ஏன் இந்த மனைவியென்றால் அவருக்கு பிரியம்? யாருக்குத் தெரியும், அவரை தான் கேட்கவேண்டும்.

ஒரு வேளை, இவருக்கு 53 வயது இருக்கும் போது, ஆயிஷா அவர்களுக்கு 9 வயது இருக்கும் போது திருமணமானதால், இவர் அவருக்கு பிரியமானவராக இருக்கலாம்.

இரண்டாவதாக, இவர் திருமணம் செய்த மற்ற மனைவிகள் அனைவரும், ஏற்கனவே திருமணமாகி கணவரோடு வாழ்ந்தவர்கள், ஆயிஷா அவர்கள் மட்டும் தான் திருமணம் செய்யும் போது கன்னியாக (உண்மையைச் சொன்னால், சிறுமியாக) இருந்தார்கள். இதுவும் ஒரு காரணமாக இருக்கலாம். அல்லாஹ் நோஸ் த பெஸ்ட்.



**கேள்வி 21:** முஹம்மதுவை கிறிஸ்தவர்கள் நபி என்று அடைமொழியோடு அழைக்கலாமா?

**பதில் 21:** முஹம்மதுவை கள்ளத்தீர்க்கதரிசி என்று பைபிள் அடையாளப்படுத்தும் போது, முஹம்மதுவின் பெயரை குறிப்பிடும் போது, 'நபி முஹம்மது அல்லது தீர்க்கதரிசி முஹம்மது' என்று கிறிஸ்தவர்கள் சொல்லக்கூடாது.

யாராவது அப்படி அழைத்தால், அதற்கு காரணம் பழக்கதோஷத்தால் 'முஹம்மது நபி' என்று அழைத்துவிடுவதுண்டு, அல்லது தங்கள் முஸ்லிம் நண்பர்களின் மனதை ஏன் புண்படுத்தவேண்டும் என்று நினைத்து 'முஹம்மது நபி' என்று அழைப்பதுண்டு.

இந்த இரண்டும் இல்லாமல் சிலர், அறியாமையினால் 'முஹம்மது நபி' என்றுச் சொன்னால் தப்பில்லை என்று நினைப்பவர்கள் இருந்தால், அவர்களுக்காகத் தான் இந்த தொடர் கேள்வி பதில்கள் 1000.



**கேள்வி 22:** முஹம்மதுவின் பெயரை உச்சரிக்கும் போது ஏன் முஸ்லிம்கள் (ஸல்) அல்லது அவர் மீது சாந்தி உண்டாகட்டும் என்றுச் சொல்கிறார்கள்?

**பதில் 22:** அல்லாஹ் முஸ்லிம்களுக்கு இப்படி அவர் மீது கூறுங்கள் என்றுச் சொன்னதால், முஸ்லிம்கள் 'அவர் மீது சாந்தி உண்டாகட்டும்' என்றுச் சொல்கிறார்கள்.

ஸூரா 33:56. இந்த நபியின் மீது அல்லாஹ் அருள் புரிகிறான். மலக்குகளும் அவருக்காக அருளைத் தேடுகின்றனர். முஃமின்களே நீங்களும் அவர் மீது ஸலவாத்து சொல்லி அவர் மீது ஸலாமும் சொல்லுங்கள்.



**கேள்வி 23:** முஹம்மது ஒரு ஆன்மீகத்தலைவரா? அல்லது ஆட்சித்தலைவரா?

**பதில் 23:** அவர் இரண்டு பதவிகளையும் வகிக்கிறார்.

இஸ்லாமிய நாடுகளில், மார்க்க தலைவர்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதற்கும் இதுவும் ஒரு காரணமாகும். பிரதமருக்கும், ஜனாதிபதிக்கும் இல்லாத அதிகாரம் ஆன்மீக தலைவருக்கு முஸ்லிம் நாடுகளில் இருப்பதும் இதனால் தான்.



**கேள்வி 24:** முஹம்மது மதினாவிற்கு உயிர் தப்பிச் சென்ற போது (ஹிஜ்ரத்), அவரோடு கூடச் சென்ற அவரது தோழர் யார்?

**பதில் 24:** முஹம்மதுவோடு உயிர் தப்பி மதினாவிற்கு (ஹிஜ்ரத்) செய்தது அவரது தோழர், அபூ பக்கர் ஆவார். இவர் தான் முஹம்மதுவிற்கு பிறகு முதல் கலிஃபாவாக பதவி ஏற்றார்.



**கேள்வி 25:** எந்த குகையில் முஹம்மதுவிற்கு முதலாவது குர்ஆன் வசனம் இறங்கியதாக நம்பப்படுகின்றது?

**பதில் 25:** ஹிரா என்ற குகையில் அவருக்கு முதலாவது குர்ஆன் வசனம் இறங்கப்பட்டதாக நம்பப்படுகின்றது.



**கேள்வி 26:** மக்காவில் இருந்த போது முஹம்மது எத்தனை போர்களை புரிந்தார்?

**பதில் 26:** இல்லை, மக்காவில் இருந்த போது முஹம்மது ஒரு போரிலும் ஈடுபடவில்லை, பல தொல்லைகளை அவர் மக்கா மக்களிடம் அனுபவித்தார்.



**கேள்வி 27:** ஏன் அவர் மக்காவில் இருந்த போது எதிர்த்து சண்டையிடவில்லை? போரிடவில்லை?

**பதில் 27:** ஒரு தனி மனிதன் எப்படி சண்டையிடமுடியும்? எதிரி பலமுள்ளவனாக இருக்கும் போது, எப்படி அவர் எதிர்த்து போராடமுடியும்?

முஹம்மது கிட்டத்தட்ட 12-13 ஆண்டுகள் இஸ்லாமிய தாவா பணி செய்து, சில நூறு மக்களை மட்டுமே முஸ்லிம்களாக சம்பாதிக்கமுடிந்தது. ஆனால், அவரது எதிரிகள் அனேகராக இருந்தார்களே! எனவே, மக்காவில் முஹம்மது அமைதிப்

புறாவாக வலம் வந்தார். அடிப்பவனை திருப்பி அடிக்கவில்லை, அடிக்கவில்லை என்றுச் சொல்வதைவிட, திருப்பி அடிக்கமுடியவில்லை என்றுச் சொல்வது தான் சரியானதாக இருக்கும். யானைக்கு ஒரு காலம் வந்தால், பூனைக்கும் காலம் வரும் என்பதை அவர் அறிந்திருந்தாரோ என்னவோ. அவரது உயிரை எடுக்க முடிவு செய்தபோது, பயந்து ஹிஜ்ரத் செய்தார்.

அதிகார பலமும், ஆள் பலமும் மதினாவில் சேர்ந்தவுடன், அனைவரை விளாசினார், தலைகள் உருண்டன, வியாபாரக்கூட்டங்கள் கொள்ளையடிக்கப்பட்டன. பழிக்கு பழி கூட்டுவட்டியோடு வசூல் செய்தார், போதாகுறைக்கு மற்ற நாடுகளும் டிவிடெண்ட் கொடுக்கவேண்டியதாக ஆகிவிட்டது.

மக்காவில் முஹம்மது ஒரு சமாதானவாதி, மதினாவில் முஹம்மது ஒரு சர்வாதிகாரி.



**கேள்வி 28:** முஹம்மது தன் வளர்ப்பு மகனின் மனைவியை திருமணம் செய்துக்கொண்டார் என்கிறார்களே, இது உண்மையா?

**பதில் 28:** இருநூறு சதவிகிதம் உண்மை.

பார்க்க ஸூரா 33:37:

33:37. (நபியே!) எவருக்கு அல்லாஹ்வும் அருள் புரிந்து, நீரும் அவர் மீது அருள் புரிந்தீரோ, அவரிடத்தில் நீர்: "அல்லாஹ்வுக்குப் பயந்து நீர் உம் மனைவியை (விவாக விலக்குச் செய்து விடாமல்) உம்மிடமே நிறுத்தி வைத்துக் கொள்ளும்" என்று சொன்ன போது அல்லாஹ் வெளியாக்க இருந்ததை, மனிதர்களுக்குப் பயந்து நீர் உம்முடைய மனத்தில் மறைத்து வைத்திருந்தீர்; ஆனால் அல்லாஹ் அவன் தான், நீர் பயப்படுவதற்குத் தகுதியுடையவன்; ஆகவே ஜைது அவளை விவாக விலக்கு செய்துவிட்ட பின்னர் நாம் அவளை உமக்கு மணம் செய்வித்தோம்; ஏனென்றால் முஃமின்களால் (சுவீகரித்து) வளர்க்கப்பட்டவர்கள், தம் மனைவிமார்களை விவாகரத்துச் செய்து விட்டால், அ(வர்களை வளர்த்த)வர்கள் அப்பெண்களை மணந்து கொள்வதில் யாதொரு தடையுமிருக்கக் கூடாது என்பதற்காக (இது) நடைபெற்றே தீர வேண்டிய அல்லாஹ்வின் கட்டளையாகும்.



**கேள்வி 29:** வேறொரு சுவிசேஷத்தை ஒருவன் உங்களுக்குப் பிரசங்கித்தால் அவன் சபிக்கப்பட்டவனாயிருக்கக்கடவன், என்று பைபிள் சொல்வது முஹம்மதுவிற்கு பொருந்துமா?

**பதில் 29:** நிச்சயமாக பொருந்தும் ஏனென்றால், முஹம்மது இயேசுவைப் பற்றி வேறு ஒரு சுவிசேஷம் சொன்னார், அதனால், முஹம்மதுவிற்கு 500 ஆண்டுகளுக்கு முன்பு பரிசுத்த ஆவியானவர் எழுதிவைத்த வசனங்கள் முஹம்மது மீது நிறைவெறியது:

பொது மொழிப்பெயர்ப்பில் முதலாவது படியுங்கள்: எவ்வளவு அழகாக முஹம்மதுவிற்கு பொருந்துகிறது என்பதை கவனியுங்கள்.

கலாத்தியர் 1:7-9:

7 உண்மையில் வேறு ஒரு நற்செய்தி என்பது இல்லை. ஆனால் சிலர் உங்களைக் குழப்பிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கிறிஸ்துவின் நற்செய்தியை மாற்றிவிட விரும்புகிறார்கள். 8 நாங்கள் உங்களுக்கு உண்மையான நற்செய்தியைக் கூறினோம். எனவே நாங்களோ அல்லது வானத்திலிருந்து வந்த ஒரு தேவதூதனோ வேறொரு நற்செய்தியை உங்களுக்குக் கூறினால் அவன் கடிந்துகொள்ளப்பட வேண்டும். 9 நான் ஏற்கெனவே இதனைச் சொன்னேன். அதனை இப்போது மறுபடியும் கூறுகின்றேன். நீங்கள் ஏற்கெனவே உண்மையான நற்செய்தியை ஏற்றுக்கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் இரட்சிக்கப்படுவதற்கு வேறு வழியை எவரேனும் உங்களுக்குக் கூறினால் அவன் கடிந்துகொள்ளப்பட வேண்டும்.

**பைபிள் சொசைடி மொழியாக்கம்:**

7. வேறொரு சுவிசேஷம் இல்லையே; சிலர் உங்களைக் கலகப்படுத்தி, கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தைப் புரட்ட மனதாயிருக்கிறார்களேயல்லாமல் வேறல்ல. 8. நாங்கள் உங்களுக்குப் பிரசங்கித்த சுவிசேஷத்தையல்லாமல், நாங்களாவது, வானத்திலிருந்து வருகிற ஒரு தூதனாவது, வேறொரு சுவிசேஷத்தை உங்களுக்குப் பிரசங்கித்தால், அவன் சபிக்கப்பட்டவனாயிருக்கக்கடவன். 9. முன் சொன்னதுபோல மறுபடியும் சொல்லுகிறேன்; நீங்கள் ஏற்றுக்கொண்ட சுவிசேஷத்தையல்லாமல் வேறொரு சுவிசேஷத்தை ஒருவன் உங்களுக்குப் பிரசங்கித்தால் அவன் சபிக்கப்பட்டவனாயிருக்கக்கடவன்.



**கேள்வி 30:** பைபிளின் படி முஹம்மது யார்?

**பதில் 30:** பைபிளின் அடிப்படையில் ஆய்வு செய்தால், முஹம்மது ஒரு கள்ளத்தீர்க்கதரிசி ஆவார். பழைய ஏற்பாட்டின் படியும், புதிய ஏற்பாட்டின் படியும் முஹம்மது யெகோவா தேவனால் அனுப்பப்பட்ட தீர்க்கதரிசி அல்ல.



**கேள்வி 31**: எங்கள் நபி முஹம்மது அவர்கள் சொன்னவைகளில் உங்களுக்கு பிடித்தமான கட்டளைகளை மட்டும் நீங்கள் பின்பற்றலாமே! ஏன் அவரை முழுவதுமாக புறக்கணிக்கிறீர்கள்?

**பதில் 31:** அருமை முஸ்லிம் நண்பரே, பிடித்தமான கட்டளைகளை பின்பற்றுவதற்கு, அல்லது பிடிக்காதவற்றை விட்டுவிடுவதற்கு முஹம்மது என்ன சினிமா நடிகரா? முஹம்மது என்பவர் இறைவனுடைய வழியைக் காட்டக்கூடிய இடத்தில் இருக்கிறார். நம்முடைய நித்திய வாழ்க்கை யார் மீது சார்ந்துள்ளதோ, அவர் காட்டும் வழி முழுமை அடைந்த ஒன்றாக இருக்கவேண்டும்.

முஹம்மது காட்டும் வழிகளில் சிலவற்றை பின்பற்றி, சிலவற்றை பின்பற்றாமல் இருப்பதற்கு அவர் உலகப்பிரகாரமான தலைவர் அல்ல. அவர் ஒரு ஆன்மீகத் தலைவர், எனவே அவரை நாம் பின்பற்றினால் 100% பின்பற்றவேண்டும் அல்லது 100% புறக்கணிக்கவேண்டும்.



**கேள்வி 32**: இஸ்லாமின் பெயரில் பயங்கரவாத செயல்களில் ஈடுபடுபவர்களை பார்த்து, இஸ்லாமை எடை போடாதீர்கள், முஹம்மதுவின் செயல்களைப் பார்த்து எடை போடுங்கள்.

**பதில் 32**: இது சரியான கூற்றாகும்.

இஸ்லாமை நாம் முஹம்மதுவின் செயல்களின் அடிப்படையில் எடை போடவேண்டும். முஹம்மதுவின் செயல்களை அடிப்படையாகக் கொண்டு எடைபோடும் போது 'இஸ்லாம் ஒரு வன்முறை மார்க்கம்' என்று நிருபிக்கப்படுகின்றது என்பது தான் முஸ்லிமல்லாத உலக மக்களின் குற்றச்சாட்டு.

**முதலாவதாக**, இஸ்லாமின் அடிப்படையாக கருதப்படும் முஹம்மதுவின் வாழ்க்கையை ஆய்வு செய்யும் போது, மேற்கண்ட நிலைப்பாட்டுக்குத் தான் வரவேண்டியுள்ளது.

**இரண்டாவதாக**, "குர்ஆன் மற்றும் ஹதீஸ்களின்" அடிப்படையில் இஸ்லாமை எடைபோடுகிறோம். குர்ஆனிலும், ஹதீஸ்களிலும் கட்டளையிடப்பட்டவைகள் இன்றைய நவீன உலகிற்கு ஏற்றதாக உள்ளதா? மனித சமுதாயத்தை அடுத்த நிலைக்கு அவைகள் கொண்டுச் செல்கின்றனவா? அவைகளை பின்பற்றினால் நாட்டில் வீட்டில் அமைதி நிலவுமா? போன்ற கேள்விகள் கேட்கப்பட்டு, அவைகளில் பதில்களைத் தேடி, அவைகளின் அடிப்படையில் இஸ்லாமை எடை போடுகிறோம்.

**மூன்றாவதாக**, முஹம்மதுவிற்கு பிறகு ஆட்சி புரிந்த நான்கு கலிஃபாக்களின் செயல்களை கவனிக்கும் போது, அவர்கள் நாடுகளை பிடிக்க காட்டிய ஆர்வம், ஆன்மீகத்தில் காட்டவில்லை என்று சரித்திரம் சாட்சியிடுகிறது.

**படம் 1: இஸ்லாமை எதன் அடிப்படையில் எடை போடுவது**




**நான்காவதாக**, இன்றைய தேதிகளில் இஸ்லாமின் பெயரில் பயங்கரவாத செயல்களை செய்பவர்களை கவனிக்கும் போது, அவைகள் முஹம்மதுவின் செயல்களோடு ஒத்துப்போகிறதை பார்க்கமுடியும். முஹம்மதுவின் வாழ்க்கையை கணக்கில் கொண்டுவிட்ட பிறகு, இன்றைய முஸ்லிம்களின் வாழ்க்கையை கணக்கில் கொள்ளத்தேவையில்லை, இவ்விரண்டும் ஒன்று தான்.

ஆக, இன்றைய முஸ்லிம்களின் செயல்பாடுகள், இரண்டாம் தரம் தான். குர்ஆனும், முஹம்மதுவும் முதல் நான்கு கலிஃபாக்களும் தான் இஸ்லாமை சரியான வெளிச்சத்தில் காட்டக்கூடிய கண்ணாடிகள்.



**கேள்வி 33**: யூதர்கள் முஹம்மதுவை நபி (தீர்க்கதரிசி) என்று நம்புகிறார்களா?

**பதில் 33**: எந்த யூதர்கள்? முஹம்மதுவின் கால யூதர்களா? அல்லது இன்றைய யூதர்களா?

முஹம்மதுவின் காலத்தில் ஒரு சில யூதர்கள் இஸ்லாமை தழுவி அவரோடு இருந்தார்கள். ஆனால்,பெரும்பான்மையான யூதர்கள் முஹம்மதுவை நபி என்று நம்பவில்லை.

இதற்கு காரணமென்ன?

1) முஹம்மதுவின் நபித்துவத்தை நிரூபிக்கும் படி, 'அற்புதங்கள் தேவை' என்று யூதர்கள் கேட்டார்கள், ஆனால், முஹம்மதுவோ, அல்லாஹ்வோ அற்புதங்களை செய்துக் காட்டவில்லை

முஹம்மது வாழ்ந்த அந்த ஏழாம் நூற்றாண்டில், மக்கா மற்றும் மதினா பகுதிகளில் குறைஷிகள், யூதர்கள், கிறிஸ்தவர்கள் மற்றும் இதர மக்கள் வாழ்ந்தனர். இம்மக்களுக்கு 'தாம் ஒரு நபி' என்று முஹம்மது நிரூபிக்கவேண்டி இருந்தது.

### அன்றைய யூதர்களின் நிலை:

'முஹம்மதுவை நபி' என்று யூதர்கள் நம்பவேண்டுமென்றால், அவர் முந்தைய நபிகளைப்போல அற்புதங்கள் செய்யவேண்டுமென்று அவர்கள் கேட்டனர், இதனை அல்லாஹ் குர்-ஆனில் கீழ்கண்டவாறு சொல்லிக்காட்டுகின்றான். மேலும் 'நான் ஒரு மனிதன் மட்டுமே' இப்படிப்பட்ட அற்புதங்கள் செய்யமுடியாது என்று யூதர்களுக்கு பதிலாகச் சொல்லும் படி முஹம்மதுவிற்கு கட்டளையிடுகின்றான்.

**குர்-ஆன் 17:90-93**

17:90. இன்னும், அவர்கள் கூறுகிறார்கள்: "**நீர் எங்களுக்காகப் பூமியிலிருந்து ஒரு நீர் ஊற்றைப் பீறிட்டு வரும்படி செய்யும் வரையில், உம் மீது நாங்கள் நம்பிக்கை கொள்ள மாட்டோம்**. 17:91. "அல்லது பேரீச்சை மரங்களும், திராட்சைக் கொடிகளும் (நிரப்பி) உள்ள தோட்டம் ஒன்று உமக்கு இருக்க வேண்டும். அதன் நடுவே ஆறுகளை நீர் ஒலித்தோடச் செய்ய வேண்டும்...... 17:93. "அல்லது ஒரு தங்கமாளிகை உமக்கு இருந்தாலன்றி (உம் மீது நம்பிக்கை கொள்ளோம்); அல்லது வானத்தின் மீது நீர் ஏறிச் செல்ல வேண்டும், (அங்கிருந்து) எங்களுக்காக நாங்கள் படிக்கக் கூடிய ஒரு (வேத) நூலை நீர் கொண்டு வந்து தரும் வரையில், நீர் (வானத்தில்) ஏறியதையும் நாங்கள் நம்ப மாட்டோம்" என்று கூறுகின்றனர். "**என் இறைவன் மிகத் தூயவன், நான் (இறைவனுடைய) தூதனாகிய ஒரு மனிதனே தவிர வேறெதுவுமாக இருக்கின்றேனா?**" என்று (நபியே! நீர் பதில்) கூறுவீராக. (முஹம்மது ஜான் தமிழாக்கம்)

### யூதர்கள் தன்னை நபியாக ஏற்கவில்லை என்ற கோபத்தினால்:

1. எருசலேமை நோக்கி (கிப்லா) முஸ்லிம்கள் அதுவரை தொழுதுக்கொண்டு வந்திருந்தனர், அதனை மக்காவிற்கு மாற்றினார் முஹம்மது.
2. அரேபியாவில் இருந்த யூத இனக்குழுக்கள் மீது திடீர் தாக்குதல் செய்து அவர்களை அடிமைகளாக்கி, கொன்று குவித்து மற்றும் ஊரை விட்டு துரத்தினார்.
3. இப்படி முஹம்மதுவினால் தன் குடும்பத்தை இழந்த ஒரு பெண், உணவில் விஷம் வைத்து முஹம்மதுவிற்கு கொடுத்துவிட்டாள்.

## இன்றைய யூதர்களின் நிலை:

இன்றைய யூதர்கள் அன்றைய யூதர்களைவிட புத்திசாலிகளாக இருக்கிறார்கள். மேலும், இஸ்லாமிய நாடுகளும், முஸ்லிம்களும் இஸ்ரேல் நாட்டுக்கு எதிராக இருப்பதினால், இவர்கள் மிகவும் தெளிவாக இருக்கிறார்கள். முஹம்மதுவை நபி என்று இவர்கள் நம்புவதில்லை.



**கேள்வி 34**: முஹம்மதுவின் மனைவிகள் பெயர்கள் யாவை? முஹம்மது திருமணங்கள் செய்த போது அவரது வயது என்னவாக இருந்தது?

**பதில் 34**: கீழ்கண்ட அட்டவணையில் முஹம்மதுவின் 11 மனைவிகளின் பெயர்களும், அவர்களின் திருமண ஆண்டுகளும், மேலும் முஹம்மதுவின் வயதும் கொடுக்கப்பட்டுள்ளது.

**முஹம்மதுவின் மனைவிகள் பெயர்களும் ஆண்டு விவரங்களும்**

| எண் | முஹம்மதுவின் மனைவிகளின் பெயர் | திருமண ஆண்டு கி.பி. | முஹம்மதுவின் வயது |
|---|---|---|---|
| 1 | கதிஜா பிந்த் குவைலித் | 595 | 25 |
| 2 | ஸவ்தா பிந்த் ஜமா | 620 | 50 |
| 3 | ஆயிஷா பிந்த் அபூபக்கர் | 620/623 | 53 |
| 4 | ஹஃப்ஸா பிந்த் உமர் | 625 | 55 |
| 5 | ஜைனப் பிந்த குஜைமா | 625 | 55 |
| 6 | ஹிந்த் (உம் சலமா) பிந்த் அபூஉமய்யா | 626 | 56 |
| 7 | ஜைனப் பிந்த ஜைஷ் | 627 | 57 |
| 8 | ஜுவரிய்யா பிந்த் அல்ஹரித் | 628 | 58 |
| 9 | ரம்லா (உம் ஹபீபா) பிந்த் அபூசுஃப்யான் | 628 | 58 |
| 10 | ஸஃபிய்யா பிந்த் ஹுயய் | 628 | 58 |
| 11 | மைமுனா பிந்த் அல்ஹரித் | 629 | 59 |

Source: **wikiislam.net/wiki/List_of_Muhammads_Wives_and_Concubines**



**கேள்வி 35:** முஹம்மது செக்ஸ் அடிமைகள் (வைப்பாட்டிகள்) வைத்திருந்தாரா? எங்கள் நபி இப்படி செய்யமாட்டார்!

**பதில் 35:** முஹம்மதுவிற்கு வைப்பாட்டிகள் இருந்தனர்.

செக்ஸ் அடிமைகளை வைத்துக்கொள்வது என்பது குர்ஆனுக்கு எதிரானது அல்ல. குர்ஆனே இதற்கு அனுமதி அளித்துள்ளது.

இப்னு கய்யிம் (Ibn al-Qayyim) என்ற இஸ்லாமிய சரித்திர ஆசிரியர், முஹம்மதுவிற்கு நான்கு பெண் அடிமைகள் இருந்ததாகவும், 27 ஆண் அடிமைகள் இருந்ததாகவும் கூறுகிறார். இந்த ஆண் அடிமைகளில் சிலரை அவர் விடுதலையும் செய்துள்ளார்.

| எண் | முஹம்மதுவின் அடிமைப் பெண்களின் பெயர் | ஆண்டு கி.பி. | முஹம்மதுவின் வயது |
|---|---|---|---|
| 1 | ரெஹானா பிந்த் ஜைத் இப்னு அமர் | 627 | 57 |
| 2 | மரியா பிந்த் ஷமூன் அல் குப்தியா | 629 | 59 |
| 3 | அல் ஜரியா | 627 | 57 |
| 4 | துகனா அல் குறைஜியா | 632 | 62 |

Source: **wikiislam.net/wiki/List_of_Muhammads_Wives_and_Concubines**

**1) ரெஹானா பிந்த் ஜைத் இப்னு அமர்:**

கி.பி. 627ல் பனு குரைய்ஜா என்ற யூத குனக்குழுவினரை முஹம்மது தாக்கி, 600 லிருந்து 900 வரையுள்ள ஆண்களை கொன்றார். அவர்களின் பெண்கள் மற்றும் பிள்ளைகளை அடிமைகளாக எடுத்துக்கொண்டார். இந்த நேரத்தில் அந்த யூத இனக்குழுவினரின் தலைவரின் மனைவியாகிய ரிஹானாவை தன் வைப்பாட்டியாக (செக்ஸ் அடிமையாக) எடுத்துக்கொண்டார்.

சில முஸ்லிம்களின் கூற்றுப்படி, ரிஹானாவை முஹம்மது திருமணம் செய்துக்கொள்ள கேட்டதாகவும், ஆனால் ரிஹானா மறுத்துவிட்டு, ஒரு யூதப்பெண்ணாகவே வாழ்ந்தார் என்றும் கூறுகிறார்கள். இன்னொரு இஸ்லாமிய கூற்றுப்படி, ரிஹானா முஹம்மதுவை திருமணம் செய்துக்கொண்டதாகவும், ரிஹானாவின் விடுதலை தான் முஹம்மது கொடுத்த மஹர் என்றும் கூறுகிறார்கள்.

- **www.answering-islam.org/Green/slavery.htm**
- **en.wikipedia.org/wiki/Rayhana_bint_Zayd**

**2) மரியா பிந்த் ஷமூன் அல் குப்தியா**

மரியா எகிப்திலிருந்து முஹம்மதுவுக்கு பரிசாக அனுப்பப்பட்ட ஒரு காப்டிக் பெண்ணாவாள். இந்த பெண்ணுக்கும் முஹம்மதுவிற்கும் ஒரு மகன் பிறந்தான் (இப்றாஹீம்), ஆனால் அக்குழந்தை இரண்டு வயதில் இறந்தார். முஹம்மது

மரியாவை திருமணம் செய்துக்கொள்ளவில்லை, ஆனால், அவரோடு உடலுறவு கொண்டார்.

இதைப் பற்றி மேலும் அறிய கீழ்கண்ட கட்டுரைகளை படிக்கவும்.

- www.answering-islam.org/Shamoun/mary_concubine.htm
- www.answering-islam.org/Responses/Osama/umar_mary.htm
- www.answering-islam.org/Responses/Osama/umar_mary2.htm
- www.answering-islam.org/Responses/Osama/umar_mary3.htm
- www.answering-islam.org/Responses/Osama/umar_mary4.htm
- www.answering-islam.org/Responses/Osama/umar_mary5.htm

**3) அல் ஜரியா**

இஸ்லாமிய சரித்திர ஆசிரியர் இப்னு அல் கய்யும் (Ibn al-Qayyim, Za'd al-Ma'ad 1:114.) என்பவரின் படி, ஜரியா 'ஜைனப் பிந்த் ஜாஷ்' இன் அடிமையாக இருந்தார். அவர் முஹம்மதுவிற்கு வைப்பாட்டியாக இருந்தாராம். மேலும், மற்ற மனைவிகளிடம் போவது போன்று ஒரு குறிப்பிட்ட நாளை இப்பெண்ணுக்காக அவர் ஒதுக்கவில்லையாம். தேவைப்படும் போது முஹம்மது இப்பெண்ணோடு உடலுறவு கொண்டுள்ளார்.

Source: **wikiislam.net/wiki/List_of_Muhammads_Wives_and_Concubines**

**4) துகனா அல் குறைஜியா**

முஹம்மது குறைய்ஜா மக்களை ஆக்கிரமித்த போது, இந்த பெண்ணை தன்னுடைய அடிமையாக எடுத்துக்கொண்டார். இப்பெண்ணும் அவருடைய வலக்கரத்து சொந்தமான செக்ஸ் அடிமையாவாள். தனக்கு தேவைப்படும் போதும் இப்பெண்ணிடம் முஹம்மது சென்றுள்ளார். முஹம்மது மரித்த பிறகு இந்த பெண்ணை அப்பாஸ் அவர்கள் திருமணம் செய்துக்கொண்டுள்ளார்கள்.

Source: **wikiislam.net/wiki/List_of_Muhammads_Wives_and_Concubines**

**Wikipedia: Abbas ibn Abd al-Muttalib:**

"Tukana, a Jewish woman from the Qurayza tribe and a former concubine of Muhammad, whom Abbas married after 632.[21] It is not known whether any of the children were hers." Source: **en.wikipedia.org/wiki/Abbas_ibn_Abd_al-Muttalib**

**தற்கால முஸ்லிம்களின் நிலையை இந்த கட்டுரையில் படிக்கவும்: குவைத் அரசியல் தலைவி அறிவிப்பு - செக்ஸ் அடிமைகளை இஸ்லாமிய ஆண்கள் சட்டப்படி வைத்துக்கொள்ளலாம்**



**கேள்வி 36**: எத்தனை பெண்களோடு முஹம்மது திருமணம் ஒப்பந்தம் செய்துக்கொண்டு, பிறகு சில காரணங்களுக்காக ஒப்பந்தங்களை முறித்துப்போட்டார்?

**பதில் 36:** முஹம்மதுவிற்கு 11 மனைவிகள் இருந்தார்கள் என்று முஸ்லிம்கள் கூறுகிறார்கள். மேலும் இப்னு கய்யிம் என்ற சரித்திர ஆசிரியரின் படி 4 பெண் அடிமைகள் இருந்ததாக அறிகிறோம்.

இவைகளை விடுத்து, இன்னும் பல திருமணங்கள் புரிவதற்கு முஹம்மதுவிற்கு ஒப்பந்தங்கள் வந்தன, அவைகளை அவர் ஒப்புக்கொண்டார், ஆனால் திருமணத்திற்கு முன்பாக சில காரணங்களுகாக அந்த திருமண ஒப்பந்தங்களை அவர் முறித்துப்போட்டார்.

இப்படி முஹம்மது எத்தனை திருமண ஒப்பந்தங்களை முறித்தார்? போன்ற விவரங்களை காண்போம் (இந்த விவரங்களை இஸ்லாமிய சரித்திர நூல்களிலிருந்தும், ஹதீஸ்களிலிருந்தும் எடுக்கப்பட்டுள்ளது:

**Engagements and Broken Contracts**
**முஹம்மதுவின் முறிக்கப்பட்ட திருமணம் ஒப்பந்தங்கள்**

| எண் (No) | பெயர் (Name) | ஆண்டு (Year) | இஸ்லாமிய நூல்கள் (Notable early sources) |
|---|---|---|---|
| 1 | கஜியா - Ghaziya (Umm Sharik) bint Jabir | Early 627. | Ibn Hisham[68], Al-Tabari[69], Ibn Sa'd[70] |
| 2 | கௌலா - Khawla bint Hudhayl | mid- or late-627. | Al-Tabari[71], Ibn Sa'd[72] |
| 3 | ஷரஃப் - Sharaf bint Khalifa | mid- or late-627. | Al-Tabari[73], Ibn Sa'd[74] |
| 4 | லைலா - Layla bint al-Khutaym | After 627. | Al-Tabari[75], Ibn Sa'd[76] |
| 5 | உம் ஹபீப் - Umm Habib bint Al-Abbas | After March 630. | Ibn Ishaq.[77], Al-Tabari.[78], Ibn Sa'd.[79] |
| 6 | ஸனா - Sana *al-Nashat* bint Rifaa (Asma) ibn As-Salt | April 630. | Al-Tabari[80], Ibn Sa'd[81] |
| 7 | உம்ரா - Umra bint Rifaa | May 630. | Ibn Sa'd[82] |
| 8 | பிந்த் ஜுந்தப் - Bint Jundub ibn Damra of Janda'a | Unknown. | Ibn Sa'd[83] |
| 9 | ஜம்ரா -Jamra bint Al-Harith | 631 | Al-Tabari[84] |
| 10 | அல்-ஷன்பா - Al-Shanba' bint Amr | January 632. | Al-Tabari[85] |
| 11 | குதைலா - Qutayla (Habla) bint Qays | May 632. | Al-Tabari[86], Ibn Sa'd[87] |

Source: https://wikiislam.net/wiki/List_of_Muhammads_Wives_and_Concubines

மூலம்: **wikiislam.net/wiki/List_of_Muhammads_Wives_and_Concubines**



**கேள்வி 37**: முஹம்மது திருமண ஒப்பந்தங்களை முறித்ததற்கு காரணங்கள் யாவை?

**பதில் 37:** முந்தைய கேள்வியில் முஹம்மது முறித்த 11 திருமண ஒப்பந்த பட்டிலைக் கண்டோம். இந்த பதிலில் அவைகளுக்கான காரணங்களைக் காண்போம்.

**1) கஜியா - Ghaziya (Umm Sharik) bint Jabir**

இப்பெண் ஒரு ஏழை விதவையாக இருந்தார், இவருக்கு பிள்ளைகளும் இருந்தனர். இவர் முஹம்மதுவுக்கு திருமண செய்ய தன் விருப்பத்தை தெரித்து அவருக்கு ஒப்பந்த முன்மொழிவை அனுப்பினார். முஹம்மது இந்த ஒப்பந்தத்தை ஒப்புக்கொண்டார். இருப்பினும், அவர் அப்பெண்ணை நேரில் சந்தித்தபோது, அவர் கவர்ச்சிகரமானவராக இருந்தாலும், அவர் "வயதானவர்" என்பதைக் கண்டார், முஹம்மது உடனடியாக அவளை விவாகரத்து செய்தார், அதாவது தன் முந்தைய ஒப்பந்தத்தை முறித்துக்கொண்டார். அப்பெண் கடைசிவரை மறுமணம் செய்து கொள்ளவில்லை. இந்த நிகழ்ச்சியின் போது (கிபி 627) முஹம்மதுவின் வயது 57 ஆகும். (மூலம்: தபரி, இப்னு ஹிஷாம் மற்றும் இப்னு ஸைத் - Ibn Hisham[68], Al-Tabari[69], Ibn Sa'd[70])

**சிந்திக்க சில கேள்விகள்:**

1. ஏற்கனவே முஹம்மதுவிற்கு நான்கு/ஐந்து மனைவிகள் இருந்துள்ளார்கள், இருந்தபோதிலும் இன்னொரு பெண்ணை திருமணம் செய்ய இவருக்கு விருப்பமிருந்துள்ளது.
2. முஹம்மதுவிற்கு 57 வயது, இருந்தபோதிலும் இவருக்கு இளமையான மனைவி தேவையாக இருந்துள்ளது.
3. அந்த பெண்ணுக்கு வறுமையின் நிர்பந்தம், தன் பிள்ளைகளுக்கு உண்வு/உடை/இருப்பிடம் மற்றும் பாதுகாப்பிற்காக திருமணம் தேவைப்பட்டுள்ளது, ஆனால் முஹம்மதுவிற்கு ஏற்கனவே சில மனைவிகள் இருந்த போதும் ஏன் இன்னும் திருமணம் செய்ய ஆசை?
4. முஹம்மதுவின் ஒவ்வொரு திருமணத்திற்கும் ஒரு அரசியல் காரணம் இருக்கும் என்று முஸ்லிம்கள் கூறுவார்கள், இந்த பெண்ணை திருமணம் செய்ய முஹம்மது ஒப்புக்கொண்டதற்கு எந்த அரசியல் காரணம் நமக்கு கிடைக்கும்?
5. ஒரு வேளை அப்பெண்ணின் அனாதை பிள்ளைகளுக்கு ஆதரவு அளிப்பதாக நினைத்தாலும், அப்பெண்ணுக்கு வயதாகிவிட்டது என்று ஏன் முஹம்மது புறக்கணித்தார்?
6. கவனிக்கவும், முஹம்மதுவிற்கு 57 வயது ஆகியிருந்தது, அந்தப்பெண் "வயதானவர்" என்று சரித்திரம் கூறுவதினால், அப்பெண்ணுக்கு ஒருவேளை 57க்கும் அதிகமான வயது இருக்குமோ என்று எண்ணவேண்டாம். முஹம்மது திருமணம் செய்துக்கொண்ட அனைவரும் 9 வயதிலிருந்து 40 வயதுக்குள்ளானவர்கள் தான். ஒரு வேளை

இப்பெண்ணின் வயது 40க்கும் 50க்கும் இடையே இருக்கும், எனவே இவருக்கு பிடிக்கவில்லை. தனக்கு மட்டும் 57 வயது இருக்கும் போது இளம் கட்டழகிகள் தேவையான இருந்துள்ளது.

**2) கௌலா - Khawla bint Hudhayl**

இப்பெண் வடக்கு அரேபியாவில் சக்திவாய்ந்த கிறிஸ்தவ தக்லிப் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு மன்னனின் மகள் (இளவரசி). இப்பெண்ணின் பெரியப்பா (அ) சித்தப்பா இத்திருமணத்தை ஏற்பாடு செய்தார். இது இரு தரப்பிலும் அரசியல் ரீதியாக சாதகமாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. முஹம்மது இந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார், ஆனால் அவர்கள் நேரில் சந்திப்பதற்கு முன்பு கௌலா மதீனாவிற்கு செல்லும் பயணத்தின் போது இறந்துவிட்டாள்.

இப்பெண் இயற்கையாக மரித்துவிட்டதால் முஹம்மதுவின் திருமணம் ஒப்பந்தம் இயற்கையாக முறிந்துவிட்டது. (மூலம்: தபரி, இப்னு ஸைத் - Al-Tabari[69], Ibn Sa'd[70])

**3) ஷரஃப் - Sharaf bint Khalifa**

இவர் கௌலாவின் அத்தையாவாள் (மேலே பார்த்த கௌலா). கௌலா இறந்த பிறகு, அவர்களின் குடும்பத்தினர் ஷரப் என்ற இப்பெண்ணை கௌலாவிற்கு பதிலாக முஹம்மதுவிற்கு திருமணம் செய்ய முயற்சித்தனர். ஒரு இஸ்லாமிய பாரம்பரியத்தின் படி, ஷரப் என்ற இந்த பெண்ணும், திருமணத்திற்கு முன்பே இறந்துவிட்டார். மற்றொரு இஸ்லாமிய பாரம்பரியத்தில், முஹம்மது தனது எண்ணத்தை மாற்றி ஒப்பந்தத்தை முறித்துக் கொண்டார் என்று கூறப்படுகின்றது. (மூலம்: தபரி, இப்னு ஸைத் - Al-Tabari[69], Ibn Sa'd[70])

**4) லைலா - Layla bint al-Khutaym**

இஸ்லாமிய சரித்திர அறிஞர் தபரி "The History of Al-Tabari: The Last Years of the Prophet " என்ற முஹம்மதுவின் சரித்திரத்தில் கீழ்கண்ட நிகழ்ச்சியை குறிப்பிடுகிறார்.

முஹம்மது தெருவில் நடந்துச் சென்றுக்கொண்டு இருக்கும்போது, லைலா என்ற ஒரு பெண் அவருக்கு பின்னால் சென்று பின்பக்கத்திலிருந்து அவரது தோல்பட்டையில் தட்டுகிறாள். அவர் திரும்பி பார்த்ததும். என்னை திருமணம் செய்துக்கொள்கிறாயா? என்று கேட்கிறாள். அதற்கு "**நான் உன்னை திருமணம் செய்துக்கொள்கிறேன்**", என்றுச் சொல்லி தன் சம்மதத்தை முஹம்மது அளிக்கிறார். இந்தப் பெண் மறுபடியும் தன் ஜனங்களிடம் சென்று "முஹம்மதுவை நான் திருமணம் செய்துக்கொள்கிறேன், அவர் இதற்கு சம்மதம் என்று கூறினார்" என்று கூறுகிறாள். இதற்கு அம்மக்கள் "நீ ஒரு நல்ல குடும்பத்துப் பெண், **ஆனால் முஹம்மது ஒரு பெண் பித்து பிடித்தவர்**", இப்படிப்பட்டவரை நீ திருமணம் செய்துக்கொள்வது சரியானது அல்ல. எனவே, அவரிடம் சென்று, இந்த திருமணத்தில் தனக்கு விருப்பமில்லை என்றுச் சொல்லி, அவரிடமிருந்து விலகி

வந்துவிடு" என்று கூறினார்கள். இந்தப் பெண்ணும் அப்படியே முஹம்மதுவிடம் சென்று, தனக்கு விருப்பமில்லை, இந்த ஒப்பந்தத்தை முறித்துவிடுங்கள் என்று கூறுகிறாள், முஹம்மதுவும் இதற்கு ஒப்புதல் அளித்துவிடுகிறார்.

Source: (The History of Al-Tabari: The Last Years of the Prophet, translated and annotated by Ismail K. Poonawala [State University of New York Press, Albany, 1990], Volume IX, p. 139; bold emphasis ours)

இந்த லைலா நிகழ்ச்சி பற்றிய முழு விவரங்களை அறிய கீழ்கண்ட தமிழ் கட்டுரையை படிக்கவும்: **முஹம்மது, பெண் பித்து பிடித்தவரா? லைலா ஏன் அவரை மணமுடிக்கவில்லை?**

**5) உம் ஹபீப் - Umm Habib bint Al-Abbas (AD 630)**

இப்பெண் முஹம்மதுவின் உறவினர். இப்பெண் குழந்தையாக இருந்த நேரத்தில் (1 வயது இருக்கலாம்), தவழ்ந்து வந்துக்கொண்டு இருந்தார், இதைப் பார்த்த முஹம்மது: "இவள் வளர்ந்து பெரியவள் ஆகும் போது, நான் உயிருடன் இருந்தால், நான் இவளை திருமணம் செய்து கொள்வேன்" என்று குறிப்பிட்டார்.

அதன் பிறகு அக்குழந்தையின் தந்தை, இவருக்கு சகோதரர் முறை (foster-brother) என்பதால் மனதை மாற்றிக்கொண்டார், இது மட்டுமல்லாமல் சில ஆண்டுகளில் முஹம்மது மரித்துவிட்டார். (மூலம்: இப்னு இஷாக், தபரி மற்றும் இப்னு ஸைத் - Ibn Ishaq[77], Al-Tabari[69], Ibn Sa'd[70])

**சிந்திக்க சில கேள்விகள்:**

1) முஹம்மதுவிற்கு 60 வயது ஆகிறது, அப்போது ஒரு சொந்தக்காரரர் வீட்டில் ஒரு வயது குழந்தை தவழ்ந்து விளையாடிக்கொண்டு இருப்பதைப் பார்த்த போது முஹம்மது கூறியதை கண்டீர்களா?

2) குழந்தைகளைப் பார்த்தல், எடுத்து முத்தம் கொடுக்கத் தோன்றும் இது சாதாரணமானதே, ஆனால், நம் இஸ்லாமிய இறைத்தூதர் என்ன செய்தார்? அக்குழந்தை வளர்ந்து பெரியவள் ஆகும் போது, இவர் திருமணம் செய்துக்கொள்வாராம். இது சும்மா வேடிக்கையாகச் சொல்லப்பட்டதல்ல, முஹம்மது உயிரோடு இருந்திருந்தால், அல்லது அக்குழந்தையின் தந்தை வேறு நபராக இருந்திருந்தால், தனக்கு 70 வயது ஆகியிருந்தாலும் சரி, அந்த 9 வயது சிறுமியை (பெரியவளாகி இருந்தால்) திருமணம் செய்து இருந்திருப்பார் முஹம்மது.

3) இப்படிப்பட்ட அருமையான எடுத்துக்காட்டு வாழ்க்கையை முஹம்மது வாழ்ந்ததால் தான், இன்றும் முஸ்லிம் நாடுகளில் 70+ வயதான முஸ்லிம்கள், சிறுமிகளை திருமணம் செய்துக்கொள்ளும் நிகழ்ச்சிகளை பார்க்கமுடிகிறது. இப்படிப்பட்ட சமுதாய கொடுமைகளுக்கு விதை போட்டது, முஹம்மது ஆவார்.

4) இதனால் தான் மற்ற முஸ்லிம்கள் (80 வயது கிழவன் வந்தாலும் சரி) வீட்டுக்கு வரும் போது, தன் ஒரு வயது குழந்தைக்கும் புர்கா, நிகாஃப் போட்டு உடலை முழுவதுமாக மறைக்கிறார்கள் இன்றைய முஸ்லிம்கள். தவழும் குழந்தையைப் பார்த்தும் சபலம் கொள்ளும் முஹம்மது போன்று மற்ற ஆண்களும் இருப்பார்கள் என்று எண்ணி இப்படி முஸ்லிம்கள் செய்கிறார்கள்.

5) நாம் சாலையில் செல்லும்போது, கைக்குழந்தைக்கும் புர்கா போட்டு, நிகாஃப் போட்டு, வெறும் கண்கள் மட்டும் தெரியும் வண்ணம் உடை அணிவித்து முஸ்லிம்கள் குடும்பமாக செல்வதை கண்டு இருப்பீர்கள், இது ஏன் என்று இப்போது உங்களுக்கு புரிகின்றதா? இப்படிப்பட்ட அவல நிலைக்கு அனேக குடும்பங்கள் குழந்தைகள் முஸ்லிம் நாடுகளில் பலியாகின்றன.

**6) ஸனா - Sana al-Nashat bint Rifaa (Asma) ibn As-Salt**

முஹம்மதுவின் போராளி ஒருவரின் மகள் தான் இவர். இவர் தன் மகள் ஸனாவை முஹம்மதுவிற்கு திருமணம் செய்யக்கொடுத்து, அவருக்கு மாமனார் ஆகிவிடலாம் என்று எண்ணினார். மேலும் இதன் மூலம் முஹம்மதுவிற்கு நெருங்கிய உறவினர் ஆகிவிடலாம், தன் வாழ்க்கைத் தரமும் இதனால் உயருமென்று விரும்பினார். முஹம்மதுவும் இந்த திருமண ஒப்பந்தத்திற்கு ஒப்புக்கொண்டார். ஆனால் திருமணத்திற்கு முன்பு ஸமா மரித்து விட்டார், இதனால் முஹம்மதுவின் மனைவியாகும் வாய்ப்பை இழந்தார்.

இந்த திருமண ஒப்பந்தமானது, முஹம்மதுவிற்கு 60 வயதின் போது நடந்தது.

**7) உம்ரா - Umra bint Rifaa**

இந்த உம்ரா என்பவர் மேலே கண்ட ஸனாவின் சகோதரி ஆவார். ஸானா இறந்த பிறகு, அவளின் தந்தை உம்ராவை முஹம்மதுவிற்கு திருமணம் செய்ய ஆர்வம் காட்டினார். இந்த திருமணத்தையும் முஹம்மது ஒப்புக்கொண்டார்(திருமண பேச்சு வந்தால், இல்லை என்று முஹம்மது சொல்லவே மாட்டாரா?). ஆனால் பின்னர் அவர் தனது எண்ணத்தை மாற்றிக்கொண்டார், ஏனென்றால் "உம்ரா தனது வாழ்க்கையில் ஒரு நாள் கூட நோய்வாய்ப்படவில்லை என்று" அவளின் தந்தை பெருமையாக கூறினார்.

**8) பிந்த் ஜுந்தப் - Bint Jundub ibn Damra of Janda’a**

முஹம்மது இப்பெண்ணோடு திருமண ஒப்பந்தம் செய்துக்கொண்டார், ஆனால் திருமண நாளுக்கு முன்பு முஹம்மது திருமண ஒப்பந்தத்தை முறித்துக் கொண்டார் என்பதைத் தவிர இந்த பெண்ணைப் பற்றி வேறு எதுவும் தெரியவில்லை.

**9) ஜம்ரா -Jamra bint Al-Harith**

இப்பெண் முஹம்மதுவை திருமணம் செய்துக்கொள்வதாக கேட்டாள், முஹம்மதுவும் இவளை திருமணம் செய்ய ஒப்புக்கொண்டார். இதன் பிறகு இப்பெண்ணின் தந்தை முஹம்மதுவிடம், 'என் மகளுக்கு ஒரு தீராத நோய் உள்ளது' என்று கூறினார். அதன்பின் முஹம்மது நிச்சயதார்த்தத்தை முறித்துக் கொண்டார். முஸ்லீம் வரலாற்றாசிரியர்களின் கூற்றுப்படி, அப்பெண்ணின் தந்தை இப்படி முஹம்மதுவிடம் சொல்லிவிட்டு, வீட்டிற்குச் சென்றார், அப்போது அவரது மகள் தொழுநோயால் பாதிக்கப்பட்டதைக் கண்டார் என்று சொல்கிறார்கள்.

இந்த முஸ்லிம் அறிஞர்கள் என்ன சொல்லவருகிறார்கள் என்றால், "முஹம்மதுவோடு தன் மகளுக்கு திருமணம் நடக்க விரும்பாத அப்பெண்ணின் தகப்பன், முஹம்மதுவிடம் பொய் சொன்னான், ஆனால் அவர் வீட்டிற்குச் சென்ற போது அப்பெண்ணுக்கு அந்த நோயை அல்லாஹ் கொடுத்தான்" என்று சொல்ல வருகிறார்கள்.

அறுபது வயது நிரம்பிய தன் நபிக்கு பெண் கொடுக்க விருப்பாதபடியினால் தான் அல்லாஹ் அந்த நோயை கொடுத்தான் என்றுச் சொல்வது எவ்வளவு கீழ்தரமாக உள்ளது பாருங்கள்.

**10) அல்-ஷன்பா - Al-Shanba' bint Amr**

இவர் ஒரு அரேபிய பழங்குடியினத்தைச் சேர்ந்த பெண். இவர் முஹம்மதுவுடன் நட்பாக இருக்க விரும்பினார். திருமணம் செய்யவும் ஒப்பந்தம் செய்திருந்தாள். அதே வேளையில் இவள் குறைய்ஜா என்ற வேறு ஒரு பழங்குடியினரின் நண்பராகவும் இருந்தார். ஒரு நாள், இப்பெண் "முஹம்மது உண்மையான நபி அல்ல" என்று வேடிக்கையாக கூறினார், இது முஹம்மதுவை அவமானப்படுத்துவது போன்று இருந்தது. உடனே முஹம்மது இப்பெண்ணை திருமணம் செய்ய மறுத்துவிட்டார்.

இந்த நிகழ்ச்சி முஹம்மதுவின் கடைசி ஆண்டில் நடந்தது, அதாவது அவருக்கு அப்போது 63 வயது இருந்தது. முஹம்மது சாகும் வரை யார் வந்து கேட்டாலும் தாராளமாக திருமண ஒப்பந்தம் செய்ய, விருப்பமுள்ளவராகவே இருந்தார்.

**11) குதைலா - Qutayla (Habla) bint Qays**

இப்பெண் அஸ்மா பின்த் அல்நுமன் என் பெண்ணின் உறவினர் ஆவாள். யெமன் நாட்டு தலைவர் நுமனுக்கு பதிலாக இந்த பெண்ணை மாற்று மணமகளாக முஹம்மதுவுக்கு திருமணம் செய்ய்ய விரும்பினார்கள். முஹம்மது திருமண ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார், ஆனால் இப்பெண் மதினாவிற்கு வருவதற்கு முன்பு முஹம்மது 632ல் இறந்துவிட்டார். முஹம்மது இறந்துவிட்டார் என்று இப்பெண் கேள்விப்பட்டவுடன், அவள் இஸ்லாத்திலிருந்து வெளியேறிவிட்டாள். சீக்கிரத்திலேயே இன்னொரு அரபி தலைவரை இப்பெண் திருமணம் செய்துக்கொண்டாள், இந்த நபர் தான் அபோஸ்டசி வார் என்று அழைக்கப்படும்

"இஸ்லாமை விட்டு வெளியேறியவர்களோடு அபூ பக்கர்" செய்த போரில் எதிராளிகளின் தலைவராக இருந்தார்.

குறிப்பு: முஹம்மது மரித்தவுடன் அரேபியாவில் உள்ள இனக்குழு நாடுகள் இஸ்லாமை விட்டு வெளியேறினர். முஹம்மதுவின் வாளுக்கும் இராணுவத்திற்கும் பயந்து இவர்கள் இஸ்லாமில் ஏற்றுக்கொண்டு இருந்தனர். இவர்களோடு முதல் கலீஃபா அபூ பக்கர் போர் புரிந்து, மறுபடியும் இஸ்லாமிய ஆட்சிக்குள் கொண்டுவந்தார்.

மூலம்: **wikiislam.net/wiki/List_of_Muhammads_Wives_and_Concubines**

யார் எதைக்கேட்டாலும் வாரி வாரி வழங்கும் வள்ளல்கள் பற்றி நாம் புராணங்களிலும் அரசர்களின் சரித்திரங்களிலும் படிக்கிறோம், அவர்களை மிஞ்சும் வகையில் முஹம்மது அவர்கள் யார் வந்து உன்னை திருமணம் செய்துக்கொள்கிறேன் என்றுச் சொன்னால், 'இல்லையென்றுச் சொல்லமாட்டார்', அவ்வளவு பெரிய மனசு இவருக்கு. தன் நிலை என்ன? தன்னை திருமணம் செய்திருக்கின்ற மற்ற 9 மனைவிகள் என்னவாவது? போன்றவைகளை சிந்திக்கவேமாட்டார், நம் கண்மணி நாயகம் முஹம்மது.



**கேள்வி 38:** ஒரு நாள் முஹம்மது ஏழு வானங்களுக்கு மேலே சென்று வந்தார் என்று சொல்கிறார்களே! இது உண்மையா?

**பதில் 38**: இது முஸ்லிம்களின் நம்பிக்கை சார்ந்த விஷயமாகும். இப்படி நடந்தது என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள், இதற்கு எந்த ஒரு சான்றுமில்லை. ஹதீஸ்களில், குர்ஆனில் இருப்பதினால் முஸ்லிம்கள் நம்புகிறார்கள்.

முஹம்மதுவின் வாழ்க்கையை பார்க்கும்போது இவர் ஒரு உண்மையான நபி இல்லை என்று தெரிகின்றது, இப்படிப்பட்ட சூழலில் இவரைப் பார்க்கும் போது, இவர் சொல்வதை எப்படி முஸ்லிமல்லாதவர்கள் நம்புவார்கள்?



**கேள்வி 39:** முஹம்மது சொந்தமாக அடிமைகளை வைத்திருந்தாரா?

**பதில் 39:** இஸ்லாமிய சரித்திர ஆரிசியர் இப்னு கய்யிம் (Ibn Qayyim al-Jawziyya) என்பவரின் கூற்றுப்படி, முஹம்மது நான்கு பெண் அடிமைகளையும், 27 ஆண் அடிமைகளையும் வைத்து இருந்ததாக அறியமுடிகின்றது.

இப்னு கைய்யிம் பற்றிய விக்கிபீடியா தொடுப்பு: **en.wikipedia.org/wiki/Ibn_Qayyim_al-Jawziyya**

இவர் எழுதிய முஹம்மதுவின் சரித்திரமாகிய " Zad al-Ma'ad" என்ற புத்தகத்தை அரபியில் படிக்க சொடுக்கவும்: **archive.org/details/ZadAlMaad-IbnulQayyim/page/n25/mode/2up**

### இப்னு கையிம்:

முஹம்மது நபியாக தம்மை பிரகடனப்படுத்திய பிறகு முக்கியமாக, மதினாவிற்கு வந்த பிறகு அவருக்கு நிறைய அடிமைகளை வைத்திருந்தார். முஹம்மது அடிமைகளை வாங்கினார், விற்றார் மற்றும் வாடகைக்கு அடிமைகளை விட்டார், இதன் மூலம் பணம் சம்பாதித்தார்.

Ibn Qayyim al-Jawziyya who is one of the greatest scholars and chroniclers of Islam. In his book, "Zad al-Ma'ad" (Part I, p. 160), he says:

"**Muhammad had many male and female slaves. He used to buy and sell them**, but he purchased (more slaves) than he sold, especially after God empowered him by His message, as well as after his immigration from Mecca. He (once) sold one black slave for two. His name was Jacob al-Mudbir. His purchases of slaves were more (than he sold). He was used to renting out and hiring many slaves, but he hired more slaves than he rented out.

மூலம்: **https://www.answering-islam.org/BehindVeil/btv5.html**



**கேள்வி 40:** முஹம்மதுவிற்கு சொந்தமாக "ஆண் அடிமைகள்" இருந்ததில்லை. இதற்கு ஏதாவது சான்றை கொடுக்கமுடியுமா?

**பதில் 40:** இஸ்லாமிய சரித்திர ஆசிரியர் இப்னு கய்யிம், முஹம்மதுவிற்கு இருந்த ஆண் மற்றும் பெண் அடிமைகளின் பெயர்களை பட்டியலிட்டுள்ளார்.

### முஹம்மது வைத்திருந்த 27 ஆண் அடிமைகளின் பெயர்கள்:

> Ibn Qayyim al-Jawziyya - book, "Zad al-Ma'ad" (part 1, pp. 114, 115, and 116):
> "These are the names of Muhammad's male slaves:
>
> 1) Yakan Abu Sharh, 2) Aflah, 3) 'Ubayd, 4) Dhakwan, 5) Tahman, 6) Mirwan, 7) Hunayn, 8) Sanad, 9) Fadala Yamamin, 10) Anjasha al-Hadi, 11) Mad'am, 12) Karkara, 13) Abu Rafi', 14) Thawban, 15) Ab Kabsha, 16) Salih, 17) Rabah, 18) Yara Nubyan, 19) Fadila, 20) Waqid, 21) Mabur, 22) Abu Waqid, 23) Kasam, 24) Abu 'Ayb, 25) Abu Muwayhiba, 26) Zayd Ibn Haritha, and also a black slave called 12) Mahran, who was re-named (by Muhammad) Safina (`ship').

இந்த பெயர்களில் "1), 2)" என்று எண்களை நான் எழுதினேன்.

### முஹம்மது வைத்திருந்த பெண் அடிமைகளின் பெயர்கள்:

Salma Um Rafi', Maymuna daughter of Abu Asib, Maymuna daughter of Sa'd, Khadra, Radwa, Razina, Um Damira, Rayhana, Mary the Coptic, in addition to two other maid-slaves, one of them given to him as a present by his cousin, Zaynab, and the other one captured in a war.

மூலம்: **https://www.answering-islam.org/BehindVeil/btv5.html**



**கேள்வி 41:** மஹ்ரன் என்ற ஆண் அடிமை யார்? இவர் முஹம்மது மற்றும் சஹாபாக்கள் பற்றி என்ன கூறினார்?

**பதில் 41:** முஹம்மது வைத்திருந்த ஒரு ஆண் அடிமையின் பெயர் மஹ்ரன் ஆகும். இவர் ஒரு கருப்பின அடிமையாவார். இவருக்கு முஹம்மது 'ஸபினா" என்று பெயர் வைத்தார். ஸபினா என்றால் கப்பல் என்று பொருளாகும்.

ஏன் முஹம்மது இவருக்கு கப்பல் என்று பெயர் வைத்தார்? இதனை அறிய இப்னு கய்யிம் தம் சரித்திரத்தில், இந்த மஹ்ரன்/ஸபினா என்ற ஆண் அடிமை, ஒரு நிகழ்ச்சியை விவரிக்கிறார், இதனை படியுங்கள்:

> "The apostle of God and his companions went on a trip. (When) their belongings became too heavy for them to carry, Muhammad told me, `Spread your garment.' They filled it with their belongings, then they put it on me. The apostle of God told me, `Carry (it), for you are a ship.' Even if I was carrying the load of six or seven donkeys while we were on a journey, anyone who felt weak would throw his clothes or his shield or his sword on me so I would carry that, a heavy load. The prophet told me, `You are a ship"' (refer to Ibn Qayyim, pp. 115-116; al-Hulya, Vol. 1, p. 369, quoted from Ahmad 5:222).

அல்லாஹ்வின் தூதர் முஹம்மது அவர்களும் அவருடைய தோழர்களும் ஒரு பயணத்திற்குச் சென்றார்கள். அந்த பயணத்தின் போது, அவர்களுடைய உடமைகளை எடுத்துச் செல்ல முடியாத அளவுக்கு அது கனமாகிவிட்டது. முஹம்மது என்னிடம், 'ஒரு ஆடையை விரி' என்று கூறினார்கள். நானும் விரித்தேன், அப்போது அனைவரும் தங்கள் பொருட்களை அதில் போட்டார்கள், பின்னர் அவர்கள் அதை என்மேல் வைத்தார்கள். இறைத்தூதர் என்னிடம், `அதை எடுத்துச் செல், ஏனென்றால் நீ ஒரு கப்பல்' என்றுச் சொன்னார்கள். நான் ஒருவன் இந்த பயணத்தில் ஆறு அல்லது ஏழு கழுதைகளின் சுமைகளை சுமந்துக்கொண்டு வந்தேன். நபித்தோழர்களில் யார் பலவீனமாக உணர்ந்தாலும், அவருடைய ஆடைகளை அல்லது கவசத்தை அல்லது வாளை நான் சுமந்து வரும் படி என் சுமையில் மீது வைப்பார்கள், அதனால் அது ஒரு பெரிய சுமையாக இருந்தது. இதனால் இறைத்தூதர் என்னப் பார்த்து, நீ ஒரு கப்பல் (ஸபினா) என்று கூறினார்.

இதே நிகழ்ச்சியை தபரி என்ற சரித்திர ஆசிரியரும் தம் சரித்திரத்திலும் பதிவு செய்துள்ளார் (Chronicles, Volume 2 p. 216, 217, 218).

Source: **www.answering-islam.org/BehindVeil/btv5.html**

கேள்வி: மற்ற அடிமைகள் இருக்கும் பொது, ஒரு கருப்பின அடிமைக்கு மட்டும் ஏன் இந்த சுமையை முஹம்மது அதிகமாக சுமக்க வைத்தார்?



**கேள்வி 42:** முஹம்மதுவும், சஹாபாக்களும் அடிமைகளை சொந்தமாக வைத்திருந்தார்களா?

**பதில் 42:** ஆம், முஹம்மதுவும், சஹாபாக்களும், முஹம்மதுவின் மனைவிகளும் அடிமைகளை வைத்திருந்தார்கள்.

சில பிராயச்சித்தங்கள் செய்ய "ஒரு அடிமையை விடுதலை செய்யுங்கள்" என்று முஹம்மது சொல்லியுள்ளார், அப்படியானால், முஸ்லிம்களிடம் அடிமைகள் இருக்கவேண்டுமல்லவா? அடிமைகள் சொந்தமாக இல்லாமல் இருந்தால், சஹாபாக்களும் சரி, முஹம்மதுவும் மனைவிகளும் சரி எப்படி 'முஹம்மதுவின் அந்த பிராயச்சித்த கட்டளைக்கு கீழ்படிய முடியும்?'.

**நூல்: புகாரி, எண்: 1054**

1054. அஸ்மா(ரலி) அறிவித்தார். நபி(ஸல்) அவர்கள் சூரிய கிரகணத்தின்போது அடிமைகளை விடுதலை செய்யுமாறு கட்டளையிட்டார்கள்.

**அடிமைகள் சொத்துக்களாக இருந்தாலும், அதற்காக ஸகாத் கொடுக்கத்தேவையில்லை.**

நூல்: புகாரி, எண்: 1463, 1464:

1463. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(குதிரைகளையும் அடிமைகளையும் பெற்றிருக்கும்) ஒரு முஸ்லிம் குதிரைகளுக்காகவும் அடிமைகளுக்காகவும் ஸகாத் கொடுக்க வேண்டியதில்லை..' அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

**அடிமைகள் விற்பதை முஹம்மது ஆதரித்தார்:**

நூல்: புகாரி, எண்கள்: 2141, 2230, 2231, 2283

2141. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார். ஒருவர் தமக்குச் சொந்தமான அடிமை தம் மரணத்திற்குப் பின் விடுதலையாவார் என்று கூறியிருந்தார். அம்மனிதருக்குப் பொருள் தேவை ஏற்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள் அந்த அடிமையைப் பெற்று, 'இவரை என்னிடமிருந்து வாங்கிக் கொள்பவர் யார்?' என்று கேட்டார்கள். அவரை நுஅய்கி இப்னு அப்தில்லாஹ்(ரலி) இன்ன விலைக்கு

வாங்கினார்கள். **நபி(ஸல்) அவர்கள், அவரிடம் அந்த அடிமையைக் கொடுத்தார்கள்**.

2230. ஜாபிர்(ரலி) அறிவித்தார். 'என்னுடைய மரணத்திற்குப் பின் நீ விடுதலையடைந்து விடுவாய்!' என்று உரிமையாளரால் வாக்களிக்கப்பட்ட **அடிமையை நபி(ஸல்) அவர்கள் விற்றார்கள்!**'

2283. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். **அடிமைப் பெண்கள் (விபச்சாரத்தின் மூலம்) பொருளீட்டுவதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்**.

குறிப்பு: அடிமைப் பெண்களை விபச்சாரம் செய்யச் செய்து அதன் மூலம் பொருள் ஈட்டுவதை முஹம்மது தடை செய்தார். ஆனால், அவர்களை வாங்குவது, லாபத்திற்கு விற்பதை தடை செய்யவில்லை. ஆனால் அதே அடிமைப் பெண்களோடு திருமணம் செய்யாமல் வாங்கியவன் அவர்களோடு உடலுறவு கொள்வது விபச்சாரமில்லையாம், இது தான் இஸ்லாம்.

**முஸ்லிம்களுக்கு சொந்தமான அடிமைகள்:**

நூல்: புகாரி, எண்: 2304, 2594

2304. கஅபு இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார். 'ஸல்வு' எனுமிடத்தில் மேயக்கூடிய சில ஆடுகள் எங்களுக்குச் சொந்தமாக இருந்தன. அந்த ஆடுகளில் ஒன்று சாகும் தருவாயில் இருப்பதை எ**ங்களின் அடிமைப்பெண் பார்த்துவிட்டு**, ஒரு கல்லை (கூர்மையாக) உடைத்து, அதன் மூலம் அந்த ஆட்டை அறுத்தார் . . . .

2594. **இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் அடிமையான குரைப் (ரஹ்)அவர்கள் கூறியதாவது**: நபி (ஸல்) அவர்களின் துணைவியரான மைமூனா (ரலி) அவர்கள் தமது அடிமைப் பெண் ஒருத்தியை விடுதலை செய்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் மைமூனா (ரலி) அவர்களிடம், (இந்த அடிமைப் பெண்ணை அன்பளிப்பாகக் கொடுத்து,) உன் தாய்மாமன்கள் சிலரின் உறவைப் பேணியிருந்தால் உனக்குப் பெரும் நற்பலன் கிடைத்திருக்கும் என்று கூறினார்கள்.

இன்னும் அனேக ஹதீஸ்களை இதற்கு உதாரணமாக காட்டலாம்.

இதுவரை பார்த்த விவரங்களின் படி, முஹம்மதுவும், சஹாபாக்களும், முஹம்மதுவின் மனைவிகளும், இதர முஸ்லிம்களும் அடிமைகளை வைத்திருந்தனர். அடிமைகளை விற்றனர், வாங்கினர், அவ்வடிமைகள் மூலம் பணம் சம்பாதித்தனர். பெண் அடிமைகளோடு முஹம்மதுவும், சஹாபாக்களும் திருமணம் செய்துக்கொள்ளாமலேயே உடலுறவு கொண்டனர். சில முஸ்லிம்கள் பெண் அடிமைகளை விபச்சாரம் செய்யச் செய்து பணம் சம்பாதிப்பதை முஹம்மது தடையும் செய்துள்ளார் என்பதையும் இங்கு குறிப்பிடவேண்டும்.



**கேள்வி 43**: முஹம்மதுவின் பிள்ளைகளின் பெயர்கள் யாவை?

**பதில் 43:** முஹம்மதுவிற்கு 3 மகன்களும், 4 மகள்களும் பிறந்தார்கள். ஒரு ஆண் மகனைத் தவிர மற்ற அனைவரும் முஹம்மதுவிற்கும் அவரது முதல் மனைவி கதிஜாவிற்கும் தான் பிறந்தார்கள்.

முஹம்மதுவின் அடிமைப்பெண் மரியா என்பவருக்கும் முஹம்மதுவிற்கும் ஒரு ஆண் பிள்ளை (இப்றாஹீம்) பிறந்தது, ஆனால், பிறந்த இரண்டாடுகளில் அக்குழந்தை இறந்துவிட்டது. மற்ற இரு ஆண் பிள்ளைகளும் வாலிப வயதை அடைவதற்குள் மரித்துவிட்டார்கள்.

**முஹம்மதுவின் பிள்ளைகளின் பெயர்கள் மற்றும் பிறந்த ஆண்டுகள்:**

1. காசிம் (கி.பி. 598 – 601) - மகன்
2. ஜைனப் (கி.பி. 599 – 630) - மகள்
3. ருகைய்யா (கி.பி. 601 – 624) - மகள்
4. உம் குல்தும் (கி.பி. 603 – 630) - மகள்
5. ஃபாத்திமா (கி.பி. 605 - 632) - மகள்
6. அப்துல்லாஹ் (மரணம் கி.பி. 615) - மகன்
7. இப்றாஹீம் (கி.பி. 630 – 632) - மகன்

Source: **en.wikipedia.org/wiki/Muhammad%27s_children**

முஹம்மதுவின் பெண் பிள்ளைகள் பற்றி சன்னி மற்றும் ஷியா பிரிவினருக்கு இடையே வேறுபட்ட கருத்துக்கள் உள்ளன. சன்னி பிரிவினர் முஹம்மதுவின் 4 மகள்களும் முஹம்மது மற்றும் கதிஜா அவர்களுக்கு பிறந்தவர்கள் என்று நம்புகிறார்கள். ஆனால் ஷியா பிரிவினர் ஃபாத்திமா மட்டும் தான் முஹம்மது மற்றும் கதிஜாவிற்கு பிறந்தவர்கள், மூதமுள்ள மூன்று மகள்கள் கதிஜா அவர்களுக்கும், அவருடைய முன்னாள் கணவருக்கும் பிறந்தவர்கள் என்று கூறுகிறார்கள்.

முஹம்மது மரித்த போது, அவருக்கு ஆண் வாரிசு யாருமில்லை, ஒரு வேளை ஒரே ஒரு மகனாவது அவருக்கு உயிரோடு இருந்திருந்தால், அல்லது மற்ற 11 மனைவிகளுக்கு பிறந்திருந்தால், ஷியா சன்னி என்ற பிரிவுகள் உண்டாகாமல் இருந்திருக்கும் என்று நாம் நம்பலாம்.



**கேள்வி 44:** ஒரு முஸ்லிம் 4 மனைவிகள் மட்டும் திருமணம் செய்யலாம் என்று குர்ஆன் சொல்லும் போது, ஏன் முஹம்மது மட்டும் 10க்கும் அதிகமாக திருமணங்கள் செய்தார்?

**பதில் 44**: முஹம்மது அனேக திருமணங்களைச் செய்தார், அவர் மரித்த போது அவரின் 9 மனைவிகள் உயிரோடு இருந்தார்கள்.

முஹம்மதுவின் திருமண வாழ்க்கை குர்ஆன் வசனத்திற்கு முரண்பட்டதாகும்.

**குர்ஆன் 4:3ம் வசனத்தை முஹம்மது பின்பற்றவில்லை.**

குர்ஆன் 4:3. அநாதை(ப் பெண்களைத் திருமணம் செய்து அவர்)களிடம் நீங்கள் நியாயமாக நடக்க முடியாது என்று பயந்தீர்களானால், உங்களுக்குப் பிடித்தமான பெண்களை மணந்து கொள்ளுங்கள் - **இரண்டிரண்டாகவோ, மும்மூன்றாகவோ, நன்னான்காகவோ**; ஆனால், நீங்கள் (இவர்களிடையே) நியாயமாக நடக்க முடியாது என்று பயந்தால் ஒரு பெண்ணையே (மணந்து கொள்ளுங்கள்), அல்லது உங்கள் வலக்கரங்களுக்குச் சொந்தமான (ஓர் அடிமைப் பெண்ணைக் கொண்டு) போதுமாக்கிக் கொள்ளுங்கள் - இதுவே நீங்கள் அநியாயம் செய்யாமலிருப்பதற்குச் சுலபமான முறையாகும்.

**குர்ஆன் 4:3ஐ பின்பற்றாமல் இருப்பதற்கு தனக்கு சிறப்பு சலுகை கிடைத்துள்ளது என்று குர்ஆன் 33:50ம் வசனத்தை முஹம்மது இறக்கியுள்ளார்.**

குர்ஆன் 33:50. நபியே! எவர்களுக்கு நீர் அவர்களுடைய மஹரை கொடுத்து விட்டீரோ அந்த உம்முடைய மனைவியரையும், உமக்கு(ப் போரில் எளிதாக) அல்லாஹ் அளித்துள்ளவர்களில் உம் வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்டவர்களையும், நாம் உமக்கு ஹலாலாக்கி இருக்கின்றோம்; அன்றியும் உம் தந்தையரின் சகோதரர்களின் மகள்களையும், உம் தந்தையரின் சகோதரிகள் மகள்களையும், உம் மாமன் மார்களின் மகள்களையும், உம் தாயின் சகோதரிமாரின் மகள்களையும் - இவர்களில் யார் உம்முடன் ஹிஜ்ரத் செய்து வந்தார்களோ அவர்களை (நாம் உமக்கு விவாகத்திற்கு ஹலாலாக்கினோம்); அன்றியும் முஃமினான ஒரு பெண் நபிக்குத் தன்னை அர்ப்பணித்து, நபியும் அவளை மணந்து கொள்ள விரும்பினால் அவளையும் (மணக்க நாம் உம்மை அனுமதிக்கின்றோம்); **இது மற்ற முஃமின்களுக்கன்றி உமக்கே (நாம் இத்தகு உரிமையளித்தோம்; மற்ற முஃமின்களைப் பொறுத்தவரை)** அவர்களுக்கு அவர்களுடைய மனைவிமார்களையும், அவர்களுடைய வலக்கரங்கள் சொந்தமாக்கிக் கொண்டவர்களையும் பற்றி நாம் கடமையாக்கியுள்ளதை நன்கறிவோம்; உமக்கு ஏதும் நிர்ப்பந்தங்கள் ஏற்படாதிருக்கும் பொருட்டே (விதி விலக்களித்தோம்); மேலும் அல்லாஹ் மிக மன்னிப்பவன்; மிக்க அன்புடையவன்.



**கேள்வி 45:** முஹம்மதுவின் இரண்டாவது மனைவி ஸௌதா, தன்னை முஹம்மது விவாகரத்து செய்துவிடுவார் என்று ஏன் பயந்தார்கள்?

**பதில் 45:** மனைவிக்கு வயது கூடியதால் விவாகரத்து செய்ய விரும்பினார் அல்லாஹ்வின் தீர்க்கதரிசி முஹம்மது.

முஹம்மது தம் மனைவியாகிய "சௌதா" அவர்களை விவாகரத்து செய்ய விரும்பினார். உடனே சௌதா அவர்கள் தம்மை விவாகரத்து செய்யவேண்டாம் என்று முஹம்மதுவிடம் கேட்டுக்கொண்டார்கள், மேலும் இதற்கு பதிலாக முஹம்மது தன்னிடம் செலவிடும் தன் நாளை ஆயிஷாவிற்கு விட்டுக்கொடுப்பதாக சௌதா சொன்னார்கள். இதனை முஹம்மது அங்கீகரித்துக்கொண்டார்.

இவரை கிறிஸ்தவர்கள் கள்ளத் தீர்க்கதரிசி என்று கருதுவது சரியே! கள்ளத் தீர்க்கதரிசிகளின் கனிகளினால் (செயல்களினால்) அவர்களை அறியலாம் என்று இயேசு கூறியது எவ்வளவு உண்மையாக இருக்கிறது

**குர்-ஆன் 4:128-130 & ஸஹீஹ் புகாரி எண் 5206**

4:128. **ஒரு பெண் தன் கணவன் தன்னை வெறுத்து விடுவான் என்றோ அல்லது புறக்கணித்து விடுவான் என்றோ பயந்தால்,** அவர்கள் இருவரும் தங்களுக்குள் (சமாதானமான) ஒரு முடிவைச் செய்து கொண்டால் அவ்விருவர் மீது குற்றமில்லை; அத்தகைய சமாதானமே மேலானது; இன்னும், ஆன்மாக்கள் கருமித்தனத்திற்கு உட்பட்டவையாகின்றன. அவ்வாறு உட்படாமல்) ஒருவருக்கொருவர் உபகாரம் செய்து, (அல்லாஹ்வுக்குப்) பயந்து நடப்பீர்களானால் நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றையெல்லாம் நன்கு அறிந்தவனாக இருக்கின்றான்.

4:129. (முஃமின்களே!) நீங்கள் எவ்வளவுதான் விரும்பினாலும், **மனைவியரிடையே நீங்கள் நீதம் செலுத்த சாத்தியமாகாது;** ஆனால் (ஒரே மனைவியின் பக்கம்) முற்றிலும் சாய்ந்து மற்றவளை அந்தரத்தில் தொங்க விடப்பட்டவள் போன்று ஆக்கிவிடாதீர்கள்; நீங்கள் (அல்லாஹ்வுக்குப்) பயந்து சமாதானமாக நடந்து கொள்வீர்களானால், நிச்சயமாக அல்லாஹ் மிகவும் மன்னிப்பவனாகவும், மிக்க கருணையுடையவனாகவும் இருக்கின்றான்.

4:130. (சமாதானமாக இணைந்து வாழ முடியாமல் சமாதானமாக) அவர்கள் இருவரும் பிரிந்துவிட்டால், அவ்விருவரையும் தன்னுடைய விசாலமான அருட்கொடையால், (ஒருவர் மற்றவரை விட்டும்) தேவையற்றவராக அல்லாஹ் ஆக்கிவிடுவான். அல்லாஹ் விசாலமான அருளுடையவனாகவும் ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்.

**குர்ஆன் 4:128ன் பின்னணியை கீழ்கண்ட ஹதீஸ் விளக்குகிறது:**

**புகாரி 5206 : ஆயிஷா(ரலி) அறிவித்தார்,**

ஒரு பெண் ஒருவரின் மனைவியாக இருந்து வருகிறாள். (அவளுடைய **முதுமை**, நோய் போன்ற காரணத்தினால்) அவளை அவருக்குப் பிடிக்காமல் போய்விடுகிறது; அவளை விவாகரத்துச் செய்துவிட்டு மற்றொருத்தியை மணமுடிக்கவும் அவர் விரும்புகிறார். (இந்நிலையில்) அவள் 'என்னை (மனைவியாக) இருக்கவிடுங்கள்; என்னை விவாகரத்துச் செய்துவிடாதீர்கள். பின்னர் (வேண்டுமானால்) மற்றொரு பெண்ணை மணந்துகொள்ளுங்கள். எனக்காகச் செலவழிப்பதிலிருந்தும், இரவைப் பகிர்ந்தளிப்பதிலிருந்தும், இரவைப் பகிர்ந்தளிப்பதிலிருந்தும் நீங்கள் விலகி கொள்ளலாம்" என்று தம் கணவரிடம் கூறுகிறாள். **இதையே இவ்வசனம் கூறுகிறது: ஒரு பெண், தன்னிடம் கணவன் நல்ல முறையில் நடந்து கொள்ளமாட்டான் என்றோ, புறக்கணித்துவிடுவான் என்றோ அஞ்சினால், கணவன் - மனைவி இருவரும் (தம் உரிமைகளில் சிலவற்றைப் பரஸ்பரம்விட்டுக் கொடுத்து) தமக்கிடையே சமாதானம் செய்துகொள்வதில தவறேதும் இல்லை. (திருக்குர்ஆன் 04:128)**

**பெண்களுக்கு எதிரான மார்க்கம் இஸ்லாம் என்றுச் சொல்வது எவ்வளவு பொருத்தமாக உள்ளது பாருங்கள்.**

**சிந்திக்க சில கேள்விகள்:**

- ஏன் முஹம்மது சௌதாவை விவாகரத்து செய்ய விரும்பினார்?
- சௌதா அவர்களுக்கு வயதுகூடிவிட்டதாம், இதனால் அவர்கள் அழகாக இல்லையாம், இதனால் அவர் தன் மனைவியை விவாகரத்து செய்ய நினைத்தார்.
- ”என்றும் பதினாறு” என்றுச் சொல்வது போல எப்போதும் இளமையோடு முஹம்மது இருப்பாரா? இவருக்கு முகத்தில் சுருக்கங்கள் விழவில்லையா?
- மனைவிக்கு வயது கூடியதால் விவாகரத்து செய்ய விரும்பியவர் எப்படி உண்மையான தீர்க்கதரிசியாக இருக்கமுடியும்?
- ஒரு சராசரி மனிதனிடம் எதிர்ப்பார்க்கும் நல்ல குணம் கூட ஒரு நபியிடம் இல்லையே!

உங்கள் தந்தை "உங்கள் தாய்க்கு" வயது கூடிவிட்டதால் விவாரகரத்து செய்வேன் என்றுச் சொன்னால், நீங்கள் என்ன செய்வீர்கள்! முஸ்லிம் நண்பர்களே!



**கேள்வி 46:** முஹம்மது திருமணம் செய்துக்கொண்ட இரண்டு பெண்களின் தகப்பன்மார்கள் அவரது நெருங்கிய தோழராக இருந்தார்கள் அவ்விருவர் யார்?

**பதில் 46:** ஆமாம், அபூ பக்கர் மற்றும் உமர் என்பவர்களின் மகள்களை முஹம்மது திருமணம் செய்திருந்தார்.

முஹம்மது 9 வயது சிறுமியாகிய ஆயிஷாவை திருமணம் செய்தார், இவருடைய தந்தை தான் அபூ பக்கர். ஹப்ஸா என்பவர் உமரின் மகள் ஆவார், இவரையும் முஹம்மது திருமணம் புரிந்திருந்தார்.

முஹம்மது மரித்த பிறகு முதல் கலிஃபாவாக பதவி வகித்தவர் அபூபக்கர் ஆவார், இவர் மரித்த பிறகு உமர் இரண்டாவது கலிஃபாவாக பதவிக்கு வந்தார்.



**கேள்வி 47:** மூன்றாவது மற்றும் நான்காவது கலிஃபாவிற்கும் முஹம்மதுவிற்கும் என்ன தொடர்பு?

**பதில் 47:** முஹம்மதுவின் மகள்களை திருமணம் செய்தவர்கள் தான் உஸ்மானும் அலியும். உஸ்மான் மூன்றாவது கலிஃபாவாக பதவி வகித்தார், அலி நான்காவது கலிஃபாவாக பதவி வகித்தார்.

ஆக, முஹம்மதுவிற்கு பிறகு இஸ்லாமிய அரசின் தலைவர்களாக இருந்தவர்கள் முஹம்மதுவின் இரண்டு மாமனார்கள், அதன் பிறகு முஹம்மதுவின் மருமகன்மார்கள்.

முஹம்மதுவிற்கும் அவரது சஹாபாக்களுக்கும் இடையே இருந்த உறவுகள் பற்றி மேலதிக விவரங்களை வேறு ஒரு கேள்வி பதிலில் காண்போம்.



**கேள்வி 48:** மதினாவில் வாழ்ந்த போது முஹம்மது எத்தனை போர்களை புரிந்தார்?

**பதில் 48:**

1) மதினாவில் 10 ஆண்டுகளில் முஹம்மது கட்டளையிட்ட போர்கள்/வன்முறைகள் (622-632)

முஹம்மது 63 ஆண்டுகள் வாழ்ந்தார். தம்முடைய 40வது வயதில் "தான் ஒரு நபி (தீர்க்கதரிசி)" என்று பிரகடனப்படுத்தினார். அதன் பிறகு 12 லிருந்து 13 ஆண்டுகள் மக்காவில் வாழ்ந்தார். பிறகு மதினாவிற்கு இடம்பெயர்ந்து (ஹிஜ்ரி ஆண்டு தொடக்கம்) அதிக பட்சமாக 10 ஆண்டுகள் வாழ்ந்தார்.

மதினாவில் வாழ்ந்த அந்த 10 ஆண்டுகளில் அவர் போர்களிலும், வழிப்பறி கொள்ளைகளிலும், வன்முறை செயல்களிலும் ஈடுபட்டார். அவைகள் பற்றி இப்போது காண்போம். குர்ஆனின் அத்தியாயங்களும் மக்கீ மற்றும் மதனீ என்று பிரிக்கப்பட்டதும், முஹம்மதுவின் இருப்பிடத்தை (வாழ்ந்த ஊரினை) கருத்தில் கொண்டு தான் என்பது கவனிக்கத்தக்கது.

"முஹம்மதுவின் வன்முறைகள் என்று குறிப்பிடும் போது", அது முஹம்மது செய்த கீழ்கண்ட காரியங்களை குறிக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

- வியாபார கூட்டங்களை வழிமறித்து அவர்களின் உடைமைகளை கொள்ளையிட்டது (Raids)
- இவரே வலியச்சென்று போர் செய்தது (Offence)
- எதிரிகள் இவர் மீது போர் தொடுக்கும் போது இவர் போரிட்டது (Defence)
- தன்னை எதிர்த்து பேசியவர்களை ஆட்களை அனுப்பி கொலை செய்தது

கீழ்கண்ட அட்டவணையைப் பார்க்கவும். முஹம்மது மதினாவில் வாழ்ந்த 10 ஆண்டுகளில் அவர் கட்டளையிட்ட வன்முறைகள் பட்டியலிடப்பட்டுள்ளன. மொத்தம் 95 வன்முறைகள் என்று புள்ளிவிவரங்கள் சொல்கின்றன.

10 ஆண்டுகளில், 95 வன்முறைகள் என்றால், ஒரு ஆண்டுக்கு 9.5 வன்முறைகள் என்று கணக்கு வருகின்றது. புரியும் படி சுருக்கமாகச் சொல்லவேண்டுமென்றால், முஹம்மது மதினாவிற்கு வந்த பிறகு ஒவ்வொரு ஆறு வாரங்களுக்கு (ஒன்றரை மாதத்தில்) ஒரு வன்முறையில் ஈடுபட்டுள்ளார்.

கீழ்கண்ட விக்கிபீடியா தொடுப்பில் முஹம்மதுவின் வன்முறைச் செயல்கள் 95ஐ வரிசைப் படுத்தி கொடுக்கப்பட்டுள்ளது. அதனை நான் ஹிஜ்ரி ஆண்டு வரிசையில் தயாரித்துள்ளேன். கிழேயுள்ள அட்டவணையை காணவும்.

| ஹிஜ்ரி ஆண்டு | மொத்தம் | முஹம்மது பங்கு பெற்றவைகள் | முஹம்மது பங்கு பெறாதவைகள் |
|---|---|---|---|
| 1 | 4 | 1 | 3 |
| 2 | 9 | 6 | 3 |
| 3 | 7 | 5 | 2 |
| 4 | 6 | 2 | 4 |
| 5 | 5 | 4 | 1 |
| 6 | 17 | 2 | 15 |
| 7 | 10 | 3 | 7 |
| 8 | 20 | 4 | 16 |
| 9 | 12 | 1 | 11 |
| 10 | 5 | 0 | 5 |
| மொத்தம் | 95 | 28 | 67 |

https://en.wikipedia.org/wiki/List_of_expeditions_of_Muhammad

Source: **List of expeditions of Muhammad – Wikipedia**

அட்டவணை 1: முஹம்மது 10 ஆண்டுகளில் பங்கு பெற்ற கட்டளையிட்ட போர்கள்/வன்முறைச் செயல்கள் ஹிஜ்ரி ஆண்டு வரிசையில்.

முஹம்மது மட்டும் பங்கு பெற்ற வன்முறைகளை கூட்டினால், அது 28 வருகின்றது. அதாவது மதினாவில் வாழ்ந்த 10 ஆண்டுகளில், முஹம்மது பங்கு பெற்ற வன்முறைகள் 28 ஆகும். மீதமுள்ள 67 வன்முறைகளில் முஹம்மது பங்கு பெறவில்லை, தம்முடைய சஹாபாக்களின் தலைமையில் சண்டையிடும் படி கட்டளையிட்டார்.

### புகாரி ஹதீஸின்படி 19 போர்களில் முஹம்மது பங்கு பெற்றார் என்பது தவறா?

புகாரி ஹதீஸ் எண்கள்: 3949, 4404 & 4471 ன்படி முஹம்மது பங்கு பெற்ற போர்கள் 19 என்று வருகிறதே, ஆனால் 28 என்று நாம் சொல்வது ஏன் என்ற கேள்வி சிலருக்கு எழலாம். புகாரி சொல்லும் கணக்கு முஹம்மது போருக்குச் சென்று சண்டையிடுவதைப் பற்றித் தான். ஆனால், இஸ்லாமிய சரித்திரத்தின் படி முஹம்மது பங்கு பெற்ற வழிப்பறி கொள்ளைகள், பழிக்கு பழிவாங்கும் சண்டைகள், போர்கள் என்று அனைத்தையும் கூட்டும் போது 28 வருகின்றது (இந்த பட்டியலில் முஹம்மது பங்கு பெற்ற விவரங்களை சரி பார்க்கவும்: **en.wikipedia.org/wiki/List_of_expeditions_of_Muhammad**)

**புகாரி ஹதீஸ்: 3949. அபூ இஸ்ஹாக்(ரஹ்) அறிவித்தார்**

நான் ஸைத் இப்னு அர்கம்(ரலி) அவர்களுக்கும் அருகிலிருந்தபோது, '**நபி(ஸல்) அவர்கள் புரிந்த போர்கள் எத்தனை?**' என்று அவர்களிடம் வினவப்பட்டது. '**பத்தொன்பது**' என்று அவர்கள் பதிலளித்தார்கள். 'நபி(ஸல்) அவர்களுடன் நீங்களும் பங்கெடுத்த போர்கள் எத்தனை?' என்று வினவப்பட்டபோது, 'பதினேழு' என்றார்கள். 'இவற்றில் முதல் போர் எது?' என்று நான் அவர்களிடம் கேட்டேன். அவர்கள், 'உஸைரா' அல்லது 'உஷைர்' என்று பதிலளித்தார்கள்.




**மேற்கண்ட அட்டவணையை பார் சார்ட் (Bar Chart) வரைபடமாக பார்க்கும் போது, விவரம் இன்னும் தெளிவாக புரியும்:**

**வரைபட விளக்கம் - உதாரணம்:**

ஹிஜ்ரி ஆண்டு 1: மதினாவிற்கு முஹம்மது ஹிஜ்ரத் செய்த பிறகு முதலாம் ஆண்டில், நான்கு வன்முறைகளை கட்டளையிட்டுள்ளார். அதில் ஒரு வன்முறையில் முஹம்மது சுயமாக பங்கு பெற்றுள்ளார், மீதமுள்ள 3 வன்முறைகளில் அவர் பங்கு பெறவில்லை, முஸ்லிம்கள் மட்டுமே பங்கு பெற்றுள்ளனர்.

ஹிஜ்ரி ஆண்டு 8: முஹம்மது மதினாவிற்குச் சென்ற 8ம் ஆண்டை கவனித்தால், முஹம்மது கட்டளையிட்ட வன்முறைச் செயல்கள் 20 ஆகும், அதில் 4ல் அவரே சுயமாக பங்கு பெற்றுள்ளார்.



**கேள்வி 49:** முஹம்மது பற்றி ஸஹீஹ் ஹதீஸ்கள் சொல்வதை நம்பலாமா?

**பதில் 49:** ஹதீஸ்கள் முஹம்மதுவிற்கு 200 ஆண்டுகளுக்கு பிறகு தொகுக்கப்பட்டன. அவைகளில் பல பொய்கள் கலந்துள்ளன. ஹதீஸ்களை தொகுத்த இமாம் புகாரி போன்றவர்கள், லட்சக்கணக்கான ஹதீஸ்களை தொகுத்தார்கள், அவைகளை வகைப்படுத்தி வெறும் 1.3 சதவிகித ஹதீஸ்கள் தான் உண்மையானவை என்று கூறினார்கள்.

உதாரணத்திற்கு, புகாரி இமாம் ஆறு லட்சம் ஹதீஸ்களை தொகுத்தார், அவைகளில் 7397 (1.23%) ஹதீஸ்கள் உண்மையானவை என்று வேறு பிரித்தார். அப்படியென்றால் மூதமுள்ள 98.77% ஹதீஸ்கள் பொய்யானவை என்று அர்த்தம். இன்றைய இஸ்லாமிய அறிஞர்கள், அந்த 7397 ஹதீஸ்களிலும் பொய்கள் உள்ளன என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ்களில் நடைமுறைக்கு ஏற்காத, முஸ்லிம்களை தர்ம சங்கடத்தில் தள்ளும் ஹதீஸ்கள் உள்ளன. இவைகளை நம்பினால், முஹம்மதுவிற்கு அவப்பெயர் வருமென்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள்.

ஹதீஸ்களை நம்பலாமா இல்லையா? என்ற கேள்விக்கு நேரடி பதில் கொடுப்பதாக இருந்தால், இந்த கேள்வியை யாரிடம் கேட்கிறோமோ, அவரைப் பொருத்து பதில் அமையும்.

கண்மூடித்தனமாக ஹதீஸ்களை நம்பும் முஸ்லிம்களிடம் கேட்டால், அவர்களுக்கு ஹதிஸ்கள் பற்றிய ஞானம் இல்லாதபடியினால், ஹதீஸ்கள் எல்லாவற்றையும் நம்பவேண்டும் என்று கூறுவார்கள். இஸ்லாமை நன்கு அறிந்த முஸ்லிம் அறிஞர்களிடம் கேட்டால், ஹதீஸ்கள் அனைத்தையும் ஏற்கமுடியாது, இன்னும் புறக்கணிக்கவேண்டிய ஹதீஸ்கள் அனேகம் உண்டு என்பார்கள். இஸ்லாமியரல்லாத ஆய்வாளர்களிடம் கேட்டால், பெருமபான்மையான ஹதீஸ்கள் இட்டுக்கட்டப்பட்டு உள்ளது என்று கூறுவார்கள்.



**கேள்வி 50:** முஹம்மதுவின் பற்களில் ஒரு குறிப்பிட்ட போரின் போது காயம்பட்டதாக சொல்லப்படுவது எந்த போரில்?

**பதில் 50:** கி.பி. 624ம் ஆண்டு நடைப்பெற்ற உஹுத் என்ற போரில், எதிரிப்படை வீரர்களில் ஒருவன் எறிந்த கல் முஹம்மது அவர்களின் வாயில் பட்டு, அவர்களின் பல் ஒன்று உடைந்ததால் வாயிலிருந்து இரத்தம் கொட்டியது. இரத்தம் கொட்டியதை அறிந்த எதிரிப் படையினர் 'முகம்மது இறந்து விட்டார்' என்று கோஷமிட்டனர். இந்த போர் முஸ்லிம்களுக்கு ஒரு தோல்வியை கொடுத்தது.



**கேள்வி 51:** முஹம்மது எத்தனை ஹஜ் செய்தார்? எத்தனை உம்ரா செய்தார்?

**பதில் 51:** முஹம்மது ஒரு ஹஜ் செய்ததாகவும், நான்கு உம்ரா செய்ததாகவும் முஸ்லிம் ஹதீஸ் நூல் கூறுகிறது.

முஸ்லிம் ஹதீஸ் 2404. அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நான்கு உம்ராக்கள் செய்தார்கள். தமது ஹஜ்ஜுடன் செய்த உம்ராவைத் தவிர மற்ற அனைத்தையும் துல்கஅதா மாதத்திலேயே அவர்கள் செய்தார்கள்;

1. "ஹுதைபியாவிலிருந்து" அல்லது "ஹுதைபியா ஒப்பந்தம் நடந்தபோது" துல்கஅதா மாதத்தில் செய்த உம்ரா.

2. அடுத்த ஆண்டு துல்கஅதா மாதத்தில் செய்த உம்ரா.

3. ஹுனைன் போரில் கிடைத்த போர்ச் செல்வங்களைப் பங்குவைத்த இடமான ஜிஃரானாவிலிருந்து துல்கஅதா மாதத்தில் செய்த உம்ரா.

4. அவர்கள் தமது ஹஜ்ஜுடன் செய்த உம்ரா (ஆகிய நான்குமே அவை). - கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நான் அனஸ் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எத்தனை ஹஜ் செய்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு, "அவர்கள் ஒரேயொரு ஹஜ் மட்டுமே செய்தார்கள்; நான்கு உம்ராக்கள் செய்தார்கள்" என்று விடையளித்தார்கள். மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.



**கேள்வி 52:** முஹம்மதுவை எங்கு அடக்கம் செய்தார்கள்?

**பதில் 52:** முஹம்மதுவின் கல்லறை மதினாவில் உள்ளது என்று இஸ்லாம் சொல்கிறது. ஒவ்வொரு ஆண்டும் முஸ்லிம்கள் மக்காவிற்கு ஹஜ் பயணம் மேற்க்கொள்ளும் போது, மதினாவிற்கும் சென்று முஹம்மதுவின் கல்லறையைப் பார்த்துவருகிறார்கள்.

கலீஃபாக்களின் காலத்தில், முஹம்மது அடக்கம் செய்யப்பட்ட கல்லறை இருந்த அறையின் சுவர் இடிந்து விழுந்தது, இதைப் பற்றி ஒரு ஹதீஸ் வருகிறது.

நூல் புகாரி, எண்: 1390:

1390. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்)அவர்கள் மரண நோயுற்றிருந்தபோது, 'யூதர்களையும் கிறித்தவர்களையும் அல்லாஹ் சபிப்பானாக! அவர்கள் தங்களின் நபிமார்களது

மண்ணறைகளை வணக்கஸ்தலங்களாக ஆக்கிவிட்டார்கள்' எனக் கூறினார்கள். இந்த பயம் மட்டும் இல்லாதிருந்தால் நபி(ஸல்) அவர்களின் கப்ரும் திறந்த வெளியில் அமைக்கப்பட்டிருக்கும். எனினும் நபி(ஸல்) அவர்கள் இந்த விஷயத்தில் பயந்தே உள்ளார்கள்; அல்லது அவர்களின் கப்ரும் வணக்கத்தலமாக ஆக்கப்பட்டு விடும் என்ற பயம் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. அவர்களின் கப்ரு ஒட்டகத்தின் திமில் போன்று உயரமாக இருந்ததைத் தாம் பார்த்ததாக சுஃப்யான் அத் தம்மார் அறிவித்தார். இப்னு அப்தில் மலிக்கின் (ஆட்சிக்) காலத்தின்போது நபி(ஸல்) அடக்கம் செய்யப்பட்ட அறையின் ஒரு சுவர் இடிந்து விழுந்தது. அதைப் புனர் நிர்மாணம் செய்வதில் மக்கள் ஈடுபட்டபோது **ஒரு பாதம் வெளியில் தெரிந்தது**. உடனே மக்கள் பதறிப் போய் அது நபி(ஸல்) அவர்களின் பாதமாக இருக்குமோ என நினைத்தனர். இது பற்றித் தெரிந்தவர் யாருமில்லாதிருந்தபோது நான் '**அல்லாஹ்வின் மீது ஆணையாக! இது நபி(ஸல்) அவர்களின் பாதமே இல்லை; மாறாக, இது உமர்(ரலி) அவர்களின் பாதகமாகும் என்றேன்**' என உர்வா கூறுகிறார்.



**கேள்வி 53:** நபித்துவம் அடையாளமாக முஹம்மதுவிற்கு இருப்பது எது?

**பதில் 53:** முஹம்மது, "நபிமார்களின் முத்திரையானவர்" என்று குர்ஆன் சொல்கிறது:

குர்ஆன் 33: 40

முஹம்மது (ஸல்) உங்கள் ஆடவர்களில் எவர் ஒருவருக்கும் தந்தையாக இருக்கவில்லை ஆனால் அவரோ அல்லாஹ்வின் தூதராகவும், **நபிமார்களுக்கெல்லாம் இறுதி (முத்திரை)யாகவும்** இருக்கின்றார் மேலும் அல்லாஹ் எல்லாப் பொருள்கள் பற்றியும் நன்கறிந்தவன்.

Muhammad is not the father of any of your men, but (he is) the Apostle of God, and **the Seal of the Prophets:** and God has full knowledge of all things. S. 33:40 Y. Ali

முதன் முதலில் மேலுள்ள வசனத்தை படித்தவுடன், நமக்கு, "முஹம்மது தான் நபித்துவத்தின் முடிவானவர் என்றும், அல்லாவால் அனுப்பபட்ட நபிகளின் வரிசையில் இவரே இறுதியானவர் என்றும்" விளங்கும். ஹதீஸ் தொகுப்புக்களை படிக்கும் போது, இஸ்லாமிய ஆதாரங்களின் படி பார்த்தால், முஹம்மதுவுக்கு முன்னிருந்த நபிமார்களின் நிலைகளோடு (Status) , முஹம்மதுவின் நிலையைப் பற்றிப் பார்க்கும் போது இந்த 'முத்திரை" என்பது சாதாரண ஒரு கூற்றை விட அதிகமானது.

ஸஹீஹ் புகாரி எண்கள்: 190, 6352

190. 'என்னுடைய சிறிய தாயார் என்னை நபி(ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்று 'இறைத்தூதர் அவர்களே! என் சகோதரி மகன் இரண்டு பாதங்களிலும் வேதனையால் கஷ்டப்படுகிறான்' எனக் கூறியபோது, நபி(ஸல்) அவர்கள் என்னுடைய தலையைத் தடவி என்னுடைய அபிவிருத்திக்காகப் பிரார்த்தித்தார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்தார்கள். அவர்கள் மீதி வைத்த தண்ணீரிலிருந்து நான் குடித்தேன். பின்னர் நபி(ஸல்) அவர்களின் முதுகிற்குப் பின்னால் எழுந்து நின்றேன். **அப்போது அவர்களின் இரண்டு புஜங்களுக்கிடையில் நபித்துவத்தின் முத்திரையை பார்த்தேன். அது ஒரு புறா முட்டை போன்று இருந்தது**' என ஸாயிப் இப்னு யஸீது(ரலி) அறிவித்தார்.

6352. சாயிப் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்.

(சிறுவனாயிருந்த) என்னை என் தாயாரின் சகோதரி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டுசென்று, 'இறைத்தூதர் அவர்களே! என் சகோதரி மகனுக்கு (பாதங்களில்) நோய் கண்டுள்ளது' என்றார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் (அன்புடன்) என் தலையை வருடிக் கொடுத்து என் சுபிட்சத்திற்காகப் பிரார்த்தித்தார்கள். பின்னர் அங்கசுத்தி (உளூ) செய்தார்கள். அவர்கள் அங்கசுத்தி செய்து மிச்சம் வைத்த தண்ணீரிலிருந்து சிறிது பருகினேன். பிறகு நான் அவர்களின் முதுகுக்குப் பின்னே நின்று கொண்டு **அவர்களின் இரண்டு தோள்களுக்கிடையே இருந்த நபித்துவ முத்திரையைப் பார்த்தேன்**. அது மணவறைத் திரையில் பொருத்தப்படும் பித்தானைப் போன்றிருந்தது.

இதே விவரம் இன்னும் பல ஹதீஸ் நூல்களிலும், இதர இஸ்லாமிய நூல்களிலும் பதிவு செய்யப்பட்டுள்ளது, அவைகளை படிக்க இந்த தமிழ் கட்டுரையை படிக்கவும்: **முஹம்மது மற்றும் நபித்துவத்தின் முத்திரை: இது ஒரு அடையாளமா அல்லது ஒரு சரீர குறைபாடா?**

**சிந்திக்க சில கேள்விகள்:**

1) இங்கே முஹம்மதுவுடைய நபித்துவத்தின் முத்திரை என்பது ஒரு சரீர குறைபாடு என்று புலனாகிறது, புள்ளிகள் நிறைந்த மச்சம் ஒரு ஆப்பிள் போல, ஒரு சிறிய பொத்தானைப் போல அல்லது புறாவுடைய முட்டையைப் போல இருந்ததாக கூறப்படுகிறது. முஹம்மதுவின் நபித்துவத்தை நிருபித்து மக்கள் ஏற்றுக்கொள்ளச் செய்வதற்கு இந்த மச்சம் போன்ற அடையாளம் எப்படி உதவமுடியும்?

2) இறைவன் தன் நபிகளை அனுப்பும் போது, அவர்களின் நபித்துவத்தை நிருபிக்க, அற்புத அடையாளங்களைச் செய்வான். இப்படிப்பட்ட இயற்கைக்கு அப்பாற்பட்ட அற்புதங்கள் மூலமாக இவர் ஒரு நபி என்று நம்புவார்கள். ஆனால், அல்லாஹ்வோ, முஹம்மதுவிற்கு ஒரு சரீர குறைபாட்டை, ஒரு மச்சம் போன்ற ஒரு விஷயத்தைக் கொடுத்து, அது நபித்துவ முத்திரை என்றுச் சொல்வது வேடிக்கையாகவும், ஏற்றுக்கொள்ள முடியாததாகவும் உள்ளது.

இந்த மச்சம் எப்படி இருக்கும் என்று மேற்கண்ட ஹதீஸ்கள் சொல்கின்றன. உங்களுக்கு ஆட்சேபனை இல்லையென்றால், கீழ்கண்ட தொடுப்பை சொடுக்கி ஒரு கார்ட்டூன் படத்தை பார்க்கவும், அப்போது இந்த ஹதீஸ் சொல்வது புரியும்.

**https://bereansdesk.blogspot.com/2017/06/muhammads-seal-of-prophethood.html**



**கேள்வி 54:** முஹம்மது தனக்கு தனிச்சலுகைகள் வேண்டுமென்று குர்ஆனில் வசனங்களை சுயமாக சொல்லியுள்ளாரா?

**பதில் 54:** முஹம்மது தமது வசதிக்காகவும், தன் ஆசைகளை நிறைவேற்றிக்கொள்ளவும், குர்ஆனில் வசனங்களை இறக்கியதாக நாம் பார்க்கமுடியும்.

"இப்படியெல்லாம் நடக்கவில்லை" அல்லாஹ் தான் இவ்வசனங்களை இறக்கினான் என்று முஸ்லிம்கள் சொல்வார்கள். ஆனால், மேலோட்டமாக இவ்வசனங்களை பார்த்தால் கூட, நமக்கு உண்மை புரியும்.

**மூன்று உதாரணங்களை மட்டும் இங்கு தருகிறேன்**:

**1) நான்கு மனைவிகளுக்கு மேல் தனக்கு தேவை நோக்கத்தை முஹம்மது கீழ்கண்ட வசனத்தின் மூலம் நிறைவேற்றினார் (குர்ஆன் 33:50).**

இந்த ஒரு வசனம் மட்டும் குர்ஆனில் இல்லாமல் இருந்திருந்தால், முஹம்மது முஸ்லிம்களைப்போன்று அதிகபட்சமாக 4 திருமணங்களை மட்டுமே செய்திருப்பார். இதனை எந்த முஸ்லிமாவது மறுக்கமுடியுமா?

33:50. நபியே! எவர்களுக்கு நீர் அவர்களுடைய மஹரை கொடுத்து விட்டீரோ அந்த உம்முடைய மனைவியரையும், உமக்கு(ப் போரில் எளிதாக) அல்லாஹ் அளித்துள்ளவர்களில் உம் வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்டவர்களையும், நாம் உமக்கு ஹலாலாக்கி இருக்கின்றோம்; அன்றியும் உம் தந்தையரின் சகோதரர்களின் மகள்களையும், உம் தந்தையரின் சகோதரிகள் மகள்களையும், உம் மாமன் மார்களின் மகள்களையும், உம் தாயின் சகோதரிமாரின் மகள்களையும் - இவர்களில் யார் உம்முடன் ஹிஜ்ரத் செய்து வந்தார்களோ அவர்களை (நாம் உமக்கு விவாகத்திற்கு ஹலாலாக்கினோம்); **அன்றியும் முஃமினான ஒரு பெண் நபிக்குத் தன்னை அர்ப்பணித்து, நபியும் அவளை மணந்து கொள்ள விரும்பினால் அவளையும் (மணக்க நாம் உம்மை அனுமதிக்கின்றோம்); இது மற்ற முஃமின்களுக்கன்றி உமக்கே (நாம் இத்தகு உரிமையளித்தோம்;** மற்ற முஃமின்களைப் பொறுத்தவரை) அவர்களுக்கு அவர்களுடைய மனைவிமார்களையும், அவர்களுடைய வலக்கரங்கள் சொந்தமாக்கிக் கொண்டவர்களையும் பற்றி நாம் கடமையாக்கியுள்ளதை நன்கறிவோம்; உமக்கு ஏதும் நிர்ப்பந்தங்கள் ஏற்படாதிருக்கும் பொருட்டே (விதி விலக்களித்தோம்); மேலும் அல்லாஹ் மிக மன்னிப்பவன்; மிக்க அன்புடையவன்.

**2) தன் வளர்ப்பு மகனின் மனைவியை திருமணம் செய்ய முஹம்மதுவிற்கு இறங்கிய குர்ஆன் வசனம்: 33:37**

33:37. (நபியே!) எவருக்கு அல்லாஹ்வும் அருள் புரிந்து, நீரும் அவர் மீது அருள் புரிந்தீரோ, அவரிடத்தில் நீர்: "அல்லாஹ்வுக்குப் பயந்து நீர் உம் மனைவியை (விவாக விலக்குச் செய்து விடாமல்) உம்மிடமே நிறுத்தி வைத்துக் கொள்ளும்" என்று சொன்ன போது அல்லாஹ் வெளியாக்க இருந்ததை, மனிதர்களுக்குப் பயந்து நீர் உம்முடைய மனத்தில் மறைத்து வைத்திருந்தீர்; ஆனால் அல்லாஹ் அவன் தான், நீர் பயப்படுவதற்குத் தகுதியுடையவன்; **ஆகவே ஜைது அவளை விவாக விலக்கு செய்துவிட்ட பின்னர் நாம் அவளை உமக்கு மணம் செய்வித்தோம்;** ஏனென்றால் முஃமின்களால் (சுவீகரித்து) வளர்க்கப்பட்டவர்கள், தம் மனைவிமார்களை விவாகரத்துச் செய்து விட்டால், அ(வர்களை வளர்த்த)வர்கள் அப்பெண்களை மணந்து கொள்வதில் யாதொரு தடையுமிருக்கக் கூடாது என்பதற்காக (இது) நடைபெற்றே தீர வேண்டிய அல்லாஹ்வின் கட்டளையாகும்.

**3) தாம் வீட்டில் இருக்கும் போது, தம் தோழர்கள் அதிக தொல்லை தரக்கூடாது என்று விரும்பிய முஹம்மதுவிற்கு இறக்கப்பட்ட குர்ஆன் வசனம்:**

33:53. **முஃமின்களே! (உங்களுடைய நபி) உங்களை உணவு அருந்த அழைத்தாலன்றியும், அது சமையலாவதை எதிர்பார்த்தும் (முன்னதாகவே) நபியுடைய வீடுகளில் பிரவேசிக்காதீர்கள்;** ஆனால், நீங்கள் அழைக்கப்பட்டீர்களானால் (அங்கே) பிரவேசியுங்கள்; அன்றியும் நீங்கள் உணவருந்தி விட்டால் (உடன்) கலைந்து போய் விடுங்கள்; பேச்சுகளில் மனங்கொண்டவர்களாக (அங்கேயே) அமர்ந்து விடாதீர்கள்; நிச்சயமாக இது நபியை நோவினை செய்வதாகும்; இதனை உங்களிடம் கூற அவர் வெட்கப்படுவார்; ஆனால் உண்மையைக் கூற அல்லாஹ் வெட்கப்படுவதில்லை; நபியுடைய மனைவிகளிடம் ஏதாவது ஒரு பொருளை (அவசியப்பட்டுக்) கேட்டால், திரைக்கு அப்பாலிருந்தே அவர்களைக் கேளுங்கள். அதுவே உங்கள் இருதயங்களையும் அவர்கள் இருதயங்களையும் தூய்மையாக்கி வைக்கும்; அல்லாஹ்வின் தூதரை நோவினை செய்வது உங்களுக்கு தகுமானதல்ல; அன்றியும் அவருடைய மனைவிகளை அவருக்குப் பின்னர் நீங்கள் மணப்பது ஒருபோதும் கூடாது; நிச்சயமாக இது அல்லாஹ்விடத்தில் மிகப்பெரும் (பாவ) காரியமாகும்.



**கேள்வி 55:** முஹம்மது தம் முதல் மனைவி உயிரோடு இருந்த காலக்கட்டத்தில், வேறு எத்தனை பெண்களை திருமணம் செய்தார்?

**பதில் 55:** முஹம்மதுவின் முதல் மனைவி கதிஜா அவர்கள் உயிரோடு இருந்த காலக்கட்டத்தில், முஹம்மது வேறு பெண்களை திருமணம் செய்யவில்லை. இவர் நபியாக மாறிய பிறகும் வேறு பெண்களை திருமணம்

செய்யவில்லை. மக்கா மக்கள் இவருக்கு பெண்களைக் காட்டி ஆசை காட்டினாலும் இவர் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. எனக்கு பெண்கள் வேண்டாம், அல்லாஹ்வின் செய்தியைச் சொல்வது தான் என் பிரதானமான நோக்கம் என்று வாழ்ந்தார்.

ஆனால், முதல் மனைவி கதிஜா அவர்கள் மரித்த பிறகு, இவர் பல மனைவிகளை திருமணம் செய்தார். முஸ்லிம் அறிஞர்களின் கூற்றுப்படி 11 மனைவிகள் இவருக்கு இருந்தார்கள். வேறு அனேக பெண்களை திருமணம் செய்யவும் ஒப்பந்தம் செய்தார், ஆனால் பல காரணங்களுக்காக அந்த திருமணங்கள் நடைபெறவில்லை. மேலும் தம் வலக்கரங்களுக்கு சொந்தமான அடிமைப் பெண்களோடு திருமணம் செய்துக்கொள்ளாமலேயே உடலுறவு கொண்டார்.



**கேள்வி 56:** முஹம்மதுவின் கடைசி ஆசை என்னவாக இருந்தது? அது நிறைவேறியதா?

**பதில் 56:** முஹம்மதுவின் கடைசி ஆசை நிறைவேறவில்லை? புகாரி சொல்லும் சரித்திரத்தை சிறிது புரட்டுவோம்.

புகாரி 7366. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்கு இறப்பு நெருங்கிவிட்டபோது, அவர்களின் இல்லத்தில் உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்கள் உள்பட பலர் இருந்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் '**வாருங்கள்; உங்களுக்கு நான் ஒரு மடலை எழுதித் தருகிறேன். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழிதவறமாட்டீர்கள்**' என்றார்கள். உமர்(ரலி) அவர்களை (நோயின்) வேதனை மிகைத்துவிட்டது. (எழுதித் தருமாறு அவர்களை தொந்தரவு செய்யாதீர்கள்.) உங்களிடம் தான் குர்ஆன் இருக்கிறதே! நமக்கு (அந்த) இறைவேதமே போதும்' என்றார்கள். வீட்டிலிருந்தவர்கள் கருத்து வேறுபட்டு சச்சரவிட்டுக் கொண்டார்கள். அவர்களில் சிலர், '(நபியவர்கள் கேட்ட எழுது பொருளை அவர்களிடம்) கொடுங்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உங்களுக்கு ஒரு மடலை எழுதித் தருவார்கள். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழிதவறமாட்டீர்கள்' என்றார்கள். வேறு சிலர் உமர்(ரலி) அவர்கள் சொன்னதையே சொன்னார்கள். நபி(ஸல்) அவர்களுக்கு அருகே மக்களின் கூச்சலும் குழப்பமும் சச்சரவும் மிகுந்தபோது நபி(ஸல்) அவர்கள், 'என்னைவிட்டு எழுந்து செல்லுங்கள்' என்றார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் (இந்த ஹதீஸை அறிவித்துவிட்டு), 'மக்கள் கருத்து வேறுபட்டு கூச்சலிட்டுக் கொண்டதால் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும்

அவர்கள் எழுதித்தர நினைத்த மடலுக்கும் இடையே குறுக்கீடு ஏற்பட்டதுதான் சோதனையிலும் பெரும் சோதனையாகும்' என்று கூறுவார்கள்.

இந்த நிகழ்ச்சியில் நடந்தவற்றை சுருக்கமாக நான் உனக்கு தருகிறேன்.

அ) முஹம்மது மரண படுக்கையில் இருக்கிறார்

ஆ) உமர் உட்பட சிலர் அங்கு இருக்கிறார்கள்.

இ) இந்த கூட்டத்தைக் கண்டு, "ஒரு மடலை நான் எழுதித் தருகிறேன், இதன் மூலமாக நீங்கள் வழிதவறிப் போகமாட்டீர்கள் என்று" முஹம்மது சொல்கிறார்.

ஈ) எங்களுக்கு குர்-ஆனே போதும், இப்போது எதுவும் எழுதத்தேவையில்லை என்று உமர் மறுக்கிறார்.

உ) ஒரு சிலர் முஹம்மது கேட்டதை கொடுப்போம், அவர் முக்கியமான ஒன்றை எழுதித்தருவதாகச் சொல்கிறார் எனவே தடை செய்யவேண்டாமென்றுச் சொல்கிறார்கள்.

ஊ) வேறு சிலர், உமரின் வார்த்தைகளுக்கு இணங்க, கொடுக்க மறுக்கிறார்கள்.

எ) கூச்சல் அதிகமாவதைக் கண்ட முஹம்மது அனைவரையும் வெளியே போகும் படி கட்டளையிடுகிறார்.

ஏ) உமர் எண்ணியதுபோலவே நடந்தது.

உமரின் கவனக்குறைவா? அல்லது உள்ளார்ந்த அர்த்தம் ஏதாவது உள்ளதா?

23 ஆண்டு ஊழியம், ஆறு ஆயிரத்துக்கும் அதிகமான குர்-ஆன் வசனங்கள்(6236), பல வழிப்பறி கொள்ளைகள், பல போர்கள், பல கொலைகள், பல பெண்களின் கற்பு பாலைவன சூட்டில் சூரையாடப்பட்டது அதாவது, போரில் பிடிபட்ட பெண்கள் கற்பழிக்கப்பட்டார்கள், அடிமைகளாக விற்கப்பட்டார்கள். எத்தனை முறை ஜிப்ராயீல் தூதன் இறங்கி வந்து வசனத்தை இறக்கினானோ, எண்ணிக்கை முஹம்மதுவிற்குத் தான் தெரியும். மேற்கண்ட அனைத்து காரியங்களுக்கும் வெளிப்பாடுகளைப் பெற்ற முஹம்மது இன்று மரணப் படுக்கையில் கிடக்கிறார்.

இவர் கேட்டுக்கொண்டதெல்லாம் ஒரு பேனாவையும், ஒரு பேப்பரையும் தான். அதுவும் அவருக்கு கிடைக்கவில்லை. நான் உங்களுக்கு பயன்படும் ஒன்றை எழுதித் தருகிறேன் என்றார். நீங்கள் எழுதுவது எங்களுக்கு தேவையில்ல என்று மறுத்துவிட்டார். கூச்சலும் குழப்பமும் தொடங்கிவிட்டது. (முஹம்மதுவிற்கு எழுதவோ, படிக்கவோ தெரியாது என்று தானே முஸ்லிம்கள் இன்றுவரை

சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள், இங்கு எப்படி இவர் பேனாவையும், பேப்பரையும் கேட்கிறார்…? இதைப் பற்றி மற்றொரு நேரத்தில் சிந்திப்போம்).

உமர் ஏன் தடை செய்யவேண்டும்? உமர் அறியாமையில் இதனைச் செய்தாரா? அல்லது இதற்கு உள்ளார்ந்த அர்த்தம் ஏதாவது இருக்கின்றதா?

சஹாபாக்களின் மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசைகளை தீர்த்துவைத்த முஹம்மதுவின் கடைசி (பென்) ஆசை அலட்சியம் செய்யப்பட்டுவிட்டது.

பாவம் முஹம்மது, ஒரு கைதிக்கு கூட உன் கடைசி ஆசை என்னவென்று கேட்டு நிறைவேற்ற முயற்சி எடுப்பார்கள், ஆனால் இவருக்கு வந்த நிலை வேறு எவருக்கும் வரக்கூடாது.

உங்கள் மூலமாக கொடுக்கப்பட்ட குர்-ஆன் எங்களுக்கு உண்டு, அதுவே போதும் என்று உமர் கூறினார். குர்-ஆன் போதுமென்று முஹம்மதுவிற்குத் தெரியாதா? உமர் முஹம்மதுவிற்கு புதிதாக ஏதாவது கற்றுக்கொடுக்க முடியுமா என்ன?

ஒரு வேளை, முஹம்மதுவிற்கு அடுத்தபடியாக, யார் தலைவராக வரவேண்டும் என்று முஹம்மது எழுதிக் கொடுத்துவிட்டுச் சென்றுவிட்டால், என்ன செய்வது? மதினாவின் முஸ்லிம்களாகிய அன்சாரிகளுக்கு அந்த நாற்காலி சென்றுவிட்டால் என்ன செய்யமுடியும்? முஹம்மது ஒரு முறை எழுதிவிட்டால், அதனை யாரும் மாற்றமுடியாது அல்லவா? இந்த சூழல் வருவதற்கான வாய்ப்பை ஏன் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும்? தானாக வாய்ப்பு வந்தாலும் அதனை எப்படியாவது கெடுத்துவிடலாம் என்ற எண்ணம் உமரின் உள்ளத்தில் தோன்றியதோ?

**கட்டாயம் இந்த ஹதீஸை படித்தே ஆகவேண்டும்.**

புகாரி 4447. முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு கஅப் இப்னு மாலிக் அல் அன்சாரி(ரலி) - (இவருடைய தந்தை) கஅப்பின் மாலிக்(ரலி) (தபூக் போரில் கலந்துகொள்ளத் தவறியதற்காக) பாவமன்னிப்பு வழங்கப்பட்டவர்களில் ஒருவராயிருந்தார். அன்னார் எனக்கு அறிவித்தார்கள்:

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) எனக்குத் தெரிவித்தார்கள்.

இறைத்தூதர்(ஸல்) எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது அவர்களிடமிருந்து அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) (அவர்களை நலம் விசாரித்துவிட்டு) வெளியேறினார்கள். உடனே மக்கள், 'அபுல் ஹசனே! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எப்படியுள்ளார்கள்?' என்று (கவலையுடன்) விசாரிக்க, அதற்கு அவர்கள், 'அல்லாஹ்வின் அருளால் நலமடைந்துவிட்டார்கள்"

என்று கூறினார்கள். உடனே அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப்(ரலி), அலீ(ரலி) அவர்களின் கையைப் பிடித்துக்கொண்டு அவர்களிடம், 'அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் மூன்று நாள்களுக்குப் பிறகு, (பிறரின்) அதிகாரத்திற்குப் பணிந்தவராக ஆம்விடப்போகிறீர்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் விரைவில் தம் இந்த நோயின் காரணத்தால் இறந்துவிடப் போகிறார்கள் என்றே கருதுகிறேன். மரணத்தின்போது அப்துல் முத்தலிபுடைய மக்களின் முகங்களை(ப் பார்த்து மரணக் களையை) அடையாளம் கண்டுகொள்பவன் நான். **எனவே, எங்களை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அழைத்துச் செல்லுங்கள். 'இந்த ஆட்சியதிகாரம் (அவர்கள் இறந்த பிறகு) யாரிடமிருக்கும்?' என்று கேட்டுக் கொள்வோம். நம்மிடம்தான் இருக்கும் என்றால் அதை நாம் அறிந்துகொள்வோம். அது பிறரிடம் இருக்கும் என்றால் அதையும் நாம் அறிந்துகொள்வோம். (தமக்குப் பின் யார் பிரதிநிதி என்பதை அறிவித்து) அவர்கள் நமக்கு இறுதி உபதேசம் செய்வார்கள்" என்று கூறினார்கள்.** **அதற்கு அலீ(ரலி), 'நமக்கு அதைத் தர மறுத்துவிட்டால் அவர்களுக்குப் பிறகு மக்கள் நமக்கு (ஒருபோதும்) அதைத் தரமாட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அதை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்கமாட்டேன்" என்று பதிலளித்தார்கள்.**

இறைத்தூதரிடம் ஒரு முக்கியமான கேள்வியை கேட்டுவிடுவோம் என்று சிலர் சொல்லும் போது, அலி அவர்கள் மறுத்துவிட்டார்கள். அவருக்கு அடுத்தபடியாக யார் நாற்காலியை பிடிப்பது என்பதைப் பற்றி கேட்பது இந்த சூழலில் மிகவும் முக்கியமான விஷயமாக உள்ளது. எனவே கேட்போம் என்றுச் சொன்னபோது, இதனை அலி மறுத்துவிட்டார். முஹம்மது மீது அலி அவர்களுக்கு நம்பிக்கையில்லை, ஒருவேளை ஆட்சி அதிகாரம் அன்சாரிகளுக்கு (மதினா முஸ்லிம்களுக்கு) என்று முஹம்மது சொல்லிவிட்டால், அதன் பிறகு தனக்கு அதிகாரம் வராது என்பதால், அலி மறுத்துவிட்டார்.

முஹம்மது சொன்னது கூட வஹி தான் என்று ஓயாமல் சொல்லிக்கொண்டும், நம்பிக்கொண்டும் இருக்கிறார்கள் முஸ்லிம்கள். அப்படிப்பட்ட வஹி மூலமாக வரும் செய்தி எங்களுக்கு வேண்டாம் என்று உதறி தள்ளிவிட்டார், ஒரு சஹாபா அலி, இவர் முஹம்மதுவின் அன்பான மகளின் கணவராவார். அல்லாஹ் எடுக்கும் முடிவு, தங்களுக்கு சாதகமாக இல்லாமல் போய்விட்டால் என்ன செய்வது? எனவே, வாய்ப்பையை உருவாக்கக்கூடாது என்றுச் சொல்லி, அல்லாஹ்வையே ஜெயித்துவிட்டார் அலி.

அலி அவர்களுக்கு ஆட்சி அதிகாரம் செல்லக்கூடாது என்று ஆயிஷா அவர்கள் விரும்பியதாக, இன்னொரு ஹதீஸும் சொல்கிறது. முஹம்மது தனக்கு அடுத்து ஆட்சியை நடத்த அலியை தெரிவு செய்தாராமே என்று கேட்டதற்கு, அப்படியெல்லாம் ஒன்றும் நடக்கவில்லை என்று ஆயிஷா அவர்கள் மறுத்தார்கள். இதனையும் நாம் புகாரி ஹதீஸில் காண்லாம்.

புகாரி 4459. அஸ்வத் இப்னு யஸீத்(ரஹ்) அறிவித்தார்

"நபி(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களிடம் (தமக்குப் பின் ஆட்சியாளராக இருக்கும்படி) இறுதிவிருப்பம் (வஸிய்யத்) தெரிவித்துவிட்டார்களாமே" என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கூறப்பட்டது. அதற்கவர்கள், 'இதைச் சொன்னவர் யார்?' என்ற கேட்டுவிட்டு, '(நபி(ஸல்) அவர்களின் இறுதி வேளையில்) நான் அவர்களை என் நெஞ்சோடு அணைத்துக்கொண்டிருந்தேன். அப்போது அவர்கள் (எச்சில் துப்புவதற்காகப்) பாத்திரம் கொண்டு வரும்படி கூறிவிட்டு அப்படியே **ஒரு பக்கம் சரிந்து இறந்துபோய்விட்டார்கள். (அவர்கள் இறந்ததைக் கூட) நான் உணரவில்லை. (நடந்தது இவ்வாறிருக்க) அலீ அவர்களுக்கு (ஆட்சிப் பொறுப்பை) எப்படி அவர்கள் சாசனம் செய்திருப்பார்கள்?**' என்று கேட்டார்கள். Book :64

**சஹாபாக்கள் - பொறுக்கி எடுத்த இஸ்லாமிய முத்துக்கள்:**

அ) அலி அவர்கள் நல்ல வாய்ப்பை உருவாக்க மறுத்துவிட்டார்.

ஆ) உமர் அவர்கள், முஹம்மதுவினால் உண்டான வாய்ப்பையே தட்டிக் கழித்துவிட்டார்.

வாழ்க இஸ்லாம், வாழ்க இஸ்லாமிய ஆரம்ப கால முஸ்லிம்கள். பாவம் முஹம்மது, அல்லாஹ்வே தனக்கு எதிராக சூழ்ச்சி செய்யும் போது, இவரால் என்ன செய்யமுடியும்? அல்லாஹ் சூழ்ச்சி செய்வதில் வல்லவராமே!

"அல்லாஹ்வா! சூழ்ச்சி செய்தான்! இல்லை இல்லை, சஹா பாக்கள் செய்த குழப்பத்தினாலும், ஆட்சி அதிகாரத்தின் மீது அவர்கள் கொண்டிருந்த ஆசையினாலும் இப்படி எங்கள் இறைத்தூதருடைய கடைசி ஆசை நிறைவேறவில்லை" என்று சில முஸ்லிம்கள் சொல்லக்கூடும். ஆனால், இது தவறு, இவர்களுக்கு இஸ்லாம் தெரியாது, குர்-ஆன் தெரியாது, அல்லாஹ்வைத் தெரியாது. இவைகள் எல்லாம், அல்லாஹ்வின் அனுமதிக்கு உட்பட்டுத் தான் நடந்தது. புரியவில்லையா! அடுத்த தலைப்பில் தரப்படும் குர்-ஆன் வசனங்களைப் பாருங்கள். உண்மை புரியும்.

முஹம்மதுவின் கடைசி ஆசையை நிறைவேற்ற தவறிய அல்லாஹ்

மேலோட்டமாக, மேற்கண்ட ஹதீஸ்களை பார்த்தால், உமரின் செயலினால் தான் முஹம்மதுவின் கடைசி ஆசை நிறைவேறாமல் போய்விட்டது என்று சொல்லத்தோன்றும். ஆனால் உண்மையில், அல்லாஹ் நாடவில்லை, அதனால், முஹம்மதுவின் ஆசை நிறைவேறவில்லை என்பதை உணர்ந்துக் கொள்ளலாம்.

அ) உச்சு சப்பு இல்லாத அற்பமான விஷயங்களுக்கு அல்லாஹ் வசனங்களை இறக்குவார்.

ஆ) முஹம்மதுவின் ஆசைகளை பூர்த்திசெய்ய அல்லாஹ்விடமிருந்து ஈமெயில் சீக்கிரமாக வரும்.

இ) வளர்ப்பு மகனின் மனைவியை எடுத்து முஹம்மதுவிற்கு கொடுப்பதற்கு அல்லாஹ்வின் வஹி இறங்கிவரும்.

ஆனால், 23 ஆண்டுகள் உழைத்த உழைப்பின் கனி கனிந்துவரும் நேரத்தில், சஹாபாக்கள் செய்யப்போக்கும் கூச்சல் குழப்பம், அதிகார துர்பியரோகம், கொலைகள், அவமானங்கள் போன்றவைகள் நடக்கப்போகின்ற நேரத்தில் "அந்த சமுதாயத்துக்கு தேவையான வஹி அல்லாஹ்விடமிருந்து வராது". ஒரு வேளை வந்திருந்தாலும், அதனை உமர் போன்ற ஒரு மனிதரால் தடை செய்யமுடியும் என்றுச் சொல்லத்தோன்றுகிறது.

அடுத்த தலைவர் யார் வரவேண்டும் என்ற ஒரு தெளிவான வசனம் குர்-ஆனில் இல்லை, ஹதீஸில் இல்லை, சாவதற்கு முன்பாக யாரோ ஒருவரை விரல் நீட்டி காட்டிவிட்டுச் செல்லலாம் என்று விரும்பினாலும், அல்லாஹ் நாடவில்லை.

குறைந்தபட்சம் ஒரு காகிதத்தில் எழுதி கொடுக்கலாம் என்று விரும்பினாலும், இஸ்லாமிய உம்மா மக்கள் சும்மாவே சண்டை போட்டுக்கொள்கிறார்கள்.

ஒலி வடியில் தான் எங்கள் குர்-ஆன் பாதுகாக்கப்பட்டு இருக்கிறது என்றுச் சொல்கின்ற முஸ்லிம்கள், ஏன் முஹம்மது ஒலிவடியில் தன் கடைசி ஆசையை சொல்லிவிட்டுச் சென்று இருக்கக்கூடாது என்று சிந்திக்கவேண்டும். கடைசி ஆசையைச் சொல்ல ஏன் கடைசி வரைக்கும் முஹம்மது காத்திருக்கும் படி அல்லாஹ் செய்தார்? ஒரு வாரம் அல்லது மாதத்துக்கு முன்பாகவே சொல்லிவிட்டுச் சென்று இருக்கலாம் அல்லவா?

**இதுவரை முன்வைத்த விவரங்களுக்கு ஆமீன் என்றுச் சொல்லும் குர்-ஆன் வசனங்கள்:**

**அல்லாஹ்வின் சித்தமில்லாமல், எதுவும் உலகில் சிந்தாது:**

குர்-ஆன் 9:51. “**ஒருபோதும் அல்லாஹ் விதித்ததைத் தவிர (வேறு ஒன்றும்) எங்களை அணுகாது;** அவன் தான் எங்களுடைய பாதுகாவலன்” என்று (நபியே!) நீர் கூறும்; முஃமின்கள் அல்லாஹ்வின் மீதே பூரண நம்பிக்கை வைப்பார்களாக!

**முஹம்மதுவின் கடைசி ஆசை, ஆசையாகவே நின்றுவிடும் என்று அல்லாஹ்வின் ஏட்டில் அல்லாஹ்வே முன்குறித்துள்ளான்:**

குர்-ஆன் 57:22. பூமியிலோ, அல்லது உங்களிலோ **சம்பவிக்கிற எந்தச் சம்பவமும் - அதனை நாம் உண்டாக்குவதற்கு முன்னரே (லவ்ஹுல் மஹ்ஃபூள்) ஏட்டில் இல்லாமலில்லை;** நிச்சயமாக அது அல்லாஹ்வுக்கு மிக எளிதானதேயாகும்.

குர்-ஆன் 57:23. **உங்களை விட்டுத் தவறிப்போன ஒன்றின் மீது நீங்கள் துக்கப்படாமல் இருக்கவும்**, அவன் உங்களுக்கு அளித்தவற்றின் மீது நீங்கள் (அதிகம்) மகிழாதிருக்கவும் (இதனை உங்களுக்கு அல்லாஹ் அறிவிக்கிறான்);

கர்வமுடையவர்கள், தற்பெருமை உடையவர்கள் எவரையும் அல்லாஹ் நேசிப்பதில்லை.

இவ்விவரங்களை கீழ்கண்ட கட்டுரையிலிருந்து எடுக்கப்பட்டது: **https://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/ramalan2015day8.html**



**கேள்வி 57:** அல்லாஹ்வை தொழுவது அல்லது முஹம்மதுவிற்கு பதில் சொல்வது எது முக்கியம்? அல்லாஹ்வா? அல்லது முஹம்மதுவா?

**பதில் 57:** அதிகாரபூர்வமானதாக கருதப்படும் ஹதீஸ்களின்படி, முஹம்மது தொழுகையில் (நமாஜ்) இருக்கும் போது, யாராவது அவருக்கு சலாம் (வணக்கம்) கூறினால், உடனே அவர்களுக்கு அவர் சலாம் கூற மறுத்துள்ளார்.

**கீழ்கண்ட ஹதீஸ்களை படிக்கவும்:**

புகாரி எண்: 3875

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருக்கும்போது நாங்கள் அவர்களுக்கு சலாம் சொல்லுவோம். உடனே, அவர்கள் எங்களுக்கு பதில் சலாம் சொல்வார்கள். நாங்கள் (அபிசீனிய மன்னர்) நஜாஷீயிடமிருந்து திரும்பி வந்தபோது நபி(ஸல்) அவர்களுக்கு (அவர்கள் தொழுகையிலிருக்கும் போது) சலாம் சொன்னோம். அப்போது அவர்கள் எங்களுக்கு பதில் சலாம் சொல்லவில்லை. நாங்கள், '**இறைத்தூதர் அவர்களே! (நீங்கள் தொழும் போது) நாங்கள் உங்களுக்கு சலாம் சொல்ல, நீங்களும் அதற்கு பதில் சலாம் சொல்லி வந்தீர்களே**" என்று கேட்டோம். **அதற்கு அவர்கள், 'நிச்சயமாக! தொழுகையில் கவனம் தேவைப்படுகிறது" என்று பதிலளித்தார்கள்**.

புகாரி எண்: 1217

ஜாபிர்பின் அப்துல்லாஹ்(ரலி) அறிவித்தார்.

அவர்கள் என்னை தம் அலுவல் விஷயமாக (வெளியூர்) அனுப்பினார்கள். நான் அந்த வேலையை முடித்துத் திரும்பி வந்து நபி(ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறினேன். **அவர்கள் எனக்கு மறுமொழி கூறவில்லை**. என் மனதில் அல்லாஹ்வுக்கு மட்டுமே தெரிந்த சில எண்ணங்கள் தோன்றின. நான் தாமதமாக வந்ததால் என்மேல் நபி(ஸல்) கோபமாக இருக்கக் கூடும் என்று மனதிற்குள் கூறிக் கொண்டேன். பிறகு மறுபடியும் ஸலாம் கூறினேன். அவர்கள் பதில் கூறவில்லை. முன்பைவிடக் கடுமையாக சந்தேகங்கள் ஏற்பட்டன. பின்னர் மீண்டும் ஸலாம் கூறினேன். **எனக்கு பதில் ஸலாம் கூறிவிட்டு நான் தொழுது**

**கொண்டிருந்ததால்தான் உமக்குப் பதில் கூறவில்லை** என்று கூறினார்கள். (நான் நபி(ஸல்) அவர்களிடம் வந்தபோது) கிப்லா அல்லாத திசையை நோக்கி தம் வாகனத்தின் மீதமர்ந்து தொழுது கொண்டிருந்தனர்.

இது ஒரு சிறந்த கோட்பாடு அல்லது சிறந்த கட்டளையாகும், அதாவது ஒருவர் தன்னை படைத்தவனை, காப்பவனை தொழுதுக்கொண்டு இருக்கும் வேலையில், அதைவிட முக்கியமான வேலை அவருக்கு என்ன இருக்கப்போகிறது?

ஆனால், முஹம்மது இதற்கு நேர் எதிராக நடந்துக்கொண்டு, தான் சொன்னதை தானே செய்யாமல் இருந்திருக்கிறார். அதாவது ஒரு மனிதன் தொழுகையில் இருக்கும் போது, முஹம்மது அவரை அழைத்தார், அதற்கு அம்மனிதர் தொழுகையில் இருந்தவாரே பதில் தரவில்லை என்றுச் சொல்லி, அம்மனிதரை முஹம்மது கடிந்துக்கொண்டார். இதில் இன்னும் மோசமான விவரம் என்னவென்றால், அந்த முஸ்லீம் தன் தொழுகையை பாதியில் நிறுத்திவிட்டு அல்லாஹ்வின் தூதருக்கு பதில் தரவேண்டும் என்பதை நியாயப்படுத்த முஹம்மது குர்ஆன் வசனத்தையே ஆதாரமாக காட்டியது தான்!

புகாரி எண்: 4647

அபூ ஸயீத் இப்னு முஅல்லா(ரலி) அறிவித்தார்

நான் ('மஸ்ஜிதுந் நபவீ' பள்ளிவாசலில்) தொழுது கொண்டிருந்தேன். அப்போது என்னைக் கடந்து சென்ற இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னை அழைத்தார்கள். நான் தொழு(து முடிக்கு)ம்வரை அவர்களிடம் செல்லவில்லை. பிறகு நான் அவர்களிடம் சென்றேன். **அவர்கள் என்னிடம், 'நீங்கள் ஏன் என்னிடம் உடனே வரவில்லை? அல்லாஹ், 'இறைநம்பிக்கையாளர்களே! இறைத்தூதர் உங்களை அழைக்கும்போது அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் விரைந்து பதில் அளியுங்கள்' என்று கூறவில்லையா?' எனக் கேட்டார்கள்**. . . .

புகாரி எண்: 5006

அபூ ஸயீத் இப்னு முஅல்லா(ரலி) அறிவித்தார்

நான் (பள்ளிவாசலில்) தொழுது கொண்டிருந்தபோது என்னை நபி(ஸல்) அவர்கள் அழைத்தார்கள். (தொழுகையில் இருந்தமையால்) நான் அவர்களுக்கு உடனடியாக பதிலளிக்கவில்லை. (தொழுது முடித்த பிறகு) 'இறைத்தூதர் அவர்களே! நான் தொழுது கொண்டிருந்தேன். (எனவேதான் உடனடியாக தங்களுக்கு நான் பதிலளிக்கவில்லை)' என்று சொன்னேன். **நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ், '(இறைநம்பிக்கையாளர்களே!) அல்லாஹ்வும் (அவனுடைய) தூதரும் உங்களை அழைக்கும்போது அவர்களுக்கு பதிலளியுங்கள்' என்று (திருக்குர்ஆன் 08:24 வது வசனத்தில்) சொல்லவில்லையா?' என்று கேட்டார்கள்**. . . .

தன்னை படைத்த இறைவனை தொழுதுக்கொள்ளும் செயலைவிட தனக்கு மதிப்பு அதிகமாக தரவேண்டும் என்று முஹம்மது எண்ணியுள்ளார் என்பதை இதன் மூலம் அறியலாம். இந்த விவரம் பற்றி மேலதிக விவரங்களுக்காக கீழ்கண்ட கட்டுரைகளை படிக்கவும்:

- **On Serving Others Besides Allah - The Hypocrisy and Blasphemy of Islam**
- **Islamic Associates Inc.- Revisiting the Issue of Muhammad's Partnership with Allah**
- **Revisiting the Issue of Islam's Second God**

இந்த நிகழ்ச்சி முஹம்மதுவின் முரண்பட்ட செயலுக்கான இன்னொரு உதாரணமாகும். அதாவது தான் எதை பிரச்சாரம் செய்தாரோ அதை அவரே (முஹம்மதுவே) பின்பற்றவில்லை. தன்னை பின்பற்றுகிறவர்கள் தங்கள் தொழுகையை பாதியிலே நிறுத்திவிட்டு, தனக்கு பதில் தரவேண்டும் என்று எதிர்ப்பார்த்தார், ஆனால் அதே போல அவர்களுக்கு இவர் செய்யவில்லை.



**கேள்வி 58:** முஹம்மதுவின் பேரப்பிள்ளைகள் யார்?

**பதில் 58:** முஹம்மதுவிற்கு மூன்று மகன்களும், நான்கு மகள்களும் இருந்தார்கள். இவர்களில் மகன்கள் அனைவரும் சிறு வயதிலேயே மரித்துவிட்டார்கள். முஹம்மதுவிற்கு மகள்கள் மூலமாகத் தான் பேரப்பிள்ளைகள் பிறந்தார்கள்.

இஸ்லாமிய அறிஞர்களின் படி, முஹம்மதுவிற்கு 8 (எட்டு) பேரப்பிள்ளைகள் இருந்ததாக கூறப்படுகின்றது.

மகள் ஃபாத்திமா மற்றும் மருமகன் அலி மூலமாக, 5 பேரப்பிள்ளைகள் பிறந்தார்கள். மூன்று மகன்கள் மற்றும் இரண்டு மகள்கள்:

- மகன்கள்: ஹசேன், ஹுசேன், முஹஸ்ஸன்
- மகள்கள்: ஜைனப், உம் குல்தும்

மகள் ஜைனப்பிற்கு(கணவர்: அபி அஸ் இப்னு அர்ரபி) இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள்: அலி (குழந்தையாக இருக்கும் போது மரித்துவிட்டார்), மகள் அமாமா.

மகள் ருகைய்யாவிற்கு மருமகன் உஸ்மான் மூலமாக ஒரு மகன் 'அப்துல்லாஹ்' பிறந்தார்.

இந்த எட்டு பேர் தான் முஹம்மதுவின் பேரப்பிள்ளைகள்.



**கேள்வி 59:** முஹம்மதுவின் பேரன்களில் யார் 'இஸ்லாமிய அரசு தலைவராக (கலீஃபாவாக) பதவி வகித்தார்'?

**பதில் 59:** ஃபாத்திமாவிற்கும் அலிக்கும் பிறந்த ஹசேன் என்ற மகன் ஐந்தாவது கலீஃபாவாக பதவி ஏற்றார். நான்காவது கலிஃபாவாக இருந்தவர் இவரது தந்தை அலி ஆவார். இவர் ஆறு அல்லது ஏழு மாதங்கள் தான் கலீஃபாவாக இருந்தார், இவரிடமிருந்து இந்த பதவியை வலுக்கட்டாயமாக பிடுங்கப்பட்டு, முஅவியா 1 என்பவர் கலீஃபாவாக மாறினார்.

அதன் பிறகு ஹசேன், மதினாவில் தமது 45 வயது வரை உயிரோடு இருந்ததாகவும், இவரது மனைவியே இவருக்கு விஷம் வைத்து கொன்றதாகவும் கூறப்படுகின்றது.



**கேள்வி 60:** ஓமன் நாட்டு அரசனுக்கு முஹம்மது அனுப்பிய செய்தி என்ன? இஸ்லாமிய அழைப்பு எப்படி விடுக்கப்பட்டது?

**பதில் 60:** ஓமன் நாட்டின் ஜுலந்தா சகோதரர்களுக்கு (Julanda Brothers) முஹம்மது நபி தன் சகாக்கள் 'அமர் பின் அல்-‘அஸ் அல்-சஹமி மற்றும் அபு ஜையத் அல்-அன்சாரி' மூலமாக அனுப்பிய செய்தி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

“நேர்வழியில் நடப்பவன் மீது சாந்தி உண்டாகட்டும்! இஸ்லாமிற்கு நான் உங்களை அழைக்கிறேன். என் அழைப்பை ஏற்றுக்கொள்ளுங்கள், நீங்கள் சேதமாகாமல் இருப்பீர்கள். நான் மனித இனத்திற்காக வந்த இறைவனின் தூதுவன் (தீர்க்கதரிசி) ஆவேன், தீமை செய்பவர்கள் மீது இறைவனின் வார்த்தையை காட்டுவதற்காக வந்தேன். எனவே, நீங்கள் இஸ்லாமை அங்கீகரித்தால், என் வலிமையை (POWER) உங்களுக்குத் தருவேன். **ஆனால், நீங்கள் இஸ்லாமை ஏற்றுக்கொள்ள மறுத்தால், உங்கள் வலிமை (POWER) அழிக்கப்படும்.** என் குதிரைகள் உங்கள் நாட்டின் நிலத்தில் பாளயமிறங்கும், என் தீர்க்கதரிசனம் உங்கள் நாட்டின் மீது வெற்றிக்கொள்ளும்.”

**In English:**

> "Peace be upon the one who follows the right path! I call you to Islam. Accept my call, and you shall be unharmed. I am God's Messenger to mankind, and the word shall be carried out upon the miscreants. If, therefore, you recognize Islam, I shall bestow power upon you. But if you refuse to accept Islam, your power shall vanish, my horses shall camp on the expanse of your territory and my prophecy shall prevail in your kingdom."

[அரபி மொழியில் எழுதப்பட்ட இந்த கடிதத்தின் உண்மை புகைப்படத்தை இங்கு (sizes **27K** or **772K**) காணலாம், மற்றும் இச்செய்தியின் ஆங்கில மொழிபெயர்ப்பையும் இங்கு (**31K**) காணலாம். இந்த இரண்டும் "ஓமன் நாட்டின் சோஹார் கோட்டையில், பார்வைக்காக வைக்கப்பட்டுள்ளது]

சோஹருக்கு முஹம்மதுவின் செய்தியாளர்கள் வந்துச் சென்ற இரண்டரை நூற்றாண்டுகளுக்கு பின்பு, சரித்திர ஆசிரியர் அல்-பலதூரி (al-Baladhuri) கீழ் கண்டவாறு விவரிக்கிறார்.

"ஓமன் நாட்டு மக்கள் சத்தியத்தின் ஆதாரத்திற்கும், மற்றும் இறைவனுக்கும் அவரது நபிக்கும் கீழ் படிவதற்கு உறுதியளித்தபோது, அமர், அவர்களது அமீர் மற்றும் அபு ஜையத் இவர்கள் தொழுகையை நடத்துவதற்கும், இஸ்லாம் பற்றி விவரிப்பதற்கும், குர்ஆனை கற்றுக்கொடுப்பதற்கும் மற்றும் இஸ்லாம் மதத்தின் பிரமாணங்களை கற்றுக் கொடுப்பதற்கும் பொறுப்பாளிகளாக்கப்பட்டார்கள்."

மேற்கத்திய நாடுகளில் வாழும் முஸ்லீம்கள் "எங்கள் மார்க்கத்தில் கட்டாயம் இல்லை" என்று வாதம் புரிவார்கள். இப்படிப்பட்டவர்களின் சொந்த நபியினுடைய சுன்னா இவர்களின் இந்த வாதத்திற்கு முரண்பட்டதாக இவர்களுக்குத் தெரியவில்லை?

இதைப் பற்றிய மேலதிக விவரங்களை அறிய கீழ்கண்ட தமிழ் கட்டுரையை படிக்கவும்:

**https://www.answering-islam.org/tamil/authors/umar/abumuhai/aslim_taslam.html**



முஹம்மதுவையும் இஸ்லாமையும் புகழ்ந்து எழுதப்படும் புத்தகங்களை முஸ்லிம்கள் தூக்கிப் பிடிப்பார்கள். அப்புத்தகங்களை எழுதிய ஆசிரியர்களை வாழ்த்துவார்கள் கௌரவப்படுத்துவார்கள். ஆனால், இஸ்லாமையும் முஹம்மதுவையும் கேள்வி கேட்டு, விமர்சனம் செய்து எழுதப்படும் புத்தகங்களை முஸ்லிம்கள் தாக்கிப் பேசுவார்கள், முடிந்தால் சில முஸ்லிம் தீவிரவாதிகள் அப்புத்தகங்களை எழுதிய ஆசிரியர்களை கொலை செய்வார்கள்.

இந்த வரிசையில் முஸ்லிம்களின் மனதை கொள்ளையிட்ட மைக்கேல் ஹார்ட் என்ற எழுத்தாளர் எழுதிய புத்தகம் பற்றிய விவரங்களை கேள்வி பதில்களாக நாம் காண்போம்.




**The 100 - A Ranking of the Most Influential Persons in History by Michael H. Hart**

(என் நண்பர் ஒருவர் என்னிடம் இந்த புத்தகம் பற்றி ஆய்வு செய்து, விளக்கும்படி கேட்டுக்கொண்டார். நானும் இந்த புத்தகத்தை படித்துப் பார்க்கவேண்டுமென்று பல ஆண்டுகளாக (ஆம் பல ஆண்டுகளாக) நினைத்திருந்தேன், ஆனால் நேரம் வாய்க்கவில்லை. இந்த முறை கொரொனாவின் காரணத்தினால் களத்தில் இறங்கிவிடவேண்டியது தான் என்று முடிவு செய்துவிட்டேன். "கொரொனாவின் காரணம்" என்று நான் சொன்னது, "வீட்டிலிருந்து வேலை செய்யும் வாய்ப்பு கிடைத்ததால், தினமும் ஆபிஸுக்குச் சென்று வரும் நேரம் மிச்சமானது அல்லவா அதனால் தான்".)

## முஸ்லிம்களின் அறியாமையும் அதன் விளைவுகளும் :

எப்பாடுபட்டாவது அறியாமையில் வாழ முஸ்லிம்கள் அதிகமாக விரும்புவார்கள்! இதற்கு உதவும் வண்ணமாக, அவர்களை அறியாமையிலேயே வைத்திருக்கவேண்டுமென்று முஸ்லிம் அறிஞர்கள் பெரும்பாடுபடுகிறார்கள்.

இந்த தொடரில் நாம் பார்க்கப் போகும் கேள்வி பதில்கள் நிச்சயமாக முஸ்லிம்களுக்கு அதிக நன்மை பயக்கும் என்று நான் நம்புகிறேன். கேள்வி கேட்காமல் கண்மூடித்தனமாக எல்லாவற்றையும் நம்பும் முஸ்லிம்களின் கண்கள் திறக்கப்படும் என்று நான் விசுவாசிக்கிறேன். இந்த 10 கேள்வி பதில்களை படித்த பிறகு, "நாம் மதிக்கும் நம் முஸ்லிம் அறிஞர்களே சொன்னாலும் சரி, இனி நாம் கேள்வி கேட்காமல் நம்பக்கூடாது என்ற அறிவு நிச்சயம் முஸ்லிம்களுக்கு உண்டாகும்".

எந்த புத்தகத்தை தலையில் தூக்கி வைத்துக் கொண்டு முஸ்லிம்கள் ஆடுகிறார்களோ, அப்புத்தகத்தை படித்து, அதன் ஆசிரியர் என்ன சொல்லி இருக்கிறார் என்பதை முஸ்லிம்களுக்கு புரியும்படி விளக்குவது தான் இக்கட்டுரையின் நோக்கம்.

இதை முஸ்லிம்கள் செய்யவில்லையா? என்று கேட்டால், ஆம், முஸ்லிம்கள் இதை செய்யவில்லையென்றுச் சொல்லலாம். சராசரி முஸ்லிம்கள் அரைகுறையாக தங்கள் அறிஞர்களிடமிருந்து கேள்வி பட்டவைகளை கண்மூடித்தனமாக பரப்ப அதிக ஆர்வம் காட்டுகிறார்கள்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.
(அதிகாரம்:அறிவுடைமை **குறள் எண்:**423)

சரி வாருங்கள் அந்த **பெய்ப்பொருள்** என்னவென்பதை அறிந்துக்கொள்ளலாம்.

---

**கேள்வி 61: மைக்கேல் ஹெச் ஹார்ட் (Michael H. Hart) என்பவர் யார்? அவரை ஏன் முஸ்லிம்கள் அதிகமாக கௌரவப்படுத்துகிறார்கள்?**

**பதில் 61:** மைக்கேல் ஹெச் ஹார்ட் (Michael H. Hart) என்பவர் "The 100 - A Ranking of the Most Influential Persons in History" என்ற புத்தகத்தை ஆங்கிலத்தில் 1978 ஆம் ஆண்டு எழுதினார். இப்புத்தகத்தின் இரண்டாம் பதிப்பு 1992 ஆம் ஆண்டு சில சிறிய மாற்றங்களோடு வெளியானது.

**இப்புத்தகத்தின் சிறப்பு:**

சரித்திரத்தில் இன்றுவரை அதிகமாக தாக்கம் உண்டாக்கிய 100 மனிதர்களின் பட்டியலை இவர் கொடுத்து, அதில் இஸ்லாமை தோற்றுவித்த **முஹம்மதுவிற்கு முதல் இடம்** கொடுத்தது தான். இப்புத்தகத்தின் இன்னொரு சிறப்பு அல்லது முஸ்லிம்களுக்கு மிகவும் பிடித்தமான ஒரு விபரம் என்னவென்றால், **இயேசுக் கிறிஸ்துவின் பெயர் 3ம் இடத்தில் வருவது தான்**.

முஸ்லிம்கள் ஒரு மனிதனை கௌரவப்படுத்த மேலே சொன்ன விவரங்களில் முதலாவது பாயிண்டே போதும் அவர்களுக்கு, ஆனால் பழம் நழுவி பாலில் விழுந்தது போன்று, இயேசு கிறிஸ்துவுக்கு மூன்றாம் இடம் கொடுத்தது, முஸ்லிம்களுக்கு இன்னும் குஷியாகிவிட்டது. இதில் இன்னொரு போனஸ் மகிழ்ச்சி, இந்த விவரத்தை ஒரு மேற்கத்திய எழுத்தாளரே சொல்வது தான் (அதுவும் அமெரிக்கர் என்பது இன்னொரு சிக்ஸர்) அடேங்கப்பா, முஸ்லிம்களின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

இப்பொழுது சொல்லுங்கள்? முஸ்லிம்கள் ஏன் மைக்கேல் ஹெச் ஹார்ட் என்ற எழுத்தாளரை விரும்பமாட்டார்கள்?!

தங்கள் உயிரினும் அதிகமாக நேசிக்கும் முகமதுவிற்கு, மேற்கத்திய ஆசிரியர் ஒருவர் உலக தலைவர்களின் பட்டியலில் முதலிடம் கொடுத்ததைப் பற்றி காலஞ்சென்ற இஸ்லாமிய அறிஞர், மேலும் திரு ஜாகிர் நாயக் (மலேசியாவில் தஞ்சம் புகுந்தவர்) அவர்களுக்கு வழிகாட்டியாக இருந்த அஹமது தீதத் முதற்கொண்டு, இன்று பட்டிதொட்டிகளில் இஸ்லாமிய தாவா செய்யும் ஒவ்வொரு முஸ்லிமும், மேற்கோள் காட்டாமல் இருந்ததில்லை. முக்கியமாக முஸ்லிமல்லாத மக்கள் கூடி இருக்கின்ற அவையில், இவர்களுக்கு வாய்ப்பு கிடைக்கும்போது, இந்தப் புத்தகம் பற்றியும், இந்த எழுத்தாளர் பற்றியும், இவர் முஹம்மது அவர்களுக்கு முதல் இடம் கொடுத்தது பற்றியும், இயேசுவிற்கு மூன்றாம் இடம் கொடுத்தது பற்றியும், பேசாமல் இருக்கவே மாட்டார்கள்.

மேலும் 1988 ஆம் ஆண்டில் எகிப்து நாட்டின் அதிபராக இருந்த ஹோஸ்னி முபாரக், இந்த மைக்கேல் ஹெச் ஹார்ட் ஆசிரியரை அழைப்பித்து, கெய்ரோ நகரில் கௌரவபடுத்தினார்.

இந்த புத்தகத்தை அமேஜானில் வாங்கலாம், மற்றும் இணையத்திலும் இதன் பிடிஎஃப் கிடைக்கிறது, பதிவிறக்கம் செய்துக்கொண்டு படிக்கலாம்.

- அமேஜானில் வாங்க தொடுப்பு (Buy at Amazon): **The 100: A Ranking Of The Most Influential Persons In History**
- **PDF download**



**கேள்வி 62: முஹம்மதுவிற்கு முதலாவது இடத்தைக் கொடுத்தது சரிதானா? மைக்கேல் ஹார்ட் சொன்னது தன் சொந்த கருத்து தானே, இதை ஏன் முஸ்லிம்கள் பெரிது படுத்துகிறார்கள்?**

**பதில் 62:** இந்த புத்தகம் வெளிவந்தவுடன் பல விமர்சனங்கள் எழுந்தன. பல எழுத்தாளர்கள் மற்றும் பத்திரிக்கைகள் தங்கள் விமர்சனங்களை முன்வைத்தன.

இவருடைய 100 பேர் பட்டியலில் 3 ஆப்ரிக்கவர்கள், இரண்டு பெண்கள் மற்றும் ஒரு தென் அமெரிக்கர் மட்டுமே இடம் பெற்றுள்ளார் என்று "லாஸ் எஞ்ஜல்ஸ் டைம்ஸ்" பத்திரிக்கை விமர்சித்தது. “த சன்டே டைம்ஸ்” பத்திரிக்கையும் இவரது ஆய்வில் உள்ள குறைபாடுகளை குறிப்பிட்டு விமர்சித்தது. “த வாஷிங்க்டன் போஸ்ட்” என்ற பத்திரிக்கையும், இவரது 100 பேர் பட்டியலில் 10ம் நூற்றாண்டு மற்றும் 15ம் நூற்றாண்டுக்கு இடைப்பட்ட காலத்திலிருந்து வெறும் மூன்று நபர்கள் தான் இடம் பெருகிறார்கள், இதுவே இவரது ஆய்வில் உள்ள குறையை தெரிவிக்கிறது என்று விமர்சித்தது. இதைப் பற்றி விக்கிபீடியா தளத்தில் “**Reviews (Postive Reviews and Negative Reviews)**" என்ற தலைப்பில் உள்ள விவரங்களை படிக்கவும்.

யாராவது ஒரு விவரத்தைச் சொல்லும் போது, அது நமக்கு எதிரான கருத்தாக இருந்தால், உடனே நாம் கோபம் கொள்ளக்கூடாது, ஆராயாமல் செயலில்

இறங்கக்கூடாது, ஆனால் துக்கப்படலாம். இதே போன்று ஒருவர் நமக்கு சாதகமாக ஏதாவது சொல்லும் போது, அவர் சொல்வதில் உண்மை இருக்கின்றதா? இல்லையா? என்பதை ஆராயாமல், உடனே கண்மூடித்தனமாக அதை நம்பி, மற்றவர்களிடம் பரப்பக்கூடாது.

மைக்கேல் ஹார்ட் சொன்னது அவரது சொந்த ஆய்வில் வெளிவந்த அவரது சொந்தக்கருத்து, அதில் பல தவறுகள் இருக்கலாம். ஆனால், முஸ்லிம்கள் இதனை ஒப்புக்கொள்ளமாட்டார்கள். ஒரு மேற்கத்தியர் சொல்லிவிட்டார், புத்தகம் எழுதிவிட்டார் எனவே அது உண்மையாக இருக்கும் என்று ஒரே போடு போடுகிறார்கள்.

சரி, முஸ்லிம்களின் இந்த நிலைப்பாடு அடுத்த கேள்விக்கான பதிலிலும் இதே போன்று இருக்குமா என்று பார்ப்போம் வாருங்கள்.

(இன்னும் நான் மைக்கேல் ஹார்ட் அவர்களின் மேற்கோள்களை காட்டவில்லை, அடுத்தடுத்த கேள்விகளில் அவைகளைப் பார்ப்போம், அப்போது அறிவுள்ள முஸ்லிம்கள் நான் சொல்வது உண்மை என்று நிச்சயம் ஒப்புக்கொள்வார்கள்).



**கேள்வி 63: ஹிட்லர், ஸ்டாலின் மற்றும் முஹம்மது: இவர்களில் முதலிடம் பெறும் கெட்டவர் யார்? என்ற புத்தகம் பற்றி முஸ்லிம்கள் என்ன சொல்வார்கள்?**

**பதில் 63:** டோவ் ஐவரி (Dov Ivry) என்ற கனடா எழுத்தாளர் "Hitler, Stalin, Muhammad: Who ranks as the most evil human ever?" என்ற புத்தகத்தை எழுதியுள்ளார்.

**புத்தகம்: Hitler, Stalin, Muhammad: Who ranks as the most evil human ever?**

**ஹிட்லர், ஸ்டாலின் மற்றும் முஹம்மது: இவர்களில் முதலிடம் பெறும் கெட்டவர் யார்?**

- Buy in Amazon: **Link**

இவரது புத்தகத்திற்கு இவர் அமேஜானில் கொடுத்துள்ள முன்னுரையைப் பாருங்கள்:

Here's how the book begins.

If you are asked who is the most evil man who ever lived, you might immediately nominate Hitler, Stalin, Genghis Khan, and Mao Tse-Tung, all of whom easily exceed double figures in the numbers of their murder victims, and to round out the top five you could throw in Leopold II of Belgium although he won't reach the finals.

May I have the envelope please? The winner is: None Of The Above.

The most evil man who ever lived is Muhammad.

That is my opinion and I shall endeavor to back it up with facts.

இவரது ஆய்வின் படி, "முஹம்மது தான் உலகிலேயே மிகவும் கெட்ட மனிதர்" என்றுச் சொல்கிறார், மேலும் இதற்கான சான்றுகளும் உள்ளன என்றும் கூறுகின்றார்.

இவர் இதுவரை 66 புத்தகங்களை எழுதியுள்ளார், அவைகளை அமேஜானில் கீழ்கண்ட தொடுப்பில் வாங்கலாம்.

- Dov Ivry Books in Amazon: **Dov-Ivry**

சரி, இவரது புத்தகம் பற்றி முஸ்லிம்களின் கருத்து என்ன?

இது இவரது சொந்த ஆய்வின் கருத்து என்று சொல்ல வருகிறீர்கள் அல்லவா? இதே போன்று தான் மைக்கேல் ஹார்ட் என்பவரின் ஆய்வின் கருத்தைத் தான் அவர் சொல்லியுள்ளார். மேலும் மைக்கேல் ஹார்ட்டின் புத்தகத்தை முஸ்லிம்கள் படித்தால், நிச்சயம் அவரை புறக்கணிப்பார்கள், இதை அவர்களுக்கு ஞாபகப்படுத்தவே இந்த என் பதிவு, மேலும் படியுங்கள்.

சரி, மைக்கேல் ஹார்டின் மேற்கோள்களை பார்ப்பதற்கு முன்பாக, இன்னொரு புத்தகத்தைப் பற்றிச் சொல்லிவிடுகிறேன்.



**கேள்வி 64: யார் பெரியவர்? இயேசு? நெபோலியன்? முஹம்மது? ஷேக்ஸ்பியர் அல்லது அப்ரஹாம் லிங்கன்? இந்த புத்தகம் பற்றிய சிறு குறிப்பு?**

**பதில் 64:** இன்னொரு புத்தகமும் என் கண்களுக்குப் பட்டது, அது தான் " Who's Bigger?: Where Historical Figures Really Rank " என்ற புத்தகம்.

இந்த புத்தகத்தை கணினி விஞ்ஞானி ஸ்டீவன் ஸ்கீனா என்பவரும், கூகுள் பொறியாளர் "சார்லஸ் வார்ட்" என்பவரும் "விக்கிபீடியா மற்றும் கூகுள்" என்ற இரு பெரும் இணைய தள விவரங்களை வைத்து ஆய்வு செய்து எழுதியுள்ளார்கள்.

**Who's Bigger?: Where Historical Figures Really Rank** is a 2013 book by the computer scientist Steven Skiena and the Google engineer Charles Ward which ranks historical figures in order of significance.

The authors used the English Wikipedia as their primary data source, and ran the data through algorithms written into computer programs to arrive at a ranking of all historical figures. According to the authors, a higher ranking indicates greater historical significance.[2]

Skiena and Ward compared all English Wikipedia articles against five criteria: two that draw on Google PageRank, and three that draw on internal Wikipedia metrics: the number of times the page has been viewed, the number of edits to the page, and the size of the page. The concept is that these criteria measure the current fame of the subject. This is then manipulated by other algorithms to compensate for a skewing of data toward more recent subjects, arriving at true likely historical significance.[2] In addition to the main list, various sublists (such as figures of a given field of endeavor or country) are included.

மூலம்: **https://en.wikipedia.org/wiki/Who%27s_Bigger%3F**

அமேஜானில் இப்புத்தகத்தை வாங்க தொடுப்பு: **Who's Bigger?: Where Historical Figures Really Rank Kindle Edition**

இந்த ஆய்வில் வெளிவந்த முடிவு என்ன தெரியுமா? யார் முதலாவது இடத்தில் இருக்கிறார்கள்? இயேசு முதலிடமும், முஹம்மது மூன்றாவது இடமும் வகிக்கிறார்.

The top five entries on the overall list are Jesus, Napoleon, Mohammed, William Shakespeare, and Abraham Lincoln.[2]

**என் கருத்து:** அது கீழ்கண்ட புத்தகங்களில் எந்த புத்தகமானாலும் சரி, அவைகள் எல்லாம் ஒரு வரையறைக்குள், ஒரு குறிப்பிட்ட விவரங்களின் அடிப்படையில் ஆய்வு செய்து எழுதப்பட்டுள்ளன.

1. The 100 - A Ranking of the Most Influential Persons in History - by Michael H. Hart
2. Hitler, Stalin, Muhammad: Who ranks as the most evil human ever? - by Dov Ivry
3. Who's Bigger?: Where Historical Figures Really Rank - by Steven Skiena and Charles Ward

இந்த மூன்றாவது புத்தகத்தில் இயேசு முதலிடம் வகிக்கிறார் என்றுச் சொல்லி நான் கூத்தாட விரும்புவதில்லை. இதே போன்று முஹம்மது மூன்றாவது இடத்தில் இருக்கிறார் என்றுச் சொல்லி, கும்மாளம் போடமுடியாது. இந்த புத்தகங்களைப் பார்ப்பதைக் காட்டிலும், பைபிளில் இயேசு எப்படி வெளிப்பட்டிருக்கிறார்? அவரை நான் வணங்கி, அவரை பின்பற்ற தொடங்கிய பிறகு என் வாழ்க்கையை அவர் மாற்றியுள்ளாரா? என்பது தான் எனக்கு முக்கியம்.

இயேசுவை பின்பற்றுகின்ற நான், ஒரு நல்ல மனிதனாக வாழுகின்றேனா? (அல்லது ஒரு நல்ல மனிதனாக வாழ மனதளவில் விருப்பமாவது கொள்கின்றேனா?) என்பது தான் கேள்வி. பைபிளின் மூலமாகவும், இயேசுவின் மூலமாகவும் நடத்தப்படுகின்ற நான், மற்றவர்களை நேசிக்கின்றேனா? அல்லது வெறுக்கின்றேனா? என்னை அவர் மாற்றினாரா இல்லையா? என்பது தான் முக்கியமே தவிர, எந்த புத்தகத்தில் இயேசு முதலிடம் பெறுகின்றார் என்பது அவ்வளவு முக்கியமில்லை.

இதே போன்று, குர்ஆனையும், ஹதீஸ்களையும், முஹம்மதுவின் வாழ்க்கை சரித்திரத்தையும் படித்த எனக்கு, முஹம்மது யார் என்று நன்றாகத்

தெரியும். இஸ்லாமின் அடித்தளமாகிய குர்ஆனும் ஹதீஸ்களும் முஹம்மது ஒரு நல்லவர் என்று சொல்லித் தராத போது, அவருக்கு முதலிடம் கொடுத்து எழுதப்படும் புத்தகங்கள் எப்படி என்னை கன்வின்ஸ் செய்யும்?

இப்பொழுது நாம் மைக்கேல் ஹார்ட் எழுதிய வரிகள் எப்படி இஸ்லாமுக்கும், முஸ்லிம்களுக்கும் தலைவலியாக மாறுகிறது என்பதையும், முஸ்லிம்கள் ஏன் மைக்கேல் புத்தகத்தை மேற்கோள் காட்டக்கூடாது என்பதற்கான காரணங்களைக் காண்போம்.



**கேள்வி 65: முஹம்மதுவின் ஆக்கிரமிப்புக்கள், யுத்தங்கள் கருத்தில் கொள்ளப்பட்டது - இதனால் தான் அவருக்கு முதலிடம் - இப்படியா மைக்கேல் எழுதினார்?**

**பதில் 65:** மைக்கேல் ஹெச் ஹார்ட் எழுதிய புத்தகத்தில் 591 பக்கங்கள் உள்ளன. அவைகளில் அவர் குறிப்பிட்ட ஒவ்வொரு நபருக்காகவும் சில காரணங்களை அவர் விளக்கினார். அதன் பிறகு 'அக்காரணங்களினால் நான் இவரை இன்ன இடத்தில் வைக்கிறேன்' என்று எழுதி தன் சான்றுகளையும் தருகின்றார்.

இப்படி இவர் எழுதும் போது, முஹம்மதுவிற்கு முதலிடம் தருகிறார், இதற்காக இவர் முன் வைக்கும் இரண்டு காரணங்களில் ஒன்று: **முஹம்மதுவின் ஆக்கிரமிப்புக்களும், மற்ற நாடுகள் மீது போர் செய்து அவைகளை கைப்பற்றியதும் தான் பிரதான காரணம்.**

மைக்கேல் மேற்கோள்கள்:

**a) முஹம்மது வெற்றியுள்ள அரசியல் தலைவர்:**

முஹம்மது ஒரு சிறந்த அரசியல் தலைவர் என்று ஆசிரியர் மைக்கேல் எழுதுகின்றார்.

Of humble origins, Muhammad founded and promulgated one of the world's great religions, and became an immensely **effective political leader**. Today, thirteen centuries after his death, **his influence is still powerful and pervasive**. (பக்கம் 40 PDF புத்தகம், பிரிண்ட் புத்தகத்தில் பக்கம் 3)

**மதினாவிற்குச் சென்று, அரசியல் பலத்தை பெருக்கிக்கொண்ட ஒரு சர்வாதிகாரி முஹம்மது:**

This flight, called the Hegira, was the turning point of the Prophet's life. In Mecca, he had had few followers. In Medina, he had many more, and he soon acquired an influence that made him **a virtual dictator.** During the next few years, while Muhammad's following grew rapidly, **a series of battles were fought between Medina and Mecca**. This was ended in 630 with Muhammad's triumphant return to Mecca as conqueror. **The remaining two and one-half years of his life witnessed the rapid conversion of the**

**Arab tribes to the new religion**. When Muhammad died, in 632, he was the effective ruler of all of southern Arabia. (பக்கம் 41 PDF புத்தகம், பிரிண்ட் புத்தகத்தில் பக்கம் 4)

மக்காவை கைப்பற்றிய அடுத்த இரண்டரை ஆண்டுகளில் பல அரபிய இனக்குழுக்கள் இஸ்லாமில் இணையும் படி செய்திருக்கின்றார் முஹம்மது, எப்படி? வாள் முனையில் தான்! இஸ்லாமின் மென்மையைக் கண்டு யாரும் அதில் சேரவில்லை, முஹம்மதுவின் வாளின் வன்மையைக் கண்டு தான் சேர்ந்தார்கள்.

**அரேபியாவிலும், வெளியிலும் முஹம்மதுவின் ஆக்கிரமிப்புக்கள்:**

முஹம்மது அரேபியாவின் இனக்குழுக்களை ஒன்றுச் சேர்த்து ஆச்சரியப்படக்கூடிய மிகப்பெரிய யுத்தங்களைச் செய்தார் என்று மைக்கேல் சொல்கிறார் ("the most astonishing series of conquests in human history").

The Bedouin tribesmen of Arabia had a reputation as fierce warriors. But their number was small; and plagued by disunity and internecine warfare, they had been no match for the larger armies of the kingdoms in the settled agricultural areas to the north. However, unified by Muhammad for the first time in history, and inspired by their fervent belief in the one true God, **these small Arab armies now embarked upon one of the most astonishing series of conquests in human history.** To the northeast of Arabia lay the large Neo-Persian Empire of the Sassanids; to the northwest lay the Byzantine, or Eastern Roman Empire, centered in onstantinople. Numerically, the Arabs were no match for their opponents. **On the field of battle, though, the inspired Arabs rapidly conquered all of Mesopotamia, Syria, and Palestine.** By 642, Egypt had been wrested from the Byzantine Empire, while the Persian armies had been crushed at the key battles of Qadisiya in 637, and Nehavend in 642. (பக்கம் 42 PDF புத்தகம், பிரிண்ட் புத்தகத்தில் பக்கம் 5)

**முஹம்மதுவின் சஹாபாக்களும் யுத்தங்களைத் தொடர்ந்தார்கள், நாடுகளை ஆக்கிரமித்தார்கள்:**

முஹம்மதுவிற்கு பிறகும் அவரது சகாக்கள் பெரிய போர்களைச் செய்தார்கள், அதன் பிறகும் முஸ்லிம்கள் பல போர்களைச் செய்து ஸ்பெயின் வரை வலியச் சென்று ஆக்கிரமித்தார்கள்.

But even these enormous conquests-which were made under the leadership of Muhammad's close friends and immediate successors, Abu Bakr and 'Umar ibn al-Khattab -did not mark the end of the Arab advance. **By 711, the Arab armies had swept completely across North Africa to the Atlantic Ocean There they turned north and, crossing the Strait of Gibraltar, overwhelmed the Visigothic kingdom in Spain**. (பக்கம் 42 PDF புத்தகம், பிரிண்ட் புத்தகத்தில் பக்கம் 5)

**b) வாள் முனையில் மக்கள் இஸ்லாமை ஏற்றார்கள்:**

இந்தியாவரைக்கும் போர் செய்தார்கள் முஸ்லிம்கள், பெரிய அளவில் மதமாற்றம் நடந்தது:

For a while, it must have seemed that the Moslems would overwhelm all of Christian Europe. However, in 732, at the famous Battle of Tours, a Moslem army, which had advanced into the center of France, was at last defeated by the Franks. Nevertheless, in a scant century of fighting, these Bedouin tribesmen, inspired by the word of the Prophet, had carved out an empire stretching from the borders of India to the Atlantic Ocean-the largest empire that the world had yet seen. **And everywhere that the armies conquered, large-scale conversion to the new faith eventually followed.** (பக்கம் 42 PDF புத்தகம், பிரிண்ட் புத்தகத்தில் பக்கம் 5)

வாள் முனையில் மக்கள் இஸ்லாமை ஏற்றார்கள் என்பதை "முஸ்லிம்களின் ஹீரோ எழுத்தாளர்" மைக்கேல் ஹார்ட் எப்படி சொல்கிறார் என்பதை பாருங்கள்:

- And everywhere that the armies conquered, large-scale conversion to the new faith eventually followed.

எங்கேயெல்லாம் இஸ்லாம் ஆக்கிரமித்ததோ அங்கேயெல்லாம் மதமாற்றம் பெரிய அளவில் நடந்தது என்கிறார், இதைவிட இஸ்லாமுக்கு மிகப்பெரிய கேவலம் ஏதாவது உண்டா?

இதைத் தானே இன்றைய உலகமும் இஸ்லாம் மீது சுமத்தும் குற்றச்சாட்டாக உள்ளது, அதாவது **வாள் முனையில் இஸ்லாமை முஹம்மது பரப்பினார்** என்பது எவ்வளவு உண்மையாக உள்ளது பாருங்கள்.

இல்லை, இல்லை முஹம்மது அமைதியாக இஸ்லாமை பரப்பினார் என்று மார்தட்டுகின்ற முஸ்லிம்களின் தலையில் ஒரு கொட்டுவிட்டு "**முஹம்மதுவும், சஹாபாக்களும், அதன் பிறகு வந்த இஸ்லாமிய தலைவர்களும், வாளால் தான் இஸ்லாமை பரப்பினார்கள்**" என்று அடித்துச் சொல்கிறார் மைக்கேல் ஹார்ட். இப்போது தான் முஸ்லிம்களுக்கு ஹார்ட் அட்டாக் வரும்.

கிறிஸ்தவர்கள் சண்டையிட்டு (சிலுவைப்போர்கள்), முஸ்லிம்களின் ஆக்கிரமிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்தார்கள், எகிப்தும் மெசபடோமியா (ஈரான் பகுதிகள்) மட்டும் முஸ்லிம் நாடுகளாக தொடர்ந்தன.

இதனை சொல்லிவிட்டு, மைக்கேல் முஹம்மதும், முஸ்லிம்களும் ஆக்கிரமித்த வரைபடத்தைப் போட்டு, இஸ்லாமின் முகத்திரையை கிழிக்கிறார் (பக்கம் 6,7).

### c) முதல் வரிசையில் குதிரையில் இருப்பது யார்? முஹம்மதுவா?

பக்கம் 8ல் முஸ்லிம்கள் போர் செய்வதாக ஒரு படத்தை போட்டு இருந்தார், அதில் முதல் வரிசையில் குதிரையில் இருப்பது முஹம்மதுவா? அடடே, முஸ்லிம்களுக்கு எரியுமே மனசு! முஹம்மதுவின் படத்தை மைக்கேல் ஹார்ட் எப்படி போடலாம்? முஸ்லிம்களின் இரத்தம் கொதிக்குமே! இதையெல்லாம் தெரியாமலா, இத்தனை ஆண்டுகளாக இந்த புத்தகத்தை தூக்கி பிடித்துக்கொண்டு இருந்தோம்! அவமானம், வெட்கம்!



**Muslem crusaders under Muhammad conquer in Allah's name**

**முஹம்மதுவின் தலைமையின் கீழ் முஸ்லிம் குருசேடர்கள் (ஜிஹாதிகள்) அல்லாஹ்வின் பெயரால் வெற்றி பெறுகிறார்கள்.**

ஆனால், மைக்கேல் இந்த படத்தின் கீழே எழுதியுள்ள தலைப்பு என்ன தெரியுமா?

இது தான்: "**Muslem crusaders under Muhammad conquer in Allah's name**" - **முஹம்மதுவின் தலைமையின் கீழ் முஸ்லிம் குருசேடர்கள் (ஜிஹாதிகள்) அல்லாஹ்வின் பெயரால் வெற்றி பெறுகிறார்கள்**

இதன் படி பார்த்தால், முதல் வரிசையில் குதிரையில் இருப்பவர் முஹம்மது என்று கருதுவதற்கு வாய்ப்பு உள்ளது.

இதுவரையில் பார்த்த விவரங்களின் படி, மைக்கேல் ஹார்ட் என்பவர் தன் ஆய்வில் எடுத்துக்கொண்ட விவரம் முஹம்மது சிறந்தவர் என்றோ, நல்லவர் என்றோ, தீர்க்கதரிசி என்றோ அல்ல, அவர் ஆரம்பித்த ஆக்கிரமிப்புக்களை, அவருக்கு பிறகு முஸ்லிம்கள் "பேஷாக" தொடர்ந்தார்கள், நாடுகளை பிடித்தார்கள், இதன் அடிப்படையில் முஹம்மது முதலிடத்தில் இருக்கிறார்.

### d) முஹம்மதுவின் முதலிடம் பற்றி "மைக்கேலின் இரத்தினச் சுருக்கமான வரிகள்"

இந்த கேள்வியில் நான் குறிப்பிட்டது போன்று, முஹம்மது அரசியல் தலைவர்களில் முதலிடம் வகிக்கிறார், என்ன காரணம்? சண்டைகளும், யுத்தங்களும் இரத்தம் சிந்துதலும் தான் காரணம். அதனால் தான் முதலிடம் அவருக்கு.

> Furthermore, Muhammad (unlike Jesus) was a secular as well as a religious leader. In fact, as the driving force behind the Arab conquests, he may well rank as the most influential political leader of all time. (பக்கம் 46 PDF புத்தகம், பிரிண்ட் புத்தகத்தில் பக்கம் 9)

மேலும், முஹம்மது (இயேசுவைப் போலல்லாமல்) ஒரு அரசியல் தலைவராகவும் மற்றும் மதத் தலைவராக இருந்தார். உண்மையில், **அரபியர்களின் ஆக்கிரமிப்புக்களுக்கு யுத்தங்களுக்கு உந்துசக்தியாக முஹம்மது இருந்தார், எனவே, அவர் எல்லா காலத்திலும் மிகவும் செல்வாக்கு மிக்க அரசியல் தலைவராக இருந்தார்** (ஆகையால் முதலிடம்).

மேற்கண்ட ஒரே பத்தியைக் காட்டிவிட்டு, நான் இந்த கேள்வியை முடித்து இருந்திருக்கலாம், ஆனால், முஸ்லிம்கள் அறியாமையில் பொய் சொல்வதில் கைத்தேர்ந்தவர்கள், சாரி வாய்த்தேர்ந்தவர்கள், எனவே ஆசிரியரின் வேறு பல மேற்கொள்களைக் காட்டி இதுவரை விளக்கிக்கொண்டு வந்தேன். மேற்கண்ட வரிகளில் (unlike Jesus - இயேசுவைப் போலல்லாமல்) என்று அடைப்பிற்குள் எழுதியது கூட, மைக்கேல் ஹார்ட் ஆசிரியர் தான், நான் சொந்தமாக எழுதவில்லை. இயேசு வெறும் ஆன்மீகத்தலைவர், ஆனால் முஹம்மது அப்படி இல்லை, அவர் அரசியல் தலைவராகவும் இருந்தார், ஆன்மீகத் தலைவராகவும் இருந்தார் என்று சொல்லிவிட்டு, முஹம்மதுவிற்கு முதலிடத்திற்கு தகுதிபடுத்தியது, அவரது "அரசியல் தலைமைத்துவமேயன்று வெறு இல்லை" என்று ஆசிரியர் கூறுகின்றார்.

போர் செய்து யுத்தம் செய்வதில் முதலிடம் முஹம்மது வகித்ததால் தான், இன்றும் சண்டைகளும் சச்சரவுகளும், ஜிஹாத்களும் நடக்கின்றன! இல்லையென்றுச் சொல்லச் சொல்லுங்கள் பார்க்கலாம்!

முஹம்மதுவிற்கு முதலிடம் கொடுத்து மைக்கேல் ஹார்ட் முஸ்லிம்களுக்கு உதவி செய்யவில்லை, அதற்கு பதிலாக, மறைமுகமாக, வாழைப்பழத்தில் ஊசி நுழைப்பது போன்று தன் காரியத்தை கச்சிதமாக முடித்துவிட்டார். இஸ்லாம் வாளால் தான் பரவியது என்பதை சொல்லாமல் சொல்லிவிட்டார். இதனை புரிந்துக்கொள்ளாத முஸ்லிம்கள் அவரை கௌரவப்படுத்துகிறார்கள். தன்னை செருப்பால் அடித்தவனுக்கு கவுரப்பட்டம் கொடுத்து வாழ்த்தும் கூட்டம் ஒன்று உண்டு என்றுச் சொன்னால், அது முஸ்லிம்களாகத் தான் இருப்பார்கள். இதைத் தான் நான் ஆரம்பத்தில் சொன்னேன், முஸ்லிம்களுக்கு அறியாமை அதிகம், அதை தக்கவைத்துக்கொள்ள எந்த அளவிற்கு வேண்டுமானாலும் செல்வார்கள்.

முஹம்மதுவின் வாள் முனை தான் அவரை முதலிடத்திற்கு தள்ளியது என்று மைக்கேல் ஹார்ட் எழுதியதில் எந்த ஒரு தவறும் இல்லை என்பது தான் என் கருத்தும் கூட.



**கேள்வி 66: மைக்கேலின் நெத்தியடி வரிகள்: குர்ஆனின் ஆசிரியர் முஹம்மது தான். முஹம்மதுவின் வார்த்தைகள் தான் குர்ஆன். இதனையும் முஸ்லிம்கள் ஏற்பார்களா?**

**பதில் 66:** முஹம்மதுவிற்கு முதலிடம் கொடுத்ததற்கு காரணம், அவர் போர்களைச் செய்து நாடுகளை பிடித்தது தான் என்று மைக்கேல் கூறினார், இது முஸ்லிம்களுக்கு முதலாவது மிகப்பெரிய அதிர்ச்சித் தோல்வியாகும்.

இரண்டாவதாக, முஸ்லிம்களின் நம்பிக்கையில் பெரிய கல்லை எடுத்துப்போடுகின்றார் மைக்கேல், அதாவது குர்ஆனின் ஆசிரியர் முஹம்மது என்று நேரடியாகச் சொல்லியுள்ளார். மனுஷன் மறைமுகமாகவாவது சொல்லியிருக்கலாம் அல்லவா! இல்லை, நேரடியாகவே "முஸ்லிம்களின் வேதத்தின் ஆசிரியர் முஹம்மது என்றுச் சொல்கிறார்".

**முஸ்லிம்கள் வேதமான குர்ஆனின் ஆசிரியர் முஹம்மது, இவரது வார்த்தைகள் தான் குர்ஆன்:**

பக்கம் 9ல், முஸ்லிம்கள் கவுரவித்த மைக்கேல் ஹெச் ஹார்ட் கீழ்கண்ட முத்துக்களை உதிர்த்து உள்ளார்:

Muhammad, however, was responsible for both the theology of Islam and its main ethical and moral principles. In addition, he played the key role in proselytizing the new faith, and in establishing the religious practices of Islam. **Moreover, he is the author of the Moslem holy scriptures, the Koran, a collection of certain of Muhammad's insights that he believed had been directly revealed to him by Allah**. Most of these utterances were copied more or less faithfully during Muhammad's lifetime and were collected together in authoritative form not long after his death. **The Koran therefore, closely represents Muhammad's ideas and teachings and to a considerable extent his exact words.** (பக்கம் 46 PDF புத்தகம், பிரிண்ட் புத்தகத்தில் பக்கம் 9)

**இதில் அவர் எழுதிய இரண்டு வரிகளைப் பாருங்கள்:**

**1. Moreover, he is the author of the Moslem holy scriptures, the Koran, a collection of certain of Muhammad's insights that he believed had been directly revealed to him by Allah** (மேலும், அவர்(முஹம்மது) முஸ்லீம்களின் புனித நூலான குர்ஆனின் ஆசிரியர் ஆவார். இந்த குர்ஆன் தொகுப்பை அல்லாஹ் தனக்கு நேரடியாக வெளிப்படுத்தப்பட்டதாக முஹம்மது நம்பினார்)

**2. The Koran therefore, closely represents Muhammad's ideas and teachings and to a considerable extent his exact words** (ஆகவே, குர்ஆன் முஹம்மதுவின் கருத்துக்களையும் போதனைகளையும் கொண்டுள்ளது. வேறு வகையாகச் சொல்லவேண்டுமென்றால், கிட்டத்தட்ட குர்ஆன் என்பது முஹம்மதுவின் சொந்த வார்த்தைகளே - Muhammad’s exact words ஆகும்.)

இதை விட யார் குர்ஆனை அவமானப்படுத்திவிட முடியும்? முஸ்லிம்களே உங்களுக்குப் புரிகின்றதா? மைக்கேலின் படி "முஹம்மதுவின் போதனைகளும், கருத்துக்களும் அடங்கிய புத்தகம் தான் குர்ஆன், இதன் ஆசிரியர் முஹம்மது, மேலும் கிட்டத்தட்ட குர்ஆன் என்பது முஹம்மதுவின் சொந்த வார்த்தைகளே".

ஆக, மிச்சம் மீதியிருந்த இஸ்லாமின் மேன்மையையும் எடுத்து குப்பைத்தொட்டியில் போட்டுவிட்டார் மைக்கேல் ஹார்ட் என்ற மேற்கத்தியர்.

இதையெல்லாம் அறிந்த பிறகும் அஹமத் தீதத், ஜாகிர் நாயக் போன்ற முஸ்லிம் அறிஞர்கள் முஸ்லிம்களை ஏமாற்றிக்கொண்டு இருக்கிறார்கள். இப்பொழுது இந்த விவரங்களை இந்த கேள்வி பதில்கள் மூலம் முஸ்லிம்கள் அறிந்துக்கொண்டார்கள், இருந்த போதிலும் அவர்கள் என்ன சொல்வார்கள் தெரியுமா? "**எது எப்படி இருந்தாலும், எங்கள் கண்மணி நாயகம் முஹம்மது அவர்களை மைக்கேல் ஹார்ட் முதலாவது இடத்தில் வைத்தாரே**" இது எங்களுக்கு போதும் என்பார்கள்.

அந்த மைக்கேல் என்பவர் "முஹம்மது போர்களைச் செய்து தான் இஸ்லாமைப் பரப்பினார், மேலும் குர்ஆனின் ஆசிரியர் முஹம்மது தான் என்றுச் சொல்லி", இஸ்லாமை அவமானப்படுத்திவிட்டார் என்று விளக்கிச் சொன்னாலும், "பரவாயில்லை, அதை பார்க்காதது போல நாங்கள் இருந்துவிடுகிறோம் என்று அறியாமையில் இருக்கும் சில அறிவு ஜீவி முஸ்லிம்கள் கூறுவார்கள்.

செருப்பை 5000 ரூபாய் கொடுத்து வாங்கினாலும், செருப்பு செருப்பு தானே! காலில் தானே போடவேண்டும்! விலை உயர்ந்தது என்பதால் கழுத்திலா மாட்டிக்கொள்வீர்கள்?

**இஸ்லாமை விமர்சிப்பவர்களின் இரண்டு ஆயுதங்கள்:** இஸ்லாம் வாளால் பரவியது & குர்ஆன் முஹம்மதுவின் கைவேலை

பொதுவாக இஸ்லாமை விமர்சிப்பவர்கள், முக்கியமாக இரண்டு குற்றச்சாட்டுக்களை முன்வைப்பார்கள். அவைகள்: இஸ்லாமை முஹம்மது வன்முறையை கையாண்டு பரப்பினார், மேலும், குர்ஆன் இறைவேதமில்லை, அது மனித வார்த்தைகள் முக்கியமாக முஹம்மது தன் வசதிக்காக உருவாக்கிக்கொண்டது என்பதாகும்.

இந்த இரண்டு குற்றச்சாட்டுக்களையும் மைக்கேல் ஹார்ட் முன்வைத்துவிட்டு, அதே நேரத்தில் முஸ்லிம்களிடமிருந்தும் "சபாஷ்'ஐயும் பெற்றுக்கொண்டார் என்றுச் சொன்னால், அவருடைய சாதுரியமான அறிவை என்னவென்றுச் சொல்வது!

இப்போது நாம், மைக்கேலின் ஞானத்தை மெச்சிக்கொள்வதா? அல்லது முஸ்லிம்களின் அறியாமையை நொந்துக்கொள்வதா?

உங்களுக்கு ஏதாவது புரிகின்றதா!?!



**கேள்வி 67: செங்கிஸ் கான் மற்றும் முஹம்மது சரியான ஒப்பீடா? மைக்கேலுக்கு ஒப்பிட யாருமே கிடைக்கவில்லையா? இருந்தாலும் முஹம்மதுவே இதிலும் முதலில் வந்தார்!**

**பதில் 67:** முஹம்மதுவின் வாள் வலிமைக்கு நிகராக யாரை ஒப்பிடலாம் என்று முஸ்லிம்களின் ஹீரோவாகிய மைக்கேலிடம் கேட்டால், ஒரே ஒரு நபரோடு மட்டும் தான் ஒப்பிடமுடியும் என்று பதில் கூறுகின்றார்.

அந்த நபர் யார்? முஹம்மதுவைப் போன்று ஒரு மத ஸ்தாபகரா? ஒரு நபியா? ஒரு துறவியா? இல்லை, இல்லை பல லட்ச மக்களை கொன்று குவித்த சர்வாதிகாரியாக செயல்பட்ட மங்கோலிய அரசன் செங்கிஸ்கான்.

இந்த ஒப்பிடுதலைப் பற்றி மைக்கேல் எழுதும் வரிகளை பாருங்கள்:

But this cannot be said of the Arab conquests **The only comparable conquests in human history are those of the Mongols in the thirteenth century, which were primarily due to the influence of Genghis Khan.** These conquests, however, though more extensive than those of the Arabs, **did not prove permanent**, and today the only areas occupied by the Mongols are those that they held prior to the time of Genghis Khan (பக்கம் 46 PDF புத்தகம், பிரிண்ட் புத்தகத்தில் பக்கம் 10)

முஹம்மதுவின் ஆக்கிரமிப்புக்கள் பற்றி வரலாற்றில் ஒப்பிட வேண்டுமென்றால், 13ம் நூற்றாண்டில் ஆட்சி செய்த செங்கிஸ்கான் என்ற அரசனின் ஆக்கிரமிப்புக்களோடு மட்டுமே ஒப்பிடமுடியுமாம்.

அப்படி ஒப்பிட்டாலும், இன்று சங்கிஸ்கானின் ஆக்கிரமிப்புக்கள் முழுவதும் அழிந்துவிட்டது, ஆனால் முஹம்மதுவின் ஆக்கிரமிப்புக்கள் இன்றும் பல நாடுகளை இஸ்லாமின் கட்டுப்பாட்டில் வைத்துள்ளது, எனவே முஹம்மதுவின் வாள் வலிமை மற்றும் ஆக்கிரமிப்புக்களை யாருமே வெற்றிக்கொள்ள முடியாது, எனவே தான் முஹம்மதுவிற்கு முதலிடம் என்று மைக்கேல் கூறுகின்றார்.

இதன் பொருள் என்ன? இஸ்லாம் வாளால் பரவியது என்பதையும், அதன் தாக்கம் இன்றும் உலகில் உள்ளது என்றும் கூறுகின்றார்.

சரி இந்த செங்கிஸ்கான் யார்? என்பதைப் பற்றி சில விவரங்களைக் காண்போம்.

**கோடிக்கணக்கில் இனபடுகொலை செய்த அரசன் செங்கிஸ் கான்:**

The conquests and leadership of Genghis Khan included **widespread devastation and mass murder,** and he, along with the Mongols in general, **perpetrated what has been called ethnocide and genocide.** The targets of campaigns that refused to surrender would often be subject to reprisals in the **form of enslavement and wholesale slaughter.** . . . A number of present-day Iranian historians, including Zabih Allah Safa, have likewise viewed the period initiated by **Genghis Khan as a uniquely catastrophic era**.[132] Steven R. Ward writes that the Mongol violence and depredations in the Iranian Plateau "**killed**

**up to three-fourths of the population... possibly 10 to 15 million people**. Some historians have estimated that **Iran's population did not again reach its pre-Mongol levels until the mid-20th century** (மூலம்: **https://en.wikipedia.org/wiki/Genghis_Khan**)

மத்திய கிழக்கு நாடுகளில் குறிப்பாக ஈரானில் செங்கிஸ் கான் கிட்டத்தட்ட அனைவராலும் இனப்படுகொலை செய்த போர்த்தலைவராகக் கண்டிக்கப்படுகிறார். இந்தப் பகுதிகளின் மக்கள்தொகைக்கு பெரும் அழிவை ஏற்படுத்தியவராகக் கருதப்படுகிறார்.இசுதீவன் ஆர். வார்த் என்பவர் மங்கோலியப் படையெடுப்புகளைப் பற்றி எழுதியதாவது "ஒட்டுமொத்தமாக, மங்கோலிய வன்முறை மற்றும் அட்டூழியங்கள் ஈரானியப் பீடபூமியின் மக்கள்தொகையில் நான்கில் மூன்று பங்கு வரை கொன்றன, அதாவது 1 முதல் 1.5 கோடி மக்கள் வரை கொல்லப்பட்டார்கள். (மூலம்: செங்கிஸ் கான்: **https://ta.wikipedia.org/s/30y**)

அக்கால உலகின் 11% மக்கள் செங்கின்ஸ் கான் அரசனாலும், அடுத்தடுத்த மங்கோலிய அரசர்களாலும் கொல்லப்பட்டனர்:

**Destruction under the Mongol Empire:**

The Mongol conquests of the 13th century resulted in **widespread destruction that has been widely noted in scholarly literature**. **The Mongol army conquered hundreds of cities and villages and also killed millions of men, women and children**. It has been estimated that **approximately 11% of the world's population was killed either during or immediately after the Turco-Mongol invasions.**[1] If the calculations are accurate, the events would be the deadliest acts of mass killings in human history. (மூலம்: **https://en.wikipedia.org/wiki/Destruction_under_the_Mongol_Empire**)

முஹம்மதுவின் வாளின் வலிமை, "இனப்படுகொலை செய்து, 11% உலக மக்களைக் கொன்ற செங்கிஸ்கானையே" வென்றுவிட்டதென்றால், ஏன் முஹம்மதுவிற்கு முதலிடம் கிடைக்காது, இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது?

ஆசிரியர் மைக்கேல் இந்த இடத்தில் முஹம்மதுவின் ஆக்கிரமிப்புக்கள், மற்றும் செங்கிஸ்கானின் ஆக்கிரமிப்புக்களை முதலாவது ஒப்பிட்டார் அதன் பிறகு, முஹம்மதுவின் ஆக்கிரமிப்புக்கள் நடந்த நாடுகளில் இன்றும் இஸ்லாம் இருப்பதினால், முதலிடம் முஹம்மதுவிற்கு கிடைத்தது. செங்கிஸ்கானின் ஆக்கிரமிப்புக்கள் நடந்த நாடுகளில் இன்று அவனது ஆட்சி இல்லை. இதற்கு இதற்கு இன்னொரு காரணம், முஹம்மது நாடுகளை பிடித்த பிறகு, அவர்களை முஸ்லிம்களாக மாற்றியது தான், ஆனால் செங்கிஸ்கான் அதனைச் செய்யவில்லை, ஏனென்றால் அவன் ஒரு மத ஸ்தாபன் அல்லவே!

இப்போது முஹம்மதுவிற்கு முதலிடம் கொடுத்ததற்கு முஸ்லிம்கள் மைக்கேலை மெச்சிக்கொள்வதா? அல்லது செங்கிஸ்கான் போன்ற ஒரு கொடுங்கோல் அரசனோடு முஹம்மதுவை ஒப்பிட்டு எழுதியதால் துக்கப்படுவதா என்ற நிலைக்கு முஸ்லிம்கள் தள்ளப்படவேண்டும், தள்ளப்படுவார்களா? விஷயம்

புரிந்தால் தள்ளப்படுவார்கள், புரியவில்லையென்றால் நாம் சொல்வதற்கு ஒன்றுமில்லை. பானையில் இருந்தால் தானே அகப்பையில் வரும்!



**கேள்வி 68: முஹம்மதுவிற்கு முதலிடம் கொடுப்பதற்கு உதவியது எது? ஆன்மீக இஸ்லாமா? அல்லது அரசியல் இஸ்லாமா (Political Islam)?**

**பதில் 68:** மைக்கேல் ஹார்ட் தனது புத்தகத்தின் 3வது பக்கத்திலிருந்து 10வது பக்கம் வரை, "ஏன் முஹம்மதுவிற்கு தான் உலகத்திலேயே முதலிடம் கொடுத்தார்? என்பதற்கான காரணத்தை விளக்கியுள்ளார்?

மொத்தம் 8 பக்கங்கள் அவர் முஹம்மது பற்றி எழுதியுள்ளார்.

**இந்த பக்கங்களில் அவர்:**

- முஹம்மது ஒரு நபி என்றுச் சொல்லவில்லை, நல்லவர் என்றுச் சொல்லவில்லை,
- அவரது ஆன்மீக கோட்பாடுகள் உலகத்திலேயே மிகவும் நல்ல கோட்பாடுகள் என்று கூறவில்லை,
- குர்ஆன் மிகவும் உயர்ந்த புத்தகம் என்று கூறவில்லை,
- மற்ற மதங்களைக் காட்டிலும் இஸ்லாம் சிறந்த மதம் என்று கூறவில்லை
- முஹம்மது உலகம் பின்பற்றவேண்டிய ஒரு நல்ல எடுத்துக்காட்டு என்று கூறவில்லை.
- ஆனால் முஹம்மதுவின் யுத்தங்களை ஆக்கிரமிப்புக்களை, இஸ்லாமின் முகத்தை எடுத்துக்காட்டிவிட்டார்.

**முஹம்மது பற்றிய தம்முடைய ஆய்வை முடிக்கும்போது கீழ்கணட வரிகளை எழுதியுள்ளார்:**

We see, then, **that the Arab conquests of the seventh century have continued to play an important role in human history, down to the present day**. It is this unparalleled combination of secular and religious influence which I feel entitles Muhammad to be considered the most influential single figure in human history. (பக்கம் 46 PDF புத்தகம், பிரிண்ட் புத்தகத்தில் பக்கம் 10)

முடிவாக, ஏழாம் நூற்றாண்டின் **அரபு ஆக்கிரமிப்புக்கள் மனித வரலாற்றில் இன்றுவரை ஒரு முக்கிய பங்கைக் கொண்டுள்ளன** என்பதை நாம் காண்கிறோம். முஹம்மதுவின் அரசு செல்வாக்கு மற்றும் மத செல்வாக்கின் இந்த இணையற்ற கலவையே முஹம்மதுவை மனித வரலாற்றில் மிகவும் செல்வாக்கு மிக்க நபராக நான் உணர்கிறேன்.

மேற்கண்ட ஆங்கில வரிகளில் "secular" என்ற வார்த்தை முஹம்மதுவின் ஆட்சி, ஆக்கிரமிப்புக்களைக் குறிக்க ஆசிரியர் பயன்படுத்தியதாகும். Secular - இந்த வார்த்தை "மதசார்பற்ற" என்று நாம் இன்று புரிந்துவைத்துக்கொண்டு இருக்கும் பொருளில் அவர் பயன்படுத்தவில்லை.

இந்த புத்தகத்தின் பிடிஎஃப் தொடுப்பை நான் கொடுத்துள்ளேன், அதனை பதிவிறக்கம் செய்துக்கொண்டு நான் கொடுத்த மேற்கோள்களை சரி பார்த்துக்கொள்ளவும்.

முஹம்மதுவின் 8 பக்க விவரங்களை மட்டும் ஒரு முஸ்லிம் கீழ்கண்ட தொடுப்பில் கொடுத்துள்ளார், அதனையும் சொடுக்கி நீங்கள் படித்துக்கொள்ளலாம்.

- **The 100 - Muhammad Number1**



**கேள்வி 69: முஹம்மது பலதெய்வ வழிபாடுகளைச் செய்தார், யூத கிறிஸ்தவர்களிடம் ஏக தெய்வம் பற்றி அறிந்துக்கொண்டார். இப்படி எழுதியது முஹம்மதுவிற்கு முதலிடம் கொடுத்த மைக்கேல் ஹெச் ஹார்ட். முஸ்லிம்கள் இதனை படிக்கவில்லையா? முஸ்லிம்கள் இதனை ஏற்பார்களா?**

**பதில் 69:** முஸ்லிம்கள் கண்மூடித்தனமாக மைக்கேல் ஹெச் ஹார்ட் என்ற ஆசிரியரை தலையில் தூக்கிவைத்துக் கொண்டு நாட்டியம் ஆடினார்கள். ஆனால் ஒரு முறை கூட அவர் எழுதிய புத்தகத்தை படிக்கவில்லை. இஸ்லாமின் அடிப்படை கோட்பாடுகள் தகர்ந்துவிடும் படி அவர் கூறியவைகளை முஸ்லிம்கள் கவனிக்க தவறினார்கள்.

குர்ஆனில் இருப்பது முஹம்மதுவின் வார்த்தைகள் என்றார் இவர், முஸ்லிம்கள் படிக்கவில்லை. முஹம்மதுவின் ஆக்கிரமிப்புக்களும், வாள் வலிமையும் தான் அவரை இந்த நிலைக்கு உயர்த்தியது என்றார், முஸ்லிம்கள் கவனிக்கவில்லை. இயேசுவை விட முஹம்மது பெரியவர் என்று நான் சொல்லவில்லை என்றார் இவர் (அடுத்த கேள்வியை படியுங்கள்), முஸ்லிம்கள் பார்த்தும் பாராதவர்கள் போல இருந்துவிட்டார்கள்.

இப்போது இன்னொரு விவரத்தையும் அவர் சொல்லியுள்ளார்:

**Most Arabs at that time were pagans**, who believed in many gods. There were, however, in Mecca, **a small number of Jews and Christians; it was from them no doubt that Muhammad first learned of a single, omnipotent God who ruled the entire universe.** When he was forty years old, Muhammad became **convinced** that this one true God (Allah) was speaking to him, and had chosen him to spread the true faith. (பக்கம் 41 PDF புத்தகம், பிரிண்ட் புத்தகத்தில் பக்கம் 4)

முஹம்மதுவின் காலத்தில் பெரும்பான்மையான **அரபியர்கள் பல தெய்வ வழிபாடுகளை** செய்துக்கொண்டு இருந்தார்கள். மக்காவில் ஒரு குறிப்பிட்ட சிறிய அளவு யூதர்களும் கிறிஸ்தவர்களும் வாழ்ந்துக்கொண்டு இருந்தார்கள். **சந்தேகத்திற்கு இடமில்லாத வகையில் முஹம்மது இவர்களிடமிருந்து தான் உலகை ஆளும் சர்வல்லவரான ஒரே இறைவன் பற்றி கற்றுக்கொண்டு இருக்கவேண்டும்.** முஹம்மதுவிற்கு நாற்பது வயது ஆகும் போது, அந்த ஒரே மெய்யான இறைவன் (அல்லாஹ்) தான் தன்னோடு பேசி, உண்மை மார்க்கத்தை பரப்ப தம்மை தெரிவு செய்தார் என்று **அவர் நம்பினார்**.

ஆசிரியர் மைக்கேல் முஹம்மதுவின் இறைச்செய்திப் பற்றி எழுதும் போது, கீழ்கண்டவைகளை கூறியுள்ளார்.

1. முஹம்மது, பலதெய்வ வழிபாடு செய்கின்றவராக இருந்தார்.
2. முஹம்மதுவின் குடும்பத்தார்களும், வம்சத்தார்களும் இதே போன்று வாழ்ந்துக்கொண்டு இருந்தார்கள்.
3. மக்காவில் அன்று வாழ்ந்த யூத கிறிஸ்தவர்கள் ஒரே தெய்வத்தை வணங்குகிறவர்களாக இருந்தார்கள்.
4. இவர்களிடமிருந்து தான் முஹம்மது 'ஏக இறைவன்' பற்றி கற்றுக்கொண்டார்.
5. அதன் பிறகு, தன்னிடம் அந்த ஏக இறைவன் பேசியதாக முஹம்மது நம்பினார்

இந்த ஆசிரியரின் வரிகளின் படி, முஹம்மதுவிற்கு ஏக இறைவன் தோன்றி அவரை நபியாக்கவில்லை, அதற்கு பதிலாக, முஹம்மதுவிற்கு ஏக இறைவன் பற்றிய அறிவு கிடைத்ததே யூத கிறிஸ்தவர்கள் மூலமாகத் தான்(ஆனால் இஸ்லாமின் படி, ஜிப்ரீல் தூதன் தான் அல்லாஹ் பற்றி முஹம்மதுவிற்கு அறிவிக்கின்றார்). அதன் பிறகு, அந்த யூத கிறிஸ்தவ ஏக இறைவன் தன்னை சந்தித்ததாக முஹம்மது நம்பினார். முஹம்மது ஒரு நபியில்லை, தம்மை அல்லாஹ் நபியாக்கினார் என்று முஹம்மது நம்பிவிட்டார்.

இஸ்லாமுக்கு இது எவ்வளவு பெரிய அடியாக இருக்கிறது என்பதைப் பாருங்கள். இதையெல்லாம் படிக்காமல், அல்லது படித்தாலும் வெளியே சொல்லாமல் மக்களை ஏமாற்றவேண்டுமென்பதற்காக முஸ்லிம் அறிஞர்கள் பொய்களைச் சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள்.

இந்த புத்தகத்தில் சோல்லப்பட்ட விவரங்களை படிக்கும் நேர்மையான முஸ்லிம்கள் 'இப்புத்தகத்தையோ, அதன் ஆசிரியரையோ' புகழமாட்டார்கள், ஏனென்றால், இவரது புத்தகம் முஹம்மதுவிற்கு நன்மை செய்வதைவிட தீமையைத் தான் அதிகமாக செய்துள்ளது.



**கேள்வி 70: முஹம்மது இயேசுவை விட பெரியவர், சிறந்தவர் என்று மைக்கேல் கூறவில்லை! இவரது பட்டியலில் கேடுகெட்ட தீயவர்களுக்கும் முக்கிய இடம் கொடுக்கப்பட்டுள்ளது என்று கூறுகிறாரா?**

**பதில் 70:** முஸ்லிம்களின் அறியாமைக்கு ஒரு அளவு என்பது இல்லை, அல்லது முஸ்லிம் அறிஞர்களின் வஞ்சக வேலைக்கு ஒரு அளவு இல்லை, இது தான் இஸ்லாம் இவர்களுக்கு கற்றுக்கொடுத்துள்ளது. முஸ்லிம் அறிஞர் அஹமத் தீதத் கூறும் போது, 'இயேசுவை விட முஹம்மதுவே சிறந்தவர், பெரியவர்' என்று மைக்கேல் இந்த புத்தகத்தில் கூறுவதாக கூறுகின்றார், இதே போன்று பல முஸ்லிம்கள் அறிஞர்கள் கூறுகிறார்கள். இது எவ்வளவு பெரிய ஏமாற்றுவேலையென்று பாருங்கள்.

முஹம்மது பற்றி எழுதப்பட்ட 8 பக்கங்களை சரியாக படித்து, உண்மையை உலகிற்குச் சொல்லத் தெரியாத இவர்கள் முஸ்லிம் அறிஞர்கள் என்ற பெயரை வைத்துக்கொண்டு இஸ்லாமிய தாவா செய்கிறார்கள், பாவம் முஸ்லிம் மக்கள், இப்படிப்பட்ட முஸ்லிம் அறிஞர்களின் வார்த்தைகளை உண்மையென்று நம்பி, தங்கள் நித்தியத்தை முஸ்லிம்கள் இழந்துக்கொண்டு இருக்கிறார்கள்.

**என் பட்டியலில் நல்லவனைக் காட்டிலும், கெட்டவனுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு இருக்கும்**

This book presents my own answer to that question, my list of 100 persons in history whom I believe to have been the most influential. **I must emphasize that this is a list of the most influential persons in history, not a list of greatest**. For example, there is room **in my list for an enormously influential, wicked, heartless man like Stalin, but no place at all for the saintly Mother Cabrini.** (பக்கம் 25 PDF புத்தகம்)

அந்த கேள்விக்கு நான் கொடுக்கும் பதில் தான் இந்த புத்தகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. சரித்திரத்தில் அதிகமாக செல்வாக்கு பெற்றுள்ள 100 பேர்களின் பட்டியலை நான் என் புத்தகத்தில் கொடுத்துள்ளேன். **என்னுடைய இந்த பட்டியல் 'சரித்திரத்தில் அதிகமாக செல்வாக்கு பெற்றவர்கள் பற்றியது மட்டுமே, சரித்திரத்தில் பெரியவர்கள், சிறப்பானவர்கள் பற்றியது அல்ல**' என்பதை கவனிக்கவும் (I must emphasize that this is a list of the most influential persons in history, not a list of the greatest). உதாரணத்திற்குச் சொல்லவேண்டுமென்றால், **என்னுடைய பட்டியலில் அதிக செல்வாக்குமிக்க ஒருவரின் பெயர் இடம் பெறலாம், ஆனால், அவர் மிகவும் கொடுமைக்காரராகவும், இதயமில்லாதவராகவும் இருக்கலாம், ஸ்டாலினைப் போன்று**. ஆனால், இதே போன்று என்னுடைய பட்டியலில் மிகவும் நல்லவராக இருந்த அன்னை கேப்ரீனி இடம் பெறவில்லை, ஏனென்றால், இந்த அன்னை செல்வாக்கு இல்லாதவர்.

இந்த புத்தகத்தின் ஆசிரியருக்கு 'தாம் என்ன எழுதுகிறோம் என்று நன்றாக தெரிந்துள்ளது. இயேசுவின் வாழ்க்கையும் தெரியும், முஹம்மதுவின்

வாழ்க்கையும் தெரியும். எனவே, தன் புத்தகத்தின் அறிமுகத்தில் மேற்கண்டவிதமாக எழுதியுள்ளார். இனபடுகொலை செய்த முஹம்மது, வலியச் சென்று நாடுகள் மீது போர் தொடுத்த முஹம்மது எங்கே, சமாதானப் பிரபுவாகிய இயேசு எங்கே! **இதை விளக்குவதற்குத் தான் அவர் 'என் பட்டியலில் ஸ்டாலின் போன்ற தீயவனுக்கு முதலிடம் கொடுக்கப்பட்டு இருக்கும், ஆனால் நல்லவர்கள் சிலர் பட்டியலிலேயே இல்லாமல் இருப்பார்கள்**' என்று கூறுகின்றார்.

**ஹிட்லருக்கும் அதிக முக்கியத்துவம் ஏன்?**

ஹிட்லர் நல்லவர் என்பதால் அல்ல, அவர் அதிகமாக மக்களை இன்ஃபுலியன்ஸ் செய்தார் என்பதால் தான்.

**பக்கம் 26:**

In composing this list, I have not simply selected the most famous or prestigious figures in history. Neither fame, nor talent, nor **nobility of character is the same thing as influence**. Thus Benjamin Franklin, Martin Luther King, Jr., Babe Ruth, and even Leonardo da Vinci are omitted from this list – although some find a place among the Honorable Mentions that follow the One Hundred. On the other hand, **influence is not always exerted benevolently; thus an evil genius such as Hitler meets the criteria for inclusion**. (பக்கம் 26 PDF புத்தகம், பிரிண்ட் புத்தக எண்: 28 - xxviii)

இந்த பட்டியலில், வரலாற்றில் மிகவும் புகழ்பெற்ற அல்லது மதிப்புமிக்க நபர்களை நான் தேர்ந்தெடுக்கவில்லை. மேலும் ஒரு மனிதனின் புகழோ, திறமையோ, நற்குணங்களோ என்பவைகள் ஒரு பக்கம், "செல்வாக்கு(Influence)" என்பது இன்னொரு பக்கம். இவ்விரண்டும் வெவ்வேறானவையாகும். இதனால் பெஞ்சமின் பிராங்க்ளின், மார்ட்டின் லூதர் கிங், ஜூனியர், பேப் ரூத் மற்றும் லியோனார்டோ டா வின்சி போன்றவர்கள் கூட இந்த பட்டியலில் இருந்து நீக்கப்பட்டுள்ளார்கள். எனினும், இவர்களை 'கவுரப் பட்டியலில் என் புத்தகத்தில் சேர்த்துள்ளேன்'. வேறு வகையில் சொல்லவேண்டுமென்றால், 'செல்வாக்கு' என்பது வேறு, 'நற்குணமுள்ளவர்கள் என்பது வேறு". **இதனால் ஹிட்லர் போன்ற ஒரு கேடுகெட்ட தீயவன் கூட இந்த நிபந்தனையில் ஜெயித்து, பட்டியலில் இடம் பிடித்துவிட்டான்.**

ஆசிரியரின் மேலேயுள்ள வரிகளையும் கவனியுங்கள். நல்லவர்களை இந்த ஆசிரியர் கருத்தில் கொள்ளவில்லையாம், யார் (அவன் நல்லவனோ, கெட்டவனோ) சரித்திரத்தில் அதிக பாதிப்பை (Influence) உண்டாக்கினானோ அவன் பட்டியலில் இடம் பெறுவானாம். இந்த வகையில் பார்த்தால், ஹிட்லருக்கும், ஸ்டாலினுக்கும் 'உலக சரித்திரத்தில் அதிக செல்வாக்கு (Influence) உடையவர்கள் பட்டியலில் இடம் கிடைத்தது, இவர்களில் முஹம்மதுவிற்கு முதலிடம் கிடைத்தது. இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? பட்டியலில் முதலில் இருப்பதினால் அவர் நல்லவர் என்று அர்த்தமில்லையென்று ஆசிரியர் கூறுகின்றார்.

வாசகர்கள் ஒன்று செய்யலாம், ஹிட்லர், ஸ்டாலின் மற்றும் முஹம்மதுவின் வாழ்க்கை வரலாறுகளை படித்துப் பார்க்கலாம், அதன் பிறகு இவர்களுக்கிடையே ஏதாவது ஒற்றுமை தெரிகின்றதா? என்பதைப் பார்த்து முடிவு செய்யலாம்.

**முஹம்மது இயேசுவை விட பெரியவர் என்று நான் சொல்லவில்லை!**

ஆசிரியர் மைக்கேல் ஹெச் ஹார்ட் 27ம் பக்கத்தில் கூறியதை கவனிக்கவும்.

I have tried to divide the credit for a given development in proportion to each participant's contribution. Individuals, therefore, are not ranked in the same order as would be the important events or movements with which they are associated. Sometimes a person who is almost exclusively responsible for a significant event or movement has been ranked higher then one who played a less dominant role in a more important movement.

A striking example of this is **my ranking Muhammad higher than Jesus**, in large part because of my belief that Muhammad had a much greater personal influence on the formulation of the Moslem religion than Jesus had on the formulation of the Christian religion. **This does not imply, of course, that I think Muhammad was a greater man than Jesus.** (பக்கம் 27 PDF புத்தகம்)

நான் என் பட்டியலில், ஒரு முக்கியமான இயக்கத்தை உருவாக்கியவருக்கும், அந்த இயக்கம் பரவுவதற்கு அவரது பங்களிப்பு என்ன என்பதையும் கணக்கில் கொண்டுள்ளேன். இயக்கங்களை(மதங்களை/கண்டுபிடிப்புக்களை) உருவாக்கிய நபர்களையும், அந்த இயக்கங்களையும் நான் வெவ்வேறாக பிரித்திருக்கிறேன். இதனால் தான் சில நேரங்களில், ஒரு குறிப்பிட்ட இயக்கத்தை உருவாக்குவதில் முக்கிய பங்கு வகித்தவருக்கு முதலிடம் கொடுத்திருந்திருப்பேன், ஆனால், அந்த இயக்கத்திற்கு முக்கிய காரண கர்த்தாவாக இருந்தாலும், குறைவான பங்கு வகித்தவருக்கு நான் குறைவான இடத்தை கொடுத்திருக்கிறேன்.

இதற்கு ஒரு உதாரணம் சொல்லவேண்டுமென்றால், இயேசு மற்றும் முஹம்மதுவின் உதாரணத்தைச் சொல்லலாம். அதாவது நான் முஹம்மதுவிற்கு இயேசுவைக் காட்டிலும் ஒரு படிமேலே இடம் கொடுத்ததற்கு இது ஒரு காரணமாகும். என் கருத்தின்படி சுருக்கமாக சொல்வதானால், 'இஸ்லாம் மதத்தை முழுவதுமாக உருவாக்குவதில் முஹம்மதுவின் தனிப்பட்ட பங்கு அதிகமாக உள்ளது. ஆனால், கிறிஸ்தவ மதத்தை முழுவதுமாக உருவாக்குவதில் இயேசுவின் செல்வாக்கோடு கூட மற்ற சீடர்களின் பங்கும் தேவையாக உள்ளது. **இப்படி நான் சொல்வதினால் "முஹம்மது இயேசுவை விட பெரியவர் என்று நான் கருதுகிறேன்" என்று அர்த்தமில்லை.**

**இங்கு மைக்கேல் என்ன சொல்கிறார்?**

இந்த வரிகளில் மைக்கேல் "இயேசுவை விட முஹம்மது பெரியவர் என்று நான் சொல்லவில்லை" என்கிறார். ஆனால், முஸ்லிம் அறிஞர்கள் "முஹம்மது மற்றவர்களைக் காட்டிலும் சிறப்புமிக்கவர்(Greatest) என்று மைக்கேல் சொல்கிறார், அதனால் தான் முஹம்மதுவிற்கு முதலிடம் கொடுத்தார்" என்று பொய்களைச் சொல்கிறார்கள்.

ஆனால், “Influence” என்ற வார்த்தை "Greatest" என்ற வார்த்தைக்கு சமமல்ல என்பது தான் மைக்கேல் ஹார்ட்டின் கருத்து.

உலகில் அதிக "Influence" உள்ள ஒரு நபர் ஸ்டாலினாகவும், ஹிட்லராகவும் முஹம்மதாகவும் இருக்கக்கூடும், ஆனால், அவர்கள் மற்றவர்களைக் காட்டிலும் "Greatest" ஆகமுடியாது என்று தம்முடைய அறிமுகத்தில் ஆசிரியர் எடுத்துக் காட்டிவிட்டுத்தான் தன் பட்டியலைத் தொடர்கிறார்.

ஆக, முஹம்மது தம்முடைய "அரசியல் இஸ்லாமினாலும், ஆக்கிரமிப்புக்களினாலும்" தான் அதிகமாக செல்வாக்கு (Influence) படைத்தவராக இருக்கிறார். இதனால் அவர் மற்றவர்களைக் காட்டிலும் சிறந்தவர்(Greatest) ஆகமுடியாது என்று ஆசிரியர் ஆணித்தரமாக கூறுகின்றார்.

முஸ்லிம்கள் தில்லுமுல்லு செய்து தம் வார்த்தைகளை மாற்றிச் சொல்லக்கூடும் என்பதை அறிந்ததாலோ என்னவோ, ஆசிரியர் "முஹம்மதுவையும், இயேசுவையும்" ஒரு உதாரணமாக எடுத்து எழுதி, பொய் சொல்பவர்களின் முகத்திரையை கிழித்துள்ளார்.



## தலைப்பு: அல்லாஹ் – யெகோவா (30 கேள்வி பதில்கள்)

**கேள்வி 1:** அல்லாஹ் தான் யெகோவா என்றால், யெகோவா என்ற வார்த்தை ஏன் ஒருமுறை கூட குர்ஆனில் வருவதில்லை?

**பதில் 1:** அல்லாஹ் வேறு, யெகோவா வேறு, முஸ்லிம்கள் இவ்விருவர் ஒருவர் என்று நம்பிக்கொண்டு இருக்கிறார்கள். உண்மையில் பைபிளை அருளிய யெகோவா குர்ஆனை அருளவில்லை. இதனால் தான் இவ்விரு வேதங்களும் வெவ்வேறு மூலங்களைக் கொண்டுள்ளது. இவைகளின் செய்திகளில் வித்தியாசம், இவ்விருவரின் குணங்களில் வித்தியாசங்களை காணமுடியும்.



**கேள்வி 2:** அல்லாஹ்வும் யெகோவாவும் ஒருவரே என்றுச் சொன்னால், ஏன் அல்லாஹ் என்ற பெயரை அவன் ஒரு முறையும் பழைய ஏற்பாட்டில் பயன்படுத்தவில்லை?

**பதில் 2:** அல்லாஹ் என்பவர், காபாவில் தொழுதுக்கொண்டு இருந்த 360 தெய்வங்களில் ஒருவர் ஆவார். முஹம்மதுவின் காலத்திற்கு முன்பிலிருந்தே மக்கா மக்கள் அல்லாஹ்வையும், இதர விக்கிரகங்களையும் வணங்கிக்கொண்டு இருந்தார்கள். அல்லாஹ்விற்கும், பைபிளுக்கும் எந்த ஒரு சம்மந்தமும் இல்லை. அல்லாஹ் என்ற பெயரை ஒரு முறை கூட பைபிளின் தேவன் தனக்கு பயன்படுத்திக் கொள்ளவில்லை என்பதில் எந்த ஒரு ஆச்சரியமும் இல்லை.



**கேள்வி 3:** ஒரு முஸ்லிம் அல்லாஹ்வை பிதா/தகப்பன் என்று அழைத்து வேண்டுதல் செய்யமுடியுமா?

**பதில் 3:** முடியாது, ஒரு முஸ்லிம் தன்னை படைத்ததாகச் சொல்கின்ற அல்லாஹ்வை 'அப்பா' என்று அழைத்து தொழுதுக்கொள்ளவோ, வேண்டுதல் செய்யவோ முடியாது. ஏனென்றால், உலக மக்கள் அனைவரும் அல்லாஹ்வின் அடிமைகள் தான், அவருடைய பிள்ளைகள் அல்ல. அல்லாஹ்வை அப்பா என்று மனதார அழைத்து ஒரு முஸ்லிம் வேண்டுதல்(துவா) செய்தால், அல்லது தொழுதுக்கொண்டால், இஸ்லாமின் படி அவர் ஒரு காஃபிர் ஆகிவிடுவார். தன்னை படைத்தவரை அப்பா என்று அழைத்த பாவத்திற்காக தன் நித்தியத்தை நரகத்தில் கழிக்கவேண்டி வரும் இந்த முஸ்லிம்.

அடேங்கப்பா! அப்பா என்று அழைப்பது எவ்வளவு பெரிய பாவமப்பா!



**கேள்வி 4:** அல்லாஹ் ஜிப்ரீல் தூதன் மூலமாக மட்டுமே முஹம்மதுவிடம் பேசினான். பல தீர்க்கதரிசிகளோடு நேரடியாக பேசிய அல்லாஹ், ஏன் முஹம்மதுவிடம் ஒரே ஒரு முறை கூட நேரடியாக பேசவில்லை?

**பதில் 4:** ஆதாமை படைந்த அந்த நாளிலிருந்து முஹம்மதுவிற்கு முன்பு வரை, பல நூற்றாண்டுகள் நபிகளிடமும், மற்ற மக்களிடமும் நேரடியாக பேசிய அல்லாஹ், தன்னுடைய கடைசி நபியாகிய முஹம்மதுவிடம் மட்டும், ஜிப்ரீல் தூதன் மூலமாகவே பேசினான், நேரடியாக பேசவில்லை. அல்லாஹ் "தவ்ராத், ஜபூர் மற்றும் இன்ஜீலை" கொடுத்தான் என்று குர்ஆன் சொல்கிறது. பழைய ஏற்பாட்டு நபிகள் அனேகரிடம் நேரடியாக பேசினான். ஆனால், குர்ஆனை யாருக்கு கொடுத்தானோ அவரோடு அவர் நேரடியாக பேசவில்லை. ஒரு வேளை, அல்லாஹ் நேரடியாக பேசுவதற்கு முஹம்மதுவிற்கு தகுதியில்லை என்று அல்லாஹ் நினைத்தானா?

அல்லாஹ்விற்கும் யெகோவா தேவனுக்கும் இடையே இருக்கும் வித்தியாசங்களில் இதுவும் ஒரு முக்கியமான் வித்தியாசமாகும்.



**கேள்வி 5:** அல்லாஹ்விற்கு எத்தனை பெயர்களை குர்ஆன் வழிமொழிகின்றது?

**பதில் 5:** அல்லாஹ்விற்கு பல அழகான பெயர்கள் உள்ளன என்று குர்ஆன் சொல்கிறது. ஆனால், ஹதீஸ்களில் தான் அல்லாஹ்விற்கு 99 பெயர்கள் உள்ளதாக சொல்லப்பட்டுள்ளது.

பார்க்க குர்ஆன் 17:110:

17:110. “நீங்கள் (அவனை) அல்லாஹ் என்று அழையுங்கள்; அல்லது அர்ரஹ்மான் என்றழையுங்கள்; எப்பெயரைக் கொண்டு அவனை நீங்கள் அழைத்தாலும், **அவனுக்குப் (பல) அழகிய திருநாமங்கள் இருக்கின்றன**” என்று (நபியே!) கூறுவீராக; . . .

அந்த 99 பெயர்கள் என்னவென்று முஸ்லில்கள் அறிஞர்கள் தொகுத்து இருக்கிறார்கள். இவைகளில் 81 பெயர்கள் தான் அவர்கள் குர்ஆனிலிருந்து எடுத்திருக்கிறார்கள்.



**கேள்வி 6:** முஸ்லிம்கள் அல்லாஹ்வை ஏன் 'அவன் இவன்' என்று மரியாதை குறைவாக குறிப்பிடுகிறார்கள்?

**பதில் 6:** அல்லாஹ்வை குறிப்பிடும் போது "அவர் இவர்" என்று குறிப்பிட்டால், அது பன்மையை குறிப்பது போன்று ஆகிவிட வாய்ப்பு உள்ளதால், "அவன் இவன்" என்று அல்லாஹ்வை ஒருமையில் முஸ்லிம்கள் குறிப்பிடுகிறார்கள். இப்படி அல்லாஹ்வை அழைப்பதினால் முஸ்லிம்கள் அல்லாஹ்வை அவமதிக்கிறார்கள் என்று அர்த்தமல்ல.



**கேள்வி 7:** அல்லாஹ்விற்கு உருவம் உண்டா? குர்ஆன் என்ன சொல்கிறது?

**பதில் 7:** குர்ஆன் வசனங்களை கவனித்தால், அல்லாஹ்விற்கு உருவம் உண்டு என்று தான் நாம் கருதவேண்டியுள்ளது.

**அல்லாஹ் அமருகிறான்:**

ஸூரா 20:5. அர்ரஹ்மான் **அர்ஷின் மீது அமைந்தான்**.

**அல்லாஹ்விற்கு முகம் உண்டு:**

ஸூரா 55:27. மிக்க வல்லமையும், கண்ணியமும் உடைய உம் **இறைவனின் முகமே** நிலைத்திருக்கும்.

**அல்லாஹ்விற்கு கைகள் உள்ளன:**

ஸூரா 5:64. "அல்லாஹ்வின் கை கட்டப்பட்டிருக்கிறது" என்று யூதர்கள் கூறுகிறார்கள்; அவர்களுடைய கைகள்தாம் கட்டப்பட்டுள்ளன. இவ்வாறு கூறியதின் காரணமாக அவர்கள் சபிக்கப்பட்டார்கள்; **அல்லாஹ்வின் இரு கைகளோ விரிக்கப்பட்டே இருக்கின்றன**; . . .

ஸூரா 48:10. நிச்சயமாக எவர்கள் உம்மிடம் பைஅத்து(வாக்குறுதி) செய்தார்களோ, அவர்கள் அல்லாஹ்விடமே பைஅத்(வாக்குறுதி) செய்கின்றனர் - **அல்லாஹ்வின் கை** அவர்களுடைய கைகளின் மேல் இருக்கிறது; . .

**அல்லாஹ்விற்கு கண்கள் உண்டு:**

ஸூரா 20:39. . . . மேலும், "(மூஸாவே!) நீர் **என் கண்** முன்னே வளர்க்கப்படுவதற்காக உம் மீது அன்பைப் பொழிந்தேன்.

**அல்லாஹ்விற்கு காதுகள் உண்டு:**

20:46. (அதற்கு அல்லாஹ்) "நீங்களிருவரும் அஞ்ச வேண்டாம்; நிச்சயமாக நான் (யாவற்றையும்) செவியேற்பவனாகவும், பார்ப்பவனாகவும் உங்களிருவருடனும் இருக்கிறேன்" என்று கூறினான்.

ஒருவருக்கு கண்கள், காதுகள், கை கால்கள் உண்டு என்று சொன்னால், அவருக்கு உருவம் உண்டு என்று சொல்லலாம் அல்லவா?

இதுமட்டுமல்லாமல், கியாமத் நாளுக்கு பிறகு அல்லாஹ்வை முஸ்லிம்கள் பார்க்கமுடியும் என்றும் ஹதீஸ்கள் சொல்கின்றன.



**கேள்வி 8:** அல்லாஹ் என்ற தெய்வத்தை முஹம்மதுவிற்கு முன்பும் மக்கா மக்கள் வணங்கிக்கொண்டு இருந்தார்களா? அப்படியானால், எந்த வகையில் அவனை வணங்கினார்கள்?

**பதில் 8:** ஆம், மக்கா மக்களுக்கு அல்லாஹ்வை முதன் முதலாக முஹம்மது அறிமுகம் செய்யவில்லை, அவர்கள் அல்லாஹ்வை முஹம்மதுவிற்கு முன்பிலிருந்து வணங்கிக்கொண்டு இருந்தார்கள்.

காபா ஆலயத்தில் வைக்கப்பட்டு இருந்த 360 கற்சிலைகளில் அல்லாஹ்வும் ஒருவர், மேலும் அவர் கொஞ்சம் பெரிய சாமி.



**கேள்வி 9:** அல்லாஹ்விற்கு முன்று பெண் பிள்ளைகள் இருந்ததாக, மக்கள் ஏன் கூறினார்கள்?

**பதில் 9:** முஹம்மது நபியாக மாறுவதற்கு முன்பு, அல்லாஹ்விற்கு முன்று மகள்கள் இருந்தார்கள், அவர்களையும் சேர்த்து மக்கள் வணங்கிக்கொண்டு இருந்தார்கள்.

இதனை குர்ஆனில் அல்லாஹ் சொல்கின்றான். ஆனால், முஹம்மதுவை நபியாக மாற்றிவிட்ட பிறகு, மக்கா மக்களைப் பார்த்து, உங்களுக்கு மட்டும் ஆண் பிள்ளைகளை பெற்றுக்கொள்கிறீர்கள், எனக்கு மட்டும் பெண் பிள்ளைகள் இருக்கிறார்கள் என்றுச் சொல்கிறீர்களே, இது அநியாயமில்லையா? என்று அல்லாஹ் கோபித்துக்கொள்கிறான்.

**ஸூரா 53:19-22**

53:19. நீங்கள் (ஆராதிக்கும்) **லாத்தையும், உஸ்ஸாவையும்** கண்டீர்களா?

53:20. மற்றும் மூன்றாவதான **“மனாத்”தையும்** (கண்டீர்களா?)

53:21. உங்களுக்கு ஆண் சந்ததியும், **அவனுக்குப் பெண் சந்ததியுமா**?

53:22. அப்படியானால், அது மிக்க அநீதமான பங்கீடாகும்.



**கேள்வி 10:** அல்லாஹ் என்ற பெயர் பைபிளில் உள்ளது என்கிறார்களே, இது உண்மையா?

**பதில் 10:** பைபிளில் அல்லாஹ் என்ற பெயர் இல்லை. எபிரேய மொழியிலும், கிரேக்க மொழியிலும் தேடினாலும், தேவனின் பெயர் "அல்லாஹ்" என்று பைபிளில் வாசிக்கமுடியாது.

உண்மையில் அல்லாஹ் என்ற பெயர் பைபிளில் இருந்திருந்தால், அதனை முதலில் யூதர்கள் ஏற்றுக்கொண்டு இருந்திருப்பார்கள். இந்த பெயரை ஏன் அவர்கள் மறக்கவோ, மறுக்கவோ போகிறார்கள்? யூதர்கள் தங்கள் தேவனுக்காக எவ்வளவு பக்தி வைராக்கியம் உள்ளவர்கள் என்பதை புதிய ஏற்பாட்டில் காணலாம், மேலும் சரித்திரமும் இதற்கு சாட்சி சொல்கிறது.



**கேள்வி 11:** அல்லாஹ் என்ற பெயர் யெகோவாவிற்கு சூட்டப்படாமல் இருந்திருந்தாலும், குறைந்த பட்சம் "அல்லாஹ்" என்ற வார்த்தை பைபிளில் இருந்திருக்குமே?

**பதில் 11:** இது சரியான கேள்வி, "அல்லாஹ்" என்ற வார்த்தை பைபிளில் உள்ளது, ஆனால் அதன் பொருள் "கர்வாலி மரம்" என்பதாகும்.

**'allah (H427)- "கர்வாலி மரம்" - oak tree**

இந்த வார்த்தை முழுக்க முழுக்க இஸ்லாமியர்களின் இறைவனுக்கு இருக்கும் "அல்லாஹ்" என்றே உச்சரிக்கப்படுகிறது மற்றும் ஆங்கிலத்தில் நாம் கவனித்தால், இஸ்லாமியர்கள் பயன்படுத்தும் அதே எழுத்துக்களை கொண்டுள்ளது. இதன் எண் H427.

- அல்லாஹ் = 'allah

இவ்வார்த்தையின் பொருள் "**கர்வாலி மரம்**" என்பதாகும். அல்லாஹ் என்ற எபிரேய வார்த்தையின் பொருள், "கர்வாலி மரம்" என்று உள்ளதால், இனி இஸ்லாமியர்களின் இறைவனுக்கு "கர்வாலி மரம்" என்று பொருள் என்று நாம் கூறலாமா? இஸ்லாமியர்கள் இதற்கு அனுமதி அளிப்பார்களா?

இஸ்லாமியர்கள் மற்றவர்களின் வேதங்களிலிருந்து வார்த்தைகளை எடுத்து அதை திருத்தி, மாற்றி பொருள் கூறுவது போல அல்லாமல், இந்த வார்த்தை எழுத்துக்கு எழுத்து அப்படியே "அல்லாஹ்" என்று வருகிறது, எனவே, அல்லாஹ் என்றால் கர்வாலி மரம் என்று அர்த்தம்.

இதைக் குறித்து மேலும் அறிய இந்த கட்டுரையை படிக்கவும்: **"ஜியாவிற்கு பதில் - "அல்லாஹ்" என்றால் "கர்வாலி மரம்" என்று பொருள்"**



**கேள்வி 12:** அல்லாஹ் என்ற பெயர் அல் + இலா என்ற இரு சொற்களின் கூட்டா? அல்லது அது ஒரு தனிப்பெயரா?

**பதில் 12:** அல்லாஹ் என்ற பெயர் ஒரு தனிப்பெயர் என்று முஸ்லிம்கள் சொல்கிறார்கள். ஆனால், அல் + இலாஹ் என்பது தான் பிற்காலத்தில் அல்லாஹ் என்று மாறியதாக ஆய்வுகள் சொல்கின்றன.

- அல் (AL) என்றால் "The" ஆகும்,
- இலாஹ் (Ilah) என்றால் "இறைவன் - God" என்பதாகும்.

ஆக, அல்லாஹ் என்றால் "The God" என்று பொருள்.



**கேள்வி 13:** குர்ஆனை படிப்பவர்களுக்கு ஏற்கனவே "அல்லாஹ்" என்றால் யார் என்று தெரிந்திருந்ததா?

**பதில் 13:** முஹம்மதுவிற்கு குர்ஆன் வசனங்களை அல்லாஹ் இறக்கும் போது, தன்னைப் பற்றி ஒரு அறிமுகத்தை மக்கா மக்களுக்கு கொடுக்கவில்லை, ஏனென்றால், அல்லாஹ் என்ற விக்கிரகத்தை அம்மக்கள் அனைவரும் வணங்கிக்கொண்டு இருந்தார்கள்.

மக்கா மக்களுக்கு அல்லாஹ்வைப் பற்றி நன்கு தெரியும், அவனைப் பற்றி கேள்வி கேட்டால், உடனே அவர்கள் "அல்லாஹ்" என்று பதில் சொல்வார்கலாம். பார்க்க ஸூரா: 29:61, 63, 65:

29:61. மேலும், (நபியே!) "நீர் இவர்களிடத்தில் வானங்களையும், பூமியையும் படைத்துச் சூரியனையும் சந்திரனையும் (தன் அதிகாரத்தில்) வசப்படுத்திருப்பவன் யார்?" என்று கேட்டால், **"அல்லாஹ்" என்றே இவர்கள் திட்டமாக கூறுவார்கள்**; அவ்வாறாயின் அவர்கள் (உண்மையை விட்டு) எங்கே திருப்பப்படுகிறார்கள்?

29:63. இன்னும், அவர்களிடம்: "வானத்திலிருந்து நீரை இறக்கி, பிறகு அதனைக் கொண்டு இப்பூமியை - அது (காய்ந்து) மரித்தபின் உயிர்ப்பிப்பவன் யார்?" என்று நீர் கேட்பீராகில்: **"அல்லாஹ்" என்றே இவர்கள் திட்டமாகக் கூறுவார்கள்**; (அதற்கு நீர்) "அல்ஹம்து லில்லாஹ் - புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியது" என்று கூறுவீராக; எனினும் இவர்களில் பெரும்பாலோர் அறிந்துணர மாட்டார்கள்.

29:65. மேலும் அவர்கள் மரக்கலங்களில் ஏறிக்கொண்டால், அந்தரங்க சுத்தியுடன் சன்மார்க்கத்தில் வழிப்பட்டவர்களாக **அல்லாஹ்வைப் பிரார்த்திக்கின்றனர்;** ஆனால், அவன் அவர்களை (பத்திரமாகக்) கரைக்கு கொண்டு வந்து விடுங்கால், அவர்கள் (அவனுக்கே) இணைவைக்கின்றனர்.



**கேள்வி 14:** யெகோவா தேவனை பிதா என்று அழைப்பது போன்று, அவரை தாய் (அம்மா) என்று அழைக்கலாமா?

**பதில் 14:** இந்த பதிலை படிப்பதற்கு முன்பாக, ஒரு முக்கியமான விவரத்தை நாம் மனதில் வைக்கவேண்டும், அது என்னவென்றால், "தேவன் ஆவியாக இருக்கிறார், அதனால் அவருக்கு ஆண்பால், பெண்பால் என்ற பாகுபாடு இல்லை".

"**பிதாவாகிய தேவன் (Father, The God)**" என்று பைபிள் சொல்கிறது, ஆனால் "**தாயாகிய தேவன் (Mother, The God)**" என்று பைபிள் சொல்வதில்லை. இது பைபிளின் இறையியலும் அல்ல.

பைபிளின் தேவன் தம்மை தந்தையாக, தாயாக, மேய்ப்பனாக, எஜமானனாக, குயவனாக இன்னும் பல உறவுகளில் தம்மை வெளிக்காட்டி மனிதனோடு உறவாடியுள்ளார், அன்பு செலுத்தியுள்ளார், எச்சரித்துள்ளார். உலக மக்களுக்கு அவர்கள் உலகத்தில் காண்கின்ற உறவுமுறைகளோடு (தந்தையாக, தாயாக...) சம்மந்தப்படுத்தி பேசினால் தான் சத்தியம் புரியும், தேவன் சொல்லவரும் கட்டளைகளின் ஆழம் புரியும்.

இதனை அவர் பல வசனங்களில் வெளிப்படுத்தியுள்ளார். இந்த கேள்வி "தாய்" என்ற ஒரு குறிப்பிட்ட உறவு முறைப்பற்றி கேட்டதால், பைபிளின் தேவன் தன்னை "தாய்" போல வெளிக்காட்டி பேசிய வேத வசனங்களை இங்கு தருகிறேன். அதன் பிறகு "அவரை தாயாகிய தேவன்" என்று அழைக்கலாமா, அழைக்கக்கூடாதா? என்பதை விளக்குவேன்.

**a) நான் உன்னை பெற்றேன்:**

**உபாகமம் 32:18**

18. உன்னை **ஜெநிப்பித்த** கன்மலையை நீ நினையாமற்போனாய்; **உன்னைப் பெற்ற** தேவனை மறந்தாய்.

**b) தாய் தன் பிள்ளையை மறப்பாளா? மறக்கமாட்டாள். அப்படி அவள் மறந்தாலும் நான் உன்னை மறக்கமாட்டேன்:**

**ஏசாயா 49:14-16**

14. சீயோனோ: கர்த்தர் என்னைக் கைவிட்டார், ஆண்டவர் என்னை மறந்தார் என்று சொல்லுகிறாள். 15. **ஸ்திரீயானவள் தன் கர்ப்பத்தின் பிள்ளைக்கு இரங்காமல்**, தன் பாலகனை மறப்பாளோ? அவர்கள் மறந்தாலும், நான் உன்னை மறப்பதில்லை. 16. இதோ, என் உள்ளங்கைகளில் உன்னை வரைந்திருக்கிறேன்; உன் மதில்கள் எப்போதும் என்முன் இருக்கிறது.

**c) ஒரு தாய் தன் பிள்ளையை தேற்றுவது போல தேற்றுவேன்:**

**ஏசாயா 66:13**

13. ஒருவனை அவன் **தாய் தேற்றுவதுபோல்** நான் உங்களைத் தேற்றுவேன்; நீங்கள் எருசலேமிலே தேற்றப்படுவீர்கள்.

**d) தாய் போல நடக்க பழக்குவேன்:**

**ஓசியா 11:3-4**

3. நான் எப்பிராயீமைக் **கைபிடித்து நடக்கப் பழக்கினேன்**; ஆனாலும் நான் தங்களைக் குணமாக்குகிறவரென்று அறியாமற்போனார்கள். 4. மனுஷரைக்

கட்டி இழுக்கிற அன்பின் கயிறுகளால் நான் அவர்களை இழுத்தேன், அவர்கள் கழுத்துகளின்மேல் இருந்த நுகத்தடியை எடுத்துப் போடுகிறவரைப்போல இருந்து, அவர்கள் பட்சம் சாய்ந்து, அவர்களுக்கு ஆகாரங்கொடுத்தேன்.

### e) தாய் போல சிறகுகளுக்குள் மூடுவார்

இவ்வசனங்களில் ஒரு தாய்ப் பறவை தன் சிறகுகளுக்குள் தன் குஞ்சுகளை மூடி அடைக்காப்பதுச் போல சொல்லப்பட்டுள்ளது, ஆனால், ஆண்பால் வார்த்தைகளை பயன்படுத்தியுள்ளது (அவர் தமது சிறகுகளாலே). ஒரு கோழி தன் குஞ்சுகளை தன் சிறகுகளுக்குள் மறைத்திருப்பதை நான் பார்த்திருக்கிறேன், ஆனால் சேவல் இப்படி செய்வதை கண்டதில்லை.

"கழுகு தன் கூட்டைக் கலைத்து" என்ற வசனத்திலும், இது ஆண் கழுகா, பெண் கழுகா என்று நமக்குத் தெரியவில்லை. தாய்க்கழுகும், தந்தை கழுகும் இதைச் செய்யலாம் என்று கருதப்படுகின்றது.

**சங்கீதம் 91:4**

4. **அவர் தமது சிறகுகளாலே உன்னை மூடுவார்**; அவர் செட்டைகளின் கீழே அடைக்கலம் புகுவாய்; அவருடைய சத்தியம் உனக்குப் பரிசையும் கேடகமுமாகும்.

**உபாகமம் 32:11-12**

11. **கழுகு தன் கூட்டைக் கலைத்து, தன் குஞ்சுகளின்மேல் அசைவாடி**, தன் செட்டைகளை விரித்து, அவைகளை எடுத்து, அவைகளைத் தன் செட்டைகளின்மேல் சுமந்துகொண்டுபோகிறதுபோல, 12. கர்த்தர் ஒருவரே அவனை வழி நடத்தினார்; அந்நிய தேவன் அவரோடே இருந்ததில்லை.

இது போன்று இன்னும் அனேக வசனங்களில் தேவன் தம்மை ஒரு தாய் போல பாவித்து தம் மக்களோடு பேசியுள்ளார். எனவே, நாம் ஜெபிக்கும் போது "என் தாயும் நீரே, என் தந்தையும் நீரே" என்று சொல்லி ஜெபிப்பதில் தவறில்லை. மற்றவர்களுக்காக ஜெபிக்கும் போதும், "ஒரு தாய் போல அவர்களை தேற்றுங்கள், ஆறுதல் படுத்துங்கள்" என்றுச் சொல்லி ஜெபிக்கலாம், தவறு இல்லை. (உம்மைப் போல அப்பா இல்லே, உம்மைப் போல அம்மா இல்லே, உம்மைப்போல நண்பன் இல்லே, உம்மைப்போல யாரும் இல்லேப்பா என்று பாடலும் பாடலாம், தவறு இல்லை).

**ஆனால், "பிதாவாகிய தேவன்(Father, The God)" என்றுச் சொல்வது போன்று "தாயாகிய தேவன் (Mother, The God)" என்ற ஒரு இறையியல் கோட்பாட்டை உருவாக்கக்கூடாது, இறையியல் வேறு, நம்மை அவர் தாய் போல தேற்றுவது என்பது வேறு, இதை மனதில் வைத்துக்கொள்ளவேண்டும்.**

**பைபிளின் இறையியலைப் பற்றி சுருக்கமாகச் சொல்வதென்றால், நம் தேவன் ஒருவரே தேவன், அவர் பிதாவாக (Father, The God), குமாரனாக (Son, The God) மற்றும் பரிசுத்த ஆவியானவராக (Holy Spirit, The God) இருக்கிறார். ஆனால், அவர் "தாயாகிய தேவனாக (Mother, The God)" இல்லை. இதனை சரியாக புரிந்துக்கொள்ளவேண்டும்.**



**கேள்வி 15:** ஒருவன் என் முகத்தை கண்டு உயிரோடு இருக்கக்கூடாது என்று தேவன் பைபிளில் ஒரு இடத்தில் சொல்லி, ஆனால், வேறு இடத்தில் மூஸாவோடு முகமுகமாய் பேசினார் என்று சொல்கிறாரே, இது முரண்பாடு அல்லவா?

**பதில் 5:** பைபிளின் வசனங்களை ஆங்காங்கே எடுத்து புரிந்துக் கொள்வதினால் உண்டானகுழப்பம் இது. சுருக்கமாக, இந்த குழப்பத்தை தீர்க்க முடியுமா என்பதை இப்போது பார்ப்போம்.

தேவன் ஆவியாக இருக்கிறார், அவருக்கு உருவம் இல்லை, அல்லது மனிதன் இதுவரை அவரை பார்த்ததில்லை. ஆனால், பழைய ஏற்பாட்டில் பிதாவாகிய தேவன் பல முறை வெளிப்பட்டு இருக்கிறாரே, அவரை ஆபிரகாம் போன்றவர்கள் பார்த்திருக்கிறார்களே, என்று நீங்கள் கேட்கலாம். ஆபிரகாம் போன்றவர்களுக்கு பிதா தம்மை வெளிக்காட்டும்போது, அவர் இருக்கின்ற வண்ணமாக சர்வ மகிமையோடும், பிரகாசத்தோடும் காட்டவில்லை. அவர் மனித உருவத்தில் வந்தார், அந்த நபரைத் தான் ஆபிரகாம் பார்த்தார். பிதாவாகிய தேவனை அவர் இருக்கின்ற வண்ணமாக (சர்வ மகிமையோடு) பார்க்கின்ற மனிதன் உயிரோடு இருக்கமாட்டான் என்று பைபிள் சொல்கிறது. எனவே, ஆபிரகாம் முதற்கொண்டு யாரும் அவர் இருக்கின்ற வண்ணமாக பார்க்கவில்லை.

இந்த விவரத்தை மோசேயுடன் பேசும் பொது கர்த்தர் சொல்கிறார், தம் முகத்தைக் காட்டாமல், தம் மகிமை கடந்து போன பிறகு, பின்புறத்தை மட்டுமே மோசே பார்க்கும் படி செய்தார். மோசே தேவனின் முகத்தை காணவில்லை.

**யாத்திராகமம் 33:20-23**

20 **நீ என் முகத்தைக் காணமாட்டாய், ஒரு மனுஷனும் என்னைக் கண்டு உயிரோடிருக்கக் கூடாது என்றார்**. 21. பின்னும் கர்த்தர்: இதோ, என்னண்டையில் ஒரு இடம் உண்டு; நீ அங்கே கன்மலையில் நில்லு. 22. என் மகிமை கடந்துபோகும்போது, நான் உன்னை அந்தக் கன்மலையின் வெடிப்பிலே வைத்து, நான் கடந்துபோகுமட்டும் **என் கரத்தினால் உன்னை மூடுவேன்**. 23. பின்பு, என் கரத்தை எடுப்பேன்; அப்பொழுது **என் பின்பக்கத்தைக் காண்பாய்; என் முகமோ காணப்படாது என்றார்**.

ஆனால், இதே அத்தியாயம் 9 லிருந்து 11 வசனங்கள் வரை பார்த்தால், மோசேயுடன் முகமுகமாய் தேவன் பேசினார் என்று சொல்லப்பட்டுள்ளதே என்று கேட்கிறீர்களா?

**யாத்திராகமம் 33-9-11:**

9 மோசே கூடாரத்துக்குள் பிரவேசிக்கையில், **மேகஸ்தம்பம் இறங்கி, கூடாரவாசலில் நின்றது**; **கர்த்தர் மோசேயோடே பேசினார்**. 10. ஜனங்கள் எல்லாரும் மேகஸ்தம்பம் கூடாரவாசலில் நிற்கக்கண்டார்கள்; ஜனங்கள் எல்லாரும் எழுந்திருந்து, தங்கள் தங்கள் கூடாரவாசலில் பணிந்து கொண்டார்கள். 11. **ஒருவன் தன் சிநேகிதனோடே பேசுவதுபோல, கர்த்தர் மோசேயோடே முகமுகமாய்ப் பேசினார்;** பின்பு, அவன் பாளயத்துக்குத் திரும்பினான்; நூனின் குமாரனாகிய யோசுவா என்னும் அவனுடைய பணிவிடைக்காரனாகிய வாலிபன் ஆசரிப்புக் கூடாரத்தை விட்டுப் பிரியாதிருந்தான்.

மேற்கண்ட வசனங்களை நன்றாக கவனியுங்கள், கூடார வாசலில் மேகஸ்தம்பம் (ஒரு மேகம் போன்ற ஒரு தூண்) நின்றது, கூடாரத்திற்குள் மோசே செல்கிறார். அந்த மேக ஸ்தம்பத்திலிருந்து தேவனுடைய சத்தம் மட்டுமே கேட்டது.

இந்த இடத்தில் முகமுகமாய் பேசுவது என்றால், நண்பர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து பேசுவது போன்று, இந்த இடத்தில் மோசேயும் அந்த மேகஸ்தம்பத்திலிருந்து தேவனும் நண்பர்களைப்போன்று பேசினார்கள், ஆனால் மோசே தேவனின் முகத்தை பார்க்கவில்லை. தேவனின் சத்தத்தை மட்டுமே மோசே கேட்டார். அதன் பிறகு மோசே தேவனுடைய முகத்தை பார்க்கவேண்டுமென்றுச் சொன்னபோது, நாம் மேலே கண்ட உரையாடல் (வசனங்கள் 20-23) நடக்கிறது.

ஆக, இது முரண்பாடு அல்ல, இது தான் சத்தியம். ஒரே அத்தியாயத்தில் தான் இரண்டு விவரங்களும் கொடுக்கட்டுள்ளது. இந்த யாத்திராகமம் 33வது அத்தியாயத்தை முழுவதுமாக படித்து, அங்கு நடந்த நிகழ்ச்சியை கற்பனையில் கொண்டு வந்து பாருங்கள், உங்களுக்கு தெளிவு உண்டாகும்.



**கேள்வி 16:** குறுக்குவழி அல்லாஹ் - ரமளான் கடைசி 10 நாட்களில் அல்லாஹ் முஸ்லிம்களோடு ஆடும் சூதாட்டம் என்ன?

**பதில் 16:** ஆம், அல்லாஹ் அனேக நேரங்களில் முஸ்லிம்களுக்கு ஷாட்கட் குறுக்குவழி கற்றுக்கொடுக்கிறான். முக்கியமாக ரமலானின் கடைசி 10 நாட்களில் குறுக்குவழியாக ஒரு சூதாட்டத்தை அவன் முஸ்லிம்களோடு ஆடியிருக்கிறான்.

**குறுக்குவழி என்னும் சூதாட்டம்:**

ரமளானின் கடைசி 10 நாட்களில் “லைலதுல் கத்ர்” என்ற ஒரு நாள் வருகிறது. இந்த நாளில் தான் முதன் முதலாக குர்-ஆன் இறக்கப்பட்டது, அதனால் இந்த நாளுக்கு சிறப்புக்கள் அதிகம் என்று இஸ்லாம் சொல்கிறது. இந்த நாளில் ஒரு முஸ்லிம் எதைச் செய்தாலும், அதற்கு அதிக நன்மைகள் உள்ளது என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள். ஆனால், அந்த நாள் எது? என்று முஹம்மது சரியாக சொல்லவில்லை, ரமளானின் கடைசி 10 நாட்களில், ஒற்றைப்படை நாளாக அது வருகிறது என்று முஹம்மது கூறியுள்ளார்.

அது என்ன சூதாட்டம் என்று அறிய விரும்புபவர்கள், இந்த கட்டுரையை படிக்கவும்: **குறுக்குவழி அல்லாஹ் - ரமளான் கடைசி 10 நாட்களில் அல்லாஹ் முஸ்லிம்களோடு ஆடும் சூதாட்டம்**



**கேள்வி 17:** குர்ஆனில் என்னை "அல்லாஹ்" என்று அழையுங்கள் என்று அதன் இறைவன் சொல்கிறான், பைபிளில் என்னை 'யெகோவா' என்று அழையுங்கள் என்று அதன் இறைவன் சொல்கிறான்? யார் கேம் விளையாடுவது இங்கே?

**பதில் 17:** அல்லாஹ் தான் கேம் ஆடுகின்றான்.

யெகோவா தேவனின் புத்தகத்திலிருந்து விவரங்களை எடுத்து தன் புத்தகத்தில் மறுபதிவு செய்யும் போது தன் பெயர் 'யெகோவா' என்று சொல்லியிருந்தால், வேறு வகையாக ஆய்வு செய்து அவனை ஏற்றுக்கொள்வதோ, புறக்கணிப்பதோ செய்யலாம். குறைந்த பட்சம் தனக்கு யெகோவா என்று பெயர் இருந்தது, அதனை 'அல்லாஹ்' என்று மாற்றிவிட்டேன் என்று குர்ஆனில் சொல்லியிருந்தாலாவது, கொஞ்சம் சமாளித்து இருக்கலாம். யெகோவா என்ற பெயர் பற்றி குர்ஆனில் அல்லாஹ் மூச்சுவிடாமல் இருந்ததால் தான், இப்போது மூச்சு விடாமல் கிறிஸ்தவர்கள் விமர்சித்துக்கொண்டு இருக்கிறார்கள்.



**கேள்வி 18:** தற்காலத்திலும் அல்லாஹ் அற்புதம் செய்கின்றானா? தக்காளியில், வானத்தில், மரங்களில் அற்புதம் செய்வது உண்மையா?

**பதில் 18:** தன்னுடைய கடைசி நபி முஹம்மது வாழ்ந்த போது வானத்திலும் பூமியிலும் அற்புதம் செய்யாத அல்லாஹ், இன்றைய காலத்தில் அனேக அற்புதங்கள் செய்கின்றான் என்று முஸ்லிம்கள் பரப்பிக்கொண்டு இருக்கிறார்கள்.

அழுகிக்போகும் தக்காளியில் அற்புதம், வானத்தின் மேகங்களில் அற்புதம், மரங்களில் அற்புதம் என்று பல பொய்யான அற்புதங்களை முஸ்லிம்கள் சொல்கிறார்கள், இவைகளைப் பற்றி கீழ்கண்ட கட்டுரையில் படிக்கவும்:

- **[2014 ரமளான் பாகம் 1: அல்லாஹ்வின் தற்கால அற்புதங்களும், குர்-ஆனின் அறிவியலும் - அழுகிப்போன தக்காளியில் தத்தளிக்கும் அல்லாஹ்]**
- **[2014 ரமளான் பாகம் 2 - வானத்தில் வலம் வரும் அல்லாஹ்]**



**கேள்வி 19:** அல்லாஹ் ஏன் இஸ்மாயீலையும் மக்காவையும் 2500 ஆண்டுகள் மறந்துவிட்டான்?

**பதில் 19:** யார் சொன்னது இப்படி? இல்லையே! அல்லாஹ் மக்காவை 2500 ஆண்டுகள் மறக்கவில்லையே என்றுச் சொல்லத்தோன்றுகிறதா?

இப்றாஹீமின் மகன் இஸ்மாயீல் ஒரு நபி (இஸ்லாமின் படி). அவரை மக்கா நகர மக்களுக்கு நபியாக அல்லாஹ் நியமித்தான் (இஸ்லாமின் படி).

அதே நேரத்தில் இஸ்ரெல் நாட்டில் ஈசாக்கை நபியாக்கினான். கி.மு. 1900/2000வது ஆண்டில் இஸ்மாயீலை நபியாக நியமித்த அல்லாஹ், அதன் பிறகு 2500 ஆண்டுகள் மக்காவை மறந்துவிட்டான், இஸ்மாயீல் ஊழியம் செய்த மக்களை மறந்துவிட்டான். காடைசியாக கி.பி. 610ல் முஹம்மதுவை நபியாக மக்கா மக்களுக்கு வழி நடத்த அனுப்பினான்.

ஆனால், இதே காலகட்டத்தில், ஈசாக்கு முதல் இயேசு வரை, பல நபிகளை இஸ்ரேலுக்கு அனுப்பிக்கொண்டே வந்தான். ஏன் இந்த ஓரவஞ்சனை அல்லாஹ்விற்கு? இஸ்ரேல் என்றால் ஒரு விதம், மக்கா என்றால் வேறு விதமா?

ஈசாக்கின் வம்சத்திற்கு, ஒருவருக்கு பின்னால் இன்னொருவர் என்று பல தீர்க்கதரிசிகளை அனுப்பினான் அல்லாஹ், இன்னும் சிலவேளைகளில் ஒரே சமுதாயத்திற்கு ஒரே நேரத்தில் இரண்டு நபிகள் (யஹ்யா மற்றும் ஈஸா). ஆனால் மக்காவிற்கு 2500 ஆண்டுகளுக்கு முன்பு, இஸ்மாயீல் என்ற ஒரே நபி, அதன் பிறகு கடைசி நபி முஹம்மது, இது அநியாயம் தானே!

இந்த விவரங்களை படங்களாக கீழ்கண்ட கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளது பார்க்கவும்:

- **[அல்லாஹ் ஏன் இஸ்மாயீலையும் மக்காவையும் 2500 ஆண்டுகள் மறந்துவிட்டான்?]**



**கேள்வி 20:** பைபிளின் தேவன் பழைய ஏற்பாட்டை பாதுகாத்தார் என்று எப்படி நம்புவது?

**பதில் 20:** ஆம், பைபிளின் தேவன் பைபிளை பாதுகாத்தார் என்று நிச்சயமாகச் சொல்லமுடியும். இதற்கு கிழ்கண்ட சான்றுகளைச் சொல்லலாம்.

**1) தேவன் தம் வார்த்தைகளை பாதுகாப்பதாக** வாக்கு கொடுத்து இருக்கிறார், பார்க்க: ஏசாயா 55:10-11; 59:21; 1 பேதுரு 1:24-25, மத்தேயு 24:35.

**2) இயேசுவும், புதிய ஏற்பாடும்** பழைய ஏற்பாட்டை உறுதி செய்துள்ளார்கள், பார்க்க: மத்தேயு 19:4; 22:32,37; 39; 23:35; மாற்கு 10:3சூ; லூக்கா 2:23-24; 4:4; 11:51; 20:37; 24:27,44

**3) தொல்பொருள் ஆய்வு சான்றுகள்:** செப்டாஜின்ட் கிரேக்க மொழியாக்கம் கி.மு. 250 நூற்றாண்டுகளில் நடந்தது. சவக்கடல் சுருள்களில் கி.மு. 100க்கு முற்பட்ட காலத்திற்கான பழைய ஏற்பாட்டு நூல்கள் ஆயிரக்கணக்கில் கிடைத்தன. இயேசுவின் காலத்தில் அராமிக் தர்கம் என்ற யூத விளக்கவுரைகள் பழைய ஏற்பாட்டிற்கு எழுதப்பட்டன. இன்னும் இப்படி சொல்லிக்கொண்டு போகலாம்.

**4) இன்னும் முதல் நூற்றாண்டு யூத எழுத்தாளர்களும்,** இரண்டம் நூற்றாண்டின் கிறிஸ்தவ போதகர்களும், எழுத்தாளர்களும் எழுதிய நூல்களிலிருந்து பழைய ஏற்பாடு பாதுகாக்கப்பட்டு இருந்தது என்பதை அறியலாம். இவைகள் பற்றி பல ஆய்வு கட்டுரைகள் உள்ளன.

முஸ்லிம்கள் இந்த கேள்வியை கேட்டதால், அவர்கள் குர்ஆனே தவ்ராத், ஜபூர் பற்றி சாட்சி சொல்கிறது என்பதை அவர்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டியுள்ளது. தவ்ராத்த்திலும், ஜபூரிலும் நேர்வழியும், ஒளியும் இருக்கிறது என்று குர்ஆன் சொல்கிறது.

புதிய ஏற்பாட்டின் பாதுகாப்பு பற்றி தனியாக வேறு கேள்வியில் பார்ப்போம்.



**கேள்வி 21:** ஏன் பைபிளின் தேவன் ‘லேவி’ என்ற ஒரு வம்சத்தை தன் ஆலய பணிக்காக வைத்துக் கொண்டார்? அல்லாஹ் இது போல செய்யவில்லையே!

**பதில் 21:** "பைபிளின் தேவன் தான் எங்கள் அல்லாஹ் என்று" முஸ்லிம்களாகிய நீங்கள் தான் சொல்கிறீர்கள், அதே நேரத்தில் பைபிளின் தேவனை கேள்வி கேட்பதும் நீங்களே! உங்களின் கூற்றுப்படி, லேவி என்ற ஒரு வம்சத்தை தன் ஆலய ஊழியத்திற்காக அமைத்ததும் அல்லாஹ் என்று அர்த்தமாகின்றதல்லவா?

பழைய ஏற்பாட்டில் ஒரு குறிப்பிட்ட காலகட்டம்வரைக்கும், அதாவது மேசியா வரும்வரை யூதர்களை தம் கட்டுப்பாட்டிற்குள், பரிசுத்தமாக அவர்களை காத்துக்கொள்வதற்காக, சில மார்க்க சட்டங்களையும், ஆலய சட்டங்களையும் தேவன் கொடுத்தார்.

நாட்டை ஆள நியாயாதிபதிகள், அரசர்களை நியமித்தார், அதே போன்று தம் தேவாலயத்தின் சட்டங்களை காக்க, கீழ்படியவைக்க ஒரு குடும்பத்தை நியமித்தார். இயேசு வந்த பிறகு திருச்சபை தொடங்கிய பிறகு, லேவி என்ற ஒரு வம்சம் தான் ஊழியக்காரர்களாக வரவேண்டும் என்ற சட்டமில்லை. எனவே, லேவி என்ற ஒரு வம்சத்தை யூதர்களுக்காக மட்டுமே தேவன் நியமித்தார், அது உலகத்துக்கான பொதுவான சட்டமில்லை.



**கேள்வி 22:** பைபிளின் தேவன் ஏன் இஸ்ரவேலை மட்டுமே நேசிக்கிறார்?

**பதில் 22:** இது தவறான புரிதல் கொண்ட கேள்வியாகும்.

யெகோவா தேவன் இஸ்ரவேலை மட்டும் ஏன் நேசித்தார் என்றுச் சொல்வது சரியான கேள்வியல்ல, இதற்கு பதிலாக, ஏன் அவர் இஸ்ரவேலை தெரிந்துக்கொண்டார் என்று கேட்பது சரியானதாக இருக்கும். யெகோவா தேவன் உலக மக்களை அனைவரையும் நேசிக்கிறார், ஏனென்றால் அவர் தான் அவர்களை ஒரு மனிதனிலிருந்து படைத்தார்.

இஸ்ரவேலை மட்டும் ஏன் தெரிந்துக்கொண்டார்? ஏன் மற்றவர்களைக் காட்டிலும் மேன்மையாக்கி வைத்தார்? என்று கேட்டால் அதற்கு காரணம் உண்டு.

குர்ஆனில் இதைப் பற்றி சொல்லப்பட்டதைக் காணுங்கள்: ஸூரா 45:16, 6:86, 17:55

ஸூரா 45:16. நிச்சயமாக நாம், இஸ்ராயீலின் சந்ததியினருக்கு வேதத்தையும், அதிகாரத்தையும், நுபுவ்வத்தையும் கொடுத்தோம்; அவர்களுக்கு மணமான உணவு (வசதி)களையும் கொடுத்தோம் - அன்றியும் **அகிலத்தாரில் அவர்களை மேன்மையாக்கினோம்**.

ஸூரா 6:86. இன்னும் இஸ்மாயீல், அல்யஸவு, யூனுஸ், லூத் - இவர்கள் யாவரையும் உலகத்திலுள்ள **அனைவரிலும் மேன்மையாக்கினோம்**.

ஸூரா 17:55. உம்முடைய இறைவன் வானங்களிலும் பூமியிலும் உள்ளவர்களைப் பற்றி நன்கு அறிவான்; நபிமார்களில் சிலரை வேறு சிலரைவிடத் திட்டமாக நாம் **மேன்மையாக்கியிருக்கிறோம்**; இன்னும் தாவூதுக்கு ஜபூர் (வேதத்தையும்) கொடுத்தோம்.

யூதர்களுடைய மேன்மை என்ன? அவர்களிடம் வேதம் கொடுக்கப்பட்டது தான் என்று பைபிளும் சொல்கிறது:

**ரோமர் 3:1-2**

1. இப்படியானால், யூதனுடைய மேன்மை என்ன? விருத்தசேதனத்தினாலே பிரயோஜனம் என்ன?

2. அது எவ்விதத்திலும் மிகுதியாயிருக்கிறது; **தேவனுடைய வாக்கியங்கள் அவர்களிடத்தில் ஒப்புவிக்கப்பட்டது விசேஷித்த மேன்மையாமே**.

இன்னொரு மேன்மை என்னவென்றால், அவர்களிடமிருந்து மேசியாவை கொண்டுவர தேவன் திட்டம் போட்டது தான். இதனை இயேசுவே உறுதிப்படுத்தியுள்ளார்:

யோவான் 4:22. நீங்கள் அறியாததைத் தொழுதுகொள்ளுகிறீர்கள்; நாங்கள் அறிந்திருக்கிறதைத் தொழுதுகொள்ளுகிறோம்; **ஏனென்றால் இரட்சிப்பு யூதர்கள் வழியாய் வருகிறது**.

சுருக்கமாகச் சொல்லவேண்டுமென்றால், வேதம் அவர்களிடம் ஒப்புக்கொடுப்பதற்கும், மேசியாவை அவர்களிடமிருந்து பிறக்கவைப்பதற்கும் தான் தேவன் அவர்களை தெரிந்துக்கொண்டாரே தவிர, உலக மக்களை வெறுத்து இவர்களை மட்டுமே நேசிப்பதற்காக அல்ல.

இது மிகவும் ஆழமான ஆய்வு விவரங்கள், தேவைப்படும் போது சின்னஞ்சிறு கேள்விகளாக தகுந்த இடங்களில் பார்ப்போம்.



**கேள்வி 23:** நீங்கள் என்னதான் சொன்னாலும் சரி, யூதர்களை தேவன் அதிகமாக ஆசீர்வதித்திருக்கிறார்? பழைய ஏற்பாட்டில் இதனை காணலாம்.

**பதில் 23:** தேவன் இப்றாஹீமை தெரிவு செய்ததற்கு பதிலாக, இந்தியாவில் ஒரு நபரை தெரிவு செய்திருந்தால், அவருடைய சந்ததிக்கு வேதம் கொடுத்து இருந்திருப்பார், மேசியா அங்கிருந்து வந்திருப்பார். எனவே, யூதர்களை மட்டும் தேவன் நேசிக்கிறார், மற்றவர்களை அவர்கள் நேசிப்பதில்லை என்ற கூற்று தவறானது, இதற்கு பல சான்றுகளை பைபிளிலிருந்து காட்டமுடியும்.

**தேவனின் கரங்களில் அதிக துன்பத்தை அனுபவித்தவர்கள் கூட யூதர்கள் தான்:**

பழைய ஏற்பாட்டை கூர்ந்து படித்து ஆய்வு செய்தால், யூதர்கள் கர்த்தரின் கரங்களில் பட்ட பாடுகளை கவனிக்கமுடியும். யூதர்கள் தவறு செய்யும் போதெல்லாம், தம் கட்டளைகளை மீறும் போதெல்லாம், மற்ற நாட்டவர்கள் கையில் அவர்களை ஒப்புக்கொடுத்தார்.

யூதர்கள் மறுபடியும் மனந்திரும்பி கர்த்தரிடம் திரும்பினால், கர்த்தர் அவர்களை இரட்சித்து, எச்சரித்து விடுதலை கொடுத்தார். இது தொடர்ச்சியாக நடந்தது,

மேசியாவாகிய இயேசு வந்த பிறகும் கூட, இவர்கள் மனந்திரும்பாத பட்சத்தில், இயேசு இவர்களின் அழிவை, எருசலேம் தேவாலயத்தின் அழிவை தீர்க்கதரிசனமாக கூறினார்.

**மாற்கு 13:1-2**

1. அவர் தேவாலயத்தை விட்டுப் புறப்படும்போது, அவருடைய சீஷர்களில் ஒருவன் அவரை நோக்கி: போதகரே, இதோ, இந்தக்கல்லுகள் எப்படிப்பட்டது! இந்தக் கட்டடங்கள் எப்படிப்பட்டது! பாரும் என்றான்.

2. இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: **இந்தப்பெரிய கட்டடங்களைக் காண்கிறாயே, ஒரு கல்லின்மேல் ஒரு கல்லிராதபடிக்கு எல்லாம் இடிக்கப்பட்டுப்போகும்** என்றார்.

கர்த்தரின் கரங்களிலிருந்து அதிகமான ஆசீர்வாதங்களை பெற்றவர்களும் யூதர்கள் தான், அவர் மூலமாக அதிகமான துன்பங்களை அனுபவித்தவர்களும் யூதர்கள் தான். துன்பங்களுக்கு காரணம் அவர்களின் கீழ்படியாமை தான்.

யூதர்களுக்கு கொடுத்த முக்கியத்துவத்திற்கு காரணம், "வேதமும், மேசியாவும்" அவர்களுக்கு கொடுத்ததாகும். இந்தியர்களுக்கு அவர் “வேதமும் மேசியாவும்” கொடுத்து இருந்திருந்தால், இதே நிலையில் நாமும் இருந்திருப்போம்.

சரி, ஒரு சிறிய குறிப்பு: இன்றைக்கு யூதர்கள் உலகத்துக்கு ஆசீர்வாதமாக இருக்கிறார்களா? மருத்துவ துறையில் மற்றும் இதர துறைகளில் யூதர்களின் பங்கு என்னவென்று சிறிது ஆய்வு செய்து பாருங்களேன், உண்மை என்னவென்று புரியும்.



**கேள்வி 24:** அல்லாஹ்விற்கு இருக்கும் 99 பெயர்களில் ஏன் "பிதா" என்ற பெயர் இல்லை?

**பதில் 24:** அல்லாஹ்விற்கு இருக்கும் 99 பெயர்களில் "பிதா, அப்பா" என்ற பெயர் மட்டும் அவருக்கு இல்லை.

இயேசு தேவனை அழைக்கும் போது, பிதாவே என்று அழைத்தார், சீடர்களுக்கு பிதாவே என்று அழைத்து ஜெபிக்கும் படி கற்றுக்கொடுத்தார் (மத்தேயு 6:9).

இன்று முஸ்லிம்கள் நாங்கள் இயேசுவை நேசிக்கிறோம், அவரை விசுவாசிக்கிறோம் என்றுச் சொல்கிறார்கள், ஆனால், அவரது போதனையின்படி முஸ்லிம்கள் செய்கிறார்களா? இயேசு சீடர்களுக்கு கற்றுக்கொடுத்தது போன்று, "பிதாவே என்று அழைத்து, இறைவனை தொழுதுக்கொள்ளமுடியுமா"?

இல்லை, இது எங்களால் முடியாது என்று நீங்கள் சொல்வதாக இருந்தால், நீங்கள் உண்மையான இயேசுவை விசுவாசிக்கவில்லை என்று பொருள்.

அல்லாஹ் பிதா ஆகமுடியாது, இதனால் அல்லாஹ் யெகோவா ஆக முடியாது.



**கேள்வி 25:** அல்லாஹ் யாருக்கும் தகப்பன் ஆகமுடியாது, சரி ஒப்புக்கொள்கிறோம், ஆனால், ஏன் முஹம்மது யாருக்கும் தகப்பன் ஆகமுடியாது?

**பதில் 25:** மேலே கண்ட பதில்களில் 'அல்லாஹ் யாருக்கும் பிதா ஆகமுடியாது' என்பதைக் கண்டோம். ஏனென்றால், அல்லாஹ் "நீங்கள் என் அடிமைகள், நான் எஜமான்" என்று சொல்லிவிட்டான் எனவே அதனை ஏற்றுக்கொள்கிறோம் என்று வைத்துக்கொள்வோம்.

ஆனால், முஹம்மது மக்களுக்கு குறைந்தபட்சம் முஸ்லிம்களுக்கு ஏன் பிதா ஆகமுடியாது? ஒரு ஆன்மீகத் தலைவர், எல்லோருக்கும் குருவாகவும், பிதாவாகவும், ஒரு குடும்ப தலைவராகவும் இருப்பார் அல்லவா?

ஸூரா 33:40. **முஹம்மது(ஸல்) உங்கள் ஆடவர்களில் எவர் ஒருவருக்கும் தந்தையாக இருக்கவில்லை;** ஆனால் அவரோ அல்லாஹ்வின் தூதராகவும், நபிமார்களுக்கெல்லாம் இறுதி (முத்திரை)யாகவும் இருக்கின்றார்; மேலும் அல்லாஹ் எல்லாப் பொருள்கள் பற்றியும் நன்கறிந்தவன்.

முஹம்மது முஸ்லிம்களுக்கு தகப்பன் என்று சொல்வதில் என்ன அல்லாஹ்விற்கு சங்கடம்?

சஹாபாக்களுக்கு முஹம்மது பெரிய துணை அல்லவா? தலைவர் அல்லவா? அவர்கள் குடும்பங்களுக்கு மூத்த தலை அல்லவா? ஒரு வேளை சஹாபாக்கள் மரித்த பிறகு, அவர்களின் குடும்ப நபர்களுக்கு (மனைவிக்கு, பிள்ளைகளுக்கு) ஒரு சகோதரனாக, பெரியப்பாவாக, சித்தப்பாவாக மாறி, அவர்களை இவர் தாங்கமாட்டாரா? தகப்பன் செய்கின்ற உதவிகளை அந்த குடும்பத்துக்குச் செய்யவேண்டாமா?

சஹாபாக்களுக்கு முஹம்மது தகப்பன் ஆகமுடியாது என்று குர்ஆன் சொல்வதில் ஏதோ ஒரு வெளியே சொல்லமுடியாத இரகசியம் அடங்கியிருக்கிறது.

ஒருவேளை, சஹாபாக்கள் மரணித்தால், அவர்களின் மனைவிகளை முஹம்மது திருமணம் செய்ய வாய்ப்பு இல்லாமல் போய்விடும் என்று அல்லாஹ் பயந்து, இப்படிப்பட்ட குர்ஆன் சட்டத்தை இறக்கிவிட்டனா?

முஸ்லிம்களே, சிந்தியுங்கள் அடிமைத் தனத்திலிருந்து விடுதலை பெறுங்கள்.



**கேள்வி 26:** சொர்க்கம் போவதற்கு அல்லாஹ்வின் வழி என்ன? யெகோவாவின் வழி என்ன?

**பதில் 26:** உலகில் எந்த ஒரு மதத்தை எடுத்துக்கொண்டாலும், நித்தியஜீவன், நிர்வாணா, சொர்க்கம் என்று மரணத்திற்கு பிறகு நாம் எங்கே இருக்கப்போகிறோம் என்பதைப் பற்றி கூறுகின்றன.

**சொர்க்கத்திற்கு போவதற்கு அல்லாஹ்வின் வழி:**

எனக்கு கீழ்படி, நல்ல காரியங்களைச் செய், நீ சொர்க்கத்திற்கு போவதற்கான டிக்கெட்டை நீயே சம்பாதித்துக் கொள். நீ சரியாக செய்யவில்லையென்றால் உன் டிக்கெட்டு கிழிந்துவிடும், உனக்கு சொர்க்கம் செல்வதற்கான வாசல் திறக்கப்படாது.

**சொர்க்கத்திற்கு போவதற்கு யெகோவா காட்டிய வழி:**

சொர்க்கம் செல்வதற்கு உன் முயற்சி வீண். உன்னால் 100% பரிசுத்தமாக வாழ முடியாது. உனக்காக நான் வழியை உண்டாக்கி இருக்கிறேன். உன் இடத்தில் என் வார்த்தையை மேசியாவாக அனுப்பி, எல்லாவற்றையும் நிறைவேற்றியுள்ளேன். நீ செய்யவேண்டியதெல்லாம் ஒன்று தான். என் மேசியா மீது நீ நம்பிக்கை வைக்கவேண்டும். அதன் பிறகு என்னுடைய ஆவியை உனக்கு உதவி செய்ய அனுப்பியுள்ளேன், அவருடைய துணையுடன் உன்னால் முடிந்த அளவிற்கு நல்ல குடிமகனாக, பரிசுத்தமான வாழ்க்கை வாழு. கடைசிவரை என்னில் நிலைநின்று மரித்தால், நீ என்னோடு பரலோகில் நித்திய காலமாக இருப்பாய்.

**இதில் எது கடினம்? எது நியாயம்? எது அறிவுடமை?**

**முஸ்லிம்களின் சிந்தனைக்கு:** இந்த ஒரு கேள்விகளை நீங்கள் கேட்டுப்பார்த்து, அதற்கு பதிலை நீங்களே கொடுங்கள். நான் செய்யும் அனைத்து நல்ல காரியங்களும், என் வாழ்நாளின் அனைத்து தொழுகைகளும், நான் சொர்க்கம் செல்ல போதுமானதாக இருக்குமா? அல்லாஹ் தராசில் என் நன்மைகள் தீய காரியங்களை வைக்கும் போது, என் நன்மைகள் என் தீய காரியங்களைக் காட்டிலும் அதிகமாக இருக்குமா? பூமியில் இருக்கும் போதே எனக்கு சொர்க்கத்திற்குச் செல்வேன் என்ற நம்பிக்கை உண்டா? அல்லது அந்த முடிவை என மரணத்திற்கு பிறகு தான் எடுக்கப்படும் என்று எண்ணுகின்றீர்களா?



**கேள்வி 27:** ஆதாமை வணங்கும்படி(ஸுஜூது) செய்யும் படி அல்லாஹ் இப்லீஷுக்கு கட்டளையிட்டானா?

**பதில் 27:** ஆம், ஸூரா18:50ல் அல்லாஹ் கூறியுள்ளான்.

18:50. அன்றியும், “**ஆதமுக்கு ஸுஜூது செய்யுங்கள்**” என்று நாம் மலக்குகளிடத்தில் கூறியதை (நபியே!) நினைவு கூர்வீராக; **அப்போது இப்லீஸைத்தவிர, அவர்கள் ஸுஜூது செய்தார்கள்**; அவன் (இப்லீஸ்) ஜின் இனத்தைச் சேர்ந்தவனாக இருந்தான்; அவன் தன் இறைவனுடைய கட்டளையை மீறி விட்டான்; ஆகவே நீங்கள் என்னையன்றி அவனையும் அவன் சந்ததியாரையும் (உங்களைப்) பாதுகாப்பவர்களாக எடுத்துக் கொள்வீர்களா? அவர்களோ உங்களுக்குப் பகைவர்களாக இருக்கிறர்கள்; அக்கிரமக்காரர்கள் (இவ்வாறு) மாற்றிக் கொண்டது மிகவும் கெட்டதாகும்.

மனிதனை வணங்குவதினால், அல்லாஹ்விற்கு என்ன நன்மை உண்டாகும்? மலக்குகளுக்கு ஜின்களுக்கு என்ன நன்மை? போகட்டும் ஆதாமுக்கு என்ன நன்மை உண்டானது?

மண்ணால் படைக்கப்பட்ட மனிதனை வணங்கும்படி மலக்குகளுக்கு ஏன் அல்லாஹ் கட்டளையிட்டான் என்ற காரணத்தை குர்ஆனில் காணமுடியாது. யாராவது இதற்கு பதில் சொல்லமுடியுமா?



**கேள்வி 28:** குர்ஆனில் எந்த வசனத்தில் அல்லாஹ் 'கத்னா, சுன்னத்து' செய்யவேண்டும் என்று கட்டளையிட்டுள்ளான்?

**பதில் 28:** குர்ஆனில் எந்த ஒரு வசனத்திலும் முஸ்லிம்கள் கத்னா என்கின்ற விருத்தசேதனம் செய்யவேண்டும் என்று கட்டளையிடப்படவில்லை.



**கேள்வி 29:** அல்லாஹ்விற்கு ஒற்றைப்படை எண்கள் என்றால் பிடிக்குமா?

**பதில் 29:** ஆமாம், அல்லாஹ்விற்கு ஒற்றைப்படை எண் என்றால் பிடிக்குமாம், அதற்காகத்தான் அனேக விஷயங்களை முஹம்மது ஒற்றைப்படையில் செய்யச் சொன்னாரோ!

**ஸஹீஹ் புகாரி எண்: 6410. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.**

அல்லாஹ்விற்கு தொண்ணூற்று ஒன்பது நூற்றுக்கு ஒன்று குறைவான - பெயர்கள் உண்டு. அவற்றை (நம்பிக்கை கொண்டு) மனனமிட்டவர் யாரும் சொர்க்கம் நுழையாமல் இருப்பதில்லை. **அல்லாஹ் ஒற்றையானவன். ஒற்றைப்படையையே அவன் விரும்புகிறான்**' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**லைலத்துல் கத்ர் இரவை எங்கு தேடுவது:**

ஸஹீஹ் புகாரி எண்: 2017. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'ரமளானின் கடைசிப் பத்து நாள்களில் உள்ள **ஒற்றைப்படை இரவுகளில் லைலத்துல் கத்ரைத் தேடுங்கள்**!' என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

**ஆனால், சத்தியம் செய்யும் போது அல்லாஹ் இரட்டை மற்றும் ஒற்றையின் மீது செய்வான்:**

ஸூரா 89:3. **இரட்டையின்** மீதும், **ஒற்றையின்** மீதும் சத்தியமாக,

அப்படியானால், ஒற்றை (1,3,5,7,9) மற்றும் இரட்டை(2,4,6,8) இரண்டையும் சேர்த்தால், எல்லா எண்களும் வந்துமிடுமல்லவா? அப்படியானால், அல்லாஹ் 'எண்கள் மீது சத்தியமாக' என்று சொல்லியிருந்தாலே போதுமானதாக மாறியிருக்குமே! நல்ல கேள்வி தான், ஆனால் பதிலை முஸ்லிம்களிடமிருந்து தான் வரவேண்டும்.



**கேள்வி 30:** எல்லாவற்றிற்கும் முந்தியவனும், பிந்தியவனும் யார்? குர்ஆன் 57:3

**பதில் 30:** குர்ஆன் 57:3ல் 'எல்லாவற்றிற்கும் முந்தியவனும், பிந்தியவனும்' அல்லாஹ் என்று சொல்லப்பட்டுள்ளது.

ஸூரா 57:3. (யாவற்றுக்கும்) **முந்தியவனும்** அவனே; **பிந்தியவனும்** அவனே; பகிரங்கமானவனும் அவனே; அந்தரங்கமானவனும் அவனே; மேலும், அவன் அனைத்துப் பொருள்களையும் நன்கறிந்தவன்.

இதே வார்த்தைகள் யெகொவா தேவனுக்கும், பயன்படுத்தப்பட்டு இருப்பதில் ஆச்சரியமில்லை. ஏனென்றால் முதலாவது பைபிளின் தேவன் இது தம்முடைய தகுதி என்றார், அதன் பிறகு வந்த குர்ஆனில் இது அல்லாஹ்விற்கு போடப்பட்டுள்ளது.

வெளி 1:8

8. இருக்கிறவரும் இருந்தவரும் வருகிறவருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தர்: நான் அல்பாவும், ஓமெகாவும் ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன் என்று திருவுளம்பற்றுகிறார்.

**ஆனால், இதே பெயர் இயேசு தமக்கும் சூட்டிக்கொண்டது தான் கவனிக்கப்படத்தக்கது:**

**கீழ்கண்ட வசனங்களைக் காண்க:**

**வெளி 1:17**

17. நான் அவரைக் கண்டபோது செத்தவனைப்போல அவருடைய பாதத்தில் விழுந்தேன்; அப்பொழுது அவர் தம்முடைய வலதுகரத்தை என்மேல்வைத்து, என்னை நோக்கி: பயப்படாதே, நான் **முந்தினவரும் பிந்தினவரும்**, உயிருள்ளவருமாயிருக்கிறேன்;

**வெளி 21:6**

6. அன்றியும், அவர் என்னை நோக்கி: ஆயிற்று, நான் அல்பாவும் ஓமெகாவும், **ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன்**. தாகமாயிருக்கிறவனுக்கு நான் ஜீவத்தண்ணீரூற்றில் இலவசமாய்க் கொடுப்பேன்.

**வெளி 22:12-13**

12. இதோ, சீக்கிரமாய் வருகிறேன்; அவனவனுடைய கிரியைகளின்படி அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னோடேகூட வருகிறது. 13. நான் அல்பாவும் ஓமெகாவும், ஆதியும் அந்தமும், **முந்தினவரும் பிந்தினவருமாயிருக்கிறேன்**.

யெகோவா தேவன் முந்தினவரும், பிந்தினவருமாக இருக்கிறார். இயேசு முந்தினவரும், பிந்தினவருமாக இருக்கிறார்.

## தலைப்பு: கிறிஸ்தவம் (50 கேள்வி பதில்கள்)

**கேள்வி 1:** "கிறிஸ்தவம்" - ஒரு வரியில் விளக்கமுடியுமா?

**பதில் 1:** உலகில் உள்ள எந்த மதத்தையும் ஒருவரியில் விளக்கமுடியாது, அப்படி விளக்குபவர்கள் அதன் ஒரு பகுதியைத் தான் விளக்குகிறார்கள் என்று பொருள்.

கிறிஸ்தவம் என்றுச் சொன்னால், அது மூன்று வகையாக பார்க்கப்படுகின்றது என்று நான் நினைக்கிறேன்.

1. பைபிள் காட்டும் கிறிஸ்தவம்
2. கிறிஸ்தவர்கள் காட்டுகின்ற கிறிஸ்தவம்
3. ஊடகங்கள் காட்டும் கிறிஸ்தவம்

### பைபிள் காட்டும் கிறிஸ்தவம்:

இயேசு தம்மை எப்படி பின்பற்றவேண்டுமென்றுச் சொன்னார்? தம்மை எப்படி தொழுதுக்கொள்ள வேண்டுமென்றுச் சொன்னார்? முக்கியமாக புதிய ஏற்பாடு என்ன சொல்கிறது? போன்ற கேள்விகளுக்கான பதில் தான் பைபிள் சொல்லும் கிறிஸ்தவம்.

## கிறிஸ்தவர்கள் காட்டுகின்ற கிறிஸ்தவம்:

பைபிளில் சொல்லப்பட்ட கிறிஸ்தவமும், கிறிஸ்தவர்களை பார்க்கும் போது அவர்கள் மூலமாக வெளிப்படும் கிறிஸ்தவமும் ஒன்றில்லையா? என்று கேட்க வேண்டாம். ஏனென்றால், பைபிள் என்பது பல நூறு சட்டங்கள், மத சடங்குகள் அடங்கிய புத்தகமில்லை. இதோ, நீ கிறிஸ்தவனாக வாழவேண்டுமென்றால் "இந்த சட்டங்களுக்கு கீழ்படி அது போதும்" என்று பைபிள் சொல்வதில்லை. கிறிஸ்தவனாக வாழ்வது என்பது, கண்மூடிக்கொண்டு மந்திரங்களைச் சொல்லி, அனைத்து மத சடங்குகளை இயந்திரங்களைப் போல செய்யும் வாழ்க்கையுமல்ல. ஒரு உண்மையான கிறிஸ்தவனை அவனது உடை அளங்காரத்தை பார்த்து கண்டுபிடிக்கமுடியாது. பைபிள் நாகரீகமான உடையை அணியச்சொல்கிறது, வெளிப்புற மாற்றம் தேவையற்றது.

கிறிஸ்தவம் என்பது நாம் இயேசுவோடு கொண்ட உறவு முறைக்கும், அன்புக்கும் பெயர் தான் கிறிஸ்தவம். அவர் மீது கொண்டுள்ள அன்பை, மற்றவர்கள் மீது காட்டி மகிழ்ச்சி அடையும் ஒரு நிலை தான் கிறிஸ்தவம். உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் அன்பு செலுத்து, உன் சக மனிதனிடத்தில் அன்பு செலுத்து, கிறிஸ்தவம் பற்றி இது தான் இயேசுவின் இரத்தினச் சுருக்கம். அன்பு என்பது 24 மணி நேரமும் மற்றவர்கள் பார்க்கும்படி காட்டிக்கொண்டு இருக்கமுடியாது. சிக்கல் இங்கே தான் இருக்கிறது.

நாம் நம் தகப்பனோடு, தாயோடு கொண்டுள்ள அன்பு, மற்றும் உறவு முறையை மற்றவர்கள் முன்பு எந்நேரமும் காட்டிக்கொண்டு இருப்போமா என்ன? இல்லையல்லவா! ஆகையால், கிறிஸ்தவர்களின் வாழ்க்கை மூலமாக சில நேரங்கள் கிறிஸ்தவம் வெளிப்படும், சில நேரங்களில் வெளிப்படாது. கிறிஸ்தவரல்லாதவரால் இந்த நிலையை புரிந்துக் கொள்வது கடினமே!

## ஊடகங்கள் காட்டும் கிறிஸ்தவம்:

ஊடகங்கள் பரப்பும் செய்திகளைப் பார்த்து மற்றும் ஹாலிவுட் படங்களைப் பார்த்து இது தான் கிறிஸ்தவம் என்று மக்கள் தவறாக எண்ணுவதும் உண்டு. சிலவேளைகளில் சில கிறிஸ்தவர்களின் செயல்கள் பைபிளுக்கு எதிராக இருந்தாலும், அதையும் கிறிஸ்தவம் தான் செய்தது என்று ஊடகங்கள் சொல்லிவிடும்.

சரி, இதுவரை சொன்ன விவரங்களிலிருந்து, கிறிஸ்தவம் பற்றி ஏதாவது புரிந்ததா? புரியவில்லையென்றால் புதிய ஏற்பாட்டிலுள்ள ஒரே ஒரு நற்செய்தி நூலை (**மத்தேயு**/**மாற்கு**/**லூக்கா**/**யோவான்**) படித்துப் பாருங்கள், கிறிஸ்தவத்தின் அஸ்திபாரம் தெளிவாக புரிந்துவிடும்.

**புதிய ஏற்பாட்டை நாம் படிக்காமல், கிறிஸ்தவம் பற்றி மற்றவர்கள் சொல்லும் விவரங்களை எத்தனை நூறு பக்கங்கள் படித்தாலும், அது குறைவு தான்.**



**கேள்வி 2:** கிறிஸ்தவம் மேற்கத்திய மார்க்கம் (வெள்ளைக்காரனின் மதம்) என்றுச் சொல்வது சரியா?

**பதில் 2:** மனிதன் தேவ சாயலில் படைக்கப்பட்டான் என்று பைபிள் சொல்கிறது (ஆதியாகமம் 1:27). ஆதாம் தான் முதல் மனிதன். இந்திய வேதங்கள் சொல்லும் மனித படைப்பு கோட்பாட்டை ஆணிவேரோடு தகர்த்தெறியும் சாட்டையடி இது.

ஆரம்ப கால கிறிஸ்தவர்கள் யூதர்களாகவும், ஆசியா கண்டத்தில் உள்ள மத்திய கிழக்கு பகுதியில் வாழ்ந்தவர்களாகவும் இருந்தார்கள். மத்திய கிழக்கு பகுதியில் வாழ்ந்தவர்கள் வெள்ளையர்கள் அல்ல. இயேசுவும் நம்மைப்போன்றவர் தான், இயேசு வெள்ளைத்துரையல்ல. ஐரோப்பாவும், அமெரிக்காவும் கிறிஸ்தவம் தொடங்கிய இடத்தில் இல்லவே இல்லை. இயேசு உலக மக்கள் அனைவருக்குமான இரட்சகராக இருக்கிறார் (1 யோவான் 2:2).

கிறிஸ்தவம் வெள்ளையர்களின் மார்க்கமல்ல என்பதை இயேசுவின் சீடர்கள் மூலமாகவே நிருபிக்கப்பட்டுவிட்டது. ஆஃப்ரிக்கா கண்டத்தில் உள்ள எத்தியோப்பியா நாட்டிலிருந்து வந்த ஒரு அரசு அதிகாரிக்கு நற்செய்தியை இயேசுவின் சீடர் பிலிப்பு அறிவித்தார். அவர் இயேசுவை ஏற்றுக்கொண்டு, ஆஃப்ரிக்காவிற்குச் சென்று, இயேசுவை ஆஃப்ரிக்காவில் அறிவித்தார். ஆசியாவிற்கு வெளியே ஆஃப்ரிக்காவிற்கு தான் சுவிசேஷம் இயேசுவின் சீடர்களால் முதலில் அறிவிக்கப்பட்டுள்ளது.

**அப்போஸ்தலர் 8:27.**

அந்தப்படி அவன் எழுந்து போனான். அப்பொழுது **எத்தியோப்பியருடைய** ராஜஸ்திரீயாகிய கந்தாகே என்பவளுக்கு மந்திரியும் அவளுடைய பொக்கிஷமெல்லாவற்றிற்கும் தலைவனுமாயிருந்த எத்தியோப்பியனாகிய ஒருவன் பணிந்துகொள்ளும்படி எருசலேமுக்கு வந்திருந்து;

மத்திய கிழக்கு நாடுகளுக்கு அடுத்தபடியாக, இயேசுவின் நற்செய்தி ஆஃப்ரிக்காவிற்குச் சென்றது, ஐரோப்பாவிற்கோ, அமெரிக்காவிற்கோ அல்ல(அப்போது அமெரிக்காவே இல்லை). அதன் பிறகு இயேசுவின் நற்செய்தி ஆசியாவின் இதர நாடுகளுக்குச் சென்றது.

ஆரம்ப கால சபை தலைவர்களான அகஸ்டின்(Augustine), அதனசியஸ்(Athanasius), மற்றும் தெர்துல்லியன்(Tertullian) இவர்கள் அனைவரும் வட ஆப்ரிக்காவில்

ஊழியம் செய்தவர்கள். மேலும் இரேனியஸ்(Irenaeus), இக்னாடியஸ்(Ignatius) போன்றவர்களோடு கூட முதல் மூன்று நூற்றாண்டுகளில் கிறிஸ்தவம் ஆசியாவில் வேரூண்றியது. முஸ்லிம்களின் படையெப்பு வரைக்கும எத்தியோப்பியாவும், லிபியா, எகிப்து மற்றும் மேற்கு ஆசியா அனைத்தும் பலமான கிறிஸ்தவ நாடுகளாக இருந்தன.

இதிலிருந்து நாம் அறிவது என்னவென்றால், கிறிஸ்தவம் ஆசியா மற்றும் ஆஃப்ரிக்காவில் தான் ஆரம்பத்தில் பரவியது. கிறிஸ்தவம் வெள்ளையனின் மார்க்கமல்ல, இது உலகை ஒரு மனிதனிலிருந்த படைத்த தெய்வத்தின் வழிகாட்டுதல் ஆகும்.

**இது தான் கிறிஸ்தவத்தின் சத்தியம்:**

அப்போஸ்தலர் 10:34-5.

அப்பொழுது பேதுரு பேசத்தொடங்கி: தேவன் பட்சபாதமுள்ளவரல்ல என்றும், **எந்த ஜனத்திலாயினும்** அவருக்குப் பயந்திருந்து நீதியைச் செய்கிறவன் எவனோ அவனே அவருக்கு உகந்தவன் என்றும் நிச்சயமாய் அறிந்திருக்கிறேன்.

மேலும் அறிய இந்த ஆங்கில கட்டுரையை படிக்கவும்: **Is Christianity a white man's religion?**



**கேள்வி 3:** கிறிஸ்தவர்கள் பாவம் செய்து பாதிரியார்களிடம் மன்னிப்பு கேட்டு, மறுபடியும் பாவம் செய்கிறார்களே, இது சரியா?

**பதில் 3:** பைபிளில் எங்கும் இப்படி செய்யுங்கள் என்று சொல்லப்படவில்லை, இயேசுவும், அவரது சீடர்களும் இதனை போதிக்கவில்லை.

இது மனிதர்களின் பாரம்பரியங்கள். இதற்கும் பைபிளுக்கும் எந்த சம்மந்தமும் இல்லை. ரோமன் கத்தோலிக்க சபையில் இப்படி செய்யப்படுகின்றது, ஆனால் இது பைபிளின் போதனை அல்ல மாறாக பைபிளுக்கு எதிரான செயலாகும்.

பைபிளின் படி நம் பாவங்களை தேவனிடம் தான் அறிக்கையிடவேண்டும், மனிதர்களிடம் அல்ல.

**1 யோவான் 1:9:**

நம்முடைய பாவங்களை நாம் **அறிக்கையிட்டால்**, பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு **அவர்** உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்.

யாக்கோபு 5:16ன் பாடி, நாம் ஒருவருக்கு ஒருவர் நம் குற்றங்களை அறிக்கைவிடவேண்டும், அதாவது நான் என் சகோதரனுக்கு தீமை செய்தால் அவனிடம் சென்று மன்னிப்பு கேட்கவேண்டும். மேலும் இந்த வசனம் நாம் சுகமடைவதற்கு முன்பு, நாம் யாருக்காவது எதிராக நடந்திருந்தால், அவரிடம் மன்னிப்பு கேட்டுவிட்டு, அதன் பிறகு கர்த்தரிடம் ஜெபிக்கவேண்டும் என்றுச் சொல்கிறது. இது பாதிரியார்களிடம் நம் பாவங்களை அறிக்கையிடச் சொல்லவில்லை? சகோதரனுக்கு தீமை செய்துவிட்டு, பாதிரியாரிடம் சென்று அறிக்கையிட்டால் என்ன பயன்?

**யாக்கோபு 5:16**

நீங்கள் **சொஸ்தமடையும்படிக்கு**, **உங்கள் குற்றங்களை ஒருவருக்கொருவர் அறிக்கையிட்டு**, ஒருவருக்காக ஒருவர் ஜெபம்பண்ணுங்கள். நீதிமான் செய்யும் **ஊக்கமான வேண்டுதல்** மிகவும் பெலனுள்ளதாயிருக்கிறது.

உன் சகோதரனோடு உனக்கு குறை உண்டானால், அவனோடு முதலில் ஒப்புறவாகு, அதன் பிறகு உன் காணிக்கியை செய்லுத்து, இது இயேசு கற்றுக்கொடுத்தது. பாதிரியாரிடம் வந்து மன்னிப்பு கேள் என்று இயேசு சொல்லவில்லை.

**மத்தேயு 5:23,24**

23. ஆகையால், நீ பலிபீடத்தினிடத்தில் உன் காணிக்கையைச் செலுத்த வந்து, உன் பேரில் உன் **சகோதரனுக்குக் குறை உண்டென்று அங்கே நினைவு கூருவாயாகில்**, 24. அங்கேதானே பலிபீடத்தின் முன் உன் காணிக்கையை வைத்துவிட்டுப் போய், **முன்பு உன் சகோதரனோடே ஒப்புரவாகி**, பின்பு வந்து உன் காணிக்கையைச் செலுத்து.



**கேள்வி 4:** ரோமன் கத்தோலிக்க பெண்கள் பொட்டு வைக்கிறார்கள், மற்றவர்கள் வைப்பதில்லை, இது எதனால்?

**பதில் 4:** கத்தோலிக்கர்கள் இந்திய கலாச்சாரத்தில் உள்ள சில பழக்கங்களை பின்பற்றுகிறார்களே தவிர, இது பைபிளின் போதனை அல்ல.



**கேள்வி 5:** கிறிஸ்தவர்கள் எத்தனை பண்டிகைகளை கொண்டாடும் படி பைபிள் சொல்கிறது?

**பதில் 5:** பூஜ்ஜியம் (இப்படியும் ஒரு மார்க்கம் இருக்குமா?)

பழைய ஏற்பாட்டில் தேவன் யூதர்களுக்கு சில பண்டிகைககளை கொண்டாடும் படி கட்டளையிட்டார். தேவன் தங்களை எப்படி இரட்சித்தார், எப்படியெல்லாம் எதிரிகளிடமிருந்து காத்தார் போன்றவற்றை மறக்கக்கூடாது என்பதற்காக பண்டிகைகளை நியமித்தார்.

புதிய ஏற்பாட்டில் இப்படியெல்லாம் பண்டிகையாக கொண்டாடும் ஒரு கட்டளையும் இல்லை.

இயேசு தம்முடைய சிலுவை மரணத்தை நினைவு கூறும்படி கூறினார்.

இது பண்டிகையல்ல, இது ஒரு நினைவு கூறுதல், அதாவது இயேசுவின் சரீரத்திற்கு அடையாளமாக ஒரு ரொட்டித்துண்டு, அவரது இரத்தம் சிந்துதலுக்கு அடையாளமாக, சிறிது திராட்சை ரசத்தை உண்டு அவரது மரணத்தை நினைவு கூறுங்கள் என்றார்.



**கேள்வி 6:** அப்படியானால், ஏன் கிறிஸ்தவர்கள் கிறிஸ்மஸ்ஸையும், புனித வெள்ளி மற்றும் ஈஸ்டரை கொண்டாடுகிறார்கள்?

**பதில் 6:** கிறிஸ்தவத்தில் உள்ள ஒரு சிறப்பான கோட்பாடு என்ன தெரியுமா? இயேசு நம்மை “நாட்கள், கிழமைகள், மாதபிறப்புக்கள், வருட பிறப்புக்கள், பௌர்ணமி, அமாவாசை, ராகு காலம், எமகண்டம், நல்ல காலம், கெட்ட காலம்” போன்ற அனைத்து காரியங்களிலிருந்தும் விடுதலை செய்ததுதான்.

**யோவான் 8:32.** சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும் என்றார்.

கிறிஸ்தவர்கள் விரும்பினால் எந்த ஒரு நாளையும் சிறப்பான நாளாக கருதி, அந்த நாளில் கொண்டாடலாம், குடும்ப நபர்களின் பிறந்தநாட்கள், திருமண நாட்கள் என்று எதை வேண்டுமானாலும் நாம் நம் குடும்பத்தின் மகிழ்ச்சிக்காக கொண்டாடலாம்.

ரோமர் 14:6 **நாட்களை விசேஷித்துக்கொள்ளுகிறவன்** கர்த்தருக்கென்று விசேஷித்துக்கொள்ளுகிறான்; **நாட்களை விசேஷித்துக் கொள்ளாதவனும்** கர்த்தருக்கென்று விசேஷித்துக்கொள்ளாதிருக்கிறான். புசிக்கிறவன் தேவனுக்கு ஸ்தோத்திரஞ் செலுத்துகிறபடியால், கர்த்தருக்கென்று புசிக்கிறான்; புசியாதிருக்கிறவனும் கர்த்தருக்கென்று புசியாதிருந்து, தேவனுக்கு ஸ்தோத்திரஞ் செலுத்துகிறான்.

பைபிள் சொல்லவில்லையென்றாலும் இயேசுவின் பிறந்த நாளை கொண்டாடுகிறோம். இயேசுவின் சிலுவை மரணத்தை தியானிக்க சில நாட்களை ஒதுக்கி, புனித வெள்ளியை ஆசரிக்கிறோம். இயேசுவின்

உயிர்த்தெழுதல் நாளை நினைவு கூர்ந்து குடும்பமாக, சபையாக சந்தோஷமாக கொண்டாடுகிறோம்.

கிறிஸ்தவர்கள் விடுதலையானவர்கள் எல்லாவற்றையும் சோதித்துப் பார்த்து நலமானதைச் செய்ய அவர்களுக்கும் உரிமையும் அதிகாரமும் உண்டு. இந்த உரிமையையும் பைபிளே நமக்கு கொடுத்துள்ளது.



**கேள்வி 7:** முஸ்லிமாகிய நான், திடீரென்று ஒரு ஞாயிறு ஆராதனையில் பங்கு பெற வந்தால் அனுமதிப்பீர்களா?

**பதில் 7:** தாராளமாக நீங்கள் ஞாயிறு ஆராதனைகளில் பங்கு பெறலாம். நீங்கள் மசூதிகளில் செய்வது போன்று உளூ (கை கால்களை கழுவுதல்) போன்றவைகளைச் செய்யத் தேவையில்லை.

கிறிஸ்தவ திருச்சபையின் ஆராதனையில் பங்கு பெற விரும்புகிற முஸ்லிம்களுக்கு சில ஆலோசனைகள்:

**ஆலோசனை 1:**

சபையில் சில நேரங்களில் எழுந்து நின்று துதிப்பார்கள், ஜெபிப்பார்கள். அதனை நீங்கள் விரும்பவில்லையென்றால் நீங்கள் செய்யவேண்டியதில்லை, அதனால் கடைசியில் உட்கார்ந்துக்கொண்டால் இந்த சிறிய சங்கடமும் உங்களுக்கு இருக்காது.

**ஆலோசனை 2:**

இந்த ஆலோசனையை தவறாக நினைக்க வேண்டாம். இலங்கையில் 2019ம் ஆண்டு ஈஸ்டர் பண்டிகையின் போது, முஸ்லிம் தீவிரவாதிகள் திருச்சபைகளைத் தாக்கினார்கள், மேலும் இதர நாடுகளில் நடந்துமுடிந்த சில தீவிரவாதிகளின் செய்திகளை சபை மக்கள் கேள்விப்பட்டு இருப்பதினால். ஒரு சபையில் படித்தவர்கள் படிக்காதவர்கள் என்று அனைத்து நிலை மக்கள் இருப்பதினால், ஒரு முஸ்லிம் திடீரென்று சபைக்குள் நுழைந்தால், சில சபை விசுவாசிகள் பயந்துப்போய் வேறு வகையாக நடந்துக்கொள்ள வாய்ப்பு உள்ளது.

எனவே, ஒரு சபைக்குள் செல்வதற்கு முன்பு, அந்த சபையின் போதகரையோ, நிர்வாகிகளையோ அழைத்து சபை தொடங்குவதற்கு முன்பு பேசிவிட்டு, அதன் பிறகு அவர்களின் துணையோடு சென்றால் நன்றாக இருக்கும். இதை எழுதுவதற்கு எனக்கு வேதனையாகத் தான் உள்ளது, ஆனால் என்ன செய்வது, ஒரு சில முஸ்லிம் தீவிரவாதிகள் செய்யும் செயல்களினால் எல்லோருக்கும் கெட்டப்பெயர் வந்துவிட்டது. இதற்காக நாம் விசுவாசிகளை குற்றப்படுத்தமுடியாது என்பது தான் தாழ்வான வேண்டுகோள்.

**நான் ஒரு முஸ்லிம் என்று சபைக்கு எப்படித்தெரியும்:**

முஸ்லிம்களுக்கு என்று தனிப்பட்ட உடைகளுண்டு, முகத்தில் தாடி வைக்கும், மீசை எடுக்கும் முறை கூட நீங்கள் ஒரு முஸ்லிம் என்று மற்றவர்களுக்கு காட்டிவிடும். இதர மக்களைப்போன்று உடை அணிந்தால் யாருக்கும் தெரியவராது. ஆனால், இஸ்லாமிய உடை அணிவதினால் இந்த பிரச்சனையை தவிர்க்க முடியாது.

மேலும் முஸ்லிம் பெண்கள் என்றால், ஒருவேளை அவர்கள் புர்கா அணிந்து இருந்தால், வருகிறவர் முஸ்லிம் பெண் என்று தெளிவாக எல்லோருக்கும் புரிந்துவிடும்.

**ஆலோசனை 3:**

சபை முடிந்த பிறகு ஆண்களும் பெண்களும், உங்களிடம் வந்து உங்களை விசாரிக்கலாம், கைகுளுக்கலாம். இதனை நீங்கள் தவறாக நினைக்கவேண்டாம். இது என்ன, ஒரு பெண் எப்படி ஒரு ஆணிடம் வந்து கைகுளுக்குகிறாள்? என்று எண்ணவேண்டாம், மனதில் கறையில்லையென்றால், கைகுளுக்குவதில் தவறில்லை. மனதில் கறையிருந்தால், பத்து அடிக்கு தூரமாக பெண் இருந்தாலும், பிரச்சனைத் தான்.



**கேள்வி 8:** முஸ்லிமாகிய எனக்கு, கர்த்தருடைய பந்தியில் (இரா போஜனம் ரொட்டி, திரட்சை ரசம்) பங்கு பெற அனுமதிப்பீர்களா?

**பதில் 8:** எல்லோரும் சபைக்கு வந்து அமரலாம், ஆராதனையில் பங்கு பெறலாம். ஆனால், ஞானஸ்நானம் எடுத்தவர்களுக்கு மட்டும் தான் 'ரொட்டியும், திராட்சை ரசமும்' கொடுக்கப்படும்.

'சரி, நான் ஞானஸ்நானம் எடுத்துக்கொள்கிறேன், எனக்கு ரொட்டித்துண்டும், திராட்சை ரசமும் கொடுப்பீர்களா'? என்று கேட்டீர்களானால், இதுவும் முடியாது ஏனென்றால், ஞானம்ஸ்நானம் எடுக்கும் போது, உங்களிடம் சில கேள்விகள் கேட்கப்படும், நீங்கள் அதற்கு உண்மையான பதில்களைக் கொடுக்கவேண்டும்.

**கேள்விகள்:**

- நீங்கள் இயேசுக் கிறிஸ்துவை உங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொள்கிறீர்களா?
- இயேசுக் கிறிஸ்து உங்களுக்காக இரத்தம் சிந்தி, சிலுவையில் மரித்து மறுபடியும் உயிர்த்தெழுந்தார் என்று விசுவாசிக்கிறீர்களா?
- இயேசுக் கிறிஸ்து தேவனுடைய வார்த்தையாகவும், இறைவனாகவும் இருக்கிறார் என்று விசுவாசிக்கிறீர்களா?

- தொடர்ந்து பைபிள் படித்து, ஜெபம் செய்து, திருச்சபையின் அங்கத்தினராக மாறி, சபையின் ஐக்கியத்தில் நிலைத்திருப்பீர்களா?
- இயேசுவை தெய்வமாக ஏற்றுக்கொண்ட இந்த முடிவை மற்றவர்களின் கட்டாயத்தின் பெயரில் அல்லாமல், சுயமாக நீங்கள் எடுத்துள்ளீர்களா?

போன்ற சில கேள்விகளுக்கு பதில் கொடுத்து, இயேசுவை இறைவனென்று விசுவாசித்து, தேவாலயத்திற்கு தொடர்ந்து வருவேன் என்று வாக்கு கொடுக்கிறவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கப்படும். இப்படிப்பட்டவர்களுக்கு மட்டும் தான் ரொட்டியும், திராட்சை ரசமும் கொடுக்கப்படும்.

முஸ்லிம் நண்பரே, மேற்கண்ட கேள்விகளுக்கு உங்கள் பதில் என்ன?

உங்களுடைய பதிலைப்பொருத்து தான் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கப்படும், மேலும் ரொட்டியும் திராட்சை ரசமும் கொடுக்கப்படும்.

இது ஒரு சாதாரண விஷயமல்ல. ரொட்டித்துண்டு, இயேசுவின் சரீரத்துக்கு அடையாளமாக உள்ளது, திராட்சை ரசம் அவர் சிந்திய இரத்தத்திற்கு அடையாளமாக உள்ளது. இந்த இரண்டையும் நீங்கள் உண்டால், இயேசுவின் சரீரமும், இரத்தமும் உங்கள் சரீரத்திற்குள் செல்வதினால், நாமும் அவரைப்போலவே வாழ முயற்சி எடுக்கவேண்டும், இதற்கு பரிசுத்த ஆவியானவர் உதவி புரிவார். இது தான் கிறிஸ்தவர்கள் சபையில் மாதம் ஒருமுறை பின்பற்றுகின்ற "ரொட்டி, திராட்சை ரசம்" பற்றிய சத்தியமாகும்.

இதனை அலட்சியமாக செய்தால், தேவனின் கோபத்துக்கு ஆளாகி, பல துன்பங்களுக்கு ஆளாகவேண்டி வரும் என்றும் பைபிள் எச்சரிக்கிறது.

**பார்க்க வசனங்கள்: 1 கொரிந்தியர் 11: 23-31**



**கேள்வி 9:** திருச்சபையில் சிலுவையில் இயேசு தொங்குவது போன்று சிலை வைப்பது சரியா?

**பதில் 9:** விக்கிரகங்கள், சிலைகள் முக்கியமாக தெய்வ உருவ சிலைகள் பற்றியவைகள் திருச்சபையில் இருக்கக்கூடாது என்பது பைபிளின் கட்டளையாகும்.

தேவனின் 10 கட்டளைகள் மிகவும் தெளிவாக எச்சரித்துள்ளது.

**யாத்திராகமம் 20:3-4**

3. என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்கவேண்டாம்.

4. மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின்கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான **ஒரு சொரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும்** நீ உனக்கு உண்டாக்க வேண்டாம்;

ஆனால், கத்தோலிக்க திருச்சபை மக்களுக்கு தவறான போதனை செய்துள்ளது. திருச்சபையில் சிலைகள், உருவப்படங்கள் நம்முடைய ஆராதனைக்கு உதவும் என்று அவர்கள் எண்ணியிருக்கிறார்கள், ஆனால் அது பைபிளுக்கு எதிரான போதனையாகும்.

**திருச்சபையில் சிலைவகள்/படங்கள் வைப்பது ஆராதனைக்கு உதவி செய்யாது அதற்கு பதிலாக அவைகள் இடறல்களாக இருக்கும்:**

அ) தேவனை ஆவியோடும் உண்மையோடும் ஆராதிப்பதை அது தடுத்துவிடுகிறது. சிலைகளைப் பார்த்து, அல்லது படங்களைப் பார்த்து ஆராதிப்பது ஆவியோடும் உணமையோடும் ஆராதிப்பதாக அமையாது (பார்க்க: யோவான் 4:23,24).

ஆ) தேவன் எப்படி இருக்கிறார் என்று இதுவரை யாரும் கண்டதில்லை, அவருக்கு எப்படி நாம் உருவத்தை கொடுக்கமுடியும்? மேலும் இயேசுவிற்கும் எப்படி உருவம் கொடுக்கமுடியும்? (பார்க்க யோவான் 1:18). ஆவியாக இருக்கும் தேவனுக்கு உருவத்தை எப்படி கொடுக்கமுடியும்?

காலங்காலமாக, கத்தோலிக்க திருச்சபைகளில், தொண்டு நிறுவனங்களில், ஸ்தாபனங்களில் பிதா, குமாரன், பரித்த ஆவியானவர், மரியாள், யோசேப்பு, தேவதூதர்கள் என்று அவர்களுக்கு தெரிந்த எல்லோருக்கும் சிலைகளையும், ஓவியங்களை வைத்திருக்கிறார்கள். இது பைபிளுக்கு எதிரானது என்று தெரிந்தும் அவர்கள் செய்துக்கொண்டு இருக்கிறார்கள்.

கத்தோலிக்கர்களிடம் இதனை கேட்போமானால், "நாங்கள் சிலைகளை வணங்க வில்லை, ஒரு மரியாதையின் காரணமாக, அவைகளை கனப்படுத்துகிறோம்" என்றுச் சொல்லுவார்கள். சிலைகளுக்கு ஓவியங்களுக்கு மரியாதை செலுத்தி, கனப்படுத்தினாலும் அது தவறு தானே! அது விக்கிர ஆராதனையின் ஒரு பகுதி தானே!

**முஸ்லிம்களுக்காக:**

நீங்கள் கத்தோலிக்க சபையில் காணும் சிலைகளை கவனத்தில் வைத்துக்கொண்டு, கிறிஸ்தவத்தை எடை போடாதீர்கள். பைபிளில் சொல்லப்பட்டதற்கு எதிராக யாராவது நடந்துக்கொண்டால் அதற்கு கிறிஸ்தவத்தை குற்றப்படுத்தமுடியாது.



**கேள்வி 10:** ஒருவர் கிறிஸ்துவை பின்பற்ற விரும்பினால், ஏன் அவருக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறீர்கள்?

**பதில் 10:** ஞானஸ்நானம் என்பது, இறைவன் பற்றிய "ஞானம்" வந்த பிறகு எடுக்கப்படும் "ஸ்நானம்" சத்தியத்தையும் அறிவீர்கள், அந்த சத்தியமே உங்களை விடுதலையாக்கும் என்பது தான் இயேசுவின் கூற்று..

நாம் பழைய வாழ்க்கையை விட்டு புதிய வாழ்க்கையை வாழ தெரிவு செய்தோம் என்று காட்டக்கூடிய ஒரு அடையாளம் ஆகும். நம்முடைய பழைய வாழ்க்கையை தண்ணீருக்குள் விட்டுவிட்டு, சரீர அழுக்குகளை கழுவுவது போன்று மன அழுக்குகளை கழுவிவிட்டு, ஒரு புதிய மனிதனாக மாறுவதைத் தான் இது காட்டுகின்றது.

**ஞானஸ்நானம் ஒரு மத சடங்கு அல்ல, இது மனமாற்றத்தின் அடையாளம்.**

**II கொரிந்தியர் 5:17**

இப்படியிருக்க, ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புதுச் சிருஷ்டியாயிருக்கிறான்; பழையவைகள் ஒழிந்துபோயின, எல்லாம் புதிதாயின.

**பொது மொழிப்பெயர்ப்பு**

17 எவராவது கிறிஸ்துவுக்குள் இருந்தால் அவன் புதிதாகப் படைக்கப்பட்டவனாகிறான். பழையவை மறைந்தன. அனைத்தும் புதியவை ஆயின.

எடுத்துக்காட்டுகாகச் சொல்வதென்றால், திருமணத்தின் போது, சிலர் தாலி கட்டுகிறார்கள், சிலர் மோதிரம் மாற்றுகிறார்கள், உடன்படிக்கைச் செய்கிறார்கள், அதாவது திருமணம் புரிகின்ற தம்பதிகள் ஒரு புதிய உறவு முறைக்குள் நுழைவதினால், அடையாளமாக திருமண நிகழ்ச்சி நடத்தப்படுகிறது.

இது போலவே, ஞானஸ்நானம் என்பது ஒரு மனிதன் ஒரு புதிய குடும்பத்துடன் இணைகிறான், தேவனுடைய பிள்ளையாக மாறுகின்றான், பழையவைகளை விட்டுவிட்டு (தண்ணீருக்குள்), புதியவைகளை தரித்துக்கொள்கின்றான். இதனை அடையாளப்படுத்துவதற்கு ஞானஸ்நானம் கொடுக்கப்படுகின்றது.

ஞானஸ்நானம் (திருமுழுக்கு) பற்றி இன்னும் அனேக சத்தியங்கள் பைபிளில் சொல்லப்பட்டுள்ளது, அவைகளை நீங்கள் தனியாக படித்துக்கொள்ளலாம் அல்லது ஒரு போதகரிடம் கேட்டு தெரிந்துக்கொள்ளுங்கள்.

**அல்லாஹ் கொடுக்கும் ஞானஸ்நானம்:**

குர்ஆனிலும் ஞானஸ்நானம் பற்றி ஒரு வசனம் உள்ளது என்பதை அறிவீர்களா?

**ஸூரா 2:138**

2:138. "(இதுவே) அல்லாஹ்வின் **வர்ணம்(ஞான ஸ்னானம்)** ஆகும்; வர்ணம் கொடுப்பதில் அல்லாஹ்வைவிட அழகானவன் யார்? அவனையே நாங்கள் வணங்குகிறோம்" (எனக் கூறுவீர்களாக).

சுருக்கமாக ஒருவரியில் சொல்வதென்றால், ஒருவர் ஒரு பெரிய முடிவு எடுக்கும் போது, அந்த முடிவின் அடையாளமாக ஞானஸ்நானம் கொடுக்கப்படுகின்றது.



**கேள்வி 11:** முஸ்லிம்கள் அல்லாஹ்வின் பெயரில் அறுத்த (ஹலால்) கறியை கிறிஸ்தவர்கள் உண்ணலாமா?

**பதில் 1:** இந்த கேள்வியை கேட்பவர் ஒரு கிறிஸ்தவர் என்று நினைக்கிறேன்! இந்த கேள்வியை கேட்பதற்கு முன்பு, உங்கள் மனதைத் தொட்டு உண்மையைச் சொல்லுங்கள், "இதுவரை நீங்கள் முஸ்லிம்களின் கசாப்பு கடையில் ஒருமுறையும் மாமிசம் வாங்கவில்லையா?".

இயேசுவின் கூற்றுப்படி, வாயிக்குள் போவது மனிதனை குற்றப்படுத்தாது, வாயிலிருந்து (மனதிலிருந்து) வெளியே வருவது தான் அவனை குற்றப்படுத்தும். எனவே உணவு பற்றி எந்த ஒரு குற்ற உணர்வும் இல்லாமல் நீங்கள் சாப்பிடலாம்.

இதைப் பற்றி மேலும் ஆழமாக அறிய கீழ்கண்ட மூன்று கட்டுரைகளை படிக்கவும்:

- **விக்கிரகங்களுக்கு படைக்கப்பட்டது கிறிஸ்தவர்களுக்கு ஹலாலாகுமா? ஹராமாகுமா?**
- **கிறிஸ்தவத்தில் ஹலால், ஹராம் என்பவைகள் உண்டா?**
- **நான் கிறிஸ்தவத்தை தழுவியுள்ளேன் - உணவு விஷயத்தில் 'ஹலால் ஹராம்' பற்றி கிறிஸ்தவம் என்ன சொல்கிறது?**



**கேள்வி 12:** மற்ற மதங்கள் தங்கள் மதங்களை பரப்பாத போது ஏன் கிறிஸ்தவர்கள் மட்டும் அதிகமாக பரப்புகிறார்கள்?

**பதில் 12:** இந்த கேள்வியை ஒரு முஸ்லீம் கேட்கக்கூடாது. ஏனென்றால் முஸ்லிம்களும் மார்க்கத்தை பரப்ப வேண்டும் என்று இஸ்லாம் சொல்லுகிறது.

இந்த கேள்வியை ஒரு ஹிந்து சகோதரர் கேட்டார் என்று எண்ணி பதில் எழுதுகிறேன்.

கிறிஸ்தவத்தைப் பரப்புதல் என்றால் என்ன? இயேசுவின் நற்செய்தியை உலகிற்கு எடுத்துச் சொல்வதாகும். ஒவ்வொரு கிறிஸ்தவனும் தான் பெற்ற இன்பத்தை தனக்குச் சொல்லப்பட்ட நற்செய்தியை மற்றவர்களிடம் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

இயேசு நமக்கு கொடுத்த பிரதானமான கட்டளையும் இதுதான்.

**மத்தேயு 28:19-20**

19. ஆகையால், நீங்கள் புறப்பட்டுப்போய் **சகல ஜாதிகளையும் சீஷராக்கி**, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து,
20. நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி **அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்**; இதோ, உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனேகூட இருக்கிறேன் என்றார். ஆமென்.

### 1) நற்செய்தி அறிவிப்பது, அன்பின் வெளிப்பாடாகும்:

நம்மை நாம் நேசிப்பது போன்று பிறரையும் நேசிக்கவேண்டும் என்று இயேசு கட்டளை கொடுத்திருக்கிறார். நாம் அன்பு உள்ளவர்களாக இருக்க வேண்டும் என்று பைபிள் சொல்கிறது. ஒரு அருமையான நற்செய்தி நம்மிடம் இருக்கும் போது, அதை மூடி மறைக்காமல் மற்ற மக்களுக்கும் சொல்வதுதான் அன்பின் வெளிப்பாடு. எனவே இயேசு பற்றிய அச்செய்தியை ஒரு கிறிஸ்தவன் பறைசாற்றுகின்றான், என்று சொன்னால் அவன் தன் அன்பை வெளிக்காட்டுகிறான் என்று அர்த்தம். அவன் மதத்தை பரப்புகிறான் என்று எடுத்துக்கொள்ளக்கூடாது.

கிறிஸ்தவர்கள் மதத்தை பரப்புகிறார்கள் என்று மற்றவர்கள் குற்றம்சாட்டுகிறார்கள். ஆனால் கிறிஸ்தவர்களைப் பொருத்தமட்டில் அவர்கள் அன்பு செலுத்தி, நற்செய்தியை சொல்கிறார்கள்.

செல்வ செழிப்புடன் வாழும் கிறிஸ்தவர்கள் இயேசுவின் மீது வைத்த அன்பின் காரணமாக தங்கள் வீடுகள் நாடுகளை விட்டு ஆப்பிரிக்கா காடுகளிலும் கிராமங்களிலும் சென்று ஏன் இயேசுவை பற்றி சொல்ல வேண்டும்? எய்ட்ஸ் நோயாளிகள், மற்றும் இதர நோயாளிகள் உள்ள அப்படிப்பட்ட கிராமங்களில் ஏன் சென்று ஊழியம் செய்ய வேண்டும்? உண்மையாக மதத்தைப் பரப்ப வேண்டும் என்றால், பட்டணங்களில் சொகுசு வாழ்வு வாழ்ந்து கொண்டு அந்த காரியத்தை செய்யலாமே? ஏன் ஆபத்தான இடங்களுக்கு சென்று தங்கள் உயிர்களை தியாகம் செய்து கிறிஸ்தவர்கள் இயேசுவைப் பற்றி சொல்லுகிறார்கள்? இந்தக் கேள்விகளுக்கு எல்லாம் பதில்களைத் தேடும் போது, நமக்கு கிடைக்கும் பதில், அன்பு என்பது மட்டும்தான்.

இதைப்பற்றி மேலும் அறிய ஆங்கில கட்டுரையை படிக்கவும்: **Why should I evangelize?**



**கேள்வி 13:** கிறிஸ்தவ ஸ்தாபனங்கள் ஏன் வெளிநாடுகளிலிருந்து அதிகமாக பணத்தை வாங்குகிறார்கள்? நீங்களே சொந்தமாக பணம் போட்டு ஊழியம் செய்யமுடியாதா?

**பதில் 13:** எந்த ஒரு நன்மையை செய்ய வேண்டும் என்றாலும், அதற்கு பணம் தேவை. பள்ளிக்கூடங்கள் கட்டுவதற்கும் மருத்துவமனைகள் கட்டுவதற்கும், சபைகளை கட்டுவதற்கும் பணம் தேவை. இந்த பணத்தை மக்களிடம் இருந்து தான் பெற வேண்டும். சிலவேளைகளில், வெளிநாடுகளிலிருந்து பணத்தைப் பெறவேண்டி இருக்கும்.

நம் நாட்டிலேயே நமக்குள் நாமே பணத்தைப் போட்டு இப்படிப்பட்ட ஊழியங்களைச் செய்ய முடியும், இப்படிப்பட்ட ஊழியங்களும்இருக்கின்றன. அதே வேளையில் வெளிநாடுகளில் இருந்தும் உதவிகள் பெற்று செயல்படும் மருத்துவமனைகளும், ஊழியங்களும் இருக்கின்றன. வேலூர் CMC போன்ற மருத்துவமனைகள் மிஷினரி ஸ்தாபனங்களை நாம் கவனிக்கும் போது அதற்கு தேவையான பெரும் தொகை இந்தியாவிலிருந்து சேகரிக்க வேண்டும் என்றால் இது கடினம் தான். எனவே வெளிநாடுகளிலிருந்தும், உள் நாடுகளிலிருந்தும் உதவி பெற்று ஊழியம் செய்வதும் நன்மை செய்வதும் தவறு இல்லை.

இன்னொரு முக்கியமான விஷயத்தையும் சொல்லிவிடுகிறேன், ஆஃப்ரிக்காவில் உள்ள சில நாடுகளுக்கும், இலங்கை போன்ற நாடுகளுக்கும் நம் இந்திய நாட்டிலிருந்து உதவிகள் செல்கின்றன என்ற விவரம் உங்களுக்குத் தேரியுமா?

இதர மதசார்பற்ற தொண்டு ஸ்தாபனங்கள் கூட வெளிநாட்டு உதவியுடனும், உள்நாட்டு மக்களின் உதவியுடனும் தான் நடைபெறுகிறது.



**கேள்வி 14:** கிறிஸ்தவ ஊழியர்களில் பெரும்பான்மையானவர்கள் பண விஷயத்தில் ஏமாற்றுகிறார்கள் என்று நான் நினைக்கிறேன், இது சரியா?

**பதில் 14:** இந்த கேள்விக்கான பதிலை படிப்பதற்கு முன்பு முந்தைய கேள்விக்கான பதிலை படித்து விடுங்கள். ஆம், கிறிஸ்துவ ஊழியர்களில் சிலர் (பெரும்பான்மையானவர்கள் அல்ல) பணவிஷயத்தில் நேர்மையாக இல்லாமல் இருப்பதை நாம் காண முடியும். இதற்காக எல்லா ஊழியர்கள் மீதும் குற்றம் சுமத்த முடியாது. இயேசுக்கு உண்மையாக ஊழியம் செய்பவர்கள், பண ஆசை இல்லாமல் ஊழியம் செய்பவர்கள் இருக்கிறார்கள்.

பணத்தை தவறாக கையாளுகிறவர்களை அரசாங்கம் தண்டிக்க வேண்டும். கிறிஸ்தவ ஊழியர்கள் என்று பெயர் போட்டு கொண்டு, மக்களை ஏமாற்றுகிற சில ஓநாய்களை கண்டுபிடித்து சட்டம் தண்டிக்க வேண்டும்.

இப்படிப்பட்டவர்களின் மூலம் இயேசுவிற்கும் கிறிஸ்தவத்திற்கும் அவ பெயர் வருகிறது.

சட்டம் மட்டும் அல்ல, விசுவாசிகளும் தங்களுடைய பணத்தை ஞானமாக கையாளவேண்டும். ஊழியத்திற்கு கொடுக்கிறேன், இயேசுவின் சுவிசேஷம் உலகம் அனைத்திற்கும் செல்வதற்கு உதவியாக இருக்கிறேன் என்று நம்பி, சில தீய ஊழியர்களின் கையிலே பணத்தைக் கொடுத்து விசுவாசிகள் ஏமாறக்கூடாது.

கிறிஸ்தவர்கள் தாங்கள் சம்பாதித்த பணத்தில் ஒரு பகுதியை சபையை தாங்குவதற்கும், மிஷினரி ஊழியம் செய்வதற்கும், சமுதாயத்துக்கு தொண்டு செய்வதற்கும் கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுக்கும்போது, தீயவர்கள் கையிலே அந்தப் பணம் செல்லாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். பண ஆசை பிடித்த சில ஊழியர்கள் உருவாவதற்கு, கேள்வி கேட்காமல் பணத்தை அவர்கள் கையிலே கொடுக்கும் கிறிஸ்தவர்களும் குற்றவாளிகள்தான்.

ஒரு பாஸ்டரின் கையிலே தசம பாகத்தையும் காணிக்கையும் கொடுக்கும் விசுவாசிக்கு அந்த பணத்தை எதற்காக எப்படி செலவு செய்கிறேன் என்ற சான்றுகளை இந்த பாஸ்டர் விசுவாசிகளுக்கு கொடுக்க வேண்டும். பணத்தை வாங்கிக்கொண்டு, கொடுக்குற வரைக்கும் தான் உன் கடமை, பிறகு கேள்வி கேட்காதே கணக்கு கேட்காதே, என்று யாராவது உங்களிடம் சொன்னால், அவர் உங்களை ஏமாற்றுகிறார் என்று அர்த்தம். அவருடைய பிள்ளைகளுக்கும் அவர்களின் பிள்ளைகளுக்கும் தேவையான சொத்துக்களை உங்கள் பணத்தின் மூலம் அவர் சேகரித்துக் கொண்டிருக்கிறார் என்று அர்த்தம். இப்படி நான் சொல்லுகிறேன் என்பதனால், எல்லா ஊழியர்களையும் குற்ற படுத்துகிறேன் என்று அர்த்தமில்லை. ஒரு சில ஊழியக்காரர்கள் இப்படி பண ஆசை பிடித்து இருக்கிறார்கள் என்பதை மட்டும் தெளிவு படுத்த விரும்புகிறேன்.

கிறிஸ்தவர்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும், கணக்கு கேட்க வேண்டும். இப்படி நாம் கேட்டால் கிறிஸ்துவத்திற்கு கெட்ட பெயரை கொண்டுவரும் ஊழியர்கள் எழும்புவது குறைந்துவிடும். மேலும் மற்றவர்கள் கிறிஸ்துவத்தை குறைகூறும் நிலையும் ஏற்படாது.

ஒரு கடைசி குறிப்பு, பணத்தை தவறாக பயன்படுத்துகிறவர்கள் எல்லா மதத்திலும் இருக்கிறார்கள், ஆனால் கிறிஸ்துவம் மட்டும் ஏன் இப்படி செய்திகளில் அதிகமாக வருகிறது? என்பதையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். மற்றவர்களை குற்றப்படுத்துவதைக் காட்டிலும், நம்மிடத்தில் இருக்கிற குறைகளை சரி செய்வது தான் சரியான தீர்வு என்பதை நாம் மறக்கக் கூடாது.



**கேள்வி 15:** நான் ஒரு கிறிஸ்தவன், ரமளான் என்றால் இஸ்லாமியர்களின் பண்டிகை என்று எனக்குத் தெரியும், ஆனால் அதற்கு மேலாக ஒன்றும் தெரியாது. ரமளான் என்றால் என்ன? சிறிது விளக்கமுடியுமா?

**பதில் 15:** முஸ்லிம்கள் கொண்டாடும் பண்டிகைகளில் முக்கியமானவைகள் இரண்டு பண்டிகைகளாகும், அவை: ரம்ஜான் மற்றும் பக்ரீத் என்பவைகளாகும்.

சிலர் "ரமலான்" என்று அழைப்பார்கள், வேறு சிலர் "ரமளான்" என்றும், "ரமழான்/ரமதான்" என்றும் அழைப்பார்கள். நாம் இந்த கட்டுரையில் "ரமளான்" என்று பயன்படுத்துகிறோம்.

இஸ்லாமிய காலண்டர் சந்திரனின் சுழற்சியை அடிப்படையாகக் கொண்டது. இஸ்லாமியர்களின் மாதங்களில் ஒன்பதாவது மாதம் தான் ரமளான் எனப்படுகின்றது.

### இஸ்லாமிய மாதங்களின் பெயர்கள் இவைகளாகும்:

1) முஹர்ரம், 2) ஸபர், 3) ரபியுல் அவ்வல், 4) ரபியுல் ஆஹிர், 5) ஜமாத்திலவ்வல், 6) ஜமாத்திலாஹிர், 7) ரஜப், 8) ஷஃபான், 9) ரமளான் (ரமலான்), 10) ஷவ்வால், 11) துல்காயிதா, 12) துல்ஹஜ்

ரமளான் என்றுச் சொல்லும் போது, எல்லாருக்கும் ஞாபகம் வருவது "நோன்பு" ஆகும். இந்த மாதம் முழுவதும் முஸ்லிம்கள் 30 நாட்கள் நோன்பு இருப்பார்கள்.

### நோன்பு – இஸ்லாமிய கட்டாய கடமை

இஸ்லாமியர்கள் கடைபிடிக்கவேண்டிய முக்கியமான ஐந்து கடமைகளில் (இஸ்லாமிய தூண்களில்) ரமளான் மாதத்தில் நோன்பு இருக்கவேண்டும் என்பதும் ஒரு கடமையாகும்.

இந்த ரமளான் மாதத்தில் முப்பது நாட்கள் நோன்பு இருந்துவிட்டு, அதன் பிறகு பண்டிகையை முஸ்லிம்கள் கொண்டாடுவார்கள்.



**கேள்வி 16:** கிறிஸ்தவர்களின் உபவாசம் தான் ரமளான் நோன்பா? இவ்விரண்டிற்கும் இடையே இருக்கும் வித்தியாங்கள் என்ன?

**பதில் 16:** இஸ்லாமுடைய ரமலான் நோன்பும் இயேசு கிறிஸ்து கற்றுக்கொடுத்த நோன்பும் அல்லது உபவாசமும் ஒன்றல்ல. இவ்விரண்டுக்கும் இடையே பல வித்தியாசங்கள் உள்ளன.

### இஸ்லாமிய நோன்பிற்கும், கிறிஸ்தவ நோன்பிற்கும் இடையே இருக்கும் வித்தியாசங்கள்:

**1. இஸ்லாமிய நோன்பு என்பது** இஸ்லாமிய கடமைகளில் ஒரு கடமையாகும். அதை தகுந்த காரணங்கள் இல்லாமல் மீறுவது இஸ்லாமிய சட்டத்தின் படிகுற்றமாகும். ஆனால், கிறிஸ்தவத்தில் நோன்பு (உபவாசம்) என்பது நிச்சயமாக கடைபிடிக்கவேண்டிய கடமையல்ல. நம்முடைய தேவையைபொருத்து நாம் கடைபிடிக்கலாம். பழைய ஏற்பாட்டு காலத்தில் ஒரு ஆபத்து வந்தாலோ, யாராவது மரித்துவிட்டாலோ யூதர்கள் உபவாசம் இருப்பார்கள். யூதர்களுக்கு மோசேயின் மூலமாக ஒரு குறிப்பிட்ட நாளில் உபவாசம் இருக்கும்படி கூறப்பட்டுள்ளது.

**2. இஸ்லாமிய நோன்பு என்பது** அதிகாலை ஆரம்பித்து, சூரியன் அஸ்தமிக்கும்வரை தொடருகிறது, ஆனால், கிறிஸ்தவ உபவாசம் என்பது நாள்முழுவதும் தொடரும். இத்தனை மணிக்கு ஆரம்பித்து, இத்தனை மணிக்குமுடிக்கவேண்டும் என்ற நிபந்தனை இல்லை. பழைய மற்றும் புதியஏற்பாட்டில் நாள் முழுவதும் உபவாசம் இருந்ததாக அனேகஎடுத்துக்காட்டுகளை காணலாம். இதுமட்டுமல்லாமல், யூதர்கள் தனிப்பட்ட ஒரு நாள் உபவாசம் இருக்கும் போது, ஒரு நாளின் மாலையில் ஆரம்பித்து மறுநாள் மாலைவரை இருப்பார்கள் (முழூ நாள்).

**3. இஸ்லாமில் வருடத்திற்கு** ஒரு முறை ரமளான் மாதத்தில் 30 நாட்கள்நோன்பு இருக்கவேண்டும் என்பது கட்டளை, ஆனால், கிறிஸ்தவத்திலே வருடத்தின் இந்த குறிப்பிட்ட மாதம் இத்தனை நாட்கள் நோன்புஇருக்கவேண்டும் என்ற கட்டளையில்லை. அவரவருக்கு விருப்பமான நாட்களில், விருப்பமான எண்ணிக்கையில் உபவாசம் இருப்பார்கள்.

**4. இஸ்லாமிய நோன்பில்,** அதிகாலையில் எழுந்திருந்து, சாப்பிடுவார்கள்,கிறிஸ்தவத்திலே இப்படி அதிகாலையில் எழுந்து சாப்பிடும்கட்டளையில்லை.

**5. முக்கியமாக, இஸ்லாமிலே ஒரு** குறிப்பிட்ட மாதம் ஒதுக்கி ரமளான்நோன்பு இருப்பதினால், எல்லாருக்கும் இவர் நோன்பு இருக்கிறார் என்பது தெரியவரும். ஆனால், கிறிஸ்தவத்தில் ஒருவன் உபவாசம் இருக்கிறேன்என்று சொன்னால் தவிர வெளியே தெரிய வழியில்லை. இஸ்லாமியர்களின் ரமளான் நோன்பு மத்தேயு 6ம் அதிகாரத்தில் இயேசுசொன்ன அறிவுரைக்கு எதிராக இருக்கிறது. அதாவது வெளிப்படையான ஒன்றாக இருக்கிறது.

**6. இஸ்லாமிய ரமளான் நோன்பு** என்பது இஸ்லாமிய கடமைகளில் ஒன்றாக இருப்பதினால், ஒருவேளை நோன்பு வைக்கமுடியாதவர்கள் அதற்கானபரிகாரங்கள் செய்யவேண்டும். ஆனால், கிறிஸ்தவ உபவாசத்தில் இப்படிப்பட்ட பரிகாரங்கள் ஒன்றுமில்லை.

**7. ரமளான் மாதம் நோன்பு** என்றுச் சொல்கிறீர்களே தவிர, மீதமுள்ளமாதங்களில் உணவுக்கு செலவாகும் பணத்தை விட ரமளான் மாதத்தில் அதிகமாக செலவாகும். அதாவது உணவு பண்டங்களின்

விற்பனையும் இரண்டு அல்லது மூன்று மடங்கு அதிகமாக ஆகிறது. ஏதோ அதிகாலையிலிருந்து மாலைவரை நோன்பு இருக்கிறார்கள், மீதமுள்ள பாதிநாள் நன்றாக சாப்பிடுகிறார்கள். இப்படி பாதி நாள் நன்றாக சாப்பிடுவதை நான் தவறு என்றுச் சொல்லவில்லை, ஆனால், இப்படிப்பட்ட வழக்கங்கள் கிறிஸ்தவத்தில் இல்லை என்றுச் சொல்கிறேன், அவ்வளவு தான்.

**8. புகாரி ஹதீஸில்** "ரமளான் மாதத்தில் நம்பிக்கையுடனும், நன்மையை எதிர்ப்பார்த்தும் நோன்பு நோற்கிறவர்களின் முந்தைய பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன" என்று கூறப்பட்டுள்ளது. ஆனால், கிறிஸ்தவத்தில் உபவாசம் இருப்பதினால் நம்முடைய முந்தைய பாவங்கள் மன்னிக்கப்படும் என்ற கோட்பாடு இல்லை. (புகாரி பாகம் 2, அத்தியாயம் 30,எண் 1901). இயேசுக் கிறிஸ்துவின் மீது விசுவாசம் வைத்து, நம்முடைய பாவங்களை அவர் சிலுவையில் சுமந்து தீர்த்தர் என்பதை நம்பி, மேற்கொண்டு பாவமில்லாத வாழ்க்கையை வாழ நம்மை ஒப்புக்கொடுப்பதினால் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன.



**கேள்வி 17:** ஆலயங்களில் கிறிஸ்தவர்கள் செருப்பு அணிந்துக்கொண்டுச் சென்று தொழுதுக்கொள்வது, இறைவனை அவமானப்படுத்துவது ஆகாதா?

**பதில் 17:** எல்லா தேவாலயங்களிலும் செருப்பு அணிந்து கொண்டு செல்வதில்லை. உதாரணத்திற்கு, இந்திய தேவாலயங்களில் தரையில் உட்கார்ந்து தேவனை ஆராதிக்கும் இடங்களில் செருப்பை வெளியே விட்டு சென்றுதான் ஆராதிக்கிறார்கள். ஆனால் சில நாடுகளில் குளிர் அதிகமாக இருக்கும் பிரதேசங்களில் செருப்பு அணியாமல் இருக்கவே முடியாது, மேலும் கீழே உட்காராமல் பெஞ்சுகளில் உட்கார்ந்து ஆராதனை செய்வதினால் செருப்பை அணிந்து கொண்டு தான் உள்ளே செல்கிறார்கள்.

இது தவறு இல்லை, இது தேவனை அவமானப்படுத்துவதற்கு சமம் இல்லை. தேவன் எல்லா இடங்களிலும் இருக்கின்றார், நாம் வீடுகளில் இருந்தாலும் சாலைகளில் நடந்து சென்றாலும் அங்கும் அவர் இருக்கின்றார் என்று பொருள்.

செருப்பு அணிந்து கொண்டு சில தேவாலயங்களில் சென்று பெஞ்சுகளில் உட்கார்ந்து ஆராதனை செய்வதற்கு இன்னொரு காரணமும் உண்டு. அதாவது ஒரு சபையில் ஆயிரத்திற்கும் அதிகமானவர்கள் ஆராதிக்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம், அதுவும் பெஞ்சுகளில் உட்கார்ந்து ஆராதிக்கும் போது, அவர்கள் வெளியே செருப்புகளை விட்டு வந்தால், ஆராதனை முடித்துவிட்ட பிறகு வெளியே சென்று தங்கள் செருப்புகளை தேடிக் கொள்வதற்கு அதிக நேரம் செலவாகும். சிறிய சபைகளில் இது சாத்தியப்படலாம் ஆனால் பெரிய சபைகளில் இது சாத்தியப்படாது.

தேவனை ஆராதிக்கும் கிறிஸ்துவர்கள் ஆவியோடும் உண்மையோடும் அவரை ஆராதிக்கிறார்கள். எனவே, செருப்பு அணிந்து கொண்டு பேச்சுக்களில் உட்கார்ந்து ஆராதிப்பது தவறில்லை.

இந்த கேள்வியை முஸ்லிம்கள் கேட்டதனால், இன்னொரு விபரத்தையும் சொல்லி விடுகிறேன். முஸ்லிம்கள் அல்லாஹ்வை தொழும்போது, ஒரே வரிசையில் நின்று, சில குர்ஆன் வசனங்களை சொல்லி, பிறகு குனிந்து மறுபடியும் எழுந்து நின்று, மறுபடியும் உட்கார்ந்து அல்லாஹ்வைத் தொழுது கொள்கிறார்கள். இப்படி பலநிலைகளில் அவர்கள் அல்லாஹ்வை தொழுதுக் கொள்கிறார்கள்.

ஆனால் கிறிஸ்தவ ஆராதனையில், இப்படிப்பட்ட நிலைகள் இருப்பதில்லை. குளிர் பிரதேசங்களில், பல்லாயிரக்கணக்கான மக்கள் இருக்கும் சபைகளில் செருப்புகளை அணிந்து கொண்டு, ஷூக்களை போட்டுக்கொண்டு ஆராதனை செய்வது தவறான காரியமல்ல.



**கேள்வி 18:** ஆலயங்களில் ஆண்களும் பெண்களும் அருகில் அமர்ந்துக்கொண்டு ஆராதனை/தொழுகை செய்வது சரியானச் செயலா? இப்படி செய்தால் ஆண்களில் மனதில் பாவமான ஆசைகள் வருமல்லவா?

**பதில் 18:** இந்தக் கேள்வியை முஸ்லிம்கள் தங்கள் மார்க்கம் தங்களது கற்றுக்கொடுத்த, போதனைகளின் படி கேட்கிறார்கள். இஸ்லாமின் படி பெண்கள் போதைப் பொருட்கள் போன்றவர்கள், ஆண்கள் பாவம் செய்வதற்கு பெண்கள் தான் காரணம். எனவே ஆண்களும் பெண்களும் ஒரே அலுவலகத்தில் வேலை செய்வதும், இறைவனை ஆராதனை செய்கிற இடங்களில் ஒன்றாக கூடி ஆராதனை செய்வதும் தவறான செயல் என்று முஸ்லிம்கள் போதிக்கப்பட்டு இருக்கிறார்கள்.

உண்மையில் இந்த நம்பிக்கை ஆபத்தானதாகும். ஒரு குற்றம் நடந்தால் அதில் ஆணின் பங்கும் இருக்கும். ஆண்கள் தவறுகள் செய்யக்கூடாது என்பதற்காக பெண்களின் முகத்தை மறைப்பதைக் காட்டிலும், ஆண்களுக்கு சுய கட்டுப்பாட்டை கற்றுக்கொடுத்தால் இந்த பிரச்சனைக்கு தீர்வு உண்டாகும்.

இறைவனை தொழுது கொள்ள செல்லுமிடத்தில் தீய எண்ணங்கள் ஒரு ஆணுக்கு வருகிறது என்று சொன்னால், அதற்கு அவன் தான் காரணம். குடும்பமாக சென்று, தாயும் தந்தையும் சகோதரியும் சகோதரனும், சித்தப்பா பெரியப்பா மகனும் மகளும், உறவினர்களும் ஒன்றாக சேர்ந்து ஆராதிக்கும் போது எப்படி ஆண்கள் தீயவைகளை சிந்திப்பார்கள்?

தவறு செய்ய வேண்டும் நினைக்கும் ஆண்கள் திருச்சபையில் மாத்திரமல்ல எங்கும் தவறு செய்வார்கள், குடும்பத்திலும் செய்வார்கள் பள்ளிக்கூடங்களிலும்

செய்வார்கள். ஆனால் சுத்தமாக இருக்க வேண்டும் என்றும் சுய கட்டுப்பாட்டுடன் வாழும் ஆண்கள், எந்த இடத்திலும் பரிசுத்தமாக வாழ்வார்கள்.

இதற்கும் சில பேர் வாலிபர்கள் மீது குற்றம் சுமத்தி, வாலிபர்கள் காதல் என்று சொல்லி, காதலில் விழுவதற்கு காரணம், வாலிப பெண்களும் சபைக்கு வருவதுதான் என்று சொல்லுவார்கள். இது கூட ஒரு சரியான காரணம் இல்லை, நல்ல நோக்கத்துடன் தேவனை ஆராதிக்கும் போது இப்படிப்பட்ட செயல்களை செய்ய வேண்டும் என்று தோன்றாது.

மனிதன் என்று சொன்னால், ஒருசில சதவிகித ஆண்கள் அல்லது பெண்கள், சில காரியங்களில் ஈடுபட்டு விடுவதும் உண்டு. அதற்காக பெண்களை தனியாக பூட்டி வைப்போம் என்று சொன்னால், அது சரியான செயலாக இருக்காது. அது பைபிளின் போதனைகளுக்கு எதிரான செயலாக இருக்கும்.

இயேசு ஊழியம் செய்யும் போது அவருக்கு அனேக பெண்கள் ஊழியம் செய்தார்கள். அப்போஸ்தலர்கள் அதாவது இயேசுவின் சீடர்கள் ஊழியம் செய்யும் போதும், பெண்களும் சேர்ந்து ஊழியம் செய்தார்கள். தேவனை ஆராதிப்பது ஒரு ஆணுக்கு எவ்வளவு உரிமை இருக்கிறதோ, அதே உரிமை பெண்ணுக்கும் உண்டு.



**கேள்வி 19:** கிறிஸ்தவர்கள் இன்னும் முந்தைய ஜாதிப்பெயர்களை வைத்திருப்பது ஏன்?

**பதில் 19:** இந்தியாவில் ஆழமாக வேர்விட்டு வளர்ந்துள்ள இந்த ஜாதி என்ற தீயமரம் இன்னும் அடியோடு வெட்டப்படாமல் இருக்கிறது. இந்து மார்க்கத்திலிருந்து இயேசுவை ஏற்றுக்கொள்கின்ற சிலர் இன்னும் தங்களுடைய முந்தைய ஜாதிப் பெயரையே வைத்துக் கொண்டிருப்பது, ஒரு சங்கடமான செய்தியாகும்.

பைபிளில் ஜாதி இல்லை. ஒரே ஆண் பெண்ணிலிருந்து உலக மக்களை இறைவன் படைத்தார்.

ஆனால் இந்தியாவில் மட்டும் முக்கியமாக தமிழ்நாட்டில் இந்த ஜாதி பிசாசை விட்டு மக்கள் வெளியே வராமல் இருப்பதற்கு காரணம், கிறிஸ்தவர்கள் வேதத்தை சரியாக பின்பற்றாமல் இருப்பது தான்.

கடினமான சட்டங்கள் போட்டு மக்களை திருத்தலாம் என்று சொன்னால், அதற்கு பைபிளும் இடம் கொடுப்பதில்லை. ஆன்மீக விஷயத்தில் அரசு செய்கின்ற படி, அல்லது இஸ்லாம் செய்கின்ற படி கடினமான சட்டங்கள் போட்டு மக்களை கட்டாயப்படுத்த பைபிள் அனுமதிப்பதில்லை.

"மனிதனுக்கு சுதந்திரம்" மிகவும் முக்கியமானது என்பதில் கிறிஸ்தவம் திடமாக உள்ளது. இதே சுதந்திரம் தான், மக்கள் சிலருக்கு தாங்கள் விட்டுவந்த தீய ஜாதி பழக்கத்தை விடாமல் பின்பற்றும் படி செய்துள்ளது.

இந்த செயல் பைபிளுக்கு எதிரானது என்பதை இவர்கள் அறியவில்லை. சட்டங்கள் போட்டு இவர்களை சரிசெய்ய முடியாது, சரியான போதனைகள் மூலமும், வேத அறிவின் மூலமும் தான் இதை சரி செய்ய முடியும்.

இதற்காக நாம் கிறிஸ்தவத்தை குற்றம் சாற்றமுடியாது, பைபிள் மீது குற்றம் சுமத்தக்கூடாது. கடினமாக சட்டம் போட்டு, அவன் சுதந்திரத்தை பறிக்க முடியாது. ஆனால் அவனுக்கு நேர்வழியை கற்றுக் கொடுக்கலாம், அன்பாக சொல்லிக் கொடுக்கலாம். இதனை கிறிஸ்தவ சபை ஊழியர்கள் செய்ய வேண்டும்.



**கேள்வி 20:** கிறிஸ்தவர்கள் ஏன் ஞாயிறு அன்று ஆராதனைச் செய்கிறார்கள்?

**பதில் 20:** கிறிஸ்தவர்கள் ஞாயிற்றுக்கிழமை தேவனை ஆராதிக்க வேண்டும் என்று பைபில் கட்டளையிடவில்லை. அதேபோன்று யூதர்கள் சனிக்கிழமை ஆரம்பித்தார்கள், அதை மாற்றி நீங்கள் ஞாயிற்றுக்கிழமை ஆராதியுங்கள் என்றும் பைபிள் சொல்லவில்லை.

ஆதியில் இருந்த கிறிஸ்தவ சபை, வாரத்தின் முதல் நாள் ஞாயிற்றுக்கிழமை அன்று ஒன்றாகக்கூடி ஜெபித்தார்கள், ஆராதித்தார்கள்..

**அப்போஸ்தலர் 20:7**

**வாரத்தின் முதல்நாளிலே**, அப்பம் பிட்கும்படி சீஷர்கள் கூடிவந்திருக்கையில், பவுல் மறுநாளிலே புறப்படவேண்டுமென்றிருந்து, அவர்களுடனே சம்பாஷித்து, நடுராத்திரி மட்டும் பிரசங்கித்தான்.

மேலும் சபை மக்களுக்கு செய்ய வேண்டிய உதவிகளுக்காக பணத்தை சேகரித்து வையுங்கள், அதுவும் வாரத்தின் முதல் நாள் நீங்கள் ஒன்றாக சேர்ந்து தேவனை ஆராதிக்க நாளிலே அதை செய்யுங்கள் என்றும் அவர்களுக்கு ஆலோசனை சொல்லப்பட்டது.

**1 கொரிந்தியர் 16:2**

நான் வந்திருக்கும்போது பணஞ்சேர்க்குதல் இராதபடிக்கு, உங்களில் **அவனவன் வாரத்தின் முதல்நாள்தோறும்**, தன்தன் வரவுக்குத் தக்கதாக எதையாகிலும் தன்னிடத்திலே சேர்த்துவைக்கக்கடவன்.

இது எதைக் காட்டுகின்றது என்றால், ஆதி திருச்சபை இயேசுவின் உயிர்த்தெழுதல் நாளாகிய ஞாயிற்றுக்கிழமை அன்று ஒன்றாக கூடி தேவனை தொழுது இருக்கிறார்கள், சில முக்கியமான தீர்மானங்களை எடுத்திருக்கிறார்கள். எனவே காலப்போக்கில் அந்த நாளிலேயே கிறிஸ்தவர்கள் தேவனை ஆராதிப்பது ஒரு வழக்கமாக மாறி இருக்கிறது.

இது மட்டுமல்ல, ஒரு குறிப்பிட்ட நாளை சிறப்பாக கொண்டாட வேண்டுமென்று நம் மனதிலே நிர்ணயித்துக் கொண்டால், காலம் நேரம் பார்க்காமல், நல்ல நேரம் கெட்ட நேரம் பார்க்காமல் அந்த நாளிலே காரியங்களை செய்ய பைபிள் நமக்கு அனுமதி கொடுத்திருக்கிறது. எனவே ஞாயிற்றுக்கிழமையில், அதாவது இயேசுவின் உயிர்த்தெழுந்த நாளிலே கிறிஸ்தவர்களாகிய நாங்கள் தேவனை ஆராதித்து கொண்டிருக்கிறோம்.

இன்னும் பல நாடுகளில் உள்ள கிறிஸ்துவர்கள், அந்த நாடுகளில் எந்த நாள் அரசு விடுமுறை நாளாக இருக்குமோ, அந்தநாளில் தேவனை ஆராதிக்கிறார்கள். உதாரணத்திற்கு அரேபிய நாடுகளில் வெள்ளிக்கிழமை அரசு விடுமுறை என்பதால் வெள்ளிக்கிழமை களிலேயே தேவனை ஆராதிக்கிறார்கள். இது பைபிளுக்கு எதிரானதும் கூட அல்ல.



**கேள்வி 21:** ஆரோக்கத்திற்காக கிறிஸ்தவர்கள் விருத்தசெதனம் செய்துக் கொள்ளலாமா?

**பதில் 21:** விருத்தசேதனம் என்பது பழைய ஏற்பாட்டில் யூதர்களுக்காக கர்த்தர் கொடுத்த கட்டளையாகும். புதிய ஏற்பாட்டின் படி கிறிஸ்தவர்கள் செய்ய வேண்டிய அவசியமில்லை. கிறிஸ்தவர்கள் இருதயத்தில் விருத்தசேதனம் செய்யப்பட்டவர்கள், சரீரத்தில் அல்ல. எனவே விருத்தசேதனம் கிறிஸ்தவர்களுக்கு கட்டளை இல்லை. விருத்தசேதனம் பற்றிய புதிய ஏற்பாட்டின் நிலைப்பாடு மிகவும் ஆழமாக படிக்கவேண்டிய தலைப்பு ஆகும். இங்கு சுருக்கமாகத்தான் பதில் அளிக்கப்பட்டுள்ளது.

ஆரோக்கியத்திற்காக ஒரு கிறிஸ்தவர் விருத்தசேதனம் செய்து கொள்வேன் என்று சொன்னால், அதில் எந்த பிரச்சினையும் இல்லை அவர் செய்து கொள்ளட்டும். இதற்கும் கிறிஸ்தவத்திற்கு எந்த சம்பந்தமும் இல்லை.



**கேள்வி 22:** கிறிஸ்தவத்தில் கண்திருஷ்டி உண்ட?

**பதில் 22:** கிறிஸ்தவத்தில் கண்திருஷ்டி என்பது இல்லை. அது ஒரு மூட பழக்க வழக்கமாகும். இஸ்லாமில் கண்திருஷ்டி இருக்கிறது என்று நம்புகிறார்கள், இதனை முஹம்மது கீழ்க்கண்ட புகாரி ஹதீஸில் கூறியுள்ளார்:

5944. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள் '**கண்ணேறு (திருஷ்டிபடுவது) உண்மைதான்**' என்று கூறினார்கள். மேலும், பச்சை குத்துவதைத் தடை செய்தார்கள்

இதை ஏன் நான் மூடப்பழக்கவழக்கம் என்று சொல்கிறேன் என்றால், ஒருவர் மற்றவர் மீது கண் திருஷ்டி வைத்தால், அந்த அடுத்தவருக்கு அதன் மூலமாக தீமை உண்டாகும் என்றால்,

- இந்த தீமையை செய்பவன் யார்?
- இந்த தீமை செய்யப்படும்போது, அவனைப் படைத்த இறைவன் என்ன செய்து கொண்டிருக்கிறான்?
- ஒரு நேர்மையான நல்ல மனிதருக்கு எதிராக, ஒரு தீய மனிதன் கண் திருஷ்டி வைத்தால், அதனால் அவனுக்கு தீமை உண்டாகும் என்று சொன்னால், இதில் ஏதாவது நியாயம் இருக்கிறதா?
- இப்படி ஒரு நீதிமானுக்கு ஒரு தீய மனிதன் தீமை செய்யும் போது, அதைப் பார்த்துக்கொண்டு இறைவன் ஏன் சும்மா இருந்தான் எந்த கேள்வி எழுகின்றது?
- இதற்கெல்லாம் இஸ்லாத்தில் பதில் இல்லை?

இந்த கண் திருஷ்டியை கண்டு ஹிந்து உலகம் அப்படியே பயந்து போயுள்ளது? இது ஒரு வீணான பயம் என்பதை இவர்கள் அறியார்கள்?

ஒருவரைப் பார்த்து இன்னொருவர் நீ அழகாய் இருக்கிறாய் என்று சொல்வதும், அவர்கள் மீது கண் திருஷ்டி வைப்பதோ உண்மையாக இருந்தால், சினிமாவில் கதாநாயகனாக கதாநாயகியாக இருக்கும் ஒவ்வொருவரும் எப்போதும் பல தீமைகளுக்கு ஆளாகியிருப்பார்கள்? இவர்களின் அழகையும் நடிப்பையும் பார்த்து கண் வைக்காதவர்கள் சினிமா பார்ப்பவர்களில் யார் இருக்கிறார்கள்? கோடிக்கணக்கான மக்கள் இவர்களின் மீது கண் திருஷ்டி வைக்கிறார்கள், இருந்தபோதிலும் மிக நீண்ட ஆயுளோடு சினிமா நடிகர்கள் நடிகைகள் வாழுகிறார்கள். இவர்கள் மீது கண் திருஷ்டி இல்லையா?

எனவே, மேற்கண்ட கேள்விகளுக்கு இஸ்லாமிடமும், இந்துக்களிடமும் பதில்கள் இல்லை. அதனால் தான் சத்தியமார்க்கமாகிய கிறிஸ்தவம் நம்புவதில்லை.



**கேள்வி 23:** கிறிஸ்துவத்தில் விதி என்ற கோட்பாடு உண்டா?

**பதில் 23:** முதலில் ஒரு வரியில் பதில் சொல்லி விடுகிறேன், அதாவது பைபிளின் படி விதி என்பது இல்லை, கிறிஸ்தவம் விதியை நம்புவதில்லை.

பொதுவாக விதி என்றால், மனித கட்டுப்பாட்டுக்கு அப்பால், நாம் முயன்றாலும், நம்மால் செய்ய முடியாது ஒன்று தான் விதி என்று நம்பப்படுகிறது.

அதாவது நம்முடைய வாழ்க்கையில் இந்த ஒரு நிகழ்ச்சி நடந்த தீருமென்று ஏற்கனவே இறைவன் முடிவு செய்து விட்டால், அதை மாற்றுவதற்கு நான் ஏன் முயல வேண்டும், அதுதான் மாறப்போவது இல்லையே என்ற நம்பிக்கை தான் விதி என்று சொல்லப்படுகிறது. இதனை கிறிஸ்துவம் ஏற்றுக் கொள்வதில்லை.

இஸ்லாமும் இந்துத்துவமும் இந்த விதி என்ற கோட்பாட்டை ஆழமாக நம்புகிறது. இஸ்லாமின் படி நீங்கள் எதை செய்தாலும் எந்த பாடுபட்டாலும் உங்கள் வாழ்க்கையில் அல்லாஹ் எதை முடிவு செய்து வைத்திருக்கின்றானோ, அதுதான் நடக்கும். எனவே அவனை நம்பி முழுவதுமாக அவர் மீது சார்ந்து விடுங்கள். இதேபோலத்தான் இந்து மார்க்கத்திலும் விதியினால் பல காரியங்கள் செய்யப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

இந்தியாவில் வேரூன்றி இருக்கின்ற ஜாதி என்ற நிலைக்கு இந்துத்துவம் சொல்லும் விதியும் ஒரு காரணமாகும்.

விதி என்ற தலைப்பு, மிகவும் ஆழமான தலைப்பு. ஏன் பைபிள் இதை ஒப்புக் கொள்ளவில்லை, என்பதை அறிய கீழ்க்கண்ட கட்டுரையை இப்போதைக்கு படித்துக்கொள்ளுங்கள், தேவைப்பட்டால், இந்த விவரங்களை வேறு ஒரு கேள்வியில் காண்போம்.

**What does the Bible say about fate / destiny?**



**கேள்வி 24:** கிறிஸ்தவர்கள் தேவனை தொழுதுக்கொள்ளும் போது ஏன் பாடல்கள் பாடுகிறார்கள், இசைக்கருவிகளை இசைக்கிறார்கள்? இதனை பைபிள் அனுமதிக்கிறதா?

**பதில் 24:** ஆம் இசைக்கருவிகளை இசைத்து, தேவனை புகழ்ந்து பாடி அவரை ஆராதிப்பதை பைபிள் அனுமதிக்கிறது.

எபேசியர் 5:19. **சங்கீதங்களினாலும் கீர்த்தனைகளினாலும் ஞானப்பாட்டுகளினாலும்** ஒருவருக்கொருவர் புத்திசொல்லிக்கொண்டு, உங்கள் இருதயத்தில் கர்த்தரைப் பாடிக் கீர்த்தனம்பண்ணி,

மத்தேயு 26:30. அவர்கள் **ஸ்தோத்திரப்பாட்டைப் பாடின பின்பு**, ஒலிவமலைக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

இயேசுவும் ஸ்தோத்திரபாடலைப் பாடி அதன் பிறகு கெத்சமெனே தோட்டத்திற்கு கடந்துச் சென்றார்.

1. தேவனை பாடுவதற்கென்றே ஒரு புத்தம் (150 பாடல்கள்/அத்தியாயங்கள் கொண்ட புத்தகம்) உள்ளது.

2. தேவனுடைய ஆலயத்தில் பாடல்கள் பாடவும், இசைக்கருவிகளை இசைக்கவும், சாலொமோன் அரசன் பலரை நியமித்து இருந்தார்.
3. தாவீது ராஜாவோ, தேவனுடைய உடன்படிக்கை பெட்டிக்கு முன்பாக நடனமாடி, பாடிக்கொண்டுச் சென்றார்.

எனவே, ஆராதனைகளில் பாடல்கள் பாடுவதும் அருவிகள் இசைப்பதும் அனுமதிக்கப்பட்டது.

ஆனால் ஊழியர்கள் இதில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும், வெறும் பாடல் பாடுவதும் இசைக் கருவிகளை மீட்டுவது மட்டும்தான் ஆராதனை அல்ல, தேவனை ஆவியோடும் உண்மையோடும் தொழுது கொள்வதும் தான் ஆராதனை.

இந்த 21 ஆம் நூற்றாண்டு காலத்தில், கிறிஸ்துவ பாடல்கள் பாடகர்கள் அதிகமாகி விட்டார்கள். ஆகையால் பைபிளின் சத்தியத்தை மாற்றாமல் எழுதப்படுகின்ற நல்ல பாடல்களை சபையில் அனுமதிக்க வேண்டும்.

**இஸ்லாமியர்களும் ஜபூரும்:**

தாவீது அரசனுக்கு அல்லாஹ் ஜபூர் என்ற ஒரு வேகத்தை கொடுத்தான், என்று நம்புகின்ற முஸ்லிம்கள், தாங்கள் அல்லாஹ்வைத் தொழுது கொள்ளும் போது, பாடல்கள் இல்லாமல் தொழுதுக் கொள்கிறார்கள். ஜபூர் என்றால் அது சங்கீதங்கள் அடங்கிய புத்தகம் என்பதை முஸ்லிம்கள் அறிய வேண்டும்.

இஸ்லாமில் இசைக்கு இடமில்லை. தங்கள் இறைவன் தாவீது என்ற தீர்க்கதரிசிக்கு பாடல்களை ஒரு சிறப்புத் தகுதியாக கொடுத்திருந்தான். ஆனால் அதே பாடல்கள் இன்று முஸ்லிம்கள் பாட விரும்புவதில்லை. இந்த கேள்வியை முஸ்லிம்கள் தங்கள் அறிஞர்களிடம் கேட்டு பதில் சொல்லவேண்டும்? குறைந்தபட்சம் முஸ்லிம்கள், அல்லாஹ் கொடுத்த ஜபூர் புத்தகத்தில் அல்லாஹ்வை புகழ்ந்து பாடிய பாடல்களையாவது பாடி மகிழலாம்.



**கேள்வி 25:** ஒரு நல்ல கிறிஸ்தவ பாடகர், ஊழியர் திடீரென்று கள்ள உபதேசம் செய்கின்றவராக மாறிவிட்டார் என்று வைத்துக்கொள்வோம்? அவர் பாடலை நம் சபைகளில் பாடலாமா?

**பதில் 25:** இந்த காலத்தில், இந்த கேள்வி மிகவும் முக்கியமான கேள்வி. தமிழ்நாட்டில் அனேக பாடகர்கள் இருக்கிறார்கள். கர்த்தருடைய பாடல்களை அருமையாக எழுதுகிறார்கள் மற்றும் பாடுகிறார்கள். அந்தப் பாடல்களில் சத்தியமும் உள்ளது, அவைகள் பைபிளுக்கு எதிராகவும் இல்லை. ஆனால் அந்த பாடலை பாடி எழுதியவர், பிரசங்கம் செய்யும் போது பல தவறான உபதேசங்களை போதித்துக் கொண்டிருக்கிறார் என்று காண்கிறோம்.

இப்பொழுது நமது கேள்வி, இப்படிப்பட்டவர் உடைய பாடலை நம் ஆராதனைகளில் பாடலாமா?

இதற்கு என்னுடைய தனிப்பட்ட பதிலைக் கேட்டால், சபை ஊழியர்கள் இப்படிப்பட்ட பாடகர்கள் பாடுகின்ற பாடலை தங்கள் சபையில் பாடாமல் இருப்பது நல்லது. ஏனென்றால், அவர் எழுதிய பாடலில் சத்தியம் இருக்கிறது, ஆனால் அவருடைய வாழ்க்கையில் சாட்சி இல்லை, தவறான உபதேசங்களை செய்கின்றார்.

யார் வேதத்திற்கு புறம்பாக போதனை செய்கிறாரோ, அவருடைய பாடல்கள் நமக்கு எதற்கு?

ஒரு வேளை இப்படிப்பட்ட பாடல்களை, சபையில் அனுமதித்தால், சபை விசுவாசிகள் மத்தியில் குழப்பங்கள் வரும். சிலர் சரியானது என்று சொல்வார்கள், சிலர் இது தவறு என்று சொல்வார்கள்.

எனவே, உண்மையாகவே அந்த பாடல்கள் நன்றாக இருந்தாலும், தேவனுடைய மகிமையை உயர்த்துவதாக இருந்தாலும், அந்த ஊழியர் தவறான உபதேசத்தைக் போதிக்கின்றபடியினால், அவருடைய பாடல்களை பாடாமல் இருப்பதே நல்லது.

கள்ள உபதேசக்காரர்களின் பாடல்களை நாம் அங்கீகரித்தால், அவருடைய உபதேசத்தையும் நாம் மறைமுகமாக ஏற்றுக்கொள்வது போல ஆகிவிடும். இதனால் சில விசுவாசிகள் குழப்பமடைய வாய்ப்பு இருக்கிறது.

தேவனுடைய ஆராதனையை பொருத்தவரையில், உண்மையும் சத்தியமும் உள்ளவர்களாக ஆராதிக்க வேண்டும். குழப்பத்திற்கு ஒரு சதவிகிதம் கூட இடம் கொடுக்கக் கூடாது. எனவே, தவறான உபதேசம் செய்கின்றவர்களின் பாடல்கள் சபைக்குத் தேவையில்லை.



**கேள்வி 26:** ஆங்கில பாணியில், பழமையான தமிழில் பாடப்பட்ட பழைய பாடல்கள் இன்று சபைக்குத் தேவையா?

**பதில் 26:** சில சபைகளில் இன்னும் பாரம்பரிய பாடல்களை பாடிக்கொண்டு இருக்கிறோம். இதுமட்டுமல்ல, நம்முடைய முன்னோர்களே எழுதிய தமிழ் பாணியில் அமைந்த பாடல்களையும் பாடிக்கொண்டு இருக்கிறோம். அப்படிப்பட்ட பாடல்கள் தேவையா இல்லையா? என்பது ஒரு பக்கம் இருந்தாலும், அந்த பாடல்களை சபையில் ஆராதனைகளில் இன்று பாடப்படும் போது, கீழ்கண்ட கேள்விகளுக்கு பதில்களை நாம் தேடவேண்டும்:

1) பழைய பாடல்கள் சபையில் உள்ளவர்களுக்கு புரிகின்றதா?

2) நம்முடைய வாலிபர்களுக்கு பழைய தமிழ் வார்த்தைகளில், கீர்த்தனைகளில் வரும் வார்த்தைகளின் அர்த்தம் புரிகின்றதா?

3) எத்தனைப் பேருக்கு பழமையான தமிழ் தெரியும்?

4) அர்த்தம் புரியாமல், ஆவியில் ஒரு தெளிவு இல்லாமல், பாடல்களை பாடுவதினால் நம்முடைய விசுவாசம் வளருமா?

5) கோயில்களில் சமஸ்கிருதத்தில் ஸ்லோகங்களை படித்தால் பக்தர்களுக்கு என்ன நன்மை என்று நாம் கேள்வி எழுப்புகிறோம். மசூதிகளில் தொழுகின்றவருக்கு புரியாமல் இருந்தாலும், அரபியில் தொழுகை செய்தால் என்ன நன்மை என்று கேள்வி எழுப்புகிறோம். நாம் நமக்கு புரியாமல் பாடல்களை பாடினால் என்ன நன்மை என்று கேட்டு இருக்கின்றோமா?

6) தமிழ் மொழியில் அனேக பழைய வார்த்தைகள் பயன்பாட்டில் இல்லை, அவைகளின் பொருளும் சபையில் உள்ள பெரும்பான்மை மக்களுக்கு தெரிவதில்லை, எனவே பொருள் தெரியாமல் பாடுவது ஏன்?

நாம் ஒன்று செய்யலாம், பாரம்பரிய பாடல்கள் பாடுகின்ற சபை மக்களுக்கு பாடல்களின் பொருளை கற்றுத்தரவேண்டும், அல்லது அர்த்தம் புரிகின்ற பாடல்களை பாடவேண்டும். ஃபாதர் பெர்க்மான்ஸ் அவர்களின் பாடல்கள், ஆராதனைகளில் எப்படிப்பட்ட மாற்றத்தை கொண்டு வந்துள்ளது என்பதை நாம் அறிவோம். இந்த பாடல்களின் வெற்றிக்கு காரணம், நமக்கு புரியும் மொழியில், நமக்கு தெரிந்த ராகத்தில் பாடப்பட்ட பாடல்கள் அவைகள் என்பதை நாம் மறுக்கமுடியுமா?

எனவே, என்னுடைய கருத்து என்னவென்றால், திருச்சபைக்குள், நமக்கு புரியாமல் எதையும் பாரம்பரியத்திற்காகச் செய்யக்கூடாது. சபைக்கு புரியவில்லையென்றால், சபை மக்கள் சபைக்கு வருவது ஒரு பாரமாக நினைப்பார்கள். எனவே, காலம் மாறிக்கொண்டு இருப்பதினால் சபையின் சில பாரம்பரியத்தை விட்டுவிட்டு புதியவைகளை ஏற்றுக்கொள்வது தான் சரியானது.

கிறிஸ்தவத்தின் அடிப்படை கோட்பாடுகளை விட்டுக்கொடுங்கள் என்றுச் சொல்லவில்லை, பாரம்பரிய சபையையும் நான் எதிர்க்கவில்லை. என் வேண்டுகோள் எல்லாம் "புரியாமல் பாடாதீர்கள்" என்பது தான். இதே போன்று ஆங்கில பாணியில் அமைந்த பாடல்களையும் புரியாமல் பாடவேண்டாம், சபையில் உள்ளவர்கள் அனைவருக்கும் புரிந்தால் மட்டும் பாடுங்கள்.



**கேள்வி 27:** அனேக பாடல்களை எழுதியவர், சபைகளில் அவரது பாடல்கள் பாடப்பட்டுக்கொண்டு இருந்தது. திடிரென்று ஒரு பகிரங்க பாவத்தில் விழுந்துவிட்டார் (விபச்சாரமோ, பண ஊழலோ, வேறு எதுவோ), அவரது சாட்சி

கெட்டுவிட்டது, அதிலிருந்து அவர் மீளவில்லை. இவரது முந்தைய பாடல்களை ஆராதனைகளில் பாடலாமா?

**பதில் 27:** இந்த கேள்விக்கான பதிலை படிப்பதற்கு முன்பு, மேலே கொடுக்கப்பட்ட 3 கேள்விகளையும் பதில்களையும் படித்துவிடுங்கள்.

அருமையான பாடல்களை பாடியவர், ஊழியத்தை அருமையாக செய்தவர், திடீரென்று ஒரு பெரும் பாவத்தில் விழுந்து விட்டு, சாட்சியை இழப்பார் என்றால், அவருடைய பாடலை பாடுவது எப்படி? என்பதுதான் கேள்வி.

பல ஆண்டுகளாக அந்தப் பாடல்களைப் பாடும் போது, அவர் நேர்மையான தான் இருந்தார். ஆனால் பல ஆண்டுகள் கழித்து, இப்பொழுது அவர் பின் மாற்றம் அடைந்து, வெளிப்படையான தவறுகளை செய்திருக்கிறார். இத்தனை ஆண்டுகள் நாம் திருச்சபையில் அவருடைய பாடல்களை, பாடிக் கொண்டு ஆராதித்து கொண்டு தான் இருந்தோம், ஆனால் இப்போது அவைகளை தொடர்வதா அல்லது விட்டுவிடுவதா?

என்னுடைய பதில் என்னவென்றால், அவருடைய பாடல்களை நாம் இனி சபையில் பாடாமல் இருப்பதுதான் நல்லது. ஏனென்றால் இப்போது பெரும்பான்மையான விசுவாசிகளுக்கு யார் எந்தப் பாடல்களைப் பாடுகிறார்கள், அந்த ஊழியக்காரர் யார்? அப்படியே தற்போதைய நிலை என்ன? போன்ற விவரங்கள் அறிந்திருக்கிறார்கள். எனவே தேவனை ஆராதிக்கும் நேரத்தில், இப்படிப்பட்டவர் உடைய ஒரு பாடலை நாம் தெரிவுசெய்து பாடினால், அந்த பாடலை பாடும் போதே விசுவாசிகளுக்கு அந்த பாடலாசியர் ஊழியக்காரர் பற்றிய இப்போதைய நிலையில் ஞாபகத்துக்கு வரும்.

தேவனை ஆராதிக்கும் போது ஆவியோடும் உண்மையோடும் ஆராதிக்க வேண்டும், விசுவாசிகளின் மனதிலே பலவகையான ஓட்டங்கள், எண்ணங்களை சிதறடிக்கும் காரியங்கள் வராதபடிக்கு நாம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இன்னும் சில விசுவாசிகள் அப்படிப்பட்ட பாடல்களை பாடும் போது, அதற்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வண்ணமாக, ஆராதனையில் படாமலேயே சும்மா இருப்பார்கள். இந்த நிலைக்கு விசுவாசிகளை தள்ள முடியாது, தள்ளவும் கூடாது.

**எனவே சாட்சியை காத்துக் கொள்ளாதவரின் பாடல்களை, ஆராதனைகளில் பாடாமல் இருப்பதே சபைக்கு நல்லது.**

ஒருவேளை அந்த ஊழியர் கர்த்தருக்குள் மறுபடியும் வந்து, மன்னிப்பைப் பெற்று சிறப்பான ஊழியம் செய்தால், தன் குற்றத்தை ஒப்புக் கொண்டு தன் சாட்சியை மறுபடியும் காத்துக் கொள்வார் என்று சொன்னால், அவருடைய பாடல்களை பாடுவதில் தவறில்லை. சுருக்கமாக ஒரு வரியில் சொல்ல வேண்டுமென்றால், "யாருடைய பாடல்களை நாம் பாடினாலும் அவருடைய தற்கால நிலை என்ன என்பதை கவனித்து பாடினால் மிகவும் நன்றாக இருக்கும்".



**கேள்வி 28:** சில பாடல் வரிகளில் தவறான உபதேசம் இருப்பதாக தோன்றுகிறது, அவைகளை சபையில் பாடலாமா?

**பதில் 28:** இந்த கேள்விக்கு உதவியாக இருக்கும் வண்ணமாக, மேற்கண்ட கேள்வி பதில்களை படித்துக்கொள்ளுங்கள்.

மேலே சொன்ன இரண்டு பதில்களில் "பிரச்சனை, பாடல் எழுதியவர் மீது இருந்தது", "பாடல் பாடியவர் மீது இருந்தது". ஆனால் இந்த கேள்வியில் பாடலில் உள்ள சில வரிகள், தவறான உபதேசத்தை போதிப்பது போன்று தெரிகின்றது. இந்த பாடலை சபையில் பாடலாமா?

ஒரு கிறிஸ்தவராக, ஒரு ஊழியராக எல்லாவற்றையும் சோதித்து அறிந்து நலமானது பிடித்துக்கொள்ள நாம் அறிந்திருக்க வேண்டும். கள்ள உபதேசம் செய்கிற நபர்களை நாம் புறக்கணிப்பது போன்று, ஒரு பாடலில் ஒரு வரி நம் வேதத்திற்கு எதிராக இருக்கின்றது என்று நீங்கள் கருதினால், அடுத்த கேள்விக்கே இடமில்லை, அந்த பாடலை புறக்கணிக்க வேண்டியதுதான். அதை எழுதியவரும் அதை பாடியவரும் உலகப் புகழ்பெற்ற பெரிய ஊழியக்காரர் ஆக இருந்தாலும் சரி. அதை நாம் ஏற்க வேண்டியதில்லை.

**கள்ள உபதேசங்கள் பிரசங்கியார் வடிவில் வந்தாலும் சரி, பாடல் வரிகளில் வந்தாலும் சரி அதனை நாம் புறக்கணிக்க வேண்டும். இது தான் பைபிள் நமக்கு கற்றுக் கொடுக்கும் பாடம்.**

உதாரணத்திற்கு, ஒரு பாடல் வருகிறது அதில் ஒரு குறிப்பிட்ட இடத்தில், இயேசு சிலுவையில் மரிக்கவில்லை என்ற கோணத்தில் அர்த்தத்தைக் கொடுக்கிறது என்று நாம் கண்டால், இது நம்முடைய அடிப்படை சத்தியத்திற்கு எதிரானது, எனவே இந்த பாடல்களை நாம் ஏற்றுக் கொள்ளக் கூடாது.

நமக்கு நல்ல பாடல்களுக்கு பஞ்சமா இருக்கிறது? ஆயிரக்கணக்கான அவர்கள் கிறிஸ்தவர்களால் எழுதப்பட்டு பாடப்பட்டு கொண்டு இருக்கின்றன. எனவே, எந்த நேரத்தில் நாம் சிலவற்றை கள்ள உபதேசம் என்று கண்டுபிடிப்போம், உடனே அதனை புறக்கணிக்க வேண்டும்.



**கேள்வி 29:** தானியேல் எருசலேமுக்கு நேராக திரும்பி (கிப்லாவை நோக்கி) தேவனை தொழுதுக்கொண்டார். எருசலேமின் தேவாலம் நோக்கியே பழைய ஏற்பாட்டில் யூதர்கள் தொழுதுக்கொண்டார்கள். முஸ்லிம்களுக்கும் முதல் 12/13 ஆண்டுகளுக்கு மேலாக எருசலேமை நோக்கியே தொழுதுக்கொண்டார்கள். கிறிஸ்தவர்களாகிய நீங்கள் ஏன் அது போல செய்வதில்லை.

**பதில் 29:** கிறிஸ்தவர்கள் எருசலேமின் தேவாலயத்தை நோக்கி தொழுது கொள்வதில்லை, என்ற பதிலுக்கு போவதற்கு முன்பாக, பழைய ஏற்பாட்டின் நபர்கள் தீர்க்கதரிசிகள், மற்றும் யூதர்கள் எருசலேம் தேவாலயம் கட்டப்படுவதற்கு முன்பு எப்படி தேவனை தொழுது கொண்டார்கள் என்பதை சில வரிகளில் பார்க்கலாம்.

**a) நோவா முதற்கொண்டு தேவாலயம் கட்டும்வரை எல்லோரும், எல்லா இடங்களிலும் பலிபீடம் கட்டி தொழுதார்கள்.**

**ஆதியாகமம் 8:20** அப்பொழுது நோவா **கர்த்தருக்கு ஒரு பலிபீடம் கட்டி**, சுத்தமான சகல மிருகங்களிலும், சுத்தமான சகல பறவைகளிலும் சிலவற்றைத் தெரிந்துகொண்டு, அவைகளைப் பலிபீடத்தின்மேல் தகனபலிகளாகப் பலியிட்டான்.

**ஆதியாகமம் 12:7** கர்த்தர் ஆபிராமுக்குத் தரிசனமாகி: உன் சந்ததிக்கு இந்தத் தேசத்தைக் கொடுப்பேன் என்றார். அப்பொழுது அவன் தனக்குத் தரிசனமான கர்த்தருக்கு அங்கே ஒரு **பலிபீடத்தைக் கட்டினான்**.

**யாத்திராகமம் 17:15** மோசே ஒரு **பலிபீடத்தைக் கட்டி**, அதற்கு யேகோவாநிசி என்று பேரிட்டு,

**நியாயாதிபதிகள் 6:24** அங்கே கிதியோன் கர்த்தருக்கு **ஒரு பலிபீடத்தைக்** கட்டி, அதற்கு யெகோவா ஷாலோம் என்று பேரிட்டான்; . . .

**b) சாலொமோன் ராஜா தேவாலயம் கட்டியபிறகு அவர் ஜெபிக்கும் போது, இந்த ஆலயத்தை நோக்கி, வேண்டுகிறவர்களின் ஜெபத்தை நீங்கள் கேட்டு பதில் கொடுங்கள் என்று கேட்டுக்கொண்டார்.**

**I இராஜாக்கள் 8:38.** உம்முடைய ஜனமாகிய இஸ்ரவேல் அனைவரிலும் எந்த மனுஷனானாலும் தன் இருதயத்தின் வாதையை உணர்ந்து, இந்த ஆலயத்துக்கு நேராகத் தன் கைகளை விரித்துச் செய்யும் சகல விண்ணப்பத்தையும், சகல வேண்டுதலையும், 39. உம்முடைய வாசஸ்தலமாகிய பரலோகத்தில் இருக்கிற தேவரீர் கேட்டு மன்னித்து,

**c) அதன் பிறகு யூதர்கள், எருசலேமை நோக்கி தொழுதார்கள்.**

**d) ஆனால், மேசியாவாகிய இயேசு வந்த பிறகு**, பிதாவை உலகில் எல்லா இடங்களிலும் தொழுதுக்கொள்வார்கள் என்றுச் சொன்னார். இங்கு இயேசு தேவாலய திசையை மட்டும் நீக்கவில்லை, தேவாலயத்தையே நீக்கியுள்ளார்.

**யோவான் 4:21.** அதற்கு இயேசு: ஸ்திரீயே, நான் சொல்லுகிறதை நம்பு. நீங்கள் இந்த மலையிலும் எருசலேமிலும் மாத்திரமல்ல, **எங்கும் பிதாவைத் தொழுதுகொள்ளுங்காலம் வருகிறது**.

எனவே, கிறிஸ்தவர்கள் தேவனை தொழுதுக்கொள்ளும் போது, ஒரு இடமோ, திசையோ தேவையில்லை.



**கேள்வி 30:** முஸ்லிமள் தங்கள் நோன்பை முடித்துக்கொள்வதற்கு நாம் உதவி செய்யலாமா? உதாரணத்திற்கு, இந்த மாதத்தில் நோன்பாளிகளுக்காக மசூதிகளுக்கு திண்பண்டங்களை, பழங்களை வாங்கித் தரலாமா?

**பதில் 30:** சிலவேளைகளில் கிறிஸ்தவர்கள் தேவையில்லாத விஷயங்களில் அதிகமாக அக்கரைக்கொண்டு, உலக மக்கள் மீது இயேசுவிற்கு இருக்கும் அன்பை விட, தங்களுக்குத் அதிக அன்பு இருக்கிறது என்பதைக் காட்டிக்கொள்ள முயற்சி எடுக்கிறார்கள், அதனால், அனேக பிரச்சனைகளுக்குள் மாட்டிக்கொள்கிறார்கள்.

கீழ்கண்ட விவரங்களை நன்றாக கவனியுங்கள்.

1. ஒரு முஸ்லிம் பசியாக இருந்தால், அவனுக்கு உணவு கொடு.
2. ஒரு முஸ்லிம் தாகமாக இருந்தால், அவனுக்கு தண்ணீர் கொடு.
3. ஒரு முஸ்லிம் உடையில்லாமல் இருந்தால், அவனுக்கு உடை கொடு.
4. ஒரு முஸ்லிம் வீடு இல்லாமல் இருந்தாலும், உன்னிடம் பணம் அதிகமாக இருந்தால், அவனுக்கு ஒரு வீடு கட்டிக்கொடு.
5. ஒரு முஸ்லிம் வியாதியுள்ளவனாக இருந்தால், அவனுக்கு உதவி செய், அவனை விசாரித்து பராமரித்து, மருந்துகள் கொடுத்து சுகப்படுத்து.
6. ஒரு முஸ்லிம் அநியாயமாக சிறைச்சாலையில் அடைக்கப்பட்டு இருந்தால், அவனை விசாரித்து ஆறுதல் சொல் முடிந்தால் அவன் விடுதலையாக்க முயற்சி எடு.
7. ஒரு முஸ்லிம் அந்நியனாக இருந்தால், அவனுக்கு பாதுகாப்பு கொடுத்து சேர்த்துக்கொள்.

ஏனென்றால், உலகில் இன்னொரு மனிதனுக்கு நாம் என்ன செய்கின்றாயோ, அது தனக்கே செய்ததாக இயேசு கருதுகின்றார், இதனை நாம் இயேசுவின் போதனைகளில் பார்க்கமுடியும். அந்த மனிதன் யாராக இருந்தாலும் பிரச்சனையில்லை.

**ஆனால்,**

1) ஒரு முஸ்லிம் நோன்பு இருந்தால், அந்த நோன்பு சம்மந்தப்பட்ட எந்த விஷயத்திற்கும் உதவி செய்யாதே, இது கர்த்தருக்கு விரோதமான பாவமாகும்.

2) ஒரு முஸ்லிம் நோன்பு திறப்பதற்கு ஒரு பேரிச்சம் பழம் கூட நீ வாங்கித் தராதே, ஏனென்றால், அவனுடைய இறைநம்பிக்கையை நீ ஆதரிப்பதாக இது கருதப்படும்.

3) ஒரு முஸ்லிமின் ஏழ்மையை போக்க உன்னால் முடிந்தால், ஒரு இலட்சம் ரூபாய் செலவு செய், ஆனால், அவன் நோன்பு திறப்பதற்கு ஒரு குவளை தண்ணீர் கொடுக்க முன் வராதே, ஏனென்றால், அவனது விக்கிர ஆராதனை என்ற பாவத்தில், அந்நிய தெய்வமாக கருத்தப்படும் அல்லாஹ்வை வணங்கும் பாவத்தில் உன்னை நீ இணைத்துக்கொள்வதாக அது கருதப்படும்.

4) ஒரு முஸ்லிமுக்கு விபத்து நேரிட்டல், ஒரு பாட்டில் இரத்தம் கொடுத்து அவனை காப்பாற்ற முயற்சி எடு, ஆனால், அவனது மார்க்க விஷயங்களில் உன் சுண்டு விரலிலிருந்து ஒழுகும் ஒரு சொட்டு தண்ணீர் கொடுத்து, நீ கர்த்தரின் கோபத்திற்கு உள்ளாகாதே.

கிறிஸ்தவர்கள் நன்மை எது, தீமை எது என்பதை சரியாக புரிந்துக்கொள்ளவேண்டும். கிறிஸ்தவர்கள் அன்புக்கும், அறியாமைக்கும் இடையே இருக்கும் மிகப்பெரிய வித்தியாசத்தை புரிந்துக்கொள்ளவேண்டும். செய்யப்படும் உதவி எல்லாம் அன்பாக கருதப்படாது. அறியாமையினால் செய்யும் சில உதவிகள் நம்மை அதிகமாக பாதிக்கும்.

உதவி செய்கிறேன் என்றுச் சொல்லி, நாம் மற்றவர்களின் மார்க்க விஷயங்களுக்காக உதவி செய்யக்கூடாது. முஸ்லிம்கள் சிறுவர்களுக்கு விருத்தசேதனம் (சுன்னத்துச்) செய்கிறார்கள் என்றுச் சொல்லி, நாம் அதற்கு டொனேஷன் தரக்கூடாது. மசூதி கட்டுமானப் பணிக்கு டொனேஷன் தரக்கூடாது. ஆனால், அதே முஸ்லிம் ஏழ்மையில் தவிக்கும் போது, உன் ஆடம்பர செலவுகளை குறைத்துக் கொண்டாவது, அவனுக்கு நீ உதவி செய்ய மறவாதே.

எனவே, ரமளான் மாதத்தில், முஸ்லிம்கள் நோன்பை முடித்துக்கொள்வதற்கு, நாம் ஒரு பேரிச்ச பழத்தையும், ஒரு குவளை தண்ணீரையும் தரக்கூடாது, இப்படி கொடுத்தால், இது கர்த்தருக்கு விரோதமான பாவமாகும். இஸ்லாம் என்பது பைபிளினால் சபிக்கப்பட்ட இன்னொரு சுவிசேஷத்தைச் சொல்கிறது, இன்னொரு இயேசுவை அறிமுகம் செய்கின்றது. பைபிள் இதனை கடுமையாக கண்டிக்கிறது, எனவே, அதிக நன்மையைச் செய்கிறேன் என்றுச் சொல்லி, நம் தலையில் நாமே நெருப்பை அள்ளி போட்டுக்கொள்ளக்கூடாது. நம் ஊர்களில் நடக்கும் மாரியம்மன் திருவிழாக்களில் கூழ்

ஊற்றுவதற்கும், கோவில் சிலைகளுக்கு பாலாபிஷேகம் செய்வதற்கும் ஒரு கிறிஸ்தவராக இருந்துக் கொண்டு, நீங்கள் பணத்தை கொடுப்பீர்களா? அதே போலத்தான் இதுவும்.

**முஸ்லிம்களை நேசியுங்கள், ஆனால், அவர்களின் மார்க்க விஷயமாக, கர்த்தருக்கு அறுவருப்பான பாவங்களுக்கு பங்காளிகளாக ஆகாதிருங்கள்.**



**கேள்வி 31:** இன்றைய எருசலேம், இஸ்ரேலின் தலைநகரமாக இருக்கவேண்டும் என்று கிறிஸ்தவர்கள் விரும்புகிறார்களா?

**பதில் 31:** ஜெருசலேம் நகரம் பழைய ஏற்பாட்டிலும், புதிய ஏற்பாட்டிலும் முக்கியமான இடத்தை பிடித்துள்ளது. கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாக பல முக்கிய நிகழ்வுகள் எருசலேமைச் சுற்றி நடக்கிறது. மேலும், இஸ்லாம் வந்த பிறகு, இரண்டாம் கலிஃபா உமர் அவர்கள் எருசலேமை முற்றுகையிட்டு, அதனை கைப்பற்றிய பிறகு இன்னும் அதன் முக்கியத்துவம் பெருகிவிட்டது. இதுமட்டுமல்லாமல், கி.பி. 691ல், இஸ்லாமிய உம்மையத் கலிஃபா அப்துல் மாலிக் என்பவர், எருசலேமில் டெம்புல் மௌண்ட் என்ற இடத்தில், "டூம் ஆஃப் ராக்" என்ற கட்டிடத்தை கட்டியபிறகு, முஸ்லிம் நாடுகளின் பார்வை எருசலேம் பக்கம் திரும்பியுள்ளது.

இதுமட்டுமல்லாமல், இயேசுவின் இரண்டாம் வருகையின் போதும், எருசலேம் முக்கிய இடத்தை பிடிக்கும் என்றும் வெளிப்படுத்தின விசேஷத்தில் காணமுடியும். பைபிளின் படி, எருசலேமில் நடக்கவேண்டிய தீர்க்கதரிசனங்கள் இன்னும் அனேகம் இருக்கின்றன.

இவைகள் ஒரு பக்கம் இருந்தாலும், புதிய ஏற்பாட்டின் படி, திருச்சபையும், அரசும் வெவ்வேறு ஆகும்.

கிறிஸ்தவர்களுக்கு எருசலேம் ஒரு முக்கிய நகரமாக இருந்தாலும், ஆவிக்குரியவர்களாக இருந்து, இன்றைய எருசலேம் நகரத்திற்காக போராட்டங்களில் ஈடுபடுவது போன்றவைகளை செய்யக்கூடாது.

எருசலேமின் அமைதிக்காக ஜெபிக்கவேண்டியது கிறிஸ்தவர்களின் கடமையாகும். இயேசுவின் வருகைக்காக எதிர்ப்பார்த்துக்கொண்டும், பரிசுத்தமாக நம்மை காத்துக்கொண்டும் அவருக்காக காத்திருப்பதுமே கிறிஸ்தவர்கள் செய்யவேண்டியவைகளாகும்.



**கேள்வி 32:** கிறிஸ்தவர்கள் ஏன் மேலை நாடு உடைகளை அணிகிறார்கள், ஏன் இந்திய உடைகளை அணிவதில்லை?

**பதில் 32:** இந்திய கலாச்சார உடைகளை கிறிஸ்தவர்கள் அணிவதில்லையென்று யார் சொன்னார்கள்? இது தவறான வாதமாகும். ஒரு சிலர் அணியும் உடைகளை கவனித்துவிட்டு, எல்லோரையும் குற்றப்படுத்துவது சரியில்லை. இன்றைய 21ம் நூற்றாண்டில், இந்திய உடைகள் என்றால் எவைகள் என்று அடையாளம் காட்டமுடியுமா?

பைபிள் கிறிஸ்தவர்களுக்கு "தகுதியான உடைகளை" அணிய கட்டளையிடுகிறது. கீழ்கண்ட வசனங்கள் பெண்களுக்கு சொல்லப்பட்டாலும், அவைகள் ஆண்களுக்கும் பொருந்தும். இந்திய உடைகளோ, மேலை நாட்டு உடைகளோ 'நாகரீகமான உடைகளை' அணிய பைபிள் சொல்கிறது.

I தீமோத்தேயு 2:9, 10

9. ஸ்திரீகளும் மயிரைப் பின்னுதலினாலாவது, பொன்னினாலாவது, முத்துக்களினாலாவது, விலையேறப்பெற்ற வஸ்திரத்தினாலாவது தங்களை அலங்கரியாமல்,

10. தகுதியான வஸ்திரத்தினாலும், நாணத்தினாலும், தெளிந்த புத்தியினாலும், தேவபக்தியுள்ளவர்களென்று சொல்லிக்கொள்ளுகிற ஸ்திரீகளுக்கு ஏற்றபடியே நற்கிரியைகளினாலும், தங்களை அலங்கரிக்கவேண்டும்.

கிறிஸ்தவர்களிலும் சிலர் திரைப்படங்களைப் பார்த்துவிட்டு, அவைகளில் பெண்கள், ஆண்கள் உடைகளை அணிவது போன்று "அநாகரீகமான" உடைகளை அணிவது கிறிஸ்தவர்களுக்கு ஏற்றதல்ல.

உடைகள் விஷயத்தில் மட்டுமல்ல, வேறு எந்த ஒரு பழக்கமானாலும் சரி, அதைச் செய்வது 'நமக்கு தகுதியாக இருக்குமா? என்று பார்த்து செயல்படவேண்டும்.

**I கொரிந்தியர் 6:12** எல்லாவற்றையும் அநுபவிக்க எனக்கு அதிகாரமுண்டு, ஆகிலும் எல்லாம் தகுதியாயிராது; எல்லாவற்றையும் அநுபவிக்க எனக்கு அதிகாரமுண்டு, ஆகிலும் நான் ஒன்றிற்கும் அடிமைப்படமாட்டேன்.

**I கொரிந்தியர் 10:23** எல்லாவற்றையும் அநுபவிக்க எனக்கு அதிகாரமுண்டு, ஆகிலும் எல்லாம் தகுதியாயிராது; எல்லாவற்றையும் அநுபவிக்க எனக்கு அதிகாரமுண்டு, ஆகிலும் எல்லாம் பக்திவிருத்தியை உண்டாக்காது.

பொதுவாக இஸ்லாம் "மக்களை கட்டாயப்படுத்தியாவது ஒரு காரியத்தை நிறைவேற்ற முயற்சி எடுக்கும்", ஆனால் கிறிஸ்தவம் "அன்பால் சொல்லிக் கொடுக்கும், கட்டாயப்படுத்தி செய்யச் சொல்லாது". இதனால் சிலர் தங்கள் தகுதிக்கு ஏற்காத உடைகளை அணிந்து சபைக்கு வருவதும், வேலை செய்யும் இடங்களிலும் மற்றவர்கள் இடறிவிழும்படி அணிவதும் செய்கிறார்கள். இவைகளை ஆண்களும், பெண்களும் செய்கிறார்கள், இவைகள் தவறான செயல்களாகும். தங்களுடைய சுதந்திரத்தை தவறாக பயன்படுத்துகிறவர்கள். சிலர் பைபிளுக்கு எதிராக நடந்துக்கொண்டால், அதற்கு கிறிஸ்தவத்தை குறை கூற முடியாது.

நம் திருச்சபைகளில் ஒரு பெண் தன் உள்ளாடைகள் தெரியும் வகையில் மிகவும் மெல்லிய மேலாடைகளை அணிந்துக்கொண்டும், முழங்காலுக்கு மேலே தெரியும் வண்ணம் குட்டை பாவாடையை போட்டுக்கொண்டு வந்து, சபையின் பரிசுத்தத்தை கெடுத்தால், யாரைக் குற்றப்படுத்துவது? அப்பெண்ணின் பெற்றோர்களையும், அந்த சபையின் போதகரைத்தானே!

மற்றவர்களின் பரிசுத்தத்திற்கும், விசுவாசத்திற்கும் இடறல் உண்டாக்கும் படி நாம் வாழக்கூடாது என்று இயேசு கூறியுள்ளாரே!

மத்தேயு 18:6 என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிற இந்தச் சிறியரில் ஒருவனுக்கு இடறல் உண்டாக்குகிறவன் எவனோ, அவனுடைய கழுத்தில் ஏந்திரக்கல்லைக் கட்டி, சமுத்திரத்தின் ஆழத்திலே அவனை அமிழ்த்துகிறது அவனுக்கு நலமாயிருக்கும்.

என் உடல், என் உடைகள், நான் எப்படியாவது அணிவேன் என்று இன்றைய சினிமா நடிகை நடிகர்கள் வேண்டுமானால் சொல்லலாம், ஆனால் கிறிஸ்தவர்கள் இப்படி சொல்லக்கூடாது.



**கேள்வி 33:** பழைய ஏற்பாட்டு நபர்கள் பலதார திருமணம் புரிந்திருப்பதினால், ஏன் கிறிஸ்தவர்களும் பலதார திருமணம் புரியக்கூடாது?

**பதில் 33:** பலதாரமணம் ஆரம்ப காலத்தில் அனுமதிக்கப்பட்டு இருந்தது. இதனால் அது ஒரு நல்ல சமுதாய பழக்கம் என்று பைபிள் எங்கும் சொல்லவில்லை. பழைய ஏற்பாட்டில் பல பேர் பலதாரமணம் புரிந்தவர்களாக இருந்தார்கள், உதாரணத்திற்கு ஆபிரகாம்,யாக்கோபு, தாவீது, சாலொமோன் என்றுச் சொல்லலாம். அப்படியானால், ஒரு காலத்தில் (பழைய ஏற்பாட்டில்) அனுமதிக்கப்பட்டிருந்த ஒரு பழக்கம் எப்படி புதிய ஏற்பாட்டில் மாறிவிட்டது என்ற கேள்வி எழும். இதற்கு சில காரணங்கள் உள்ளன.

மனித சமுதாயம் சரியாக வளராத பழமையான காலக்கட்டத்தில், அதாவது இன்றிலிருந்து 4000 ஆண்டுகளுக்கு முன்பு என்று எடுத்துக்கொண்டால், மனித சமுதாயம் 'ஆண்களை தலைவர்களாக கொண்ட சமுதாயமாக' இருந்தது. பெண்களுக்கு படிப்போ, பாதுகாப்போ இல்லாத காலமாக இருந்தது. ஒரு பெண் எப்போதும் ஒரு ஆண் துணையுடன் இருக்கவேண்டி இருந்தது. முதலாவதாக தன் தந்தையின் மீதும், அதன் பிறகு சகோதரர்கள் மீதும் சார்ந்து வாழவேண்டும், திருமணமாகிவிட்ட பிறகு கணவன் மீது சார்ந்து வாழவேண்டி இருந்தது.

அக்காலத்தில் அனாதையாகிவிட்டால், அதாவது தந்தை, சகோதரன் மற்றும் கணவன் என்று எந்த ஒரு ஆணின் துணையில்லாமல் இருந்தால், அவளவு வாழ்வாதாரத்திற்கு வழியும் இல்லாமல் போய்விடும். யாராவது ஒருவருக்கு அடிமையாகவேண்டி வரும், அல்லது விபச்சாரம் போன்ற செயல்களிள் ஈடுபடவேண்டி வரும். எனவே, பலதார மணம் இருந்தால், ஒரு ஆண் ஒன்றுக்கும் மேற்பட்ட பெண்களை திருமணம் செய்வான், அந்த அனாதை பெண்களுக்கு தேவையான உணவு, உடை, இருப்பிடம் மற்றும் பாதுகாப்பு கிடைத்துவிடும். ஒரு ஆணின் துணை இருப்பதினால், மற்ற ஆண்கள் தவறாக அப்பெண்ணை பார்க்க வாய்ப்பு இல்லை. இது ஒரு காரணம் ஆகும். மேலும் ஆதி காலத்தில் மக்கள் வேகமாக பெருகி பூமியை நிறப்புவதற்கு, பலதாரமணம் தேவையாக இருந்தது.

ஆதிகாலத்தில் பலதார மணத்தை தேவன் அங்கீகரிக்கவும் இல்லை, அதை தடை செய்யவும் இல்லை. ஆனால், அதனால் உண்டாகும் பிரச்சனைகளை தன் வேதம்

முழுவதும் சொல்லிக்கொண்டே வந்தார், காலம் செல்லச் செல்ல அவைகளைப் எச்சரித்து வந்தார்.

கடைசியாக, மக்கள் முன்னேறி மற்றும் பூமியை நிறப்பிய பிறகு, தன் உண்மையான நோக்கத்தை தெள்ளத்தெளிவாகச் சொல்லி தடை விதித்தார்.

ஆரம்பத்திலிருந்து பலதாரம் பற்றி பைபிளின் நிலைப்பாட்டை சுருக்கமாக காண்போம்:

- ஆதியிலிருந்து தேவன் "ஒருத்தனுக்கு ஒருத்தி" என்ற கோட்பாட்டை திருமணத்திற்கு அடிப்படையாக கொண்டு இருந்தார் (ஆதி 1:27; 2:21-25).
- ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாடு மனித ஆரம்பத்திலிருந்து கடைபிடிக்கப்பட்டு வந்தது , பாவம் அதனை முரிக்கும் வரைக்கும் (ஆதி 4:1).
- மோசேயின் சட்டம் "ஆனேக ஸ்திரிகளை திருமணம் செய்யவேண்டாம்" என்று தெளிவாகச் சொல்கிறது. (உபா 17:17)
- பலதாரமணத்தைப் பற்றிய எச்சரிக்கையை மறுபடியும் 1 இராஜாக்கள் 11:1,2 வசனங்கள் எடுத்துக்கூறுகின்றன. அனேக திருமணங்கள் மூலமாக எப்படி தேவனுக்கு எதிரான பாவத்தை சாலொமோன் செய்தார் என்று இந்த அதிகாரத்தில் தெளிவாக கூறப்பட்டுள்ளது.
- இயேசுவும் "ஒருவனுக்கு ஒருத்தி" என்ற ஆதியிலிருந்த அமைப்பை மறுபடியும் மத்தேயு 19:4ல் ஞாபகப்படுத்துகிறார்.
- புதிய ஏற்பாடு, "ஆகிலும் வேசித்தனம் இராதபடிக்கு அவனவன் தன் சொந்த மனைவியையும், அவனவள் தன் சொந்தப் புருஷனையும் உடையவர்களாயிருக்கவேண்டும்" என்று கட்டளையிடுகிறது (1 கொரிந்தியர் 7:2)
- மேலும் சபை ஊழியர்கள் ஒரே மனைவியை உடையவர்களாக இருக்கவேண்டும் என்று மறுபடியும் புதிய ஏற்பாடு கட்டளையிடுகிறது (1 தீமோத்தேயு 3:,2,12). இது சபை ஊழியர்களுக்கு மட்டுமல்ல, ஒவ்வொரு விசுவாசிக்கும் இந்த கட்டளை பொருந்தும்.

பழைய ஏற்பாட்டுக் காலத்தில் வாழ்ந்த நபர்கள் பல திருமணங்களை செய்தார்கள், அதை தேவன் கட்டளையிட்டதினால் தான் செய்தார் என்று சொல்லமுடியாது. பழைய எற்பாட்டுக் காலத்தில் பலதாரமணத்தை தேவன் ஆசீர்வதிக்கவில்லை, அதற்கு பதிலாக இதனால் விளையும் தீமைகளை ஆங்காங்கே குறிப்பிட்டு எச்சரித்துள்ளார். ஆபிராகாமின் குடும்பத்தில் நிலவிய பிரச்சனை(சாராள், ஆகார், இஸ்மவேல், ஈசாக்கு), யோசேப்புவின் வாழ்வில் நடந்த காரியங்கள் (தன் சகோதரர்களால் பட்ட பாடுகள்), சாலொமோனின் பாவம் என்று அனேக இடங்களில் பலதாரமண குடும்பத்தில் நிலவும் பிரச்சனைகளை தேவன் வெளிக்காட்ட தவறவில்லை.

பழைய ஏற்பாட்டின் நிகழ்ச்சிகள் நமக்கு எச்சரிக்கையாகவும், படிப்பினையாகவும் எழுதப்பட்டுள்ளது. மேலும், ஒரு கிறிஸ்தவன் இயேசு

போதித்த போதனையில் வாழுவதினால், அவன் பலதார மணத்தை பின்பற்றுவதில்லை.

இயேசு வந்த பிறகு, தேவனின் மனதில் இருந்ததை அவர் உடைத்து போட்டுவிட்டார்.

**மத்தேயு 19:4-6**

4. அவர்களுக்கு அவர் பிரதியுத்தரமாக: ஆதியிலே மனுஷரை உண்டாக்கினவர் அவர்களை ஆணும் பெண்ணுமாக உண்டாக்கினார் என்பதையும்,

5. இதினிமித்தம் புருஷனானவன் தன் தகப்பனையும் தாயையும் விட்டுத் தன் மனைவியோடே இசைந்திருப்பான்; **அவர்கள் இருவரும் ஒரே மாம்சமாயிருப்பார்கள்** என்று அவர் சொன்னதையும், நீங்கள் வாசிக்கவில்லையா?

6. இப்படி இருக்கிறபடியால், அவர்கள் இருவராயிராமல், ஒரே மாம்சமாயிருக்கிறார்கள்; ஆகையால், தேவன் இணைத்ததை மனுஷன் பிரிக்காதிருக்கக்கடவன் என்றார்.

9. ஆதலால், எவனாகிலும் தன் மனைவி வேசித்தனஞ்செய்ததினிமித்தமேயன்றி, அவளைத் தள்ளிவிட்டு வேறொருத்தியை விவாகம் பண்ணினால், அவன் விபசாரம் பண்ணுகிறவனாயிருப்பான்; தள்ளிவிடப்பட்டவளை விவாகம் பண்ணுகிறவனும் விபசாரஞ்செய்கிறவனாயிருப்பான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

எனவே, கிறிஸ்தவர்கள் பலதார மணம் புரிவது வேதத்திற்கு எதிரானதாகும்.



**கேள்வி 34:** நான் இயேசுவை ஏற்றுக்கொள்வதற்கு முன்பு, குர்ஆனை படித்துக் கொண்டு இருந்தேன். இப்போது நான் பைபிளை படிப்பதினால், குர்ஆனை படிக்கக்கூடாதா? படித்தால் குற்றமாகுமா?

**பதில் 34:** பைபிளை படிக்கும் நீங்கள் குர்-ஆனை படிப்பதினால் எந்த பிரச்சனையும் இல்லை, அது குற்றமும் ஆகாது. ஆனால், குர்-ஆனை படிக்கவேண்டிய அவசியம் உண்டா இல்லையா? என்பதை நீங்கள் புரிந்துக்கொள்ளவேண்டும்.

**குர்-ஆனை படிப்பது என்றால் என்ன?**

நீங்கள் ''குர்-ஆனை படித்துக்கொண்டு இருந்தீர்கள்'' என்றுச் சொல்கிறீர்கள், இப்போது கேள்வி என்னவென்றால், நீங்கள் குர்-ஆனை எந்த மொழியில் படித்துக்கொண்டு இருந்தீர்கள்? என்பதாகும்.

நீங்கள் இதற்கு முன்பு, அரபியில் குர்-ஆனை படித்துக்கொண்டு இருந்திருந்தால், இப்போது அதனை அரபியில் படிப்பதினால் எந்த ஒரு நன்மையும் இல்லை. குர்-ஆனை புரிந்துக்கொள்ளாமல் அரபியில் படிப்பதினால் என்ன நன்மை உங்களுக்கு கிடைத்தது? அதே போல, இப்போதும் அதனை அரபியில் படிப்பதினால் என்ன நன்மை? எனவே, இரட்சிக்கப்பட்ட ஒருவர், தனக்கு புரியாத மொழியில் குர்-ஆனை படிப்பதினால் ஒரு நன்மையும் அவருக்கு உண்டாகாது. குர்-ஆனை புரிந்துக்கொள்ளாமல் அரபியில் படிப்பனும், இந்து கோயில்களில் பூசாரி சமஸ்கிருத மொழியில் மந்திரங்கள் சொல்லும் போது, பக்தி ததும்ப புரியாமல் கேட்டுக்கொண்டு இருப்பனும் சமமே! இருவருக்கும் காதுவரைக்கும் எட்டிய சத்தங்கள் மூளைக்கு எட்டுவதில்லை.

நமக்கு அரபி அல்லது சமஸ்கிருதம் மொழி புரியாமல் இருக்கும் போது, இம்மொழிகளில் ஓதப்படும் மந்திரங்கள் நம் காதுகளை எட்டினால், அவைகள் வார்த்தைகள் அல்ல, அவைகள் வெறும் சத்தங்கள் தான்.

**குர்-ஆனை தமிழில் படித்தல்:**

இதுவரை அரபியில் மட்டுமே புரியாமல் குர்-ஆனை படித்த நீங்கள், இப்போது தமிழில் படிக்க விரும்பினால், அது வரவேற்கத்தக்கது. வேதம் என்ற நிலையில் குர்-ஆன் இல்லை. இருந்தாலும், அதில் என்ன சொல்லியிருக்கிறது என்ற அறிவைப் பெறுவதற்காக நீங்கள் குர்-ஆனை தமிழில் படிக்கலாம், இது குற்றமாகாது. குர்-ஆன் என்பது மட்டுமல்ல, மதசார்பற்ற புத்தகங்களையும், நாத்தீகர்கள் எழுதும் புத்தகங்களையும் அறிவு பெருக்கத்துக்காக படிக்கலாம், இதில் தவறில்லை. நான் கிறிஸ்தவ-இஸ்லாமிய கட்டுரைகளுக்காக, அடிக்கடி குர்-ஆனை படிக்கிறேன்.

**குர்-ஆனை தமிழில் படிப்பதின் அவசியம்:**

இஸ்லாமிய பின்னணியிலிருந்து வந்து கிறிஸ்தவத்தை நாம் பின்பற்றுவதினால், குர்-ஆனின் போதனைகள் பற்றி ஓரளவிற்கு தெரிந்து வைத்துக்கொண்டு இருக்கவேண்டும். பல நூறு முறை நாம் அரபியில் குர்-ஆனை படித்திருந்தாலும், இயேசுவை பின்பற்றுகிறவனாக மாறிய பிறகு, ஒரு முறையாவது குர்-ஆனை தமிழில் படிக்கவேண்டும், புரிந்துக்கொள்ளவேண்டும் என்று நான் சொல்லுவேன்.

சில வேளைகளில் முஸ்லிம்கள் நம்மிடம் பேசுவார்கள், விவாதிப்பார்கள், நமக்கு குர்-ஆன் பற்றி ஒன்றுமே தெரியாது என்றுச் சொல்வார்கள். இவர்களுக்கு சரியான பதிலைக் கொடுத்து அவர்களுக்கு சுவிசேஷம் சொல்லவேண்டுமென்றால், நாம் குர்-ஆனை தமிழிலும் படித்து அதனை புரிந்துக்கொள்ளவேண்டும்.

புண்ணியம் கிடைக்கும், நன்மை கிடைக்கும் என்று நம்பி யாரும் குர்-ஆனை படிக்கத் தேவையில்லை. மக்களை இஸ்லாமின் கட்டுப்பாட்டுக்குள்

வைத்துக்கொள்வதற்காக இப்படிப்பட்ட மூட நம்பிக்கைகளை இஸ்லாம் முன்மொழிகின்றது. புரியாமல் படித்தாலும் நன்மைகள் வரும் என்றுச் சொல்வது அறிவுடமையன்று.

**சுருக்கம்:**

1) குர்-ஆனை அரபியில் படிப்பதினால் எந்த நன்மையும் இல்லை.

2) குர்-ஆனை தமிழில் படிப்பதினால், அதன் போதனைகளை தெரிந்துக்கொண்டு, இஸ்லாம் பற்றிய அறிவை பெருக்கிக் கொள்ளமுடியும்.

3) குர்-ஆனை அரபியிலோ தமிழிலோ படிப்பதினால், புண்ணியமோ, நன்மையோ இல்லை. புண்ணியம் கிடைக்கும் என்றுச் சொல்வது முடநம்பிக்கையாகும். பைபிளையும் எபிரேய மற்றும் கிரேக்க மொழியில் புரிந்துக்கொள்ளாமல் படித்தால் புண்ணியம் என்றுச் சொன்னால், இதையும் நம்பாதீர்கள்.

4) முஸ்லிம் பின்னணியிலிருந்து வந்தவர்களுக்கு, குர்-ஆன் பற்றிய குறைந்தபட்ச அறிவு தேவைப்படுகின்றது, இது முஸ்லிம்களோடு உரையாடும் போது பயன்படும்.

5) அறிவைப் பொருத்தமட்டில், பார்க்காதே! தொடாதே! என்று கிறிஸ்தவம் சொல்வதில்லை. பார், தொடு ஆனால் புரிந்துக்கொள் என்று தான் சொல்கிறது. எல்லாவற்றையும் சோதித்துப் பார்த்து, நலமானதைப் பிடித்துக் கொள்ளுங்கள்.(1 தெச 5:21)

6) நீங்கள் ஒரு பாஸ்டராக இருப்பீர்களானால், நிச்சயம் குர்-ஆனையும், அதன் விளக்கவுரைகளையும் படித்து கற்றுக் கொள்ளவேண்டும். இது நற்செய்தி அறிவிப்பதற்கு பயன்படும்.

7) பைபிளையும் குர்-ஆனையும் ஒப்பிட்டு பார்க்க விரும்புகிறவர்கள் குர்-ஆனை படிக்கலாம். பைபிளின் நிகழ்ச்சிகள் எப்படி குர்-ஆனில் மறுபதிவு செய்யப்பட்டுள்ளது என்பதை படித்து ஒப்பிட்டுப்பார்த்துக் கொள்ளலாம்.

நான் கிறிஸ்தவத்தை ஏற்றுகொண்ட பிறகு, புதிய ஏற்பாட்டை நன்கு படித்து அறிந்துக்கொண்ட பிறகு நான் செய்த முதல் காரியம், என் வீட்டில் தமிழ் குர்-ஆனை கொண்டு வந்தேன். அது வரை என் வீட்டில், அரபி குர்-ஆன் மட்டுமே இருந்தது. சென்னைக்கு என் உறவினர் ஒருவர் சென்ற போது, தமிழ் குர்-ஆன் ஒன்றை வாங்கிக்கொண்டு வாருங்கள் என்று கேட்டுக்கொண்டேன், அவரும், முஹம்மது ஜான் குர்-ஆன் தமிழாக்கத்தை வாங்கிக்கொண்டு வந்து எனக்குக் கொடுத்தார். என் கட்டுரைகளில் நான் முஹம்மது ஜான் தமிழாக்கத்தை அதிகமாக பயன்படுத்த இதுவும் ஒரு காரணம். அதன் பிறகு அதனை நான்

தொடர்ந்து படித்துக் கொண்டு இருக்கிறேன், இன்றுவரை அந்த தமிழாக்கம் என்னிடம் உள்ளது.

எனவே, ஒரு புதினத்தை படிப்பது போன்று கிறிஸ்தவர்கள் குர்-ஆனை தமிழில் படிக்கலாம், இதில் தவறு இல்லை.



**கேள்வி 35:** நான் கிறிஸ்தவத்தை ஏற்றுக்கொண்டு, ஞானஸ்நானம் பெற்று சபைக்கு வந்துக்கொண்டு இருந்து, அதே நேரத்தில் மசூதியில் நமாஜூம் செய்தால், இதனால் ஏதாவது பாதிப்பு உண்டாகுமா?

**பதில் 35:** ஒரு கிறிஸ்தவர் தன் ஞானத்தை வளர்த்துக் கொள்வதற்காக, இஸ்லாமிய நூல்களையும் குர்ஆனையும் தமிழில் படிக்கலாம் என்பதை மேலே உள்ள பதிலில் விளக்கினேன். ஆனால், இந்த கேள்வியில் கேட்டது, வெறும் குர்ஆன் படிப்பது பற்றி அல்ல, மசூதியில் சென்று , நமாஜ் என்றுச் சொல்லக்கூடிய தொழுகை நடத்துவதாகும்.

**ஒருவர் இஸ்லாமிய தொழுகை செய்தால், அவர் கீழ்கண்டவைகளை அறிக்கையிடுகிறார்:**

1) நேரடியாக அல்லாஹ் இறைவன் என்றுச் சொல்கிறார் (மறைமுகமாக யெகோவா தேவனை புறக்கணிக்கின்றார்).

2) நேரடியாக முஹம்மது அல்லாஹ்வின் தீர்க்கதரிசி என்று அறிக்கையிடுகின்றார் (மறைமுகமாக யெகோவா தேவனை புறக்கணிக்கின்றார், அதாவது முஹம்மது யெகோவா தேவனின் தீர்க்கதரிசி அல்ல)

3) இயேசுவின் தெய்வீகத்தன்மையை புறக்கணிக்கின்றார்

4) இயேசு கொடுத்த இரட்சிப்பையும், கிருபையையும் புறக்கணிக்கின்றார்

கிறிஸ்தவமும் இஸ்லாமும் ஒன்றையொன்று அடிப்படை கோட்பாடு அளவில் எதிர்க்கின்றன. கிரியை மூலமாக என் நீதியை நிலைநாட்டுவேன் என்று நாம் சொல்லும்போது, கிருபை மூலம் கிடைக்கும் இரட்சிப்பை நாம் வேண்டாம் என்று சொல்கிறோம் என்று பொருள்.

அல்லாஹ் என்பவன் தெய்வமில்லை, முஹம்மது என்பவர் யெகோவா தேவன் அனுப்பிய நபி இல்லை என்று அறிக்கையிட்டுவிட்ட பிறகு எப்படி "லாயிலாஹா இல்லல்லாஹ் முஹம்மதன் ரஸூலுல்லாஹ்" என்று சொல்லமுடியும்? விக்கிரக வணக்கம் வேண்டாம் என்று ஒதுக்கிவிட்ட பிறகு எப்படி சிலைகளுக்கு முன்பாக சாஸ்டாங்கமாக விழுந்து தொழமுடியும்?

**தேவனுடைய ஆலயத்துக்கும் விக்கிரகங்களுக்கும் சம்பந்தமேது?**

II கொரிந்தியர் 6:13-18

13. ஆதலால் அதற்குப் பதிலீடாக நீங்களும் பூரிப்பாகுங்களென்று, பிள்ளைகளுக்குச் சொல்லுகிறதுபோல, உங்களுக்குச்சொல்லுகிறேன்.

14. அந்நிய நுகத்திலே அவிசுவாசிகளுடன் பிணைக்கப்படாதிருப்பீர்களாக; நீதிக்கும் அநீதிக்கும் சம்பந்தமேது? ஒளிக்கும் இருளுக்கும் ஐக்கியமேது? 15.
கிறிஸ்துவுக்கும் பேலியாளுக்கும் இசைவேது? அவிசுவாசியுடனே விசுவாசிக்குப் பங்கேது? 16.
தேவனுடைய ஆலயத்துக்கும் விக்கிரகங்களுக்கும் சம்பந்தமேது? நான் அவர்களுக்குள்ளே வாசம்பண்ணி, அவர்களுக்குள்ளே உலாவி அவர்கள் தேவனாயிருப்பேன், அவர்கள் என் ஜனங்களாயிருப்பார்கள் என்று, தேவன் சொன்னபடி, நீங்கள் ஜீவனுள்ள தேவனுடைய ஆலயமாயிருக்கிறீர்களே. 17.
ஆனபடியால், நீங்கள் அவர்கள் நடுவிலிருந்து புறப்பட்டுப் பிரிந்துபோய், அசுத்தமானவைகளைத் தொடாதிருங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார். 18.
அப்போது, நான் உங்களை ஏற்றுக்கொண்டு, உங்களுக்குப் பிதாவாயிருப்பேன், நீங்கள் எனக்குக் குமாரரும் குமாரத்திகளுமாயிருப்பீர்களென்று சர்வவல்லமையுள்ள கர்த்தர் சொல்லுகிறார்.

தொழுதுக்கொண்டால் மெய்யான தேவனை தொழுதுக்கொள்ளவேண்டும், அல்லது பொய்யான தெய்வமாகிய அல்லாஹ்வை தொழுதுக் கொள்ளவேண்டும். இரண்டையும் ஒரே நேரத்தில் செய்யமுடியாது.



**கேள்வி 36:** உன் அயலானை நேசி என்று இயேசு கட்டளையிட்டுள்ளார். மத நல்லிணக்கத்திற்காக, என் சபையை முஸ்லிம்கள் தங்கள் இறைவனை தொழுது கொள்ள நான் ஏன் அனுமதிக்கக் கூடாது?

**பதில் 36:** மதநல்லிணக்கத்தை உண்டாக்குவதற்கு, மேலை நாடுகளில் சில கிறிஸ்தவ போதகர்கள் தங்கள் திருச்சபையை மாற்று மத அன்பர்கள் தங்கள் இறைவனை தொழுது கொள்ள அனுமதிக்கிறார்கள். முக்கியமாக, முஸ்லிம்கள் அல்லாஹ்வைத் தொழுது கொள்வதற்கு தங்கள் திருச்சபையை சில மணி நேரங்கள் விட்டுக் கொடுக்கிறார்கள். இது சரியான செயலா? அல்லது பரிசுத்த வேதாகமத்தின் படி இது அனுமதிக்கப்படாத செயலா?

இது மத நல்லிணக்கமில்லை, இது அறியாமை ஆகும். இயேசு மத நல்லிணக்கத்தை பேணும் படி சொல்லவில்லை, அவர் மனித நல்லிணக்கத்தை பேணும்படி கட்டளையிட்டார். நம் அயலானை நாம் நேசிப்பதற்கும், அந்த அயலான் வணங்கும் தெய்வத்தை அவன் தொழுதுக்கொள்ள நம் திருச்சபையில் இடமளிப்பதற்கும் பெரிய வித்தியாசம் உள்ளது.

கிறிஸ்த சபையில் மாற்றுமத அன்பர்கள் தங்கள் வணக்க வழிபாடு செய்ய அனுமதிப்பது மிகவும் ஆபத்தான செயலாகும். இயேசு தன் சுய இரத்தம் சிந்தி சம்பாதித்த திருச்சபையில், அந்நிய தெய்வங்களை வணங்க இடம் தருவது, இயேசுவை அவமானப்படுத்துவதற்கு சமம், மற்றும் இயேசுவிற்கு நாம் செய்யும் நம்பிக்கை துரோகமாகும்.



**கேள்வி 37:** உன்னைப்போல உன் அயலானை நேசி என்று இயேசு கூறினாரே, இதன் அர்த்தமென்ன? நாம் மாற்றுமத நண்பர்களை அதாவது முஸ்லிம்களை, இந்துக்களை நேசிக்கக்கூடாதா?

**பதில் 37:** உன் அயலானை நேசி என்று இயேசு சொன்னது, உன் அயலகத்தாராகிய முஸ்லிம்கள், இந்துக்கள் பசியாக இருந்தால் அவர்களுக்கு உணவு கொடுங்கள். அவர்கள் வியாதியாக இருந்தால், அவர்களை சந்தித்து ஆறுதல் சொல்லி, உதவி புரியுங்கள். அவர்களுக்கு உடை தேவையென்றால் அதனை கொடுத்து உதவுங்கள் என்று பொருள். இப்படி நம் அயலானை நேசிப்பதைத்தான் இயேசு கூறினாரே தவிர, அவனுடைய மதத்தை நேசிப்பதைப் பற்றி இயேசு கூறவில்லை. அவனுடைய பழக்க வழக்கங்களை பின்பற்றும்படிச் சொல்லவில்லை. இந்துக்களை நேசியுங்கள் என்றுச் சொன்னால், அவர்கள் பின்பற்றும் பழக்கங்களாகிய வாஸ்து பார்ப்பது, ஜாதகம் பார்ப்பது, 100 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த 'கணவன் மரித்தால், அவன் மனைவியையும் அவனோடு கொளுத்தும்' இந்துக்களின் பழக்கங்களை பின்பற்றும் படி அல்ல.

எம்மதமும் சம்மதம் என்ற கோட்பாட்டை கிறிஸ்தவம் ஏற்பதில்லை. அதற்கு பதிலாக, எந்த மதத்தை சார்ந்தவராக இருந்தாலும் சரி அவருக்கு உதவி புரிவதை ஊக்குவிக்கிறது.



**கேள்வி 38:** இயற்கை சீற்றங்களின் காலங்களில் மாற்றுமத அன்பர்களுக்கு என் திருச்சபையை திறந்து அவர்கள் தங்க இடம் தரலாமா?

**பதில் 38:** இயற்கை சீற்றங்களாகிய மழை, வெள்ளம், புயல் போன்ற காலங்களில் நம் திருச்சபைகளை மற்ற மக்களுக்காக கட்டாயமாக திறந்து கொடுக்கவேண்டும்.

மனிதன் எந்த மதத்தை சார்ந்தவனாக இருந்தாலும் சரி, அவனுக்கு ஆபத்து என்றால், உதவி என்று ஒன்று தேவைப்பட்டால், அதற்காக உங்கள் திருச்சபையை திறந்து கொடுங்கள், அங்கே அவர்கள் தங்கட்டும். மருத்துவ உதவியும் தேவைப்பட்டால் செய்யுங்கள்.

அவனுக்கு பசியென்றால் உணவு வழங்குங்கள். நீங்கள் இரண்டு வேளை பட்டினியாக இருக்கநேரிட்டாலும், அவன் பசியை போக்குங்கள், இது தான் இயேசு காட்டிய வழி.

அவனுக்கு உடுக்க உடை இல்லையென்றால், உங்களிடம் இருப்பதை கொடுங்கள். இயேசுவின் கட்டளையின் படி, நம்மிடம் இரண்டே உடைகள் இருந்தாலும், அதில் ஒன்றை இல்லாதவருக்கு கொடுக்கவேண்டும், அதாவது நம்மிடம் உள்ள உடைகளில் 50% ஐ கொடுக்கும் படி இயேசு கட்டளையிட்டார்.

சுருக்கமாக சொல்வதென்றால், நம் அயலான் தேவையில் இருந்தால், அவனுக்கு இருக்க இடமும், உண்ண உணவும், உடுத்த உடையும் கொடுப்பது ஒவ்வொரு கிறிஸ்தவனின் கடமை, முக்கியமாக திருச்சபையை நடத்தும் போதகருக்கு அதிகபடியான கடமையுள்ளது.



**கேள்வி 39:** தேவையில் உள்ளவன் தங்குவதற்கு திருச்சபையை திறந்துக்கொடுத்து உதவிய நாம், ஏன் வெள்ளிக்கிழமை அன்று தன் இறைவனை அவன் தொழுதுக்கொள்ள அனுமதி அளிக்கக்கூடாது?

**பதில் 39:** இந்த இடத்தில் தான் கிறிஸ்தவர்களாகிய நாம் அனேக முறை தவறு செய்கிறோம். மனிதனை நேசிப்பது பற்றி தான் நான் மேலே குறிப்பிட்டேன், மதத்தை நேசிப்பது பற்றியல்ல.

உன்னைப்போல் உன் அயலானை நேசி என்று இயேசு சொன்ன இரண்டாவது கட்டளையை நாம் பின்பற்றுவதற்கு முன்பாக, இயேசுவின் முதலாம் கட்டளையை பின்பற்றவேண்டும்.

மத்தேயு 22; 37-40

37. இயேசு அவனை நோக்கி: **உன் தேவனாகிய கர்த்தரிடத்தில்** உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும் உன் முழு மனதோடும் **அன்புகூருவாயாக**;

38. இது முதலாம் பிரதான கற்பனை.

39. இதற்கு ஒப்பாயிருக்கிற இரண்டாம் கற்பனை என்னவென்றால், உன்னிடத்தில் நீ அன்புகூருவதுபோலப் **பிறனிடத்திலும் அன்புகூருவாயாக** என்பதே.

40. இவ்விரண்டு கற்பனைகளிலும் நியாயப்பிரமாணம் முழுமையும் தீர்க்கதரிசனங்களும் அடங்கியிருக்கிறது என்றார்.

தேவையில் உள்ள மனிதனுக்காக உங்கள் சபையை திறந்து கொடுங்கள், தவறில்லை. தேவைப்பட்டால் அந்த மனிதனின் உயிரைக் காக்க, தேவாலயத்தின் காணிக்கை பெட்டியில் விழும் அனைத்து காணிக்கையையும் செலவழியுங்கள் (பல ஆயிரங்கள், இலட்சங்கள் கூட இருக்கலாம்), இதுவும் தவறில்லை. ஆனால், பரிசுத்த தேவனை தொழுதுக்கொள்ளும் ஆலயத்தில், பொய்யான தெய்வங்களை தொழுதுக்கொள்ள அனுமதி அளிக்கவேண்டாம், இது வேதத்தின்படி தவறு, கர்த்தரை மறுதலிக்கும் செயல் ஆகும்.

உங்களுக்கு இன்னும் புரியவில்லையென்றால், இதை கவனியுங்கள். ஒரு உதவியற்ற முஸ்லிமின் உயிரைக் காக்க திருச்சபையை அடமானம் வைத்து, அல்லது விற்றுவிட்டு கூட நீங்கள் உதவுங்கள். ஆனால், அந்த சபையில் அவன் தன் இறைவனை தொழுதுக்கொள்ள அனுமதிக்கும் முட்டாள்தனத்தைச் செய்யாதிருங்கள்.

**தேவன் கொடுத்த 10 கட்டளைகளில் முதலாவது கட்டளை:**

யாத்திராகமம் 20: 3-4

3. என்னையன்றி உனக்கு **வேறே தேவர்கள் உண்டாயிருக்கவேண்டாம்**.

4. மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின்கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம்;

எனவே, அந்நிய தெய்வங்களை தொழுதுக்கொள்ள நம் திருச்சபையை கொடுக்கக்கூடாது. இது கொஞ்சம் கடினமான உபதேசம் தான், ஆனால் வேறு வழியில்லை, சத்தியத்தை சொல்லாமல் இருக்கக்கூடாதே.

இதுவரையில் சொல்லப்பட்டவைகளை கவனித்தால், மனித நல்லிணக்கத்தை பேணும்படி பைபிள் சொல்வதை கவனிக்கமுடியும், மதநல்லிணக்கத்தை அல்ல.



**கேள்வி 40:** ஒருவேளை நம் சபையை முஸ்லிம்களுக்கு தொழுகைக்காக திறந்துவிட்டால் என்ன தீமை உண்டாகிவிடும்?

**பதில் 40:** நீதிக்கும் அநீதிக்கும் சம்பந்தமேது? ஒளிக்கும் இருளுக்கும் ஐக்கியமேது? (II கொரிந்தியர் 6:14).

ஒரு கிறிஸ்தவ சபை போதகர் தன் சபையை மாற்று மத ஆராதனைகளுக்கு திறந்து கொடுக்கும் போது, அவர்:

1) அந்த அந்நிய மதம் கூட, கிறிஸ்தவம் போன்ற ஒரு மார்க்கம் தான் என்று ஒப்புக்கொள்கிறார் என்று அர்த்தம்.

2) தன் சபை விசுவாசிகள் தவறுவதற்கும், குழம்புவதற்கும் அவர் காரணமாக ஆகிவிடுகிறார்.

3) தேவன் தம் விரல்களால் எழுதிக்கொடுத்த 10 கட்டளைகளில் முதலாவது கட்டளையை மீறுகிறார் என்று பொருள்.

4) இயேசு கட்டளையிட்ட இரண்டு கட்டளைகளில் முதலாவது கட்டளையை மீறுகிறார் என்று அர்த்தம்.

5) நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாய் இருக்கிறேன் என்று இயேசு சொல்லியிருக்கும் போது, வேறு ஒரு வழியும் உண்டு என்றுச் சொல்லி, இயேசுவிற்கு எதிராக செயல்பட்டதற்கு சமமான செயலாகும்.

இப்படி சொல்லிக்கொண்டே போகலாம்.

மனிதனின் மதத்தைப் பார்க்காமல், மனித நல்லிணக்கத்தை பேணவே பைபிள் நமக்கு கட்டளையிடுகிறதே தவிர, 'மத நல்லிணக்கத்தைப் போண' அல்ல.



**கேள்வி 41:** சில திருச்சபைகளில் மதநல்லிணக்கத்திற்காக பகவத் கீதை மற்றும் குர்ஆன் போன்ற புத்தகங்களில் சில வசனங்கள் படிக்கப்பட்டதாக கேள்விப்படுகிறோமே! இவைகள் சரியான செயல்களா?

**பதில் 41:** இவைகள் எப்படி சரியான செயல்களாக இருக்கமுடியும்?

கிறிஸ்தவ திருச்சபைகளில் மதநல்லிணக்கத்திற்காக குர்ஆனை படிக்கவைப்பது, பகவத்கீதையை படிக்கவைப்பதெல்லாம், தவறான செயல்கள், அறியாமையின் உச்சக்கட்டங்கள். இப்படிப்பட்ட திருச்சபை போதகர்களுக்கு பைபிளும் தெரியாது, குர்ஆனும் தெரியாது, பகவத் கீதையும் தெரியாது.

**மனிதனை நேசி என்றுச் சொன்னால், அவன் மார்க்கத்தை ஏன் நேசிக்கிறீர்கள்?**

கிறிஸ்தவ ஊழியர் ரவி ஜகரியா அவர்கள் மிகவும் தெளிவாக இப்படி கூறுவார்: "மேலோட்டமாக பார்க்கும் போது, அனைத்து மதங்களும் ஒன்று போலவே தென்படும், ஆனால் அடிப்படை கோட்பாடுகளில் அவைகள் வித்தியாசமானவைகள், அவைகள் சமம் அல்ல".

**கிருஷ்ணன்:**

பகவத் கீதையில் கிருஷ்ணன், நான் தான் இறைவன், என்னால் அனைத்தும் படைக்கப்பட்டது என்று சொல்லும் போதே, அவர் மற்ற தெய்வங்கள் இல்லை என்று சொல்கிறார் என்று அர்த்தம்.

**அல்லாஹ்:**

லாயிலாஹ இல்லல்லாஹ் என்று குர்ஆன் சொல்லும் போதே, அதாவது "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை" என்று குர்ஆன் சொல்லும் போதே, மற்ற மார்க்கங்களை அது புறக்கணிக்கிறது என்று அர்த்தமாகின்றதல்லவா? இதுகூடவா நமக்கு புரியாது?

**இயேசு:**

நானே வழியும், சத்தியமும் ஜீவனுமாய் இருக்கிறேன், என்னையல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான் என்று இயேசு சொன்னபோதே, அவர் மற்ற மார்க்கங்களை புறக்கணிக்கிறார் என்று புரிகின்றதல்லவா?

உண்மை இப்படி இருக்க, ஒரு மார்க்கத்தை புறக்கணித்த வேதத்தை கொண்டு வந்து இன்னொரு மார்க்க ஆலயத்தில் வாசித்தால், என்ன அர்த்தம்? யாருடைய காதில் பூவைக்க பார்க்கிறார்கள் இவர்கள்?

**மத நல்லிணக்கம் நமக்கு தேவையில்லை, மனித நல்லிணக்கம் தான் தேவை.**

நான் முஸ்லிம்களை நேசிக்கிறேன் என்றுச் சொல்லி, அவன் அல்லாஹ்வை தொழுதுக்கொள்ள உன் திருச்சபையை திறந்து நீ கொடுத்தால், நீ கிறிஸ்தவனில்லை, நீ இயேசுவின் சீடனில்லை.

தேவைப்பட்டால், அந்த முஸ்லிமின் உயிரைக் காக்க அவனது அறுவை சிகிச்சைக்காக, உன் திருச்சபையை விற்று அவனுக்கு உதவி புரி. இயேசு உன் செயலைக் கண்டு மகிழ்வார். அவரது இரண்டாம் வருகையில் உங்களைப் பார்த்து, நான் வியாதியாய் இருந்தேன் என்னை பார்க்கவந்தீர்கள், உதவி செய்தீர்கள் என்று கூறி உங்களை மெச்சிக்கொள்வார். நான் எப்போது உங்களுக்கு உதவி செய்தேன் என்று நீங்கள் கேட்கும் போது, நீ அந்த முஸ்லிம் சகோதரனுக்குச் செய்தது எனக்கு செய்தது தான் என்று சொல்லுவார்.

கிறிஸ்தவ ஊழியர்களே! போதகர்களே! நன்றாக கவனியுங்கள், மனிதனுக்குச் செய்யும் உதவிக்கும், மத நல்லிணக்கம் என்றுச் சொல்லி செய்யும் உதவிக்கும் இடையே இமாலய அளவு வித்தியாசம் உள்ளது. இதனை புரிந்துக்கொண்டால் தான் நீங்கள் இயேசுவிற்காக உண்மையான ஊழியராக சேவை செய்யமுடியும்.



**கேள்வி 42:** இயேசுவைப்போன்று முஹம்மதுவும் ஒரு தீர்க்கதரிசி என்பதால், ஏன் கிறிஸ்தவர்கள் முஹம்மது நபியை பின்பற்றுவதில்லை?

**பதில் 42:** முஹம்மது என்பவர் ஒரு தீர்க்கதரிசி (நபி) என்று இஸ்லாம் சொல்கிறது. கிறிஸ்தவமோ அல்லது பைபிளோ முஹம்மதுவை ஒரு தீர்க்கதரிசி என்று ஏற்றுக்கொள்வதில்லை. இதுமட்டுமல்லாமல், பைபிளின் அடிப்படை கோட்பாடுகளின் படி, முஹம்மதுவை நோக்கும் போது, அவர் ஒரு கள்ளத் தீர்க்கதரிசி என்று தெரிகின்றது. எனவே, பைபிள் ஒருவரை 'கள்ளத்தீர்க்கதரிசி' என்று அடையாளப்படுத்தி காட்டும் போது, பைபிளுக்கு எதிராக கிறிஸ்தவர்கள் எப்படி 'முஹம்மதுவை ஒரு தீர்க்கதரிசி' என்று ஏற்றுக்கொள்வார்கள்?

"இயேசுவைப் போன்று முஹம்மதுவும் ஒரு தீர்க்கதரிசி" என்றுச் சொல்வதே, கிறிஸ்தவத்திற்கு அவதூறு ஆகும்.

அடுத்தபடியாக, இயேசு வெறும் தீர்க்கதரிசி மட்டுமல்ல, அவர் தீர்க்கதரிசியைக் காட்டிலும் மேலானவராக இருக்கிறார். அவர் இறைவனுடைய வார்த்தையாகவும், மேசியாவாகவும் இருக்கிறார். பைபிளின் வசனங்களை ஆய்வு செய்தால், இயேசுவிற்கு தெய்வீகத்தன்மை உண்டு என்றும், அவர் இறைவனாக இருப்பதாகவும் அறியமுடியும்.



**கேள்வி 43:** சில கிறிஸ்தவர்கள் மருந்து எடுப்பதில்லையே? உடல் நலக்குறைவின் போது ஏன் மருத்துவரிடம் சென்று பார்த்துக்கொள்வதில்லை?

**பதில் 43:** உடல் நலக்குறைவின் போது மருத்துவரிடம் சென்று சிகிச்சை செய்துக்கொண்டால், 'நமக்கு விசுவாசம்' இல்லை என்று கருதப்பட்டுவிடுமோ என்று "சில கிறிஸ்தவர்கள் தவறாக" கருதுகிறார்கள். உடல் நலக்குறைவின் போது, மருத்துவரை அணுகாதீர்கள் என்றோ, சிகிச்சை பெறாதீர்கள் என்றோ பைபிள் எங்கும் சொல்வதில்லை. நாம் மருத்துவமனைக்குச் சென்றால் நமக்கு தேவன் மீது விசுவாசம் இல்லை என்று கருதி, தேவன் சுகம் கொடுக்கமாட்டார் என்று சிலர் தவறாக கருதுகிறார்கள்.

தேவன் சுகம் தருவார் என்பது உண்மை தான், அவர் அற்புதங்கள் செய்கின்றார் என்பதும் உண்மை தான், அதற்காக 'சிகிச்சை கையில் இருக்கும் போது, அதனை செய்யாமல், தேவன் அற்புதம் செய்தால் தான் நான் ஒப்புக்கொள்வேன்' என்றுச் சொல்வது, சரியான விசுவாசமில்லை.

சாலையில் செல்லும்போது திடீரென்று விபத்து நேரிட்டு, தலை உடைந்து இரத்தம் கொட்டும் போது, நான் மருத்துவமனைக்குச் செல்லமாட்டேன், என் விசுவாசத்தை இங்கு இப்போதே காட்டுவேன் என்றுச் சொல்லிக்கொண்டு, இயேசு வந்து சுகம் கொடுப்பார் என்று சொல்லிக்கொண்டு நடுரோட்டில் உட்கார்ந்துக்கொண்டால், நமக்கு உதவி செய்ய வரும் ஓரிருவரும், நம்முடைய

பிடிவாதத்தைப் பார்த்து, 'சாகட்டும்' என்று விட்டுவிடுவார்கள். ஆனால் இயேசுவை நம்பி, உதவி கரம் நீட்டுபவர்களின் உதவியை பெற்றுக்கொள்ள நாம் தயாராக இருந்தால், சரியான நேரத்திற்குள் "மருத்துவ அவசர ஊர்தியை (Ambulance)" அவரே அனுப்புவார், நாம் மயக்க நிலையில் இருந்தாலும் நல்ல சமாரியன்களை அனுப்பி, நம்மை மருத்துவமனையில் சேர்க்க உதவி செய்வார், மருத்துவர்கள் தவறுகள் செய்யாமல், சரியாக சிகிச்சை அளிக்க உதவி செய்வார்.

நமக்கு உதவி செய்த ஒவ்வொருவருக்கும் நாம் நன்றி சொல்லவேண்டும், மேலும் இவர்கள் அனைவரையும் சரியான நேரத்தில் அனுப்பி, நமக்கு சுகம் கொடுத்த இயேசுவையும் துதிக்கவேண்டும். இது தான் சரியான விசுவாசம்.

மருத்துவர்கள் பற்றி அனேக வசனங்கள் பைபிளில் உள்ளது. மருத்துவ சிகிச்சை தேவை என்று பைபிளில் பல இடங்களில் சொல்லப்பட்டுள்ளது.

**காயங்களுக்கு சிகிச்சை தேவை:**

ஏசாயா 1:6 உள்ளங்கால் தொடங்கி உச்சந்தலைமட்டும் அதிலே சுகமில்லை; அது காயமும் வீக்கமும், நொதிக்கிற இரணமுமுள்ளது; **அது சீழ் பிதுக்கப்படாமலும், கட்டப்படாமலும், எண்ணெயினால் ஆற்றப்படாமலும் இருக்கிறது**.

**இலைகளும் சிகிச்சைக்கு பயன்படுத்தலாம்:**

எசேக்கியேல் 47:12. நதியோரமாய் அதின் இக்கரையிலும் அக்கரையிலும் புசிப்புக்கான சகலவித விருட்சங்களும் வளரும்; அவைகளின் இலைகள் உதிர்வதுமில்லை, அவைகளின் கனிகள் கெடுவதுமில்லை; அவைகளுக்குப் பாயும் தண்ணீர் பரிசுத்த ஸ்தலத்திலிருந்து பாய்கிறபடியினால் மாதந்தோறும் புதுக்கனிகளைக் கொடுத்துக்கொண்டேயிருக்கும், அவைகளின் கனிகள் புசிப்புக்கும் **அவைகளின் இலைகள் அவிழ்தத்துக்குமானவைகள்**.

**கீலேயாத்திலே புகழ்பெற்று விளங்கும் ஜன்டுபாம்/அம்ருதாஞ்சன் போன்ற பிசின் தைலம்:**

எரேமியா 8: 22. கீலேயாத்திலே பிசின் தைலம் இல்லையோ? இரணவைத்தியனும் அங்கே இல்லையோ? பின்னை ஏன் என் ஜனமாகிய குமாரத்தி சொஸ்தமடையாமற்போனாள்?

**யாருக்கு வைத்தியன் வேண்டும்? இயேசுவின் பதில்:**
**நோய்வாய்ப்பட்டவனுக்கு**

மத்தேயு 9:12. இயேசு அதைக் கேட்டு: **பிணியாளிகளுக்கு வைத்தியன் வேண்டியதேயல்லாமல்** சுகமுள்ளவர்களுக்கு வேண்டியதில்லை.

**மருத்துவர்கள் மற்றும் சிகிச்சைப் பெறுவது பற்றி மனதில் வைக்கவேண்டியவைகள்:**

1) உலகில் மருத்துவ குணங்கள் அடங்கிய மரங்களை, செடிகளை உண்டாக்கியவரே தேவன் தான்.

2) மருத்துவ படிப்பு மற்றும் அதற்குரிய ஞானத்தை மனிதனுக்கு கொடுத்து, அவன் புதிய மருந்துகளை கண்டுபிடிக்க உதவியதே தேவன் கொடுத்த ஞானமும், அவர் படைத்த செடிகொடிகளுமேயாகும்.

3) சிகிக்கை பெற்றுக்கொள்வது பாவமல்ல, தேவன் அனுமதித்த ஒன்றாகும்.

4) மருத்துவர்கள் மூலமாக சிகிச்சைப் பெறுவது தவறு இல்லை, ஆனால் அவர்களை இறைவன் போல பார்ப்பது தான் தவறு.

5) அனேக நேரங்களில் மருத்துவர்கள் கைவிட்ட மக்களை தேவன் அற்புதமாக சுகமாக்கியுள்ளார்.

நாம் நோய்வாய்ப்பட்டால், மருத்துவ சிகிச்சையும் எடுத்துக் கொள்ளவேண்டும், அதே நேரத்தில் தேவன் தான் நம்மை சுகமாக்குகின்றார் என்று நம்பவும் வேண்டும்.

சில கிறிஸ்தவ பெற்றோர்கள் "தங்கள் விசுவாசத்தை காட்டுகிறோம் என்று சொல்லிக்கொண்டு, தங்கள் குழந்தைகளுக்கு மருத்துவ சிகிச்சை கொடுக்காமல், அவர்களை கொலை செய்கிறார்கள்". இப்படிப்பட்ட தவறுகளை சில பெற்றோர்கள் செய்தபடியினால் மரித்த பிள்ளைகளும் இருக்கிறார்கள். இது கண்டிக்கப்படத் தக்கது.

உடல் நலக்குறைவின் போது, மருத்துவரை அணுகவேண்டாம் என்று பைபிள் எங்கும் சொல்வதில்லை. எனவே, நோய்வாய்ப்பட்டால் தேவனை நம்பி, அவரிடம் ஜெபித்துவிட்டு, மருத்துவ மனையில் சிகிச்சை பெறுவது தான் பைபிளின் படி சரியானது.



**கேள்வி 44:** கிறிஸ்தவர்கள் "அவர் மீது சாந்தி உண்டாகட்டும் (PBUH)" என்று ஏன் பயன்படுத்தக்கூடாது?

**பதில் 44:** ஆங்கிலத்தில் "PBUH" என்று கூறினால் "peace be upon him" என்று அர்த்தம். அரபியில் "Salla Allahu Alaihi Wa Sallam (SAW)" என்பார்கள், இதன் பொருள் : “அல்லாஹ்வின் ஜெபங்கள் மற்றும் சாந்தி அவர் மீது இருப்பதாக”.

இவ்விரண்டும் கீழ்கண்ட குர்ஆன் வசனத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்டது.

இந்த நபியின் மீது அல்லாஹ் அருள் புரிகிறான். மலக்குகளும் அவருக்காக அருளைத் தேடுகின்றனர். முஃமின்களே நீங்களும் அவர் மீது ஸலவாத்து சொல்லி அவர் மீது ஸலாமும் சொல்லுங்கள். (குர்ஆன் 33:56)

"அவர் மீது சாந்தி உண்டாகட்டும்" என்று கூறினாலோ அல்லது "ஸல்" என்று கூறினாலோ, முஹம்மது மீது சாந்தியும் ஜெபங்களும் உண்டாவதாக என்று பொருள். இவ்விரண்டில் எதனை நாம் பயன்படுத்தினாலும், அது ஏற்கனவே மரித்து தன் முடிவு நிர்ணயிக்கப்பட்ட ஒரு மனிதன் மீது ஆசீர்வாதத்தை கொடுக்கும் படி வேண்டிக்கொள்வதாக இருக்கிறது. அதே நேரத்தில் பைபிள் கீழ்கண்டவாறு கூறுகிறது:

அன்றியும், ஒரேதரம் மரிப்பதும், பின்பு நியாயத்தீர்ப்படைவதும், மனுஷருக்கு நியமிக்கப்பட்டிருக்கிறபடியே (எபிரேயர் 9:27)

ஆக, ஒரு மனிதன் மரித்துவிட்டால், அந்த நபர் அல்லது சகோதரி, ஒன்று இறைவனிடமிருந்து பிரிக்கப்பட்டு துன்பம் அனுபவித்துக்கொண்டு இருக்கவேண்டும் அல்லது இறைவனுடைய பிரசன்னத்தின் மகிழ்வினால் நிரம்பி சந்தோஷத்தோடு இருக்கவேண்டும். ஆக, மேற்கண்ட இரண்டு நிலைகளில் ஏதாவது ஒரு நிலையில் இருக்கும் ஒரு நபருக்கு, உலகத்தில் உயிரோடு வாழ்பவர்களின் வேண்டுதல்கள் பாதிக்காது (இதனால் எந்த ஒரு உபயோகமும் இல்லை). ஒரு மனிதர் மரித்துவிட்டபிறகு அவருக்காக வேண்டுதல் செய்வது வீணான செயல் இதனால் உபயோகம் ஒன்றுமில்லை.

இன்னொரு முக்கியமான விவரம் என்னவென்றால், முஹம்மதுவின் பெயரை நாம் கூறும்போது, அதோடு கூட ஆசீர்வாதத்தையும் வேண்டுதல்களையும் நாம் சேர்த்து சொன்னால், "முஹம்மது உண்மையாகவே இறைவனின் தூதர்" என்று நாங்கள் (கிறிஸ்தவர்கள்) அங்கீகரித்தது போல் ஆகிவிடும். ஆக, பைபிளின் தெளிவாக வசனக்களின்படி, நாங்கள் முஹம்மதுவை நம்புவதில்லை, "அவர் ஒரு நபி" என்று நம்புவதில்லை.

கிறிஸ்தவனாகிய நான் உங்களிடம் வந்து, இனி "ஈஸா (இயேசு)" என்று நீங்கள் பயன்படுத்தும் போதெல்லாம் (கூறும் போதெல்லாம்) "ஆண்டவராகிய இயேசுக் கிறிஸ்து" என்று கூறுங்கள் என்றுச் சொன்னால் அது சரியாக உங்களுக்கு தென்படுமா? “இயேசுவை ஆண்டவர்" என்று அழைப்பது, அவர் பழைய ஏற்பாட்டின் சர்வ வல்லவரான தேவனை குறிப்பிடுவதாக இருக்கும்.

இப்படி நீங்கள் இயேசு ஆண்டவர் என்று அழைத்தால், அது உங்கள் இஸ்லாமிய நம்பிக்கைக்கு எதிரானது என்பதை அறிந்தும், நீங்கள் இயேசுவை இப்படி அழைக்கத்தான் வேண்டும் என்று நான் உங்களுக்கு கட்டளையிட்டு நேரத்தை

வீணடிக்கமுடியுமா? இருந்த போதிலும் வேதம் தெளிவாக கீழ்கண்டவிதமாக கூறுகிறது:

ரோமர் 10:9

என்னவென்றால், கர்த்தராகிய இயேசுவை நீ உன் வாயினாலே அறிக்கையிட்டு, தேவன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினாரென்று உன் இருதயத்திலே விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய்.

இந்த சந்தர்ப்பத்தில் ஒரு கேள்வியை உங்களிடம் கேட்கட்டும்: இன்று நீங்கள் இயேசுவை பின்பற்றுபவராக மாற விரும்புகிறீர்களா? இன்று நீங்கள் மரித்தால் எங்கு போவீர்கள்? நீங்கள் போகும் இடம் துன்பம் நிறைந்த இடமா? அல்லது இறைவனின் பிரசன்னம் இருக்கும் இடமா? இதில் எதை நீங்கள் தெரிந்தெடுக்கப் போகிறீர்கள்? எல்லா தீர்க்கதரிசிகள் சொன்ன சத்தியமாம் இயேசுக் கிறிஸ்து மீது நம்பிக்கை வைத்து, உங்கள் வாயினால் அவர் தான் இறைவன் என்று நம்புங்கள் என்று உங்களை நான் அழைக்கிறேன். நீங்கள் எடுக்கும் இந்த முடிவிற்காக ஒருபோதும் நீங்கள் மனம் வருந்தமாட்டீர்கள்.

இயேசு தாமாகவே சொன்ன இந்த வார்த்தைகளை கவனித்துப்பாருங்கள்:

**யோவான் 5:24**

என் வசனத்தைக் கேட்டு, என்னை அனுப்பினவரை விசுவாசிக்கிறவனுக்கு நித்தியஜீவன் உண்டு; அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட்படாமல், மரணத்தைவிட்டு நீங்கி, ஜீவனுக்குட்பட்டிருக்கிறான் என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.



**கேள்வி 45:** கிறிஸ்தவ தற்காப்பு ஊழியம் (Christian Apologetics) என்றால் என்ன?

**பதில் 45:** கிறிஸ்தவ தற்காப்பு ஊழியம் (Christian Apologetics) என்பது, 1 பேதுரு 3:15ல் சொல்லப்பட்ட அறிவுரையை பின்பற்றி 'நம்முடைய விசுவாசம் பற்றி கேள்வி கேட்பவர்களுக்கு தகுந்த சான்றுகளோடு பதில் கொடுப்பதாகும்'.

கர்த்தராகிய தேவனை உங்கள் இருதயங்களில் பரிசுத்தம்பண்ணுங்கள்; உங்களிலிருக்கிற நம்பிக்கையைக்குறித்து உங்களிடத்தில் விசாரித்துக் கேட்கிற யாவருக்கும் சாந்தத்தோடும் வணக்கத்தோடும் உத்தரவுசொல்ல எப்பொழுதும் ஆயத்தமாயிருங்கள். (1 பேதுரு 3:15)

“நாம் கிறிஸ்தவர்” என்று வெளியே தெரிந்தவுடன், அனேக வேளைகளில் பலர் பல கேள்விகளை கேட்பார்கள், சிலர் சில விஷயங்களை அறிந்துக்கொள்ள கேள்வி கேட்பார்கள், இன்னும் சிலர் நம்மை மட்டம் தட்ட கேள்வி கேட்பார்கள், அதாவது நாத்தீகர்கள் இறைநம்பிக்கையுள்ளவர்களைக் கண்டால் ஒரு சில கேள்விகளை

கேட்பார்கள். இப்படி கேள்வி கேட்பவர்களுக்கு நம் விசுவாசம் பற்றி பதில் சொல்ல நாம் கடமைப்பட்டுள்ளோம்.

ஒரு வேளை ஒரு முஸ்லிமை நாம் காணும்போது, அவருடைய குர்ஆனிலும் இயேசு பற்றியும், கிறிஸ்தவர்கள் பற்றியும் சொல்லியுள்ளதால், அவரும் நம்மிடம் கேள்வி கேட்பார். அப்போது நாம் அவருக்கும் பதில் சொல்லவேண்டும்.

இது ஒரு புறமிருக்க, சிலர் நம்முடைய நம்பிக்கையை பொய்யாக்க நம்மிடம் கேள்வி கேட்பதும் உண்டு, உதாரணத்திற்கு முஸ்லிம்களையும், நாத்தீகர்களையும் சொல்லலாம்.

**உதாரணம் 1: முஸ்லிம்களோடு விவாதம்: விசுவாசம் தாக்கப்படும் போது, பதில் சொல்லத்தான் வேண்டும்.**

ஒரு முஸ்லிம் நம்மைப் பார்த்து, இயேசு தெய்வமில்லை என்று குர்ஆன் சொல்கிறது என்று சொல்லும் போது, அந்த குர்ஆனை படித்து அவர் சொல்வது போன்று குர்ஆன் சொல்கிறதா? என்பதை தெரிந்துக்கொண்டு, அதன் பிறகு அவருக்கு நம்முடைய தற்காப்பு பதிலை கொடுப்போம். நம்முடைய விசுவாசத்தை தற்காத்துக்கொள்வதற்காக பதில் சொல்லும் போது, குர்ஆனையும் ஆய்வு செய்து விமர்சிக்க வேண்டி வரும். இப்படிப்பட்ட நேரங்களில் சில உரையாடல்கள் சூடு பிடித்து, ஒரு திட்டமிட்ட விவாதமாகவும் நடக்க வாய்ப்பு உருவாகிவிடுகிறது.

**உதாரணம் 2: நாத்தீக புத்தகங்களுக்கு மறுப்பு:**

நாத்தீகர்களுடைய முதலாவது நோக்கம் "இறைவன் இல்லை" என்பதை நிருபிக்கவேண்டும் என்பதாகும். இதற்காக அவர்கள் அனேக புத்தகங்களை எழுதியுள்ளார்கள். கிறிஸ்தவர்களில் சிலர் இப்படிப்பட்ட புத்தகங்களுக்கு சான்றுகளோடு பதில் சொல்வார்கள், நாத்தீகர்களோடு கூட விவாதங்களிலும் ஈடுபடுவார்கள். இதில் தவறு ஏதுமில்லை.

**உதாரணம் 3: கள்ள உபதேசங்களுக்கு பதில்கள்:**

அவ்வப்போது சில கள்ள உபதேசங்கள் எழும்புகின்றன, பைபிளின் கோட்பாடுகளுக்கு எதிராக கேள்விகள் எழுப்பப்படுகின்றன. இப்படிப்பட்ட சூழ்நிலைகளிலும் நாம் பதில் சொல்லவேண்டிய நிற்பந்தத்தில் தள்ளப்படுகிறோம்.

**உதாரணம் 4: வலியச் சென்று விவாதம் புரிவது**

மேலே சொன்னவைகள் ஒரு பக்கம் இருக்கும்போது, நாம் வாழும் சமுதாயத்தில் சில தவறான பழக்கவழக்கங்கள் நம் கண் எதிரே நடக்கும் போது, அவைகளை பார்த்துக்கொண்டு சும்மா இருக்கமுடியாது. நமக்கு உடனே ரோஷம் வந்து (ஆவி கொழுந்துவிட்டு எரியும் போது என்று ஆவிக்குரிய வட்டாரத்தில் இதனைச்

சொல்லுவார்கள்), களத்தில் இறங்கி நியாயம் சொல்லவும், தீமையை கண்டித்துக் கேட்கவும் தொடங்கும் போதும் 'விவாத கேள்வி பதில்கள் நடைப்பெற வாய்ப்பு வாய்த்துவிடும்'.

உங்களுக்கு இந்த பாயிண்டு புரியவில்லையா? இதோ விளக்குகிறேன்.

நம் கண்ணெதிரே, சதி என்றுச் சொல்கின்ற பழக்கத்தை நடைமுறைப்படுத்துகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். இந்தியாவில் இந்த பழக்கம் இருந்தது. கணவன் மரித்துவிட்டால், மனைவியையும் உயிரோடு வைத்து கொளுத்துவிடுவார்கள் (நல்ல பாரம்பரியம்!). அதே போல, சிறு குழந்தைகளுக்கு திருமணம் செய்து வைப்பது, மேலும் தேவதாசி என்றுச் சொல்லி கோயிலுக்கு நேர்ந்துவிட்ட பெண்களை தவறாக பயன்படுத்தும் பழக்கம் போன்றவை இந்தியாவில் இருந்தன. இப்படிப்பட்டவைகளை பார்க்கும் போது, ஒரு கிறிஸ்தவனால் சும்மா இருக்கமுடியாது. இயேசு இவர்களின் உள்ளத்தில் இல்லாததால் தான் இப்படி 'தவறான பழக்கங்களுக்கு இவர்கள் அடிமையாகியுள்ளார்கள்' என்றுச் சொல்லி, அவர்களுக்கு அறிவுரை கூறும் போது, அது சண்டையாகவும், சில நேரங்களில் விவாதமாகவும், நம்முடைய உயிருக்கு ஆபத்தாகவும் மாறிவிடுவதுண்டு.

### உதாரணம் 5: சுவிசேஷ கடமையை நிறைவெற்றப்போக அது விவாதமாக மாறும் சூழ்நிலை

எல்லாவற்றிற்கும் மேலாக, இயேசு நமக்கு கொடுத்த கடமையாகிய 'நற்செய்தியை அறிவிப்பது' அனேக நேரங்களில், விவாதங்களாகவும் மாறிவிடுவதுண்டு. மற்ற மார்க்கத்தார்கள் நம்மை திட்டித்தீர்ப்பதும் இந்த கடமையை நிறைவேற்ற நாம் முயலுவதும் தான். நாம் நற்செய்தியையும், நம் சாட்சியையும் சொல்லாமல் இருக்கமுடியாதே! இயேசு செய்த அற்புதங்களையும், வாழ்வைப்பற்றியும் சாட்சி பகராமல் இருக்கமுடியாதே!

பெரும்பான்மையாக, எல்லா மக்களும் கேட்பது, 'ஏன் கிறிஸ்தவர்கள் இயேசுவை அறிவிக்காமல் இருப்பதே இல்லை! எங்களுகெல்லாம் சாமி இல்லையா?' என்பதைத் தான். நாங்கள் என்ன செய்யமுடியும் சொல்லுங்கள்! 'யான் பெற்ற இன்பம், பெருக இவ்வையகம்' என்ற வாக்கியத்தின் படி, என் இரட்சிப்பை உலக மக்களுக்கு சொல்லுங்கள் என்று சொல்லியுள்ளாரே, அவருடைய கட்டளையை நிறைவேற்றாமல் இருக்கமுடியாதே!

கிறிஸ்தவ விசுவாச தற்காப்பு ஊழியம் செய்பவர்கள், 1 பேதுரு 3:15ல் சொல்லப்பட்ட இரண்டாம் பாகத்தை மறக்கக்கூடாது: சாந்தத்தோடும், வணக்கத்தோடும் பதில் சொல்லவேண்டும்.

“யாவருக்கும் சாந்தத்தோடும் வணக்கத்தோடும் உத்தரவுசொல்ல எப்பொழுதும் ஆயத்தமாயிருங்கள். (1 பேதுரு 3:15)”

நற்செய்தி அறிவிக்கும் போது விவாதம் புரிவது பைபிளின் படி சரியானதா?

கிறிஸ்தவர்களில் சிலர் 'நாம் விவாதம் புரியக்கூடாது, பதில் சொல்லக்கூடாது, இது பைபிளின் சரி தவறானது, வெறும் நற்செய்தி மட்டும் தான் சொல்லவேண்டும்' என்று கூறுகிறார்கள். இது தவறான புரிதலாகும். நாம் ஒருவருக்கு நற்செய்தியைச் சொல்லும் போது, அவர் அமைதியாக கேட்டுக்கொண்டு இருப்பார் என்று எதிர்பார்க்கமுடியாது. அவர் பல கேள்விகளை கேட்டு, நம்மிடம் சரியான பதில்களை எதிர்ப்பார்ப்பார். சில நேரங்களில் அவரது தவறான புரிதலை நாம் அவருக்கு விளக்கவேண்டும், அவரது தற்போதைய நம்பிக்கையில் உள்ள வித்தியாசங்களை அவருக்கு எடுத்துக் காட்டவேண்டும்.

கேட்கப்படும் கேள்விகளுக்கு சான்றுகளோடு கூடிய பதில்களைக் கொடுப்பது தான் 'விசுவாச தற்காப்பு ஊழியம்' என்பது, இது தவறு என்று எப்படி சொல்லமுடியும்? 1 பேதுரு 3:15 சொல்வதும் இதைத் தானே!

விசுவாச தற்காப்பு ஊழியம் பற்றி நாம் கற்கவேண்டுமென்றால் நாம் முதலாவது இயேசுவிடம் தான் கற்கவேண்டும்.

### இயேசுவும் விசுவாச தற்காப்பு ஊழியமும்:

இயேசுவிடம் பலர் கேள்விகளை கேட்டனர், கற்றுக்கொள்ளவேண்டுமென்று கேள்வி கேட்டவர்களும் இருந்தனர், இயேசுவை கேலி செய்யவேண்டுமென்று கேள்வி கேட்டவர்களும் உண்டு.

இயேசு எல்லோருக்கும் ஒரே மாதிரியான பதிலை கொடுக்கவில்லை. சிலரிடம் கேள்விக்கு பதில் கேள்வி கேட்டார், சிலருக்கு நேரடி பதில் கொடுத்தார். சிலரின் கேள்விக்கு ஒரு உவமையை பதிலாகச் சொன்னார், நேரடி பதில் தரவில்லை. தன்னிடம் கேள்வி கேட்பவர்கள் சிந்திக்கும் படிச் செய்தார்.

இயேசு 307 கேள்விகளை கேட்டதாகவும், அவர் நேரடியாக வெறும் 3 கேள்விகளுக்கு மட்டுமே பதில் கொடுத்ததாகவும், ஒருவர் ஆய்வு செய்து புத்தகம் எழுதியுள்ளார்:

**www.amazon.com/Jesus-Question-Questions-Asked-Answered/dp/1426755147**

ஆக, விசுவாச தற்காப்பு ஊழியம் என்பது பைபிளுக்கு எதிரான செயல் அன்று.

### விசுவாச தற்காப்பு ஊழியத்திற்கு யோபு புத்தகம் ஒரு எடுத்துக்காட்டு:

பழைய ஏற்பாட்டில் உள்ள யோபு புத்தகத்தை முழுவதுமாக படித்துப் பார்த்தாலும், அது பல கேள்விகளாலும், ஞான வார்த்தைகளாளும், விவாதங்களாளும் நிரம்பியிருப்பதை பார்க்கமுடியும். யோபுவும், அவரது நண்பர்களும் ஒருவர் மாறி ஒருவர் கேள்வி கேட்பார்கள், பதில் சொல்வார்கள்.

கடைசியாக, தேவனும் யோபுவிடம் பல கேள்விகளைக் கேட்கிறார். யோபுவின் அந்த நிலைக்கு காரணம் யோபுவின் அநீதியான வாழ்க்கை என்று அரவது நண்பர்கள் குற்றம் சாட்டினார்கள். உடனே யோபு தன் நிலைப்பற்றி விவாதம் புரிந்தார். இப்படி பல முறை நடந்தது.

## அப்போஸ்தலர் பவுலடியாரின் விவாதங்களும் தற்காப்பு ஊழியமும்:

பவுலடியார் ஊழியம் செய்யும் போதும், அது பல வேளைகளில் விவாதங்களாக, பேச்சுவார்த்தைகளாக மாறியதை பார்க்கமுடியும்.

கிரேக்கர்களிடம் பேசும் போதும், யூத ஆலயங்களில் பேசும் போதும் அவர் பல காரியங்களை விவாதங்களாக பதில்களாக முன்வைத்தார். ராஜாக்களுக்கு முன்பாக தன் நம்பிக்கைப் பற்றி சாட்சி சொல்லும் போது, மிகவும் தைரியமாக அதனை சொன்னார், சாட்சி சொல்வதும் ஒரு 'கிறிஸ்டியன் அபாலஜிடிக்ஸ்' இல்லையா?

கிரேக்கர்களாகிய மேதாவிகளிடம் பேசினார், இயேசுவின் நற்செய்தியை அவர்களுக்கு விளக்கிக்காட்டினார். அதே நேரத்தில் அவர்களின் நம்பிக்கையையும் தொட்டுத் தான் பேசினார்.

அப்போஸ்தலர் 17:

2. பவுல் தன் வழக்கத்தின்படியே அவர்களிடத்தில் போய், மூன்று ஓய்வுநாட்களில் வேதவாக்கியங்களின் நியாயங்களை எடுத்து **அவர்களுடனே சம்பாஷித்து,**

3. கிறிஸ்து பாடுபடவும் மரித்தோரிலிருந்து எழுந்திருக்கவும் வேண்டியதென்றும், நான் உங்களுக்கு அறிவிக்கிற **இந்த இயேசுவே கிறிஸ்து என்றும் காண்பித்து, திருஷ்டாந்தப்படுத்தினான்.**

16. அத்தேனே பட்டணத்தில் பவுல் அவர்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கையில், அந்தப் பட்டணம் விக்கிரகங்களால் நிறைந்திருக்கிறதைக் கண்டு, தன் ஆவியில் மிகுந்த வைராக்கியமடைந்து,

**17. ஜெப ஆலயத்தில் யூதரோடும், பக்தியுள்ளவர்களோடும், சந்தைவெளியில் எதிர்ப்பட்டவர்களோடும் தினந்தோறும் சம்பாஷணைபண்ணினான்**

19. அவர்கள் அவனை மார்ஸ் மேடைக்கு அழைத்துக்கொண்டுபோய்: நீ சொல்லுகிற புதிதான உபதேசம் இன்னதென்று நாங்கள் அறியலாமா?

20. நூதனமான காரியங்களை எங்கள் காதுகள் கேட்கப்பண்ணுகிறாய்; அவைகளின் கருத்து இன்னதென்று அறிய மனதாயிருக்கிறோம் என்றார்கள்.

**எனவே, கிறிஸ்தவ விசுவாச தற்காப்பு ஊழியம் என்பது, 1 பேதுரு 3:15ல் சொல்லப்பட்டது போன்று நம் விசுவாசம் குறித்து சாட்சி சொல்லி, மக்களின் சந்தேகங்களை தீர்க்கப்பட உதவி செய்து, மக்கள் சிந்திக்கும்படி சில வேளைகளில் எதிர்கேள்விகள் கேட்டு, நற்செய்திச் சொல்வதாகும்.**



**கேள்வி 46:** மக்களை கட்டாயப்படுத்தி ஏன் கிறிஸ்தவர்கள் தேவனுடைய ராஜ்ஜியத்தை ஸ்தாபிக்கக்கூடாது?

**பதில் 46:** உலகத்தில் இராஜ்ஜியங்களை ஸ்தாபியுங்கள் என்று பைபிள் கிறிஸ்தவர்களுக்கு கட்டளையிடவில்லை. இஸ்ரவேல் மக்களுக்கு பழைய ஏற்பாட்டில் இராஜ்ஜியம் அமைக்க தேவன் அனுமதித்தார். ஆனால், அவர்கள் பல போர்கள் புரிந்து தங்கள் இராஜ்ஜியத்தை விஸ்தரிக்க அவர் அனுமதிக்கவில்லை, கட்டளையிடவில்லை.

முஹம்மது உயிரோடு இருந்தபோது, முழு அரேபிய தீபகர்ப்பத்தை போர் புரிந்து ஆக்கிரமித்தார், அதன் பிறகு வந்த நான்கு கலிஃபாக்கள் இன்னும் பல நாடுகளை வலியச் சென்று சண்டையிட்டு வென்றார்கள்.

இஸ்லாமின் கணக்குப்படி, முஹம்மது 10 ஆண்டுகளில் 95 போர்களில்/வன்முறை செயல்களில் ஈடுபட்டார்.

| ஹிஜ்ரி ஆண்டு | மொத்தம் | முஹம்மது பங்கு பெற்றவைகள் | முஹம்மது பங்கு பெறாதவைகள் |
|---|---|---|---|
| 1 | 4 | 1 | 3 |
| 2 | 9 | 6 | 3 |
| 3 | 7 | 5 | 2 |
| 4 | 6 | 2 | 4 |
| 5 | 5 | 4 | 1 |
| 6 | 17 | 2 | 15 |
| 7 | 10 | 3 | 7 |
| 8 | 20 | 4 | 16 |
| 9 | 12 | 1 | 11 |
| 10 | 5 | 0 | 5 |
| மொத்தம் | 95 | 28 | 67 |

https://en.wikipedia.org/wiki/List_of_expeditions_of_Muhammad

இயேசுவோ புதிய ஏற்பாடோ 'வன்முறையை பயன்படுத்தி நற்செய்திய அறிவிக்கும்படி சொல்வதில்லை, ஆட்சி அரசாங்கங்கள் அமையுங்கள்' என்று சொல்லவில்லை.

என் அரசாங்கம் இவ்வுலகத்துக்கு உரியது அல்ல என்று இயேசு தெளிவாக கூறினார்:

யோவான் 18:36. இயேசு பிரதியுத்தரமாக: **என் ராஜ்யம் இவ்வுலகத்திற்குரியதல்ல**, என் ராஜ்யம் இவ்வுலகத்திற்குரியதானால் நான் யூதரிடத்தில் ஒப்புக்கொடுக்கப்படாதபடிக்கு என் ஊழியக்காரர் போராடியிருப்பார்களே; இப்படியிருக்க என் ராஜ்யம் இவ்விடத்திற்குரியதல்ல என்றார்.

கட்டாயப்படுத்தி மக்களை இயேசுவின் கட்டளைகளுக்கு கீழ்படிய முயன்றால் அது வீணான பக்தியாகும். இஸ்லாம் இப்படிச் செய்கிறது, கிறிஸ்தவம் அல்ல.

மனிதன் மனந்திரும்ப வேண்டும், அவன் மாறும் போது குடும்பம் மாறும், குடும்பம் மாறும் போது, சமுதாயம் மாறும், இப்படித்தான் இயேசு மனங்களில் ஆட்சி செய்ய விரும்புகிறார்.

நற்செய்தி சொல்வது நம் வேளை, அதனை ஏற்பதோ, புறக்கணிப்பதோ மனிதனுக்கு உள்ள உரிமை. வன்முறையை பயன்படுத்தி தேவனுடைய இராஜ்ஜியத்தை ஸ்தாபிப்பது பைபிளுக்கு எதிரான செயலாகும்.

இயேசுவை ஏற்றுக்கொள்ளாதவர்களை அழித்துவிடும்படி சீடர்கள் ஒரு முறை எண்ணினர், அதனை இயேசு தடுத்தார், அவர்களை கடிந்துகொண்டார்.

இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் தான் கிறிஸ்தவர்களை அமைதியானவர்களாக மாற்றியுள்ளது. இஸ்லாமில் அதிகமாக சண்டை, வன்முறை நடப்பதற்கு காரணம், முஹம்மதுவின் மன்னியாத தன்மையாகும்.

**லூக்கா 9:53-56**

53. அவர் எருசலேமுக்குப் போக நோக்கமாயிருந்தபடியினால் அவ்வூரார் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை. 54. அவருடைய சீஷராகிய யாக்கோபும் யோவானும் அதைக் கண்டபோது: ஆண்டவரே, எலியா செய்ததுபோல, வானத்திலிருந்து அக்கினி இறங்கி இவர்களை அழிக்கும்படி நாங்கள் கட்டளையிட உமக்குச் சித்தமா என்று கேட்டார்கள்.

55. அவர் திரும்பிப்பார்த்து: **நீங்கள் இன்ன ஆவியுள்ளவர்களென்பதை அறியீர்கள் என்று அதட்டி**,

56. **மனுஷகுமாரன் மனுஷருடைய ஜீவனை அழிக்கிறதற்கு அல்ல, இரட்சிக்கிறதற்கே வந்தார்** என்றார். அதன்பின்பு அவர்கள் வேறொரு கிராமத்துக்குப் போனார்கள்.



**கேள்வி 47:** பைபிள் நிகழ்ச்சிகளை கார்ட்டூன் படங்களாகவோ அல்லது சாதாரண படங்களாக வரைந்து பயன்படுத்துவது தவறா?

**பதில் 47:** படங்கள் வரைவது மற்றும் அவைகள் மூலமாக பைபிள் நிகழ்ச்சிகளை விளக்குவது தவறு என்று பைபிள் எங்கும் சொல்லவில்லை. ஆதாம் தொடங்கி வெளிப்படுத்தின விசேஷம் வரை நூற்றுக்கணக்கான நிகழ்ச்சிகள் நடந்துள்ளன, அவைகள் பைபிளிலும் பதிக்கப்பட்டுள்ளன.

பைபிள் நிகழ்ச்சிகளை படங்கள் மூலமாக விளக்குவது மிகவும் பயனுள்ளதாகும். முக்கியமாக, பிள்ளைகளுக்கு படங்கள் மூலமாக இயேசுவின் உவமைகளை விளக்குவதும், இயேசுவின் அற்புதங்களை விளக்குவதும் நல்ல பலனைத் தரும்.

பெரியவர்களுக்கும் படங்கள் மூலமாக பைபிளின் நிகழ்ச்சிகள் சுலபமாக புரியும் மட்டுமல்ல, மனதில் நீங்கா இடம் பிடித்துவிடும்.

1) ஆதாம் ஏவாள் ஏதோன் தோட்டத்தில் இருந்த காட்சி

2) நோவாவின் கப்பலில் மிருகங்கள் செல்லும் காட்சி

3) ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு, போன்றவர்களின் வாழ்க்கையில் நடந்த முக்கியமான நிகழ்ச்சிகள்

4) யோசேப்பு அடைந்த துன்பங்கள் மற்றும் எகிப்தில் பெரிய பதவியில் அவர் உட்கார்ந்த நிகழ்ச்சி

5)செங்கடல் பிளந்த நிகழ்ச்சி, மோசேயின் 10 கட்டளைகள் இவைகளை யார் மறக்கமுடியும்?

6) தாவீது கோலியாத் சண்டையை படமாக பார்க்காதவர் யாராவது இருக்கமுடியுமா?

7) தானியேலின் சிங்க கெபியில் அவர் ஜெபித்த காட்சி

8) இயேசுவின் பிறப்பு, தேவதூதர்களின் மகிழ்ச்சி, மேய்ப்பார்களின் சந்தோஷம்.

9) இயேசு சொன்ன உவமைகள்: கெட்ட குமாரன், விதை/அறுவடை பற்றிய உவமை, கானா ஊர் கலியாணம்.

10) இயேசு செய்த அற்புதங்கள், இயேசுவின் இரண்டாம் வருகை, இவைகள் பற்றிய படங்கள் நம் மனங்களில் நீங்கா இடம்பிடித்த படங்கள் தானே!

**படங்களை, உருவங்களை, சிலைகளை வணக்கத்திற்காக பயன்படுத்தக்கூடாது:**

கீழ்கண்ட வசனத்தில் உருவங்களை, படங்களை வணக்கப் பொருட்களாக ஆக்கிக்கொள்ளாதீர்கள் என்று கட்டளையிடப்பட்டுள்ளது, அவைகளை மற்ற காரியங்களுக்காக பயன்படுத்தக்கூடாது என்பதற்காக அல்ல.

லேவியராகமம் 26:1. நீங்கள் உங்களுக்கு விக்கிரகங்களையும் சுரூபங்களையும் உண்டாக்காமலும், உங்களுக்குச் சிலையை நிறுத்தாமலும், சித்திரந்தீர்ந்த கல்லை **நமஸ்கரிக்கும்பொருட்டு** உங்கள் தேசத்தில் வைக்காமலும் இருப்பீர்களாக; நான் உங்கள் தேவனாகிய கர்த்தர்.

கலைகள் அனுமதிக்கப்பட்டுள்ளது, ஆனால் அவைகள் ஆராதனையின் மையமாக இருக்கக்கூடாது. கீழ்கண்ட வசனத்தில் 'கேருபீன்களை விசித்திரவேலையாக செய்து திரைச்சீலை' வைக்கலாம் என்றும் சொல்லப்பட்டுள்ளது. ஆனால், அந்த கேருபீன்கள் வணக்கப்பொருளாக ஆகக்கூடாது.

யாத்திராகமம் 26:31

31. இளநீலநூலும் இரத்தாம்பரநூலும் சிவப்புநூலும் திரித்த மெல்லிய பஞ்சுநூலுமான இவற்றால் ஒரு திரைச்சீலையை உண்டுபண்ணக்கடவாய்; **அதிலே விசித்திரவேலையால் செய்யப்பட்ட கேருபீன்கள் வைக்கப்படவேண்டும்**.

நற்செய்தி அறிவிப்பதற்கு அனேக வழிமுறைகள் உள்ளன, அவைகளில் ஒன்று படங்கள் மூலமாக முக்கியமாக பிள்ளைகளுக்கு சத்தியங்களை சொல்லிகொடுப்பதாகும். இதில் தவறு ஏதுமில்லை.

இயேசுவின் வாழ்க்கை முழுவதும் காமிக்ஸ் படங்கள் போட்டு புத்தகமாக வருகின்றது. மேலும் ஆங்கில பைபிள்களில் பல முக்கியமான நிகழ்ச்சிகள் விளக்கப்படும் போது, அதைப் பற்றிய படத்தையும் போட்டு பிரிண்ட் எடுத்திருப்பார்கள்.

பைபிள் நபர்களின் படங்கள் வரைதல் தவறு என்றால், இயேசுவின் படத்தை (சினிமா) எடுத்து பல கோடி மக்கள் பார்த்து, இயேசுவை சொந்த இரட்சகராக ஏற்றுகொள்வதற்கு வாய்ப்பு இல்லாமல் போய் இருக்குமே!

ஆக, படங்கள், சித்திர கைவேலைகளைச் செய்தல், சிலைகள் வடித்தல் போன்றவைகளை பைபிள் எதிர்க்கவில்லை, ஆனால் அவைகளை வணங்குவதற்கு பயன்படுத்தக்கூடாது என்பது தான் கட்டளை.



**கேள்வி 48:** பைபிளில் வரும் அந்நிய ஜனம்/ ஜாதி (Gentile) என்ற வார்த்தையைப் பற்றி சிறு விளக்கம் தரமுடியுமா?

**பதில் 48:** ஜென்டைல்(Gentile) என்ற ஆங்கில வார்த்தை, " gentilis " என்ற லத்தீன் வார்த்தையிலிருந்து வந்ததாகும். இதன் பொருள் "நாடு அல்லது ஒரே இனத்தைச் சேர்ந்த மக்கள்" என்பதாகும். எபிரேய மொழியில் நாடு என்பதற்கு "கொய்(goy)" என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆரம்பத்தில் எல்லா நாடுகளையும் குறிக்க இந்த வார்த்தை பைபிளில் பயன்படுத்தப்பட்டது. ஆனால், யூதர்கள் தங்களுக்கென்று ஒரு நாட்டை அமைத்துவிட்ட பிறகு, 'ஜென்டைல்' என்றால் "மற்ற நாடுகள்" அதாவது யூதரல்லாத மற்ற நாடுகள் என்ற பொருளில் அது அமைந்துவிட்டது.

இதன்படி பார்த்தால், யூதர்களின் படி 'கிறிஸ்தவர்களும்' ஜென்டைல் என்ற அந்நிய ஜனங்கள் தான். அனைத்து நாடுகளையும் குறிக்க பயன்படுத்தப்பட்ட வார்த்தை, கடைசியாக யூதரல்லாத நாடுகளை மட்டுமே குறிக்க பயன்படும் படி ஆகிவிட்டது.

தமிழ் பைபிளில் இன்னொரு சிக்கலும் உள்ளது. நாடு அல்லது ஜனங்கள் என்று வரும் வார்த்தையை, தமிழில் "ஜாதி" என்று மொழியாக்கம் செய்துவிட்டார்கள். இந்திய சூழலில் ஜாதி என்ற வார்த்தை மிகவும் அதிகமாக அடிபடும் வார்த்தையாக உள்ளது.

மக்களை கீழ்ஜாதி மேல்ஜாதி என்று பிரித்துப் பார்க்கும் இந்துக்களின் மொழி நடையினால், அனேகருக்கு "ஜாதி" என்ற வார்த்தையை பைபிளில் பார்க்கும் போது, பைபிள் கூட ஜாதி பார்க்கச்சொல்கிறதா? என்ற எண்ணம் வந்துவிடுகிறது.

மனிதர்களை பிறப்பின் அடிப்படையில் பிரித்துப் பார்க்கவேண்டுமென்றால், தேவன் முதல் மனிதனை படைக்காமல், முதல் மனிதர்களை படித்து இருந்திருப்பார். ஒரே ஒரு ஆதாமை படைக்காமல், பிராமண் ஆதாம் என்றும், சத்திரியன் ஆதாம், வைசியன் ஆதாம், சூத்திரன் ஆதாம் என்று ஒவ்வொருவரையும் வெவ்வேறு இடங்களிலிருந்து படைத்து இருந்திருப்பார்.

எனவே, நாடு என்ற வார்த்தையைத் தான், பைபிளில் 'ஜாதி' என்று குறிப்பிட்டள்ளார்கள் என்பதை புரிந்துக்கொள்ளவேண்டும். பைபிள் பொது மொழிப்பயெர்ப்பில் "ஜாதி" என்ற வார்த்தைக்கு பதிலாக, நாடு என்ற வார்த்தையை சரியாக பயன்படுத்தியுள்ளனர்.

எபிரேய வார்த்தை "கொய்" என்பதற்கு எபிரேய அகராதியில் 1471 எண் கொடுக்கப்பட்டுள்ளது (**https://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H1471&t=KJV** ). நாடு/ஜாதி/

ஜென்டைல் என்ற வார்த்தை யூதர்களுக்கு மட்டுமல்ல, அனைத்து நாடுகளையும் குறிக்க இவ்வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதற்கு சில உதாரணங்கள்.

**நோவாவின் பிள்ளைகள் தனி நாடுகளாக வளருவார்கள்:**

Gen 10:32: These are the families of the sons of Noah, after their generations, in their nations: H1471 and by these were the nations H1471 divided in the earth after the flood.

**ஆதியாகமம் 10:32**

தங்கள் ஜாதிகளிலுள்ள தங்களுடைய சந்ததிகளின்படியே நோவாவுடைய குமாரரின் வம்சங்கள் இவைகளே; ஜலப்பிரளயத்துக்குப் பின்பு இவர்களால் பூமியிலே ஜாதிகள் பிரிந்தன.

**பொது மொழிப்பயெர்ப்பு:**

நோவாவின் பிள்ளைகளால் உருவான குடும்பப்பட்டியல் இதுதான். இவர்கள் தங்கள் நாடுகளின்படி வரிசைப்படுத்தப்பட்டுள்ளனர். வெள்ளப் பெருக்குக்குப் பிறகு இக்குடும்பங்கள் தோன்றி பூமி முழுவதும் பரவினர்.

தமிழில் “ஜாதி” என்ற வார்த்தை, உண்மையில் "நாடு" என்று மொழியாக்கம் செய்யப்பட்டு இருந்திருக்கவேண்டும்.

**ஆபிரகாமின் சந்ததி பெரிய நாடு ஆகும் என்ற ஆசீர்வாதம்:**

Gen 12:2 : And I will make of thee a great nation, H1471 and I will bless thee, and make thy name great; and thou shalt be a blessing:

ஆதியாகமம் 12:2. நான் உன்னைப் பெரிய **ஜாதியாக்கி**, உன்னை ஆசீர்வதித்து, உன் பேரைப் பெருமைப்படுத்துவேன்; நீ ஆசீர்வாதமாய் இருப்பாய்.

**பொது மொழிப்பயெர்ப்பு:**

நான் உன் மூலமாக ஒரு பெரிய தேசத்தை உருவாக்குவேன். நான் உன்னை ஆசீர்வதிப்பேன். உனது பெயரைப் புகழ்பெறச் செய்வேன். ஜனங்கள் மற்றவர்களை ஆசீர்வதிக்க உன் பெயரைப் பயன்படுத்துவர்.

**இஸ்மவேலின் பிள்ளைகளும் பெரிய நாடாக மாறுவார்கள்:**

Gen 17:20: And as for Ishmael, I have heard thee: Behold, I have blessed him, and will make him fruitful, and will multiply him exceedingly; twelve princes shall he beget, and I will make him a great nation. H1471

ஆதியாகமம் 17: 20. இஸ்மவேலுக்காகவும் நீ செய்த விண்ணப்பத்தைக் கேட்டேன்; நான் அவனை ஆசீர்வதித்து, அவனை மிகவும் அதிகமாகப் பலுகவும் பெருகவும்

பண்ணுவேன்; அவன் பன்னிரண்டு பிரபுக்களைப் பெறுவான்; அவனைப் பெரிய ஜாதியாக்குவேன்.

**பொது மொழிப்பெயர்ப்பு:**

"நீ இஸ்மவேலைப்பற்றிச் சொன்னாய். நான் அவனையும் ஆசீர்வதிப்பேன். அவனுக்கும் நிறைய பிள்ளைகள் இருக்கும். அவன் 12 பெரிய தலைவர்களுக்குத் தந்தையாவான். அவனது குடும்பமே ஒரு நாடாகும்.

**இஸ்ரேல் மக்கள் தவறு செய்யும் போது, இதர நாடுகளின் கைகளில் அவதிப்படுவார்கள்:**

இங்கும் இதே வார்த்தை, "நாடுகள்" என்ற வருகிறது. மற்ற நாடுகளின் கைகளில் இஸ்ரேல் மக்கள் அவதிப்படுவார்கள் என்ற பொருள் வருகிறது. நாடுகள் என்ற வார்த்தை தான் ஜென்டைல், புறஜாதி என்று பயன்படுத்துகிறோம்.

Lev 26:38: And ye shall perish among the **heathen, H1471** and the land of your enemies shall eat you up.

லேவியராகமம் 26:38: **புறஜாதிகளுக்குள்ளே** அழிந்துபோவீர்கள்; உங்கள் சத்துருக்களின் தேசம் உங்களைப் பட்சிக்கும்.

**பொது மொழிப்பெயர்ப்பு:**

வேறு நாடுகளில் நீங்கள் காணாமல் போவீர்கள். உங்கள் பகைவரின் நாடுகளில் மறைந்து போவீர்கள்.

Refer: **https://en.wikipedia.org/wiki/Gentile** & **https://www.britannica.com/topic/Gentile**

எனவே, ஜென்டைல் என்று ஆங்கிலத்தில் சொல்வதோ, தமிழ் மொழியாக்க பைபிளில் வரும் "ஜாதி" என்ற வார்த்தையோ "நாடு" என்பதைத் தான் குறிக்கும்.



**கேள்வி 49:** கிறிஸ்தவர்கள் எதை நம்புகிறார்கள்?

**பதில் 49:** கிறிஸ்தவர்களின் நம்பிக்கையைப் பற்றிய சுருக்கமான விளக்கம்:

1. தனிச்சிறப்புமிக்க "தேவன் ஒருவரே" என்று நாங்கள் நம்புகிறோம்.

உபாகமம் 6:4 இஸ்ரவேலே, கேள்: நம்முடைய தேவனாகிய கர்த்தர் ஒருவரே கர்த்தர்.

2. இந்த உலகத்தில் உள்ள அனைத்தையும் படைத்தவர் "தேவன்". தன்னுடைய வார்த்தையினால் இவைகள் அனைத்தையும் உருவாக்கினார்.

பைபிள் சொல்கிறது: (ஆதியாகமம் 1:3): தேவன் வெளிச்சம் உண்டாகக்கடவது என்றார், வெளிச்சம் உண்டாயிற்று. அவருடைய வார்த்தை மிகவும் சக்தி வாய்ந்தது.

3. தேவனால் படைக்கப்பட்டவர்களாகிய நாம் எப்படி தேவனை அறிந்துக்கொள்ள முடியும்? மிகவும் சிறியவர்களும் அற்பமானவர்களாகிய நாம் எப்படி தேவனுடைய சிந்தனைகளை அறிந்துக்கொள்ள முடியும்? நம்மால் முடியும் - தேவன் தன்னை வெளிப்படுத்த சித்தமானதால் தான் நம்மால் அவரை அறியமுடிகிறது. அவர் தன்னை வெளிப்படுத்தும் தேவனாக இருக்கிறார்.

உபாகமம் 29:29 மறைவானவைகள் நம்முடைய தேவனாகிய கர்த்தருக்கே உரியவைகள்; வெளிப்படுத்தப்பட்டவைகளோ, இந்த நியாயப்பிரமாணத்தின் வார்த்தைகளின்படியெல்லாம் செய்யும்படிக்கு, நமக்கும் நம்முடைய பிள்ளைகளுக்கும் என்றென்றைக்கும் உரியவைகள்.

**தேவன் தன்னைப்பற்றி எவைகளை நமக்கு வெளிப்படுத்தியுள்ளார்?**

**4. அவர் பரிசுத்தமானவர் - அவர் அப்பழுக்கற்றவர்.**

அவரிடம் எந்த ஒரு குறையும் இல்லை. அவருக்கும் பாவத்திற்கும் அல்லது தீய சிந்தனைக்கும் எந்த சம்மந்தமும் இல்லை. ஆபகூக் 1:13ம் வசனம் சொல்கிறது, "தீமையைப் பார்க்கமாட்டாத சுத்தக்கண்ணனே, அநியாயத்தை நோக்கிக்கொண்டிருக்கமாட்டீரே;..."

**5. அவர் நீதியுள்ளவர்**

இதன் பொருள் என்னவென்றால், தீமை செய்யும் எல்லாரும் தண்டிக்கப்படவேண்டும் என்பதாகும். இதைப் பற்றி மக்கள் சில நேரங்களில் குழம்பி விடுகின்றனர். நீதியும் இரக்கமும் ஒன்றல்ல, இவை இரண்டும் வெவ்வேறானவை ஆகும். நீதி என்றால், நீங்கள் சட்டத்தை மீறினால், கண்டிப்பாக நீங்கள் அபராதம் செலுத்தியே ஆகவேண்டும் என்பதாகும்.

தேவன் தன் இயற்கையான குணமான பரிசுத்தத்தை விட்டுக்கொடுக்கமாட்டார். தவறு செய்யும் எல்லாரையும் அவர் தண்டிப்பார்.

தேவன் நம்முடைய நல்ல செயல்களை எல்லாம் தராசின் ஒரு தட்டில் வைத்து, நம்முடைய எல்லா தீய செயல்களை அடுத்த தட்டில் வைத்து, எந்த பக்கம் அதிக கனம் உள்ளது என்று பார்ப்பார் என்று பொருள் அல்ல. ஒரு எடுத்துக்காட்டுக்காக: நான் உங்கள் சகோதரனை கொலை செய்துவிட்டால், ஒரு நீதிபதி, "பரவாயில்லை, போகட்டும், நாம் இவனை விடுதலை செய்துவிடலாம், ஏனென்றால், இவன் தன் வாழ்நாட்களில் நிறைய நல்ல செயல்களை செய்துள்ளான்" என்று தீர்ப்பு வழங்குவாரா? அப்படி சொல்வாரானால், அவர் ஒரு நீதியுள்ள நீதிபதியாக இருக்கமுடியுமா? மக்கள் செய்யும் தவறுகளை

பார்க்காதவாறு தேவன் தன் கண்களை மூடிக்கொண்டு இருக்கமாட்டார். தேவன் தீமையை சகிப்பதில்லை.

ஆனால், நாம் அனைவரும் தூசுக்கு சமமானவர்கள் என்று தேவனுக்குத் தெரியாதா? எப்படியென்றால், நாம் தவறுகள் செய்ய பலவீனமானவர்கள் என்று தேவனுக்குத் தெரியாதா? பழுதே இல்லாத ஆணோ அல்லது பெண்ணோ யாரும் இல்லை. ஆம், இது நமக்குத் தெரியும். விஷயம் இப்படி இருக்கும் போது, நாம் செய்யும் தவறுகளை தேவன் கவனிக்காமல் விட்டுவிடுவார் என்று அர்த்தமா? தேவன் பரிசுத்தமானவர் மற்றும் அவர் நீதியுள்ளவர், ஆகையால், நம் தவறுகளை அவர் நிச்சயமாக கவனிப்பார். இவைகளை நாம் புரிந்துக்கொண்டோமானால், நாம் எவ்வளவு மோசமான நிர்பந்தமான நிலையில் இருக்கிறோம் என்பதை உணரமுடியும்.

நாம் நேர்மையுள்ளவர்களாக இருந்தால், நாம் என்றுமே சுயநலமுடன் அல்லது தவறான சிந்தனையை உடையவர்களாக இல்லை என்றும், நாம் பொய்யே ஒரு முறை கூட சொல்லவில்லை என்றும் சொல்லமுடியுமா? பரிசுத்தமான தேவனுக்கு முன்பாக நமக்கு சுத்த இதயம் உள்ளது என்று யார் சொல்லமுடியும்? இனிமேல் நாம் தவறுகளே செய்யாமல் வாழ்வோம் என்று சொன்னாலும், கடந்த கால வாழ்க்கையில் நடந்த தவறுகளுக்கு நாம் சொல்லும் பதில் என்ன? தேவனுக்கு நியாபக சக்தி குறைவாக இருக்குமா? நல்ல செயல்களைச் செய்வது, தீய செயல்களை துடைத்துவிடுமா? இல்லை என்பது தான் பதில்.

நம்மில் ஒவ்வொருவரும் தேவனின் நியாயத்தீர்ப்பிற்கும், நரக நெருப்பிற்கும் உள்ளாக வேண்டியவர்கள். இது ஒன்றும் "என்னை மன்னித்துவிடும், அடுத்த முறை நான் தவறுகள் செய்யாமல் இருக்க முயற்சி செய்கின்றேன்" என்று ஒரு சின்ன ஜெபம் செய்தால் தீர்ந்துவிடும் காரியம் அல்ல. இப்படி செய்வதில் எந்த நியாயமும் இல்லை.

**ஒரு எடுத்துக்காட்டு:**

ஒரு சாலையில் சிகப்பு விளக்கு எரிந்துக்கொண்டு இருக்கும் போது, நான் நிற்காமல் சென்றுக்கொண்டு இருந்தால், ஒரு அதிகாரி என்னை நிறுத்தினால், "அய்யா, நான் இனி என் வாழ்நாட்களில் எப்போதும் பச்சை வண்ண விளக்கு எரிந்த பின்பு செல்கின்றேன்" என்றுச் சொன்னால், இதனால் ஏதாவது நன்மை விளையுமா? இப்படியாக நாம் சொல்வது ஒரு அதிகாரியிடம் வேலை செய்யாது அல்லது இதனால் பயன் இல்லை என்று இருக்கும் போது, பரிசுத்தமான மற்றும் நீதியான தேவனிடம் எவ்வளவு குறைவாக இது வேலை செய்யும். இவ்விதமாக எழுதப்பட்டுள்ளது: (ரோமர் 6:23) "பாவத்தின் சம்பளம் மரணம்".

நம் எல்லாருக்கும் ஒரு நற்செய்தி என்னவென்றால், கதை இதோடு முடியவில்லை.

**6. தேவன் சர்வவல்லவர் (God is Almighty)**

தேவன் எதை செய்யவிரும்புவாரோ அதை அவர் செய்ய வல்லவர். எரேமியா 32:17 வசனம் சொல்கிறது "ஆ, கர்த்தராகிய ஆண்டவரே, இதோ, தேவரீர் உம்முடைய மகா பலத்தினாலும், நீட்டப்பட்ட உம்முடைய புயத்தினாலும், வானத்தையம் பூமியையும் உண்டாக்கினீர்; உம்மாலே செய்யக்கூடாத அதிசயமான காரியம் ஒன்றுமில்லை".

அவருக்கு எந்த எல்லையும் இல்லை, அவருடைய வல்லமைக்கும் எல்லையில்லை.

தேவன் தன் நிலையில் சரியாக உள்ளார். தேவன் முரண்படுவதில்லை. அவர் தன் பரிசுத்தம் மற்றும் நீதியான குணத்திற்கு எதிராக முரண்படுவதில்லை. அவர் தன் சட்டத்தை தானே மீறுவதில்லை.

**நான் உங்களிடம் ஒரு கேள்வியை கேட்கட்டும்:**

"நீங்கள் ஒருவரைப் பற்றி எப்படி அறிந்துக்கொள்கிறீர்கள்?" மற்றவர்களை வெளிப்புறமாக நீங்கள் காணுவதினால் அவர்களைப் பற்றி ஓரளவிற்குச் சொல்ல வாய்ப்பு உள்ளது. ஆனால், அவர்கள் என்ன சிந்திக்கிறார்கள் என்றும் அவர்கள் உள்ளங்களில் மறைந்திருப்பது என்ன என்பதும் உங்களால் சொல்லமுடியாது. நாம் ஒருவரின் வார்த்தைகளை கேட்கவேண்டும். அவர்கள் இதயங்களில் என்ன மறைந்துள்ளது என்றும், அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்றும் அவர்களின் வார்த்தைகள் தான் நமக்கு சொல்லும்.

நான் என் விருப்பங்களை உங்களோடு பகிர்ந்துக்கொள்ள வேண்டுமானால், அதற்கு பல வழிகள் உள்ளன. என் சிந்தனைகளை எழுதி உங்களுக்கு ஒரு கடிதமாக அனுப்பலாம். அதை நீங்கள் படிக்கலாம். ஆனால், உங்களுக்கு சில கேள்விகள் எழலாம், அல்லது என் கடிதத்தில் உள்ளவைகளை நீங்கள் புரிந்துக்கொள்ளாமல் இருக்கலாம். இதற்கு ஒரு சரியான வழி என்னவென்றால், என்னை நன்றாக அறிந்த என் நண்பனிடம் அந்த கடிதத்தை கொடுத்து உங்களிடம் அனுப்புவது தான். என் நண்பன் அந்த கடிதத்தில் நான் என்ன சொல்லியுள்ளேனோ அதை உங்களுக்கு விவரமாக விளக்குவார். இதைவிட ஒரு நல்ல வழிமுறை என்னவென்றால், நான் உங்களுக்கு தொலைபேசி மூலம் நேரடியாக தொடர்பு கொள்வது தான். இவைகள் எல்லாவற்றையும் விட சிறந்த முறை என்னவென்றால், நீங்கள் இருக்கும் இடத்திற்கு நான் வந்து, உங்களோடு நேரடியாக பேசுவது தான்.

தேவனுடைய வார்த்தையின் மூலமாகத் தான் இந்த உலகம் படைக்கப்பட்டுள்ளது. அவரது வார்த்தைகள் நாம் கற்பனை செய்யவும் புரிந்துக்கொள்ளவும் முடியாத அளவிற்கு வல்லமையுடையது. நாம் அவரை அறியவேண்டும் என்று அவர் விரும்புகிறார். அவர் தன் வார்த்தைகளை சட்டமாக நமக்கு கொடுத்துள்ளார். அவர் தன் வார்த்தைகளை விளக்குவதற்கும் சந்தேகங்களை தீர்ப்பதற்கும் தீர்க்கதரிசிகளை அனுப்பியுள்ளார்.

எபிரேயர் 1:1 "பூர்வகாலங்களில் பங்குபங்காகவும் வகைவகையாகவும், தீர்க்கதரிசிகள் மூலமாய்ப் பிதாக்களுக்குத் திருவுளம் பற்றின தேவன்,"

தேவன் மிகவும் வல்லமையுள்ளவர், அவரால் முடியாதது ஒன்றுமில்லை. தேவன் விரும்பினால், அவருடைய வார்த்தையை நம்மிடம் அனுப்பமுடியும், அந்த வார்த்தை நம் முகத்திற்கு நேராக வரமுடியும். அவரது வார்த்தை மனிதனாக வரமுடியும்.

**7. தேவன் அன்பாக இருக்கிறார் (God is LOVE)**

தேவன் நம்மில் அன்பு கூறுகிறார் மற்றும் நாம் அவரை அறிந்துக்கொள்ளவேண்டும் என்று விரும்புகிறார், ஆகையால், அவரது வார்த்தையை மனிதனாக அனுப்பினார்.

இப்படியாக பைபிளில் எழுதப்பட்டுள்ளது: (யோவான் 1:1, 14) ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தை தேவனாயிருந்தது... அந்த வார்த்தை மாம்சமாகி, கிருபையினாலும் சத்தியத்தினாலும் நிறைந்தவராய், நமக்குள்ளே வாசம்பண்ணினார்; அவருடைய மகிமையைக் கண்டோம்; அது பிதாவுக்கு ஒரேபேறானவருடைய மகிமைக்கு ஏற்ற மகிமையாகவே இருந்தது.

இயேசு தேவனுடைய வார்த்தையாக இருக்கிறார். அவர் பரிசுத்தமான தேவனுடைய வார்த்தையாக உள்ளார். ஆபிரகாமையும் அவரது மகனையும் ஞாபகம் செய்துக்கொள்ளுங்கள் (ஆதியாகமம் 22: 1-14). ஆபிரகாம் தேவனுக்கு கீழ்படியவேண்டும் என்றும் அவருக்கு தன்னை சமர்பிக்கவேண்டும் என்றும் விரும்பினார். அவர் தன் மகனை எடுத்து தேவனுக்கு பலியிட கூட தயங்கவில்லை, போகும் வழியில் அவரது மகன், "நெருப்பும் கட்டையும் உள்ளது, ஆனால், பலியிட ஆடு எங்கே?" என்று கேட்டார். அதற்கு ஆபிரகாம் பதில் அளித்தார், "தேவன் அவரே பலிக்கான ஆட்டை தருவார் என்றுச் சொன்னார்" ஆபிரகாம் தன் மகனை பலிபீடத்தில் கிடத்தி, கத்தியால் பலியிட முயற்சித்த வேளையில், தேவன் அவரை அழைத்தார், "ஆபிரகாமே, உன் மகன் மீது உன் கையை வைக்காதே?" மற்றும் ஆபிரகாம், தலையை ஏறெடுத்து பார்க்கும் போது, தேவன் தயார்படுத்தி வைத்திருந்த ஒரு ஆட்டை கண்டார், அந்த ஆடு முட்களின் இடையில் மாட்டிக்கொண்டு இருந்தது, அதை எடுத்து ஆபிரகாம் தேவனுக்கு பலியிட்டார். அவரது மகன் தப்பிக்கப்பட்டார்.

"இயேசுவை தேவ ஆட்டுக்குட்டி" (யோவான் 1:16) என்று பைபிள் அழைக்கிறது. தீர்க்கதரிசியான யோவான் "இதோ, உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டி" என்று பறைசாற்றும் போது, இதன் பொருள், இயேசு நம்மை அடிமைத்தனத்திலிருந்து விலைசெலுத்தி விடுவித்துள்ளார் என்பதாகும். தேவனுடைய வார்த்தை (இயேசு) நம் மீது வைத்த அன்பினாலே, நமக்கு வரவேண்டிய தண்டனையை, நியாயத்தீர்ப்பை தன் மேல் ஏற்றுக்கொண்டார்.

ஆனால், மரித்தவர் அப்படியே இருந்துவிடவில்லை, அப்படி அவர் இருக்கவும் முடியாது, அவர் வெற்றியுள்ளவராக உயிரோடு எழுந்தார், மற்றும் மரணத்தை ஜெயித்தார்.

**நாம் தேவனை அறிந்துக்கொள்வது எப்படி?**

இது சுலபம் அல்ல - இதற்கு நமக்கு தாழ்மை வேண்டும்.

நாம் தூசுக்கு சமம் என்றும், நமக்கு சுத்தமில்லாத இதயம் உண்டென்றும், மற்றும் நம்முடைய செயல்களினால் நமக்கு நரகம் தான் கிடைக்கும் என்றும் நாம் உணர்ந்து தாழ்மையுடன் ஒப்புக்கொள்ளவேண்டும்.

தேவன் நமக்காக என்ன செய்து இருக்கிறார் என்பதை உணர்ந்து நாம் அதை தாழ்மையோடு அங்கீகரிக்கவேண்டும். அவர் நம் அழுக்கு நீங்க நம்மை கழுவுவார், நம்மை பரிசுத்தவான்களாக மாற்றுவார், மற்றும் தன்னுடைய ஆவியை நமக்கு உதவி செய்யும்படி அனுப்பி, நாம் ஒரு கீழ்படிதல் உள்ள வாழ்க்கையை வாழ உதவிபுரிவார்.

தேவனை நாம் அறிந்துக்கொண்டால் நமக்குள் ஒரு விடுதலை மற்றும் எல்லையில்லா ஆனந்தம் உண்டாகும். தேவன் ஒருவரே, அவர் தான் உலகத்தைப் படைத்தவர், அவர் தன்னை மக்களுக்கு வெளிப்படுத்தியவர், அவரே பரிசுத்தர், நீதியுள்ள நியாயாதிபதி, அவர் சர்வவல்லவர் மற்றும் அன்பானவர்.

அவர் நம்மை தன் வேலைக்காரர்கள் என்று அழைப்பதில்லை, அதற்கு பதிலாக "பிள்ளைகள்" என்று நம்மை அழைக்கிறார். இயேசு சொல்கிறார் (யோவான் 15:15) "இனி நான் உங்களை ஊழியக்காரரென்று சொல்லுகிறதில்லை, ஊழியக்காரன் தன் எஜமான் செய்கிறதை அறியமாட்டான். நான் உங்களைச் சிநேகிதர் என்றேன்....".

இவ்விதமாக எழுதப்பட்டுள்ளது (யோவான் 1:12), அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்ளவர்களாய் அவரை ஏற்றுக் கொண்டவர்கள் எத்தனைபேர்களோ, அத்தனைபேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு அதிகாரங் கொடுத்தார்.



**கேள்வி 50:** முன்னால் ரோமன் கத்தோலிக்க போப் (John Pope II) அவர்கள், குர்ஆனுக்கு முத்தமிட்டுள்ளாரே, அவர் செய்தது தவறா?

**பதில் 50:** முதலாவதாக, "அவர் செய்தது நிச்சயமாக 100% தவறு, இதில் மாற்று கருத்தில்லை".

இரண்டாவதாக, அவர் இஸ்லாமிய நாடாகிய ஈராக்கிற்கு சென்றிருந்தபோது, அவருக்கு மதிப்பினிமித்தம் கொடுக்கப்பட்ட குர்ஆனை அவர்

பெற்றுக்கொண்டார். குர்ஆனுக்கு முன்பாக குனிந்தும், அதை வாங்கிய பிறகு முத்தமும் கொடுத்தார். அவர் அறியாமையில் இருந்தார், குர்ஆன் பற்றிய ஞானம் அவரிடமில்லை.

- குர்ஆன் இயேசுவின் தெய்வீகத்தன்மையை மறுக்கிறது என்று அவருக்குத்தெரியுமா?
- குர்ஆன் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவர் என்ற திரித்துவ கோட்பாட்டை மறுக்கிறது என்பதை அவர் அறிவாரா?
- இயேசு சிலுவையில் மரிக்கவில்லை என்று குர்ஆன் சொல்கிறது, இதனை போப் ஏற்பாரா?
- இயேசு உயிர்த்தெழவில்லை என்றும் குர்ஆன் சொல்கிறது, அப்படியானால், போப் இதனை அங்கீகரிப்பாரா?
- “என்னைத்தவிர பிதாவினிடத்தில் யாரும் போகமுடியாது” என்று இயேசு சொல்லியுள்ளாரே, இதனை அறிந்தும் போப் அவர்கள், “பிதாவினிடத்தில் சேருவதற்கு முஹம்மதுவும் ஒரு வழி” என்று உலகிற்கு சொல்லவருகின்றாரா?

போப் அவர்கள் ஒரு மரியாதைக்காகத்தான் அப்படி குர்ஆனுக்கு முத்தமிட்டார் என்றுச் சொன்னால், மரியாதைக்காக கைகளில் அதனை பெற்றுக்கொண்டால் போதாதா? ஒரு மார்க்கத்தின் தலைவர் இப்படிப்பட்ட விஷயங்களில் மிகவும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

ஒருவேளை குர்ஆனில் மேற்கண்ட போதனைகள் உள்ளன என்பதை போப் அறியாமல் இருந்திருக்கலாம் அல்லவா? என்று கேட்டால், "ஆம், இருக்கலாம், அவருக்கு குர்ஆன் பற்றிய அடிப்படைகள் தெரியாமல் இருந்திருக்கலாம்".

ஒருவேளை, "ஈராக்கில் வாழும் கத்தோலிக்க கிறிஸ்தவர்களுக்காக அவர்களின் பாதுகாப்பிற்காக அவர் அப்படி செயல்பட்டு இருந்திருக்கலாம் அல்லவா" என்று கேட்டால், "ஆம் இதுவும் ஒரு காரணமாக இருக்கலாம்". உண்மையில் அன்றிலிருந்து இன்று வரை ஈராக்கின் கிறிஸ்தவர்கள், போப்பின் குர்ஆன் முத்தத்திற்காக பாதுக்காக்கப்பட்டு இருக்கிறார்களா? என்பது மிகவும் முக்கியமான கேள்வி.

## தலைப்பு: இஸ்லாமிய கலைச்சொற்கள்/அகராதி (60 கேள்வி பதில்கள்)

முஸ்லிம்களிடம் பேசும் போது, 'அஸ்ஸலாமு அலைக்கும்' என்று வாழ்த்திவிட்டு, அதன் பிறகு பேச்சை தொடருவார்கள். ஒரு எதிர்கால செயல்பற்றி பேசும் போது

"இன்ஷா அல்லாஹ்" என்றுச் சொல்வார்கள். இந்த அரபி வார்த்தைகளின் அர்த்தமென்ன? இவைகளின் முக்கியத்துவம் என்ன? போன்ற போன்ற கேள்விகளுக்கு இந்த தொடரில் பதில்கள் கொடுக்கப்படுகின்றன.

இந்த தொடரில் இஸ்லாமிய கலைச்சொற்களை மட்டுமல்ல, இஸ்லாமில் முக்கியத்துவம் வாய்ந்த சில நபர்களின் விவரங்களையும், இடங்களையும் கற்றுக்கொள்வோம். இஸ்லாமை ஆழமாக அறிவதற்கு இவைகள் உதவும்.

அரபி மற்றும் எபிரேய மொழிகள் செமிடிக் மொழிக் குடும்பத்தைச் சார்ந்த மொழிகளாக இருப்பதினால், தேவையான இடங்களில் அரபி வார்த்தைகளுக்கு இணையான எபிரேய வார்த்தைகளையும் சம்மந்தப்படுத்தி பார்க்கப்போகிறோம். இதன் மூலமாக, பழைய ஏற்பாட்டின் முக்கியமான சில வார்த்தைகளையும் கற்றுக்கொள்ளலாம்.

**கேள்வி 1: அப்த் (ABD) என்றால் என்ன?**

**பதில் 1:** அரபியில் இதன் பொருள் "அடிமை" என்பதாகும். இது அரேபிய பெயர்களில் பரவலாக பயன்படுத்தப்படும் வார்த்தையாகும். உதாரணத்திற்கு, முஹம்மதுவின் தந்தையின் பெயர் "அப்துல்லாஹ்" என்பதாகும். இதன் பொருள் "அல்லாஹ்வின் அடிமை" ஆகும். "இறைவனுக்கு முழுவதுமாக கீழ்படிந்த அடிமையாக வாழ்வது தான்" முஸ்லிம்களின் நம்பிக்கையின் படி ஒரு சிறந்த வாழ்க்கையாகும்.

இதற்கு நேர் எதிராக, பைபிளில் நாம் காண்கின்ற படி, இயேசு தம்முடைய சீடர்களை "தன் அடிமைகள்" என்று அழைக்காமல், அவர்களை "தன் நண்பர்கள்" என்று அழைத்தார்.

யோவான் 15:15 இனி நான் உங்களை ஊழியக்காரரென்று சொல்லுகிறதில்லை, ஊழியக்காரன் தன் எஜமான் செய்கிறதை அறியமாட்டான். **நான் உங்களைச் சிநேகிதர் என்றேன்**, ஏனெனில் என் பிதாவினிடத்தில் நான் கேள்விப்பட்ட எல்லாவற்றையும் உங்களுக்கு அறிவித்தேன்.

**இஸ்லாமிய பெயர்கள்:**

- **அப்துல்**: அடிமை அல்லது வேலைக்காரன் (யாருக்கு? அல்லாஹ்விற்கு)
- **அப்துல் நபி**: நபியின் அடிமை (அ) வேலைக்காரன்
- **அப்துல் ஜஹ்ரா**: முஹம்மதுவின் மகள் ஃபாத்திமா ஜஹ்ரா அவர்களின் அடிமை
- **அப்துல் ஹுசைன்**: ஹுசைனின் அடிமை (இவர் முஹம்மதுவின் பேரன்)

**அரபி கிறிஸ்தவர்களிடமிருந்து சில உதாரணங்கள்:**

- **அப்துல் மஸீஹ்:** மேசியாவின் அடிமை (மேசியா என்றால் இயேசு)
- **அப்துல் ஸாலிப்:** சிலுவையின் அடிமை (அ) ஊழியக்காரன்

- **அப்துல் ஷஹித்:** உயிர்தியாகம் செய்தவருக்கு (இயேசுவிற்கு) அடிமை/ஊழியக்காரன்
- **அப்த் யஷூ:** இயேசுவின் அடிமை (இயேசு தாஸ் என்று தமிழில் சொல்வோமே அதே பெயர் அரபியில்)

Source: **https://en.wikipedia.org/wiki/Abd_(Arabic)**



**கேள்வி 2: அபூ (ABU) என்றால் என்ன?**

**பதில் 2:** இதன் பொருள் ”தந்தை” என்பதாகும். அதாவது "இன்னாருடைய தந்தை" என்ற பொருளில் இவ்வார்த்தை பயன்படுத்தப்படுகின்றது. உதாரணத்திற்கு: அபூ ஹமீத், அபூ பக்கர் போன்ற பெயர்களை குறிப்பிடலாம். இதன் பொருள் ”ஹமீதுடைய தந்தை, பக்கருடைய தந்தை” என்பதாகும்.

**இஸ்லாமிய உதாரணங்கள்:**

- அபூ ஹுரைரா
- அபூ மூஸா
- அபூ சுஃப்யான்
- அபூ மஸ்வூத்

**யூதர்களின் பயன்பாடு:**

எபிரேய மொழியில் அப் (Ab) என்றும் அராமிக் மொழியில் அப்பா (Abba) என்றும் பயன்படுத்தப்படுகின்றது.

- அப்ராம் : உயர்ந்த தகப்பன்
- அப்ரஹாம்: பல ஜனங்களுக்கு தகப்பன்
- அப்சலோம்: அமைதியின் தகப்பன்

**புதிய ஏற்பாட்டில் அப்பா (Abba):**

புதிய ஏற்பாட்டில் முன்று முறை அப்பா (Abba) என்ற அராமிக் வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது.

இயேசு ஜெபிக்கும் போது, அப்பா, பிதாவே (Abba, Father) என்று ஜெபித்தார். இதனை கிரேக்க மொழியாக்கம் செய்யும் போது கூட, அப்பா (Abba) என்ற வார்த்தையை அப்படியே எழுதியுள்ளார்கள்.

**மாற்கு 14:36**

36. **அப்பா பிதாவே (Abba, Father),** எல்லாம் உம்மாலே கூடும்; இந்தப் பாத்திரத்தை என்னிலிருந்து எடுத்துப்போடும், ஆகிலும் என் சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்றார்.

**மீதமுள்ள இரண்டு இடங்கள் ரோமர் 8:15 மற்றும் கலாத்தியர் 4:6 ஆகும்.**

ரோமர் 8: 15. அந்தப்படி, திரும்பவும்பயப்படுகிறதற்கு நீங்கள் அடிமைத்தனத்தின் ஆவியைப் பெறாமல், **அப்பா பிதாவே (Abba, Father)**, என்று கூப்பிடப்பண்ணுகிற புத்திர சுவிகாரத்தின் ஆவியைப் பெற்றீர்கள்.

கலாத்தியர் 4:6. மேலும் நீங்கள் புத்திரராயிருக்கிறபடியினால், **அப்பா, பிதாவே! (Abba, Father)** என்று கூப்பிடத்தக்கதாக தேவன் தமது குமாரனுடைய ஆவியை உங்கள் இருதயங்களில் அனுப்பினார்.

சிலர் அறிஞர்கள் இப்படியாக கூறுவார்கள், அதாவது ஆங்கிலத்தில் டாட்டி(Daddy) என்று அழைக்கும் போது, அழைப்பவர் குழந்தையாக மாறி இன்னும் அதிக அன்போடு அழைப்பது போன்று அப்பா (Abba) என்ற வார்த்தை உள்ளது என்று கூறுகிறார்கள்.



**கேள்வி 3: அல் (Al)**

**பதில் 3:** இந்த "அல்" வார்த்தையானது ஆங்கிலத்தில் உள்ள "the" என்ற வார்த்தைக்கு சமமானதாகும் (definite article - 'the'). அரபி எழுத்தாளர்கள் அரபி பெயர்களை வித்தியாசமாக எழுதுவதினால் அனேக முறை மக்கள் இந்த வார்த்தையினால் குழப்பமடைவது உண்டு, அதாவது நாம் ஏற்கனவே படித்த பெயர் இது தானா அல்லது வேறு பெயரா என்ற குழப்பம் வருவதுண்டு.

இவ்வார்த்தைப் பற்றிய சில விவரங்களை சரியாக புரிந்துக்கொண்டால் இதில் குழப்படைவதற்கு ஒன்றுமில்லை.

இஸ்லாமிய சரித்திர ஆசிரியர் மற்றும் குர்-ஆன் விரிவுரையாளர் "தபரி" என்பவரை சில அரபி எழுத்தாளர்கள் "அல்-தபரி (Al-Tabari)" என்று எழுதுவார்கள், வேறு சிலர் "அத்-தபரி (at-Tabari)" என்று எழுதுவார்கள். இதே போல அல்லாஹ்விற்கு உள்ள பெயர்களை எழுதும் போது கூட:

- சிலர் ---> அல்-ரஹ்மான், அல்-ஸமி, அல்-ஷகூர், அல்-நூர் ... என்று எழுதுவார்கள்.
- வேறு சிலர் ---> அர்-ரஹ்மான், அஸ்-ஸமி, அஷ்-ஷகூர், அந்-நூர் ... என்று எழுதுவார்கள்.

அரபி மொழியில் உள்ள எழுத்துக்கள் இரண்டு வகையாக பிரிக்கப்படுகின்றன: 1) சந்திர எழுத்துக்கள் 2) சூரிய எழுத்துக்கள்.

- க, ம, ப. . . போன்ற எழுத்துக்கள் சந்திர எழுத்துக்கள் ஆகும்.
- த, ந, ச. . . போன்ற எழுத்துக்கள் சூரிய எழுத்துக்கள் ஆகும்.

(சந்திர/சூரிய எழுத்துக்கள் அனைத்தையும் பற்றி அறிய **இந்த விகிபிடியா தொடுப்பை** சொடுக்கவும்.)

சந்திர எழுத்துக்களுக்கு முன்பாக "அல்" வந்தால், அந்த எழுத்துக்களை தெளிவாக உச்சரிக்க முடியும், அப்படிப்பட்ட எழுத்துக்களை சந்திர எழுத்துக்கள் என்றுச் சொல்வார்கள்.

**உதாரணத்திற்கு:**

கமர் (நிலா) என்ற சொல்லை எடுத்துக்கொள்ளலாம். இவ்வார்த்தைக்கு முன்பு அல் என்று சேர்த்து வாசிக்க முடியும் - அல்-கமர் (அந்த நிலா).

இதே போல, பலத் (balad - நாடு) என்ற வார்த்தையும் அல்-பலத் (அந்த நாடு) என்று வாசிக்கமுடியும். ஆனால், ஒரு வார்த்தை சூரிய எழுத்துடன் ஆரம்பித்தால், அதனை "அல்" என்ற வார்த்தையைச் சேர்த்து "அல்" என்றே உச்சரிக்க முடியாது. அதற்கு பதிலாக, "அல்" என்பதில் உள்ள "ல்" என்பதை நீக்கிவிட்டு, அவ்வார்த்தையின் முதல் எழுத்தை போட்டு வாசிக்க முடியும்.

**உதாரணத்திற்கு:**

ஷம்ஸ் (சூரியன் என்பது இதன் பொருள்) என்ற சொல்லுடன் "அல்-ஷம்ஸ்" என்று எழுதினால், அதனை அப்படியே வாசிக்கமுடியாது. எனவே, அதனை "அஷ்-ஷம்ஸ்" (அந்த சூரியன்) என்று வாசிக்க வேண்டும் (கவனிக்கவும்: ல் என்பதை நீக்கிவிட்டு ஷ் என்பதை சேர்த்துள்ளோம்) எழுதும் போது அல்-ஷம்ஸ் என்று (அ) அஷ்-ஷம்ஸ் என்று எழுதினாலும், அதனை அஷ்-ஷம்ஸ் என்றே வாசிக்கவேண்டும்.

எனவே அரபி எழுத்தாளர்கள் தங்கள் விருப்பப்படி "அல்-தபரி" என்றோ (எழுத்தின் படி எழுதுவது) அல்லது "அத்-தபரி" என்றோ (உச்சரிப்பின் படி எழுதுவது) எழுதுவார்கள், எப்படி எழுதினாலும் தவறில்லை. ஆனால், வாசகர்கள் படிக்கும் போது, சந்திர சூரிய எழுத்துக்களை கவனத்தில் கொண்டு படிக்கவேண்டும்.



## கேள்வி 4: அல்ஹம்து லில்லாஹ்

**பதில் 4:** இந்த அரபி சொற்றொடருக்கு "எல்லா புகழும் அல்லாஹ்விற்கே (Praise be to Allah)" என்பதாகும்.

- அல் = The

- ஹம்து = புகழுதல் (Praise)
- அல்லாஹ் = அல்லாஹ் (Allah)

யூதர்களும் கிறிஸ்தவர்களும் "ஹல்லேலூயா" என்று சொல்வது போன்று, அரபியில் அல்ஹம்துலில்லாஹ்.

- ஹல்லேல் + யா = யெகோவா தேவனை புகழு



**கேள்வி 5: அல்பா (Alpha)**

**பதில் 5:** கிரேக்க மொழியின் முதல் எழுத்து "அல்பா" ஆகும், கடைசி எழுத்து "ஓமெகா" ஆகும். இந்த இரண்டு எழுத்துக்கள் இறைவனின் பட்டப்பெயர்களாக பைபிளில் காணலாம். அதாவது உலகத்தின் "முதலாமானவராகவும் கடைசியானவராகவும் இறைவன் இருக்கிறார்" என்பதை சுட்டிக்காட்ட இறைவன் தனக்கு இவைகளை பயன்படுத்துகிறார்.

**1. தேவன் "அல்பா மற்றும் ஓமெகாவாக" இருக்கிறார்:**

**வெளிப்படுத்தின விசேஷம் 1:8**

இருக்கிறவரும் இருந்தவரும் வருகிறவருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தர்: **நான் அல்பாவும், ஓமெகாவும்** ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன் என்று திருவுளம்பற்றுகிறார்.

**2. இயேசுக் கிறிஸ்து "அல்பா மற்றும் ஓமெகாவாக" இருக்கிறார்:**

வெளிப்படுத்தின விசேஷம் 21:6 மற்றும் பார்க்க 22:1-13

**வெளி 21:6**

அன்றியும், அவர் என்னை நோக்கி: ஆயிற்று, **நான் அல்பாவும் ஓமெகாவும்**, ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன். தாகமாயிருக்கிறவனுக்கு நான் ஜீவத்தண்ணீரூற்றில் இலவசமாய்க் கொடுப்பேன்.



**கேள்வி 6: அல்லாஹு அக்பர்**

**பதில் 6:** இவ்வார்த்தையின் பொருள் "அல்லாஹ் பெரியவன்" (Allah is most Great) என்பதாகும். முஸ்லிம்கள் இவ்வார்த்தைகள் அனேக

சமயங்களில் பயன்படுத்துவர், அதாவது தொழுகைக்கு அழைப்பு கொடுக்கும் போதும், மிருகங்களை அறுக்கும் போதும் இதனை பயன்படுத்துவர்.

கடந்த காலத்திலும், தற்காலத்திலும் இஸ்லாமியர்கள் பேரணியாகச் செல்லும் போது, “அல்லாஹூ அக்பர்” என்று கோஷமிட்டுக்கொண்டுச் செல்வார்கள். மேலும், போருக்குச் செல்லும் போது முஸ்லிம்கள் இந்த வார்த்தைகளை உரத்த சத்தத்தோடு உச்சரித்துக்கொண்டுச் செல்வார்கள். இப்படி கோஷமிட்டுச் செல்வது “அல்லாஹ்வும் இஸ்லாமும் முஸ்லிம்களும் உலகத்தில் உள்ள மற்ற எல்லாவற்றைக் கட்டிலும் சிறந்தவர்கள்” என்பதை அவர்கள் வெளிப்படுத்துவதாக அமைகிறது.

முஸ்லிம்கள் காஃபிர்களுக்கு (இஸ்லாமியரல்லாத மக்களுக்கு) எதிராக போர் செய்யும் போது, எப்படி இவ்வார்த்தைகளை பயன்படுத்துகிறார்கள் என்பதை ”இஸ்லாமிய காலிஃபத்துவ ஆட்சி நடக்கும் நாடுகளில்” காணலாம், இதைப் பற்றி அறிந்துக்கொள்ள இந்த தொடுப்பை (புத்தகத்தை) சொடுக்கவும்: **THE CALIPHATE - ITS RISE, DECLINE, AND FALL FROM ORIGINAL SOURCES BY WILLIAM MUIR**.



**கேள்வி 7: அன்சார் (அன்ஸார் - ANSAR)**

**பதில் 7:** அரபியில் இதன் பொருள் “உதவியாளர்” என்பதாகும்.

மதினாவிலிருந்து முதன் முதலில் முஸ்லிமாக மாறியவர்களை “அன்ஸார்கள்” என்று குர்-ஆன் அழைக்கிறது. முஹம்மது மதினாவிற்கு இடம் பெயர்ந்த பிறகு, அவருக்கு உதவி செய்த அனைவரும் “அன்ஸார்கள்” என்று அழைக்கப்பட்டார்கள். இவர்கள் முஹம்மது புரிந்த போர்களிலும் பங்கு பெற்றார்கள்.

**குர்-ஆன் 9:100, 117**

9:100. இன்னும் முஹாஜிர்களிலும், **அன்ஸார்களிலும்**, முதலாவதாக (ஈமான் கொள்வதில்) முந்திக்கொண்டவர்களும், அவர்களை(எல்லா) நற்கருமங்களிலும் பின் தொடர்ந்தவர்களும் இருக்கின்றார்களே அவர்கள் மீது அல்லாஹ் திருப்தி அடைகிறான்; அவர்களும் அவனிடம் திருப்தியடைகின்றார்கள்; அன்றியும் அவர்களுக்காக, சுவனபதிகளைச் சித்தப்படுத்தியிருக்கின்றான், அவற்றின் கீழே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும், அவர்கள் அங்கே என்றென்றும் தங்கியிருப்பார்கள் - இதுவே மகத்தான வெற்றியாகும்.

9:117. நிச்சயமாக அல்லாஹ் நபியையும் கஷ்ட காலத்தில் அவரைப் பின்பற்றிய முஹாஜிர்களையும், **அன்ஸாரிகளையும்** மன்னித்தான் அவர்களில் ஒரு பிரிவினருடைய நெஞ்சங்கள் தடுமாறத் துவங்கிய பின்னர், அவர்களை மன்னித்(து அருள் புரிந்)தான் - நிச்சயமாக அவன் அவர்கள் மீது மிக்க

கருணையும், கிருபையும் உடையவனாக இருக்கின்றான். (முஹம்மது ஜான் டிரஸ்ட் குர்-ஆன் தமிழாக்கம்)



**கேள்வி 8: அஸர் (ASR)**

**பதில் 8:** இஸ்லாமியர் செய்யும் மதிய நேர தொழுகையை “அஸர் தொழுகை” என்பார்கள்.

சரியாக காலை கழுவாமல் தொழுதால் நரகம் தான்:

ஸஹீஹ் புகாரி 96:

96. 'நாங்கள் சென்ற பயணம் ஒன்றில் நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குப் பின்னால் வந்து கொண்டிருந்தார்கள். **அஸர் தொழுகையின் நேரம் நெருங்கிவிட்ட நிலையில்** நாங்கள் உளூச் செய்து கொண்டிருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் எங்களை வந்தடைந்தார்கள். அப்போது நாங்கள் எங்கள் கால்களைத் தண்ணீரால் தடவிக் கொண்டிருந்தோம். (அதைக் கண்டதும்) '**குதிங்கால்களைச் சரியாகக் கழுவாதவர்களுக்கு நரகம் தான்!**' என்று இரண்டு அல்லது மூன்று முறை தம் குரலை உயர்த்திக் கூறினார்கள்' அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

**522. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.**

சூரிய(னி)ன் (ஒளி) என் அறையில் (மறையாமல்) விழுந்து கொண்டிருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் **அஸர்** தொழுவார்கள்.

**அஸர் தொழுகையை தவரவிட்டால், குடும்பத்துக்கு ஆபத்து:**

552. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

'யாருக்கு அஸர் தொழுகை தவறிவிட்டதோ **அவன் குடும்பமும் சொத்துக்களும் அழிக்கப் பட்டவனைப்போன்று** இருக்கிறான்.' என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.



**கேள்வி 9: அஸ்தக்பீர் அல்லாஹ் (Astaghfir Allah)**

**பதில் 9:** இந்த அரபி சொற்றொடரின் பொருள் "நான் அல்லாஹ்விடமிருந்து மன்னிப்பை கோருகிறேன்" என்பதாகும்.



**கேள்வி 10: அஸ்ஸலாமு அலைக்கும் (ASSALAMU ALAIKUM)**

**பதில் 10:** இது ஒரு இஸ்லாமிய வாழ்த்து ஆகும். இதன் பொருள் ”உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும்” என்பதாகும். ஒரு முஸ்லிம் முதன் முதலில் “அஸ்ஸலாமு அலைக்கும்” என்று மற்றவரை பார்த்து வாழ்த்து கூறும் போது, இதற்கு பதிலாக “வா அலைக்கும் ஸலாம்” என்று அவர் பதில் வாழ்த்து கூறுவார், இதன் பொருள், “உங்கள் மீதும் சாந்தி உண்டாகட்டும்” என்பதாகும்.

இதே வாழ்த்துதலை, இன்னும் நீட்டி, “அஸ்ஸலாமு அலைக்கும் வ ரஹ்மது அல்லாஹி வ பரகாதஹூ” என்று கூறுவர், இதன் பொருள் “சாந்தியும் அல்லாஹ்வின் அருளும், ஆசீர்வாதமும் உங்கள் மீது உண்டாவதாக” என்பதாகும். (Full version is "Assalamu alaikum wa Rahmatu Allahi wa Barakatuhu", meaning "Peace and the Mercy and Blessings of God be upon you").

இயேசு கூட 'உங்களுக்கு சமாதானம் (ஷாலோம் அலேகும்)' என்று கூறினார் என்று முஸ்லிம்கள் கூறுவார்கள். ஆகையால், இயேசு கூட இஸ்லாமிய பாணியில் தான் வாழ்த்துக்கள் கூறினார் என்று முஸ்லிம்கள் சொல்வார்கள்.

**இயேசு எப்போது ஷாலோம் அலேகும் என்றுச் சொன்னார்?**

யோவான் 20:19. வாரத்தின் முதல்நாளாகிய அன்றையத்தினம் சாயங்காலவேளையிலே சீஷர்கள் கூடியிருந்த இடத்தில், **யூதர்களுக்குப் பயந்ததினால் கதவுகள் பூட்டியிருக்கையில், இயேசு வந்து நடுவே நின்று: உங்களுக்குச் சமாதானம்** என்றார்.

இயேசுக் கிறிஸ்து உயிர்த்தெழுந்த பிறகு, சீடர்கள் பயத்தில் இருந்த சமயத்தில் இவ்வார்த்தைகளைச் சொல்லி அவர்களுடைய பயத்தை போக்கினார். அந்த வார்த்தைகள் அவர்களுடைய பயத்தை நீக்கவில்லை, சிலுவையில் அவரை மரித்தவராகக் கண்டு, கல்லறையில் அவர் வைக்கப்பட்ட பிறகு உயிர்த்தெழுந்து வந்து சொன்னதால் அவர்களின் பயம் நீங்கியது.

இயேசு உயிர்த்தெழுந்த பிறகு இவ்வார்த்தைகளைச் சொன்னார் என்று நீங்கள் நம்புகிறீர்களா?

முஹம்மதுவின் பெயரை உச்சரிக்கும் போது, 1400 நூற்றாண்டுகளாக கோடிக்கணக்கான முஸ்லிம்கள் "அவர் மீது சாந்து உண்டாகட்டும்" என்றுச் சொல்கிறார்கள். முஹம்மதுவிற்கே சமாதானம் வேண்டுமென்று நீங்கள் அல்லாஹ்வை வேண்டிக்கொண்டால், உங்கள் நிலை என்னவென்று சிந்தித்துப் பாருங்கள். உயிர்த்தெழுந்த இயேசுக் கிறிஸ்து "உங்களுக்கு சமாதானம்" என்று சொல்வது உங்களால் கேட்கமுடிகின்றதா?



**கேள்வி 11: ஆலிம் (ALIM)**

**பதில் 11:** பண்டிதர், அதிகம் கற்றறிந்தவர் (அ) அறிஞர் என்பது இதன் பொருளாகும்.



**கேள்வி 12:** இப்லிஷ் (சாத்தான், சைத்தான், ஷைத்தான்)

**பதில் 12:** சாத்தானின் இஸ்லாமிய பெயர் "இப்லிஷ்" என்பதாகும். குர்ஆனும் இதர ஆதாரபூர்வமான ஹதீஸ்களும் சாத்தான் பற்றிய சுவாரசியமான விவரங்களைத் தருகின்றது, அவையாவன:

- சாத்தான் முடிச்சு போடுகிறான்,
- இரவு நேரங்களில் மூக்கில் தங்கியிருக்கிறான்,
- பிறக்கும் குழந்தைகளை தொடுகிறான்,
- குழந்தைகளை அழ வைக்கிறான்,
- தீர்க்கதரிசங்களில் தில்லுமுல்லு செய்துவிடுகிறான்,
- மற்றவர்கள் பேசுவதை திருட்டுத்தனமாக ஒட்டுக் கேட்கிறான்,
- மனிதர்களின் காதுகளில் சிறுநீர் கழிக்கிறான்,
- கொட்டாவி விடுபவரைப் பார்த்து சிரிக்கிறான்
- அதே போல கொட்டாவி விடுபவர்களின் வாயில் புகுந்துவிடுகிறான்.

சாத்தான் யார் என்பதில் முரண்பட்ட கருத்துக்கள் குர்ஆனில் சொல்லப்பட்டுள்ளது; சாத்தான் என்பவன் தேவதூதனா? அல்லது தேவ தூதனாக இருந்தவன் பாவம் செய்து தள்ளிவிடப்பட்ட பிறகு ஜின்னாக மாறிவிட்டானா? மனிதன் உண்டாக்கப்பட்ட நிகழ்ச்சியிலும், அதன் பிறகு அவன் பாவம் செய்த நிகழ்ச்சியிலும் சாத்தானின் பங்கு என்ன? இந்நிகழ்ச்சிகளில் அல்லாஹ்வின் முரண்பட்ட விவரங்கள் என்ன? போன்றவைகளை அறிந்துக்கொள்ள இந்த கட்டுரையை படிக்கவும்: "அல்லாஹ், ஆதாம் மற்றும் தேவதூதர்கள்".

முஹம்மதுவின் வாழ்வில் சாத்தானின் தாக்கம் இருந்திருக்கின்றது என்பதை விளக்கும் கட்டுரைகளை இங்கு படிக்கவும்: முஹம்மதுவும் சாத்தானும்

**சாத்தான் பற்றிய இதர இஸ்லாமிய விவரங்கள்:**

**• இப்லீஸ் "ஜின்" இனத்தைச் சேர்ந்தவனாக இருக்கிறான், குர்ஆன் 18:50**

அன்றியும், "ஆதமுக்கு ஸுஜூது செய்யுங்கள்" என்று நாம் மலக்குகளிடத்தில் கூறியதை (நபியே!) நினைவு கூர்வீராக; அப்போது இப்லீஸைத்தவிர, அவர்கள் ஸுஜூது செய்தார்கள்; அவன் (இப்லீஸ்) ஜின் இனத்தைச் சேர்ந்தவனாக இருந்தான்; அவன் தன் இறைவனுடைய கட்டளையை மீறி விட்டான்; ஆகவே நீங்கள் என்னையன்றி அவனையும் அவன் சந்ததியாரையும் (உங்களைப்) பாதுகாப்பவர்களாக எடுத்துக் கொள்வீர்களா? அவர்களோ உங்களுக்குப் பகைவர்களாக இருக்கிறர்கள்; அக்கிரமக்காரர்கள் (இவ்வாறு) மாற்றிக் கொண்டது மிகவும் கெட்டதாகும்.(குர்ஆன் 18:50)

**• ஒருவர் உறங்கும்போது பிடரியில் ஷைத்தான் மூன்று முடிச்சுகளைப் போடுகிறான்**

1142. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"உங்களில் ஒருவர் உறங்கும்போது பிடரியில் ஷைத்தான் மூன்று முடிச்சுகளைப் போடுகிறான். ஒவ்வொரு முடிச்சின் போதும் இரவு இன்னும் இருக்கிறது, உறங்கு என்று கூறுகிறான். அவர் விழித்து அல்லாஹ்வை நினைவு கூர்ந்தால் ஒரு முடிச்சு அவிழ்கிறது. அவர் உளூச் செய்தால் இன்னொரு முடிச்சு அவிழ்கிறது. அவர் தொழுதால் மற்றொரு முடிச்சும் அவிழ்கிறது. அவர் மகிழ்வுடனும் மன அமைதியுடனும் காலைப் பொழுதை அடைகிறார். இல்லையெனில் அமைதியற்றவராக, சோம்பல் நிறைந்தவராகக் காலைப் பொழுதை அடைகிறார்' என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். Volume :1 Book :19 (சஹி புஹாரி நூல்)

**• தூங்கும் போது மூக்கின் உட்பகுதிக்குள் ஷைத்தான் புகுந்து மேல் பாகத்தில் தங்கியிருக்கிறான்**

3295. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நீங்கள் தூக்கத்திலிருந்து எழுந்து உளூச் செய்தால் மூன்று முறை (நீர் செலுத்தி) நன்கு மூக்கைச் சிந்தி (தூய்மைப்படுத்தி)க் கொள்ளுங்கள். ஏனெனில், நீங்கள் (தூங்கும் போது) மூக்கின் உட்பகுதிக்குள் ஷைத்தான் தங்கியிருக்கிறான். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். Volume :3 Book :59 (சஹி புஹாரி நூல்)

**• பிறக்கும் குழந்தைகளை தொடுகிறான், அழவைக்கிறான்**

3431. ஸயீத் இப்னு முஸய்யப்(ரலி) அறிவித்தார்

" 'ஆதமின் மக்களில் (புதிதாகப்) பிறக்கும் குழந்தை எதுவாயினும் அது பிறக்கும் போதே ஷைத்தான் அதைத் தீண்டுகிறான். ஷைத்தானின் தீண்டலால் அக்குழந்தை கூக்குரலெழுப்பும். மர்யமையும் அவரின் மகனையும் தவிர' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்துவிட்டு பிறகு, 'நான் இக் குழந்தைக்காகவும் வருங்கால வழித்தோன்றலுக்காகவும் சபிக்கப்பட்ட ஷைத்தானைவிட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்" என்னும் (மர்யமுடைய தாய் செய்த பிரார்த்தனையை கூறும் - என்ற 3:36-வது) இறைவசனத்தை ஓதுவார்கள். Volume :4 Book :60 (சஹி புஹாரி நூல்)

மேற்கண்ட ஹதீஸில் காணப்படும் ஒரு சுவாரசியமான விவரம் என்னவென்றால், உலக மக்கள் பிறக்கும் போது அனைவரையும் சாத்தான் தொட்டானாம், ஆனால் இயேசுவின் தாய் மரியாளையும், இயேசுவையும் தொடவில்லையாம். ஒருவரை சாத்தான் தொட்டால் என்னவாகும்?

**• சாத்தான் வெளிப்பாடுகளில் குழப்பத்தை உருவாக்கி, தன் சொந்த வார்த்தைகளை நுழைத்துவிடுகின்றான்: குர்ஆன் 22:52**

(நபியே!) உமக்கு முன்னர் நாம் அனுப்பி வைத்த ஒவ்வொரு தூதரும், நபியும், (ஓதவோ, நன்மையையோ) நாடும்போது, அவர்களுடைய அந்த நாட்டத்தில் ஷைத்தான் குழப்பத்தை எறியாதிருந்ததில்லை; எனினும் ஷைத்தான் எறிந்த குழப்பத்தை அல்லாஹ் நீக்கியப் பின்னர் அவன் தன்னுடைய வசனங்களை உறுதிப்படுத்துகிறான் - மேலும், அல்லாஹ் யாவற்றையும் அறிந்தவனாகவும், ஞானம் மிக்கோனாகவும் இருக்கின்றான்.(குர்ஆன் 22:52)

சாத்தானின் வசனங்கள் பற்றிய விவரங்களை படிக்க இந்த கட்டுரையை சொடுக்கவும்: Satanic Verses?

**• திருட்டுத்தனமாக ஒட்டுக் கேட்கும் ஷைத்தான், குர்ஆன் 15:17-18, 37:8**

விரட்டப்பட்ட ஒவ்வொரு ஷைத்தானை விட்டும் நாம் அவற்றைப் பாதுகாத்தோம். திருட்டுத்தனமாக ஒட்டுக் கேட்கும் ஷைத்தானைத்தவிர; (அப்போது) பிரகாசமான தீப்பந்தம் அந்த ஷைத்தானை (விரட்டிப்) பின் பற்றும்.(குர்ஆன் 15:17-18)

(அதைத்) தீய ஷைத்தான்கள் அனைவருக்கும் தடையாகவும் (ஆக்கினோம்). (அதனால்) அவர்கள் மேலான கூட்டத்தார் (பேச்சை ஒளிந்து) கேட்க முடியாது; இன்னும், அவர்கள் ஒவ்வோர் திசையிலிருந்தும் வீசி எறியப்படுகிறார்கள். (அவர்கள்) துரத்தப்படுகிறார்கள்; அவர்களுக்கு நிலையான வேதனையுமுண்டு. (குர்ஆன் 37:7-9)

**• தொழாமல் தூங்கிக்கொண்டு இருப்பவர்களின் காதில் சாத்தான் சிறுநீர் கழிக்கிறான்:**

1144. அப்துல்லாஹ்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் விடியும் வரை தூங்கி கொண்டே இருக்கிறார். தொழுகைக்கு எழுவதில்லை என்று நபி(ஸல்) அவர்களிடம் கூறப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள் 'ஷைத்தான் அவர் காதில் சிறுநீர் கழித்துவிட்டான்' என்று விடையளித்தார்கள். Volume :1 Book :19 (சஹி புஹாரி நூல்)

**கொட்டாவி விடுதல்:**

**o அல்லாஹ் கொட்டாவியை வெறுக்கிறார்:**

6223. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

அல்லாஹ் தும்மலை விரும்புகிறான்; கொட்டாவியை வெறுக்கிறான். எனவே, ஒருவர் தும்மியவுடன் 'அல்ஹம்துலில்லாஹ்' (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே)

என்று சொன்னால், அதைக் கேட்கும் ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் அவருக்கு ('யர்ஹமுக்கல்லாஹ் - அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரியட்டும்' என்று) மறுமொழி கூறுவது அவசியமாகும். ஆனால், கொட்டாவி ஷைத்தானிடமிருந்து வருவதாகும். உங்களில் எவரேனும் கொட்டாவிவிட்டால் முடிந்தவரை அதைக் கட்டுப்படுத்தட்டும். ஏனெனில், யாரேனும் (கட்டுப்படுத்தாமல்) 'ஹா' என்று (கொட்டாவியால்) சப்தமிட்டால் ஷைத்தான் சிரிக்கிறான். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். Volume :6 Book :78 (சஹி புஹாரி நூல்)

### o மனிதர்கள் கொட்டாவி விடும் போது சாத்தான் அவர்களுக்குள் செல்கிறான்

5719. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

உங்களில் ஒருவருக்குக் கொட்டாவி ஏற்பட்டால், அவர் தமது வாயின் மீது கையை வைத்து அதைத் தடுக்கட்டும். ஏனெனில், ஷைத்தான் (அப்போது வாய்க்குள்) நுழைகின்றான். இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். Book :53 (சஹி முஸ்லிம்)

### o ஒருவர் (கட்டுப்படுத்தாமல் 'ஹா' என்று சப்தமிட்டுக்) கொட்டாவிவிட்டால் அதைப் பார்த்து ஷைத்தான் சிரிக்கிறான்

6226. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

அல்லாஹ் தும்மலை விரும்புகிறான். கொட்டாவியை வெறுக்கிறான். எனவே, ஒருவர் தும்மியவுடன் 'அல்ஹம்துலில்லாஹ்' (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்று சொன்னால், அதைக் கேட்கும் ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் அவருக்கு ('அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரிவானாக' என) மறுமொழி கூறுவது அவசியமாகும். ஆனால், கொட்டாவி ஷைத்தானிடமிருந்து வருவதாகும். எனவே, உங்களில் எவரேனும் கொட்டாவிவிட்டால் முடிந்தவரை அதைக் கட்டப்படுத்தட்டும். ஏனெனில், உங்களில் ஒருவர் (கட்டுப்படுத்தாமல் 'ஹா' என்று சப்தமிட்டுக்) கொட்டாவிவிட்டால் அதைப் பார்த்து ஷைத்தான் சிரிக்கிறான். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். Volume :6 Book :78 (மேலும் பார்க்க சஹி புஹாரி எண் : 6223)

சாத்தான் பற்றிய இதர குர்ஆன் வசனங்கள்:

குர்ஆன் 2:34,36,168; 3:36,155,175; 4:38,60,76,116-117,119-120,140,145; 5:90-91; 6:38,43,68; 7:11-12,20-21,27,175,200-201; 8:11,48; 12:5,42,100; 14:22; 15:30-40; 16:63,98; 17:27,53,61,64; 18:50-51; 18:63; 19:44-45; 20:53,116,120; 22:52; 24:21; 25:29; 26:95; 27:24; 28:15; 29:38; 31:21; 34:20-21; 35:6; 36:60; 37:65; 38:41,74-85; 41:36; 43:62; 47:25; 58:10,19; 59:16



## கேள்வி 13: இமாம்

**பதில் 13:** முஸ்லிம் தலைவர்; முஸ்லிம்களின் ஆன்மீக தலைவர்; மசூதியில் தொழுகையை நடத்தும் தலைவர்.

ஒரு இஸ்லாமிய ஆன்மீக தலைவர் அரபி மொழியில் புலமை பெற்று இருக்கவேண்டும், முக்கியமாக குறைஷி அரபி மொழி வழக்கத்தை (உச்சரிப்பை) நன்கு கற்றறிந்தவராக இருக்கவேண்டும் (சஹிஹ் புகாரி 6.507)

ஷியா பிரிவில் உள்ள முஸ்லிம்கள் "இன்றும் இமாம்கள் மறைந்து வாழ்ந்துக்கொண்டு இருக்கிறார்கள்" என்று நம்புகிறார்கள். முஹம்மதுவின் மகள் ஃபாத்திமா மற்றும் அலி மூலமாக வந்த 12 இமாம்களை ஷியா முஸ்லிம்கள் நம்புகிறார்கள். இமாம்கள் பாவமில்லாதவர்கள் என்றும் ஷியாக்கள் நம்புகிறார்கள்.

**மூஸாவின் வேதம் ஒரு இமாமாகவும் (நேர்வழி காட்டியாகவும்) ரஹ்மத்தாகவும் இருக்கிறது:**

46:12. இதற்கு முன்னர் **மூஸாவின் வேதம் ஒரு இமாமாகவும் (நேர்வழி காட்டியாகவும்) ரஹ்மத்தாகவும் இருந்தது;** (குர்ஆனாகிய) இவ்வேதம் (முந்தைய வேதங்களை) மெய்யாக்குகிற அரபி மொழியிலுள்ளதாகும்; இது அநியாயம் செய்வோரை அச்சமூட்டி எச்சரிப்பதற்காகவும், நன்மை செய்பவர்களுக்கு நன்மாராயமாகவும் இருக்கிறது.



**கேள்வி 14: கலீஃபா (கலிஃபா)**

**பதில் 14:** கலிஃப்: இஸ்லாமிய நாட்டை தலைமை தாங்கி நடத்துபவரை கலிஃபா என்று அழைப்பார்கள். சஹீஹ் புகாரி ஹதீஸின் படி, இவர் அரபிய குறைஷி வம்சத்தில் பிறந்தவராக இருக்கவேண்டும். (Sahih Bukhari 8.817)

முஹம்மதுவிற்கு பிறகு இஸ்லாமிய நாட்டின் தலைவர்களை கலிஃபா என்று அழைப்பார்கள். முதல் நான்கு கலிஃபாக்களின் பெயர்களாவன: அபூ பக்கர், உமர், உஸ்மான் (உதமான்) மற்றும் அலி. அதன் பிறகு உம்மாயத் வம்சமும், அதன் பிறகு அப்பாஸித் வம்சமும் இஸ்லாமிய நாடுகளின் தலைவர்களாக ஆட்சி செய்தார்கள்.



**கேள்வி 15: குறைஷ் (குரைஷ் - ஒரு வம்சத்தின் பெயர்)**

**பதில் 15:** முஹம்மது பிறந்த வம்சம் "குறைஷி" வம்சமாகும். இஸ்லாமுக்கு முந்தைய காலத்தில் காபா என்ற மக்காவின் ஆலயத்தின் பாதுகாவலர்களாக (பராமரிப்பவர்களாக) இருந்தவர்கள், இந்த பிரிவினர் தான். குர்ஆனின் 106ம் அத்தியாயத்திற்கு "குறைஷின் (குறைஷிகள் )" என்று பெயர்.



**கேள்வி 16: தபரி (Tabari)**

**பதில் 16:** அபூ ஜபர் முஹம்மத் இப்னு ஜரீர் அத்தபரி என்பது இவரது முழு பெயராகும். இவர் கி.பி. 839ம் ஆண்டு ஈரானிலுள்ள அமோல், தபரிஸ்தானில் பிறந்தார். இவர் ஈராக்கில் உள்ள பாக்தாத்தில் கி.பி. 923ம் ஆண்டு காலமானார். இவர் ஒரு முக்கியமான இஸ்லாமிய அறிஞராவார். இவர் இஸ்லாமின் ஆரம்ப கால விவரங்களை பல அறிஞர்களிடமிருந்து சேகரித்து தொகுத்தார்.

இவருக்கு பிறகு வந்த இஸ்லாமிய அறிஞர்கள் தபரியின் இந்த தொகுப்பை அதிகமாக பயன்படுத்துகின்றனர். இவரது தொகுப்பிலிருந்து தான், அல்பிரட் குல்லேம் (Alfred Guillaume) இப்னு இஷாக்கின் "முகம்மதுவின் சரிதையிலிருந்து" தொலைந்து விட்ட பகுதிகளை மீட்டு எடுத்தார். இப்னு ஹிஷாம் தம்முடைய சரிதையில் அவ்விவரங்களை வேண்டுமென்றே நீக்கி இருந்தார்.

இஸ்லாமின் சுன்னி பிரிவு முஸ்லிம்களின் கோட்பாடுகளுக்கு தபரியின் தொகுப்பு ஒரு முக்கியமான மூலமாக இருந்துள்ளது. இவரைப் பற்றி சில விவரங்களை இந்த தொடுப்பில் காணலாம் (**wikipedia**)



**கேள்வி 17: நிம்ரோத்**

**பதில் 17:** இஸ்லாமின் படி, ஆபிரகாமும் (இப்ராஹிம்) நிம்ரோத்தும் சமகாலத்தவர்கள். உண்மையில் இவ்விருவரும் வெவ்வேறு காலத்தவர்கள்.

பைபிளின் படி நிம்ரோத் ''கூஷ்'' என்பவரின் மகன், கூஷ் ''ஹாம்''மின் மகன், இந்த "ஹாம்" நோவாவின் மகன் (பார்க்க ஆதியாகமம் 10:6,8), அதாவது நிம்ரோத் நோவாவின் கொள்ளுப்பேரனாவார்.

ஆபிரகாமின் வம்ச வரலாறு இவ்விதமாக உள்ளது, அதாவது ஆபிரகாம் தேராவின் மகன், தேராவின் தந்தை நாகோர், அவரின் தந்தை செரூகு, அவரின் தந்தை ரெகூ, அவரின் தந்தை பேலேகு, அவரின் தந்தை ஏபேர், அவரின் தந்தை சாலா, அவரின் தந்தை அர்பக்சாத், அவரின் தந்தை சேம், அவரின் தந்தை நோவா (ஆதியாகமம் 11:10-27). ஆபிரகாமுக்கும் நோவாவிற்கு இடையே 9 வம்சங்கள் இருக்கின்றன.



**கேள்வி 18: நிய்யத் (நிய்யா)**

**பதில் 8:** ஒரு செயலை செய்வதற்கு முன்பாக அதை செய்வேன் என்று மனதில் எண்ணி, அதாவது முடிவு செய்து அறிக்கையிடுவதாகும்.

உதாரணத்திற்கு, முஸ்லிம்கள் நோன்பு தொடங்குவதற்கு முன்பு நிய்யத் செய்வதாகும் (இன்று ஒரு நாள் நோன்பு இருப்பேன் என்றுச் சொல்லி அறிக்கையிடுவதாகும்).



**கேள்வி 19: மஹ்றம்**

**பதில் 19:** மஹ்றம் என்பது முஸ்லிம்களில் ஒருவருக்கு அவரது பிறப்பின் காரணமாகத் திருமண உறவு வைத்துக்கொள்ளத் தடுக்கப்பட்டோராவர். பொதுவாக ஏற்கப்பட்டுள்ள கருத்தின்படி, பெண்கள் (ஹஜ்) பயணம் செய்யும்போது பயணத்தில் அவர்களுக்குத் துணையிருக்கத் தகுதியுள்ள ஒரு ஆடவர் உடன் செல்ல வேண்டும். பெண் புனிதப் பயணியைப் பொருத்தவரை, ஹஜ் நிறைவேற்றுவதற்கான ஒரு நிபந்தனையாகவும் இது கருதப்படுகிறது.

பெண் புனிதப் பயணிக்கு அவரின் கணவர் உடன் செல்லலாம். ஆனால் அவர் மஹ்றமல்லர். ஒரு பெண்ணுக்கு மஹ்றமானோர் அவரது தந்தை, தந்தையின் தந்தை, தாயின் தந்தை, தந்தையின் அல்லது தாயின் உடன் பிறந்தான், தன் உடன் பிறந்தான், மகன், மகனின் அல்லது மகளின் மகன் முதலியோர் ஆவர்.

ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்கும் போதும் அவரது மஹ்றமான ஆண் ஒருவரே அப்பெண்ணின் பாதுகாவலராக இருக்க வேண்டும். அப்படி மஹ்றமான ஆண் இல்லாத வேளையில், சரீஅத் சட்ட நீதிபதி அல்லது மேற்படி நீதிபதியின் அனுமதியுடன் அவரது பிரதிநிதி அத்திருமணத்தை நடத்தி வைக்கலாம்.



**கேள்வி 20: மஸீஹி**

**பதில் 20:** இதன் அர்த்தம் “கிறிஸ்தவர்கள்” என்பதாகும். இந்த வார்த்தை “அல்-மஸீஹ்” என்ற வார்த்தையிலிருந்து வந்தது. அல்-மஸீஹ் என்றால், “கிறிஸ்து”என்று பொருள். கிறிஸ்தவர்கள் மேசியா என்றுச் சொல்வார்கள், குர்-ஆன் மேசியாவை “அல்-மஸீஹ்” என்று அரபியில் சொல்கிறது.

கிறிஸ்தவர்கள் என்று அரபியில் சொல்லவேண்டுமென்றால் அவர்களை "மஸீஹி" என்பார்கள்.



**கேள்வி 21: மாஷா அல்லாஹ்**

**பதில் 21:** இதன் அர்த்தம் ”அல்லாஹ் நாடினால்” அல்லது “அல்லாஹ் எப்படி இந்த ஆச்சரியமானவைகளை உண்டாக்கியிருக்கிறார்!” என்றுச் சொல்லி

ஆச்சரியப்படுவது ஆகும். பொதுவாக, முஸ்லிம்கள் ஆச்சரியமானவைகளை பார்த்துவிட்டால் "மாஷா அல்லாஹ்" என்றுச் சொல்லி, "இப்படிப்பட்டவைகளை படைத்த அல்லாஹ்வை புகழுவார்கள்".



**கேள்வி 22: முஹர்ரம் (முஹரம் – முஃகர்ரம்)**

**பதில் 22:** இஸ்லாமிய நாட்காட்டியில் (காலண்டரில்) "முஹர்ரம்" என்பது முதல் மாதமாகும். ஷியா முஸ்லிம்கள் முஹர்ரம் மாதத்தின் முதல் பத்து நாட்களை துக்க நாட்களாக அனுசரிக்கிறார்கள். கர்பலா என்ற இடத்தில் முஹம்மதுவின் பேரன் "ஹுசைன்" கொல்லப்பட்ட மாதமாக முஹர்ரம் இருப்பதால், அவரின் மரணத்தை நினைவு கூறும் வண்ணமாக இப்படி துக்க நாட்களை அனுசரிக்கிறார்கள். இந்த நாட்களில் அவர்கள் எந்த ஒரு கேளிக்கை காரியங்களிலும் ஈடுபடமாட்டார்கள்.

எகிப்தின் பார்வோன் கையிலிருந்து இஸ்ரவேல் மக்களை இறைவன் விடுவித்ததற்காக, சுன்னி (பிரிவினர்) முஸ்லிம்கள், முஹர்ரம் மாதத்தின் 9, 10 மற்றும் 11ம் நாட்களை நினைவு கூறுகிறார்கள்.

யூதர்கள் செய்கிறார்களே என்பதற்காக தானும் செய்வேன் என்று முஹம்மது முடிவு செய்தார்:

3397. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மதீனா நகருக்கு வந்தபோது யூதர்கள் ஒரு நாளில் நோன்பு நோற்பதைக் கண்டார்கள் அதாவது ஆஷூராவுடைய (முஹர்ரம் 10வது) நாளில் (யூதர்கள்) நோன்பு நோற்று வந்ததை இப்னு அப்பாஸ்(ரலி) குறிப்பிடுகிறார்கள் - யூதர்கள், 'இது மாபெரும் நாள். மூஸா(அலை) அவர்களை இந்த நாளில் தான் அல்லாஹ் காப்பாற்றினான்; ஃபிர்அவ்னின் கூட்டத்தாரை (கடலில்) மூழ்கடித்தான். எனவே, மூஸா(அலை) அவர்கள் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தும் விதத்தில் நோன்பு நோற்றார்கள்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், 'நான் அவர்களை விட மூஸா அவர்களுக்கு, மிக நெருக்கமானவன்' என்று கூறிவிட்டு, அந்த நாளில் தாமும் நோன்பு நோற்று, தம் தோழர்களுக்கும் (உபரியான) நோன்பு நோற்கும்படி ஆணையிட்டார்கள்.



**கேள்வி 23: யாஜித் 1 (முதலாம் யாஜித், ஆட்சி காலம் 680-683)**

**பதில் 23:** முதலாம் யாஜித் "முஅவியாவின்" மகன் ஆவார். இவர் உம்மயத் வம்சத்தின் வழியில் வந்த இரண்டாவது காலிஃபா ஆவார். இவரது தந்தை மரித்த ஏப்ரில் 7ம் நாள் 680ம் ஆண்டு இவர் கலிஃபாவாக பதவி ஏற்றார். இவரது தந்தை "முஅவியா" தனக்குப் பிறகு ஆட்சித் தலைவராக தன் மகனாகிய யாஜித்

வரவேண்டும் என்று முடிவு செய்தார். இவரைத் தொடர்ந்து, சொந்த குடும்பத்தார்களே, ஆட்சித் தலைவர் பதவி வகிக்கவேண்டும் என்ற ஒரு பழக்கமாக வந்துவிட்டது.

இந்த முதலாம் யாஜித் என்பவரினால் தான் ஹுசைன் மற்றும் அவரது குடும்பம் கர்பலா என்ற இடத்தில் முழுவதுமாக அழிந்துவிட்டது. இவர் நான்கு ஆண்டுகள் ஆட்சி புரிந்தார். இவர் ஆட்சி புரிந்த காலத்தில் முஸ்லிம்கள் "கோராசன்" மற்றும் "கவிர்ஜம்" என்ற இடங்களை ஆக்கிரமித்துக் கொண்டார்கள். இவர் ஒரு கவிஞரும் கூட. அரபி கஜல் என்ற பாடல்களை பாடும் ஹஃபிஜ் என்பவர், தன்னுடைய "திவான்" என்ற கவிதையில், முதலாவது மற்றும் கடைசி வரிகளை இந்த யாஜித் என்பவரின் கவிதைகளிலிருந்து எடுத்துள்ளார்.

**இவரைப் பற்றி மேலும் படிக்க:**

- இஸ்லாமின் அரச குடும்பம்: பாகம் 6: யாஜித்தும் ஹுசைனும்
- இஸ்லாமிய மூல நூல்களிலிருந்து கலிஃபத்துவத்தின் துவக்கம், சரிவு மற்றும் முழுவதுமான வீழ்ச்சி (ஆங்கில புத்தகம்)



**கேள்வி 24: ரஜப்**

**பதில் 24:** இஸ்லாமிய காலண்டரில் (நாட்காட்டியில்) 7 வது மாதமாக "ரஜப்" மாதம் இருக்கிறது.



**கேள்வி 25: ரஜம் (Rajm) - கல்லெரிந்து கொல்லுதல்**

**பதில் 25:** இஸ்லாமில் காணப்படும் "விபச்சாரத்திற்கு கல்லெரிந்து கொல்லும் தண்டனைப் பற்றிய" விவரங்களை படிக்க இந்த கட்டுரையை சொடுக்கவும்: Stoning and Flogging in Islam.

இஸ்லாமிய ஹதீஸ்களின் படி, "கல்லெரிந்து கொல்லுதல் பற்றிய வசனம்" முஹம்மதுவிற்கு இறக்கப்பட்டதாம், ஆனால், அந்த வசனம் தற்காலத்தில் நம்மிடம் இருக்கும் குர்-ஆனில் காணப்படவில்லை. இதைப் பற்றி மேலும் அறிய படிக்கவும்: Verses of Stoning.

மூலம்



**கேள்வி 26: ரஸூல் அல்லாஹ்**

**பதில் 26:** இதன் அர்த்தம் “அல்லாஹ்வின் தூதர்” என்பதாகும். இந்த பட்டப்பெயர் முஹம்மதுவை பொதுவாக குறிக்க பயன்படுத்தப்படுகிறது.



**கேள்வி 27: லைலத்துல் கத்ர்**

**பதில் 27:** இதன் பொருள் கண்ணியமிக்க இரவு என்பதாகும். இந்த இரவு ஆயிரம் மாதங்களை விட சிறப்புத் தகுதி பெற்றுள்ளதாக குர்ஆன் கூறுகிறது. இந்த இரவில் குர்-ஆன் இறக்கப்பட்டதாக குர்-ஆன் வசனம் கூறுகின்றது.

**குர்-ஆன் 97:1-5**

நிச்சயமாக நாம் அதை (குர்ஆனை) கண்ணியமிக்க (லைலத்துல் கத்ர்) என்ற இரவில் இறக்கினோம். மேலும் கண்ணியமிக்க இரவு என்ன என்பதை உமக்கு அறிவித்தது எது? கண்ணியமிக்க (அந்த) இரவு ஆயிரம் மாதங்களை விட மிக்க மேலானதாகும். அதில் மலக்குகளும், ஆன்மாவும் (ஜிப்ரீலும்) தம் இறைவனின் கட்டளையின் படி (நடைபெற வேண்டிய) சகல காரியங்களுடன் இறங்குகின்றனர். சாந்தி (நிலவியிருக்கும்); அது விடியற்காலை உதயமாகும் வரை இருக்கும்.

இதைப் பற்றி மேலும் அறிய கீழ்கண்ட கட்டுரையை படிக்கவும்: குர்ஆன் முரண்பாடு: குர்ஆன் இறங்கிய விதம் - சிறிது சிறிதாக இறங்கியதா? அல்லது ஒரே முறை மொத்தமாக இறங்கியதா?



**கேள்வி 28: லைலா - முஹம்மதுவிற்கும் லைலாவிற்கும் என்ன சம்மந்தம்?**

**பதில் 28:** லைலா என்ற ஒரு பெண் முஹம்மதுவை திருமணம் செய்ய மறுத்துவிட்டார்கள்? ஏன்?

இஸ்லாமிய சரித்திர அறிஞர் தபரி "The History of Al-Tabari: The Last Years of the Prophet" என்ற முஹம்மதுவின் சரித்திரத்தில் கீழ்கண்ட நிகழ்ச்சியை குறிப்பிடுகிறார்.

முஹம்மது தெருவில் நடந்துச் சென்றுக்கொண்டு இருக்கும்போது, லைலா என்ற ஒரு பெண் அவருக்கு பின்னால் சென்று பின்பக்கத்திலிருந்து அவரது தோல்பட்டையில் தட்டுகிறாள். அவர் திரும்பி பார்த்ததும். என்னை திருமணம் செய்துக்கொள்கிறாயா? என்று கேட்கிறாள். அதற்கு "நான் உன்னை திருமணம் செய்துக்கொள்கிறேன்", என்றுச் சொல்லி தன் சம்மதத்தை முஹம்மது அளிக்கிறார். இந்தப் பெண் தன் ஜனங்களிடம் சென்று "முஹம்மதுவை நான் திருமணம் செய்துக்கொள்கிறேன், அவர் இதற்கு சம்மதம் என்று கூறினார்" என்று கூறுகிறாள். இதற்கு அம்மக்கள் "நீ ஒரு நல்ல குடும்பத்துப் பெண், ஆனால் முஹம்மது ஒரு பெண் பித்து பிடித்தவர்", இப்படிப்பட்டவரை நீ திருமணம்

செய்துக்கொள்வது சரியானது அல்ல. எனவே, அவரிடம் சென்று, இந்த திருமணத்தில் தனக்கு விருப்பமில்லை என்றுச் சொல்லி, அவரிடமிருந்து விலகி வந்துவிடு" என்று கூறினார்கள். இந்தப் பெண்ணும் அப்படியே முஹம்மதுவிடம் சென்று, தனக்கு விருப்பமில்லை, இந்த ஒப்பந்தத்தை முறித்துவிடுங்கள் என்று கூறுகிறாள், முஹம்மதுவும் இதற்கு ஒப்புதல் அளித்துவிடுகிறார்.

... Layla bt. al-Khatim b. 'Adi b. 'Amr b. Sawad b. Zafar b. al-Harith b. al-Khazraj approached the Prophet while his back was to the sun, and clapped him on his shoulder. He asked who it was, and she replied, "I am the daughter of one who competes with the wind. I am Layla bt. al-Khatim. I have come to offer myself [in marriage] to you, so marry me." He replied, "I accept." She went back to her people and said that the Messenger of God had married her. They said, "What a bad thing you have done! You are a self-respecting woman, but the Prophet is a womanizer. Seek an annulment from him." She went back to the Prophet and asked him to revoke the marriage and he complied with [her request].

(The History of Al-Tabari: The Last Years of the Prophet, translated and annotated by Ismail K. Poonawala [State University of New York Press, Albany, 1990], Volume IX, p. 139; bold emphasis ours) மூலம்

இறைவனின் தீர்க்கதரிசி என்றுச் சொல்லக்கூடிய ஒரு நபர் செய்யக்கூடிய செயலா இது? முஹம்மதுவை அம்மக்கள் ஒரு பெண் பித்துபிடித்தவர் என்று ஏன் கூறினார்கள்? இதைப் பற்றி மேலும் அறிய இந்த கட்டுரையை படிக்கவும்: முஹம்மது, பெண் பித்து பிடித்தவரா? லைலா ஏன் அவரை மணமுடிக்கவில்லை?



**கேள்வி 29: ஜம் ஜம் கிணறு (தண்ணீர்)**

**பதில் 29:** மக்காவில் உள்ள இந்த கிணற்றிலிருந்து தான் ஆகார் தண்ணீர் குடித்து தன்னுடைய மற்றும் தன் மகன் இஸ்மாயிலுடைய தாகத்தை தணித்துக்கொண்டார் என்று இஸ்லாமியர்கள் நம்புகிறார்கள். அதாவது ஆபிரகாம் ஆகாரையும் இஸ்மவேலையும் வீட்டை விட்டு அனுப்பிவிட்ட போது இந்த நிகழ்ச்சி நடந்ததாக இஸ்லாமியர்கள் நம்புகிறார்கள். முஸ்லிம்கள் ஒவ்வொரு ஆண்டும் "மக்காவிற்கு புனிதப்பயணம் (ஹஜ்)" செய்யும் போது இந்த நிகழ்ச்சியை நினைவு கூறுகிறார்கள்.

மேலும் ஹஜ் செய்து திரும்பும் முஸ்லிம்கள், இந்த ஜம் ஜம் தண்ணீரை தங்கள் நாட்டிற்கு (வீட்டிற்கு) கொண்டு வருகிறார்கள். அதனை தங்கள் குடும்பத்தில் உள்ளவர்களுக்கும் உறவினர்களுக்கும் கொடுக்கிறார்கள். இந்த தண்ணிரை குடித்தால் நோய்கள் தீரும் என்றும் முஸ்லிம்கள் நம்புகிறார்கள்.



**கேள்வி 30: ஷியா**

**பதில் 30:** ஷியா என்றால் "பின்பற்றுபவர்கள்" அல்லது "ஒரு கட்சியின் உறுப்பினர்கள்" என்று பொருளாகும். முஹம்மதுவின் மருமகனாகிய "அலி"

அவர்களை பின்பற்றுபவர்கள் "ஷியா" பிரிவினர் என்று அழைக்கப்படுகிறார்கள். முஹம்மதுவின் மரணத்திற்கு பிறகு இஸ்லாமிய சமுதாயத்திற்கு தலைமை (கலிஃபா) பொறுப்பேற்ற தலைவர்களில் "அலி" நான்காவதாக இருக்கிறார்கள். இந்த பிரிவினர், முதல் மூன்று தலைவர்களை அதிகாரபூர்வமான தலைவர்களாக அங்கீகரிப்பதில்லை. இவர்களின் கருத்துப்படி, முஹம்மதுவிற்கு அடுத்தபடியாக, இஸ்லாமிய சமுதாயத்தின் தலைவராக பதவி வகிப்பதற்கு முஹம்மதுவின் மருமகன் "அலி" அவர்களுக்குத் தான் உரிமை உள்ளது. அலி முஹம்மதுவின் மகள் பாத்திமாவின் கணவராவார். அலிக்கு பிறகு அந்த கலிஃபா பதவி அலியின் மகன்கள் ஹசேன், ஹுசேன் என்பவர்களுக்கு கிடைக்கவேண்டும் என்று ஷியா மக்கள் விரும்பினார்கள். ஆனால், ஹசேன் தன் உரிமையை விட்டுக்கொடுத்துவிட்டார். தனக்கு தலைமைப் பதவி கிடைக்கவேண்டும் என்று ஹுசேன் போராடியதால், கி.பி. 680ம் ஆண்டு, கர்பலா என்ற இடத்தில் நடந்த போரில் கொல்லப்பட்டார். ஹுசேனின் இந்த மரணம் (உயிர்த்தியாகம்) ஷியா முஸ்லிம்களுக்கு அதி முக்கியமான நிகழ்வாகும். இதனை அவர்கள் ஒவ்வொரு ஆண்டும் நினைவு கூறுகிறார்கள். ஒரு வகையில் சொல்லவேண்டுமென்றால், ஷியா முஸ்லிம்கள், தங்கள் தலைவர் அடைந்த துக்கத்தை ஒவ்வொரு ஆண்டும் நினைவு கூர்ந்து இவர்களும் துக்கமடைகிறார்கள்.

ஷியா இமாம்கள் "ஷியா சமுதாயத்தை" 12வது இமாம் வரை தலைமை தாங்கி நடத்திக்கொண்டு வந்தார்கள். அதன் பிறகு கி.பி. 874ஆண்டு அவர்கள் மறைந்து விட்டார்கள். இந்த 12வது இமாமும், அவருக்கு அடுத்தபடியாக பதவியேற்ற இமாம்களும் மறைந்திருக்கிறார்கள் என்றும், ஒரு குறிப்பிட்ட காலம் வரை மறைந்திருந்து அதன் பிறகு இவர்கள் தங்களை உலகிற்கு வெளிப்படுத்துவார்கள் என்று நம்பப்படுகின்றது. அவர்களுக்கு தனிப்பட்ட புத்தகங்கள் இருப்பதாகவும், அவைகள் குர்ஆனின் விளக்கவுரைகளாக இருக்கின்றன என்றும் நம்பப்படுகின்றது. ஷியாக்கள் பெரும்பான்மையாக ஈரான், ஈராக் மற்றும் லெபனானில் வாழ்கிறார்கள். சுன்னி முஸ்லிம்கள் பயன்படுத்தும் உஸ்மான் தயாரித்த பிரதியில் இருப்பதைக் காட்டிலும் வேறுவிதமான குர்ஆன் ஓதுதலை இவர்கள் கொண்டு இருக்கிறார்கள்.

**இமாம்கள் பற்றி ஷியா பிரிவினரின் கீழ்கண்டவாறு நம்புகிறார்கள்:**

- மலக்குகளுக்கும் (தேவதூதர்களுக்கும்), தீர்க்கதரிசிகளுக்கும், இறைத்தூதர்களுக்கும் கொடுக்கப்பட்டு இருக்கும் ஞானம், இமாம்களுக்கும் கொடுக்கப்பட்டுள்ளது (பக்கம் 255).
- கடந்த காலத்தில் நடந்துமுடிந்த அனைத்து விஷயங்களையும், எதிர் காலத்தில் நடக்கவிருக்கும் அனைத்து விஷயங்களையும் இமாம்கள் அறிவார்கள், இவர்களுக்கு மறைவாக எதுவும் இருக்காது (பக்கம் 260)
- இமாம்கள் தவிர வேறு யாராலும் 100 சதவிகிதம் சரியாக குர்ஆனை தொகுக்க முடியாது, குர்ஆனில் உள்ள எல்லா ஞானமும் இமாம்களுக்கு உள்ளது (பக்கம் 228) (அல் காஃபியின் கருத்து)

- இமாம்கள் உலகமனைத்திலும் ஆட்சி புரிய அதிகாரம் பெற்று இருக்கிறார்கள் "Certainly, the Imam commands a noble station and lofty position; a creative vicegerency to whose rule and power submit the very atoms of all creation!" (Khumaini, in his book, The Islamic Government page 52-53)

சில இஸ்லாமிய நாடுகள் ஷியா என்ற பிரிவு இல்லாமல் போகவேண்டும் என்று அதனை தங்கள் நாட்டில் தடை செய்கிறார்கள், உதாரணத்திற்கு மலேசியாவைச் சொல்லலாம். இந்த நாட்டில் ஷியா பிரிவை ஒழித்துக் கட்ட முயற்சிகள் எடுக்கப்படுகின்றன.



**கேள்வி 31:** இஸ்லாமிய நாட்காட்டி(Islamic Calendar) என்றால் என்ன? அது எப்போது தொடங்கப்பட்டது?

**பதில் 31:** இஸ்லாமிய காலண்டர் (நாட்காட்டி) பற்றி அறிவதற்கு முன்பு, கிரெகோரியன் காலண்டர்(Gregorian calendar) என்றால் என்னவென்பதை சுருக்கமாக பார்ப்போம்.

கிரெகோரியன் நாட்காட்டி (Gregorian calendar) என்பது சர்வதேச அளவில் மிகவும் பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டு பயன்படுத்தப்படும் நாட்காட்டியாகும். மேலும் **மேற்கத்திய** நாட்காட்டி எனவும் **கிறித்துவ** நாட்காட்டி எனவும் வழங்கப்பெறுகிறது. இந்த நாட்காட்டியானது சர்வதேச நிறுவனங்களான சர்வதேச தபால் ஒன்றியம் மற்றும் ஐக்கிய நாடுகள் சபை போன்றவற்றினால் அங்கீகரிப்பட்டுள்ளது.

இன்று உலகில் பரவலாகப் பயன்பாட்டில் உள்ள நாட்காட்டியான இது கி. மு 45 -ல் ரோமப் பேரரசர் ஜூலியஸ் சீசரால் உருவாக்கப்பட்ட ஜூலியன் நாட்காட்டியின் (Julian calendar) ஒரு திருத்தப்பட்ட வடிவமாகும். இத்தாலியரான அலோசியஸ் லிலியஸ் (Aloysius Lilius) என்ற மருத்துவரால் முன்வைக்கப்பட்டது. இது பிப்ரவரி 24 1582 இல் அப்போதைய "திருத்தந்தை பதின்மூன்றாம் கிரெகோரியன் " ஆணைப்படி துவக்கி வைக்கப்பட்டது. இதன் காரணமாகப் பின்னாளில் இந்நாட்காட்டிக்கு "கிரெகோரியன் நாட்காட்டி" என்னும் பெயர் வழங்கலாயிற்று. இந்த நாட்காடியின் படி இயேசு பிறந்ததாகக் கணிக்கப்பட்ட ஆண்டிலிருந்து ஆண்டுகள் இலக்கமிடப்பட்டன. (மூலம்: விக்கிபீடியா - ta.wikipedia.org/s/qp)

இன்று நம்முடைய அனுதின அலுவல்களுக்காகவும், மற்ற எல்லா விதமான காரியங்களுக்காக நாம் பயன்படுத்திக்கொண்டு இருப்பது இந்த கிரெகோரியன் காலண்டரைத் தான்.

## இஸ்லாமிய நாட்காட்டி:

இஸ்லாமிய நாட்காட்டி என்பது கி.பி. 622ம் ஆண்டிலிருந்து துவங்கப்பட்டதாகும். அதாவது, இந்த ஆண்டில் முஹம்மது மக்காவிலிருந்து மதினாவிற்கு ஹிஜ்ரா

(இடம் பெயர்ந்தார்) செய்தார். முஸ்லிம் சமுதாயம் இந்த தேதியை முக்கியப்படுத்தி தங்கள் நாட்காட்டியை தயாரித்துள்ளார்கள்.

சந்திரனின் சுழற்சியை அடிப்படையாகக் கொண்டு இஸ்லாமிய நாட்காட்டி தயாரிக்கப்படுவதினால், இஸ்லாமிய நாட்காட்டியில் ஒரு ஆண்டுக்கு 354/355 நாட்கள் வருகின்றது. கிரெகோரியன் அல்லது கிறிஸ்தவ நாட்காட்டியில் 365/366 நாட்கள் ஒரு ஆண்டுக்கு வருகிறது என்பதை கவனிக்கவும்.

இஸ்லாமிய நாட்காட்டியின் படி தேதியை குறிப்பிடும் போது தமிழில் "ஹிஜ்ரி" என்றும், ஆங்கிலத்தில் A.H (After Hijra) என்றும் எழுதுவார்கள்.

கீழ்கண்ட இரண்டு குர்ஆன் வசனங்களின் படி, சந்திரனை அடிப்படையாகக் கொண்டு இஸ்லாமிய நாட்காட்டி தயாரிக்கப்படுகின்றது.

குர்ஆன் 2:189. (நபியே! தேய்ந்து, வளரும்) பிறைகள் பற்றி உம்மிடம் கேட்கிறார்கள்; நீர் கூறும்: "அவை மக்களுக்குக் காலம் காட்டுபவையாகவும், ஹஜ்ஜையும் அறிவிப்பவையாகவும் உள்ளன. . . ..

குர்ஆன் 10:5. அவன்தான் சூரியனைச் (சுடர்விடும்) பிரகாசமாகவும், சந்திரனை ஒளிவுள்ளதாகவும் ஆக்கினான். ஆண்டுகளின் எண்ணிக்கையையும், காலக்கணக்கையும் நீங்கள் அறிந்து கொள்ளும் பொருட்டு(ச் சந்திரனாகிய) அதற்கு மாறி மாறி வரும் பல படித்தரங்களை உண்டாக்கினான்; அல்லாஹ் உண்மை(யாக தக்க காரணம்) கொண்டேயல்லாது இவற்றைப் படைக்கவில்லை - அவன் (இவ்வாறு) அறிவுள்ள மக்களுக்குத் தன் அத்தாட்சிகளை விவரிக்கின்றான்.

**இஸ்லாமிய 12 மாதங்களின் பெயர்கள்:**

ஒரு மாதம் என்பது 29 அல்லது 30 நாட்களை கொண்டு இருக்கும்.

- 1) முஹர்ரம்
- 2) ஸபர்
- 3) ரபியுல் அவ்வல்
- 4) ரபியுல் ஆஹிர்
- 5) ஜமாத்திலவ்வல்
- 6) ஜமாத்திலாஹிர்
- 7) ரஜப்
- 8) ஷஃபான்
- 9) ரமளான் (ரமலான்)
- 10) ஷவ்வால்
- 11) துல்காயிதா
- 12) துல்ஹஜ்

இதனால், இஸ்லாமிய ஆண்டு என்பது, கிரெகோரியன் நாட்காட்டியை விட 11 நாட்கள் குறைவாக இருக்கும்.

## இஸ்லாமிய நாட்காட்டியை பிரிண்ட் எடுப்பதில் உள்ள சிக்கல்:

கிரெகோரியன் அல்லது கிறிஸ்தவ நாட்காட்டியை கணக்கிட்டு பல ஆண்டுகளுக்கான நாட்காட்டியை பிரிண்ட் எடுத்துக்கொள்ளமுடியும், ஏனென்றால் சூரியனை அடிப்படையாகக் கொண்டு கிரெகோரியன் காலண்டர் உள்ளது. அதாவது பூமி தன்னைத் தானே சுற்ற எவ்வளவு மணி பிடிக்கிறது, பூமி சூரியனை ஒரு முறை சுற்ற எத்தனை நாட்கள் பிடிக்கிறது என்று கணித்து நாட்காட்டியை தயாரிக்கிறார்கள்.

ஆனால், இஸ்லாமிய நாட்காட்டியில் ஒரு புதிய மாதம் பிறந்ததா இல்லையா? என்பதை சந்திரனின் பிறையைப் பார்த்து முடிவு செய்கிறார்கள்.

சில நேரங்களில் மேகமூட்டத்தினால் நாம் பிறையை பார்க்கமுடியாது, அப்படியானால் எப்படி புது மாதத்தை சரியாக கணக்கிடுவது? இதனால் தான் இஸ்லாமிய நாட்காட்டியில் ஒரு மாதம் 29 நாட்களாகவும் இருக்கும், 30 நாட்களாகவும் இருக்கும்.

ஒரு வேளை ஒரு ஆண்டுக்கான மாதங்களை, நாட்களை முன்பாகவே கணித்து, ஒவ்வொரு மாதத்திற்கும் 30 நாட்கள் என்றுச் சொல்லி பிரிண்ட் எடுத்தாலும், அந்த மாதம் தொடங்கும் போது, பிறையைப் பார்த்து மாற்றிக்கொள்ளவேண்டி வரும். பிறை தெரிந்தால் நாளை புது மாதம் தொடங்கும், பார்க்கமுடியவில்லையென்றால், நாளை மறுநாள் புதுமாதம் என்று கருதப்படும்.

## கிரெகோரியன் நாட்காட்டிக்கு மாறிய் சௌதி அரேபியா:

சௌதி அரேபியா 2016ம் ஆண்டு வரை இஸ்லாமிய நாட்காட்டியை பயன்படுத்திக் கொண்டு இருந்தது. அதாவது வியாபாரம், அலுவல்கள் மற்றும் மத சம்மந்தப்பட்ட காரியங்கள் அனைத்திற்கும் இஸ்லாமிய நாட்காட்டியை பயன்படுத்தியது. ஆனால், அலுவல்கள் மற்றும் வியாபார காரியங்களுக்கு, வானத்தைப் பார்த்து பிறை தெரிகின்றதா? இல்லையா? என்று பார்த்துவிட்டு, வியாபாரத்தைச் செய்யமுடியாது, என்பதால் சௌதி அரசு இந்த மாற்றத்தை கொண்டு வந்தது.

இந்த மாற்றத்தைப் பற்றி The Economist (த எகனாமிஸ்ட்) என்ற ஆங்கில செய்தித்தாள் கீழ்கண்ட வாறு எழுதியுள்ளது.

Saudi Arabia adopts the Gregorian calendar

THE kingdom presented its shift from the **Islamic to the Gregorian calendar** as a leap into modernity. In April the dynamic deputy crown prince of Saudi Arabia, Muhammad bin Salman, chose to call his transformation plan **Vision 2030, not Vision 1451** after the corresponding Islamic

year as traditionalists might have preferred. Recently his cabinet declared that the administration is adopting **a solar calendar in place of the old lunar one**. **Henceforth they will run the state according to a reckoning based on Jesus Christ's birth, not on the Prophet Muhammad's religious mission.**

But puritans in Islam's birthplace are wincing at their eviction from control first over public space, and now of time. Guardians of the Wahhabi rite, who seek to be guided by Muhammad's every act, **ask whether they are now being required to follow Jesus**. A slippery slope, the clergy warn, to forgetting the fasting month of Ramadan altogether; **the authorities are rewinding the clock to the jahiliyyah, or pre-Islamic age of ignorance**. The judiciary, a clerical bastion, still defiantly insists on sentencing miscreants according to the old calendar

Source: **https://www.economist.com/middle-east-and-africa/2016/12/15/saudi-arabia-adopts-the-gregorian-calendar**

இதே போன்று அரப்நியூஸ் என்ற செய்தித்தாளும் இச்செய்தியை வெளியிட்டுள்ளது.

- KSA switches to Gregorian calendar - **https://www.arabnews.com/node/993061/saudi-arabia**

### இஸ்லாமிய நாட்காட்டியை நீக்கி, புதிய நாட்காட்டியை புகுத்திய அக்பர்:

இஸ்லாமிய நாட்காட்டியினால் வரி போடுவதிலும், வருமானம் வசூலிப்பதிலும் பிரச்சனை இருப்பதினால், முகலாய அரசர் அக்பர், சூரியனை அடிப்படையாகக் கொண்டு ஒரு காலண்டரை தயாரித்து பாங்களாதேஷில் அறிமுகம் செய்ததாக கூறப்படுகின்றது.

அதாவது, கிரெகோரியன் நாட்காட்டியோடு ஒப்பிடும் போது, இஸ்லாமிய நாட்காட்டி 11 நாட்கள் ஒரு ஆண்டுக்கு குறைவாக உள்ளது.

கிரெகோரியன் காலண்டரின் 30 ஆண்டுகள், இஸ்லாமிய காலண்டரின் படி 31 ஆண்டுகளுக்கு சமமாகிறது. இஸ்லாமிய காலண்டரின் அடிப்படையில் உழவர்களிடம் வரி வசூல் செய்தால், அவர்கள் 31 ஆண்டுகள் வரி தரவேண்டும். அதிகபடியான ஒரு ஆண்டு வரி அவர்களுக்கு நஷ்டமாக உள்ளது.

எனவே, அரசர் அக்பர், பல நிபுனர்களை நியமித்து, கிரெகோரியன் காலண்டருக்கு இணையான காலண்டரை உருவாக்கி பயன்பாட்டுக்கு கொண்டுவந்தாராம்.

### இதைப் பற்றிய மேலதி விவரங்களுக்கு கிழ்கண்ட தொடுப்புக்களை சொடுக்கவும்:

Bangladeshi calendar - **https://en.wikipedia.org/wiki/Bangladeshi_calendar** & **https://www.answering-islam.org/Index/C/calendar.html**

உலக நாட்காட்டிகள் பற்றியபல சுவாரஸ்யமான கேள்வி பதில்களை இங்கு காணலாம்: **Calendar FAQ**



**கேள்வி 32:** ஜின்கள் என்றால் என்ன? இஸ்லாமுக்கும் ஜின்களுக்கும் என்ன சம்மந்தம்? ஜின்களில் நல்ல கெட்ட ஜின்கள் உள்ளனவா?

**பதில் 32:** இஸ்லாமின் படி ஜின்கள் என்பவர்கள் கண்ணுக்குத் தெரியாத ஆவிகள். இவர்களுக்கு மனிதர்களைப் போல நன்மை தீமைகளை தெரிவு செய்யும் சக்தியுண்டு என்று இஸ்லாம் கூறுகிறது. ஜின் என்ற பெயரில் ஒரு அத்தியாயம் (ஸூரா 72) குர்ஆனில் உள்ளது. ஜின்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ஒரு விசேஷ ஒற்றுமையுள்ளது. முஸ்லிம்கள் அல்லாஹ்வை நினைப்பதற்கும் அதிகமாக ஜின்களை நினைக்கிறார்கள்.

நானும் ஒரு முஸ்லிம் குடும்பத்தில் வளர்ந்தபடியினால், என் சிறு வயதில் பெற்றோர்கள், அல்லது மற்றவர்கள் ஜின்கள் பற்றிச் சொல்லும் சுவாரஸ்யம் கலந்த பயம் உண்டாக்கும் விவரங்களைக் கேட்டு மிகவும் பயந்துள்ளேன். மசூதிக்குள்ளும் ஜின்கள் இருக்கும் என்றுச் சொல்வார்கள், எனவே மாலை நேர தொழுகை முடித்துக்கொண்டு வெளியே செல்லும் போது முதலாவதாக நான் இருப்பேன். வீட்டிலே கூட கழிவறைகளில் கெட்ட ஜின்கள் இருப்பதாகச் சொல்லி வைத்தார்கள், இதனால் கழிவறைக்கு செல்வதற்கும் பயப்படுவேன்.

ஜின்கள் பற்றி குர்ஆனும் ஹதீஸ்களும் சொல்லும் விவரங்கள், உங்கள் ஆய்வுக்காக:

- ஜின்களை நெருப்பிலிருந்து அல்லாஹ் படைத்தான்: குர்ஆன் 7:12, 15:27, 38:76, 55:15, 6:100
- அல்லாஹ்வை வணங்க படைக்கட்டவைகள் ஜின்கள்: குர்ஆன் 51:56
- அல்லாஹ் ஒவ்வொரு நபிக்கும் ஜின்களை விரோதிகளாக்கினான்: 6:112.
- கியாமத் நாளில் அல்லாஹ் ஜின்களிடம் கேள்வி கேட்பான்: 6:128, 130.
- ஜின்களில் அனேகரை நரகத்திற்கென்று அல்லாஹ் படைத்தான்: 7:179, 11:119, 32:13.
- மனிதர்கள் ஜின்கள் ஒன்றாக சேர்ந்தாலும், குர்ஆன் போன்ற ஒன்றை கொண்டுவரமுடியாது, அல்லாஹ்வின் சவால்: 17:88
- இப்லீஸ் / சைத்தான் ஜின் இனத்தைச் சேர்ந்தவன்: 18:50.
- சுலைமான் அரசனுக்கு ஜின்களிலிருந்து படையும், வேலையாட்களும் இருந்தார்கள், தேவாலயம் கட்ட உதவின: 27:17, 34:12.
- ஜின்களுக்கு மறைவான ஞானம் இல்லை: 34:14.
- ஜின்கள் குர்ஆனை கேட்டு சாட்சி பகிர்ந்தனர்: 46:30, 72:1.
- முஸ்லிம்களுக்கு அல்லாஹ் சொர்க்கத்தில் கொடுக்கப்போகும் பெண்களை ஜீன்களும் தீண்டாத கன்னிகள்: 55:56, 55:74.

- ஜின்னை தூணில் கட்டிப்போட விரும்பிய முஹம்மது, ஆனால் சுலைமான் அரசனுக்காக அதை விட்டுவிட்ட முஹம்மது: புகாரி நூல் எண்: 461, 3423.
- பாங்கு சப்தத்தை கேட்கும் ஜின்: புகாரி நூல் எண்: 609, 3296.
- முஹம்மது நஜ்மு அத்தியாயத்தை ஓதி ஸஜ்தாச் செய்தார்கள், அனைவரோடும் கூட ஜின்களும் ஸஜ்தா செய்தன: புகாரி நூல் எண்: 1071.
- முஹம்மது கூறினார்: வீடுகளில் வசிக்கும் பாம்புகள் ஜின்களாக இருக்கும்: புகாரி நூல் எண்: 3298, 4017.
- முஹம்மது கூறினார்: மாலை வேளைகளில் ஜின்கள் பூமியில் பரவி (பொருள்களையும், குழந்தைகளையும்) பறித்துச் சென்று விடும்: புகாரி நூல் எண்: 3316.
- ஜின்களுக்கு "முஹம்மது அல்லாஹ்வின் இறைத்தூதர்" என்று அடையாளப்படுத்திக் கொடுத்தது, ஒரு மரமாகும்: புகாரி நூல் எண்: 3859.
- எலும்பும் கெட்டிச் சாணமும் ஜின்களின் உணவு: புகாரி நூல் எண்: 3860.
- பெண் ஜின்னும், சஹாபாக்களின் உரையாடலும்: புகாரி நூல் எண்: 3866.
- மனிதர்களில் சிலர் 'ஜின்' இனத்தாரில் சிலரை வழிபட்டுக் கொண்டிருந்தனர், ஜின்கள் இஸ்லாத்தை ஏற்றனர்: புகாரி நூல் எண்: 4714
- ஜின்கள் ஜோதிடர்களுக்கு உதவி செய்கின்றன, சில வேளைகளில் அது உண்மையாகியும் விடுகின்றது: புகாரி நூல் எண்: 5762, 6213.

ஜின்கள் பற்றி இன்னும் அனேக விவரங்கள் இருக்கின்றன, அவைகளை தேவையான இடங்களில் காண்போம்.



**கேள்வி 33:** காஃபிர் (பன்மை காஃபிரூன்) என்றால் யார்?

**பதில் 33:** இஸ்லாமின் படி அல்லாஹ்வை வணங்காதவர் காஃபிர் என்று அழைக்கப்படுகின்றார். வேறுவகையில் சொல்வதாக இருந்தால், இஸ்லாமியரல்லாதவர்கள் அனைவரும் காஃபிர்கள் ஆவார்கள். இந்தியாவில் உள்ள இந்துக்கள், கிறிஸ்தவர்கள் மற்றும் நாத்தீகர்கள் அனைவரும் முஸ்லிம்களின் படி காஃபிர்கள் ஆவார்கள்.

காஃபிர்கள் பற்றி குர்ஆனும் முஹம்மதுவும் என்ன கூறியுள்ளார்கள், என்பதை சுருக்கமாக இங்கு காண்போம்.

**அல்லாஹ்வின் வழியை பின்பற்றாத காஃபிர்கள் நரக வாசிகள்:**

குர்ஆன் 2:39. அன்றி யார் (இதை ஏற்க) மறுத்து, நம் அத்தாட்சிகளை பொய்ப்பிக்க முற்படுகிறார்களோ **அவர்கள் நரக வாசிகள்;** அவர்கள் அ(ந் நரகத்)தில் என்றென்றும் தங்கி இருப்பர்.

**அல்லாஹ்வை நிராகரித்த கிறிஸ்தவர்களும் கஃபிர்கள் தான்:**

குர்ஆன் 5:72. “நிச்சயமாக மர்யமுடைய மகனாகிய மஸீஹ் (ஈஸா) தான் அல்லாஹ்” என்று கூறுகிறவர்கள் **உண்மையிலேயே நிராகரிப்பவர்கள் ஆகிவிட்டார்கள்**; ஆனால் மஸீஹ் கூறினார்: “இஸ்ராயீலின் சந்ததியினரே! என்னுடைய இறைவனும், உங்களுடைய இறைவனுமாகிய அல்லாஹ்வை வணங்குங்கள்” என்று. எனவே எவனொருவன் அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பானோ அவனுக்கு அல்லாஹ் சுவனபதியை நிச்சயமாக ஹராமாக்கிவிட்டான், மேலும் **அவன் ஒதுங்குமிடம் நரகமேயாகும்**, அக்கிரமக்காரரர்களுக்கு உதவிபுரிபவர் எவருமில்லை.

**ஒரு முஸ்லிமைப் பார்த்து இன்னொரு முஸ்லிம் காஃபிர் என்று அழைத்தால், அவர்களிருவரில் ஒருவர் அச்சொல்லுக்கு உரியவராகத் திரும்புவார்:**

புகாரி எண்: 6103. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

ஒருவர் தம் (முஸ்லிம்) சகோதரரை நோக்கி '**காஃபிரே**!' (இறைமறுப்பாளனே!) என்று கூறினால் நிச்சயம் அவர்களிருவரில் ஒருவர் அச்சொல்லுக்கு உரியவராகத் திரும்புவார். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

**ஒரு முஸ்லிமை இன்னொரு முஸ்லிம் கொன்றால், அவன் காஃபிர் (இறைமறுப்பாளன்):**

புகாரி எண்: 121. 'நபி(ஸல்) அவர்கள் தங்களின் இறுதி ஹஜ்ஜின்போது (மக்களுக்கு உரையாற்றிய நேரத்தில்) என்னிடம் 'மக்களை அமைதியுடன் செவி தாழ்த்திக் கேட்கும் படி செய்வீராக!' என்று கூறினார்கள். (மக்கள் அமைதியுற்ற பின்னர்) 'எனக்குப் பிறகு நீங்கள் ஒருவர் கழுத்தை ஒருவர் வெட்டிக் கொள்ளும் **இறைமறுப்பாளர்களாக மாறி விடவேண்டாம்**' என்று கூறினார்கள்' என ஜரீர்(ரலி) அறிவித்தார்.

**இறைமறுப்பாளனின் இரண்டு தோள் புஜங்களுக்கிடையே உள்ள தூரம் அனேக கிலோமீட்டர்கள் இருக்கும்:**

ஸஹீஹ் புகாரி எண் 6551

6551. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: (நரகத்தில்) இறைமறுப்பாளனின் இரண்டு தோள் புஜங்களுக்கிடையே உள்ள தூரம், **துரிதமாகப் பயணிப்பவர் மூன்று நாள்கள் கடக்கும் தூரமாகும்**. என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

முஹம்மது நரகம், சொர்கம் பற்றிச் சொல்வதை யாரும் உடனே சரி பார்க்கமுடியாது. இந்த தைரியத்தில் நம்பமுடியாத விஷயங்களை சரளமாக முஹம்மது கூறியுள்ளார். முஹம்மது "(நரகத்தில்) இறைமறுப்பாளனின் இரண்டு தோள் புஜங்களுக்கிடையே உள்ள தூரம், துரிதமாகப் பயணிப்பவர் மூன்று நாள்கள் கடக்கும் தூரமாகும்” என்று கூறியுள்ளார். ஒரு மனிதனின் இரண்டு

தோள் புஜங்களுக்கு இடையே இருக்கும் தூரம் அனேக கிலோ மீட்டர்கள் இருக்கும் என்று இவர் கூறுகிறார். கடந்த 14 நூற்றாண்டுகளாக இதையும் நம்பிக்கொண்டு இருக்கிறார்கள் முஸ்லிம்கள். ஒரு ஆரோக்கியமுள்ள மனிதன் துரிதமாக நடந்தால், ஒரு மணிக்கு குறைந்த பட்ச வேகமாகிய 5 கிலோமீட்டர் என்று கணக்கிட்டால், 8 மணி நேரம் நடந்தால் அவன் 40 கிலோ மீட்டர் தொலைவை கடக்கமுடியும். மூன்று நாட்களை கணக்கில் கொண்டால், 40 x 3 = 120 கிலோ மீட்டர். ஒரு மனிதனின் ஒரு புஜத்திற்கும், அடுத்த புஜத்திற்கும் இடையே இருக்கும் தூரம் 120 கிலோ மீட்டர் இருக்குமா? அறிவுள்ளவர்கள் சிந்திக்கட்டும். முஹம்மது குதிரையில் அல்லது ஒட்டகத்தில் பயணிப்பவர் பற்றி சொல்லியிருக்கக்கூடும். இப்படி ஒரு குதிரையில் செல்பவன் கடக்கும் தூரத்தை கணக்கிட்டால், என்னவாகும் இந்த கணக்கு? எங்கேயோ போகும். இப்படியெல்லாம் புதுமையான பொய்களைச் சொல்லி முஹம்மது தன் மார்க்க மக்களை குஷி படுத்தியுள்ளார்.



**கேள்வி 34:** வேதங்கள் கொடுக்கப்பட்டோர் (அஹல் அல்-கிதாப் - AHL AL-KITAB) என்றால் யார்?

**பதில் 34:** அஹல் அல்கிதாப் என்றால், வேதம் கொடுக்கப்பட்டோர்கள் என்று யூதர்களையும், கிறிஸ்தவர்களையும் குர்ஆன் குறிக்கிறது.

**வேதங்கள் கொடுக்கப்பட்டோரிடம் சென்று முஸ்லிம்கள் கற்கவேண்டும்:**

குர்ஆன் 21:7. (நபியே!) உமக்கு முன்னரும் மானிடர்களையே அன்றி (வேறெவரையும்) நம்முடைய தூதர்களாக நாம் அனுப்பவில்லை; அவர்களுக்கே நாம் வஹீ அறிவித்தோம். எனவே "(இதனை) நீங்கள் அறியாதவர்களாக இருந்தால் (நினைவுபடுத்தும்) **வேதங்களுடையோரிடம் கேட்டுத் (தெரிந்து) கொள்ளுங்கள்**" (என்று நபியே! அவர்களிடம் கூறும்).

குர்ஆன் 16:43. (நபியே!) இன்னும் உமக்கு முன்னர் வஹீ கொடுத்து நாம் அவர்களிடம் அனுப்பி வைத்த தூதர்கள் எல்லோரும் ஆடவரே தவிர வேறல்லர்; ஆகவே (அவர்களை நோக்கி) "நீங்கள் (இதனை) அறிந்து கொள்ளாமலிருந்தால். (முந்திய) **வேத ஞானம் பெற்றோரிடம் கேட்டறிந்து கொள்ளுங்கள்**" (என்று கூறுவீராக).

**முஹம்மதுவிற்கே சந்தேகம் வந்தாலும் வேதம் கொடுக்கப்பட்ட யூத கிறிஸ்தவர்களிடம் கேட்டு சந்தேகத்தை தீர்த்துக்கொள்ளவேண்டும்.**

குர்ஆன் 10:94. (நபியே!) நாம் உம் மீது இறக்கியுள்ள இ(வ்வேதத்)தில் சந்தேகம் கொள்வீராயின், உமக்கு **முன்னர் உள்ள வேதத்தை ஓதுகிறார்களே அவர்களிடம் கேட்டுப் பார்ப்பீராக**; நிச்சயமாக உம் இறைவனிடமிருந்து உமக்குச் சத்திய (வேத)ம் வந்துள்ளது - எனவே சந்தேகம் கொள்பவர்களில் நீரும்

ஒருவராகி விட வேண்டாம். 10:95. அன்றியும் அல்லாஹ்வின் வசனங்களை பொய்ப்பிப்போர்களில் ஒருவராக நீரும் ஆகிவிட வேண்டாம்; அவ்வாறாயின் நஷ்டமடைவோரில் நீரும் ஒருவராவீர்.

முஹம்மது தம் சந்தேகத்தை தீர்த்துக்கொள்ள, தரம் குறைந்த ஒன்றிடம் சென்று சரிபார்க்கும் படி அல்லாஹ் கூறுவானா? நிச்சயம் இல்லை. எனவே யூத கிறிஸ்தவ வேதங்கள் 'இஸ்லாமின் கடைசி நபியின் சந்தேகத்தை' தீர்க்கும் தரமுள்ளது என்று குர்ஆன் சொல்கிறது.



**கேள்வி 35:** முஜாஹீர்கள் என்றால் யார்?

**பதில் 35:** அல்லாஹ்விற்காக ஜிஹாதில் ஈடுபடுகிறவர்களை முஜாஹீர்கள் என்பார்கள்.

அரபி வார்த்தை: முஜாஹித் என்பது ஒருமை, முஜாஹிதீன் என்பது பன்மையாகும்.

**முஜாஹீர்கள் பற்றி குர்ஆன்:**

முஹம்மது ஜான் தமிழாக்கம்:

குர்ஆன் 47:31. அன்றியும், (அல்லாஹ்வின் பாதையில் போரிடும்) உங்களிலிருந்துள்ள **முஜாஹிதுகளையும்**, பொறுமையாளர்களையும் நாம் அறியும் வரை உங்களை நிச்சயமாக நாம் சோதிப்போம்; உங்கள் செய்திகளையும் நாம் சோதிப்போம் (அவற்றின் உண்மையை வெளிப்படுத்துவதற்காக).

இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட்(IFT) தமிழாக்கம்:

47:31. நாம் உங்களை நிச்சயமாகச் சோதனைக்குள்ளாக்குவோம் உங்கள் நிலைமைகளைப் பரிசீலித்து உங்களில் யார் **முஜாஹிதுகள் போராளிகள்**, நிலைகுலையாது துணிச்சலுடன் இருப்பவர்கள் என்பதை நாம் கண்டறிவதற்காக!



**கேள்வி 36:** உம்ரா (Umra) என்றால் என்ன?

**பதில் 36:** உம்ரா என்றால் இஸ்லாமியர்கள் மக்காவிற்குச் செல்லும் புனித யாத்திரையாகும். இதனை சின்ன ஹஜ் என்பார்கள்.

பக்ரீத் மாதத்தில் செல்லும் புனித யாத்திரை ஹஜ் எனப்பபடும், இதர மாதங்களில் செல்லும் புனித யாத்திரையை உம்ரா என்பார்கள். உம்ரா செய்வது குறைவான நன்மைகளைத் தருகிறது, ஹஜ் செய்வது அதிக நன்மைகளைத் தருகிறது என்று இஸ்லாம் கூறுகின்றது.



**கேள்வி 37:** நபித்தோழர்கள்/சஹாபாக்கள் என்றால் யார்?

**பதில் 37:** முஹம்மது உயிரோடு இருந்த போது, அவரை நபி என்று நம்பி, அவரோடு கூட இருந்த முஸ்லிம்களை சபாஹாக்கள் என்பார்கள். இவர்களை நபித்தோழர்கள் (Companions) என்றும் அழைப்பார்கள்.

**அரபியில்:**

- "ஸஹாபி" (*ṣaḥābiyy)* : ஆண் - ஒருமை
- "ஸஹாபிய்யாஹ்" (*ṣaḥābiyyah*) : பெண் - ஒருமை
- "ஸஹாபா" (*Al-ṣaḥābah*) : பன்மை

**சஹாபாக்களை பல வகைகளில் பிரிக்கிறார்கள்:**

**1) முஹாஜிர்கள்:** முஹம்மதுவோடு மதினாவிற்கு ஹிஜ்ரா செய்தவர்கள். இவர்கள் மக்காவில் இருக்கும் போதே முஹம்மதுவை நபி என்று நபி இஸ்லாமை தழுவியர்கள்.

**2) அன்சார்கள்:** மதினாவில் இருந்தவர்கள், முஹம்மதுவை நபியாக ஏற்றுக்கொண்டவர்கள்.

**3) பத்ரியூன்:** பத்ரு போரில் முஹம்மதுவோடு பங்கு பெற்ற சஹாபாக்கள்.

இப்படி ஒவ்வொரு முக்கியமான உடன்படிக்கை மற்றும் போரில் ஈடுபட்ட சஹாபாக்கள் என்று வகைப்படுத்துகிறார்கள்.

**தோராயமாக எத்தனை சஹாபாக்கள்?**

முஹம்மதுவோடு மிகவும் நெருங்கிய சஹாபாக்கள் என்று அறிஞர்கள் 50 அல்லது 60 பேரை பட்டியலிட்டுள்ளார்கள். இவர்கள் மட்டுமல்லாமல், இஸ்லாமிய சரித்திர நூல்களில் (ibn Sa'd's early *Book of the Major Classes*. Al-Qurtubi's *Istī'āb fī ma'rifat al-Aṣhāb*) மேலும் அனேக சஹாபாக்களின் பெயர்களையும், விவரங்களையும் குறிப்பிட்டுள்ளார்கள். இந்நூல்களில் 2770 ஆண் சஹாபாக்களின் விவரங்களும், 381 பெண் சஹாபாக்களின் விவரங்களும் கொடுக்கப்பட்டுள்ளது (மூலம்: **https://en.wikipedia.org/wiki/Companions_of_the_Prophet**).

முஹம்மதுவை நேரடியாக பார்த்தவர்கள் என்று கணக்கிட்டால், இந்த எண்ணிக்கை இன்னும் அதிகமாகும், அதாவது மக்காவை ஆக்கிரமித்தபோது, 10,000 பேர் மக்காவை நோக்கி சென்றதாக அறியமுடியும், மேலும் போரில் பங்கு பெறாதார்களும் இன்னும் அதிகமாக இருந்திருப்பார்கள்.

சில இஸ்லாமிய அறிஞர்களின் கருத்துப்படி, முஹம்மதுவை பார்த்தவர்கள், அவரோடு சில காலம் வாழ்ந்தவர்கள் அனைவரையும் சஹாபாக்கள் என்று சொல்லமுடியாது. சஹாபாக்கள் என்றால் அவர்களுக்கென்று சில தனிப்பட்ட குணங்கள் உண்டு என்றுச் சொல்கிறார்கள்.



**கேள்வி 38:** பனி/பனூ இஸ்ராயீல் (Bani Israel) என்றால் யார்?

**பதில் 38:** குர்ஆனிலும், ஹதீஸ்களிலும் "பனி இஸ்ராயீல்" என்ற சொற்கள் "இஸ்ரவேல்" மக்களைக் குறிக்க பயன்படுத்தட்டுள்ளது. பைபிளின் பழைய ஏற்பாட்டிலுள்ள யூதர்களையும், முஹம்மதுவின் காலத்தில் இருந்த யூதர்களைக் குறிக்கவும் இவ்வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது.

இஸ்ராயீல் மக்கள் பற்றிய சில குர்ஆன் வசனங்களைக் காண்போம்.

**இஸ்ராயீலின் சந்ததியை மேன்மைப்படுத்திய அல்லாஹ்:**

2:40. இஸ்ராயீலின் சந்ததியினரே! நான் **உங்களுக்கு அளித்த என்னுடைய அருட்கொடையை** நினைவு கூறுங்கள்; நீங்கள் என் வாக்குறுதியை நிறைவேற்றுங்கள்; நான் உங்கள் வாக்குறுதியை நிறைவேற்றுவேன்; மேலும், நீங்கள் (வேறெவருக்கும் அஞ்சாது) எனக்கே அஞ்சுவீர்களாக.

2:47. இஸ்ராயீல் மக்களே! (முன்னர்) நான் உங்களுக்கு அளித்த என்னுடைய அருட் கொடையையும், **உலகோர் யாவரையும் விட உங்களை மேன்மைப்படுத்தினேன்** என்பதையும் நினைவு கூறுங்கள்.

2:122. (யஃகூப் என்ற) இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களுக்கு அளித்த என் நன்கொடைகளை நினைவு கூறுங்கள்; இன்னும் நிச்சயமாக **நான் உங்களை உலக மக்கள் எல்லோரையும்விட மேம்பாடுடையோராகச் செய்தேன்**.

**இஸ்ராயீல் மக்களுக்கு அல்லாஹ் அத்தாட்சிகளை அனுப்பினான்:**

2:211. (நபியே!) இஸ்ராயீலின் சந்ததிகளிடம் (யஹூதிகளிடம்) நீர் கேளும்: “நாம் எத்தனை **தெளிவான அத்தாட்சிகளை அவர்களிடம் அனுப்பினோம்**” என்று; அல்லாஹ்வின் அருள் கொடைகள் தம்மிடம் வந்த பின்னர், யார் அதை மாற்றுகிறார்களோ, (அத்தகையோருக்கு) தண்டனை கொடுப்பதில் நிச்சயமாக அல்லாஹ் கடுமையானவன்.

**'தவ்ராத்' க்கு முன்பு இஸ்ராயீல்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்த உணவு கட்டுப்பாடு:**

3:93. இஸ்ராயீல் (என்ற யஃகூப்) தவ்ராத் அருளப்படுவதற்கு முன்னால் தன் மீது ஹராமாக்கிக் கொண்டதைத் தவிர, **இஸ்ரவேலர்களுக்கு எல்லாவகையான உணவும் அனுமதிக்கப்பட்டிருந்தது**; (நபியே!) நீர் கூறும்: “நீங்கள்

உண்மையாளர்களாக இருந்தால் தவ்ராத்தையும் கொண்டு வந்து அதை ஓதிக்காண்பியுங்கள்" என்று.

**ஒருவனை கொலை செய்தால், அனைவரையும் கொலை செய்ததற்கு சமம் என்ற கட்டளை பெற்றவர்கள்:**

5:32. இதன் காரணமாகவே, "நிச்சயமாக எவன் ஒருவன் கொலைக்குப் பதிலாகவோ அல்லது பூமியில் ஏற்படும் குழப்பத்தை(த் தடுப்பதற்காகவோ) அன்றி, மற்றொருவரைக் கொலை செய்கிறானோ அவன் மனிதர்கள் யாவரையுமே கொலை செய்தவன் போலாவான்; மேலும், எவரொருவர் ஓராத்மாவை வாழ வைக்கிறாரோ அவர் மக்கள் யாவரையும் வாழ வைப்பவரைப் போலாவார்" **என்று இஸ்ராயீலின் சந்ததியினருக்கு விதித்தோம்**. மேலும், நிச்சயமாக நம் தூதர்கள் அவர்களிடம் தெளிவான அத்தாட்சிகளைக் கொண்டு வந்தார்கள்; இதன் பின்னரும் அவர்களில் பெரும்பாலோர் பூமியில் வரம்பு கடந்தவர்களாகவே இருக்கின்றனர்.

**இஸ்ரேல் நாட்டை சொந்தமாக இஸ்ராயீலுக்கு அல்லாஹ் கொடுத்தான்:**

5:21. (தவிர, அவர்) "என் சமூகத்தோரே! **உங்களுக்காக அல்லாஹ் விதித்துள்ள புண்ணிய பூமியில் நுழையுங்கள்**; இன்னும் நீங்கள் புறமுதுகு காட்டி திரும்பி விடாதீர்கள்; (அப்படிச் செய்தால்) நீங்கள் நஷ்ட மடைந்தவர்களாகவே திரும்புவீர்கள்" என்றும் கூறினார்.

**இஸ்ராயீல் மக்களுக்கு வழிகாட்டியாக மூஸாவின் மூலமாக வேதம் கொடுக்கப்பட்டவர்கள்:**

17:2. இன்னும், நாம் மூஸாவுக்கு வேதத்தைக் கொடுத்தோம்; **நாம் அதை இஸ்ராயீலின் சந்ததிகளுக்கு வழிகாட்டியாக ஆக்கி**, "என்னையன்றி வேறு எவரையும் நீங்கள் பாதுகாவலனாக ஆக்கிக் கொள்ளாதீர்கள் (எனக் கட்டளையிட்டோம்).

32:23. நிச்சயமாக நாம் மூஸாவுக்கு (அவ்) வேதத்தைக் கொடுத்தோம். எனவே, அவர் அதைப் பெற்றதைப்பற்றி சந்தேகப்படாதீர்; நாம் இதனை **இஸ்ராயீலின் சந்ததிக்கு வழிகாட்டியாகவும் ஆக்கினோம்**.

**இஸ்ராயீலின் சந்ததியினரை வேதத்திற்கு வாரிசாக்கினோம்:**

40:53. நிச்சயமாக மூஸாவுக்கு நேர்வழி (காட்டும் வேதத்தை) நாம் அளித்தோம் - அன்றியும் **இஸ்ராயீலின் சந்ததியினரை வேதத்திற்கு வாரிசாக்கினோம்**.

**இஸ்ராயீலின் சந்ததியினருக்கு வேதத்தையும், அதிகாரத்தையும், நுபுவ்வத்தையும் கொடுத்தோம்:**

45:16. நிச்சயமாக நாம், **இஸ்ராயீலின் சந்ததியினருக்கு வேதத்தையும்**, அதிகாரத்தையும், நுபுவ்வத்தையும் கொடுத்தோம்; அவர்களுக்கு மணமான உணவு (வசதி)களையும் கொடுத்தோம் - அன்றியும் அகிலத்தாரில் அவர்களை மேன்மையாக்கினோம்.



**கேள்வி 39:** குர்ஆனை மனனம் செய்தவர்களை என்னவென்று அழைப்பார்கள்?

**பதில் 39:** குர்ஆனை முழுவதுமாக மனனம் செய்தவரை 'ஹஃபிஜ்(Hafiz)' என்று அழைப்பார்கள். இதன் பொருள் பாதுகாவளர் அல்லது மனனமிட்டவர் என்பதாகும்.

ஹுஃப்ஃபாஜ்(Huffaz) என்பது பன்மையாகும். ஹஃபீஜா(Hafiza) என்பது பெண் பால் ஆகும்.

அதாவது ஒரு ஆண் குர்ஆனை முழுவதுமாக மனனம் செய்திருந்தால், அவரை ஹஃபீஜ் என்பார்கள், ஒரு பெண் குர்ஆனை மனனம் செய்திருந்தால், அவரை ஹஃபீஜா என்பார்கள்.

இஸ்லாமிய நபி முஹம்மது தனக்கு இறக்கப்பட்ட குர்ஆனை முழுவதுமாக மனப்பாடம் செய்திருந்தார் என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள். ஆனால், இஸ்லாமிய ஆதாரங்களின் படி, பல முறை முஹம்மது குர்ஆன் வசனங்களை மறந்துள்ளார், அந்த நேரத்தில் யாரோ ஒரு நபர் அவருக்கு ஞாபகப்படுத்தியுள்ளார்.



**கேள்வி 40:** ஈத் உல் ஃபித்ர் (Eid-ul Fitr) என்றால் என்ன? Eid al-Fitr

**பதில் 40:** ரமலான் மாதத்தின் முதல் நாள் முதற்கொண்டு 30 நாட்கள் தொடர்ந்து நோன்பு இருந்து கடைசியாக கொண்டாடப்படும் இஸ்லாமிய பண்டிகையின் பெயர் தான் “ஈத் அல்-பித்ர்” அல்லது “ஈத் உல்-பித்ர்” என்பதாகும். இதனை ரமலான் / ரம்ஜான் பண்டிகை என்றும் கூறுவர்.

ரமளான் மாதம் நோன்பா? அல்லது விருந்தா?

ஒரு முஸ்லிம் குடும்பத்தில், சாதாரண மாதங்களில் உணவிற்காக ஆகும் செலவை விட, நோன்பு மாதத்தில் (ரமளான்) அதிகமாக செல்வாகிறது. ரமளானில் உணவிற்கு இப்படி செலவு அதிகமானால், இம்மாதத்தை "நோன்பு மாதம்" என்று ஏன் நாம் அழைக்கவேண்டும்? உண்மையைச் சொல்லவேண்டுமென்றால், இந்த மாதம் "விருந்து மாதம்" என்று அழைக்கலாம், பல வகையான பண்டங்கள், மாமிச உணவுகள் அதிகமாக செலவிடப்படுகின்ற மாதம் இது, இதை நோன்பு மாதம் என்று சொல்வது தவறல்லவா?



**கேள்வி 41:** அதான் (அஜான், பாங்கு) என்றால் என்ன?

**பதில் 41:** பாங்கு அல்லது அதான் / அஜான் என்பது முஸ்லிம்கள் தொழுகை தொடங்குவதற்கு முன்பு மசூதிகளிலிருந்து விடுக்கப்படும் அழைப்பு ஆகும். ஒரு நாளில் ஐந்து முறை அதான் விடுக்கப்படும். பாங்கு என்பது பாரசீகச் சொல்லாகும். அதான் என்பது அரபிச் சொல்லாகும். பாங்கு சொல்வதற்காக நியமிக்கப்படுபவரை "முஅத்தின்" என்று அழைப்பார்கள்.

பாங்கு அரபி மொழியில் சொல்லப்படும். பாங்கின் அரபி மற்றும் தமிழாக்கத்தை கீழே காணலாம்:

**தொழுகைக்கான அழைப்பு (பாங்கு அல்லது அதான்):**

- **அல்லாஹு அக்பர் (2 முறை)** - இறைவன் மிகப் பெரியவன்
- **அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹ் (2 முறை)** – இறைவன் ஒருவனைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று சாட்சி கூறுகிறேன்.
- **அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்(2 முறை)** – முஹம்மது இறைவனின் தூதர் என்று சாட்சி சொல்கின்றேன்
- **ஹய்ய அலஸ்ஸலாஹ் (2 முறை)**– தொழுகைக்கு விரைந்து வாருங்கள்
- **ஹய்ய அலல்ஃபலாஹ் (2 முறை)** – வெற்றியின் பக்கம் வாருங்கள்
- **அல்லாஹு அக்பர் (2 முறை)** – இறைவன் மிகப் பெரியவன்
- **லா இலாஹ இல்லல்லாஹு** - இறைவன் ஒருவனைத் தவிர வேறு கடவுள் இல்லை.

அதிகாலை தொழுகைக்காக (சுப்ஹ்) அழைப்பு விடும்போது கீழ்வரும் வரிகளை இணைத்து அழைப்பு விடுவர்.

- **அஸ்ஸலாத்து ஹைரும் மினன் நௌம்(2 முறை)** - தூக்கத்தை விடத் தொழுகை மேலானது

மூலம்: **ta.wikipedia.org/s/k76**

**அதான் பின்னணி: பாங்கு சொல்வது எப்போது தொடங்கப்பட்டது?**

புகாரி நூல் எண்: 604

இப்னு உமர்(ரலி) அறிவித்தார். முஸ்லிம்கள் (மக்காவிலிருந்து) மதீனாவிற்கு வந்தபோது தொழுகைக்கு அழைப்புக் கொடுக்கப்படுவதில்லை. அவர்கள் ஒன்று கூடி நேரத்தை முடிவு செய்து கொள்வார்கள். ஒரு நாள் இது பற்றி எல்லோரும் கலந்தாலோசித்தனர்.

அப்போது சிலர், **கிறித்தவர்களைப் போன்று மணி அடியுங்கள்** என்றனர்.

வேறு சிலர் **யூதர்கள் வைத்திருக்கிற கொம்பைப் போன்று நாமும் கொம்பூதலாமே** என்றனர்.

அப்போது உமர்(ரலி) '**தொழுகைக்காக அழைக்கிற ஒருவரை ஏற்படுத்தக் கூடாதா?**' என்றனர். உடனே பிலால்(ரலி) அவர்களிடம் '**பிலாலே! எழுந்து தொழுகைக்காக அழையும்**' என்று நபி(ஸல்) கூறினார்கள்..

**பாங்கு சொல்வதைப் பற்றிய முஹம்மதுவின் கட்டுக்கதை: ஷைத்தான் பின் துவாரத்தின் வழியாகக் காற்றுவிட்டவனாக ஓடி விடுகிறான்**

முஹம்மது எப்படியெல்லாம் மக்களை முட்டாள்களாக்க முடியுமோ, அப்படியெல்லாம் பொய்களைச் சொல்லி அவர்களை முட்டாள்களாக்கியுள்ளார். தொழுகைக்காக பாங்கு சொல்லப்பட்டால் பாங்கு சப்தம் தனக்குக் கேட்காமலிருப்பதற்காக ஷைத்தான் பின் துவாரத்தின் வழியாகக் காற்றுவிட்டவனாக ஓடி விடுகிறான். பாங்கு முடிந்ததும் திரும்பி வந்து இகாமத் கூறப்பட்டதும் மீண்டும் ஓடுகிறான். இப்படி முஹம்மது கூறியுள்ளார். சாத்தான் இப்படியெல்லாம் காற்றுவிட்டவனாக ஓடுவானா? இது அறிவுடமையா? உலகம் முழுவதும் உள்ள லட்சக்கணக்கான மசூதிகளில் பாங்கு சொல்லும் போது, ஒரே நேரத்தில் எப்படி சாத்தான் எல்லா இடங்களிலும் காற்றுவிட்டவனாக ஓடமுடியும்? இது உண்மையென்றால், சாத்தான் அல்லாஹ்வைப் போன்று சர்வவியாபியாக இருக்கிறான் என்று அர்த்தம். இப்படி கட்டுக்கதைகளைச் சொல்லி மக்களை முஹம்மது ஏமாற்றியுள்ளார். இவரை நபி என்று நாம் கூறினால், இது மிகப்பெரிய பாவமாக இருக்கும்.

ஸஹீஹ் புகாரி எண் 1231.

1231 'தொழுகைக்காக பாங்கு சொல்லப்பட்டால் **பாங்கு சப்தம் தனக்குக் கேட்காமலிருப்பதற்காக ஷைத்தான் பின் துவாரத்தின் வழியாகக் காற்றுவிட்டவனாக ஓடி விடுகிறான்**. பாங்கு முடிந்ததும் திரும்பி வந்து இகாமத் கூறப்பட்டதும் மீண்டும் ஓடுகிறான். இகாமத் முடிந்ததும் மீண்டும் வந்து தொழுபவரின் உள்ளத்தில் ஊடுருவி 'இதை இதையெல்லாம் நினைத்துப்பார்' எனக் கூறி, அவர் இதுவரை நினைத்துப் பார்த்திராதவற்றையெல்லாம் நினைவூட்டி அவர் எத்தனை ரக்அத்கள் தொழுதார் என்பதை மறக்கடிக்கிறான். உங்களில் ஒருவருக்குத் தாம் தொழுத ரக்அத்களில் மூன்றா அல்லது நான்கா என்று தெரியவிட்டால் (கடைசி) இருப்பில் இரண்டு ஸஜ்தாச் செய்து கொள்ளட்டும்' இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.



**கேள்வி 42:** அமீனா (Aminah) என்ற பெண்மணி யார்?

**பதில் 42:** இந்த பெண்மணி, வஹாப் என்பவரின் மகளாவார்கள். இவர் அப்துல்லாஹ்வின் மனைவியும், முஹம்மதுவின் தாய் ஆவார்கள். இவர்கள் முஹம்மதுவிற்கு தாய்ப்பால் கொடுக்கமுடியாத நிலையில் இருந்தபடியால், ஹலிமா என்ற ஒரு பெண்ணிடம் முஹம்மதுவை கொடுத்து பாலூட்டச் சொன்னார்கள். அமீனா அவர்கள் முஹம்மதுவிற்கு ஆறு வயது இருக்கும் போது காலமானார்கள். அதன் பிறகு முஹம்மதுவை அவருடைய தாத்தா அப்துல் முத்தாலிபும், அதன் பிறகு அபூ தாலிப்பும் முஹம்மதுவை வளர்த்து வந்தார்கள்.

### முஹம்மதுவின் தாயும் தந்தையும் நரகத்தில் இருப்பார்கள்:

தம்முடைய தாயும் தந்தையும் நரகத்தில் இருப்பார்கள் என்று முஹம்மது கூறியுள்ளார், முஸ்லிம் நூல் இதனை பதிவு செய்துள்ளது.

**1777. அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:**

நபி (ஸல்) அவர்கள் தம் தாயாரின் அடக்கத்தலத்தைச் சந்தித்தபோது அழுதார்கள்; (இதைக் கண்டு) அவர்களைச் சுற்றியிருந்தவர்களும் அழுதனர். அப்போது அவர்கள், "**நான் என் இறைவனிடம் என் தாயாருக்காகப் பாவமன்னிப்புக் கோர அனுமதி கேட்டேன். எனக்கு அனுமதி வழங்கப்படவில்லை**. அவரது அடக்கத்தலத்தைச் சந்திப்பதற்கு அனுமதி கேட்டேன். எனக்கு அனுமதி வழங்கினான். எனவே, அடக்கத்தலங்களைச் சந்தியுங்கள். ஏனெனில், அவை மரணத்தை நினைவூட்டும்!" என்று கூறினார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**347. அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

ஒரு மனிதர் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! (இஸ்லாத்திற்கு முன் இறந்துவிட்ட) என் தந்தை எங்கே இருக்கிறார்?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(நரக) நெருப்பில்" என்று பதிலளித்தார்கள். அவர் திரும்பிச் சென்றபோது அவரை நபி (ஸல்) அவர்கள் அழைத்து, "**என் தந்தையும் உன் தந்தையும் (நரக) நெருப்பில்தான் (இருக்கிறார்கள்)**" என்று கூறினார்கள்.



**கேள்வி 43:** அர்ஷ் (Al-ʿArsh) என்பது என்ன?

**பதில் 43:** அல்லாஹ் உட்கார்ந்து இருக்கும் சிம்மாசனத்திற்கு "அர்ஷ்" என்று பெயர்.

அல்லாஹ்வின் நாற்காலி அர்ஷ் தண்ணீர் மீது அமைந்துள்ளது:

குர்ஆன் 11:7. அவனே வானங்களையும் பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான் அதற்கு முன்னர் அவனுடைய **அர்ஷ்* நீரின் மீது இருந்தது** எதற்காகவெனில் உங்களில் யார் நற்செயல் புரியக்கூடியவர் என்பதைச் சோதித்துப்

பார்ப்பதற்காக! இப்போது நபியே! நீர் மக்களிடம் "நீங்கள் மரணமடைந்த பின் திண்ணமாக எழுப்பப்படுவீர்கள்!" என்று கூறினால் இறைநிராகரிப்பாளர்கள் உடனே கூறுவார்கள்: "இது வெளிப்படையான சூனியமே அன்றி வேறில்லை."

குர்ஆன் 7:54. நிச்சயமாக உங்கள் இறைவனாகிய அல்லாஹ் தான் ஆறு நாட்களில் வானங்களையும், பூமியையும் படைத்துப் **பின் அர்ஷின் மீது தன் ஆட்சியை அமைத்தான்** - அவனே இரவைக் கொண்டு பகலை மூடுகிறான்; அவ்விரவு பகலை வெகு விரைவாக பின் தொடர்கின்றது; இன்னும் சூரியனையும்; சந்திரனையும், நட்சத்திரங்களையும் தன் கட்டளைக்கு - ஆட்சிக்குக் - கீழ்படிந்தவையாக(ப் படைத்தான்); படைப்பும், ஆட்சியும் அவனுக்கே சொந்தமல்லவா? அகிலங்களுக்கெல்லாம் இறைவனாகிய (அவற்றைப் படைத்து, பரிபாலித்துப் பரிபக்குவப்படுத்தும்) அல்லாஹ்வே மிகவும் பாக்கியமுடையவன்.



**கேள்வி 44:** அரஃபத் என்பது இடத்தின் பெயரா அல்லது மனிதர்களின் பெயரா?

**பதில் 44:** அரஃபத் என்பது மக்காவிலிருந்து 20 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ஒரு இடத்தின் பெயராகும். இதைப் பற்றி குர்ஆனிலும் கீழ்கண்ட வசனத்தில் கூறப்பட்டுள்ளது.

2:198. (ஹஜ்ஜின் போது) உங்கள் இறைவனுடைய அருளை நாடுதல்(அதாவது வியாபாரம் போன்றவற்றின் மூலமாக நேர்மையான பலன்களை அடைதல்) உங்கள் மீது குற்றமாகாது; பின்னர் **அரஃபாத்திலிருந்து திரும்பும்போது** "மஷ்அருள் ஹராம்" என்னும் தலத்தில் அல்லாஹ்வை திக்ரு(தியானம்)செய்யுங்கள்; உங்களுக்கு அவன் நேர்வழி காட்டியது போல் அவனை நீங்கள் திக்ரு செய்யுங்கள். நிச்சயமாக நீங்கள் இதற்கு முன் வழிதவறியவர்களில் இருந்தீர்கள்.

இஸ்லாமிய புனித பயணம் செய்யும் முஸ்லிம்கள், இந்த அரஃபத் பகுதியில் உள்ள மலையில் வந்து ஒரு நாள் தங்கி, தங்கள் பாவங்களை மன்னிக்கும்படி அல்லாஹ்விடம் வேண்டுவார்கள். ஹஜ் செய்பவர்கள் இங்கு வந்து இப்படி செய்யவில்லையென்றால், அவர்களின் ஹஜ் என்பது முழுமைப்பெறாது என்றும் சொல்லப்படுகின்றது.

**புகாரி நூல் எண்: 4520:**

4520. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(அறியாமைக் காலத்தில் ஹஜ்ஜின் போது) குறையுயரும் அவர்களின் மதத்தவர்களும் முஸ்தலிஃபாவிலேயே தங்கிவிடுவார்கள். (ஹரம் - புனித எல்லையைவிட்டு வெளியேறமாட்டார்கள்.) அவர்கள் (இந்த விஷயத்தில்) 'உறுதிமிக்கவர்கள்' எனப் பெயரிடப்பட்டு வந்தனர். **மற்ற அரபுகள்**

**அனைவருமே அரஃபாத்தில் தங்கிவந்தார்கள்**. இஸ்லாம் வந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு (ஃதுல்ஹஜ் 9 வது நாளில்) **அரஃபாத் சென்று**, அங்கே தங்கியிருந்துவிட்டு அங்கிருந்தே திரும்ப வேண்டும் என்று அல்லாஹ் கட்டளையிட்டான். அந்தக் கட்டளைதான் 'மக்கள் அனைவரும் திரும்புகிற இடத்திலிருந்து நீங்களும் திரும்புங்கள்' எனும் (திருக்குர்ஆன் 02:199 வது) இறைவசனமாகும்.

**முஹம்மது தம்முடைய கடைசி பிரசங்கத்தி இந்த மலையிலிருந்து கொடுத்தார் என்று இஸ்லாம் சொல்கிறது.**

புகாரி நூல் எண்: 1739

1739. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் துல்ஹஜ் 10-ஆம் நாள் உரை நிகழ்த்தினார்கள். அப்போது, 'மக்களே! இது எந்த நாள்?' எனக் கேட்டார்கள். மக்கள் 'புனிதமிக்க தினம்' என்றனர். பிறகு நபி(ஸல்) அவர்கள் 'இது எந்த நகரம்?' எனக் கேட்டதும் மக்கள் 'புனிதமிக்க நகரம்' என்றனர். பிறகு அவர்கள் 'இது எந்த மாதம்?' எனக் கேட்டதும் மக்கள் 'புனிதமிக்க மாதம்!' என்றனர். பிறகு நபி(ஸல்) அவர்கள், 'நிச்சயமாக உங்களுடைய இந்த மாதத்தில், உங்களுடைய இந்த நாள் எவ்வாறு புனிதம் பெற்று விளங்குகிறதோ அவ்வாறே உங்களின் உயிர்களும் உடைமைகளும் கண்ணியமும் உங்களுக்குப் புனிதமானவையாகும்!' எனப் பல முறை கூறினார்கள். பிறகு தலையை உயர்த்தி, 'இறைவா! நான் (உன் மார்க்கத்தை) சேர்ப்பித்து விட்டேனா? இறைவா! நான் (உன் மார்க்கத்தை) சேர்ப்பித்து விட்டேனா?' என்றும் கூறினார்கள். என்னுடைய உயிர் யாருடைய கைவசம் உள்ளதோ அ(வ்விறை)வன் மீது ஆணையாக! இது அவர்கள் தங்களின் சமுதாயத்திற்கு வழங்கிய இறுதி உபதேசமாகும். பின்னர் 'இங்கு வந்தவர்கள் வராதவர்களுக்கு அறிவித்து விடுங்கள்! என்னுடைய மரணத்திற்குப் பின் நீங்கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டு நிராகரிப்பவர்களாகி விட வேண்டாம்!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பில் '**நபி(ஸல்) அவர்கள் அரஃபாவில் உரை நிகழ்த்த கேட்டேன்**' என்ற வாக்கியம் அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

குறிப்பு: யாசெர் அரஃபத்(Arafat, Yasser) என்ற பெயரில் ஒரு நபரும் இருந்தார், இவர் "பலஸ்தீன விடுதலை இயக்கத்தின்(PLO)" தலைவராக இருந்தார். இஸ்ரேல் நாட்டுடன் விடுதலைக்காக போராடிய இயக்கமாகும் இது. இவரைப் பற்றி வேறு ஒரு கேள்வியில் காண்போம்.



**கேள்வி 45:** ஷம்ஸ் என்ற அரபி வார்த்தையின் பொருள் என்ன?

**பதில் 45:** அரபி வார்த்தை "ஷம்ஸ்" என்பதன் பொருள் "சூரியன்" என்பதாகும். குர்ஆனின் 91வது ஸூராவிற்கு (அத்தியாயத்திற்கு) ஷம்ஸ் என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது.

"ஷம்ஸுத்தீன்" என்ற பெயரை முஸ்லிம்கள் வைத்திருப்பதை நாம் காணலாம். இந்த பெயர் இரண்டு வார்த்தைகளின் கூட்டு ஆகும்.

“ஷம்ஸ்” என்றால் சூரியன், “தீன்” என்றால் “மதம்” என்று பொருள் முக்கியமாக இஸ்லாம் என்று கூறலாம். ஆக ஷம்ஸுத்தீன் என்றால், "மதத்தின் சூரியன்" என்று பொருள். சில இஸ்லாமிய அறிஞர்கள் "தீன்" என்ற வார்த்தையை பெயர்களில் பயன்படுத்தவேண்டாம் என்று ஆலோசனை கூறுகிறார்கள்.



**கேள்வி 46:** இத்தா (Iddah) என்றால் என்ன? ஏன் இஸ்லாமிய பெண்களுக்கு இத்தா நாட்கள் கொடுக்கப்படுகின்றன?

**பதில் 46:** இத்தா (காத்திருக்கும் காலம்) என்பது ஒரு பெண் தன் கணவரின் மரணத்திற்குப் பிறகு அல்லது விவாகரத்துக்குப் பிறகு, அடுத்த திருமணம் செய்யாமல் "காத்திருக்கும் காலமாகும்". அந்த சமயத்தில் அவள் வேறொரு ஆணை திருமணம் செய்து கொள்ளக்கூடாது.

இந்த இத்தா காலம் காத்திருக்காமல், அந்தப்பெண் வேறு ஆணை திருமணம் செய்துக்கொண்டால், அதன் பிறகு இவள் கர்ப்பமானால், அந்த பிள்ளையின் தந்தை யார்? என்ற கேள்விக்கு பதில் சொல்வது மிகவும் கடினமாக இருக்கும் என்பதால் இந்த "காத்திருக்கும் காலம்" நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது.

### இத்தாவின் விதிவிலக்கு:

கீழ்கண்ட வசனத்தில் "ஒரு பெண்ணை திருமணம் செய்த பிறகு, அவர்கள் உடலுறவு கொள்வதற்கு முன்பாக, கணவன் விவாகரத்து செய்துவிட்டால், இந்த இத்தா காலம் தேவையற்றது" என்று குர்ஆன் சொல்கிறது.

33:49. ஈமான் கொண்டவர்களே! முஃமினான பெண்களை நீங்கள் மணந்து, பிறகு நீங்கள் **அவர்களை தொடுவதற்கு முன்னமேயே “தலாக்” செய்து விட்டீர்களானால்**, அவர்கள் விஷயத்தில் நீங்கள் கணக்கிடக் கூடிய (இத்தத்)தவணை ஒன்றும் உங்களுக்கு இல்லை - ஆகவே அவர்களுக்குத் (தக்கதாக) ஏதேனும் கொடுத்து அழகான முறையில் அவர்களை விடுவித்து விடுங்கள்.

### மூன்று வகையான பெண்களுக்கு இத்தா காலம்

கீழ்கண்ட வசனத்தை கவனிக்கவும்:

**அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:**

65:4. (தலாக் சொல்லப்பட்ட) உங்கள் மனைவிகளில் எவர்கள் (அதிக வயதாகி) மாதவிடாயின் நம்பிக்கையிழந்து, (இத்தாவைக் கணக்கிட) என்ன செய்வதென்று நீங்கள் சந்தேகத்திற்கு உள்ளாகிவிட்டால், அத்தகைய பெண்களுக்கும், **இன்னும் எவர்களுக்கு இதுவரையில் மாதவிடாய் ஏற்படவில்லையோ அவர்களுக்கும், இத்தாவின் தவணை மூன்று மாதங்களாகும்**. கர்ப்பமான பெண்களுக்கு இத்தாவின் தவணை அவர்கள் பிரசவிக்கும் வரையில் இருக்கின்றது. எவர்கள் (மெய்யாகவே) அல்லாஹ்வுக்குப் பயப்படுகின்றார்களோ, அவர்களுடைய காரியத்தை அவர்களுக்கு எளிதாக்கி விடுகின்றான்.

**இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:**

65:4. உங்கள் பெண்களில், எவர்கள் ‘இனி மாதவிலக்கு வராது’ என்று நம்பிக்கையிழந்து விட்டிருக்கின்றார்களோ அவர்களுடைய விஷயத்தில் உங்களுக்கு ஏதாவது சந்தேகம் வந்தால், (நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள்:) அவர்களுடைய இத்தாகாலம் மூன்று மாதங்களாகும். **மேலும், எந்தப் பெண்களுக்கு இதுவரையிலும் மாதவிலக்கு வரவில்லையோ அவர்களுக்கான விதிமுறையும் இதுவே!** மேலும், கர்ப்பிணிகளுக்கான இத்தா வரம்பு அவர்கள் குழந்தை பெற்றெடுப்பதுடன் முடிகின்றது. யார் அல்லாஹ்வுக்கு அஞ்சுகின்றாரோ அவருடைய விவகாரத்தில் அல்லாஹ் இலகுவை ஏற்படுத்தியிருக்கின்றான்.

**மூன்று வகையான பெண்களுக்கு இத்தா காலம் நியமிக்கப்பட்டுள்ளது:**

**1) வயது காரணமாக "இனி மாதவிலக்கு வராது" என்ற நிலையில் இருக்கும் பெண்கள்:** மூன்று மாதங்கள் காத்திருப்பு காலமாகும்.

**2) இதுவரையில் மாதவிலக்கு வராத பெண்கள்/சிறுமிகள்:** மூன்று மாதங்கள் காத்திருப்பு காலமாகும்.

**3) கர்ப்பிணிப்பெண்கள்:** குழந்தை பிறக்கும் வரையில் காத்திருப்பு காலமாகும்.

**வயதுக்கு வராத சிறுமிகளை திருமணம் செய்து, அவர்களோடு உடலுறவு கொல்ல அல்லாஹ் அனுமதிக்கிறான்:**

அல்லாஹ் மேற்கண்ட குர்ஆன் வசனத்தில் சிறுமிகளாக இருக்கும் பெண் குழந்தைகளை திருமணம் செய்ய அனுமதி அளித்துள்ளான். இது ஒரு சமுதாய கேடு ஆகும். ஒரு பெண் குழந்தை தனக்கு ஆறு அல்லது ஏழு வயது இருக்கும் போது, எப்படி ஒரு ஆணை திருமணம் செய்துக்கொள்ள முடியும்? அவளோடு உடலுறவு கொள்வது தவறானதல்லவா? அவளுக்கு கணவன், மனைவி, குடும்பம் போன்ற விவரங்கள் பற்றி எந்த ஒரு அறிவும் இல்லாத போது, அக்குழந்தையில் உடலும் திருமணத்திற்கு (முக்கியமாக உடலுறவுக்கு) தயாராக இல்லாத போது,

ஏன் அல்லாஹ் இப்படிப்பட்ட 'சமுதாயத்திற்கு கேடு விளைவிக்கும்' சட்டங்களை இயற்றியுள்ளான்?

அல்லாஹ்வின் இப்படிப்பட்ட கட்டளையினால் தான் இஸ்லாமிய நாடுகளில் அதிக வயதுள்ள ஆண்கள், வயதுக்கு வராத சிறுமிகளை திருமணம் செய்துக்கொள்கிறார்கள். இப்படிப்பட்ட சிறுமிகளை விவாகரத்து செய்துவிட்டால், அவர்கள் எத்தனை நாட்கள் இத்தா இருக்கவேண்டும் என்று குர்ஆனும் மேற்கண்டவிதமாக கட்டளையிட்டுள்ளது.

நாகரீகமடைந்த எந்த சமுதாயமும் சமுதாயத்திற்கு கேடுவிளைவிக்கும் இப்படிப்பட்ட கட்டளைகளை எப்படி ஏற்றுக்கொள்ளும்?



**கேள்வி 47:** இஹ்ராம் என்றால் என்ன?

**பதில் 47:** இஹ்ராம் என்பது மக்காவிற்கு ஹஜ்/உம்ரா புனிதப் பயணம் செல்லும் முஸ்லிம்கள் கடைப்பிடிக்க வேண்டிய சில கட்டுப்பாடுகள் ஆகும். அவர்கள் ஒரு குறிப்பிட்ட எல்லையைக் கடந்தபின் ஹஜ்/உம்ரா பயணத்தின் குறிப்பிட்ட கடமைகளை நிறைவேற்றி முடிப்பது வரை அவர்களின் உடை, நடத்தை, சிந்தனை ஆகியவற்றில் சில கட்டுப்பாடுகளுடன் இருக்க வேண்டும். இதற்கு 'இஹ்ராம்' என்று பெயர்.

இதைப் பற்றிய மேலதிக கட்டுப்பாட்டு விவரங்களை கீழ்கண்ட தொடுப்பில் பார்க்கலாம்: **en.wikipedia.org/wiki/Ihram**

**இஹ்ராமின் போது செய்யக்கூடாதவை:**

2:197. ஹஜ்ஜுக்குரிய காலம் குறிப்பிடப்பட்ட மாதங்களாகும்; எனவே, அவற்றில் எவரேனும் (இஹ்ராம் அணிந்து) ஹஜ்ஜை தம் மீது கடமையாக்கிக் கொண்டால், ஹஜ்ஜின் காலத்தில் **சம்போகம், கெட்ட வார்த்தைகள் பேசுதல், சச்சரவு - ஆகியவை செய்தல் கூடாது**; நீங்கள் செய்யும் ஒவ்வொரு நன்மையையும் அல்லாஹ் அறிந்தவனாகவே இருக்கிறான்; மேலும் ஹஜ்ஜுக்குத் தேவையான பொருட்களைச் சித்தப்படுத்தி வைத்துக் கொள்ளுங்கள்; நிச்சயமாக இவ்வாறு சித்தப்படுத்தி வைப்பவற்றுள் மிகவும் ஹைரானது(நன்மையானது), தக்வா(என்னும் பயபக்தியே) ஆகும்; எனவே நல்லறிவுடையோரே! எனக்கே பயபக்தியுடன் நடந்து கொள்ளுங்கள்.

5:1. முஃமின்களே! (நீங்கள் செய்து கொண்ட) உடன்படிக்கைகளை (முழுமையாக) நிறைவேற்றுங்கள்; உங்கள் மீது ஓதிக்காட்டி இருப்பவற்றைத் தவிர மற்றைய நாற்கால் பிராணிகள் உங்களுக்கு (உணவிற்காக), ஆகுமாக்கப்பட்டுள்ளன. ஆனால் **நீங்கள் இஹ்ராம் அணிந்திருக்கும் சமயத்தில் (அவற்றை)**

**வேட்டையாடுவது (உங்களுக்குத்) தடுக்கப்பட்டுள்ளது**; நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியதைக் கட்டளையிடுகிறான்.

**இஹ்ராமின் போது கடலில் வேட்டையாடலாம்:**

5:96. உங்களுக்கும் (இதர) பிரயாணிகளுக்கும் பலன் கிடைக்கும் பொருட்டு (நீங்கள் இஹ்ராம் கட்டியிருந்தாலும்) **கடலில் வேட்டையாடுவதும், அதைப் புசிப்பதும் உங்களுக்கு ஹலாலாக - ஆகுமானதாக ஆக்கப்பட்டுள்ளது;** ஆனால் நீங்கள் இஹ்ராம் கட்டியிருக்கும் காலமெல்லம் தரையில் வேட்டையாடுவது உங்கள் மீது ஹராமாக்கப்பட்டுள்ளது. எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்து கொள்ளுங்கள், அவனிடத்திலேயே நீங்கள் ஒன்று சேர்க்கப்படுவீர்கள்.

**இஹ்ராமின் போது அல்லாஹ்வின் சோதனை:**

5:94. ஈமான் கொண்டவர்களே! (நீங்கள் இஹ்ராம் உடை அணிந்திருக்கும் நிலையில்) உங்கள் கைகளும், உங்கள் ஈட்டிகளும் சுலபமாக வேட்டையில் அடையக்கூடிய பொருளைக்கொண்டு **நிச்சயமாக அல்லாஹ் உங்களை சோதிப்பான்;** ஏனென்றால் மறைவில் அவனை யார் அஞ்சுகிறார்கள் என்பதை அல்லாஹ் அறி(விப்ப)தற்காகத்தான்; இதன் பின்னரும் எவர் வரம்பு மீறுகிறாரோ அவருக்கு நோவினை தரும் வேதனையுண்டு.

**இஹ்ராம் பற்றிய சில கேள்விகளுக்கு முஹம்மதுவின் பதில்:**

புகாரி நூல் எண்: 366:

366. 'ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிய விரும்புகிறவர் எந்த ஆடையை அணிய வேண்டும் என்று ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டதற்கு '**சட்டை, முழுக்கால் சட்டை, தொப்பி, குங்குமச் சாயம் பட்ட ஆடை, சிவப்புச் சாயமிடப்பட்ட ஆடை ஆகியவற்றை அணியக் கூடாது**. யாருக்காவது செருப்பு கிடைக்காமலிருந்தால் தோலினாலான காலுறை அணிந்து கொள்ளலாம். அந்தத் தோலுறையில் கரண்டைக்குக் கீழே இருக்கும் வகையில் மேல் பாகத்தை வெட்டி விட வேண்டும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.



**கேள்வி 48:** ஈத் அல்-அதா (Eid al-Adha) என்றால் என்ன?

**பதில் 48:** ஈத் அல் அதா என்பது முஸ்லிம்களால் கொண்டாடப்படும் முக்கிய பண்டிகையாகும். இதற்கு தியாகத்திருநாள் என்றும் ஒரு பெயர் உண்டு. மேலும் இந்த பண்டிகையில் ஆடுகளையும், மாடுகளையும் பலியிடுவதினால், உருது மொழியில் இதனை பக்ரீத் பண்டிகை (பக்ரா என்றால் ஆடு, ஈத் என்றால்

பண்டிகை) என்று கூட அழைக்கிறார்கள். இதனால் தமிழ் நாட்டிலும் பக்ரீத பண்டிகை என்றும் அழைக்கிறார்கள்.

இந்த பண்டிகை ஹஜ் பெருநாள் எனவும் அழைக்கப்படுகின்றது. ஒவ்வொரு ஆண்டும் இஸ்லாமிய நாட்காட்டியின் பன்னிரண்டாவது மாதமான துல் ஹஜ் மாதம் (Dul Haji) 10 ஆம் நாள் இது கொண்டாடப்படுகின்றது.

இந்த பண்டிகையின் போது தான் ஹஜ் என்ற மக்காவிற்குச் செல்லும் புனிதப்பயணம் மேற்கொள்ளப்படுகின்றது.

பழைய ஏற்பாட்டில் ஆதியாகமத்தில் வரும் ஒரு நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு முஸ்லிம்கள் இந்த பண்டிகையை கொண்டாடுகிறார்கள். அதாவது ஆபிரகாம் (இப்றாஹீம்) தன் மகனை பலியிட கொண்டுச் சென்ற அந்த தியாக நிகழ்ச்சியை நினைவு கூறும் நாளாக இது உள்ளது. எனவே இதற்கு தியாகத்திருநாள் என்று அழைக்கிறார்கள்.

**இப்றாஹீம் பலியிட கொண்டுச் சென்றது இஸ்மாயீலையா? அல்லது ஈஷாக்கையா?**

முஸ்லிம்களின் கூற்றுப்படி இப்றாஹீம் பலியிட கொண்டுச் சென்றது இஸ்மாயீலைத்தான், ஆனால் பைபிளும் குர்ஆனும் இப்படி சொல்லவே இல்லை, இதற்கான சுருக்கமான பதிலைப் பார்ப்போம்.

முஸ்லிம்களில் பலரின் குற்றச்சாட்டு என்னவென்றால், இஸ்லாமுக்கு கலங்கம் விளைவிக்கவேண்டும் என்பதற்காக பைபிளில் மாற்றம் செய்யப்பட்டது, ஆபிரகாமின் கதையில் முக்கியமாக தன்னுடைய மகனை பலியிட இறைவன் சொன்ன விஷயத்தில் மாற்றம் செய்யப்பட்டது என்று குற்றம் சாட்டுகிறார்கள். பலியிட தேவன் சொன்ன மகன் இஸ்மவேல் ஆவார் என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள். ஆனால், பைபிள் அந்த மகன் ஈசாக்கு என்று தெளிவாக கூறுகிறது (ஆதியாகமம் 22:9, எபிரேயர் 11:17 மற்றும் யாக்கோபு 2:21 வசனங்களை படிக்கவும்.)

முழு குர்-ஆனில் ஒரே ஒரு இடத்தில் இந்த விவரம் பற்றி கூறப்பட்டுள்ளது, அதுவும் ஆபிரகாமின் வேண்டுதலாக அது ஆரம்பிக்கிறது. அதாவது தனக்கு ஒரு மகன் கொடுக்கும்படி இறைவனிடம் அவர் வேண்டுகிறார். அந்த குர்-ஆன் வசனங்களை இங்கு படியுங்கள்.

மேலும், அவர் கூறினார்; "நிச்சயமாக நான் என்னுடைய இறைவனிடம் செல்பவன்; திட்டமாக அவன் எனக்கு நேர் வழியைக் காண்பிப்பான்." "என்னுடைய இறைவா! நீ எனக்கு ஸாலிஹான ஒரு நன்மகனைத் தந்தருள்வாயாக" (என்று பிரார்த்தித்தார்). எனவே, நாம் அவருக்கு **பொறுமைசாலியான ஒரு மகனைக் கொண்டு** நன்மாராயங் கூறினோம். பின் (அம்மகன்) அவருடன் நடமாடக்கூடிய (வயதை அடைந்த) போது

அவர் கூறினார்; "என்னருமை மகனே! நான் உன்னை அறுத்து பலியிடுவதாக நிச்சயமாகக் கனவு கண்டேன். இதைப்பற்றி உம் கருத்து என்ன என்பதைச் சிந்திப்பீராக!" (மகன்) கூறினான்; "என்னருமைத் தந்தையே! நீங்கள் ஏவப்பட்டபடியே செய்யுங்கள். அல்லாஹ் நாடினால் - என்னை நீங்கள் பொறுமையாளர்களில் நின்றுமுள்ளவனாகவே காண்பீர்கள்." ஆகவே, அவ்விருவரும் (இறைவன் கட்டளைக்கு) முற்றிலும் வழிப்பட்டு, (இப்றாஹீம்) மகனைப் பலியிட முகம் குப்புறக்கிடத்திய போது நாம் அவரை "யா இப்றாஹீம்!" என்றழைத்தோம். "திடமாக நீர் (கண்ட) கனவை மெய்ப்படுத்தினீர். நிச்சயமாக நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே கூலி கொடுத்திருக்கிறோம். "நிச்சயமாக இது தெளிவான ஒரு பெருஞ் சோதனையாகும்." ஆயினும், நாம் ஒரு மகத்தான பலியைக் கொண்டு அவருக்குப்ப பகரமாக்கினோம். (37:99 -107)

மேற்கண்ட வசனங்களை நன்றாக கவனியுங்கள், அதாவது பலியிடச்சென்ற மகன் பற்றி குர்-ஆனில் வரும் ஒரே ஒரு இடம் இது தான். மேலும், அந்த ஒரு இடத்திலும் எந்த மகன், அவன் பெயர் என்ன என்ற விவரங்கள் குர்-ஆனில் கொடுக்கப்படவில்லை. ஆனால், ஒரு விஷயம் குர்-ஆனில் கூறப்பட்டுள்ளது, அது என்னவென்றால், இந்த மகன் “ஒரு நற்செய்தியாக” தீர்க்கதரிசனமாக முன்னறிவிக்கப்பட்டவர் ஆவார். ஒருவர் முழு குர்-ஆனை தேடிப்பார்த்தாலும், இஸ்மவேலின் பிறப்பு பற்றி எந்த ஒரு இடத்திலும் சொல்லப்படவில்லை என்பதை கவனிக்கமுடியும். உண்மையைச் சொல்லவேண்டுமென்றால், இஸ்மவேல் பற்றி மிகக்குறைவாக குர்-ஆனில் கூறப்பட்டுள்ளது. மேலும் இஸ்மவேலின் தாய் பற்றியோ அல்லது இஸ்மவேலின் பிள்ளைகள் பற்றியோ எதுவும் குர்-ஆனில் கூறப்படவில்லை. முக்கியமாக, இஸ்மவேலின் தாயின் பெயர் ஆகார் என்றும் மேலும் அவருக்கு பன்னிரண்டு மகன்கள் இருந்தார்கள் என்றும் நாம் பைபிளிலிருந்து அறிகிறோம் (ஆதியாகமம் 25:12-17). நாம் மேலே குறிப்பிட்ட "நற்செய்தி" பற்றிய குர்-ஆன் வசனம் பற்றி நம் கவனத்தை திருப்புவோம். ஈசாக்கு மற்றும் அவரது தாயார் சாராள் பற்றி குர்-ஆனில் கீழ்கண்ட விதமாக நாம் படிக்கிறோம்.

இப்றாஹீமின் கண்ணியம் மிக்க விருந்தினர்களின் செய்தி உமக்கு வந்ததா? அவர்கள், அவரிடம் பிரவேசித்த போது, (அவரை நோக்கி; "உங்களுக்கு) "ஸலாம்' என்று கூறினார்கள்; (அதற்கவர்), "(உங்களுக்கு) "ஸலாம்" என்று கூறினார். . . . , பயப்படாதீர்!" எனக் கூறினார்; அன்றியும், **அவருக்கு அறிவு மிக்க புதல்வர் (பிறப்பார்) என்று நன்மாராயங் கூறினர்**. பின்னர் இதைக்கேட்ட அவருடைய மனைவியார் சப்தமிட்டவராக (அவர்கள்) எதிரில் வந்து, தம் முகத்தில் அடித்துக் கொண்டு "நான் மலட்டுக் கிழவியாயிற்றே!" என்று கூறினார். (அறிவு மிக்க புதல்வர் பிறப்பார் என்று;) "இவ்வாறே உம் இறைவன் கூறினான், நிச்சயமாக அவன் ஞானம் மிக்கவன்; (யாவற்றையும்,) நன்கறிந்தவன்" என்று கூறினார்கள். (குர்-ஆன் 51:24-25, 28-30)

மேற்கண்ட வசனங்களுக்கு மேலதிகமாக, ஆபிரகாம் மற்றும் ஈசாக்கு பற்றிய ஒரு சுருக்கத்தை நாம் கீழ்கண்ட குர்-ஆன் வசனங்களில் காண்கிறோம்:

"ஸலாமுன் அலா இப்ராஹீம்" (இப்ராஹீம் மீது ஸலாம் உண்டாவதாக)! இவ்வாறே, நன்மை செய்வோருக்கு, நாம் கூலி கொடுக்கிறோம். நிச்சயமாக அவர் முஃமின்களான நம் (நல்)லடியார்களில் நின்றுமுள்ளவர். **ஸாலிஹானவர்களிலுள்ளவரான நபி இஸ்ஹாக்கை அவருக்கு இன்னும் (மகனாகத் தருவதாக) நாம் நன்மாராயம் கூறினோம்.** இன்னும் நாம் அவர் மீதும் இஸ்ஹாக் மீதும் பாக்கியங்கள் பொழிந்தோம்; . . . . (குர்-ஆன் 37:109 - 113)

மேற்கண்ட குர்-ஆன் வசனங்களில் வரும் சொற்றொடர்களாகிய "அவருக்கு அறிவு மிக்க புதல்வர் (பிறப்பார்) என்று நன்மாராயங் கூறினர்" என்பதையும் "ஸாலிஹானவர்களிலுள்ளவரான நபி இஸ்ஹாக்கை அவருக்கு இன்னும் (மகனாகத் தருவதாக) நாம் நன்மாராயம் கூறினோம்." என்பதையும் கூர்ந்து கவனியுங்கள். குர்-ஆனிலே இப்படிப்பட்ட "நன்மாராயங் கூறுவதாக" இஸ்மவேலின் பிறப்பு பற்றி கூறப்படவில்லை. இப்போது உங்களுக்கு தெளிவாக புரிந்து இருக்கும் அதாவது குர்-ஆனில் "நன்மாராங் கூறி" பிறந்தவர் இஸ்மவேல் அல்ல அவர் ஈசாக்கு ஆவார் மேலும் ஈசாக்கே பலியிட கொண்டுப் போகப்பட்டவராவார் (குர்-ஆன் 37:99-107). மேலும் பைபிள் கூறுவது போல ஈசாக்கு தான் பலியிட கொண்டுபோகப்பட்டார்.

முஸ்லிம்களில் அனேகர், குர்-ஆனை முழுவதுமாக ஆய்வு செய்து, "ஆம் குர்-ஆன் குறிப்பிடுவதும் ஈசாக்கைத் தான்" என்று முடிவிற்கு வந்துள்ளார்கள். யூசுஃப் அலி என்ற இஸ்லாமிய அறிஞர், தம்முடைய குர்-ஆன் மொழியாக்கத்தின் விளக்கத்தில் (பக்கம் 1204, குறிப்பு 4096), கீழ்கண்டவாறு ஒப்புக்கொள்கிறார்:

"The boy thus born was according to Muslim tradition (which however is not unanimous on this point) the first-born of Abraham viz. Ismail."

முஸ்லிம் பாரம்பரியத்தின் படி (இதில் எல்லாரும் ஒருமித்த கருத்தை கொண்டு இருக்கவில்லை) ஆபிரகாமின் முத்த மகனாகிய இஸ்மவேல் தான் அந்த மகன்"

"முஸ்லிம் பாரம்பரியத்தின் படி" என்ற சொற்றொடர்களையும் "இதில் எல்லாரும் ஒருமித்த கருத்தை கொண்டு இருக்கவில்லை" என்ற சொற்களையும் கவனியுங்கள். இதன் மூலம் தெள்ளத்தெளிவாக அறிவது என்னவென்றால், குர்-ஆனின் படி "இஸ்மவேல்" பலியிட கொண்டுபோகப்படவில்லை என்பதாகும். மேலும் குர்-ஆன் சொல்வதை நாம் கவனத்தில் கொள்ளவேண்டும், அதாவது முந்தைய வேதங்களை மெய்ப்பிக்கும்படி குர்-ஆன் வந்ததே தவிர அவைகளுக்கு எதிராக முரண்பட அல்ல என்று குர்-ஆனே சொல்வதை கவனிக்கவும். இதன் படி தெரிவது என்னவென்றால் பைபிளில் சொல்லப்பட்டவைகளை ஏகோபித்து குர்-ஆன் இந்த விஷயத்தில் முன்மொழிகிறது, ஆனால், இஸ்லாமிய பாரம்பரியங்கள் முரண்படுகின்றன. (மூலம்: **இஸ்மாயில் தான் பலியிட கொண்டுபோகப்பட்டார் என்ற இஸ்லாமியர்களின் வாதம்**)



**கேள்வி 49:** குர்பானி (பலி) என்றால் என்ன?

**பதில் 49:** பக்ரீத் பண்டிகையின் போது கொடுக்கப்படும் ஆடு/மாடு/ஒட்டக பலியை அரபியில் "குர்பானி" என்பார்கள்.

எபிரேய மொழியில் "கொர்பான்" என்ற வார்த்தையும் இதைச் சுற்றியே உள்ளது. கொர்பான் என்ற எபிரேய வார்த்தையின் பொருள் காணிக்கை(Offering), மிருகங்களை பலியிடுதல் என்பதாகும்.

இந்த வார்த்தை மூன்று இடங்களில் குர்ஆனில் வருகிறது:

குர்ஆன் 3:183. மேலும் அவர்கள், "எந்த ரஸூலாக இருந்தாலும், அவர் கொடுக்கும் **குர்பானியை(பலியை)** நெருப்பு சாப்பிடு(வதை காண்பிக்கு)ம் வரை அவர் மீது நாங்கள் விசுவாசம் கொள்ள வேண்டாம்" என்று அல்லாஹ் எங்களிடம் உறுதிமொழி வாங்கியுள்ளான்" என்று கூறுகிறார்கள். (நபியே!): "எனக்கு முன்னர் உங்களிடம் வந்த தூதர்களில் பலர், தெளிவான ஆதாரங்களையும், இன்னும் நீங்கள் கேட்டுக்கொண்ட (படி பலியை நெருப்பு உண்ப)தையும் திடமாகக் காண்பித்தார்கள். அப்படியிருந்தும் ஏன் அவர்களை நீங்கள் கொன்றீர்கள்? நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் இதற்கு பதில் சொல்லுங்கள்" என்று நீர் கூறும்.

குர்ஆன் 5:27. (நபியே!) ஆதமுடைய இரு குமாரர்களின் உண்மை வரலாற்றை நீர் அவர்களுக்கு ஓதிக்காண்பியும்; அவ்விருவரும் (ஒவ்வொருவரும்) **குர்பானி** கொடுத்த போது, ஒருவரிடமிருந்து அது ஏற்றுக் கொள்ளப்பட்டது. மற்றவரிடமிருந்து அது ஏற்றுக்கொள்ளப்படவில்லை; (பின்னவர்) "நான் நிச்சயமாக உன்னைக் கொலை செய்து விடுவேன்" என்று கூறினார். அதற்கு (முன்னவர்) "மெய்யாகவே அல்லாஹ் ஏற்றுக் கொள்வது பயபக்தியுடையவர்களிடமிருந்து தான்" என்று கூறினார்.

குர்ஆன் 46:28. (அல்லாஹ்விடம் தங்களை) **நெருங்க** வைக்கும் தெய்வங்களென்று அல்லாஹ் அல்லாதவற்றை இவர்கள் எடுத்துக் கொண்டார்களே, அவர்கள் ஏன் இவர்களுக்கு உதவி புரியவில்லை? ஆனால், அவர்கள் இவர்களை விட்டும் மறைந்து விட்டனர் - அவர்களே இவர்கள் பொய்யாகக் கூறியவையும், இட்டுக் கட்டியவையுமாகும்.

மேற்கண்ட வசனத்தில் (46:28), அல்லாஹ்விடம் "**நெருங்க**" என்ற பொருளில் குர்பானி என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது.



**கேள்வி 50:** ஈமான் (Faith) என்றால் என்ன?

**பதில் 50:** இஸ்லாமில் ஈமான் என்ற அரபி வார்த்தையின் அர்த்தம் 'நம்பிக்கை, விசுவாசம் (Faith)' என்பதாகும்.

ஒருவர் முஸ்லிமாக இருக்க கீழ்கண்ட ஆறு காரியங்கள் மீது ஈமான்(நம்பிக்கை)கொள்ளவேண்டும்.

1) அல்லாஹ்வின் மீதும் அவன் ஒருவன் என்றும் நம்பவேண்டும்

2) தேவ தூதர்கள் இருக்கிறார்கள் என்று நம்பவேண்டும்

3) வேதங்கள் மீது நம்பிக்கை வைக்கவேண்டும் (மூஸாவிற்கு தவ்ராத், தாவூதுக்கு ஜபூர், இயேசுவிற்கு இன்ஜில், முஹம்மதுவிற்கு குர்ஆன் கொடுக்கப்பட்ட வேதங்கள் என்று நம்பவேண்டும்)

4) நபிகளை/தீர்க்கதரிசிகளை நம்பவேண்டும் (முஹம்மது கடைசி நபி என்று நம்பவேண்டும்)

5) நியாயத்தீர்ப்பு நாளை நம்பவேண்டும்

6) விதியை நம்பவேண்டும் (நல்லதோ கெட்டதோ அதை அல்லாஹ் நிர்ணயித்துவிட்டான், அதுபடியே நடக்கும் என்பதை நம்பவேண்டும்)

**முஸ்லிம் நூல் எண்: 7**

7. அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது: (ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களிடம்), என்னிடம் (விளக்கம்) கேளுங்கள்" என்று கூறினார்கள். . . . அல்லாஹ்வின் தூதரே! ஈமான் (இறை நம்பிக்கை) என்றால் என்ன?" என்று அம்மனிதர் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,அல்லாஹ்வையும் அவனுடைய வானவர்களையும், அவனுடைய வேதத்தையும், அவனது சந்திப்பையும், அவனுடைய தூதர்களையும் நீங்கள் நம்புவதும் (மரணத்திற்குப் பின் இறுதியாக அனைவரும்) உயிருடன் எழுப்பப்படுவதை நீங்கள் நம்புவதும்,விதியை முழுமையாக நம்புவதும் ஆகும்" என்று கூறினார்கள். அதற்கும் அம்மனிதர் உண்மை தான்" என்றார்.

இவைகள் மட்டுமல்லாமல், இன்னும் பல காரியங்கள் மீது நம்பிக்கை வைக்கவேண்டும்.

**முஸ்லிம் நூல் எண்: 57 & 58**

57. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: இறைநம்பிக்கை (ஈமான்) என்பது **எழுபதுக்கும் அதிகமான கிளைகளைக் கொண்டதாகும்**. நாணமும் இறைநம்பிக்கையின் ஒரு கிளையாகும். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

58. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: இறைநம்பிக்கை என்பது **"எழுபதுக்கும் அதிகமான" அல்லது "அறுபதுக்கும் அதிகமான" கிளைகள் கொண்டதாகும்**. அவற்றில் உயர்ந்தது "அல்லாஹ்வைத் தவிர வேறு

இறைவன் இல்லை" என்று கூறுவதாகும். அவற்றில் தாழ்ந்தது, தொல்லை தரும் பொருளைப் பாதையிலிருந்து அகற்றுவதாகும். நாணமும் இறைநம்பிக்கையின் ஒரு கிளைதான். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.



**கேள்வி 51:** இலா (ilah) என்றால் என்ன?

**பதில் 51:** அரபி மொழியில் 'இலா(Ilash)" என்றால் "கடவுள், இறைவன்" என்று பொருள். “அல்லாஹ்” என்ற வார்த்தையும் இவ்வார்த்தையிலிருந்து வந்தது என்று நம்புகிறார்கள்.

அல் + இலா என்பது தான் "அல்லாஹ்" என்று மாறியிருக்கும் என்றும் நம்பப்படுகிறது. “அல்” என்றால் "The" என்று பொருள், “இலா(Ilah)” என்றால் இறைவன்(god) என்று பொருள். ஆக, அல்லாஹ் என்றால் "The god” என்று மாறியிருக்கலாம் என்ற நம்பப்படுகிறது.

**இஸ்லாமிய விசுவாச அறிக்கையின் முதல் வாக்கியம்:**

- "லா இலாஹ இல்லல்லாஹு" என்றால்
- "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் (இலா) இல்லை என்பதாகும்.

இதில் "இலா(Ilah)" என்ற சொல்லும் வருகிறது, "அல்லாஹ்(Allah)" என்ற சொல்லும் வருகிறது என்பதை கவனிக்கவும்.’

**எபிரேய வார்த்தை எல் (El):**

எபிரேய மொழியிலும் "எல்(EL)" என்ற வார்த்தை உண்டு, அதற்கும் பொருள் "இறைவன், கடவுள்" என்று பொருள்.



**கேள்வி 52:** மன்னு, ஸல்வா என்றால் என்ன?

**பதில் 52:** இஸ்ரேல் மக்கள் எகிப்திலிருந்து இஸ்ரேல் நாட்டிற்கு மூஸா அழைத்துச் சென்ற போது, அவர்களுக்காக வானத்திலிருந்து இறைவன் கொடுத்த உணவு தான் **மன்னு** மற்றும் **ஸல்வா** ஆகும்.

பைபிளில் "**மன்னா**" என்ற அழைக்கப்பட்ட உணவு தான், குர்ஆனில் "**மன்னு**" என்று மொழியாக்கம் செய்துள்ளார்கள். "**ஸல்வா**" என்றால் "**காடைகள்**" என்று இஸ்லாமிய அறிஞர்கள் கூறுகிறார்கள்.

**இதைப் பற்றி குர்ஆனில் மூன்று இடங்களில் வருகிறது (குர்ஆன் 2:57, 7:160,20:80):**

2:57. இன்னும், உங்கள் மீது மேகம் நிழலிடச் செய்தோம்; மேலும் "**மன்னு, ஸல்வா**" (என்னும் மேன்மையான உணவுப் பொருள்களை) உங்களுக்காக இறக்கி வைத்து, "நாம் உங்களுக்கு அருளியுள்ள பரிசுத்தமான உணவுகளிலிருந்து புசியுங்கள்" (என்றோம்;) எனினும் அவர்கள் நமக்குத் தீங்கு செய்துவிடவில்லை; மாறாக, தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்டார்கள்.

7:160. மூஸாவின் கூட்டத்தாரைத் (தனித்தனியாகப்) பன்னிரண்டு கூட்டங்களாக பிரித்தோம்; மூஸாவிடம் அவர்கள் குடி தண்ணீர் கேட்டபோது, நாம் அவருக்கு: "உம்முடைய கைத்தடியால் அக்கல்லை அடிப்பீராக!" என்று வஹீ அறிவித்தோம், (அவர் அவ்வாறு அடித்ததும்) அதிலிருந்து பன்னிரண்டு ஊற்றுக்கள் பொங்கி வந்தன; அவர்களில் ஒவ்வொரு வகுப்பாரும் தாம்(நீர்) அருந்தும் ஊற்றைக் குறிப்பறிந்து கொண்டார்கள்; மேலும், அவர்கள் மீது மேகம் நிழலிடும்படிச் செய்தோம், அவர்களுக்கு **மன்னு. ஸல்வாவையும்** (மேலான உணவாக) இறக்கிவைத்து : "நாம் உங்களுக்கு அளித்துள்ள தூயவற்றிலிருந்து புசியுங்கள்" (என்று சொன்னோம்; அவ்வாறு இருந்தும் அவர்கள் அல்லாஹ்வுக்கு மாறு செய்தார்கள்), அவர்கள் நமக்கு ஒன்றும் தீங்கிழைக்கவில்லை; தங்களுக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்டார்கள்.

20:80. "இஸ்ராயீலின் சந்ததியினரே! நாம் திட்டமாக உங்களை உங்கள் பகைவனிடமிருந்து இரட்சித்தோம்; மேலும், தூர்(ஸினாய் மலையின்) வலப்பக்கத்தில் நாம் (தவ்ராத் வேதத்தை அருள்வதாக) உங்களுக்கு வாக்குறுதியளித்தோம்; இன்னும் "**மன்னு ஸல்வாவை**" (உணவாக) உங்கள் மீது நாம் இறக்கி வைத்தோம்.

**சமையள் காளானும், மன்னுவும்:**

சமையளுக்கு பயன்படுத்தும் காளான் "மன்னு" வகையைச் சார்ந்ததாக முஹம்மது கூறியுள்ளார், உண்மையில் **மன்னு** என்பது இறைவன் வானத்திலிருந்து கொடுத்த ஒருவகையான உணவாகும், இதை காளானுக்கு ஒப்பிட்டு முஹம்மது பேசியுள்ளார். இது தவறான கூற்றாகும். காளான் மண்ணில் முளைக்கும் உணவுப்பண்டம், மன்னு (மன்னா) வானத்திலிருந்து இறைவன் கொடுத்தது. முஹம்மதுடம் ஒரு பழக்கம் உண்டு, எதை கேட்டாலும் சரி, ஏதோ ஒரு பதிலை சொல்லிவிடுவார்.

**நூல் புகாரி: எண்கள் 4478, 4639, 4778, 5708**

4478. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

**சமையல் காளான் (தானாக வளர்வதில்) 'மன்னு'** வகையைச் சேர்ந்ததாகும். அதன் சாறு கண்ணுக்கு நிவாரணமாகும். என ஸயீத் இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.



**கேள்வி 53:** ஷிர்க் (SHIRK) என்றால் என்ன?

**பதில் 53:** இஸ்லாமின் படி, "மன்னிக்கப்படாத பாவத்தை/குற்றத்தை" ஷிர்க் என்பார்கள். உதாரணத்திற்கு, அல்லாஹ்விற்கு இணை வைப்பது (அல்லாஹ்விற்கு இணையாக இன்னொருவரை கருதுவது) ஷிர்க் ஆகும்.

- குர்-ஆன் 4:48, 137 மற்றும் 47:34ன் படி இணைவைப்பவர்கள் அல்லாஹ்வினால் மன்னிக்கப்படமாட்டார்கள்.

இயேசுவை இறைவனென்று கிறிஸ்தவர்கள் நம்புகின்றபடியால், குர்-ஆன் அவர்களை "இஸ்லாமிய நம்பிக்கையற்றவர்கள் (காஃபிரூன்) என்றும், இணைவைப்பவர்கள் (முஷ்ரிகூன்) என்றும்" குற்றம் சாட்டுகிறது.

குர்-ஆன் 9:30 - 33

**யூதர்கள் (நபி) உஜைரை அல்லாஹ்வுடைய மகன் என்று கூறுகிறார்கள்; கிறிஸ்தவர்கள் (ஈஸா) மஸீஹை அல்லாஹ்வுடைய மகன் என்று கூறுகிறார்கள்**; இது அவர்கள் வாய்களால் கூறும் கூற்றேயாகும்; இவர்களுக்கு, முன்னிருந்த நிராகரிப்போரின் கூற்றுக்கு இவர்கள் ஒத்துப்போகிறார்கள்; **அல்லாஹ் அவர்களை அழிப்பானாக!** எங்கே திருப்பப்படுகிறார்கள்? அவர்கள் அல்லாஹ்வை விட்டும் தம் பாதிரிகளையும், தம் சந்நியாசிகளையும் மர்யமுடைய மகனாகிய மஸீஹையும் தெய்வங்களாக்கிக் கொள்கின்றனர்; ஆனால் அவர்களே ஒரே இறைவனைத் தவிர (வேறெவரையும்) வணங்கக்கூடாதென்றே கட்டளையிடப்பட்டுள்ளார்கள்; வணக்கத்திற்குரியவன் அவனன்றி வேறு இறைவன் இல்லை - அவன் அவர்கள் இணைவைப்பவற்றை விட்டும் மிகவும் பரிசுத்தமானவன். தம் வாய்களைக் கொண்டே அல்லாஹ்வின் ஒளியை (ஊதி) அணைத்துவிட அவர்கள் விரும்புகின்றார்கள் - **ஆனால் காஃபிர்கள் வெறுத்த போதிலும்** அல்லாஹ் தன் ஒளியை பூர்த்தியாக்கி வைக்காமல் இருக்க மாட்டான். அவனே தன் தூதரை நேர் வழியுடனும், சத்திய மார்க்கத்துடனும் அனுப்பி வைத்தான் - **முஷ்ரிக்குகள்** (இணை வைப்பவர்கள், இம்மார்க்கத்தை) வெறுத்த போதிலும், எல்லா மார்க்கங்களையும் இது மிகைக்குமாறு செய்யவே (அவ்வாறு தன் தூதரையனுப்பினான்.)

### ஷிர்க் பற்றிய விவரங்கள் அடங்கிய சில கட்டுரைகள்:

### ஆங்கிலக் கட்டுரைகள்:

- Does Allah forgive shirk?
  - ஷிர்க என்ற பாவம் செய்தவர்களை அல்லாஹ் மன்னிப்பானா?
- Muhammad — The Prophet of Shirk
  - ஷிர்க் என்ற பாவத்தை செய்த முஹம்மது?
- Dr. Jamal Badawi and Shirk
  - டாக்டர் ஜமால் பதாவி அறிஞரும் மற்றும் ஷிர்க் என்ற பாவமும்

- [Are Jews and Christians Mushriks according to the Quran?]
    - குர்ஆனின் படி யூதர்களும் கிறிஸ்தவர்களும் முஷ்ரிக்குகளா?
- [A COMMON WORD]
    - ஒரு பொதுவான வார்த்தை
- [Adam and Eve: The First of the Polytheists and Associators?]
    - ஆதாம் ஏவாள்: குர்ஆனின் படி ஷிர்க் என்ற பாவத்தைச் செய்த முதல் மனிதர்கள்

**தமிழ் கட்டுரைகள்:**

- [**கிறிஸ்துமஸ் வாழ்த்துக்கள் இஸ்லாமியர்களே!**]
- [**பாகம் 1: முஹம்மது ஒரு பாவியா? - குர்ஆனின் சாட்சி**]
- [**பைபிள் தீர்க்கதரிசிகளை நிந்திக்கின்றதா?**]



**கேள்வி 54:** ஹராம் (HARAM) என்றால் என்ன?

**பதில் 54:** ஹராம் என்றால் இஸ்லாமிய சட்டத்தில் "தடுக்கப்பட்டவைகள்" என்று பொருளாகும். இந்த வார்த்தையின் எதிர்ச் சொல் "ஹலால்" ஆகும்.

**இஸ்லாமின் சில ஹராம்கள்:**

**உணவில் ஹராம்:**

2:173. **தானாகவே செத்ததும், இரத்தமும், பன்றியின் மாமிசமும், அல்லாஹ் அல்லாத** பெயர் சொல்லப்பட்டதும் ஆகியவைகளைத்தான் உங்கள் மீது ஹராமாக ஆக்கியிருக்கிறான்; ஆனால் எவரேனும் பாவம் செய்யாத நிலையில் - வரம்பு மீறாமல் (இவற்றை உண்ண) நிர்ப்பந்திக்கப்பட்டால் அவர் மீது குற்றமில்லை; நிச்சயமாக அல்லாஹ் கருணைமிக்கோனும், மன்னிப்பவனுமாக இருக்கின்றான்.

6:119. **அல்லாஹ்வின் பெயர் கூறி (உங்களுக்கு அனுமதிக்கப்பட்டவற்றில்) அறுக்கப்பட்டதை நீங்கள் சாப்பிடாமலிருக்க என்ன (தடை) இருக்கிறது?** நீங்கள் நிர்ப்பந்திக்கப்பட்டாலன்றி சாப்பிட உங்களுக்கு விலக்கப்பட்டவை எவை என்பதை அல்லாஹ் விவரித்துக் கூறியுள்ளான் - ஆனால் பெரும்பாலோர், அறியாமையின் காரணமாகத் தங்களுடைய மன இச்சைகளின் பிரகாரம் (மனிதர்களை) வழி கெடுக்கிறார்கள்; வரம்பு மீறிச்செல்பவர்களை நிச்சயமாக உம் இறைவன் நன்கு அறிகிறான்.

**அல்லாஹ்வைத் தவிர வேறு யாரையும் வணங்கக்கூடாது:**

6:56. "**நீங்கள் அல்லாஹ்வையன்றி வேறு எவர்களை(க் கடவுளர்களாக) அழைக்கின்றீர்களோ** அவர்களை வணங்கக் கூடாதென்று நான் நிச்சயமாக தடுக்கப்பட்டு உள்ளேன்" (என்று நபியே!) நீர் கூறுவீராக: "உங்களுடைய மன

இச்சைகளை நான் பின்பற்ற மாட்டேன்; (நான் அப்படிச் செய்தால்) நான் நிச்சயமாக வழி தவறி விடுவேன்; மேலும் நான் நேர்வழி பெற்றவர்களிலும் இருக்கமாட்டேன்" என்றும் (நபியே!) நீர் கூறுவீராக.

**இஸ்லாமுக்கும் கிறிஸ்தவத்திற்கு இடையே ஹலால்/ஹராம் பற்றிய தொடர் கட்டுரைகளை கீழே படிக்கலாம்:**

**இயேசுவின் ஹலால் முஹம்மதுவின் ஹராம்:**

- **1: தொழுகை முறைகள்**
- **2: 'கிப்லா' தொழுகையின் திசை**
- **3: தொழுகையை/ஜெபத்தை முறிப்பவைகள்**
- **4: தொழுகை மொழி**
- **5: "விவாகரத்து(தலாக்)" அல்லாஹ்வின் ஆயுதம்**
- **6: முஹம்மது என்னும் முஸ்லிம்களின் விக்கிரகம்**
- **7: பத்ரூ என்ற ஹலால்**
- **8: முபாஹலா என்ற ஹராம்**
- 9: **குர்ஆனை எழுத்துவடிவில் கொண்டுவருவது அல்லாஹ்வின் படி ஹராம்**
- 10: **"சகக்கழுத்தி" இஸ்லாமில் ஹலால், கிறிஸ்தவத்தில் ஹராம்!**
- 11: **கிறிஸ்தவத்தில் ஹலால், ஹராம் என்பவைகள் உண்டா?**
- 12: **உணவு விஷயத்தில் 'ஹலால் ஹராம்' பற்றி கிறிஸ்தவம் என்ன சொல்கிறது?**



**கேள்வி 55:** ஹலால் (HALAL) என்றால் என்ன?

**பதில் 55:** குர்-ஆன் மற்றும் ஹதீஸ்களின் (இஸ்லாமிய) சட்டப்படி ஹலால் என்றால் "அனுமதிக்கப்பட்டவைகள்" என்று பொருள். அதாவது இஸ்லாமியர்கள் பயன்படுத்தவோ அல்லது உட்கொள்ளவோ அல்லது உடுத்தவோ அனுமதிக்கப்பட்ட பொருட்களை "ஹலால் பொருட்கள்" என்பார்கள். இதே போல, இஸ்லாமில் அனுமதிக்கப்படாதவைகளை "ஹராம்" என்றுச் சொல்வார்கள்.

ஆனால், ஹலால் பட்டியலில் எவைகள் வருகின்றன, ஹராம் பட்டியலில் எவைகள் வருகின்றன என்பதைக் குறித்து இஸ்லாமிய பிரிவுகளில் ஒருமித்த கருத்து இல்லை. ஒவ்வொரு பிரிவினரும் வெவ்வேறு பட்டியலைத் தருவார்கள்.

இயேசுவும் முஹம்மதுவும் ஒரே செய்தியைத் தான் போதித்தார்கள் என்று முஸ்லிம்கள் சொல்வார்கள், ஆனால், இவ்விருவரின் போதனைகளை ஆய்வு செய்தால், அடிப்படை விஷயங்கள் தொடங்கி, தொழுகை வரை, இயேசு ஹலால் என்று போதித்தவைகளை முஹம்மது ஹராம் என்று போதனை செய்துள்ளார் என்பதை கவனிக்கமுடியும்.

இந்த தலைப்பில் எழுதப்பட்ட 12 ஆய்வுக் கட்டுரைகளை இங்கு தருகிறேன் படிக்கவும்.

**இயேசுவின் ஹலால் முஹம்மதுவின் ஹராம்:**

- **1: தொழுகை முறைகள்**
- **2: 'கிப்லா' தொழுகையின் திசை**
- **3: தொழுகையை/ஜெபத்தை முறிப்பவைகள்**
- **4: தொழுகை மொழி**
- **5: "விவாகரத்து(தலாக்)" அல்லாஹ்வின் ஆயுதம்**
- **6: முஹம்மது என்னும் முஸ்லிம்களின் விக்கிரகம்**
- **7: பத்ரூ என்ற ஹலால்**
- **8: முபாஹலா என்ற ஹராம்**
- 9: **குர்ஆனை எழுத்துவடிவில் கொண்டுவருவது அல்லாஹ்வின் படி ஹராம்**
- 10: **"சகக்கழுத்தி" இஸ்லாமில் ஹலால், கிறிஸ்தவத்தில் ஹராம்!**
- 11: **கிறிஸ்தவத்தில் ஹலால், ஹராம் என்பவைகள் உண்டா?**
- 12: **உணவு விஷயத்தில் 'ஹலால் ஹராம்' பற்றி கிறிஸ்தவம் என்ன சொல்கிறது?**

**கிறிஸ்தவர்கள் சிந்திக்க ஒரு வசனம்:**

எல்லாவற்றையும் அநுபவிக்க எனக்கு அதிகாரமுண்டு, ஆகிலும் எல்லாம் தகுதியாயிராது; எல்லாவற்றையும் அநுபவிக்க எனக்கு அதிகாரமுண்டு, ஆகிலும் எல்லாம் பக்திவிருத்தியை உண்டாக்காது. ஒவ்வொருவனும் தன் சுயபிரயோஜனத்தைத் தேடாமல், பிறனுடைய பிரயோஜனத்தைத் தேடக்கடவன். (1 கொரிந்தியர் 10:23-24)



**கேள்வி 56:** உம்மா (Ummah) என்றால் என்ன?

**பதில் 56:** அரபியில் உம்மா என்றால், ஒரு சமுதாயம் என்று பொருள். இஸ்லாமை பொறுத்தமட்டில், பொதுவாக "உம்மா" என்றால் இஸ்லாமிய சமுதாயத்தை குறிக்கும். இஸ்லாமிய சமுதாயத்தை குறிக்க அரபியில் "உம்மத் அல் இஸ்லாம்(ummat al-Islām)" என்றும் கூறுவார்கள்.

உம்மா என்ற வார்த்தை பல வடிவங்களில் குர்ஆனில் 62 முறை வருவதாக கூறப்படுகிறது. கீழ்கண்ட வசனத்தில் "சமுதாயம்" என்ற வார்த்தைக்கு அரபியில் "உம்மா" என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது;

குர்ஆன் 23:51. (நம் தூதர்கள் ஒவ்வொருவரிடத்திலும்:) "தூதர்களே! நல்ல பொருள்களிலிருந்தே நீங்கள் உண்ணுங்கள்; (ஸாலிஹான) நல்லமல்களை

செய்யுங்கள்; நிச்சயமாக நீங்கள் செய்பவற்றை நான் நன்கு அறிபவன் (என்றும்) 23:52. "இன்னும், நிச்சயமாக (சன்மார்க்கமான) உங்கள் **சமுதாயம்** (முழுவதும்) ஒரே **சமுதாயம்** தான்; மேலும், நானே உங்களுடைய இறைவனாக இருக்கின்றேன்; எனவே நீங்கள் எனக்கே அஞ்சுங்கள்" (என்றும் கூறினோம்).



**கேள்வி 57:** கிப்லா (தொழும் திசை - Qibla) என்றால் என்ன?

**பதில் 57:** இஸ்லாமில் "கிப்லா" முக்கிய இடத்தை பிடித்துள்ளது. முஸ்லிம்கள் தொழுகை செய்யும் போது, ஒரு திசையை நோக்கி தொழுதுக்கொள்வார்கள், அந்த திசைக்கு கிப்லா என்பார்கள்.

முஸ்லிம்கள் உலகில் எந்த பகுதியில் வாழ்பவராக இருந்தாலும் சரி, அவர்கள் நமாஜ் (தொழுகை) செய்யும் போது, தங்கள் முகங்களை சௌதி அரேபியாவில் உள்ள மக்கா நகரத்திற்கு நேராக திருப்பிக்கொண்டு தொழவேண்டும். மக்கா நகரத்தில் தான் "காபா" என்ற ஆலயம் உள்ளது என்பதால், முஸ்லிம்கள் கேள்வி கேட்காமல் அதன் பக்கம் திரும்பியே தொழவேண்டும். உலகின் மசூதிகள் அனைத்தும், இதன் அடிப்படையில் தான் கட்டப்படுகின்றன.

உதாரணத்திற்கு:

- தமிழ் நாட்டில் உள்ள முஸ்லிம்கள் தொழும்போது, வடக்கு நோக்கி (கிப்லா) தொழுவார்கள்.
- அமெரிகாவில் உள்ளவர்கள், கிழக்கு நோக்கி தொழுவார்கள், ஏனென்றால் அமேரிக்காவிற்கு கிழக்கில் சௌதி அரேபியா (மக்காவும், காபாவும்) இருப்பதினால்.
- மக்காவிற்கு புனித ஹஜ் பயணம் செய்யும் போது, காபாவை நோக்கி முஸ்லிம்கள் 360 டிகிரியில் தொழுவதைக் காணலாம்.

சில வேளைகளில் கிப்லா திசை எது என்று முஸ்லிம்களுக்கு தெரியாத பட்சத்தில் அதாவது ஹோட்டல்களில், விமான நிலையங்களில் "கிப்லா இந்த பக்கம்" உள்ளது என்ற அடையாளத்தை முஸ்லிம்கள் அறிவிப்பு பலகையாக எழுதி வைத்திருப்பார்கள். அதைப் பார்த்து முஸ்லிம்கள் தொழுவார்கள்.

### முதல் 12 ஆண்டுகள் முஹம்மதுவும் முஸ்லிம்களும் எருசலேமை நோக்கியே தொழுதார்களா?

ஆம், முஹம்மதுவிற்கு கிபி 610ல் முதல் குர்ஆன் வசனம் இறங்கிய காலம் தொடங்கி, அவர் மதினாவிற்கு ஹிஜ்ரி செய்த பிறகு கூட, 1.5 ஆண்டுகள் மதினாவில், அவரும் மற்றும் அனைத்து முஸ்லிம்களும் எருசலேமையே தங்கள் கிப்லா (வணக்க திசையாக) வைத்து தொழுகை புரிந்தார்கள்.

**கீழ்கண்ட வசனத்தின் மூலமாக கிப்லா மாற்றப்பட்டது:**

ஸூரா 2:144. (நபியே!) **நாம் உம் முகம் அடிக்கடி வானத்தை நோக்கக் காண்கிறோம்; எனவே நீர் விரும்பும் கிப்லாவின் பக்கம் உம்மைத் திடமாக திருப்பி விடுகிறோம்;** ஆகவே நீர் இப்பொழுது (மக்காவின்) மஸ்ஜிதுல் ஹராம் பக்கம் உம் முகத்தைத் திருப்பிக் கொள்ளும். (முஸ்லிம்களே!) இன்னும் நீங்கள் எங்கிருந்தாலும் (தொழுகையின் போது) உங்கள் முகங்களை அந்த (கிப்லாவின்) பக்கமே திருப்பிக் கொள்ளுங்கள்; நிச்சயமாக எவர்கள் வேதம் கொடுக்கப்பட்டிருக்கின்றார்களோ அவர்கள், இது அவர்களுடைய இறைவனிடமிருந்து வந்த உண்மை என்பதை நிச்சயமாக அறிவார்கள்; அல்லாஹ் அவர்கள் செய்வது பற்றிப் பராமுகமாக இல்லை.

**ஏன் கிப்லா மாற்றப்பட்டது?**

ஆரம்பத்தில் "யூதர்களும் கிறிஸ்தவர்களும்" தன்னை நபியாக ஏற்பார்கள் என்று முஹம்மது எதிர்ப்பார்த்தார். மக்காவில் இறங்கிய குர்ஆன் வசனங்கள் யூத கிறிஸ்தவர்களுக்கு சாதகமான வசனங்களாகவே பெரும்பான்மையாக இருந்தன.

நீங்கள் என்னதான் செய்தாலும் அற்புதம் செய்துக் காட்டவில்லையென்றால் நாங்கள் உம்மை நம்புவதாக இல்லை என்று ஒரே போடு போட்டார்கள் யூதர்கள். முஹம்மதுவிற்கும், அற்புதங்களுக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது. கிறிஸ்தவர்களோ, இயேசுவின் சிலுவை மரணம், மற்றும் உயிர்த்தெழுதலோடு ஃபெவிகால் இணைப்பு போன்று ஒட்டிக்கொண்டு இருந்தார்கள், முஹம்மது என்ன செய்தாலும், யூதர்களையும், கிறிஸ்தவர்களையும் இவரை நபியாக ஏற்பதாகத் தெரியவில்லை.

சரி, இனி இவர்களுடைய எருசலேமை நோக்கி ஏன் தொழவேண்டும்? "நாட்டமை தீர்ப்பை மாற்றிச்சொல்லுங்க" என்று அல்லாஹ்வை அடிக்கடி வேண்டிக்கொள்ள, இறங்கியது குர்ஆன் 2:144, மாறியது கிப்லா.

கிப்லா பற்றி கிறிஸ்தவம் மற்றும் இஸ்லாம் பற்றிய மேலதிக விவரங்கள்:

**இயேசுவின் ஹலால் முஹம்மதுவின் ஹராம் பாகம் 2: 'கிப்லா' தொழுகையின் திசை**



**கேள்வி 58:** ஜன்னாஹ் (Jannah) என்றால் என்ன?

**பதில் 58** ஜன்னாஹ் என்றால் அரபியில் சொர்க்கம் என்று பொதுவான அர்த்தம் கொடுக்கப்பட்டுள்ளது.

அரபியில் "அல்-ஜன்னா" என்பது தோட்டம் என்றும் பொருள் கூறப்படுகின்றது (ஜன்னத் என்றால் பன்மையாகும்). சொர்க்கத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதியைக் குறிக்க அல் ஃபிர்தௌஸ்(al-Firdaus) என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**யாருக்கு அல்லாஹ்வின் சொர்க்கம் கிடைக்கும்?**

- தன் மர்ம உறுப்பையும், நாவையும் காத்துக்கொண்டவர்களுக்கு: புகாரி எண்: 6907

6807. 'தம் இரண்டு **கால்களுக்கிடையே உள்ளதான (மர்ம உறுப்பி)ற்கும்**, தம் இரண்டு **தாடைகளுக்கிடையே உள்ளதான (நாவி)ற்கும்** என்னிடம் உத்தரவாதம் அளிப்பவருக்காக நான் **சொர்க்கத்திற்கு** உத்தரவாதம் அளிக்கிறேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்' என ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

- மனந்திருப்பி, நம்பிக்கைகொண்டு, நல்லவைகளை செய்தால் : 19:60-61
- பொறுமையுடன் இருப்பவர்களுக்கு 76:12
- நம்பிக்கைகொண்டு, நல்லவைகளை செய்தால் 2:25, 22:23
- பயபக்தியுடையவர்கள, தங்கள் கடமைகளைச் செய்பவர்களுக்கு 44:51, 47:15, 52:17
- அல்லாஹ்வை தேடுபர்களுக்கு, தொழுபவர்களுக்கு, தானதர்மங்கள் செய்பவர்களுக்கு: 13:22-23

சொர்க்கம் பற்றிய மேலதிக விவரங்களை கீழ்கண்ட கட்டுரைகளில் படிக்கலாம்:

- **அல்லாஹ்வின் சொர்க்கத்தில் நுழைந்த முதல் நாள்**
- **சொர்க்கம் போகும் வழி?**
- **ரமலான் சிந்தனைகள் 27: இஸ்லாமிய சொர்க்கம் மற்றும் நரகம்**



**கேள்வி 59:** ஜஹன்னம் (Jahannam) என்றால் என்ன?

**பதில் 59:** இஸ்லாமில் ஜஹன்னம் என்றால் நரகம் என்று பொருள். குர்ஆனில் நரகம் பற்றி தோராயமாக 500 வசனங்கள் உள்ளன என்று சொல்லப்படுகின்றது.

**இஸ்லாமை நம்பாதவர்கள் தான் நரக நெருப்பின் எரிபொருள்களாக இருக்கின்றனர்: குர்ஆன் 3:10**

3:10. நிராகரிப்போர்களுக்கு அவர்களுடைய செல்வங்களும், குழந்தைகளும் அல்லாஹ்வி(ன் தண்டனையி)லிருந்து எதையும் நிச்சயமாக தடுக்கப்படமாட்டாது; இன்னும் அவர்கள்தாம் (நரக) நெருப்பின் எரிபொருள்களாக இருக்கின்றனர்.

**நரகத்திற்கு 7 வாசல்கள் இருக்கின்றன, அவைகளில் ஒரு குறிப்பிட்ட வகையான பாவம் செய்தவர்கள் நுழைவார்கள்:**

15:43. நிச்சயமாக (உன்னைப் பின்பற்றும்) அனைவருக்கும் நரகம் வாக்களிக்கப்பட்ட இடமாகும்.15:44. அதற்கு ஏழு வாசல்கள் உண்டு; அவ்வாசல்கள் ஒவ்வொன்றும் பங்கிடப்பட்ட (தனித்தனிப்) பிரிவினருக்கு உரியதாகும்.

**முஹம்மதுவின் தாயும் தந்தையும் நரகத்தில் இருப்பார்கள்:**

1777. அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் தம் தாயாரின் அடக்கத்தலத்தைச் சந்தித்தபோது அழுதார்கள்; (இதைக் கண்டு) அவர்களைச் சுற்றியிருந்தவர்களும் அழுதனர். அப்போது அவர்கள், "**நான் என் இறைவனிடம் என் தாயாருக்காகப் பாவமன்னிப்புக் கோர அனுமதி கேட்டேன். எனக்கு அனுமதி வழங்கப்படவில்லை**. அவரது அடக்கத்தலத்தைச் சந்திப்பதற்கு அனுமதி கேட்டேன். எனக்கு அனுமதி வழங்கினான். எனவே, அடக்கத்தலங்களைச் சந்தியுங்கள். ஏனெனில், அவை மரணத்தை நினைவூட்டும்!" என்று கூறினார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

347. அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

ஒரு மனிதர் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! (இஸ்லாத்திற்கு முன் இறந்துவிட்ட) என் தந்தை எங்கே இருக்கிறார்?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(நரக) நெருப்பில்" என்று பதிலளித்தார்கள். அவர் திரும்பிச் சென்றபோது அவரை நபி (ஸல்) அவர்கள் அழைத்து, "**என் தந்தையும் உன் தந்தையும் (நரக) நெருப்பில்தான் (இருக்கிறார்கள்)**" என்று கூறினார்கள்.

**முஹம்மதுவின் பெரிய தந்தை அபூதாலி நரகத்தில்:**

360. அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்களிடம் அவர்களுடைய பெரிய தந்தை அபூதாலிப் அவர்களைப் பற்றிக் கூறப்பட்டது. அப்போது அவர்கள், "மறுமை நாளில் அவருக்கு என் பரிந்துரை பயனளிக்கக் கூடும்; **(அதனால்) நரக நெருப்பு அவரது (முழு உடலையும் தீண்டாமல்) கணுக்கால்கள்வரை மட்டுமே தீண்டும்படி ஆக்கப்படலாம்**. (ஆனால்,) அதனால் அவருடைய மூளை (தகித்துக்) கொதிக்கும்" என்று கூறினார்கள்.

**முஸ்லிம்கள் அனைவரும் முதலில் நரகத்திற்குச் செல்வார்கள்:**

299. அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

. . .(தொடர்ந்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அந்தக் கொக்கிகள் கருவேல மரத்தின் முள்ளைப் போன்றுதான் இருக்கும். ஆயினும், அதன் பருமன் என்னவென்று அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். அந்தக் கொக்கிகள் மக்களை அவர்களின் செயல்களுக்கேற்ப கவ்விப்பிடிக்கும். அவர்களில் தமது (பாவச்) செயலால் (அங்கு) தங்கிவிட்ட இறைநம்பிக்கையாளரும் இருப்பார். இன்னும் அவர்களில் தண்டனை அளிக்கப்பட்டுப் பின்னர் விடுவிக்கப்படுபவரும் இருப்பார். **இறுதியாக இறைவன், அடியார்களிடையே தீர்ப்பு வழங்கி** முடித்த பின், நரகவாசிகளில் தான் நாடிய சிலரைத் தனது கருணையினால் (நரகத்திலிருந்து) வெளியேற்ற விரும்புவான். அதன்படி அல்லாஹ்விற்கு எதையும் இணைகற்பிக்காமல் இருந்து, "**அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை" என்று உறுதிகூறியவர்களில்**, தான் கருணைகாட்ட நாடிய சிலரை நரகத்திலிருந்து வெளியேற்றுமாறு வானவர்களுக்கு இறைவன் ஆணையிடுவான். **வானவர்கள் நரகத்திலிருக்கும் அவர்களை சஜ்தாவின் அடையாளங்களை வைத்து இனம் கண்டுகொள்வார்கள்**. மனிதனி(ன் உடலி)ல் உள்ள சஜ்தாவின் அடையாளத்தைத் தவிர மற்றப் பகுதிகளை நரகம் தீண்டுகிறது. **சஜ்தா அடையாளத்தைத் தீண்டக் கூடாதென நரகத்திற்கு இறைவன் தடை விதித்துள்ளான்**. ஆகவே, **அவர்கள் அங்கமெல்லாம் கரிந்துவிட்ட நிலையில் நரகத்திலிருந்து வெளியேற்றப்படுவார்கள்**.. .



**கேள்வி 60:** ஷஹதா (Shahadah) என்றால் என்ன?

**பதில் 60:** ஷஹதா என்றால் இஸ்லாமிய விசுவாச அறிக்கையாகும் அல்லது இஸ்லாமிய சாட்சியம் கூறுவதாகும்.

இஸ்லாமிய ஷஹதா: ஒருவர் முஸ்லிமாக மாறும்போது இந்த கீழ்கண்ட சாட்சியம் கூறவேண்டும்:

- **தமிழ்:** அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை, முஹம்மது அல்லாஹ்வின் தூதர் என்று நான் சாட்சியம் கூறுகிறேன்.
- **அரபியில்:** Ashhadu an la ilaha illa 'llah; ashhadu anna Muhammadan rasulu 'llah
- ஆங்கிலத்தில்: I witness that there is no god but Allah, and Muhammad is the messenger of Allah.

ஷியா முஸ்லிம்கள், தங்கள் விசுவாச அறிக்கையில் கீழ்கண்ட வரியையும் அதிக படியாக சேர்த்துக்கொள்வார்கள்:

- **அரபியில்:** lā sayf ʾillā Ḏū l-Fiqār (லா ஸைஃப் இல்லா துல் ஃபிகார்)
- **தமிழ்:** துல் ஃபிகார்போல வாள் இல்லை

துல் ஃபிகார் என்பது முஹம்மதுவின் மருமகன் அலி அவர்கள் பயன்படுத்திய வாளின் பெயர் ஆகும்.

குர்ஆனில் எந்த ஒரு வசனத்திலும் முழு ஷஹாதா காணப்படுவதில்லை என்பது குறிப்பிடத்தக்கது, அவை மூன்று வசனங்களிலிருந்து முஸ்லிம்கள் எடுத்துள்ளார்கள்.

**குர்ஆன் 37:35-36:**

37:35. **"அல்லாஹ்வைத் தவிர நாயன் இல்லை"** என்று அவர்களுக்குக் கூறப்பட்டால், மெய்யாகவே அவர்கள் பெருமையடித்தவர்களாக இருந்தனர். 37:36. "ஒரு பைத்தியக்காரப் புலவருக்காக நாங்கள் மெய்யாக எங்கள் தெய்வங்களைக் கைவிட்டு விடுகிறவர்களா?" என்றும் அவர்கள் கூறுகிறார்கள்.

**குர்ஆன் 47:19:**

47:19. ஆகவே, நிச்சயமாக **அல்லாஹ்வைத் தவிர (வேறு) நாயன் இல்லை** என்று நீர் அறிந்து கொள்வீராக; இன்னும் உம்முடைய பாவத்திற்காகவும், முஃமின்களான ஆண்களுக்காகவும், பெண்களுக்காகவும் (பாவ) மன்னிப்புத் தேடுவீராக - அன்றியும் உங்களுடைய நடமாட்டத்தலத்தையும் உங்கள் தங்குமிடங்களையும் அல்லாஹ் நன்கறிகிறான்.

**குர்ஆன் 48:29:**

48:29. **முஹம்மது(ஸல்) அல்லாஹ்வின் தூதராகவே இருக்கின்றார்**; . . .



## தலைப்பு: இஸ்லாம் (60 கேள்வி பதில்கள்)

உலகம் முஸ்லிம்களை சரியாக புரிந்துக்கொள்ளவில்லை, முஸ்லிம்கள் உலகை சரியாக புரிந்துக் கொள்ளவில்லை. முஸ்லிமல்லாத மக்களுக்கு முஸ்லிம்கள் ஒரு புரியாத புதிராகவே உள்ளார்கள். எல்லோருக்கும் புரியும் விஷயம் முஸ்லிம்களுக்கு மட்டும் புரிவதில்லை, அதே போன்று முஸ்லிம்கள் பேசுவதை அகராதிகள் வைத்துக்கொண்டு தான் புரிந்துக்கொள்ள வேண்டியுள்ளது.

முஸ்லிம்களை புரிந்துக் கொள்ளவேண்டுமென்றால், முஸ்லிம்கள் பின்பற்றும் இஸ்லாமை நாம் தெரிந்துக்கொள்ளவேண்டும். முஸ்லிம்களின் நம்பிக்கை என்ன? பழக்க வழக்கங்கள் என்ன? அவர்களின் கலாச்சாரம் என்ன? அவர்கள் மனதில் ஓடும் எண்ணங்கள் என்ன? போன்ற கேள்விகளுக்கு பதில்களைக் கண்டால் தான், அவர்களை புரிந்துக் கொள்ளமுடியும்.

நான் ஏன் முஸ்லிம்களையும், இஸ்லாமையும் புரிந்துக்கொள்ளவேண்டும்? என்று கேள்வி கேட்கவேண்டாம். நம் வாழ்க்கையின் ஒரு பகுதியாக இருக்கும், ஒரு குறிப்பிட்ட மக்களை புறக்கணித்துவிட்டு, இந்த உலகில் நிம்மதியாக நாம் வாழமுடியாது என்பதை கவனத்தில் வைத்துக்கொள்ளவும். நாம் ஒருவரை ஒருவர் சார்ந்துள்ளோம் என்பதை கவனத்தில் வைத்துக்கொள்ளவும்.

**கேள்வி 1:** முஸ்லிம் என்றால் யார்?

**பதில் 1:** இஸ்லாம் என்ற மதத்தை பின்பற்றுகிறவர்களை முஸ்லிம்கள் என்பார்கள். இஸ்லாமுடைய இறைவனின் பெயர் "அல்லாஹ்" என்பதாகும். முஹம்மது என்பவர் அல்லாஹ்வின் தூதர் (தீர்க்கதரிசி) என்றும் இவர்கள் நம்பவேண்டும். குர்ஆன் என்பது இஸ்லாம் மதத்தின் வேதமாக முஸ்லிம்களால் கருதப்படுகின்றது.



**கேள்வி 2:** முஸ்லிம்கள், இஸ்லாமியர்கள் மற்றும் முஹம்மதியர்கள், வித்தியாசம் என்ன?

**பதில் 2:**இந்த மூன்று வார்த்தைகளும் முஸ்லிம்களையே குறிக்கிறது. இஸ்லாம் என்பது ஒரு மதம், இதனை பின்பற்றுகிறவர்களை "இஸ்லாமியர்கள்" என்றும் முஸ்லிம்கள் என்றும் அழைக்கப்படுகிறார்கள்.

முஹம்மது என்பவர் அல்லாஹ்வின் இறைத்தூதர் என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள். பல ஆண்டுகளுக்கு முன்பு " முஹம்மதியர்கள்" என்ற பொதுவான பெயரில் முஸ்லிம்கள் அழைக்கப்பட்டு இருந்தார்கள். சமீப காலமாக "முஹம்மதியர்கள்" என்ற வார்த்தை கைவிடப்பட்டு முஸ்லிம்கள், இஸ்லாமியர்கள் என்ற வார்த்தைகள் பயன்படுத்தப்படுகின்றது.



**கேள்வி 3:** அரேபியர்கள் அனைவரும் முஸ்லிம்களா?

**பதில் 3:** இல்லை, அரேபியர்கள் அனைவரும் முஸ்லிம்கள் அல்ல. அரேபியா என்பது ஒரு தீபகர்ப்பம். இந்த நிலப்பரப்பில் வாழ்ந்த பழங்குடியினர்கள் அரேபியர்கள் என்று இஸ்லாமுக்கு முன்பும் அழைக்கப்பட்டு இருந்தார்கள். அக்காலத்தில் அரேபிய பகுதியில் அரபி பேசும் கிறிஸ்தவர்களும், யூதர்களும் கூட வாழ்ந்துக்கொண்டு இருந்தார்கள்.

ஏழாம் நூற்றாண்டில் அந்த அரேபிய பழங்குடியினரில் தோன்றிய முஹம்மது, முழு அரேபியாவை ஆக்கிரமித்து, அதனை இஸ்லாமிய மயமாக மாற்றினார். அவருக்கு பிறகு அடுத்து வந்த கலீஃபாக்கள் கூட பல மத்திய கிழக்கு நாடுகள் மீது யுத்தம் செய்து அவைகளை ஆக்கிரமித்தார்கள், இஸ்லாமை பரப்பினார்கள்.

இன்று அரேபியர்கள் என்றால் அனைவருக்கும் "முஸ்லிம்கள்" தான் ஞாபகத்திற்கு வருகிறது.

உலக முஸ்லிம்கள் ஜனத்தொகையில் அரபி பேசுபவர்கள் 15% உள்ளதாக கூறப்படுகின்றது. மீதமுள்ள முஸ்லிம்கள் (85%) அரபி பேசாத மற்ற உலக நாடுகளில் வாழ்பவர்கள் ஆவார்கள். தங்கள் தங்கள் நாட்டின் தாய் மொழியை பேசுகிற முஸ்லிம்கள் இவர்கள் ஆவார்கள். தமிழ் மற்றும் மளையாலம் பேசும் முஸ்லிம்கள் இருக்கிறார்கள், உருது பேசும் முஸ்லிம்கள் இருக்கிறார்கள். இவர்கள் அனைவரும் தொழுதுக்கொள்ளும் போது மட்டுமே அரபியில் தொழுதுக்கொள்வார்கள், மற்றபடி இவர்களுக்கு அரபி மொழி பேசவும் வராது, இவர்களுக்கு புரியாதும் கூட. இமாம்கள் என்றுச் சொல்லக்கூடிய அறிஞர்கள் மட்டுமே அரபி மொழியை பேசமும் புரிந்துக்கொள்ளவும் செய்வார்கள்.

இந்தியர்கள் என்றால் "இந்துக்கள் மட்டும்" என்றுச் சொல்வது எப்படி தவறோ! அது போல அரபியர்கள் என்றால் வெறும் முஸ்லிம்கள் என்றுச் சொல்வது தவறு. அரபி பேசும் முஸ்லிமல்லாதவர்களும் (கிறிஸ்தவர்களும், யூதர்களும்,..) இருக்கிறார்கள்.



**கேள்வி 4:** முஸ்லிம்களுக்கும், யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் இடையேயுள்ள சம்மந்தம் என்ன?

**பதில் 4:** யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் சம்மந்தமுள்ளது, ஆனால் முஸ்லிம்களுக்கும் மற்ற இருவருக்கும் எந்த ஒரு சம்மந்தமும் இல்லை.



**கேள்வி 5**: இஸ்லாமுக்கும் யூத கிறிஸ்தவர்களுக்கும் நிறைய சம்மந்தம் இருக்கிறதே (ஆபிரகாம், இஸ்மாயீல், எருசலேம்...)? நீங்கள் இல்லை என்றுச் சொல்கிறீர்களே!

**பதில் 5:**

**நபர்கள்:**

யூதர்களின் தகப்பன் ஆபிரகாம் (கி.மு. 2000). ஆபிரகாமுக்கு 2000 ஆண்டுகள் கழித்து இயேசுக் கிறிஸ்து யூதராக வந்தார், அவரை பின்பற்றுகிறவர்கள் கிறிஸ்தவர்கள்.

இயேசுவிற்கு 600 ஆண்டுகளுக்கு பிறகு அரேபியாவில் 'முஹம்மது' என்ற பெயரில் ஒருவர் வந்து, ஆபிரகாம், இயேசுவின் வழியில் வந்த நபி என்று தன்னைப் பற்றி கூறிக்கொண்டார். இவர் உண்டாக்கிய மதம் தான் இஸ்லாம். இந்த மூன்றும் ஆபிரகாமிய மதங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

**வேதங்கள்:**

யூதர்களின் வேதம் பைபிளில் உள்ள பழைய ஏற்பாடு. கிறிஸ்தவர்கள் பழைய ஏற்பாட்டையும் பின்பற்றுகிறார்கள், புதிய ஏற்பாட்டையும் பின்பற்றுகிறார்கள். முஸ்லிம்களின் வேதம் குர்ஆன். முந்தைய வேதமாகிய பைபிளை (பழைய மற்றும் புதிய ஏற்பாடுகள்) நம்புகிறோம் என்று முஸ்லிம்கள் சொல்வார்கள், ஆனால் அதனை படிக்கமாட்டார்கள், அவைகள் மாற்றப்பட்டுவிட்டது என்று குற்றம்சாட்டுவார்கள்.

குர்ஆனில் பைபிளின் நிகழ்ச்சிகள் மறுபதிவு செய்யப்பட்டிருக்கிறது, இதனால் தான் பைபிளில் வரும் நபர்களின் பெயர்கள், நிகழ்ச்சிகள் குர்ஆனிலும் வருகின்றது.

**சொந்தம் கொண்டாடுதல்:**

குர்ஆன் யூத கிறிஸ்தவர்களின் பல விவரங்களை சொந்தம் கொண்டாடுகின்றது.

- யூத கிறிஸ்தவர்களின் வேதங்களை குர்ஆன் சொந்தம் கொண்டாடுகிறது.
- பைபிளின் இறைவனாகிய "யெகோவா தேவனை" குர்ஆன் சொந்தம் கொண்டாடி, அல்லாஹ் தான் யெகோவா தேவன் என்று சொல்கிறது.
- பைபிளின் தீர்க்கதரிசிகளை குர்ஆன் சொந்தம் கொண்டாடுகிறது.
- கடைசியாக எருசலேமையும் இஸ்லாமின் மூன்றாம் புனித பூமி என்றுச் சொல்லி, இஸ்லாம் சொந்தம் கொண்டாடுகிறது.

இஸ்லாம் யூத கிறிஸ்தவர்களிடமிருந்து எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு, "நீங்கள் தவறு, நான் தான் சரி" என்றுச் சொல்கிறது. இங்கே தான் யூத கிறிஸ்தவர்களுக்கும் நெஞ்சு எரிகிறது. யூதர்களும் கிறிஸ்தவர்களும் முஹம்மதுவை ஒரு நபியாக ஏழாம் நூற்றாண்டிலிருந்தே ஏற்றுக்கொள்ளவில்லை.

ஆக, இஸ்லாம் பைபிளின் இறைவனை எடுத்துக்கொண்டது, நபிமார்களை எடுத்துக்கொண்டது, வேதங்களை எடுத்துக்கொண்டது, கடைசியாக எருசலேம் நகரத்தையும் எடுத்துக்கொண்டது.

அதே நேரத்தில் பைபிளில் உள்ள பல சத்தியங்களை, கட்டளைகளை மாற்றிச் சொல்கிறது. அதனால், பைபிளின் படி முஹம்மது ஒரு கள்ள நபி, குர்ஆன் யெகோவா அனுப்பிய வேதமில்லை. பைபிளின் இறைவனாகிய யெகோவா, குர்ஆனின் இறைவன் அல்லாஹ் இல்லை.

இப்போது புரிகின்றதா, யார் யாரை **சொந்தம்** கொண்டாடுகிறார்கள் என்று!



**கேள்வி 6:** இஸ்லாமின் மூன்று புனித நகரங்கள் யாவை?

**பதில் 6:** முஸ்லிம்கள் மூன்று நகரங்களை புனிதமாக கருதுகிறார்கள்:

**1) மக்கா:** முஹம்மது பிறந்த ஊர், மற்றும் காபா என்ற ஆலயம் இருக்கும் இடம். இந்த காபா உள்ள திசையை நோக்கி முஸ்லிம்கள் தொழுகிறார்கள்.

**2) மதினா:** முஹம்மது மக்காவிலிருந்து உயிர் தப்பச் சென்ற இன்னொரு ஊர். இந்த இடத்தில் இஸ்லாமின் முதல் மசூதி உள்ளது. இஸ்லாம் வளர்ந்தது இந்த ஊரிலிருந்த போது தான்.

**3) எருசலேம் நகரம்:** முந்தைய வேதக்காரர்களான யூத கிறிஸ்தவர்களின் புனிதப் பட்டணம். இந்த பட்டணத்தை முஹம்மதுவிற்கு அடுத்த ஆட்சி புரிந்த உமர் அவர்கள் முற்றுகையிட்டு ஆக்கிரமித்தார்கள்.

உலக அரசியிலும் மத்திய கிழக்கு நாடுகளில் நடக்கும் சண்டைகள் இந்த நகரத்தையும், இஸ்ரேல் மண்ணையும் சுற்றியே நடப்பதை செய்திகளில் காணலாம்.



**கேள்வி 7:** முஸ்லிம்கள் ஒரு நாளுக்கு எத்தனை முறை தொழுகிறார்கள்?

**பதில் 7:** முஸ்லிம்களில் இரண்டு பெரிய பிரிவுகள் உள்ளன. சன்னி பிரிவினர், ஷியா பிரிவினர்.

சன்னி பிரிவினர் ஒரு நாளைக்கு ஐந்த வேளை தொழுகிறார்கள்.

ஷியா பிரிவினர் ஒரு நாளைக்கு மூன்று வேளை தொழுகிறார்கள்.

இந்த மூன்று வேளைகளில் ஐந்து தொழுகைகளையும் சேர்த்து இவர்கள் தொழுது விடுகிறார்கள் என்று ஷியா பிரிவினர் கூறுகிறார்கள்.



**கேள்வி 8:** முஸ்லிம்களில் தினமும் மூன்று முறை மட்டும் தொழுபவர்கள் இருக்கிறார்களா?

**பதில் 8:** மேலே சொன்னது போன்று, ஷியா முஸ்லிம் பிரிவினர் மூன்று வேளை தொழுகிறார்கள். அதே போன்று "குர்ஆன் மட்டும்(Quran Only Muslims)" என்று ஒரு முஸ்லிம் குழுவினரும் இருக்கிறார்கள். இவர்கள் மூன்று வேளை மட்டுமே தொழுகிறார்கள். இவர்களின் கூற்றுப்படி குர்ஆன் மட்டும் தான் வேதம், ஹதீஸ்கள் மற்றும் இதர இஸ்லாமிய புத்தகங்களை அவர்கள் ஏற்பதில்லை.

குர்ஆனை மட்டும் நம்பும் இவர்கள் ஏன் மூன்று மட்டும் தொழவேண்டும்? என்று கேள்வி கேட்டால், இதற்கு பதில் "குர்ஆன் சொல்வது வேறும் மூன்று வேளை தொழுகை மட்டும் தான்" என்பதாகும்.

ஒரு முஸ்லிம் செய்யவேண்டிய கடமையை கூட குர்ஆன் தெளிவாகச் சொல்வதில்லை என்பது கசப்பான உண்மை.



**கேள்வி 9:** இஸ்லாமின் படி அல்லாஹ்விற்காக கட்டப்பட்ட முதலாவது மஸ்ஜித்(மசூதி, வணக்கஸ்தலம்) எது?

**பதில் 9:** இன்று மக்கா நகரில் காணும் காபா என்ற ஆலயம் தான் அல்லாஹ்விற்காக முதலாவது கட்டப்பட்ட ஆலயம் என்று இஸ்லாம் சொல்கிறது. பைத்துல்லாஹ் என்றும் காபாவை அழைப்பார்கள். பைத் என்றால் வீடு, ஆகையால் பைத்துல்லாஹ் என்றால் அல்லாஹ்வின் வீடு என்று இதன் பொருள்.



**கேள்வி 10:** காபாவை கட்டியது யார்?

**பதில் 10:** அரபி மொழி வார்த்தை "காபா" என்றால் “கனசதுரம் (Cube)” என்று பொருள். மக்கா நகரில் உள்ள பெரிய மசூதியின் நடுப்பகுதியில் ஒரு கனசதுர வடியில் இது கட்டப்பட்டுள்ளது. இந்த காபாவை முதன் முதலில் ஆதாம் கட்டியதாகவும், அதன் பிறகு இப்றாஹீமும் இஸ்மாயீலும் கட்டியதாக இஸ்லாம் சொல்கிறது, இதற்கு சரித்திர ஆதாரங்கள் எதுவும் இல்லை.

இந்த காபாவில் 360 சிலைகளை வைத்து மக்கா பழங்குடியினர் வணங்கிக்கொண்டு இருந்தனர், இவர்களில் முஹம்மதுவும் ஒருவராவார். முஹம்மது மக்காவை கைப்பற்றிய பிறகு, அந்த சிலைகள் அனைத்தையும் காபாவிலிருந்து அகற்றிவிட்டார்.

முஸ்லிம்கள் முதல் 12+ ஆண்டுகள் எருசலேம் திசையை நோக்கி தொழுதார்கள், அதன் பிறகு தங்கள் வணக்கதிசையை (கிப்லா) காபாவிற்கு மாற்றிவிட்டார்கள். அன்றிலிருந்து இன்று வரை உலகில் உள்ள முஸ்லிம்கள் அனைவரும், எந்த நாட்டில் இருந்தாலும், அவர்கள் மக்காவை/காபாவை நோக்கி தொழுகிறார்கள்.



**கேள்வி 11:** காபா மற்றும் எருசலேம் ஆலயத்திற்கு இடையே 40 ஆண்டுகள் இடைவெளியா?

**பதில் 11:** முஹம்மது ஒரு சரித்திர தவறை செய்துள்ளார், அதாவது சாலொமோன் என்ற அரசர் எருசலேமில் கட்டிய ஆலயத்திற்கும், காபா கட்டப்படுவதற்கும்

இடையே 40 ஆண்டுகள் என்றுச் சொல்லியுள்ளார். முதலாவது முஹம்மது கூறியவற்றை படிக்கவும்:

ஸஹீஹ் புகாரி பாகம் 4, அத்தியாயம் 60, எண் 3366 கீழ்கண்டவிதமாக கூறுகிறது:

**அபூ தர்(ரலி) அறிவித்தார்**

நான் (நபி(ஸல்) அவர்களிடம்),'இறைத்தூதர் அவர்களே! பூமியில் முதன் முதலாக அமைக்கப்பட்ட பள்ளிவாசல் எது?' என்று கேட்டேன். அவர்கள்,'அல் மஸ்ஜிதுல் ஹராம் - மக்கா நகரிலுள்ள புனித (கஅபா அமைந்திருக்கும்) இறையில்லம்" என்று பதிலளித்தார்கள். நான்,'பிறகு எது?' என்று கேட்டேன். அவர்கள்,'ஜெரூஸத்தில் உள்ள) அல் மஸ்ஜிதுல் அக்ஸா" என்று பதிலளித்தார்கள். நான்,'அவ்விரண்டுக்கு மிடையே எத்தனை ஆண்டுக் காலம் (இடைவெளி) இருந்தது" என்று கேட்டேன். அவர்கள்,'**நாற்பதாண்டுகள்**' (மஸ்ஜிதுல் ஹராம் அமைக்கப்பட்டு நாற்பதாண்டுகள் கழித்து மஸ்ஜிதுல அக்ஸா அமைக்கப்பட்டது) பிறகு,'நீ தொழுகை நேரத்தை எங்கு அடைந்தாலும் உடனே, அதைத் தொழுதுவிடு. ஏனெனில், நேரப்படி தொழுகையை நிறைவேற்றுவதில் தான் சிறப்பு உள்ளது" என்று கூறினார்கள்.

மேலும் அதே ஸஹீஹ் புகாரி பாகம் 4, அத்தியாயம் 60, எண் 3425 என்ற ஹதீஸையும் படிக்கவும், இந்த ஹதீஸின் முடிவுரையில் சில மாற்றம் உண்டு, ஆனால், சரித்திர விவரம் ஒன்று போலவே உள்ளது:

**பாகம் 4, அத்தியாயம் 60, எண் 3425**

அபூ தர்(ரலி) அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்களிடம்), 'இறைத்தூதர் அவர்களே! முதலாவதாக அமைக்கப்பட்ட பள்ளிவாசல் எது?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'அல்மஸ்ஜிதுல் ஹராம் (மக்காவிலுள்ள புனித இறையில்லம்)" என்று பதிலளித்தார்கள். நான், 'பிறகு எது?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'பிறகு 'அல் மஸ்ஜிதுல் அக்ஸா' (ஜெரூசலம் நகரிலுள்ள 'அல் அக்ஸா' பள்ளி வாசல்)" என்று பதிலளித்தார்கள். நான், 'அவ்விரண்டிற்குமிடையே எவ்வளவு காலம் (இடைவெளி) இருந்தது?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், '**நாற்பதாண்டு காலம் (இடைவெளி) இருந்தது**" என்று கூறினார்கள். பிறகு, 'உன்னைத் தொழுகை (நேரம்) எங்கே வந்தடைந்தாலும் நீ தொழுது கொள். ஏனெனில், பூமி முழுவதுமே உனக்கு ஸஜ்தா செய்யுமிடம் (இறைவனை வழிபடும் தலம்) ஆகும்" என்று கூறினார்கள்.

நாம் தோராயமாக கணக்கிட்டால், ஆபிரகாம் வாழ்ந்த காலகட்டம் கி.மு. 2000 ஆகும், சாலொமோன் வாழ்ந்த காலம் கி.பி. 950 ஆகும். முஹம்மதுவின் கூற்றுப்படி, ஆபிரகாம் காபாவை கட்டினார் (புகாரி - பாகம் 4, அத்தியாயம் 60, எண் 3365), அதன் அடித்தளத்தை "ஆபிரகாம் அமைத்தார்" (புகாரி - பாகம் 4,

அத்தியாயம் 60, எண் 3368). ஆபிரகாம் மக்காவிற்குச் சென்றார் என்பது பைபிளுக்கு முரண்பட்ட கருத்தாகும். உண்மையாகவே ஆபிரகாம் மக்காவிற்குச் சென்றார் என்று ஆதாரத்தோடு நிருபியுங்கள் என்று கேட்டால், இதுவரை யாரும் இதற்கு சரியான பதிலை தரவில்லை. இந்த கட்டுரையை பொருத்தமட்டில், ஆபிரகாம் மக்காவிற்கு சென்றாரா இல்லையா என்பது முக்கியமல்ல, "ஆபிரகாம் மக்காவிற்குச் சென்றார் என்று முஹம்மது நம்பினார்" அதனால் அவர் அப்படி கூறியுள்ளார் என்பது மட்டும் தெரிகிறது. எருசலேமில் முதல் ஆலயத்தை கட்டியது சாலொமோன் ஆவார்.

ஆபிரகாமுக்கும், சாலொமோனுக்கும் இடையே இருப்பது 40 ஆண்டு கால இடைவெளி இல்லை, கிட்டத்தட்ட 1000 ஆண்டுகளுக்கும் அதிகமான இடைவெளியாகும். இந்த முரண்பாடு குர்ஆனின் முரண்பாடு இல்லை, இதை ஏன் நாம் தெரிந்துக்கொள்ளவேண்டுமென்றால், இது ஹதீஸில் காணப்படுகிறது. அதாவது முஹம்மதுவின் மூளை எதனை சரி என்று நம்பியதோ அதுதான் குர்ஆனிலும் உண்டு, ஹதீஸ்களிலும் உண்டு. குர்ஆனில் அனேக சரித்திர பிழைகள் உண்டு, அது போலவே, முஹம்மதுவின் சொல்லும் செயலும் அடங்கிய ஹதீஸிலும் அனேக சரித்திர தவறுகளை காணலாம்.



**கேள்வி 12:** கிஸ்வாஹ் (Kiswah) என்றால் என்ன?

**பதில் 12:** காபா என்பது ஒரு கனசதுர வடியில் உள்ள ஒரு கட்டிடம் என்று பார்த்தோம். இந்த கட்டிடம் மீது போர்த்தப்பட்டிருக்கும் ஆடைக்கு பெயர் தான் கிஸ்வாஹ் அல்லது கிஸ்வா ஆகும். ஒவ்வொரு வருடமும், புனித யாத்திரை செய்யப்படும் நாட்களில், 9ம் நாள் துல்ஹஜ் மாதம், இந்த கிஸ்வா துணி மாற்றப்படுகின்றது. இந்த ஆடை தயாரிப்பிற்காக சௌதி அரசு பல இலட்சங்கள் செலவிடுகிறது.



**கேள்வி 13:** இந்துக்கள் கோயில்களையும், மரங்களையும் சுற்றி வருவது போன்று, முஸ்லிம்கள் ஏன் காபாவை சுற்றி வருகிறார்கள்?

**பதில் 13:** முந்தைய காலங்களில் காபாவைச் சுற்றி மக்கள் நிர்வாணமாக தவாஃப் (சுற்றி வருதல்) செய்ததாக சொல்கிறார்கள். அதன் பிறகு அது நிறுத்தப்பட்டு, இடுப்பில் துண்டை கட்டிக்கொண்டு மக்கள் அதை சுற்றி வந்துள்ளனர்.

ஏன் நீங்கள் இப்படி சுற்றுகிறீர்கள் என்று கேட்டால், அல்லாஹ் குர்ஆனில் சொல்லியுள்ளான், முஹம்மதுவும் அதனை செய்துள்ளார், எனவே நாங்களும் செய்கிறோம் என்றுச் சொல்வார்கள்.

**பார்க்க குர்ஆன் 22:26 & 22:29 மற்றும் புகாரி ஹதீஸ் எண் 328:**

22:26. (நபியே!) இப்ராஹீமை நம்முடைய வீட்டின் சமீபமாக வசிக்கும்படிச் செய்து (அவரை நோக்கி) "நீங்கள் எனக்கு எவரையும் இணையாக்காதீர்கள். என்னுடைய (இந்த) வீட்டை **(தவாஃப்) சுற்றி வருபவர்களுக்கும்**, அதில் நின்று, குனிந்து, சிரம் பணிந்து தொழுபவர்களுக்கும் அதனைப் பரிசுத்தமாக்கி வையுங்கள்" என்று நாம் கூறிய சமயத்தில்,

22:29. பின்னர் (தலைமுடி இறக்கி, நகம் தரித்து, குளித்துத்) தங்கள் அழுக்குகளைச் சுத்தம் செய்து, தங்களுடைய நேர்ச்சைகளையும் நிறைவேற்றி, கண்ணியம் பொருந்திய பழமை வாய்ந்த **ஆலயத்தையும் தவாஃப் செய்யுங்கள்**.

328. 'ஹஜ்ஜின்போது நான் நபி(ஸல்) அவர்களிடம் ஸஃபியாவுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது' எனக் கூறினேன். அதற்கு நபியவர்கள் 'அவள் நம்மைப் பயணத்தைவிட்டு நிறுத்தி விடுவாள் போலிருக்கிறதே! உங்களுடன் அவள் தவாஃப் செய்யவில்லையா?' என்று கேட்டார்கள். '**தவாஃப் செய்துவிட்டார்**' என (அங்கிருந்தோர்) கூறினார்கள். 'அப்படியானால் புறப்படுங்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்' என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

காபா ஒரு விக்கிரத ஆராதனை ஆலயமாக இருந்தது, கோயில்களை சுற்றிவருதல் பழமையான தெய்வ வழிப்பாட்டு முறையாக இருந்ததால், அதையே முஹம்மது இஸ்லாமிலும் புகுத்தியுள்ளார்.

இஸ்லாமுக்கு முன்பாக இருந்த பலபழக்க வழக்கங்கள், விக்கிர ஆராதனை தெய்வ வழிப்பாட்டு முறைகளை முஹம்மது இஸ்லாமின் சட்டமாக மாற்றியுள்ளார், அவைகளில் காபாவை சுற்றுவதும் ஒன்றாகும்.



**கேள்வி 14:** காபாவின் உள்ளே என்ன இருக்கிறது?

**பதில் 14:** காபாவிற்கு உள்ளே 360 கற்சிலைகள் இருந்ததாக இஸ்லாம் சொல்கிறது. அந்த சிலைகளையே முஹம்மதுவும் வணங்கிக்கொண்டு இருந்தார். அவர் அல்லாஹ்வின் நபி என்று மாறிய பிறகு மக்காவை ஆக்கிரமித்தபோது, காபாவில் இருந்த அந்த சிலைகள் அனைத்தையும் அழித்துவிட்டார். இப்போது காபாவில் ஒன்றுமில்லை.

நவம்பர் 2016ம் ஆண்டு கூகுள் இந்த காபாவின் உள்ளே படம் எடுத்து இருக்கிறது, அதனை 360 டிகிரி பார்க்கும் படி செய்துள்ளது. இதனை பார்க்க **இந்த தொடுப்பை** சொடுக்கவும்:

முஸ்லிமல்லாதவர்கள் மக்கா நகருக்குள் சென்று காபாவை பார்க்க முடியாது, எனவே, மேலே உள்ள தொடுப்பை சொடுக்கி ஒரு முறை பார்த்து விடுங்களேன்!



**கேள்வி 15:** ஒரு முஸ்லிம் ஐந்து வேளை தொழுவதற்கு எவ்வளவு நேரம் பிடிக்கும்?

**பதில் 15:** ஒரு முறை தொழுகைக்கு 5 லிருந்து 8 நிமிடங்கள் வரை பிடிக்கும். தொழும் போது சிலர் நிதானமாக, சிலர் சிறிது வேகமாக குர்ஆன் வசனங்களை ஓதுவார்கள். இதனை கவனத்தில் வைத்துசொன்னால், அதிகபட்சமாக 10 நிமிடங்களுக்குள் ஒருவேளை தொழுகை முடிந்துவிடும்.

இது மட்டுமல்லாமல், தொழுவதற்கு முன்பாக உளு என்றுச் சொல்லக்கூடிய "மத சுத்திகரிப்பு" உண்டு, அதில் கை கால்களை, முகங்களை கழுவுவதற்கு இன்னொரு 5 நிமிடங்கள் பிடிக்கலாம்.

கூட்டி கழித்துப் பார்த்தால், ஒரு தொழுகைக்கு 15 நிமிடங்கள் பிடிக்கலாம். ஐந்துவேளை என்று கணக்கிட்டால் 15 x 5 = 75 நிமிடங்கள் ஒரு நாளுக்கு அதிகபட்சமாக பிடிக்கும்.



**கேள்வி 16:** நாய் குறுக்கே வந்தால் தொழுகை முறிந்துவிடுமா?

**பதில் 16:** தொழுகை என்பது மனிதனுக்கும் இறைவனுக்கும் இடையே நடக்கும் ஒரு உரையாடல். மனிதன் தன் உள்ளத்தின் ஆழத்திலிருந்து இறைவனை துதித்து, புகழ்ந்து அவரை போற்றி தன் விண்ணப்பங்களை தெரிவிக்கும் ஒரு செயலாகும். ஒரு வேளை மற்றவர்கள் நம் கவனத்தை முறித்தாலும், இதற்காக இறைவன் கோபித்துக்கொள்ளமாட்டான்.

நாய்கள் குறுக்கே வரக்கூடாது என்று விரும்புகிறவர்கள் வீட்டிற்குள் கதவை மூடிக்கொண்டு தொழட்டும், அதற்காக நாய்களைக் கொள்வது சரியான செயலாகுமா? தொழுகையின் இலக்கணத்தை சரியாக புரிந்துக்கொள்ளாத முஹம்மது எப்படி தீர்க்கதரிசியாக இருக்கமுடியும்?

நாய்கள் தொழுகையை முறித்துவிடும் என்று முஹம்மது கூறியுள்ளார், கறுப்பு நாய்களை கொல்லவேண்டும் என்றும் சொல்லியுள்ளார்.

ஸஹீஹ் முஸ்லிம் எண் 882:

**882. அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:**

அபூதர் அல்கிஃபாரீ (ரலி) அவர்கள், உங்களில் ஒருவர் (திறந்தவெளியில்) தொழ நிற்கும் போது தமக்கு முன்னால் வாகன (ஒட்டக)த்தின் (சேணத்திலுள்ள) சாய்வுக்கட்டை போன்றது இருந்தால் அதுவே அவருக்குத் தடுப்பாக அமைந்துவிடும். சாய்வுக்கட்டை போன்றது இல்லாவிட்டால் கழுதை, பெண் மற்றும் கறுப்புநாய் ஆகியன அவரது (கவனத்தை ஈர்த்து) தொழுகையை முறித்துவிடும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றார்கள். உடனே நான், அபூதர் (ரலி) அவர்களே! சிவப்பு நிறநாய், மஞ்சள் நிற

நாய் ஆகியவற்றை விட்டுவிட்டுக் கறுப்பு நிற நாயை மட்டுமே குறிப்பிடக் காரணம் என்ன? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், என் சகோதரரின் புதல்வரே! நீங்கள் என்னிடம் கேட்டதைப் போன்றே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டேன். **அதற்கு அவர்கள் கறுப்பு நாய் ஷைத்தான் ஆகும்** என்று கூறினார்கள் என்றார்கள்.



**கேள்வி 17:** முஸ்லிம் ஆண்கள் 4 திருமணங்கள் வரை செய்துக்கொள்ளலாம் என்று அனுமதி அளிக்கும் குர்ஆன் வசனம் எது?

**பதில் 17:** குர்ஆன் 4:3ம் வசனம் பலதார மணத்திற்கு அனுமதி அளிக்கிறது

4:3. அநாதை(ப் பெண்களைத் திருமணம் செய்து அவர்)களிடம் நீங்கள் நியாயமாக நடக்க முடியாது என்று பயந்தீர்களானால், உங்களுக்குப் பிடித்தமான பெண்களை மணந்து கொள்ளுங்கள் - **இரண்டிரண்டாகவோ, மும்மூன்றாகவோ, நன்னான்காகவோ;** ஆனால், நீங்கள் (இவர்களிடையே) நியாயமாக நடக்க முடியாது என்று பயந்தால் ஒரு பெண்ணையே (மணந்து கொள்ளுங்கள்), அல்லது உங்கள் வலக்கரங்களுக்குச் சொந்தமான (ஓர் அடிமைப் பெண்ணைக் கொண்டு) போதுமாக்கிக் கொள்ளுங்கள் - இதுவே நீங்கள் அநியாயம் செய்யாமலிருப்பதற்குச் சுலபமான முறையாகும்.



**கேள்வி 18:** நாங்கள் இயேசுவை நம்புகிறோம், நேசிக்கிறோம் என்று முஸ்லிம்கள் கிறிஸ்தவர்களிடம் சொல்கிறார்களே! இதனை கிறிஸ்தவர்கள் எப்படி எடுத்துக்கொள்வது?

**பதில் 18:** நாங்கள் இயேசுவை நேசிக்கிறோம் என்று முஸ்லிம்கள் சொல்கிறார்கள். எந்த இயேசுவை? என்று நாம் கேள்வி கேட்கவேண்டும்?

இந்த **கூகுள் தொடுப்பை** சொடுக்கிப்பாருங்கள், முஸ்லிம்கள் இயேசுவை நேசிக்கிறோம் என்றுச் சொல்லி பொய்ப்பிரச்சாரம் செய்வதை காணலாம்.

இயேசுவின் சீடர்கள் இயேசுவைப் பற்றி நற்செய்தி நூல்களில் விவரித்துள்ளார்கள். இவர்கள் இயேசுவோடு நடந்தார்கள், அவரோடு உட்கார்ந்து சாப்பிட்டார்கள், அவரோடு பேசினார்கள், அவர் செய்த அற்புதங்களை தங்கள் கண்களால் கண்டார்கள். அவர்கள் இயேசுவை முழுவதுமாக அறிந்திருந்தார்கள்.

இதே போல, இயேசுவிற்கு 600 ஆண்டுகளுக்கு பிறகு வந்த குர்-ஆனிலும் இயேசுவைப் பற்றி சிறிது விவரிக்கப்பட்டுள்ளது. குர்-ஆனின் ஆசிரியருக்கு உண்மையான இயேசு யார் என்று தெரியாது, அவர் இயேசுவை பார்த்ததும் இல்லை, இயேசு வாழ்ந்த இடத்திலும் காலத்திலும் அவர் வாழ்ந்தது இல்லை.

இதன் அடிப்படையில் பார்த்தால், குர்-ஆன் சொல்லும் இயேசுவும் பைபிள் விவரிக்கும் இயேசுவும் வித்தியாசமானவர்கள். முஸ்லிம்கள் விளம்பரப்படுத்திய அந்த வாசகம், மக்களை குழப்புவதாக உள்ளது. கிறிஸ்தவர்கள் நம்பும் அதே இயேசுவை நாங்களும் நம்புகிறோம் என்ற பொய்யான அறிக்கையை அவர்கள் பதித்து இருந்தார்கள்.

ஆனால் உண்மையென்ன? பைபிளின் இயேசு ‘தேவ குமாரனாக இருக்கிறார், திரித்துவத்தின் இரண்டாம் நபராக இருக்கிறார், அவர் சிலுவையில் அறையப்பட்டார், மூன்றாம் நாளில் உயிரோடு எழுந்தார், மனித இனத்தின் பாவநிவர்த்தியாக இருந்தார்’. குர்-ஆனின் இயேசு எப்படிப்பட்டவர்? குர்-ஆன் இயேசுவின் திரித்துவ தெய்வீகத்தையும், அவரது மரணம், உயிர்த்தெழுதல் மற்றும் பாவநிவர்த்தியை மறுக்கிறது. இவைகள் வெறும் மேலோட்டமான வித்தியாசங்கள் என்று கருதக்கூடாது, இவைகள் அடிப்படை வித்தியாசங்களாகும். கிறிஸ்துவின் தெய்வீகத்தை மறுத்தால், நீங்கள் உண்மையான இயேசுவை மறுதலிக்கிறீர்கள் என்று அர்த்தம்.

பைபிள் சொல்லும் இயேசுவை முஸ்லிம்கள் நம்பவில்லை? அவர்கள் நம்பும் இயேசு இஸ்லாமிய சாயம் பூசப்பட்ட ஒரு டூப்ளிகேட் இயேசு ஆவார். குர்ஆனில் சொல்லப்பட்ட இயேசு பைபிளில் சொல்லப்பட்ட இயேசு அல்ல.

ஒருவேளை கிறிஸ்தவர்கள் "நாங்கள் முஹம்மதுவை நம்புகிறோம், அவரை மதிக்கிறோம், ஆனால் அவரை ஒரு நபியாக நம்பமாட்டோம்" என்றுச் சொன்னால், முஸ்லிம்கள் ஒப்புக்கொள்வார்களா?

முஸ்லிம்கள் நம்மிடம் வந்து "இஸ்லாம் வெளிப்படுத்தும் முஹம்மதுவை நீங்கள், நம்பவேண்டும், உங்கள் கற்பனையில் உதித்த முஹம்மதுவை நம்பக்கூடாது" என்றுச் சொல்வார்கள். இதே போலத்தான், "பைபிள் வெளிப்படுத்தும் இயேசுவை முஸ்லிம்கள் நம்பவேண்டும், முஹம்மதுவின் கற்பனையில் உண்டான இயேசுவை நம்பக்கூடாது".

முஸ்லிம்களின் கூற்றுக்களைக் கேட்டு ஏமாறவேண்டாம் என்று கிறிஸ்தவர்களை கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் படிக்கவும்: **முஸ்லிம்கள் இயேசுவை நேசிக்கிறார்களா?**



**கேள்வி 19:** முஸ்லிம்கள் தாடியை வைத்து மீசையை எடுக்கிறார்களே! இதன் பின்னணி என்ன?

**பதில் 19:** ஒருவரது மீசையும், தாடியும் அவருக்கே சொந்தம், அவைகளை அவர் என்னவாவது செய்யலாம் தவறில்லை. இதே போல, ஒரு மார்க்கத்தின் அடிப்படையில் நம் வெளிப்புற தோற்றத்தை நாம் மாற்றிக் கொள்ளலாம், இதிலும் தவறில்லை. ஆனால், மற்ற மதத்தவர்களுக்கு எதிராக நாங்கள் நடந்துக்

கொள்கிறோம் என்று காட்டிக்கொள்ள இப்படி செய்வது, கேவலமானதாகும். அமைதி மார்க்கம் என்றுச் சொல்லிக்கொள்ளும் இஸ்லாமின் இறைத்தூதர் இப்படி கேவலமான கட்டளைகளை கொடுத்துள்ளார். சமுதாயத்தின் ஒற்றுமையை குலைக்க, சமுதாய மக்களிடையே ஏற்றத்தாழ்வு மனப்பான்மையை உருவாக்க, மற்ற மதத்தவரிடம் வெறுப்புணர்வை வெளிப்படையாக காட்டிக் கொள்ள வித்திட்டவர் இஸ்லாமிய இறைத்தூதர் முஹம்மது ஆவார். இவைகளை இஸ்லாமின் புனித நூல்கள் புகாரி, முஸ்லிம் மற்றும் அஹ்மத் போன்றவைகளில் காணலாம், இதோ அந்த ஆதாரங்கள்:

**இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

இணைவைப்பாளர்களுக்கு மாறு செய்யுங்கள்: **தாடிகளை வளரவிடுங்கள்**. மீசையை ஒட்ட நறுக்குங்கள். என இப்னு உமர்(ரலி) அறிவித்தார். (ஸஹீஹ் புகாரி எண்: 5892)

**அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

இணைவைப்பாளர்களுக்கு மாறு செய்யுங்கள்: **மீசையை ஒட்ட நறுக்குங்கள். தாடியை வளரவிடுங்கள்**.-இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 434)

நாங்கள், அல்லாஹ்வின் தூதரே, வேதமுடையவர்கள் தங்களது தாடிகளை (ஒட்ட) கத்தரித்துக் கொள்கிறார்கள்; மீசைகளை வளர விடுகிறார்கள் என்று கூறினோம். அதற்கு நபி (ஸல்) அவர்கள், உங்களது மீசைகளை நீங்கள் கத்தரியுங்கள். தாடிகளை வளர விடுங்கள். **வேதமுடையவர்களுக்கு மாறு செய்யுங்கள்** என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர்: அபூ உமாமா (ரலி),**

நூல்: அஹ்மது (21252)

இதர மார்க்க மக்களின் "தீய பழக்கவழக்கங்களை செய்யாமல் இருங்கள்" என்று முஹம்மது கட்டளையிட்டிருக்கவேண்டும். மீசையை வளரவிடுவதில் என்ன தவறு இருக்கிறது? தாடியை ஒட்ட கத்தரிப்பதில் (ட்ரிம் செய்வதில்) என்ன தவறு இருக்கிறது? இதில் அல்லாஹ்விற்கு எதிரான பாவம் என்ன இருக்கிறது? முஹம்மதுவின் ஒரே நோக்கம், முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிராக செயல்படவேண்டும் அவ்வளவு தான். இதைத் தான் முஸ்லிம்கள் இன்றும் செய்துக் கொண்டு இருக்கிறார்கள். என்னே அறியாமை! முஸ்லிம்களின் மனதில் மாற்று மதத்தவரைப் பற்றிய விஷ வெறுப்புணர்வை இப்படிப்பட்ட கட்டளைகள் விதைத்துவிடுமல்லவா?

இப்படிப்பட்ட தீய செயல்களைச் செய்யும்படி முஹம்மது கட்டளையிட்டுள்ளார் என்று பெரும்பான்மையான முஸ்லிம்களுக்குத் தெரியாது. தங்கள் மசூதிகளில்

இமாம்கள், பெரியவர்கள் சொல்கிறார்கள் என்று நம்பி இவர்கள் மீசையை எடுத்து தாடி வைக்கிறார்கள். ஆனால், உண்மையான நோக்கத்தை இஸ்லாமிய நூல்களில் காணலாம்.



**கேள்வி 20:** சில இஸ்லாமிய அறிஞர்கள் ஏன் பல ஹதீஸ்களை புறக்கணிக்கிறார்கள்?

**பதில் 20:** இஸ்லாமிய அடிப்படை நூல்கள் இரண்டு: குர்ஆன் மற்றும் ஹதீஸ் தொகுப்புக்கள்.

ஹதீஸ்களில் இலட்சக்கணக்கான பொய்கள் கலந்துள்ளன. இதனால் தான் முஸ்லிம் அறிஞர்கள் ஹதிஸ்கள் புறக்கணிக்கிறார்கள்.

சன்னி பிரிவு முஸ்லிம்களின் 6 ஹதீஸ் தொகுப்புக்களும் அவைகளில் உள்ள பொய்களும்:

இஸ்லாமிய சமுதாயம் பெரிய அளவில் இரண்டாக பிரிந்துள்ளது, ஒன்று சன்னி (சுன்னி) முஸ்லிம்கள், அடுத்தது ஷியா முஸ்லிம்கள்.

சன்னி முஸ்லிம்கள் தான் பெரும்பான்மை என்பதால், அவர்கள் நம்பும் புத்தகங்களை மட்டுமே கருத்தில் கொள்ளப்படுகின்றது. ஷியா முஸ்லிம்களின் புத்தகங்களை நாம் அதிகமாக ஆய்வு செய்வதில்லை.

சன்னி முஸ்லிம் சமுதாயம் 6 வகையான ஹதீஸ்கள் அதிகார பூர்வமான ஹதீஸ்கள் என்று நம்புகிறார்கள். இவைகளில், முதலாவது புகாரி என்பவரால் தொகுக்கப்பட்ட ஹதீஸ்கள், இரண்டாவதாக, முஸ்லிம் என்பவரால் தொகுக்கப்பட்ட ஹதீஸ்கள். இப்படி, குர்-ஆனுக்கு அடுத்தபடியாக இவ்வதீஸ்கள் முஸ்லிம்களுக்கு வழிகாட்டிகளாக உள்ளன.

கீழ்கண்ட அட்டவணையில் இவ்வதீஸ்கள் பற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன (புகாரி, முஸ்லிம், நஸயி, அபூதாவுத், திர்மிதி, இப்னு மாஜா).

| ஹதீஸ் | தொகுத்தவை | பொய்யானவை | உண்மையானவை | உண்மை சதவிகிதம் (%) | பொய் சதவிகிதம் (%) |
|---|---|---|---|---|---|
| புகாரி | 600000 | 592603 | 7,397 | 1.23% | 98.77% |
| முஸ்லிம் | 300000 | 296000 | 4,000 | 1.33% | 98.67% |
| நஸயி | 500000 | 494730 | 5,270 | 1.05% | 98.95% |
| அபூ தாவுத் | 500000 | 495200 | 4,800 | 0.96% | 99.04% |
| திர்மிதி | 400000 | 396044 | 3,956 | 0.99% | 99.01% |
| இப்னு மாஜா | 400000 | 395659 | 4,341 | 1.09% | 98.91% |

**படம் 3: சன்னி பிரிவினரின் அதிகாரபூர்வமான 6 ஹதீஸ் தொகுப்புக்கள்**

முஹம்மதுவிற்கு பிறகு, 200 – 250 ஆண்டுகள்வரை, வாய் வழியாக முஹம்மது பற்றிய கதைகள் உலாவந்தபடியினால், அல்லாஹ்வின் வஹியில் பல புதிய பொய்யான விவரங்கள் மக்களின் வாய்வழியாக பரப்பப்பட்டது.

உதாரணம்:

**புகாரி:**

புகாரி (கி.பி. 810 - 870) என்ற இஸ்லாமியர் ஹிஜ்ரி 194ல் பிறக்கிறார். பல ஆண்டுகள் பாடுபட்டு, பல இடங்களுக்குச் சென்று ஹதீஸ்களை சேகரித்தார்.

- அவர் சேகரித்த ஹதீஸ்களின் எண்ணிக்கை: 6,00,000 (ஆறு லட்சம்).
- இவைகளில் ஆதாரபூர்வமான, உண்மையான ஹதீஸ்கள் எவைகள் என்று அவர் ஆய்வு செய்து கண்டுபிடித்த எண்ணிக்கை: 7,397
- அப்படியானால், மீதமுள்ள 5,92,603 ஹதீஸ்கள் பொய்யானவை, இட்டுக்கட்டப்பட்டவை, கறைப்படுத்தப்பட்டவை என்று அவர் ஒதுக்கிவிட்டார்.
- இதனை சதவிகிதத்தின் படி பார்த்தால், அவர் சேகரித்தவைகளில் 1.23% தான் உண்மையானவை, 98.77% பொய்யானவையாகும்.

இதே போல, சன்னி முஸ்லிம்கள் நம்பும் ஆறு ஹதீஸ் தொகுப்புக்கள் பற்றி மேற்கண்ட அட்டவணையில் நான் பதித்துள்ளேன்.

(குறிப்பு: திர்மிதி மற்றும் இப்னு மாஜா என்பவர்கள், எத்தனை ஹதீஸ்களை தொகுத்தார்கள் என்ற எண்ணிக்கை எனக்கு கிடைக்கவில்லை என்பதால், மேற்கண்ட அட்டவணையில் நான் 4,00,000 (நான்கு லட்சம்) என்று ஒரு சராசரி எண்ணிக்கை கொடுத்துள்ளேன். எனக்கு சரியான எண்ணிக்கை கிடைத்தால், அதனை இந்த அட்டவணையில்/இக்கட்டுரையில் மாற்றுவேன். வாசகர்களுக்கு இவ்விவரம் தெரிந்தால் எனக்கு தெரிவிக்கவும்).

இப்படி ஃபில்டர் செய்த பிறகும் கூட தற்கால அறிஞர்கள் இன்னும் சில ஹதீஸ்கள் பொய்கள் என்று ஒதுக்கிறார்கள் என்பது ஒரு முக்கியமான இன்னொரு குறிப்பு.



**கேள்வி 21:** ஹதீஸ்கள் இல்லாமல் போனால், இஸ்லாமின் நிலை என்ன? இதனால் அதிக பாதிப்பு உண்டா?

**பதில் 21:** ஹதீஸ்கள் இல்லையென்றால், இஸ்லாம் ஒரு லைட் வெயிட்(Light Weight) மதமாக மாறிவிடும். அதாவது இன்று முஸ்லிம்கள் பின்பற்றுகின்ற பல சட்டங்கள், தொழுகை முறைகள்(Heavy Weight) போன்றவைகள் இல்லாமலேயே போய்விடும்.

**உதாரணத்திற்கு சிலவற்றை இங்கு தருகிறேன்:**

1. முஸ்லிம்களின் ஷஹதா என்றுச் சொல்லக்கூடிய இஸ்லாமிய விசுவாச அறிக்கையை செய்யமுடியாது. "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை, முஹம்மது அல்லாஹ்வின் இறைத்தூதர்" என்ற இந்த வாக்கியம் குர்ஆனில் இல்லை.
2. முஸ்லிம்கள் ஐந்துவேளை தொழமுடியாது, மூன்று வேளை மட்டுமே தொழமுடியும்
3. மக்காவிற்கு ஹஜ் பயணம் செய்யும் போது, அங்கு என்னன்ன செய்யவேண்டும் என்று முஸ்லிம்களுக்கு தெரியாமல் போய்விடும்.
4. இஸ்லாமுடைய தூண் என்றுச் சொல்லக்கூடிய ஜகாத் என்ற தர்மம் எவ்வளவு (சதவிகிதம்%) செய்யவேண்டும், எவைகளைச் செய்யவேண்டும் போன்ற விவரங்கள் குர்ஆனில் இல்லை.

இப்படி சொல்லிக்கொண்டே போனால், காற்றைவிட லேசானதாக இஸ்லாம் மாறிவிடும். ஆகையால், ஹதீஸ்கள் இல்லையென்றால், உடல் இல்லாத எலும்புக்கூடு தான் இஸ்லாம்.



**கேள்வி 22:** ஏன் எல்லா ஹதீஸ்களையும் முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்ளக்கூடாது?

**பதில் 22:** அது எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்?

இன்று நாம் ஹாலிவுட் படங்களில் காண்கின்ற ஸ்பைடர் மேன், பேட்மேன், சூப்பர் மேன் போன்று முஸ்லிம்கள் முஹம்மது மீது இட்டுக்கட்டிய அனைத்துவிட ஸ்டண்ட் விவரங்கள் அனைத்தையும் ஹதீஸ்களில் படிக்கும் சாதாரண முஸ்லிமல்லாத மக்கள், இஸ்லாமை காறிதுப்புவார்களே என்பதற்காக அவைகளை நீக்கினார்கள்.

இதுமட்டுமல்ல, அலிபாபா நாற்பது திருடர்கள் படத்தில் வருவது போன்றும், இன்னும் பல விஞ்ஞானத்திற்கு முரணான விவரங்கள் ஹதீஸ்களில் உள்ளது. அவைகளை ஏற்க இங்கு யாரும் காதில் காலிஃபளவர் வைத்துக்கொண்டு இல்லையே! எனவே முஸ்லிம்கள் அவைகளை நீக்கினார்கள்.

கடைசியாக, ஆபாசம் என்று எடுத்துக்கொண்டால் 'என்னத்தைச் சொல்ல' அவைகளை என் வாயால் சொல்லமாட்டேனுங்கோ, அப்படிப்பட்ட விவரங்கள் ஹதீஸ்களில் உள்ளது. எனவே எந்த முகத்தை வைத்துக்கொண்டு ஹதிஸ்கள அனைத்தையும் முஸ்லிம்கள் ஏற்பார்கள் சொல்லுங்கள்?

ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்றுச் சொல்வார்கள், ஹதீஸ்கள் எப்படி முஸ்லிம்களை பிரிக்கிறது என்பதற்கு ஒரே ஒரு உதாரணம்.

நீங்கள் 18 வயதுக்கு மேற்பட்டவராக இருந்தால், கீழ்கண்ட வீடியோக்களில் முஸ்லிம் அறிஞர்கள் 'ஒரு பெண் ஒரு வாலிபனுக்கு தன் மார்ப்பகத்திலிருந்து குழந்தைக்கு பால் ஊட்டுவது போன்று பாலை குடிக்க கொடுத்து, அவனை தன் மகனைப்போல ஆக்கிக்கொள்வது எப்படி என்று முஹம்மது சொன்னதாக வரும் ஹதீஸ் பற்றிய விவாதம் புரிவதைப் பாருங்கள்". ஒரு பிரிவினர் ஆதரிப்பதையும், இன்னொரு பிரிவினர் எதிர்ப்பதையும் பாருங்கள்.

- **பால் குடி சம்பந்தமான கட்டுக்கதையை ஆதரிக்கும் அறிவீனர்களிடம் சில கேள்விகள்**
- **பால் குடி சட்டம் சம்மந்த்தமான ஹதீஸை விளங்க தெரியாத tntj**
- **சாலிம் (ரலி)அவர்களின் பால் குடி ஹதீஸ் குரானுக்கு எதிரானதா?ஆபாசமானதா?~| மௌலவி முஜாஹித் இப்னு ரஸீன்**
- **மறுக்கப்படும்-பால்குடி-ஹதீஸ்-நிலைப்பாடு-என்ன?-QA2**

இத்தனைக்கும் இந்த ஹதீஸ் உண்மையானதென்று இன்றுவரை இஸ்லாமிய உலகம் ஏற்றுக்கொண்ட ஒன்று தான்.



**கேள்வி 23:** ஷரியா என்றால் என்ன?

**பதில் 23:** ஷரியா என்றால் 'சட்டம்' என்று பொருள். இது இஸ்லாமிய சட்டத்தைக் குறிக்கிறது. இஸ்லாம் ஆட்சி செய்யும் நாடுகளில் ஷரியா சட்டம் அமுலில் இருக்கும்.

இஸ்லாமிய ஷரியாவை, குர்ஆன் மற்றும் ஹதிஸ்களின் அடிப்படையில் முஸ்லிம் அறிஞர்கள் உருவாக்குகிறார்கள்.

இந்திய பீனல் கோட் என்றுச் சொல்கிறோமில்லையா! அது போன்று இஸ்லாமிய நாடுகளில் இஸ்லாமிய அரசு பின்பற்றக்கூடிய சட்டம் தான் ஷரியா. மனிதன் செய்கின்ற குற்றங்களுக்கு தண்டனைகள் குர்ஆன் மற்றும் ஹதீஸ்களின்

அடிப்படையில், அதாவது முஹம்மதுவின் வாழ்க்கையின் அடிப்படையில் உருவாக்கப்படுவது தான் ஷரியா.

குறிப்பு: இன்றிலிருந்து 1400 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ஒரு மனிதரின் வாழ்க்கையை சார்ந்து இன்று சட்டம் இயற்றி அதனை நாம் பின்பற்றினால், இது சாத்தியப்படுமா? என்ற கேள்வி தோன்றலாம். அதனால் தான் இன்றைய படித்த உலகம் இஸ்லாமை மிகவும் கடுமையாக விமர்சிக்கிறது.

ஒரு உதாரணத்தைப் பாருங்கள்: ஒருவன் திருடினால் அவன் கை வெட்டப்படும். இன்னொருவன் ஒரு பெண்ணை கற்பழித்துவிட்டால், அவனுக்கு சிறை தண்டனை கொடுத்து, அபராதமாக பணத்தை வசூலிப்பார்கள்.

பணத்தை திருடியவன் வாழ்நாள் முழுவதும் முடவனாக தன் குடும்பத்தை காப்பாற்ற முடியாதவனாகவும், தனக்கும் தன் சமுதாயத்திற்கும் ஒரு பாரமாகவும் மாறிவிடுகின்றான். ஆனால், ஒரு பெண்ணை கற்பழித்து அவள் வாழ்வை கெடுத்தவன், அபராதத்தை கட்டிவிட்டு, சில நேரங்களில் தண்டனையை அனுபவித்துவிட்டு, இரண்டு கைகளை ஆட்டிகொண்டு ஹாயாக வாழுகின்றான். இதனை பார்க்கும் அறிவுள்ள மனிதன் என்ன செய்வான்? இஸ்லாமை விமர்சிப்பானா இல்லையா? இதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?



**கேள்வி 24:** "வெள்ளிக்கிழமை தொழுகையின் போது, இமாம் செய்யும் பிரசங்கத்திற்கு என்ன பெயர்?

**பதில் 24:** பெரும்பான்மையாக வெள்ளிக்கிழமை தொழுகையின்போது, மக்கள் மசூதிகளில் கூடி இருக்கும் போது, மசூதியின் இமாம் செய்யும் பிரசங்கத்தை குத்பா என்பார்கள். இதே போன்று, ரமலான் மற்றும் பக்ரீத் பண்டிகையின் போதும், இமாம்கள் செய்யும் பிரசங்கத்தையும் குத்பா என்பார்கள்.



**கேள்வி 25:** ஜம் ஜம் கிணறு (தண்ணீர்) எங்கு இருக்கிறது

**பதில் 25:** மக்காவில் உள்ள இந்த கிணற்றிலிருந்து தான் ஆகார் தண்ணீர் குடித்து தன்னுடைய மற்றும் தன் மகன் இஸ்மாயிலுடைய தாகத்தை தணித்துக்கொண்டார் என்று இஸ்லாமியர்கள் நம்புகிறார்கள். அதாவது ஆபிரகாம் ஆகாரையும் இஸ்மவேலையும் வீட்டை விட்டு அனுப்பிவிட்ட போது இந்த நிகழ்ச்சி நடந்ததாக இஸ்லாமியர்கள் நம்புகிறார்கள். முஸ்லிம்கள் ஒவ்வொரு ஆண்டும் "மக்காவிற்கு புனிதப்பயணம் (ஹஜ்)" செய்யும் போது இந்த நிகழ்ச்சியை நினைவு கூறுகிறார்கள்.

மேலும் ஹஜ் செய்து திரும்பும் முஸ்லிம்கள், இந்த ஜம் ஜம் தண்ணீரை தங்கள் நாட்டிற்கு (வீட்டிற்கு) கொண்டு வருகிறார்கள். அதனை தங்கள் குடும்பத்தில் உள்ளவர்களுக்கும் உறவினர்களுக்கும் கொடுக்கிறார்கள். இந்த தண்ணிரை குடித்தால் நோய்கள் தீரும் என்றும் முஸ்லிம்கள் நம்புகிறார்கள்.



**கேள்வி 26:** ஆரம்பத்தில் முஸ்லிம்கள் 50 முறை தொழுதுக்கொண்டு இருந்தார்களா?

**பதில் 26:** ஒரு முறை முஹம்மதுவை ஜிப்ரீல் தூதன் ஏழாம் வானம் வரைக்கும் அழைத்துச் சென்றாராம். அங்கு அல்லாஹ் முஸ்லிம்களுக்கு 50 முறை தொழவேண்டும் என்று கட்டளையிட்டானாம், ஆனால், மோசே முஹம்மதுவை சந்தித்து, 50 முறை ஒரு நாளுக்கு தொழுவது முடியாத காரியம் எனவே குறைத்துத் தரும்படி அல்லாஹ்விடம் கேள் என்றுச் சொல்ல, முஹம்மதுவும் கேட்டாராம், உடனே அல்லாஹ் அதனை 40 முறையாக குறைத்தாராம். மறுபடியும் மோசே இதுவும் அதிகம் தான் மேலும் குறைக்கச்சொல் என்று சொல்ல, முஹம்மது மறுபடியும் அல்லாஹ்விடம் சென்று கேட்டு, 30 முறையாக குறைத்துக்கொண்டாராம். மறுபடியும் மோசே முஹம்மதுவிற்கு அறிவுரை கூற தொழுகைகள், 20, 10, மற்றும் 5 என்று கடைசியாக குறைக்கப்பட்டதாம். இப்போது கேள்வி என்னவென்றால், ஆதியாகமத்தில் ஆபிரகாம் தேவனிடம் வேண்டிக்கொண்ட நிகழ்ச்சியை அப்படியே காபி அடித்து மாற்றி முஹம்மது கூறியுள்ளார். இதுமாத்திரமல்ல, மோசேக்கு இருக்கின்ற அறிவு கூட அல்லாஹ்விற்கும், முஹம்மதுவிற்கும் இல்லாமல் போனதுதான் ஆச்சரியம். மக்களின் நிலையை மோசே புரிந்துக்கொண்டது போல அல்லாஹ் புரிந்துக்கொள்ளவில்லை. முஹம்மது கேள்விப்பட்ட பைபிளின் நிகழ்ச்சிகளை தனக்கு தோன்றியபடி மாற்றி கூறியுள்ளார்.

பார்க்க: **ஆதியாகமம் 18:16-33, ஸஹீஹ் புகாரி 3207 & 349**

3207. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நான் இறையில்லம் கஅபாவில் இருமனிதர்களுக்கிடையே (பாதி) தூக்கமாகவும் (பாதி) விழிப்பாகவும் இருந்தபோது நுண்ணறிவாலும் இறைநம்பிக்கையாலும் நிரப்பப்பட்ட தங்கத் தட்டு ஒன்று என்னிடம் கொண்டு வரப்பட்டது. என்னுடைய நெஞ்சம் காறையெலும்பிலிருந்து அடி வயிறு வரை பிளக்கப்பட்டது. பிறகு ஸம்ஸம் நீரினால் என் வயிறு கழுவப்பட்டது. பிறகு, (என் இதயம்) நுண்ணறிவாலும் இறைநம்பிக்கையாலும் நிரப்பப்பட்டது. மேலும், கோவேறுக் கழுதையை விடச் சிறியதும் கழுதையை விடப் பெரியதுமான 'புராக்' என்னும் (மின்னல் வேக) வாகனம் ஒன்றும் என்னிடம் கொண்டு வரப்பட்டது. நான் (அதில் ஏறி) ஜிப்ரீல்(அலை) அவர்களுடன் சென்றேன். . . .

பிறகு என் மீது ஐம்பது (நேரத்) தொழுகைகள் கடமையாக்கப்பட்டன. நான் முன்னேறிச் சென்று இறுதியில் மூஸா(அலை) அவர்களை அடைந்தேன். அவர்கள், 'என்ன செய்தாய்?' என்று கேட்டார்கள். நான், 'என் மீது ஐம்பது தொழுகைகள் கடமையாக்கப்பட்டுள்ளன" என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள், 'எனக்கு மக்களைப் பற்றி உங்களை விட அதிகமாகத் தெரியும். நான் பனூ இஸ்ராயீல்களுடன் பழகி நன்கு அனுபவப்பட்டுள்ளேன். உங்கள் சமுதாயத்தினர் (இதைத்) தாங்க மாட்டார்கள். எனவே, உங்களுடைய இறைவனிடம் திரும்பிச் சென்று அவனிடம் (தொழுகைகளின் எண்ணிக்கையைக்) குறைத்துத் தரும்படி கேளுங்கள்" என்றார்கள். நான் திரும்பச் சென்று இறைவனிடம் (அவ்வாறே) கேட்டேன். அதை அவன் நாற்பதாக ஆக்கினான். பிறகும் முதலில் சொன்னவாறே நடந்தது. மீண்டும் (சென்று நான் கேட்க, இறைவன் அதை) முப்பதாக ஆக்கினான். மீண்டும் அதைப் போன்றே நடக்க (அதை) இறைவன் இருபதாக ஆக்கினான். நான் மூஸா(அலை) அவர்களிடம் சென்றபோது அவர்கள் முன்பு போன்றே சொல்ல (நான் இறைவனிடம் மீண்டும் குறைத்துக் கேட்க) **அவன் அதை ஐந்தாக ஆக்கினான்**. பிறகு நான் மூஸா(அலை) அவர்களிடம் சென்றேன். அவர்கள், 'என்ன செய்தாய்?' என்று கேட்க, 'அதை இறைவன் ஐந்தாக ஆக்கிவிட்டான்" என்றேன். அதற்கு அவர்கள், 'முன்பு சொன்னதைப் போன்றே (இன்னும் குறைத்துக் கேட்கும்படி) சொன்னார்கள். அதற்கு, 'நான் (இந்த எண்ணிக்கைக்கு) ஒப்புக் கொண்டேன்" என்று பதிலளித்தேன். அப்போது (அல்லாஹ்வின் தரப்பிலிருந்து அசரீரியாக), 'நான் என் (ஐந்து வேளைத் தொழுகை எனும்) விதியை அமல்படுத்தி விட்டேன். என் அடியார்களுக்கு (ஐம்பது வேளைகளிலிருந்து ஐந்து வேளையாகக் குறைத்து கடமையை) லேசாக்கி விட்டேன். ஒரு நற்செயலுக்குப் பத்து நன்மைகளை நான் வழங்குவேன்" என்று அறிவிக்கப்பட்டது.



**கேள்வி 27:** முஸ்லிம்களின் அன்னைகள் என்று அழைக்கப்படுபவர்கள் யார்?

**பதில் 27:** முஹம்மதுவின் மனைவிகள் அனைவரும் முஸ்லிம்களுக்கு அன்னைகளாவார்கள் என்று இஸ்லாம் சொல்கிறது?

குர்ஆன் 33:6. இந்த நபி முஃமின்களுக்கு அவர்களுடைய உயிர்களைவிட மேலானவராக இருக்கின்றார்; இன்னும், அவருடைய மனைவியர் அவர்களுடைய தாய்மார்களாக இருக்கின்றனர். (ஒரு முஃமினின் சொத்தை அடைவதற்கு) மற்ற முஃமின்களை விடவும், (தீனுக்காக நாடு துறந்த) முஹாஜிர்களை விடவும் சொந்த பந்துக்களே சிலரைவிட சிலர் நெருங்கிய (பாத்தியதையுடைய)வர்களாவார்கள்; இது தான் அல்லாஹ்வின் வேதத்திலுள்ளது; என்றாலும், நீங்கள் உங்கள் நண்பர்களுக்கு நன்மை செய்ய நாடினால் (முறைப்படி செய்யலாம்) இது வேதத்தில் எழுதப்பட்டுள்ளதாகும்.

அப்படியானால், முஸ்லிம்களின் தந்தை முஹம்மது தானே! என்று நீங்கள் எண்ணிக்கொள்ளாதீர்கள், இங்கு தான் இஸ்லாம் சிக்ஸர் அடிக்கிறது, நாம்

பொதுவாக நினைப்பது போன்று இஸ்லாம் செயல்படாது. முஹம்மது யாருக்கும் தந்தை ஆகமாட்டார், ஏன் இப்படி என்று உங்கள் முஸ்லிம் நண்பர்களிடம் கேட்டுப்பாருங்கள்.

குர்ஆன் 33:40. **முஹம்மது(ஸல்) உங்கள் ஆடவர்களில் எவர் ஒருவருக்கும் தந்தையாக இருக்கவில்லை;** ஆனால் அவரோ அல்லாஹ்வின் தூதராகவும், நபிமார்களுக்கெல்லாம் இறுதி (முத்திரை)யாகவும் இருக்கின்றார்; மேலும் அல்லாஹ் எல்லாப் பொருள்கள் பற்றியும் நன்கறிந்தவன்.



**கேள்வி 28:** இஸ்லாம் ஒரு நாள் உலகை ஆளும் என்று அடிக்கடி முஸ்லிம்கள் சொல்வதை கேட்கமுடிகின்றது இது உண்மையா?

**பதில் 28:** இன்று பல கோடி முஸ்லிம்களை 'இஸ்லாம் ஒரு நாள் உலகை ஆளும்' என்ற நம்பிக்கை ஆட்டிப்படைத்துக்கொண்டு இருக்கிறது. இந்த நம்பிக்கையினால், சில முஸ்லிம்கள் ஒரு கையில் துப்பாக்கியை பிடித்துக்கொண்டும், இன்னொரு கையில் குர்-ஆனை பிடித்துக்கொண்டும், உலகை ஒருநாள் இஸ்லாம் ஆளும் என்று கோஷமிட்டுக்கொண்டு இருக்கிறார்கள். இன்னும் சிலர் உடலில் வெடிகுண்டுகளை கட்டிக்கொண்டு "அந்த நாளுக்கான ஆயத்தங்களை இன்று நாங்கள் செய்ய ஆரம்பித்துவிட்டோம்" என்று சொல்லிக்கொண்டு, பட்டனை சட்டென்று அழுத்தி, குண்டுகளை வெடிக்கச்செய்து தாங்களும் அழிந்து மற்றவர்களையும் அழித்துக்கொண்டு இருக்கிறார்கள். இஸ்லாமிய ஆட்சியின் கீழ் உலகை கொண்டுவரவேண்டும் என்ற தீராத ஆசையால் தான் அன்று அல்கெய்தா, இன்று ஐஎஸ்ஐஎஸ் ஆட்டம் போட்டுக்கொண்டு இருக்கிறது. தீவிரவாதி முஸ்லிம்களாகிய பக்தாதி முதற்கொண்டு, அமைதியை விரும்பும் ரஹீம் பாய் வரை 'இஸ்லாம் ஒரு நாள் உலகை ஆளும்' என்ற நம்பிக்கையை அடிமனதில் வைத்துக்கொண்டு தான் வாழ்கிறார்கள். ஆனால், முஹம்மதுவின் ஒரு குறிப்பிட்ட முன்னறிவிப்பு, உலகை இஸ்லாம் ஆளாது, அதற்கு பதிலாக, ஒரு பாம்பு தனக்கு ஆபத்து வரும் போது எப்படி தன் புற்றுக்குச் சென்று அபயம் பெறுமோ (தப்பித்துக்கொள்ளுமோ), அது போல இஸ்லாமும் "தான் உருவான இடத்திற்கே சென்று அபயம் பெரும்" என்று சொல்கிறது.

இது உண்மையா?

இந்த விவரம் இஸ்லாமிய ஆதாரநூல்களான ஹதீஸ்களில் காணப்படுகின்றது.

**1) குறைந்த எண்ணிக்கையில் தொடங்கி, அதே எண்ணிக்கையில் முடிவடையும் இஸ்லாம்:**

இஸ்லாம் ஒரு மனிதரோடு தொடங்கியது, அந்த மனிதர் முஹம்மது ஆவார். அவருக்கு அடுத்து, அவரது மனைவி கதிஜா அவர்கள், அதன் பிறகு இதர

நண்பர்கள், உறவினர்கள் என்று பலர் ஏற்றனர். மதினாவிற்கு முஹம்மது ஹிஜ்ரி செய்யும் போது கூட சில நூறு பேரை மட்டுமே இஸ்லாம் சம்பாதித்து இருந்தது.

**கீழ்கண்ட ஹதீஸ்களில் இஸ்லாமின் எதிர்காலம் பற்றி முஹம்மது என்ன சொல்கிறார் என்பதை கவனியுங்கள்:**

முஸ்லிம் ஹதீஸ் எண்: 232, 233, 234 மற்றும் புகாரி ஹதீஸ் எண்: 1876

**232. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

இஸ்லாம் குறைந்த எண்ணிக்கை கொண்ட மக்களிடையேதான் தோன்றியது. அது தோன்றிய பழைய நிலைக்கே திரும்பிச்செல்லும். அந்தக் குறைந்த எண்ணிக்கையிலான மக்களுக்கு சுபம் உண்டாகட்டும். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

இதைப் பற்றிய ஆய்வு கட்டுரையை இங்கு படிக்கவும்: **இஸ்லாம் உலகை ஆளுமா? (அ) உலகிலிருந்து அழிந்தே போகுமா? முஹம்மதுவின் முன்னறிவிப்பு என்ன?**



**கேள்வி 29:** முஸ்லிம்களும் இயேசுவை நம்புவதினால், அவர்களுக்கு நற்செய்தி அறிவிக்கவேண்டியதில்லை அல்லவா?

**பதில் 29:** இல்லை, முஸ்லிம்களுக்கு உண்மையான இயேசுவைத் தெரியாது, அவர்களுக்கு தெரிந்ததெல்லாம், இயேசுவைப் பற்றிய ஒரு பொய்யான பிம்பம் தான். குர்ஆனிலும், ஹதீஸ்களிலும் சொல்லப்பட்ட இயேசு ஒரு பொய்யான இயேசு ஆவார். அப்படிப்பட்டவர் உலகில் பிறக்கவே இல்லை.

இயேசுவிடம் வந்து அவரைப் பார்த்து நீர் ஒரு நபி என்று சொல்பவர்களுக்கு இரட்சிப்பு இல்லை. யார் இயேசுவை 'தேவனுடைய வார்த்தையாகவும், தங்களுக்காக சிலுவையில் மரித்து மறுபடியும் உயிரோடு எழுந்தார் என்றும், மறுபடியும் அவர் வருவார் என்றும் நம்புகிறார்களோ' அவர்கள் தான் உண்மையான இயேசுவை விசுவாசித்தவர்கள் ஆவார்கள்.

இயேசுவைப் பற்றி முஸ்லிம்கள் இப்படி நம்புவதில்லை, எனவே அவர்களுக்கு நற்செய்தியை அறிவிக்கவேண்டும், அவர்களையும் தேவனுடைய இராஜ்ஜியத்திற்கு பங்காளிகளாக மாற்ற முயற்சிக்கவேண்டும். இதற்காகத் தான் இந்த கேள்வி பதில் தொடர்களும், இதர கட்டுரைகளும் எழுதப்படுகின்றன.

**யோவான் 3:15-18**

15. தன்னை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு, உயர்த்தப்படவேண்டும்.

16. தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார்.

17. உலகத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்படி தேவன் தம்முடைய குமாரனை உலகத்தில் அனுப்பாமல், அவராலே உலகம் இரட்சிக்கப்படுவதற்காகவே அவரை அனுப்பினார்.

18. அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான்; விசுவாசியாதவனோ தேவனுடைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்தில் விசுவாசமுள்ளவனாயிராதபடியினால், அவன் ஆக்கினைத்தீர்ப்புக்குட்பட்டாயிற்று.



**கேள்வி 30:** உலகிலேயே முஹம்மது தான் மிகவும் நல்லவர் என்று என் முஸ்லிம் நண்பர் சொல்கிறார், இது உண்மையா?

**பதில் 30:** ஒருவரை(முஹம்மதுவை அல்லது வேறு யாராக இருந்தாலும்) நல்லவர் என்று நாம் சொல்லவேண்டுமென்றால் குறைந்தபட்சம் நாம் கீழ்கண்டவைகளை செய்திருக்கவேண்டும்:

**a) அந்த நபரைப் பற்றிய புத்தகங்களை படிப்பது:**

அவரைப் பற்றிய அனைத்து விவரங்களையும் அறிந்து இருக்கவேண்டும். முஹம்மதுவைப் பற்றி குர்ஆனில், ஹதீஸ்களில், சரித்திர நூல்களில் சொல்லப்பட்டவைகள் அனைத்தையும் படித்து இருக்கவேண்டும்? உங்கள் முஸ்லிம் நண்பரிடம் இந்த விவரங்களைக் கேட்டுப்பாருங்கள், நிச்சயம் இல்லை என்று பதில் வரும்.

**b) அவரோடு கூட இருந்து கவனிப்பது:**

பொதுவாக ஒருவரைப் பற்றி எழுதப்படும் சரித்திரங்கள், புத்தகங்களில் 100% உண்மை இருக்கும் என்றும் சொல்லமுடியாது. சரித்திர ஆசிரியர்கள், அந்த ஒருவரை ஆதரிப்பவர்கள் சிறிது இங்கும் அங்குமாக சில பொய்யான அல்லது அதிகபடியான விவரங்களை சொந்தமாக சேர்த்தும் எழுதுவார்கள். எனவே, ஒருவரோடு கூட இருந்து பார்த்தால் தான் அவர் உண்மையாகவே நல்லவரா இல்லையா என்பது புரியும்.

**c) உள்ளத்தில் இருப்பதை யார் காண்பார்கள்?**

ஒருவேளை நாம் ஒருவரோடு கூட இருந்து பக்கத்திலிருந்து கவனித்தாலும், அவரது தீய காரியங்கள் வெளிப்படாமல் அவர் பார்த்துக்கொண்டால், அது எப்படி நமக்குத் தெரியும்? மனதில் இருப்பதை யார் பார்க்கமுடியும்?

மேலும், "நல்லவர்", "கெட்டவர்" என்ற வார்த்தைகளின் வரையறையை யார் நிர்ணயிப்பது? ஒரு திருடன் கூட தன் குடும்பத்திற்கு நல்லவனே? மற்றவர்களுக்குத் தான் அவன் தீயவன். ஒருவன் எல்லோரிடமும், ஒரு காலத்தில், நல்லவனாக வாழலாம். ஆனால், எல்லோரிடமும் எல்லா காலத்திற்கும் நல்லவனாக வாழமுடியாது. எனவே பொத்தம் பொதுவாக 'நல்லவன்', 'கெட்டவன்' என்றுச் சொல்வது, பயனில்லாத வார்த்தைகள்.

**d) உலகில் இருக்கும் அனைத்து மனிதர்களைப் பற்றி அறிந்துக்கொள்ளவேண்டும்**

உலகத்திலேயே 'என் அப்பா தான் நல்லவர்' என்று நான் சொன்னால், இது ஒரு வேடிக்கையாக எடுத்துக் கொள்ளவேண்டிய விஷயம், இதனை சீரியஸாக எடுத்துக் கொள்ளமுடியாது. ஏனென்றால், "உன் அப்பா பற்றி உனக்குத் தெரியும், உலகில் உள்ள இதர அப்பாக்கள் பற்றி உனக்கு எப்படித் தெரியும்?" என்ற கேள்வி எழும். உலகில் உள்ள மற்றவர்கள் பற்றி ஒன்றுமே தெரியாத நீ எப்படி, உன் அப்பாவை அவர்களோடு ஒப்பிட்டுச் சொல்கிறாய்? இது அறிவுள்ளவர்கள் சொல்லும் கூற்று அல்ல. "என் அப்பா எனக்கு நல்லவராக இருக்கிறார்" என்றுச் சொல்லிக்கொள்ளலாமே தவிர, அவரை உலக மக்களோடு ஒப்பிடக்கூடாது.

இதே போலத்தான், முஸ்லிம்களும் "முஹம்மது எங்கள் பார்வையில் நல்லவர் என்றுச் சொல்லவேண்டுமே ஒழிய, உலகத்திலுள்ள அனைத்து மக்களைக் காட்டிலும், என் நபி தான் ரொம்ப நல்லவர்" என்று சொல்லும்போது மற்றவர்களுக்கு எறிகிறது.

**முஹம்மது நல்லவரா கெட்டவரா?**

ஒருவர் நல்லவரா, கெட்டவரா என்ற கேள்வி தேவையற்றது மற்றும் குழப்பம் தரக்கூடியது என்பதை மேலே கண்டோம்.

ஆனால், ஒருவரைப் பற்றி அவரை சார்ந்துள்ள மக்கள் எழுதும் புத்தகங்களை படித்தால், குறைந்தபட்சம் அவர் நல்லவர் என்ற ஒரு பிம்பம் வருகிறதா? என்று பார்க்கவேண்டும். அதன் பிறகு "ஆமாம், இன்னின்ன புத்தகங்களில் சொல்லப்பட்டதின்படி அவர் நல்லவர்/கெட்டவர்" என்று சொல்லமுடியுமல்லவா?

இதன் அடிப்படையில், முஹம்மது பற்றிய புத்தகங்கள் மூன்று பிரிவுகளாக நம்மிடம் உள்ளது: குர்ஆன், ஹதீஸ்கள், அவரது வாழ்க்கை சரித்திர புத்தகங்கள்.

இந்த மூன்று புத்தகங்களையும் ஒரு நபரிடம் கொடுத்து, விருப்பு வெறுப்பு இன்றி நேர்மையாக அவைகளை படித்து, முஹம்மது எப்படிப்பட்டவர் என்று

சொல்லமுடியுமா? என்று கேட்டால் என்ன பதில் அவர் சொல்லுவார்? இந்த சவாலை முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்ளத் தயாரா?

1. குர்ஆனின் படி தன் வளர்ப்பு மகனின் மனைவியை முஹம்மது திருமணம் செய்தார்.
2. 10க்கும் அதிகமான திருமணங்களை முஹம்மது செய்துள்ளார்.
3. தனக்கு 53 வயது ஆகும் போது, 9 வயது சிறுமியை திருமணம் செய்தார்.
4. தன்னை எதிர்த்தவர்களை கொன்றார்.
5. வழிப்பறி கொள்ளைகளில் ஈடுபட்டார், இது பழிக்கு பழி வாங்கின நிகழ்வுகள் என்பார்கள் முஸ்லிம்கள்.
6. அரேபியாவை சுற்றியுள்ள நாடுகள் மீது வலியச் சென்று போர் செய்து, தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தார்.
7. திருமண பந்தத்திற்கு வெளியே பெண்களை கற்பழிக்க முஹம்மது அனுமதி அளித்தார்.
8. மக்களை மூட பழக்கவழக்கங்களைச் செய்யும் படி, விஞ்ஞானத்திற்கு எதிரான காரியங்களை நம்பும்படி செய்தார்.
9. போரில் பிடிபட்ட பெண்களை கற்பழித்தார், முஸ்லிம்கள் கற்பழிக்க அனுமதி அளித்தார்.

இன்னும் சொல்லிக்கொண்டே போகலாம். இவைகளையெல்லாம் முஸ்லிம்கள் எழுதிய புத்தகங்களிலிருந்து வெளிப்படும் அவருடைய செயல்கள் ஆகும்.

இவைகளை அறியும் ஒருவர் முஹம்மதுவைப் பற்றி என்ன கூறுவார்? அவர் நல்லவர் என்று கூறுவாரா?

இவ்விவரங்கள் ஒவ்வொன்றிற்கும் முஸ்லிம்கள் ஒரு காரணத்தைச் சொல்வார்கள், ஆனால் முஸ்லிமல்லாதவருக்கு அக்காரணங்கள் முட்டாள்தனமான வாதங்களாக தோன்றும்.

எனவே, ஒரு நபரைப் பார்த்து 'இவர் நல்லவர்/கெட்டவர்' என்றுச் சொல்லும்போது, அதன் பொருள் என்னவென்றால், 'அந்த நபருக்கு இவர் நல்லவர் போல அல்லது கெட்டவர் போல தெரிகின்றார்' என்பதாகும். ஆனால், அது உண்மையாக இருக்கலாம் இல்லாமலும் போகலாம்.

முஸ்லிமல்லாதவர்கள் "முஹம்மது ஒரு கெட்டவர்" என்றுச் சொன்னால், "அவர்கள் பார்வையில், அவர்களுக்கு கிடைத்துள்ள விவரங்களின்படி முஹம்மது கெட்டவர் ஆவார்". ஆனால், அதுவும் அவர்களுக்கு கிடைத்த விவரங்களின் படி தான் அவர்கள் சொல்கிறார்கள் என்று பொருள். அது உண்மையாக இருக்கலாம் இல்லாமலும் போகலாம். அவர்களுக்கு கிடைத்த விவரங்கள் என்னவென்று நாம் கவனித்து தான் முடிவு எடுக்கமுடியும்?

சரி, கடைசியாக ஒரு கேள்வி, குர்ஆன் ஹதீஸ்களின் மூலமாக மேற்கண்ட விவரங்கள் முஹம்மதுவைப் பற்றி நமக்கு கிடைத்துள்ளன. இவைகளின் படி முஹம்மது எப்படிப்பட்டவர் என்று முஸ்லிம்களால் சொல்லமுடியுமா?



**கேள்வி 31:** இஸ்லாமில் கண் திருஷ்டி உண்டா?

**பதில் 31:** கண் திருஷ்டி உண்டு என்று இஸ்லாம் நம்பச் சொல்கிறது, முஸ்லிம்களும் நம்பிக்கொண்டு இருக்கிறார்கள். கிறிஸ்தவத்தில் கண்திருஷ்டி என்பது இல்லை. அது ஒரு மூட பழக்க வழக்கமாகும்.

**கண்திருஷ்டி உண்மையா?**

ஹதீஸ் புகாரி நூல் 5738.

ஆயிஷா(ரலி) கூறினார்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள் **கண்ணேறுவி(ன் தீயவிளைவி)லிருந்து** விடுபட ஓதிப்பார்த்துக் கொள்ளும்படி 'கட்டளையிட்டார்கள். (மேலும் பார்க்க 5740 & 5944)

**முகத்தில் படர்தாமரைக்கு காரணம் கண்திருஷ்டியா?**

ஹதீஸ் புகாரி நூல் 5739.

உம்மு ஸலமா(ரலி) கூறினார் : நபி(ஸல்) அவர்கள் என் வீட்டில் ஒரு சிறுமியைப் பார்த்தார்கள். அவளுடைய மு**கத்தில் கருஞ்சிவப்பான படர்தாமரை ஒன்று இருந்தது**. நபி(ஸல்) அவர்கள், 'இவளுக்கு ஓதிப்பாருங்கள். ஏனெனில், **இவள் மீது கண்ணேறுபட்டிருக்கிறது**' என்று கூறினார்கள்.

**முஹம்மதுவின் முடி தோய்க்கப்பட்ட நீரினால் கண்திருஷ்டி போகுமா?**

ஹதீஸ் புகாரி நூல் 5896.

உஸ்மான் இப்னு அப்தில்லாஹ் இப்னி மவ்ஹப்(ரஹ்) அவர்கள் அறிவித்தார். நபி(ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு ஸலமா(ரலி) அவர்களிடம் என்னை என் குடும்பத்தார் ஒரு தண்ணீர்ப் பாத்திரத்தைக் கொடுத்து அனுப்பிவைத்தார்கள். (உம்மு ஸலமா ஒரு சிமிழைக் கொண்டுவந்தார்கள்.) அது வெள்ளியால் ஆனதாக இருந்தது. அதில் நபி(ஸல்) அவர்களின் முடிகளில் ஒரு முடி இருந்தது. (பொதுவாக யாரேனும்) **ஒருவருக்கு கண்ணேறு அல்லது நோய் ஏற்பட்டால்**, அவர் தம் நீர் பாத்திரத்தை உம்மு ஸலமா(ரலி) அவர்களிடம் அனுப்பி வைப்பார். (**அவர்கள் தம்மிடமிருந்த நபியவர்களின் முடியைத் தண்ணீருக்குள் முக்கி அனுப்புவார்கள். அதை நோயாளி குடிப்பார்.**) நான் அந்தச் சிமிழை எட்டிப் பார்த்தேன். (அதில்) சில சிவப்பு முடிகளைக் கண்டேன்.

**முஹம்மதுவிற்கு கண் திருஷ்டி பட்டுவிடும் என்று வேண்டுதல் செய்த ஜிப்ரீல்:**

ஹதீஸ் முஸ்லிம் நூல் 4402.

நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டால் அவர்களுக்கு (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள், "பிஸ்மில்லாஹி யுப்ரீக்க, வ மின் குல்லி தாயின் யஷ்ஃபீக்க, வ மின் ஷர்ரி ஹாசிதின் இதா ஹசத, வ ஷர்ரி குல்லி தீ அய்னின்" என்று ஓதிப்பார்ப்பார்கள். (பொருள்: அல்லாஹ்வின் பெயரால் (ஓதிப் பார்க்கிறேன்). அவன் உங்களுக்கு குணமளிப்பானாக! அனைத்து நோயிலிருந்தும் உங்களுக்குச் சுகமளிப்பானாக. பொறாமைக்காரன் பொறாமைப்படும்போது ஏற்படும் தீமையிலிருந்தும் **கண்ணேறு உள்ள ஒவ்வொருவரின் தீமையிலிருந்தும் (காப்பானாக!)**.

**விதியை கண் திருஷ்டி வெள்ளுமா?**

ஹதீஸ் முஸ்லிம் நூல் 4405.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: **கண்ணேறு உண்மையாகும்**. தலைவிதியை ஏதேனும் ஒன்று வெல்ல முடியுமானால், **கண்ணேறு அதை வென்றிருக்கும்.** (கண்ணேறுக்குக் காரணமான) உங்களிடம் குளித்துக் கொள்ளுமாறு கோரப்பட்டால் குளித்துக்கொள்ளுங்கள்.

**விஷக்கடி, சின்னம்மை, கண்ணேறுக்காக ஓதிப்பார்ப்பதற்கு அனுமதி:**

ஹதீஸ் முஸ்லிம் நூல் : 4420.

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் ஓதிப்பார்த்தல் குறித்துக் கூறியதாவது: விஷக்கடி, சின்னம்மை, **கண்ணேறு** ஆகியவற்றுக்காக (ஓதிப்பார்ப்பதற்கு) அனுமதியளிக்கப் பட்டுள்ளது.

ஹதீஸ் முஸ்லிம் நூல் : 4423.

ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது: நபி (ஸல்) அவர்கள் பாம்புக்கடிக்கு ஓதிப் பார்த்துக்கொள்ள "ஹஸ்ம்" குடும்பத்தாருக்கு அனுமதியளித்தார்கள். மேலும்,அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) அவர்களிடம், "என் சகோதரர் (ஜஅஃபரின்) மக்களுடைய உடல்களை நான் மெலிந்திருக்கக் காண்கிறேனே ஏன்? அவர்கள் வறுமையில் வாடுகின்றனரா?" என்று கேட்டார்கள். அதற்கு அஸ்மா (ரலி) அவர்கள், "இல்லை; **கண்ணேறு அவர்களை வேகமாகப் பாதிக்கிறது**" என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அவர்களுக்கு ஓதிப்பார்ப்பீராக" என்று கூறினார்கள். நான் அவர்களிடம் (ஒரு துஆவை) எடுத்துரைத்தேன். நபி (ஸல்) அவர்கள் "(அதையே) அவர்களுக்கு ஓதிப்பார்ப்பீராக" என்று கூறினார்கள்.

இதை ஏன் நான் மூடப்பழக்கவழக்கம் என்று சொல்கிறேன் என்றால், ஒருவர் மற்றவர் மீது கண் திருஷ்டி வைத்தால், அந்த "மற்றவருக்கு" அதன் மூலமாக தீமை உண்டாகும் என்றால்,

- இந்த தீமையை செய்பவன் யார்?
- இந்த தீமை செய்யப்படும்போது, அவனைப் படைத்த இறைவன் என்ன செய்து கொண்டிருக்கிறான்?
- ஒரு நேர்மையான நல்ல மனிதருக்கு எதிராக, ஒரு தீய மனிதன் கண் திருஷ்டி வைத்தால், அதனால் அவனுக்கு தீமை உண்டாகும் என்று சொன்னால், இதில் ஏதாவது நியாயம் இருக்கிறதா?
- இப்படி ஒரு நீதிமானுக்கு ஒரு தீய மனிதன் தீமை செய்யும் போது, அதைப் பார்த்துக்கொண்டு இறைவன் ஏன் சும்மா இருந்தான் எந்த கேள்வி எழுகின்றது?
- இதற்கெல்லாம் இஸ்லாத்தில் பதில் இல்லை?

இந்த கண் திருஷ்டியை கண்டு இந்து மக்கள் அதிகமாக பயப்படுகிறார்கள், முஸ்லிம்களைப் போன்று பல பரிகாரங்களை செய்கிறார்கள். இது ஒரு வீணான பயம் என்பதை இவர்கள் அறியமாட்டார்கள்!

**சினிமா நடிகர்கள் கண்திருஷ்டியினால் எப்போதே இல்லாமல் போயிருக்கவேண்டும்!**

ஒருவரைப் பார்த்து இன்னொருவர் நீ அழகாய் இருக்கிறாய் என்று சொல்வதும், அவர்கள் மீது கண் திருஷ்டி வைப்பதோ உண்மையாக இருந்தால், சினிமாவில் கதாநாயகனாக கதாநாயகியாக இருக்கும் ஒவ்வொருவரும் எப்போதும் பல தீமைகளுக்கு ஆளாகியிருப்பார்கள்? இவர்களின் அழகையும் நடிப்பையும் பார்த்து கண் வைக்காதவர்கள் சினிமா பார்ப்பவர்களில் யார் இருக்கிறார்கள்? கோடிக்கணக்கான மக்கள் இவர்களின் மீது கண் திருஷ்டி வைக்கிறார்கள், இருந்தபோதிலும் மிக நீண்ட ஆயுளோடு சினிமா நடிகர்கள் நடிகைகள் வாழுகிறார்கள். இவர்கள் மீது கண் திருஷ்டி இல்லையா?



**கேள்வி 32:** இஸ்லாமில் மூடப்பழக்கங்கள்/ மூடநம்பிக்கைகள் உண்டா?

**பதில் 32:** மூடநம்பிக்கை என்பது ஒரு விவரம் பொய்யாக இருந்தாலும், நடைமுறைக்கு ஏதிராக இருந்தாலும், பொய்யாக இருந்தாலும், எதையும் ஆராயாமல் 'கண்மூடித்தனமாக' நம்புவதாகும். சில மூடநம்பிக்கைகள் தீங்கு ஒன்றும் செய்யாது, ஆனால் சில மூடநம்பிக்கைகளினால் அனேக தீமைகள் விளையும். படிப்பறிவு குறைவாக உள்ள சமுதாயத்தில் மூடநம்பிக்கைகள் அதிகமாக காணப்படும்.

முஹம்மது பல மூடப் பழக்கவழக்கங்களை நம்பினார், அவைகளை பின்பற்றினார், மேலும் முஸ்லிம்களுக்கும் கற்றுக் கொடுத்துச் சென்றுள்ளார். மேலே நாம் கண்ட கண்திருஷ்டி கூட ஒரு மூடப்பழக்கம் தான்.

**1) கட்டுக்கதைகளை நம்புவதும் மூடநம்பிக்கையே!**

குர்ஆன் பல கட்டுக்கதைகளை முன்மொழிகிறது, அவைகளில் மூன்றை இங்கு தருகிறோம். இப்படிப்பட்ட கதைகளை நம்புவது கடைசியாக மூடநம்பிக்கைகளுக்கு நேராக கொண்டுச் செல்லும்.

குர்ஆன் 2:65. உங்க(ள் முன்னோர்க)ளிலிருந்து சனிக் கிழமையன்று (மீன் பிடிக்கக் கூடாது என்ற) வரம்பை மீறியவர்களைப் பற்றி நீங்கள் உறுதியாக அறிவீர்கள். அதனால் அவர்களை நோக்கி "**சிறுமையடைந்த குரங்குகளாகி விடுங்கள்**" என்று கூறினோம்.

குர்ஆன் 5:60. "அல்லாஹ்விடமிருந்து இதைவிடக் கெட்ட பிரதிபலனை அடைந்தவர்களைப் பற்றி உங்களுக்கு அறிவிக்கட்டுமா? (அவர்கள் யாரெனில்) எவரை அல்லாஹ் சபித்து, இன்னும் அவர்கள் மீது கோபமுங்கொண்டு, அவர்களில் **சிலரைக் குரங்குகளாகவும், பன்றிகளாகவும்** ஆக்கினானோ அவர்களும், ஷைத்தானை வழிப்பட்டவர்களும் தான் - அவர்கள்தாம் மிகவும் தாழ்ந்த நிலையினர்; நேரான வழியிலிருந்தும் தவறியவர்கள்" என்று (நபியே!) நீர் கூறுவீராக.

குர்ஆன் 7:166. தடுக்கப்பட்டிருந்த வரம்பை அவர்கள் மீறிவிடவே, "**நீங்கள் இழிவடைந்த குரங்குகளாகி விடுங்கள்**" என்று அவர்களுக்கு நாம் கூறினோம்.

சட்டங்களை மீறியவர்களை குரங்குகளாகவும், பன்றிகளாகவும் அல்லாஹ் மாற்றியதாக வரும் வசனங்கள் பொய்யானவையாகும். இவைகளை நம்புவதும் மூடநம்பிக்கையே!

**தீய முஸ்லிம்களையும் குரங்கு பன்றிகளாக அல்லாஹ் ஆக்குவான்:**

புகாரி நூல்: 5590. அப்துர் ரஹ்மான் இப்னு ஃகன்கி அல்அஷ்அரீ(ரஹ்) கூறினார். . . . நான் நபி(ஸல்) அவர்கள் சொல்லக் கேட்டேன்:

என் சமுதாயத்தாரில் சில கூட்டத்தார் தோன்றுவார்கள். அவர்கள் விபசாரம் (புரிவது), (ஆண்கள்) பட்டுத் துணி (அணிவது), மது (அருந்துவது), இசைக் கருவிகள் (இசைப்பது) ஆகியவற்றை அனுமதிக்கப்பட்டவையாகக் கருதுவார்கள். இன்னும் சில கூட்டத்தார் மலை உச்சியில் தங்குவார்கள். அவர்களின் ஆடுகளை இடையன் (காலையில் மேய்த்துவிட்டு) மாலையில் அவர்களிடம் ஓட்டிச் செல்வான். அவர்களிடம் தன் தேவைக்காக ஏழை (உதவி கேட்டுச்) செல்வான். அப்போது அவர்கள், 'நாளை எங்களிடம் வா' என்று சொல்வார்கள். (ஆனால்) அல்லாஹ் இரவோடு இரவாக அவர்களின் மீது

மலையைக் கவிழ்த்து அவர்க(ளில் அதிகமானவர்க)ளை அழித்துவிடுவான். **(எஞ்சிய) மற்றவர்களைக் குரங்குகளாகவும் பன்றிகளாகவும் மறுமை நாள் வரை உருமாற்றிவிடுவான்**.

**பல்லியைக் கொள்ளுதல் ஒரு மூடநம்பிக்கை, ஒரே அடியில் கொன்றவருக்கு அதிக பலன்கள் உண்டு:**

புகாரி நூல் 3359. உம்மு ஷுரைக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பல்லியைக் கொல்லும்படி உத்திரவிட்டார்கள். மேலும், அவர்கள், 'அது இப்ராஹீம்(அலை) அவர்கள் தீக்குண்டத்தில் எறியப்பட்டபோது நெருப்பை) **அவர்களுக்கெதிராக ஊதிவிட்டுக் கொண்டிருந்தது**' என்றும் கூறினார்கள்.

முஸ்லிம் நூல் 4509. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

ஒரு பல்லியை **முதலாவது அடியிலேயே கொன்றவருக்கு** இவ்வளவு இவ்வளவு நன்மைகள் உண்டு. **இரண்டாவது அடியில் கொன்றவருக்கு** முதலாவது அடியில் கொன்ற வரைவிடக் குறைவாக இவ்வளவு இவ்வளவு நன்மைகள் உண்டு; **மூன்றாவது அடியில் கொன்றவருக்கு** இரண்டாவது அடியில் கொன்றவரைவிடக் குறைவாக நன்மை உண்டு. இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

முஹம்மது இன்னும் அனேக மூடநம்பிக்கைகளை போதித்தார், அதாவது நாய்களையும், பாம்புகளையும் கொல்லச்சொன்னார். ஒருவருடைய கல்லறையில் பச்சை கிளைகளை வைக்கும் போது, செத்தவருக்கு அது காயும்வரை நிம்மதியாக இருக்குமென்று முஹம்மது நம்பினார், இதுவும் ஒரு மூடநம்பிக்கையே!

இன்னும் பல மூடநம்பிக்கைகளை முஹம்மது கற்றுக்கொடுத்தார். முஹம்மதுவின் இப்படிப்பட்ட போதனைகள் உண்மை என்று முஸ்லிம்கள் நம்புவதினால், இஸ்லாமில் மூடநம்பிக்கைகள் உள்ளது என்று அர்த்தம் தானே!



**கேள்வி 33:** முஸ்லிம்கள் கிறிஸ்தவர்களை வெறுக்க முக்கியமான காரணமென்ன?

**பதில் 33:** முஸ்லிம்கள் அனைவரும் இப்படி வெறுக்கிறார்கள் என்று சொல்வதற்கில்லை. யார் யாரெல்லாம் இஸ்லாமை நன்கு கற்று இருக்கிறார்களோ, அவர்கள் அதிகமாக கிறிஸ்தவர்களை வெறுக்க வாய்ப்பு இருக்கிறது.

இன்றைய முஸ்லிம்கள் சிலர் ஏன் கிறிஸ்தவர்களை வெறுக்கிறார்கள் என்பதற்கு கீழ்கண்ட சில காரணங்களைச் சொல்லமுடியும். இந்தியா போன்ற ஜனநாயக நாடுகளில், சிறும்பான்மை முஸ்லிம்கள் இருக்கும் நாடுகளில் வாழும் முஸ்லிம்கள் இதனை வெளியே காட்டுவதில்லை. ஆனால் இஸ்லாமிய நாடுகளில் சிறும்பான்மை கிறிஸ்தவர்களும் மற்ற சிறும்பான்மையினரும் முஸ்லிம்களின் கைகளில் அதிக துன்பத்துக்கு உள்ளாகிறார்கள்.

1) குர்ஆனும், ஹதிஸ்களும் காஃபிர்களை வெறுக்கச் சொல்கிறது, இதனை முஸ்லிம்கள் அறிவார்கள், அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு கீழ்படிகிறார்கள்.

2) இஸ்லாமின் ஆரம்பகால கிறிஸ்தவர்கள் முஹம்மதுவை நபியாக ஏற்கவில்லை என்பது இன்னொரு காரணம்.

3) கிறிஸ்தவத்தின் அடிப்படை கோட்பாடுகளை குர்ஆன் எதிர்த்து பேசுகின்றது, இதனை முஸ்லிம் அறிஞர்கள் மசூதிகளிலும், தங்கள் பேச்சுக்களிலும் வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் முஸ்லிம்களுக்கு ஞாபகப்படுத்திக்கொண்டு இருக்கிறார்கள்.

4) ஆனால், கிறிஸ்தவர்களுக்கு இஸ்லாம் ஆரம்பத்திலிருந்து என்ன செய்தது என்ற சரித்திரத்தை முஸ்லிம்கள் படிப்பதில்லை. கிறிஸ்தவர்களின் நாடுகளை முஸ்லிம்கள் யுத்தம் செய்து ஆக்கிரமித்தது போன்ற சரித்திரத்தை முஸ்லிம்கள் அறியமாட்டார்கள். ஆனால், தாங்கள் முஸ்லிம்களிடம் இழந்த நாடுகளை கைப்பற்ற கிறிஸ்தவர்களின் ஒரு பிரிவினர் செய்த சண்டைகள் (சிலுவைப்போர்கள்) பற்றி முஸ்லிம்கள் நன்கு அறிவார்கள்.

5) சிலுவைப்போர்கள் பற்றிய தவறான கருத்துக்களை, ஜாகிர் நாயக், பீஜே போன்ற அறிஞர்கள் பரப்ப அதனை உண்மையென்று நம்புகிறார்கள் இன்றைய முஸ்லிம்கள்.

6) இது போதாது என்றுச் சொல்லி, எரிகிற புண்ணில் வேல் பாய்ச்சுவது போன்று, இஸ்ரேல் என்ற நாடு 1900 ஆண்டுகளுக்கு பிறகு திடீரென்று 1945ம் ஆண்டுகளில் முளைத்தெழும்பியது.

7) அதுவும் பல இஸ்லாமிய நாடுகளுக்கு மத்தியில் முளைத்தெழும்பி இஸ்ரேல் அசைக்கமுடியாத ராஜ்ஜியமாக முஸ்லிம் நாடுகளுக்கு சவால் விட்டுக்கொண்டு இருக்கிறது.

8) முஸ்லிம்களின் கோபத்தை இன்னும் அதிகப்படுத்தும்விதமாக மேற்கத்திய நாடுகள் முக்கியமாக அமெரிக்கா போன்ற நாடுகள் இஸ்ரேல் நாட்டை ஆதரிக்கிறது. மேற்கத்திய நாடுகள் கிறிஸ்தவ நாடுகள் என்று முஸ்லிம்கள் கருதுகிறார்கள் (இதில் பாதி உண்மை, பாதி பொய் உள்ளது). இதனால் கோபத்தின் உச்சிக்கு சென்றிருக்கிறார்கள் முஸ்லிம்கள்.

9) சும்ம கிடந்த சங்கை ஊதி கெடுத்தான் என்று சொல்வதுபோன்று ஈராக், ஆப்கானிஸ்தான் போன்ற நாடுகள் மீது அமெரிக்க போர் தொடுத்து, இன்னும் முஸ்லிம்களின் கோப அக்கினியை ஊதிவிட்டது. அமெரிக்கா ஒரு கிறிஸ்தவ நாடு என்று முஸ்லிம்கள் தவறாக நினைக்கிறார்கள்.

10) முஸ்லிம்களால் ஹீரோக்கள் என்று கருத்தப்பட்ட மற்றும் உலகத்தினால் பயங்கரவாதிகள் என்று கருத்தப்பட்ட சத்தாம் உசேன், பின்லாடன், ஐஎஸ் ஐஎஸ் தலைவர் பக்தாதி மற்றும் ஈரானின் சுலைமானி போன்றவர்களை பொறுக்கி பொறுக்கி அழித்துக்கொண்டு வருகிறது அமெரிக்கா.

11) மேற்கத்திய கலாச்சாரம் என்பது கிறிஸ்தவர்களின் கலாச்சாரம் என்று முஸ்லிம்கள் நம்பிவிடுகிறர்கள். எனவே கிறிஸ்தவர்களை முஸ்லிம்கள் வெறுக்கிறார்கள்.

12) கிறிஸ்தவ சமுதாயத்தில் சுதந்திரம் அதிகமாக இருக்கிறது, ஆனால் இஸ்லாமிய சமுதாயத்தில் அதிக கட்டுப்பாடு உள்ளது, இதனை முஸ்லிம்கள் ஜீரணித்துக்கொல்வதில்லை. இவர்களைக் கண்டு தங்கள் பிள்ளைகளும் அதிக சுதந்திரத்தை கேட்பார்கள் என்ற ஒரு வேதனை, பயம் அவர்களுக்கு உண்டு. இதுவும் ஒரு மறைமுக காரணமாகும்.

13) முஸ்லிம்களுக்கு இஸ்லாமை கேள்வி கேட்கும் கிறிஸ்தவர்களைக் கண்டால் பிடிக்காது. குர்ஆனை கேள்வி கேட்பவர்களைக் கண்டால் பிடிக்காது. முஸ்லிம்கள் சொல்வதை அப்படியே கேள்வி கேட்காமல் ஏற்றுக்கொள்ளாதவர்களைக் கண்டால் பிடிக்காது. கிறிஸ்தவர்கள் முஸ்லிம்களையும், குர்ஆனையும் முஹம்மதுவையும் கேள்வி கேட்க தொடங்கியுள்ளார்கள். முக்கியமாக இணையம் வந்த பிறகு முஸ்லிம் அறிஞர்கள் சொல்லும் பொய்களை நம்ப கிறிஸ்தவர்கள் தயாராக இல்லை. எனவே தற்காலத்தில் கிறிஸ்தவர்களை முஸ்லிம்கள் வெறுக்க இதுவும் ஒரு காரணமாகும்.

இப்படி பல வடிவங்களில் கிறிஸ்தவர்கள் முஸ்லிம்களுக்கு எதிரிகளாக காணப்படுகிறார்கள். எனவே முஸ்லிம்கள் கிறிஸ்தவர்களையும், "கிறிஸ்தவ நாடுகள் என்றுச் சொல்லப்படுகின்ற நாடுகளைகளையும்" வெறுக்கிறார்கள். பெரும்பான்மையாக முஸ்லிம்கள் வாழும் இஸ்லாமிய நாடுகளில் இதனை வெளிப்படையாக காணமுடியும்.



**கேள்வி 34:** பலதார திருமணத்தால் நன்மை அதிகமா? தீமை அதிகமா?

**பதில் 34:** குர்ஆனின் பலதாரமணம், அல்லாஹ் அங்கீகரித்த ஒன்றாக உள்ளது. முஸ்லிம்கள் பல திருமணங்களை செய்துக்கொள்ளலாம் என்று கட்டளை கொடுக்கப்பட்டுள்ளது. முஹம்மதுவும் 11 திருமணங்களை

புரிந்துள்ளார். இதனை முஹம்மதுவின் காலத்திற்கு மட்டும் என்று சொல்லியிருந்தால், பிரச்சனையில்லை, ஆனால் உலகம் இருக்கும் வரையிலும் இந்த குர்ஆனின் கட்டளை அமுலில் இருக்குமே. பல திருமணங்களை புரியும் சமுதாயத்தில் அனேக பிரச்சனைகள், தீமைகள் நடக்கிறதாக ஒரு ஆய்வு(Science Daily) சொல்கிறது. ஒருவனுக்கு ஒருத்தி என்ற அமைப்பே சிறந்தது, என்று இந்த ஆய்வு கூறுகிறது.

**Monogamy Reduces Major Social Problems of Polygamist Cultures**

ScienceDaily (Jan. 23, 2012) — In cultures that permit men to take multiple wives, the intra-sexual competition that occurs **causes greater levels of crime, violence, poverty and gender inequality than in societies that institutionalize and practice monogamous marriage**.

[. . .]

"Our findings suggest that that institutionalized **monogamous marriage provides greater net benefits for society at large by reducing social problems that are inherent in polygynous societies**."

Considered the most comprehensive study of polygamy and the institution of marriage, the study finds significantly higher levels rape, kidnapping, murder, assault, robbery and fraud in polygynous cultures.

[. . .]

Source: **http://www.sciencedaily.com/releases/2012/01/120124093142.htm**

பல திருமணங்கள் புரியும் சமுதாயங்களில் அனேக குற்றங்கள், கற்பழிப்புக்கள், ஏழ்மை, ஆண் பெண் உயர்வு தாழ்வு பிரச்சனைகள், ஆள் கடத்தல், கொலை, நேர்மையற்ற செயல்கள் என்று சமுதாயத்திற்கு கேடு விளைவிக்கும் அனேக குற்றங்கள் அதிகமாக நடப்பதாக ஆய்வு கூறுகிறது.

இந்த விஷயம் ஏன் அல்லாஹ்விற்கு தெரியாமல் போனது? பலதார திருமணங்கள் அனுமதிக்கப்பட்டுள்ள இஸ்லாமிய நாடுகளில் ஆய்வு செய்துப்பாருங்கள், உதாரணத்திற்கு சௌதியில் அல்லது பாகிஸ்தானில் இந்த குற்றங்கள் நடைப்பெறுகிறதா இல்லையா? என்பதை ஆய்வு செய்துப்பாருங்கள். விவாகரத்துக்களும் அதிகமாக நடந்து, பெண்கள் அனாதைகளாக மாறுவது சௌதியில் அதிகம், மேலும் மக்காவிலும் இது அதிகமாக உள்ளது.

குர்ஆனில் நவீன விஞ்ஞானம் உண்டு என்று இஸ்லாமியர்கள் சொல்வார்கள், ஆனால், பல தார திருமணங்கள் புரியும் சமுதாயத்தில் இப்படிப்பட்ட பிரச்சனைகள், இதர சமுதாயத்தை விட அதிகமாக நடக்கிறது என்ற உண்மையை, விஞ்ஞானத்தை அல்லாஹ் ஏன் அறியவில்லை?

ஒரு குடும்பத்தில் ஒரு ஆண் நான்கு பெண்களை திருமணம் செய்துக்கொண்டால், அந்த குடும்பத்தில் அமைதி நிலவுமா? ஒவ்வொரு

பெண்ணுக்கும் குழந்தைகள் பிறந்த பிறகு, அங்கு பிரச்சனைகள் வராமல் இருக்குமா? அவ்வளவு ஏன் முஹம்மது குடும்பத்திலும் பல தாரமணத்தால் அனேக பிரச்சனைகள் மனைவிகளின் மத்தியிலே இருந்தது. இதில் முஹம்மது தம்முடைய சிறுமி மனைவி ஆயிஷாவை அதிகமாக நேசித்தார், எனவே மற்ற மனைவிகள் பொறாமை கொண்டார்கள். அவ்வளவு ஏன், பழைய ஏற்பாட்டின் ஆபிரகாமின் குடும்பத்திலும் இரண்டு பெண்களுக்கு இடையிலே ஒரு நல்ல ஒற்றுமை இருந்ததில்லை.

நான் மேலே கொடுத்த தொடுப்பை சொடுக்கி படித்துப் பாருங்கள், அதாவது ஒரு மனைவியை மட்டும் திருமணம் புரியும் சமுதாயத்தில் அனேக நன்மைகள் கிடைக்கிறது என்பதை ஆய்வு செய்து சொல்லியுள்ளார்கள்.

உண்மையான இறைவன் பலதார திருமணத்தை ஒரு நித்திய சட்டமாக கொடுக்கமாட்டார். ஆனால், அல்லாஹ் இதனை அனுமதித்து இருக்கிறார் என்பதிலிருந்து அல்லாஹ்வின் நம்பகத்தன்மை எத்தகையது என்பதை அறிந்துக் கொள்ளமுடியும்! இஸ்லாமுக்கு இருக்கும் பிரச்சனை வெறும் பலதாரமணம் மட்டுமல்ல, அடிமைப்பெண்களோடு இஸ்லாமிய ஆண்கள் உடலுறவு கொள்ளலாம் என்ற கட்டளை இன்னும் மோசமானது. இதனாலும் குடும்ப அமைதி கெடும்.



**கேள்வி 35:** மற்ற உலக மதங்களைப் போன்று இஸ்லாமும் ஒரு மதமா? அல்லது இஸ்லாம் வித்தியாசமானதா?

**பதில் 35:** பொதுவாக 'மதம்' என்று சொன்னவுடனே எல்லோருடைய மனங்களில் மின்னலைப்போன்று வந்து போகும் எண்ணங்கள் இவைகளாகும்:

1) மதம் என்றாலே நிச்சயம் **ஒரு இறைவன்/கடவுள்** இருக்கவேண்டும்.

2) முடிந்தால் **ஒரு வேதம்** இருக்கவேண்டும், அதாவது ஒரு புத்தகம் இருக்கவேண்டும்.

3) அந்த மதத்தை **தோற்றுவித்தவரோ**, அல்லது உலகத்துக்கு **அறிமுகம் செய்தவரோ** ஒருவர் இருக்கவேண்டும்.

மேலோட்டமான விவரங்களை மட்டுமே நான் சொல்லியுள்ளேன், ஆழமாகச் செல்லவில்லை. மேலும், உலகில் உள்ள அனைத்து மதங்கள் பற்றியும் சொல்லாமல், நமக்குத் தெரிந்த பொதுவான மதங்கள் பற்றியே பேசுகிறேன்.

இறைவன் இல்லையென்று புத்தர் சொன்னார், ஆனால் மனிதர்கள் அவரையே இறைவனாக்கி வணங்கிக்கொண்டு இருக்கிறார்கள் (சாமி இல்லாமல் மதமா? நோ சான்ஸ்? ஒருவேளை சாமி இல்லாத மதத்தை ஒருவர் உருவாக்கினாலும், அவரையே சாமியாக்கிவிடுவோமில்லே!).

**சரி விஷயத்துக்கு வருவோம். இஸ்லாம் ஒரு மதமா?**

மேற்கண்ட மூன்று அடிப்படையான கூறுகள் இஸ்லாமில் உண்டா? என்று கேட்டால், ஆம் உண்டு என்பது பதில், அதோடு கூட இன்னும் ஒரு விஷயம் அதிகமாக உள்ளது இஸ்லாமில். இங்கு தான் இஸ்லாம் பொதுவான மதங்களைவிட வித்தியாசமாக உள்ளது. இஸ்லாமில் இறைவன் உண்டு, வேதம் உண்டு, தோற்றுவித்தவர் உண்டு மற்றும் ஆன்மீகம் உண்டு.

**உலகை ஆளவேண்டும் என்ற கோட்பாடு:**

இஸ்லாமின் அரசியல் மற்றும் ஆட்சி அதிகாரமும் ஒரு அடிப்படை அங்கமாக இருக்கின்றது. இஸ்லாமின் இந்த ஒரு குணம், அதன் ஆன்மீகத்தை விழுங்கிவிடுகிறது, இஸ்லாமுக்கு கெட்டப்பெயரைக் கொண்டுவருகிறது. இஸ்லாமிய தீவிரவாதம், இஸ்லாமிய நாடுகளில் ஜனநாயகத்துக்கு எதிரான சட்டங்கள், கொடுமைகள், மனித உரிமை மீறல்கள், கொடுமையான தண்டனைகள் என்று நாம் செய்திகளில் வாசிக்கும் திடுக்கிடும் பயங்கரமான செயல்களுக்குக் காரணம், இஸ்லாமின் அங்கமாக இருக்கும் "உலகை ஆளவேண்டும்" என்ற கட்டளைத் தான்.

எனக்கு தெரிந்தவரை, பெரும்பான்மையான மதங்களில் நல்ல மனிதர்களை உருவாக்குவதே அதன் "தலையாய கட்டளையாக இருக்கும்" என்று பொதுவாக நம்பப்படுகிறது, போதிக்கப்படுகின்றது, ஆனால் இஸ்லாமில் மட்டுமே உலகில் உள்ள அனைத்து நாடுகளையும் ஒரே தலைமையின் கீழ் கொண்டு வரவேண்டும் , ஆளவேண்டும், அதுவும் இஸ்லாம் ஆளவேண்டும் என்ற கட்டளையும் உள்ளது.

சுருக்கமாகச் சொல்வதென்றால், உலக மதங்களில் இறைவன், வேதம், தோற்றுவித்தவர், மற்றும் ஆன்மீகம் இருக்கும். ஆனால் இஸ்லாமில் இவைகளோடு கூட 'ஆட்சி அதிகாரத்தை பிடித்து, நாடுகளை ஆளுவதும்' ஒரு அடிப்படை கோட்பாடாக உள்ளது.

இந்த வகையில் பார்த்தால், இந்து மதம், கிறிஸ்தவம், பௌத்தம், இன்னுமுள்ள மதங்கள் ஒரு பக்கம் நின்றால், இஸ்லாம் மட்டும் இவைகளுக்கு எதிரான பகுதியில் நின்றுக்கொண்டு இருக்கிறது.

குறிப்பு: அனைத்து மதங்களில் உள்ள ஆன்மீக மற்றும் போதனைகளில் உள்ள வித்தியாசங்களை நான் இங்கு கருத்தில் கொள்ளவில்லை, அதாவது சிலைகளை வணங்குவதும், உருவமில்லாத வணங்கள் பற்றியும் மற்றும் இதர வித்தியாசகங்களை கருத்தில் கொள்ளவில்லை.



**கேள்வி 36:** உலக நாடுகள் அனைத்தையும் ஒரே ஆளுகையின் கீழ்கொண்டுவரவேண்டும் என்ற இஸ்லாமிய கோட்பாடு நல்லது தானே! இதில் என்ன தீமை இருக்கிறது?

**பதில் 36:** யாருக்கு நன்மை? முஸ்லிம்களுக்கா அல்லது மற்றவர்களுக்கா?

இஸ்லாமில் ஆன்மீக கோட்பாடும் உண்டு, "உலக நாடுகளை இஸ்லாம் ஆளவேண்டும்" என்ற கோட்பாடும் உண்டு என்பதைப் பார்த்தோம். உலக நாடுகளை இஸ்லாம் ஆளவேண்டும் என்றால் என்ன? இதனை எப்படி நிறைவேற்றுவது?

முஹம்மது உயிரோடு இருக்கும் போது அவர் என்ன செய்தார் என்பதையும் மற்றும் அவருக்குப் பிறகு வந்த கலீஃபாக்கள் என்ன செய்தார்கள்? என்பதையும் கவனித்தால் இதற்கான பதில் கிடைக்கும். இந்த இரண்டையும் செய்ய விருப்பமில்லாதவர்கள், உலக நாடுகளில் இன்று முஸ்லிம் தீவிரவாதிகள் சொல்வதை கொஞ்சம் கூர்ந்து கவனியுங்கள், முக்கியமாக ஐஎஸ்ஐஎஸ் போன்ற தீவிரவாதிகள் சொல்வதை கவனித்தாலே போதும், பதில் கிடைக்கும்.

**முஹம்மது என்ன செய்தார்?**

முஹம்மது மதினாவில் ஆள்பலத்தை கூட்டிக்கொண்ட பிறகு, அரேபியாவை சுற்றியுள்ள அரசர்களுக்கு, நாடுகளுக்கு 'இஸ்லாமை ஏற்கிறீர்களா? அல்லது இஸ்லாமின் கையில் சாகிறீர்களா?' என்று கேள்வி கேட்டு கடிதங்கள் எழுதினார். இராணுவ பலம் குறைவாக உள்ள நாடுகள், நாங்கள் இஸ்லாமை ஏற்று இஸ்லாமிய நாடுகளாக மாறுகிறோம் என்றுச் சொல்லி முஸ்லிம்களாக மாறினார்கள். கொஞ்சம் எடக்கு மடக்கு செய்த நாடுகளோடு வலியச் சென்று முஹம்மது போர் புரிந்து அவைகளை வென்றார்.

**முஹம்மது என்னென்ன கடிதங்கள், எந்தெந்த நாட்டு அரசர்களுக்கு எழுதினார் போன்றவைகளை கீழ்கண்ட கட்டுரைகளில் படிக்கலாம்:**

1. **இஸ்லாம் வாளால் தான் பரவியது, முகமது எழுதிய கடிதங்களே இதற்கு சாட்சி**
2. **அஸ்லிம் தஸ்லம் (أسلم تسلم) : அபூமுஹைறயும் மறைத்த விவரங்களும்**
3. **ஓமன் நாட்டு மக்களுக்கு நபி அனுப்பிய செய்தி**

**முதல் நான்கு கலிஃபாக்கள் என்ன செய்தார்கள்?**

முஹம்மது தமது 10 ஆண்டுகளில் பல போர்களைச் செய்து, அரேபிய தீபகர்ப்பத்தை தன் வாயில் போட்டுக்கொண்டார், அதாவது ஆக்கிரமித்துக்கொண்டார். கி.பி. 632ல் முஹம்மது மரித்த பிறகு, அடுத்த 30 ஆண்டுகளில் நான்கு கலிஃபாக்கள் (அபூ பக்கர், உமர், உஸ்மான் & அலி) மேலும்

பல போர்களைச் செய்து பெரும்பான்மையான மத்திய கிழக்கு நாடுகளை பிடித்துக்கொண்டார்கள்.

கலிஃபாக்கள் செய்த அனைத்து போர்கள் பற்றியும், பிடித்த நாடுகள் பற்றியும் அட்டவணைகள் மற்றும் படங்கள் மூலமாக கீழ்கண்ட கட்டுரைகளில் விளக்கப்பட்டுள்ளது.

1. **முஹம்மது முதல் சிலுவைப்போர் வரை - வரைபடங்கள் மற்றும் விளக்கங்கள்:** பாகம் 3
2. **சிலுவைப்போர் என்றால் என்ன? அவைகள் தொடங்கப்பட காரணங்கள் யாவை?** பாகம் 2

இஸ்லாமில் உள்ள 'நாடுகளை பிடிக்கவேண்டும்' என்ற கோட்பாட்டினால் யாருக்கு லாபம்? இஸ்லாமுக்குத் தான் இலாபம், மற்றவர்களுக்கு அல்ல. இஸ்லாம் பிடித்த அனைத்து நாடுகளில் உள்ள மக்களுக்கு நஷ்டம் தான். முக்கியமாக, முஹம்மது பக்கத்து குறுநில மன்னர்கள் மீது தாக்குதல் செய்த போது, ஆண்களைக் கொன்று பெண்களையும், பிள்ளைகளையும் அடிமைகளாக மாற்றி, அவர்களை கற்பழித்து மேலும் அடிமையாக விற்று லாபம் சம்பாதித்தார்.

**முஹம்மது ஆண் பெண் அடிமைகளை விற்று லாபம் சம்பாதித்தார், தன் இராஜ்ஜியத்தை அந்த கீழ்தரமான பணத்தினால் ஸ்தாபித்தார். முஹம்மது அடிமைகளை வைத்திருந்ததில்லை, அவர்களை விற்கவில்லை என்று உலகில் உள்ள ஒரு முஸ்லிமாவது சொல்லச்சொல்லுங்கள் பார்க்கலாம்?**

அன்று முஹம்மதுவும் கலிஃபாக்களும் செய்தவைகளையே, இன்று ஐஎஸ்ஐஎஸ் செய்துக்கொண்டு இருக்கிறது.

1. **'Virgin. Beautiful. 12 Years Old': ISIS' Chilling Ads To Sell Sex Slaves - கன்னி, அழகானவள் 12வயது, சிறுமி விற்பனை விளம்பரம்**
2. **ISIS Burns Alive 19 Yazidi Girls For Refusing To Be Sex Slaves: Report - செக்ஸ் அடிமையாக மாறாதபடியினால் உயிருடன் எரிப்பு**
3. **ISIS Executes 250 Women For Refusing To Become Sex Slaves: Report - செக்ஸ் அடிமையாக மறுத்தபடியினால் 250 பெண்கள் கொல்லப்பட்டனர்**
4. 'Somebody Had To Tell These Stories': An Iraqi Woman's Ordeal As An ISIS Sex Slave
5. Cash-Strapped ISIS Offers $50 A Month To Fighters - But More If They Own Sex Slaves

**குர்ஆனில் வலக்கரம் சொந்தமானவர்கள் என்றுச் சொல்லும் போது, அது செக்ஸ் அடிமைகளாவார்கள்.**

23:6. ஆனால், அவர்கள் தங்கள் மனைவிகளிடமோ அல்லது **தங்கள் வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்டவர்களிடமோ தவிர - (இவர்களிடம் உறவு கொள்வது கொண்டும்**) நிச்சயமாக அவர்கள் பழிக்கப்படமாட்டார்கள்.

4:3. . . . அல்லது **உங்கள் வலக்கரங்களுக்குச் சொந்தமான (ஓர் அடிமைப் பெண்ணைக் கொண்டு)** போதுமாக்கிக் கொள்ளுங்கள் - இதுவே நீங்கள் அநியாயம் செய்யாமலிருப்பதற்குச் சுலபமான முறையாகும்.

33:50. நபியே! எவர்களுக்கு நீர் அவர்களுடைய மஹரை கொடுத்து விட்டீரோ அந்த உம்முடைய மனைவியரையும், உமக்கு(ப் போரில் எளிதாக) அல்லாஹ் அளித்துள்ளவர்களில் **உம் வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்டவர்களையும், நாம் உமக்கு ஹலாலாக்கி இருக்கின்றோம்**; . . .

முடிவாக, இஸ்லாமில் இருக்கும் "நாடுகளை பிடிக்கும்" கோட்பாட்டனால், உலக மக்களுக்கு தீமை உண்டாகிறது, சில நாடுகளில் முஸ்லிம்களுக்கும் தீமையே!

குர்ஆன் சொன்னதையே ஐஎஸ் ஐஎஸ் தீவிரவாதிகள் செய்கிறார்கள்,முஹம்மதுவும் செய்துக்காட்டியுள்ளார்.



**கேள்வி 37:** இஸ்லாமில் நல்ல கட்டளைகள் இல்லையா? இஸ்லாமில் ஆன்மீகம் இல்லையா? ஏன் தீயவைகளை மட்டுமே பார்க்கிறீர்கள்?

**பதில் 37:** இஸ்லாமில் ஆன்மீகம் இருக்கிறது, நல்ல கட்டளைகளும் இருக்கிறது, இல்லை என்றுச் சொல்லவில்லை. ஆனால் இஸ்லாமில் உள்ள பல கட்டளைகள் சமுதாயத்திற்கு கேடுவிளைக்கும் என்பது தான் நம் வாதம்.

இஸ்லாமிலும் சரி, முஹம்மதுவின் போதனைகளிலும் சரி, பெற்றோர்களை கவுரப்படுத்துங்கள், அவர்களுக்கு கீழ்படியுங்கள், தர்மம் செய்யும், பசியுள்ளவனுக்கு உணவு கொடுங்கள் போன்ற நல்ல கட்டளைகளை காணமுடியும். இஸ்லாமில் உள்ள தொழுகை சம்மந்தப்பட்ட கட்டளைகள், ஹஜ் செய்வது, இன்னும் இருக்கின்ற பல ஆன்மீக கட்டளைகள் முஸ்லிம்களின் சொந்த நடத்தைகள் சம்மந்தப்பட்டது, அவைகளினால் எந்த பிரச்சனையும் சமுதாயத்திற்கு இல்லை.

இதே குர்ஆனில், வலியச் சென்று போர் புரிந்து, பெண்களை செக்ஸ் அடிமைகளாக விற்றுவிடுங்கள், திருமணம் செய்துக்கொள்ளாமலேயே அந்த பெண்களோடு உடலுறவு கொள்ளுங்கள் (இதை நாம் விபச்சாரம் என்றும் கற்பழிப்பும் கூறுகிறோம்) என்றும் சொல்லப்பட்டுள்ளது.

குர்ஆனிலிருந்தும், இஸ்லாமிலிருந்தும் இப்படிப்பட்ட சமுதாயத்திற்கு கேடு விளைவிக்கும் கட்டளைகளை நீக்கிவிட்டால், இஸ்லாம் ஒரு நல்ல மார்க்கமாக மாறும். அப்போது இஸ்லாமை பின்பற்றினால் சொர்க்கம் போகமுடியுமா? என்று கேட்டால், அதற்கான பதில் வேறு கேள்வியில் பார்ப்போம்.



**கேள்வி 38:** முஸ்லிம்களும் கிறிஸ்தவர்களும் ஒரே இலக்கை நோக்கிச் செல்பவர்கள் அல்லவா? செல்லும் வழி தான் வித்தியாசமானது என்று நான் சொல்கிறேன், உங்கள் கருத்து என்ன??

**பதில் 38:** மேலோட்டமாக பார்த்தால், இஸ்லாமும் கிறிஸ்தவமும் ஒரே இலக்கை நோக்கிச் செல்கின்ற இரண்டு வழிகள் போன்று தெரியும், ஆனால் உண்மையில் பைபிள் காட்டும் வழி வேறு, அதற்கு நேர் எதிரான வழியை குர்ஆன் காட்டுகின்றது என்பதுதான் உண்மை.

**இஸ்லாமின் இலக்கு வேறு, கிறிஸ்தவத்தின் இலக்கு வேறு.**

பைபிளின் நிகழ்ச்சிகளை குர்ஆன் மறுபதிவு செய்ததினால், பைபிளின் அடிப்படை கோட்பாடுகளைத் தான் குர்ஆனும் முன்மொழிகிறது என்று நினைப்பது அறியாமையாகும்.

1. குர்ஆனை கொடுத்தவன் வேறு, பைபிளை கொடுத்தவர் வேறு.
2. இயேசுவின் போதனை வேறு, முஹம்மதுவின் போதனை வேறு.
3. பைபிளின் ஆன்மீகம் வேறு, குர்ஆனின் ஆன்மீகம் வேறு.
4. இயேசு சொன்ன பரலோகம் வேறு, முஹம்மது காட்டிய சொர்க்கம் வேறு.
5. இயேசு சொன்ன போராட்டம் வேறு, முஹம்மது கற்றுக்கொடுத்த ஜிஹாத் வேறு.
6. இயேசுவின் படி "சமாதானம்" என்பது வேறு, முஹம்மதுவின் படி "சமாதானம்" என்பது வேறு.
7. இயேசுவின் அரசு வேறு, முஹம்மதுவின் அரசு வேறு.

இரண்டு புத்தகங்களையும் முழுவதுமாக படிக்காமல், அரைகுறையாக கற்றுக்கொண்டு அவைகளை ஒப்பிட்டுப் பார்த்தால் இரண்டும் ஒன்று போல தெரியும். அனைத்து ஆறுகளும் கடலில் சேர்வது போல, அனைத்து மதங்களும் அந்த ஒரே இறைவனை அடையும் வழியல்லவா? என்று சில ஆன்மீக வியாபாரிகள் சொல்வதைக் கேட்டு ஏமாறவேண்டாம் என்று எச்சரிக்கிறேன்.

குர்ஆனின் முதல் 10 அத்தியாயங்களையும், புதிய ஏற்பாட்டின் முதல் புத்தகமாகிய மத்தேயு நற்செய்தி நூலின் முதல் 10 அத்தியாயங்களையும் படித்துப் பார்த்தால், இவ்விரண்டு மார்க்கங்களுக்கு இடையே இருக்கும் வித்தியாசத்தை சுயமாக நீங்களே கண்டுக்கொள்வீர்கள், மற்றவர்களிடம் கேட்க வேண்டிய அவசியமிருக்காது.

முக்கியமாக, மத்தேயு நற்செய்தி நூலின் அத்தியாயங்கள் 5,6 & 7 ஐ படித்துப் பாருங்கள் மேலும் குர்ஆனின் இரண்டாம் அத்தியாயத்தை படித்து ஒப்பிட்டுப் பாருங்கள்.



**கேள்வி 39:** உலக பொருட்களுக்காக முஸ்லிம்களையே சஹாபாக்கள் கொலை செய்தார்களா? இது நம்பும்படி இல்லையே!

**பதில் 39:** குரு எப்படியோ அப்படியே சீடர்களும் இருப்பார்கள். ஒரு மனிதன் எவைகளை அதிகமாக கேட்கிறானோ, சிந்திக்கிறானோ அவைகளைப்போலவே அவன் மாறிவிடுகின்றான். அன்பு பற்றியும், மற்றவர்களை நேசிப்பது பற்றியும் ஒரு மனிதன் பல ஆண்டுகள் போதிக்கப்பட்டால், அதன் பாதிப்பு நிச்சயமாக அவனது வாழ்வில் காணப்படும். அதே போல, போர்கள், சண்டைகள், வழிப்பறி கொள்ளைகள், கொலைகள் என்று இவ்விதமான விவரங்களையே ஒரு மனிதன் அதிகமாக கேட்டு, அவைகளில் அதிகமாக போதிக்கப்பட்டால், 'வாய்ப்பு' கிடைக்கும் போது, அவனுக்குள் வாழும் மிருக குணங்கள் அப்படியே வெளிப்பட்டுவிடும்.

இதைத் தான் இந்த நிகழ்ச்சியில் நாம் காணப்போகிறோம்.

முஹம்மது மக்காவை தாக்க முடிவு செய்தார். ஆனால் இந்த விஷயம் யாருக்கும் தெரியக்கூடாது என்பதற்காக, தன் சகாக்களில் 8 நபர்களை தெரிவு செய்து, "இழம்" என்ற இடத்திற்கு அனுப்பினார். இதன் மூலமாக, முஹம்மது மக்காவை தாக்காமல், தன் கவனத்தை வேறு இடத்தை நோக்கி வைத்திருக்கிறார் என்று எல்லாரும் எண்ணவேண்டும் என்று நினைத்தார்.

முஹம்மதுவின் கட்டளையினால் இவர்களும் சென்றார்கள். சென்ற இடத்தில் ஒரு மேய்ப்பன் இவர்களை கடந்துச் சென்றான், அப்படி செல்லும் போது அவன் "இவர்களுக்கு சலாம் கூறினான்". இருந்தபோதிலும், இவனைக் கொன்று இவனது ஆடுகளை எடுத்துக்கொண்டார்கள். இதனை மதினாவிற்கு வந்து முஹம்மதுவிடம் சொன்ன போது, அல்லாஹ் ஒரு வசனத்தை (குர்-ஆன் 4:94) இறக்கினான்.

**பீஜே தமிழாக்கம் குர்-ஆன் 4:94**

நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் அல்லாஹ்வின் பாதையில் (போருக்குச்) சென்றால் தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள்! **உங்களுக்கு ஸலாம் கூறியவரிடம் இவ்வுலக வாழ்க்கையின் பொருட்களைப் பறிப்பதற்காக ''நீ நம்பிக்கை கொண்டவன் இல்லை'' என்று கூறி விடாதீர்கள்!** அல்லாஹ் விடம் ஏராளமான செல்வங்கள் உள்ளன. இதற்கு முன் நீங்களும் இவ்வாறே இருந்தீர்கள். அல்லாஹ் உங்களுக்கு அருள் புரிந்தான். எனவே தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள்! நீங்கள் செய்வதை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கிறான்.

**முஹம்மது ஜான் டிரஸ்ட் தமிழாக்கம் - 4:94**

முஃமின்களே! அல்லாஹ்வுடைய பாதையில் (போருக்கு) நீங்கள் சென்றால், (போர் முனையில் உங்களை எதிர்த்துச் சண்டை செய்வோர் முஃமின்களா அல்லது மற்றவர்களா என்பதைத்) தெளிவாக அறிந்து

கொள்ளுங்கள். **(அவர்களில்) எவரேனும் (தாம் முஃமின் என்பதை அறிவிக்கும் பொருட்டு) உங்களுக்கு "ஸலாம்" சொன்னால், இவ்வுலக வாழ்க்கையின் அற்பமான அழியக் கூடிய பொருட்களை அடையும் பொருட்டு "நீ முஃமினல்ல" என்று கூறி (அவரைக் கொன்று) விடாதீர்கள்;** அல்லாஹ்விடம் ஏராளமான பொருட்கள் இருக்கின்றன; இதற்கு முன்னர் நீங்களும் (பயந்து பயந்து) இவ்வாறே இருந்தீர்கள் - அல்லாஹ் உங்கள் மீது அருள் புரிந்தான்; எனவே (மேலே கூறியாவாறு போர் முனையில்) நீங்கள் தெளிவு படுத்திக் கொள்ளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் நீஙகள் செய்வதையெல்லாம் நன்கு அறிந்தவனாகவே இருக்கின்றான்.

இந்த வசனத்தின் மூலமாக, ஒரு முஸ்லிம் இன்னொருவருக்கு சலாம் சொன்னபோதும், உலக பொருட்களுக்காக, அவனை கொன்றது தவறு என்று அல்லாஹ் கூறுகின்றான். இப்னு கதீர் போன்ற குர்-ஆன் விரிவுரையாளர்களின் படி, "முஸ்லிம்கள் தவறுதலாகக் கூட இன்னொரு முஸ்லிமை கொல்லக்கூடாது" என்று கூறுகிறார்கள்.

மேற்கண்ட நிகழ்ச்சி, அந்த காலத்தில் முஹம்மதுவின் சஹாபாக்கள் எப்படி நடந்துக்கொண்டார்கள் என்பதைக் காட்டுகிறது. முஹம்மது எப்படியோ அப்படியே சஹாபாக்கள் நடந்துக்கொண்டார்கள் அல்லது அவர்களை உருவாக்கிய இஸ்லாமிய போதனை அவர்களை இப்படி பணத்திற்காக கொலை செய்ய தூண்டியுள்ளது.

**பொறுமையோடு கீழ்கண்ட கேள்விகளை படியுங்கள்? அவைகள் பற்றி சிந்தியுங்கள்!**

1) முஹம்மதுவின் தோழர்கள் வளர்க்கப்பட்ட விதத்தைப் பார்த்தீர்களா? செல்வத்திற்கு ஆசைப்பட்டு, "நான் ஒரு முஸ்லிம்" என்றுச் சொன்னாலும், அதை நம்பாமல் அவனை கொன்று, அவனது ஆடுகளை/ஒட்டகங்களை கொள்ளையடித்து மதினா வந்துள்ளார்கள்.

2) முஸ்லிம்களாக பல ஆண்டுகள் முஹம்மதுவோடு வாழ்ந்தாலும், இப்படி கொல்வது தவறு என்று அவர்களின் மனசாட்சி அவர்களை எச்சரிக்கவில்லை என்பதை கவனிக்கவேண்டும்.

3) ஒரு காட்டுமிராண்டி நடந்துக்கொள்வது போலவே இவர்கள் நடந்துக்கொண்டார்கள். பணம் கிடைத்தால் எதையும் செய்வார்களா இவர்கள்?

4) இதனை அறிந்த பிறகு, அல்லாஹ் வசனத்தை இறக்குகிறார் – முஸ்லிம்களா இல்லையா என்பதைப் பார்த்து கொலை செய்யுங்கள் என்று அறிவுரைக் கூறுகிறார். புனிதப்போர் என்ற வேஷம் போட்டு செல்லும் போது, , முஸ்லிம்கள் அல்லாதவர்களை எந்த காரணமும் இல்லாமல் கொலை செய்யலாம் என்பது தானே, இதன் கருத்து.

5) இந்த கொலையை செய்தவர்களுக்கு அல்லாஹ் என்ன தண்டனை கொடுத்தான் என்று உங்களால் கண்டுபிடிக்கமுடியுமா?

6) இந்த சஹாபாக்கள் அழிந்துப்போகும் செல்வத்தின் மீது ஆசை வைத்து இப்படி கொலை செய்துள்ளார்கள் என்று அல்லாஹ் வெளிப்படையாக இவர்களை குற்றப்படுத்துகிறான். இவர்களுக்கு என்ன தண்டனை உங்கள் இறைத்தூதர் கொடுத்தார்?

7) தாயைப்போல பிள்ளை, நூலைப்போல சேலை என்றுச் சொல்வார்கள், அதுபோல முஹம்மதுவின் சீடர்கள் அவரைப் போலவே வாழ்ந்து இருக்கிறார்கள்.

8) ஒருவேளை அந்த நபர் சஹாபாக்களுக்கு சலாம் சொல்லாமல் சென்று இருந்தால், அப்போது அவனை கொன்று அவனது ஆடுகளை சஹாபாக்கள் திருடியிருந்தால், இந்த வசனம் இறங்கியிருக்குமா? இறங்கியிருக்காது. முஸ்லிம்களை கொன்றால் தான் அல்லாஹ் துக்கப்படுவான், முஸ்லிமல்லாதவர்களை கொன்றால், அவன் இப்படி துக்கமடையமாட்டான்.

மேற்கண்ட குர்ஆன் வசனத்திலிருந்தும், முஸ்லிம் அறிஞர்களின் விரிவுரைகளிலிருந்தும் அறிவது என்னவென்றால், ஆதிகால முஸ்லிம்கள் உலக செல்வத்துக்காக முஸ்லிம்களையும் மற்றவர்களையும் கொலை செய்வது ஒரு சாதாரணம் காரியமாக அவர்களுக்கு இருந்துள்ளது. என்ன தான் அல்லாஹ் அவர்களை கடிந்துக்கொண்டாலும், அது முஸ்லிம்களை கொன்றதால் தான் என்பது இதன் மூலம் அறியமுடிகின்றது.



**கேள்வி 40:** முஸ்லிம்கள் இந்த கேள்விகளை தங்களுக்கு தாங்களே கேட்டுப்பார்த்து பதில்களை கண்டுபிடிப்பார்களா?

**பதில் 40:** ஒவ்வொரு பக்தியுள்ள முஸ்லிமும், காலை எழுந்திருக்கும் நேரம் முதல் இரவு படுக்கப்போகும் வரை பல காரியங்களை அல்லாஹ்வை திருப்திபடுத்துவதற்காக செய்கின்றான், இப்படி செய்வதில் தவறேதுமில்லை. ஆனால், தான் ஏன் இப்படி செய்கின்றான், இதற்கான காரணம் என்னவென்று தெரிந்துக்கொண்டு செய்தால், ஆன்மீகத்தில் முன்னேறலாம் என்பது என் கருத்து.

**உதாரணத்திற்கு கீழ்கண்ட கேள்விகளை கேட்டுப்பார்க்கலாம்:**

1) தொழும் போது ஒரே ஒரு நிலையில் உட்கார்ந்து/நின்றுக்கொண்டு தொழாமல், ஏன் பல நிலைகளில் தொழவேண்டும்? ஒரே இடத்தில் உட்கார்ந்து/நின்று தொழுதால், ஏன் அல்லாஹ் ஏற்றுக்கொள்ளமாட்டான்?

2) கழிவறையில் ஒரு முஸ்லிம் நுழையும் போது எந்த காலை முதலாவது வைக்கவேண்டும், செருப்பு போடும் போது முதலாவது எந்த காலில் போடவேண்டும் என்று சொல்லும் அளவிற்கு ஏன் அல்லாஹ் இறங்கிவந்து கட்டளைகளைத் தருகின்றான்? உலகை படைத்த சர்வ வல்லவரான சர்வ வியாபியான அல்லாஹ் இந்த சின்ன விஷயத்துக்கு ஏன் இவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கவேண்டும்?

3) அற்பமான செயலாகிய "ஒரு முஸ்லிம் சிறுநீர் கழித்துவிட்டு, கற்களால் துடைக்கும்போது", ஒற்றைப்படை கற்களால் செய்யட்டும் என்று சொல்லும் அளவிற்கு ஏன் இவ்வளவு கீழே இறங்கிச் சொல்லவேண்டும்? ஒருவேளை இரட்டைப்படை கற்களால் செய்தால் கோபம் கொள்வானா அல்லாஹ்?

4) சாப்பிடும் போது எந்த கையால் சாப்பிடவேண்டும் என்று சொல்லும் அளவிற்கு சர்வ ஞானியான அல்லாஹ்விற்கு என்ன வந்தது? வலது கையால் சாப்பிடவேண்டும் குடிக்கவேண்டும் என்று அல்லாஹ் சொல்வதிலிருந்து இது ஒருவேளை முஹம்மதுவின் சொந்த கற்பனையாக இருக்கும் என்று சந்தேகம் வருகின்றதல்லவா?

5) மீசையை ஒட்ட கத்தரியுங்கள், தாடியை வளர்த்துவிடுங்கள் இஸ்லாமியரல்லாத மக்கள் செய்வதற்கு எதிராக நீங்கள் செய்யுங்கள் என்று சொல்லும் அளவிற்கு அப்படி என்ன அவசியம் அல்லாஹ்விற்கு? கேவலமான சின்ன காரியங்களுக்கு ஏன் இவ்வளவு முக்கியத்துவத்தை அல்லாஹ் கொடுத்திருக்கின்றான்?

6) தலை முடிக்கும் தாடிக்கும் சாயம் போடுங்கள் என்ற கட்டளை கொடுத்தான் அல்லாஹ் என்பதிலிருந்து, இந்த உலகத்தில் மனிதனுக்கு கொடுப்பதற்கு இதைவிட பெரிய அறிவுரை இல்லை என்று சர்வவல்லவன் நினைத்துவிட்டானா? நம்முடைய தலைமுடி மற்றும் தாடி என்ன கலர் இருக்கிறது என்பதைப் பற்றி அக்கரை கொள்ளும் அளவுக்கு தலைமுடி தாடியின் கலர் அவ்வளவு முக்கியமானதா அல்லாஹ்விற்கு?

7) ஏன் ஆண்கள் பட்டுத்துணி அணியக்கூடாது என்று அல்லாஹ் சொல்கிறான்? நாம் நாகரீக உடை அணிந்தால் போதாதா? "அது எந்த வகை துணியாக இருக்கக்கூடாது" என்று ஏன் அல்லாஹ் சொல்கிறான், அறிவுடமையோடு சிந்தித்துப் பார்த்தால் ஏதாவது பதில் கிடைக்குமா?

8) தொழும் போது யாராவது காற்றுவிட்டால், அவரது தொழுகையை ஏன் அல்லாஹ் ஏற்றுக்கொள்வதில்லை? இது வேடிக்கையாக உள்ளதல்லவா? நடந்தது நடந்துவிட்டது, பிரச்சனை வந்தால், அது காற்றுவிட்டவருக்கு பக்கத்தில் நின்று தொழுபவருக்கு வருமே தவிர, சர்வ வல்லவனுக்கு எப்படி வரும்?

9) தொழும் போது வானத்தைப் பார்த்தால், கண்களை பிடுங்கும் அளவிற்கு கீழ்தரமான கட்டளை கொடுக்கவேண்டிய அவசியமென்ன அல்லாஹ்விற்கு?

மேற்கண்ட விவரங்கள் புகாரி, முஸ்லிம் போன்ற ஹதீஸ்களில் முஹம்மது கூறியுள்ளார். இவைகளும் அல்லாஹ் தான் முஹம்மதுவிற்கு சொல்லியுள்ளார், முஹம்மது சுயமாக இவைகளைச் சொல்லவில்லை.

**இதைவிட, அல்லாஹ் கீழ்கண்ட விவரங்களை குர்ஆனில் கொடுத்திருந்தால், முஸ்லிம்கள் நிம்மதியாக வாழ்ந்திருப்பார்கள்.**

1) மேற்கண்ட அற்பமான செயல்களுக்கு அறிவுரை சொன்னதைவிட, முஸ்லிம்களுக்கு ஐந்து கடமைகள் உள்ளன, அவைகள் இவைகள் தான் என்று குர்ஆனில் சொல்லியிருக்கலாமே! ஒரு மனிதன் காற்றுவிடுவது பற்றி அக்கரைக் கொண்ட அல்லாஹ், இதற்கு அக்கரைக் கொள்ளவில்லை ஏன்?

2) ஒரு முஸ்லிம் எப்படி தொழவேண்டும் என்ற அறிவுரையை, செய்யும் முறையை அல்லாஹ் குர்ஆனில் விளக்கியிருந்திருக்கலாம். இதனை அல்லாஹ் அற்பம் என்று நினைத்துவிட்டானா? அல்லது கழிவறையில் எந்த காலை முதலாவது வைக்க்வேண்டும் என்று முஸ்லிம்களுக்குச் சொல்வது மிகவும் முக்கியமான அறிவுரையாக நினைத்துள்ளானா?

3) முஹம்மதுவிற்கு பிறகு அடுத்த கலிஃபாக்களை எப்படி நியமிக்க வேண்டும் என்று குர்ஆனில் தெளிவாகச் சொல்லியிருந்தால், சன்னி, ஷியா பிரிவுகள் உண்டாகியிருக்காது. ஆனால், எந்த கையால் சாப்பிடவேண்டும் என்பது மட்டும் அல்லாஹ்விற்கு பெரிய விசயமாக மாறிவிட்டது.

இப்படி, பல கேள்விகளை முஸ்லிம்கள் கேட்டு, அவர்களின் அறிஞர்களிடம் பதில்களைப் பெறவேண்டும், சிந்திக்கவேண்டும்.



**கேள்வி 41: உலக நாடுகள் ஏன் அடிக்கடி இஸ்லாமோடு மோதுகின்றன? இஸ்லாமை விமர்சிக்கின்றன?**

**பதில் 41:** நீங்கள் தொடர்ந்து உலக நாடுகளின் செய்திகளை படிப்பவர்களாக இருந்தால், அடிக்கடி இஸ்லாமின் பெயர் செய்திகளில் அடிபடுவதை காணமுடியும்.

1) முஸ்லிம் பெண்கள் அணியும் நிகாஃப் என்ற முகத்திரையை ஒரு குறிப்பிட்ட நாடு தடை செய்தது.

2) மூன்று தலாக் என்ற சட்டத்தை அரசு நீக்கியது

3) இஸ்லாமிய தீவிரவாதிகளின் வெடிகுண்டு தாக்குதல் அவ்வப்போது செய்திகளில் வருகிறது

4) ஒரு வேடிக்கையான இஸ்லாமிய சட்டத்தை/வழிகாட்டுதலை (ஃபத்வாவை) ஒரு இமாம் கொடுத்தார், இதைப் பார்த்து உலக நாடுகள் நகைக்கின்றது.

5) 70 வயது முதியவர், 9 வயது சிறுமியை திருமணம் செய்துக்கொண்டார்

6) லவ் ஜிஹாத் என்ற செய்தி

7) 21ம் நூற்றாண்டிலும் மிகவும் கொடுமையான ஷரியா தண்டனைகள் பற்றிய செய்தி

போன்ற செய்திகளை மேலோட்டமாக படிக்கும் போது, ஏன் இஸ்லாம் மட்டும் அதிகமாக செய்திகளில் வருகின்றது என்ற சந்தேகம் நமக்கு வரும். ஆனால், அதே செய்திகளை இன்னொரு முறை ஆழமாக படித்துப் பாருங்கள், அவைகள் நமக்கு "விசித்தரமானவைகளாக தோன்றும்", அதாவது உலகம் ஒரு வழியில் சென்றால், இஸ்லாம் வேறு வழியில் செல்லும்.

இஸ்லாம் தனி வழியை தெரிந்துக்கொண்டுச் செல்வதில் தவறில்லை, ஆனால், அது சமுதாயத்திற்கு கேடு விளைவிக்கும் வகையில் இருப்பதாக உலகம் காண்பதினால், எதிர்வினை அதிகமாக உள்ளது. மேலும் நகைப்பிற்குரிய விஷயங்களுக்கு இஸ்லாம் தேவையில்லாத முக்கியத்துவம் கொடுத்து நடந்துக்கொள்வதினால், அதனை வேறு ஒரு கண்ணோட்டத்தில் உலகம் காண்கிறது.

மேற்கண்ட ஒவவொரு செய்திக்கும் ஒரு காரணத்தை ஒரு சப்பைக் கட்டு பதிலை முஸ்லிம்கள் சொல்வார்கள், ஆனால் உலக மக்களுக்கு அவைகள் கேலியாக தெரிகின்றன, எனவே இஸ்லாமைக் கண்டு உலகம் முகத்தை சுளிக்கிறது. இதனை புரிந்துக்கொள்ளாத முஸ்லிம்கள் "இஸ்லாமை காரணமில்லாமல் உலகம் விமர்சிக்கிறது" என்று வேதனைப்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள்.

முஸ்லிம்கள் சிறிது தற்பரிசோதனை செய்துக்கொண்டால், பெரும்பான்மை பிரச்சனைகள் தீரும். நான் சொல்வதை உடனே நீங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டாம், இங்கு கொடுக்கப்பட்ட இதர கேள்வி பதில்களை படித்துப் பாருங்கள், 'உலகில் இஸ்லாம் எப்படி நடந்துக்கொள்கிறது, இதற்கு யார் காரணம்' என்பது புரியும்.



**கேள்வி 42: பிரான்ஸும் முஹம்மதுவின் கார்ட்டூனும் – "அக்டோபர் 2020"**

**பதில் 42**: முஹம்மதுவின் கார்ட்டூனைக் காட்டி, "பேச்சு, கருத்து சுதந்திரம்" பற்றி வகுப்பறையில் பேசிய ஒரு பள்ளி ஆசிரியரை, 18 வயது முஸ்லிம் வாலிபன் கொலை செய்தான். இதனைத் தொடர்ந்து, ஒரு சர்ச்சில் புகுந்து மூன்றுபேரை கொன்றுள்ளான் இன்னொரு வாலிபன், பாகிஸ்தானில் வாழும் இவனது

பெற்றோர்கள், "என் மகன் பற்றி நான் பெருமிதம் கொள்கிறேன்" என்று கூறியுள்ளார்.

இந்த இரண்டு நிகழ்ச்சிகள் தான் "நான் இந்த கேள்வி பதில்களை (பாகம் 17ஐ) எழுத வைத்தது." இஸ்லாமுக்கு சகிப்புத் தன்மையும், பொறுமையும் உண்டா இல்லையா? என்பதை பல சான்றுகளோடுச் சொல்லி, ஒரு விழிப்புணர்வை உண்டாக்கவே இந்த பதிவு.

இதைப் பற்றிய செய்திகளை கீழ்கண்ட தொடுப்புக்களில் படிக்கலாம்.

**கார்ட்டூன்களை மாணவர்களிடத்தில் காட்டிய பிரெஞ்சு ஆசிரியரின் தலை துண்டிப்பு : 'இஸ்லாமிய பயங்கரவாத வெறிச்செயல்' என்று பிரான்ஸ் அதிபர் கடும் கண்டனம்**

நபிகள் நாயகம் குறித்த கார்ட்டூன்களை மாணவர்களிடத்தில் காட்டி, ‘பேச்சு, கருத்து சுதந்திரம்’ பற்றி வகுப்பறையில் விவாதத்தை நடத்திய பிரெஞ்சு ஆசிரியரின் தலை பள்ளிக்கு வெளியே துண்டிக்கப்பட்ட பயங்கர கொலை பிரான்ஸில் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது.

இதனை பிரான்ஸ் அதிபர் இமானுயெல் மேக்ரோன் “இஸ்லாமிய பயங்கரவாதத் தாக்குதல்” என்று கடுமையாக தாக்கிப் பேசினார். . .

2015-ல் சார்லி ஹெப்டோ என்ற நையாண்டிக்கான இதழில் கார்ட்டூன் வெளியானதையடுத்து தாக்குதல் நடத்தப்பட்டது. பாரிசில் உள்ள யூத சூப்பர் மார்க்கெட்டிலும் பயங்கரவாதத் தாக்குதல் நடத்தப்பட்டது.

கொல்லப்பட்ட ஆசிரியர் வரலாற்றுப் பாட ஆசிரியர் ஆவார், வகுப்பறையில் இவர் நபிகள் கார்ட்டூனைக் காட்டி பேச்சு சுதந்திரம், கருத்துச் சுதந்திரம் பற்றி பேசியுள்ளார்.

ஆனால் நபிகள் கார்ட்டூனை காட்டும் முன்பு வகுப்பறையில் இருந்த முஸ்லிம் மாணவர்களை வெளியே சென்று விடுமாறு அவர் கூறியதாகத் தெரிகிறது.

இது குறித்து மாணவர் பெற்றோர் ஒருவர் ஆங்கில செய்தி ஏஜென்சிக்கு தெரிவிக்கும்போது, “வெளியே போய்விடுங்கள் உங்கள் உணர்வுகளை நான் புண்படுத்த விரும்பவில்லை” என்று ஆசிரியர் கூறியதாக தெரிவித்தனர். . . .

Source: **https://www.hindutamil.in/news/world/591982-teacher-beheaded-in-france-after-showing-mohammed-cartoons-1.html**

**பிரான்ஸ் நாட்டில் தேவாலயத்தில் புகுந்து பயங்கரவாதி தாக்குதல்: 3 பெண்கள் உயிரிழப்பு!**

Source: **https://www.ns7.tv/index.php/ta/tamil-news/world/29/10/2020/terror-attack-nice-france-after-three-killed-attacker-near-nice-church**

1970ம் ஆண்டு முதல் அக்டோபர் 2020ம் வரை பிரான்ஸ் நாட்டில் நடந்துள்ள தீவிரவாத தாக்குதல்களின் பட்டியலை இந்த தொடுப்பில் படிக்கலாம். இதில் இஸ்லாமிய தீவிரவாதிகளின் தாக்குதல்களும், இதர குழுக்களின் தாக்குதல்களும் அடங்கியுள்ளது.

Source: **https://en.wikipedia.org/wiki/List_of_terrorist_incidents_in_France**

இந்த 2020ம் ஆண்டு மட்டும் இன்று வரை 8 தீவிரவாத தாக்குதல்களை முஸ்லிம்கள் பிரான்ஸில் செய்துள்ளார்கள். அந்த பள்ளி ஆசிரியர் முஹம்மதுவின் கார்ட்டூனைக் காட்டி பேசியதால் தான் முஸ்லிம்கள் இப்படி நடந்துக்கொண்டார்கள் என்று சொல்லக்கூடாது.



**கேள்வி 43: இஸ்லாம் விமர்சனங்களுக்கு அப்பாற்பட்டதென்று முஸ்லிம்கள் ஏன் நம்புகிறார்கள்?**

**பதில் 43**: ஒவ்வொரு மதமும் ஒரு நம்பிக்கையின் மீது சார்ந்துள்ளது. ஒரு மதம் என்று எடுத்துக்கொண்டால், அதற்கென்று ஒரு வேத புத்தகம் இருக்கும், அதற்கென்று ஒருவர் தோற்றுவித்தவர் இருப்பார், மேலும் ஒரு இறைவன் இருப்பான்/ர்.

முஸ்லிம்களின் வேதம் குர்ஆன், தோற்றுவித்தவர் முஹம்மது மற்றும் இறைவன் அல்லாஹ். இந்த மூன்றை விமர்சிக்கக்கூடாது என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள், இது தவறு.

இதே போன்று தான் கிறிஸ்தவர்களுக்கும், பைபிளும், யெகோவா தேவனும், இயேசுவும் இருக்கிறார்கள். ஆனால், இவர்களை விமர்சிப்பவர்களை கிறிஸ்தவர்கள் கொலை செய்வதில்லை.

பைபிளின் தொடர்ச்சி தான் குர்ஆன் என்றும், இயேசுவிற்கு அடுத்தபடியாக அவரது அடிச்சுவடிகளில் வந்தவர் முஹம்மது என்று முஸ்லிம்கள் சொன்னாலும், இது உண்மையில்லை. இயேசு விமர்சனத்திற்கு அப்பாற்பட்டதென்று கிறிஸ்தவர்கள் நம்புவதில்லை, அப்படி விமர்சிக்கப்படும் போது, அமைதியான முறையில் பதில் சொல்கிறார்கள்.

ஆனால், முஸ்லிம்கள் இப்படி இல்லை ஏனென்றால், முஹம்மதுவின் வாழ்க்கை சரித்திரத்தை கவனிக்கும்போது, அவர் ஒரு சர்வாதிகாரி போன்று நடந்துக்கொண்டார். தம்மை விமர்சித்தவர்களை கொன்று குவித்தார். இஸ்லாமை ஏற்காதவர்கள் மீது போர் தொடுத்தார், சண்டையிட்டார். இதையே அவருக்கு அடுத்தபடியாக வந்த முஸ்லிம் தலைவர்களாகிய கலிஃபாக்களும் செய்தார்கள்.

தங்கள் முஹம்மது என்ன செய்தாரோ அதையே இன்றைய முஸ்லிம்கள் செய்கிறார்கள். இஸ்லாமை விமர்சிப்பவர்களை கொலை செய்கிறார்கள். இந்த காரியத்தை சிலர் செய்தாலும், பெரும்பான்மை முஸ்லிம்கள் நேரடியாகவோ மறைமுகமாகவோ இதனை ஆதரிக்கிறார்கள்.

முஸ்லிம்கள் ஏன் "இஸ்லாம் விமர்சனத்திற்கும், ஆய்விற்கும் அப்பாற்பட்டதென்று" நம்புகிறார்கள் என்ற கேள்விக்கான பதில் "இஸ்லாமிய நபி முஹம்மதுவின் வாழ்க்கை வரலாற்றில் காணப்படும்".

நான் சொல்வதை நம்பாதவர்கள், கீழ்கண்ட புத்தகங்களை மிகவும் சீரியஸாக படியுங்கள்:

1) குர்ஆன் தமிழாக்கத்தை படியுங்கள் (ஆங்கிலத்திலும் படியுங்கள்)

2) குர்ஆனின் ஒவ்வொரு வசனத்தின் பின்னணியை, விளக்கத்தை இஸ்லாமிய தஃப்ஸீர்களிலிருந்து (விளக்கவுரைகளிலிருந்து) படியுங்கள்.

3) ஹதீஸ் தொகுப்புக்களை முக்கியமாக புகாரி மற்றும் முஸ்லில் ஹதீஸ்களை முழுவதுமாக படித்து புரிந்துக்கொள்ளுங்கள்.

4) முஹம்மதுவின் ஸீராவை (வாழ்க்கை வரலாறு) படியுங்கள், முக்கியமாக இப்னு இஷாக்கின் ஸீரத் ரஸூலுல்லாஹ், தபரியின் சரித்திரம், இப்னு இஷாமின் சரித்திரத்தை படியுங்கள்.

5) இஸ்லாமை விமர்சித்து எழுதப்பட்ட புத்தகங்களையும் படியுங்கள், அப்போது தான் சில உண்மைகள் வெளியே தெரியும்.

அன்று தம்மை விமர்சித்தவர்களை முஹம்மதுவை கொன்று குவித்தார், இது தான் இறைத்தூதர் காட்டிய வழியென்று நம்பி முஸ்லிம்கள் அதனை இன்று பின்பற்றுகிறார்கள்.



**கேள்வி 44: இஸ்லாம் என்றால் அமைதி என்று அர்த்தம், இப்படி இருக்கும் போது, இஸ்லாம் எப்படி வன்முறையைத் தூண்டும்?**

**பதில் 44:**இந்த காலத்தில் இஸ்லாமிய பிரச்சாரம் செய்யும் அறிஞர்கள், மேற்கத்திய நாடுகளில் இஸ்லாமுக்கு நல்ல பெயர் கொண்டு வருவதற்கு, அசாதாரண முயற்சிகளை மேற்கொண்டு வருகிறார்கள். அதாவது, இஸ்லாம் என்பது வன்முறையை வெறுத்து, அமைதியை விரும்பும் மதம் என்று காட்ட முயற்சி எடுத்துக் கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் புதியதாக விற்கப் பார்க்கும் ஒரு சித்தாந்தம் என்னவென்றால், "**இஸ்லாம் (Islam)** " என்ற தங்கள் மதத்தின் பெயரின் பொருள் "**அமைதி (Peace)**" என்றுச் சொல்கிறார்கள். அமைதி என்ற பொருள் தரும் அரபி வார்த்தை "**சலாம் (Salam)**" என்பதாகும். அவர்கள் தங்கள் புதிய சித்தாந்தத்தை சொல்வதற்கு அடிப்படையாக அரபி மொழியில்

இந்த இரண்டு வார்த்தைகளுக்கும் ஒரே மூல வார்த்தை இருப்பதை காரணம் காட்டுகிறார்கள்.

அரபி மொழியை பேசத் தெரியாதவர்களுக்கு, மற்றும் இஸ்லாம் பற்றி தெரியாதவர்களுக்கு வேண்டுமானால், இஸ்லாமிய அறிஞர்கள் இப்படிப்பட்ட புதிய சித்தாந்தங்கள் மூலமாக ஏமாற்ற முடியும். ஆனால், இப்படிப்பட்ட பிரச்சாரத்தின் மூலமாக, அரபி மொழி தெரிந்தவர்களையும், இஸ்லாமின் போதனை என்ன என்று புரிந்துக் கொண்டவர்களையும் ஒரு போதும் அவர்கள் முட்டாள்களாக்க முடியாது. இஸ்லாம் என்ற மதம் வன்முறையினால் ஸ்தாபிக்கப்பட்டது மற்றும், இன்று கூட அதே வன்முறையை நம்பி அதை ஒரு கோட்பாடாகக் கொண்டு வாழ்ந்துக்கொண்டு இருக்கிறது. முஸ்லீம்கள் தங்களுக்குள் இருக்கும் உறவுமுறை, மற்றும் அவர்களுக்கும் மற்ற உலக நாடுகளுக்கும் இடையில் இருக்கும் உறவுமுறை எப்போதும் "பயம் அல்லது பீதி" என்பதின் அடிப்படையிலேயே இருந்துள்ளது, இன்னும் அப்படியே இருக்கிறது. "இஸ்லாம்" மற்றும் "சலாம்" என்ற இரண்டு வார்த்தைகள் ஒன்றுக்கு ஒன்று சம்மந்தமில்லாத வார்த்தைகளாகும் மற்றும் இவ்விரண்டு வார்த்தைகள் பெயரிலோ அல்லது பொருளிலோ கூட சம்மந்தப்பட்டவைகள் அல்ல.

அரபி அகராதியில் சில குறிப்பிட்ட வார்த்தைகளின் பொருள் என்ன என்று தெரிந்துக்கொள்ள விரும்பினால், "**வேர் (root)**" வார்த்தை என்றுச் சொல்லக்கூடிய மூன்று எழுத்து சொல்லை நாம் தேடிக் கண்டுபிடிப்பது மிகவும் அவசியமாக உள்ளது. பல வார்த்தைகள் அந்த ஒரு மூல வார்த்தையின் மூலமாக உருவாகியிருக்கும், ஆனால், அவ்வார்த்தைகளின் பொருள்களில் கூட ஒற்றுமை இருக்கவேண்டும் என்ற கட்டாயம் ஒன்றுமில்லை.

"**ச ல ம**" என்ற வார்த்தையிலிருந்து "இஸ்லாம்" என்ற வார்த்தை உருவாகியது, இஸ்லாம் என்றால் "சரணடைதல்" என்றுப் பொருள்.

இதே போல, "சலாம்" என்ற வார்த்தைக்கு "அமைதி" என்றுப் பொருள், இந்த வார்த்தையும் "**ச லி ம**" என்ற வார்த்தையிலிருந்து வந்தது, இதன் பொருள் "காப்பாற்றப்படல் அல்லது ஆபத்திலிருந்து தப்பித்தல்" என்பதாகும்.

இந்த "ச ல ம" என்ற வார்த்தையிலிருந்து வந்த இன்னொரு பொருள் என்னவென்றால், "**பாம்பின் கடி அல்லது பாம்பு கொட்டுதல்**" அல்லது "தோல் பதனிடுதல்" என்பதாகும். ஆக, "இஸ்லாம்" என்ற வார்த்தை "சலாம் - அமைதி" என்ற பொருள் தரும் வார்த்தையோடு சம்மந்தம் உண்டு என்று நாம் சொல்வோமானால், அதே "இஸ்லாம்" என்ற வார்த்தைக்கு "பாம்பின் கடி" அல்லது "தோலை பதனிடுதல்" என்ற வார்த்தைக்கும் சம்மந்தம் கண்டிப்பாக இருக்கவேண்டும் என்ற முடிவிற்கும் நாம் வரலாம் (Hence, if the word Islam has something to do with the word Salam i.e. 'Peace', does that also mean that it must be related to the 'stinging of the snake' or 'tanning the leather'?)

முஹம்மது சுற்றியுள்ள நாடுகளின் அரசர்களுக்கும், தலைவர்களுக்கும் இஸ்லாமையும், தன் அதிகாரத்தையும் ஏற்றுக்கொள்ளும் படியாகவும், தான்

அல்லாவின் தூதர் என்பதை நம்பும்படியும் அவர்களுக்கு கடிதம் மூலமாக அழைப்பு விடுத்தார்கள். அவர் தன் கடிதங்களை இப்படி முடிப்பார், "**அஸ்லிம் தஸ்லம்! (Asllim Taslam)**". இந்த இரண்டு வார்த்தைகளும் "அமைதி" என்ற பொருள் வரும் "ச ல ம" என்ற ஒரே வேர்ச்சொல்லிலிருந்து வந்திருந்தாலும், இந்த இரண்டு வார்த்தைகளில் ஒரு வார்த்தைக்காகிலும் "அமைதி" என்ற பொருள் இல்லை. இவ்விரு வார்த்தைகளின் பொருள் "சரணடை அப்போது நீ பாதுகாப்பாக இருப்பாய்", அல்லது வேறு வார்த்தையில் சொல்லவேண்டுமானால், "சரணடை அல்லது மரணமடை" என்று பொருளாகும். ஆக, தன் மதத்திற்கு சரணடைய மறுக்கும் மக்களை, கொன்று விடுவேன் என்று பயமுறுத்தும் மதத்தில் "அமைதி" என்ற பொருளுக்கு இடமேது?

வேறு வகையில் சொல்லவேண்டுமானால், குர்ஆன் மற்றும் ஹதீஸ்கள், அல்லது அல் -சீரா (முஹம்மதுவின் வாழ்க்கை வரலாறு) என்றுச் சொல்லக்கூடிய இஸ்லாமிய புத்தகங்களில், நிறைய ஆதாரங்கள் காணக்கிடக்கின்றன. அதாவது, இஸ்லாம் அன்று வன்முறையை பின் பற்றாமல் இருந்திருக்குமானால், இஸ்லாம் நிலைத்திருந்திருக்காது அல்லது இன்று இந்த நாள் வரை உயிரோடு இருந்திருக்காது. இதைப் பற்றி ஒரு நல்ல எடுத்துக்காட்டுக்களை சொல்லவேண்டுமானால், "**இஸ்லாமை விட்டு வெளியேறுபவர்களுக்கு எதிரான போர்**" என்ற விவரங்களைச் சொல்லலாம் (The Wars Of Al-Riddah, i.e. ‘the wars against the apostates’).

இந்த "இஸ்லாமை விட்டு வெளியேறுபவர்களுக்கு எதிரான போர்" என்பது முஹம்மது அவர்களின் மரணத்திற்கு பின்பு உடனே ஆரம்பிக்கப்பட்டது. அதிகமாக பயப்படவைத்த தலைவராக இருந்த முஹம்மது அவர்களின் மறைவிற்கு பிறகு, கட்டாயத்தின் பெயரில் இஸ்லாமை தழுவிய அந்த இன (Tribe) மக்கள், நிம்மதி பெருமூச்சு விட்டனர். இஸ்லாமுக்கு எதிராக புரட்சி அல்லது கிளர்ச்சி ஆரம்பமானது, ஒவ்வொரு தலைவராக/நாடாக இஸ்லாமை விட்டு வெளியேற ஆரம்பித்தனர், மற்றும் முஹம்மதுவின் அரசாங்கம் விதித்த வரியை கட்ட மறுத்துவிட்டனர். இந்த புரட்சிக்கு பதில் கொடுக்கும் விதமாக, முதல் காலிஃபா, அபூ பக்கர் அவர்கள், இஸ்லாமை விட்டு வெளியேறும் இவர்களோடு சண்டையிடும் படி தன் இராணுவத்திற்கு கட்டளை பிறப்பித்தார்கள். இஸ்லாமை விட்டு வெளியேற முயற்சி செய்த அந்த மக்கள் அனைவரையும் மறுபடியும் இஸ்லாமின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவருவதற்கு இரண்டு வருடங்கள் பிடித்தன. இந்த போர்கள் செய்யும் படி முதல் காலிஃபா மட்டும் கட்டளையிடவில்லை, இதனை அல்லாவும் அவனது தூதரும் கட்டளையிட்டுள்ளனர்.

இஸ்லாமை விட்டு வெளியேறுபவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்படவேண்டும் என்று குர்ஆன் மிகவும் தெளிவாகச் சொல்கிறது:

“…அவர்கள் அல்லாஹ்வின் பாதையில் ஹிஜ்ரத்* செய்யும் வரையில், அவர்களில் எவரையும் நீங்கள் நண்பர்களாக்கிக் கொள்ளாதீர்கள்! மேலும், அவர்கள் (ஹிஜ்ரத்தைப்) புறக்கணித்துவிட்டால், அவர்களை நீங்கள் எங்குக் கண்டாலும் பிடித்துக் கொன்று விடுங்கள். மேலும், அவர்களில் எவரையும் உங்களின்

நண்பராகவோ, உதவியாளராகவோ ஆக்கிக் கொள்ளாதீர்கள்." (குர்ஆன் 4:89 - IFT translation).

முஹம்மது அவர்களும், அல்புகாரி ஹதீஸின் படி, "ஒரு முஸ்லீம் அவன் மதத்தை விட்டுவிட்டால், அவனை கொல்லுங்கள்" என்றுச் சொல்லியுள்ளார்கள் (Muhammad also said, as narrated by Al-Bukhari, "If somebody - a Muslim - discards his religion, kill him.")

இஸ்லாமை தழுவி பிறகு அதை விட்டு வெளியேறுகிறவர்களை கொல்ல வேண்டும் என்று குர்ஆன் கட்டளை இடுவதொடு மட்டுமில்லாமல், முஸ்லீம்கள் எல்லா நாடுகளோடும் சண்டையிட்டு, ஒன்று அந்நாடுகள் இஸ்லாமை அங்கீகரித்து ஜிஸ்யா என்ற வரியை செலுத்தவேண்டும் அல்லது மரணத்தை சந்திக்க தயாராக வேண்டும் என்று குர்ஆன் கட்டளையிடுகிறது:

வேதம் அருளப்பெற்றவர்களில் எவர்கள் அல்லாஹ்வின் மீதும், இறுதி நாளின் மீதும் ஈமான் கொள்ளாமலும், அல்லாஹ்வும், அவனுடைய தூதரும் ஹராம் ஆக்கியவற்றை ஹராம் எனக் கருதாமலும், உண்மை மார்க்கத்தை ஒப்புக் கொள்ளாமலும் இருக்கிறார்களோ. அவர்கள் (தம்) கையால் கீழ்ப்படிதலுடன் ஜிஸ்யா (என்னும் கப்பம்) கட்டும் வரையில் அவர்களுடன் போர் புரியுங்கள். (குர்ஆன் 9:29) .

இதே ஸூரா 5ம் வசனத்தில் குர்ஆன் சொல்கிறது: "...9:5. . . .சங்கைமிக்க மாதங்கள் கழிந்து விட்டால் முஷ்ரிக்குகளைக் கண்ட இடங்களில் வெட்டுங்கள், அவர்களைப் பிடியுங்கள்; அவர்களை முற்றுகையிடுங்கள், ஒவ்வொரு பதுங்குமிடத்திலும் அவர்களைக் குறிவைத்து உட்கார்ந்திருங்கள். . ...."

இப்போது, இஸ்லாம் என்றால் அமைதி என்று பொருள் என்று நன்றாக புரிகிறதல்லவா. ஆனால் நம்புவதற்குத் தான் சிறிது கடினம்.**மூலம்**

**மேலதிக விவரங்களுக்கு கீழ்கண்ட தமிழ் கட்டுரைகளை படிக்கவும்:**

1) **முஹம்மது ஒரு தீவிரவாதியா?**

2) **இஸ்லாம் அமைதி மார்க்கம் இல்லை என்பதற்கு பத்து முக்கிய காரணங்கள்- முஹம்மதுவின் வாழ்க்கையிலும் குர்ஆனிலும் வன்முறை**

3) **இஸ்லாமின் இறையியலும் தீவிரவாதமும்- தம்பி, ஐஎஸ் (IS) ல் நீ ஐஸ் போல கறைந்து விடுவாயோ என்று பயப்படுகிறேன்!**



## கேள்வி 45: இதர மதங்களைப் போல இஸ்லாம் ஒரு மதம் தானே, அதற்குரிய மரியாதையை உலகம் ஏன் அதற்கு கொடுப்பதில்லை?

**பதில் 45**: இஸ்லாம் என்பது கிறிஸ்தவத்தைப் போல, இந்து மதம் போல ஒரு மதம் அல்ல. இஸ்லாம் என்பது ஒரு அரசியல் கட்சியாகும். இஸ்லாமுடைய முக்கிய

நோக்கம், உலக மக்களுக்கு இஸ்லாம் பற்றி போதனை செய்து, எல்லோரையும் இஸ்லாமியர்களாக மாற்றுவது மட்டுமல்ல, அதே நேரத்தில், உலகத்தை ஒரு அரசாங்கத்தின் கீழ் கொண்டு வருவதாகும். அதாவது அலெக்சாண்டர் ஆசைப்பட்டது போல, உலகம் அனைத்தையும் ஒரு ஆட்சியின் கீழ் கொண்டு வருவது தான் இஸ்லாமின் முக்கிய நோக்கம்.

இஸ்லாமில் மத சடங்குகள், வணக்க வழிபாடுகள் இருப்பது உண்மை தான். ஆனால், அதையும் தாண்டி, உலகம் அனைத்திலும் இஸ்லாமிய ஷரியா சட்டம் அமுலுக்கு கொண்டுவருவது தான் முஸ்லிம்களின் பிரதானமான நோக்கம்.

இதனை அறிய, நீங்கள் உலக செய்திகளை பார்க்கவேண்டும். முஸ்லிம்கள் ஒன்று திரண்டி கோஷமிட்டால் என்ன சொல்வார்கள் என்று கவனித்துப்பாருங்கள். முக்கியமாக ஐரோப்பாவிலும், மேற்கத்திய நாடுகளிலும் கோஷங்கள் போட்டுக்கொண்டு, செல்லும் முஸ்லிம்களின் கைகளில் இருக்கும் பெயர் பலகைகளை பார்த்தால்:

- "இஸ்லாம் ஒரு நாள் உலகை ஆட்சி செய்யும்"
- "அமெரிக்காவிற்கு மரணம்"
- "முஸ்லிம்கள் உலகை ஒரு நாள் ஆளுவார்கள்"
- "எங்களுக்கு ஜனநாயகம் தேவையில்லை, வெறும் இஸ்லாம் தான் வேண்டும்."
- "இஸ்லாமை கேவலப்படுத்தியவர்களை கொல்லுங்கள்"

போன்றவைகளை நாம் காணமுடியும். இஸ்லாமியர்களின் மேற்கண்ட விதமான செய்திகள் அடங்கிய படங்களை காண **இந்த கூகுள் தொடுப்பை சொடுக்குங்கள்**.

ஒரு மதத்தை பின் பற்றுபவனுக்கு, அதாவது முஸ்லிமுக்கு, தன் மார்க்கத்தை விமர்சிப்பவனை கொல்லவேண்டும் என்ற வெறி எங்கேயிருந்து வருகிறது? இஸ்லாமை விமர்சிப்பவன் கொல்லப்படவேண்டும் என்று அவன் துடிக்கிறான்? இஸ்லாம் ஒரு மதமாக மட்டும் இருக்குமானால், இப்படியெல்லாம் அவன் சிந்திப்பானா?

இதர மார்க்கங்களின் மக்களுக்கு இப்படியெல்லாம் வெறி பிடிப்பதில்லையே அது ஏன்? கிறிஸ்தவத்தை விமர்சித்தால், இயேசுவை விமர்சித்தால், அப்படி விமர்சிப்பவன், கேவலமாக பேசுபவன் கொல்லவேண்டும் என்ற உணர்வு அல்லது எண்ணம் ஏன் ஒரு கிறிஸ்தவனுக்கு வருவதில்லை?

இப்படி நடந்துக்கொள்ளும் படி ஒரு முஸ்லிமை தூண்டுவது எது?

இதிலிருந்து நாம் அறிவது என்னவென்றால், இஸ்லாம் ஒரு மதம் மட்டுமல்ல, அது ஒரு மதம் பிடித்த அரசியல் யானை? தனக்கு முன்பு எது வந்தாலும், அந்த யானை மிதித்துப்போட்டு, நாசமாக்கிவிடும். அந்த மதம் பிடித்த யானையின் குட்டிகள்

தான் "உலகை ஒரு நாள் இஸ்லாம் ஆளும்" என்றுச் சொல்லி கோஷமிடும் அந்த சில முஸ்லிம்கள்.

ஆக, இஸ்லாம் ஒரு மதம் மட்டும் தான் என்று எண்ணுவது தவறு.



**கேள்வி 46: இஸ்லாமை சீர்திருத்த முடியாது, அதனால் தான் உலகம் அதனை தொடர்ச்சியாக விமர்சித்துக்கொண்டு இருக்கிறது. இந்த கருத்து சரியானதா?**

**பதில் 46**: நாம் உலக மதங்களின் சரித்திரத்தை கவனித்தால், ஏதோ ஒரு கால கட்டத்தில் அவைகளின் பெயரை வைத்துக்கொண்டு சில சமூக சீர்கேடுகள் அல்லது வன்முறைகள் நடந்து இருப்பதை காணமுடியும்.

உதாரணத்திற்கு, கிறிஸ்தவத்தை எடுத்துக்கொள்வோம், ஒரு கால கட்டத்தில், கத்தோலிக்க போப்புக்கள் அனேக தீய செயல்களுக்கு காரணமாக இருந்தார்கள், தங்கள் சபை சொல்வதற்கு எதிராக விமர்சிப்பவர்களை இரக்கமின்றி தண்டித்தார்கள், மேலும் சிலுவைப்போர் பற்றி நாம் அறிந்திருக்கிறோம். ஆனால், அதே கத்தோலிக்க சபையில் இருந்த பாஸ்டர்கள், சீர்திருத்தம் தேவை என்பதை உணர்ந்தார்கள், பைபிளுக்கு எதிராக சில தீய மனிதர்கள் செய்த கொடுமைகளை மக்களுக்கு உணர்த்தினார்கள். இது பைபிளுக்கு எதிரான போதனை என்பதை உலகம் அறியும் படி செய்தார்கள். சீர்திருத்தம் வந்தது, மக்கள் மறுபடியும் பைபிளுக்கு நேராக திரும்பினார்கள்.

இன்னொரு உதாரணம், நம் இந்தியாவில் நடந்த மத சம்மந்தமான சமூக கேடுகளைச் சொல்லலாம். அதாவது சிறுவயதில் திருமணம் செய்தல், கணவன் மரித்துவிட்டால், அவனோடு கூட அவன் மனைவியையும் சேர்த்து எரித்துவிடுதல் (உடன்கட்டை ஏறுதல்) போன்ற தீய செயல்கள் ஒரு காலகட்டத்தில் இருந்தது. ஆனால், அனேகரின் முயற்சியால், இந்த தீய பழக்கம் இப்போது விடப்பட்டுள்ளது, ஒருவகையாக எல்லா இந்துக்களும் அந்த தீய செயல்களிலிருந்து விடுவிக்கப்பட்டு, இந்து மத மறுமலர்ச்சியை ஏற்றுக்கொண்டார்கள்.

ஆனால், இஸ்லாம் இப்படி சீர்திருத்தத்தை ஏற்றுக்கொள்ளுமா என்று பார்த்தால், நிச்சயமாக இல்லை என்பது தான் பதிலாக உள்ளது. இஸ்லாமும் இஸ்லாமியர்களும் சீர்திருத்தத்தை ஏற்றுக்கொள்வதில்லை. இஸ்லாமில் உள்ள தீய காரியங்களை வெளியே சொல்லும் போது, இவர்கள் அதனை எதிர்க்கிறார்கள், உண்மை சொல்பவர்களை தாக்குகிறார்கள். இவர்களுக்கு துணையாக குர்-ஆன் உள்ளது. மூல நூல்கள் சரியாக இருந்து, அதனை பின்பற்றுபவர்கள் தவறாக நடந்துக்கொள்ளும் போது சீர்திருத்தம் சாத்தியமாகும். ஒரு கால கட்டத்தில், அந்த மூல நூல்களை மக்கள் படித்து, உண்மையை அறிந்துக்கொள்ளும் போது, அந்த மார்க்கம் சீர்திருத்தம் அடைந்துவிடும். சிலுவைப்போர்கள், இதர சமூக கேடுகள் அனைத்தும்,

பைபிளை மக்கள் கைகளிலிருந்து மறைத்த போது காணப்பட்டன. ஆனால், மக்கள் பைபிளை படித்து உண்மை எது என்று அறிந்துக்கொண்டபோது, மதத்தின் பெயரால் செய்யப்பட்ட தீய செயல்கள் மறைந்துவிட்டன.

இஸ்லாமை பொறுத்தமட்டில், சமூக தீய செயல்களுக்கு காரணம் முஸ்லிம்கள் குர்-ஆனை தவறாக புரிந்துக்கொண்டதால் உண்டாகவில்லை. குர்-ஆனே அவைகளை செய்யச் சொல்வதினாலும், முஹம்மதுவின் வாழ்க்கையிலிருந்த சில விஷயங்களை முஸ்லிம்கள் பின்பற்றுவதினாலுமே இந்த சீர் கேடுகள் நடக்கிறது. எனவே, மக்கள் தங்கள் மதத்தை தவறாக புரிந்துக்கொண்டு இருந்தால், அவர்களின் மதத்தில் சீர்திருத்தத்தை கொண்டுவரலாம், ஆனால், இஸ்லாமின் மூல நூலே சமூகத்திற்கு கேடு விளைக்கிறது என்பதினால், இஸ்லாமை சரி செய்ய அல்லது அதில் சீர்த்திருத்தத்தை கொண்டு வரமுடியாது.

இதனை புரிந்துக்கொண்ட உலகம், இஸ்லாமை விமர்சிப்பதில் எந்த ஒரு ஆச்சரியமும் இல்லை. உண்மையை ஏற்றுக்கொள்ளும் நிலையில் இஸ்லாம் இல்லை, இதற்காகவே அது அதிகமாக விமர்சிக்கப்படுகிறது. இஸ்லாமில் சீர்திருத்தம் கொண்டுவர முயற்சித்த இஸ்லாமியர்கள் கொடுமையாக நடத்தப்பட்டு கொல்லப்பட்டுள்ளார்கள். இனி இஸ்லாமுக்குள் சீர்திருத்தம் கொண்டுவரமுடியாது என்பதை உலகம் அறிந்துக்கொண்டு விமர்சிக்கிறது.

முஸ்லிம்களே நினைத்தாலும், இஸ்லாமில் சீர்திருத்தத்தை கொண்டுவரமுடியாது. பகவத் கீதையில் நான்கு வர்ணங்களை நானே உருவாக்கினேன், அதனை நானே ஒழிக்கவேண்டுமென்றாலும் அது என்னால் முடியாது என்று கிருஷ்ணன் சொன்னது போன்று, அல்லாஹ்வே இனி நினைத்தாலும், இஸ்லாமை சீர்திருத்தமுடியாது, முஸ்லிம்கள் எந்த மூலைக்கு!



**கேள்வி 47: பெரும்பான்மை முஸ்லிம்கள் நல்லவர்களாக இருப்பதினால், இஸ்லாமை விமர்சிக்காமல் இருக்கமுடியுமா?**

**பதில் 47**: பெரும்பான்மையான இஸ்லாமியர்கள் எந்த ஒரு தீய செயல்களில் வன்முறைகளில் ஈடுபடாமல் அமைதியான வாழ்கையை வாழ்ந்து வருகிறார்கள். ஒரு சிலர் மட்டும் தீவிரவாத செயல்களில், வன்முறைகளில் ஈடுபடுகிறார்கள். உண்மை இப்படி இருக்க ஏன் இஸ்லாமை விமர்சிக்கிறீர்கள்? அதனை பின்பற்றுபவர்களில் 99% (+) சதவிகித மக்கள் அமைதியாக வாழ்கிறார்கள் அல்லவா? இப்படி இருக்க ஏன் இஸ்லாமை விமர்சிக்கிறார்கள்? என்று முஸ்லிம்கள் கேட்கிறார்கள்.

மேலோட்டமாக பார்த்தால், இவர்களின் வாதத்தில் நியாயம் இருப்பதாக தோன்றும். ஆனால், இந்த வாதம் சரியானதா என்பதை நாம் பரிசோதிக்கவேண்டும், இதனை அறிந்துக்கொள்ள இந்த உதாரணத்தை பாருங்கள்.

அனேக ஆண்டுகளாக தொடர்ச்சியாக புகைப்பிடிப்பவர்களில் பெரும்பான்மையானவர்களுக்கு புற்று நோய் வருவதில்லை. சிலருக்கு மட்டுமே புகைபிடிப்பதினால் புற்று நோய் வருகிறது. உண்மை இப்படி இருக்க,

- மக்கள் புகை பிடிக்கக்கூடாது என்றுச் சொல்லி. சிகரெட் பெட்டிகளில் ஏன் புற்று நோய் பற்றிய எச்சரிக்கை செய்தியை அரசாங்கம் வெளியிடுகிறது?
- ஆங்காங்கே புகை பிடிப்பதினால் உண்டாகும் ஆபத்தை ஏன் அரசாங்கம் விளம்பரப்படுத்துகிறது?
- புகைபிடிப்பதற்கு எதிராக ஏன் அனேக நிகழ்ச்சிகள் நடத்தப்படுகிறது?
- புகைபிடிப்பது ஏன் விமர்சிக்கப்படுகிறது?

இப்படி புகைபிடிப்பவர்கள் கேள்வி கேட்டால், இவர்களை நாம் என்னவென்றுச் சொல்வோம்?

இதைப்போலத் தான் இஸ்லாமியர்களின் லாஜிக்கும் இருக்கிறது. புகை பிடிப்பதினால் பெரும்பான்மையானவர்களுக்கு புற்றுநோய் வருவதில்லை என்பதற்காக, நாம் புகை பிடிப்பதை விமர்சிக்காமல் இருக்கமுடியுமா? புகை பிடிப்பதினால் வரும் ஆபத்துக்களை அலசி ஆராய்ந்து மக்களுக்கு விழிப்புணர்வை கொடுக்காமல் இருக்கமுடியுமா? இதைப்போலவே, அனேகர் அமைதியாக இருக்கிறார்கள் என்பதால், இஸ்லாமை விமர்சிக்காமல் கேள்வி கேட்காமல் இருக்கமுடியாது. உலகம் அல்லல்படுவது அந்த ஒரு சிலர் மூலமாகத் தான்.

- அந்த ஒரு சில தீவிரவாதிகளை உருவாக்குவது யார்?
- அவர்களை உற்சாகப்படுத்துவது எது?
- அவர்கள் தீவிரவாத செயல்களில் ஈடுபட அவர்களுக்கு ஆசை காட்டுவது யார்?

இந்த அனைத்து கேள்விகளுக்கும் ஒரே பதில் "இஸ்லாமும், குர்-ஆனும், அல்லாஹ்வும், அவனது இறைத்தூதரும் தான்". எனவே, இஸ்லாமை படித்து கேள்வி கேட்பது சரியானதே.



**கேள்வி 48: முதலாவதாக இஸ்லாமை விமர்சிக்கவும் கேள்வி கேட்கவும் யாருக்கு அதிக உரிமை உள்ளது?**

**பதில் 48**: அருமையான இஸ்லாமியர்களே, இஸ்லாமிய குடும்பத்தில் பிறந்த உங்களுக்கே இஸ்லாமை கேள்விகேட்கவும், அதனை விமர்சிக்கவும் உரிமை உள்ளது. ஏனென்றால், அது உங்கள் மார்க்கம், அதனை முழுவதுமாக அறிந்துக்கொள்வது உங்கள் உரிமை, இதனை யாரும் தடுக்க முடியாது. குர்-ஆனை அரபியில் ஓதுங்கள் என்று சொல்லும் உங்கள் அறிஞர்கள், நீங்கள் குர்-

ஆனை தமிழில் படிப்பதை தடை செய்யமுடியாது. உங்கள் மூல நூல்களை நீங்கள் படிக்க முன்வரும் போது, அவைகளை படிக்கவேண்டாம், நாங்கள் சுருக்கமாக உங்களுக்கு அறிவிக்கிறோம், நாங்கள் எழுதிய புத்தகங்களை மட்டுமே படியுங்கள் என்றுச் சொல்ல அவர்களுக்கு உரிமை இல்லை.

நீங்கள் இஸ்லாம் பற்றி கேள்வி கேட்கும் போது, அதிகமாக கேள்விகளை கேட்கவேண்டாம் என்றுச் சொல்ல அவர்களுக்கு உரிமை இல்லை. முஹம்மதுவின் வாழ்க்கை சரித்திரத்தை அனேக மூல நூல்களில் நீங்கள் படிக்க முன்வரவேண்டும். உங்களை விட உங்கள் முஹம்மதுவின் நடத்தைகள் மேன்மையுள்ளதாக இருக்கின்றனவா என்று நீங்கள் ஆய்வு செய்து பார்க்கவேண்டும்.

நீங்கள் உங்கள் இஸ்லாமை கேள்வி கேட்க மறுத்தால், இஸ்லாமியரல்லாதவர்கள் கேள்வி கேட்க ஆரம்பிப்பார்கள். முதலாவது இஸ்லாமை முழுவதுமாக அறியும் உரிமை உங்களுக்கு உண்டு என்பதை மறக்கவேண்டாம்.



**கேள்வி 49: இஸ்லாமை விமர்சிக்கவும் கேள்வி கேட்கவும் கிறிஸ்தவர்களுக்கு (யூதர்களுக்கும்) உரிமை உள்ளதா?**

**பதில் 49**: அது எப்படி? கிறிஸ்தவர்களுக்கு (யூதர்களுக்கும்) இஸ்லாமை விமர்சிக்க கேள்வி கேட்க அடுத்தபடியான உரிமை உள்ளது என்று சிலர் கேள்வி எழுப்பலாம். இதற்கு பதில் மிகவும் சுலபமானது, அதாவது கிறிஸ்தவ யூத மார்க்க வேத நூல்களில் உள்ள விவரங்களை குர்-ஆன் எடுத்துக்கொண்டு, அவைகளை மாற்றி எழுதியுள்ளது. மேலும் முஹம்மது தன்னை பைபிளின் வழியாக வந்த தீர்க்கதரிசி என்றும், பைபிளின் தேவன் தான் அல்லாஹ் என்றும் இஸ்லாம் கூறுவதினால், கிறிஸ்தவர்களுக்கும், யூதர்களுக்கும் இஸ்லாமை ஆய்வு செய்ய, விமர்சிக்க கேள்வி கேட்க அதிக உரிமை பெறுகிறார்கள்.

மேலும், அனேக பைபிளின் அடிப்படை கோட்பாடுகளை குர்-ஆன் மறுப்பதினால், பைபிளை அது எதிர்ப்பதினால், குர்-ஆனை குற்றவாளி கூண்டில் நிறுத்தி குறுக்குவிசாரனை செய்ய கிறிஸ்தவர்களுக்கு அதிக உரிமை உள்ளது, இதனை யாரும் கிறிஸ்தவர்களிடமிருந்து எடுத்துக்கொள்ளமுடியாது.

**கிறிஸ்தவர்கள் இஸ்லாமை விமர்சிக்க உரிமை பெறுகிறார்கள், இதனை குர்ஆனே தருகின்றது. குர்ஆனில் ஏதாவது சந்தேகம் இருந்தால், யூத கிறிஸ்தவர்களிடம் கேட்டு தெளிவு பெறும்படி குர்ஆன் முஹம்மதுவிற்கும், முஸ்லிம்களுக்கும் கட்டளையிடவில்லையா?**

கிறிஸ்தவர்களே, நம்முடைய பைபிளை விமர்சிக்கும் குர்-ஆனின் உண்மை நிலையை பரிசோதிக்க நமக்கு அதிக உரிமை உள்ளது என்பதை மறக்கவேண்டாம். நீங்கள் கண்டுபிடித்த இஸ்லாம் பற்றிய உண்மைகளை இதர

மக்களுக்கு அறிவிப்பது உங்கள் மேல் விழுந்த கடமையாகும். அநீதியைப் பார்த்து "நீ அநீதியாக செயல்படுகிறாய்" என்றுச் சொல்ல நாம் தயங்கக்கூடாது. "பொய்யைப் பார்த்து நீ பொய்" என்றுச் சொல்ல நமக்கு உரிமை உள்ளது. கிறிஸ்தவர்களே, இஸ்லாம் பற்றி விழிப்புணர்வு அடையுங்கள், மற்றவர்களுக்கும் விழிப்புணர்வை உண்டாக்குங்கள்.



**கேள்வி 50: இஸ்லாமை விமர்சிக்கவும் கேள்வி கேட்கவும் மற்றவர்களுக்கு (முக்கியமாக இந்தியாவில் இந்துக்களுக்கு) உரிமை உள்ளதா?**

**பதில் 50**: முஸ்லிம்களுக்கு முதலாவது உரிமை உண்டு என்று சொன்னீர்கள், சரி, இதனை ஏற்றுக்கொள்ளலாம், அடுத்தபடியாக கிறிஸ்தவர்களுக்கு உரிமை உண்டு என்றுச் சொன்னீர்கள், அதனையும் ஏற்றுக்கொள்ளலாம். ஆனால், இங்கு இந்துக்கள் எங்கே வந்தார்கள்? அவர்களுக்கு எங்கேயிருந்து உரிமை வந்தது? என்று சிலர் சந்தேகத்தோடு கேள்வி கேட்கலாம். இதற்கும் பதில் மிகவும் சுலமபமானது. அதாவது, உங்கள் வீட்டில் ஒரு நாள் திருடன் வந்து திருடும் போது அவனை தடுக்கும் உரிமை உங்களுக்கு உண்டா இல்லையா? நீங்கள் சாலையில் சென்றுக்கொண்டு இருக்கும் போது, ஒரு திருடன் வந்து உங்கள் பணப்பையை திருடிவிட்டு ஓடினால், அவனை துரத்திக்கொண்டுச் சென்று அவனை பிடித்து உதைத்து, உங்கள் பணத்தை திரும்ப பெறும் உரிமை உங்களுக்கு உண்டா இல்லையா? உங்கள் பதில் "ஆம், எனக்கு உரிமை உண்டு" என்றுச் சொல்வீர்கள்.

இதே போலத்தான், இஸ்லாமிய தீவிரவாதிகள் நம்மீது வெடிகுண்டு வீசுகிறார்கள். வெடிகுண்டுகளை தங்கள் உடல்களில் கட்டிக்கொண்டு, பேருந்து நிலையங்களிலும், இரயில் நிலையங்களிலும், வெடிக்கச்செய்து நம் குடும்பங்களை அழிக்கிறார்கள். ஓட்டல்களை பிடித்து, மக்களைத் தாக்கி குண்டு மழை பொழிந்து நாட்டில் இரத்த வெள்ளம் ஓடச்செய்கிறார்கள். இப்படி செய்பவர்கள், ஒரு சிலராக இருந்தாலும், அந்த ஒரு சிலர் பின்பற்றும் மதத்தை அறிந்துக்கொள்ள நமக்கு உரிமை உண்டு, கேள்வி கேட்க உரிமை உண்டு. இந்துக்களுக்கு மட்டுமல்ல, கிறிஸ்தவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் உரிமை உண்டு. தீவிரவாதிகளின் செயல்களால் அனைத்து மக்களும் பாதிக்கப்படுகிறார்கள். எனவே எல்லாருக்கும் இஸ்லாமை கேள்வி கேட்க உரிமை உண்டு

பெரும்பான்மையான முஸ்லிம்கள் நல்லவர்களாக இருப்பதினால், இஸ்லாமை விமர்சிக்காமல் இருக்கமுடியுமா? அந்த இஸ்லாமை சிலர் தீவிரமாக பின்பற்றுவதினால் தான், சிலர் தீவிரவாதிகளாக இருக்கின்றனர், ஆகையால் இஸ்லாம் விமர்சனத்திற்கு உட்படுத்தப்படவேண்டும். குர்-ஆன் படிக்கப்படவேண்டும், ஹதீஸ்கள் மக்களுக்கு சென்றடையவேண்டும், மக்களுக்கு வரும் உண்மையான கேள்விகளுக்கு பதில்கள் சொல்லப்படவேண்டும். முஹம்மதுவின் உண்மையான வாழ்க்கை சரிதை

முழுவதுமாக மக்களை சென்றடையவேண்டும். மக்களுக்கு வரும் சந்தேகங்கள் தீர்க்கப்படவேண்டும். விமர்சிப்பவர்கள் தாக்கப்படக்கூடாது. மதங்கள் விமர்சிக்கப்படவில்லையென்றால், அவைகளால் சமுதாயத்திற்கு ஆபத்து வரும்.

எல்லா மதங்களும், மனித கோட்பாடுகளும் ஆராயப்படவேண்டும், விமர்சிக்கப்படவேண்டும். அவைகளினால் சமுதாயத்திற்கு கேடு விளையுமானால், அதைப் பற்றிய விழிப்புணர்வை மக்களுக்குத் தரவேண்டும். இதைத் தான் இஸ்லாமைப் பற்றிய விஷயத்தில் உலகம் செய்துக்கொண்டு இருக்கிறது. ஏன் இஸ்லாம் அதிகமாக விமர்சிக்கப்படுகிறது என்று வேதனை அடையும் ஒவ்வொரு முஸ்லிமும் குர்-ஆனை படிக்கவேண்டும், ஹதீஸ்களையும் அறியவேண்டும், முஹம்மதுவின் வாழ்க்கையை படித்து வரும் சந்தேகங்களுக்கு பதிலைக் காண முயலவேண்டும்.

எல்லாவற்றையும் சோதித்துப் பார்த்து, நல்லதை பிடித்துக்கொள்ளவேண்டும், தீயதை விட்டுவிடவேண்டும், மற்றவர்களும் அவைகளை விட்டுவிட நம்மால் முடிந்ததை செய்யவேண்டும்.

தமிழ் படிக்கத் தெரிந்த இஸ்லாமியரே, இவ்வளவு விவரங்களைச் சொன்னபிறகும், உங்கள் வீட்டில் ஒரு தமிழ் குர்-ஆன் வரவில்லையானால், நீங்கள் குர்-ஆனை தமிழில் படிக்க ஆரம்பிக்கவில்லையானால் உங்கள் இஸ்லாமை, மற்றவர்கள் கேள்வி கேட்பதை உங்களால் தடை செய்யமுடியாது என்பதை கவனத்தில் வைத்துக்கொள்ளுங்கள். நீங்கள் முதலாவது இஸ்லாமை அறிந்துக்கொள்ளுங்கள், கேள்விகளை கேட்டு தெளிவு பெற்றுவிடுங்கள், அப்போது தான் உங்களால் மற்றவர்களின் கேள்விகளுக்கு பதில்களை தரமுடியும்.



**கேள்வி 51: பொதுவான கேள்வி : விமர்சிப்பது சரியா தவறா?**

**பதில் 51**: உலகில் எதுவும் விமர்சனங்களுக்கு அப்பாற்பட்டதல்ல. விமர்சனங்கள் இருந்தால் தான் உண்மைக்கும் பொய்க்கும் இடையே உள்ள வித்தியாசம் புரியும். சமுதாயத்திற்கு கேடு விளைவிக்கும் விஷயங்களை விமர்சிக்கவில்லையென்றால், ஆய்வு செய்யவில்லையென்றால், எப்படி உண்மை வெளியே வரும்.

**முதலாவதாக**, விமர்சனங்கள் நம் கண்கள் திறக்கப்பட உதவி செய்யும். பல்லாண்டுகாலமாக ஒரு தீய பழக்கத்தை, கோட்பாட்டை நம்பிக்கொண்டு இருப்பவர்களிடம், அதனை ஆய்வு செய்து விமர்சித்தால், நமக்கு அதன் உண்மை நிலை புரியும். உதாரணத்திற்கு, இந்தியாவில் இருந்த சதி, தேவதாசி, சிறுபிள்ளைகள் திருமணம் போன்ற பழக்கங்களைச் சொல்லலாம். விமர்சனங்கள் நாம் வேறு கோணத்தில் சில விஷயங்களை

பார்க்க உதவும். உண்மையாகவே அந்த விஷயத்தில் நன்மை இருந்தால் அது சரியாக புரியும், அதே நேரத்தில் தீயவைகள் கூட தெரியும்.

**இரண்டாவதாக**, விமர்சிப்பவர்கள் நம் நன்மையைக் கருதி விமர்சிக்கும் போது, நமக்கு நன்மை உண்டாகும். மேற்கண்ட எடுத்துகாட்டையே எடுத்துக்கொள்வோம். மேற்கண்ட தீய செயல்களை விமர்சித்து, அவைகளிலிருந்து விடுவிக்க உதவிய அனைவரும் நமக்கு நன்மை தானே செய்துள்ளார்கள். உடன்கட்டை ஏறுதலை எதிர்த்து நம் தலைவர்களும், கிறிஸ்தவ மிஷனரிகளும் சண்டை போடாமல் இருந்திருந்தால், இன்று 'இந்துத்துவம் இந்துத்துவம் என்று கோஷமிடும் குடும்பங்களில், ஒரு தாயாரும் உயிரோடு இருந்திருக்கமாட்டார்கள், தங்கள் தந்தையை எரிக்கும் போது, தாயையும் அதில் தள்ளி எரித்திருப்பார்கள்'.

**மூன்றாவதாக**, நல்ல விமர்சனங்கள் நம் முன்னேற்றத்திற்கு உதவும். பாருங்கள், இந்தியாவில் இப்போது தேவதாசி என்ற பழக்கமும்,உடன்கட்டை ஏறுதலும் இல்லாமல், போய்விட்டது, இது முன்னேற்றமில்லையா?

**நான்காவதாக**, ஒருவர் நம் மார்க்கத்தை தவறாக விமர்சிக்கும் போது, அவர்களுக்கு எப்படி பதில் கொடுக்கவேண்டும் என்பதை ஆய்வு செய்து, நாம் சரியான வகையில் பதில் சொல்ல அது நமக்கு உதவும். முஸ்லிம்களில் சிலர் செய்வது போன்று, ஒருவர் தவறாக விமர்சனம் செய்தால், உடனே அவரை கொலை செய்வது ஏற்புடையதன்று.

விமர்சனங்கள் நன்மை மட்டுமே செய்யும் என்று நான் சொல்லவில்லை, அதில் தீமையுமுண்டு. சிலர் வேண்டுமென்றே தீயதாக விமர்சித்தாலும், அவர்களை விட்டு நாம் விலகவேண்டும், அல்லது பதில் சொல்லவேண்டுமே ஒழிய, கொலை செய்யக்கூடாது இங்கு தான் முஸ்லிம்கள் தவறு செய்கிறார்கள்.



**கேள்வி 52: இஸ்லாமை விமர்சிக்கவேண்டாம் என்ற முஸ்லிம்களின் வாதத்தில் உண்மையிருக்கிறதா?**

**பதில் 52**: இஸ்லாமை விமர்சிக்க யாருக்கும் உரிமையில்லை என்றுச் சொல்வதற்கு முஸ்லிம்களுக்கு உரிமையில்லை.

முஹம்மது தாம் கொண்டு வந்த இஸ்லாமை நிலைநிறுத்த மக்கா மக்களின் தெய்வங்களை விமர்சித்தார், கேலி செய்தார், அவைகள் தெய்வங்கள் இல்லை என்றுச் சொன்னார்.

இதே போன்று, யூதர்களையும், கிறிஸ்தவர்களையும் அவர்களின் வேதங்களையும் கோட்பாடுகளையும் விமர்சித்தார். எனவே, இஸ்லாமை விமர்சிக்க வேண்டாம் என்றுச் சொல்ல எந்த ஒரு முஸ்லிமுக்கும் உரிமை இல்லை.



**கேள்வி 53: முஹம்மது மக்காவின் தெய்வங்களை அவமானப்படுத்தவில்லையா? விமர்சிக்கவில்லையா?**

**பதில் 53:**

முஸ்லிம்கள் முஹம்மதுவைப் பற்றி கீழ்கண்டவாறு கூறுவார்கள், ஆனால் உண்மையை மறைத்துக் கூறுவார்கள்.

1) மக்காவில் இருக்கும் போது எங்கள் இறைத்தூதர், அமைதியாக இறைச்செய்தியை பிரசங்கித்தார்.

2) மக்காவினரின் எதிர்ப்புகளை, கொடுமைகளை சமாளித்துக்கொண்டு வாழ்ந்தார், அதே போல, இதர முஸ்லிம்களும் சகித்துக்கொண்டு இருந்தார்கள். மக்காவினரின் தொல்லைகளுக்கு எல்லை இல்லாமல் போனது.

3) மக்காவினர் வன்முறையில் ஈடுபட்டு, கொலை செய்யும் அளவிற்கு சென்ற போது, அவரும் இதர முஸ்லிம்களும் தங்கள் வீடுகளை விட்டு, மற்ற பொருட்களை விட்டுவிட்டு, ஒன்றுமில்லாத நிலையில் மதினாவிற்கு சென்றார்கள்.

**தேன் கூட்டின் மீது கல்லெறிந்தது முஹம்மது தான்**

மக்காவினர்தான் முஹம்மதுவையும், முஸ்லிம்களையும் முதலாவது தொந்தரவு செய்தார்கள் என்பது உண்மையல்ல. முதலாவது முஹம்மது தான் சும்மா இருந்த மக்காவினர் மீது கல்லெறிந்தார், அவர்களை தொந்தரவு செய்தார், அதன் பிறகு தான் அவர்கள் இவருக்கு பிரச்சனை கொடுக்க ஆரம்பித்தார்கள். இதனை நான் சொல்லவில்லை, இஸ்லாமிய நூல்கள் சொல்கின்றன. இப்போது அவைகளை பார்ப்போம்.

முஹம்மதுவின் ஆரம்பகால பிரச்சாரம் பற்றி அல்-தபரி தன்னுடைய சரித்திர நூலில் கீழ்கண்ட விவரங்களை கொடுக்கிறார்:

அ) முஹம்மது தம்முடைய ஜனங்களுக்கு இறைச்செய்தியை வெளிப்படையாக அறிவித்தார். இப்படி அவர் அறிவிக்கும் போது, மக்காவினர் இவரை எதிர்க்க வில்லை. ஆனால், முஹம்மது அவர்களது தெய்வங்களை விமர்சித்து, மதிப்பு குறைவாக பேசும் போது மக்காவினர் இவரை எதிர்க்க ஆரம்பித்தார்கள்.

ஆ) முஹம்மது இப்படி குறைஷிகளின் தெய்வங்களை விமர்சிக்கும் போது, அவர்கள் நேரடியாக முஹம்மதுவின் தந்தையின் சகோதரர் அபூ தலிப் அவர்களிடம் வந்து கீழ்கண்டவாறு முறையிட்டார்கள்.

"அபூ தலிப் உங்கள் சொந்தக்காரர் [முஹம்மது] எங்கள் தெய்வங்கள் பற்றி தவறாக பேசுகிறார், நம் மதத்தை பகிரங்கமாக குற்றஞ்சாட்டுகிறார். நம்முடைய கலாச்சாரத்தை ஏளனம் செய்கிறார் மற்றும் நம்முடைய முற்பிதாக்கள் வழிதவறியவர்கள் என்றுச் சொல்கிறார். அவர் எங்கள் மீதான தன் குற்றச்சாட்டுக்களை நிறுத்திக்கொள்ளும்படி செய்யும்,அல்லது நாங்கள் அவருக்கு தகுந்த பதில் அளிக்க (ஒரு கை பார்க்கும் படி) எங்களுக்கு அனுமதி அளியும். நாங்கள் எப்படி அவருக்கு எதிராக இருக்கிறோமோ, அதே போல நீரும் இருக்கிறீர், உங்களுக்காக வேண்டுமானால் நாங்கள் அவரை பார்த்துக்கொள்கிறோம். Tabari, vol 6, pages 93, 94.

இ) ஆனால், அபூ தலிப் அவர்களோ, முஹம்மதுவை ஆதரித்து பாதுகாத்து வந்தார்கள்.

ஈ) தங்களுக்கு நீதி கிடைக்காததால், குறைஷிகள், அபூ தலிப் மரிக்கும் வரை காத்திருந்தார்கள்.

உ) அவர் மரித்ததும், தங்கள் தெய்வங்களை கேவலப்படுத்திய முஹம்மதுவை கொலை செய்ய முயற்சி எடுத்தார்கள். இதிலிருந்து தப்பித்து அவர் மதினாவிற்கு இடம்பெயர்ந்தார்.

முஹம்மதுவிற்கு குறைஷிகள் செய்தது தவறு ஆகும் மேலும் அது அநீதியாகும் என்று நீங்கள் சொல்லலாம். அப்படியானால், கீழ்கண்ட விவரங்களை படித்து அதையும் தவறு என்றும், அநீதி என்றும் உங்களால் சொல்லமுடியுமா?

**இன்று மக்காவில் ஒரு புதிய நபி எழும்பினால், இஸ்லாமியர்கள் என்ன செய்வார்கள்?**

மக்கா என்பது முஸ்லிம்களின் புனிதஸ்தலம் என்று உலக மக்கள் அனைவருக்கும் தெரியும். இந்த காலகட்டத்தில், மக்கா நகரில் பிறந்த ஒருவர், திடீரென்று ஒரு நாள், காபாவின் அருகில் வந்து, கீழ்கண்ட விதமாக கூறுகிறார் என்று வைத்துக் கொள்வோம்:

அ) நான் ஒரு நபியாக இருக்கிறேன்.

ஆ) முஸ்லிம்களாகிய நீங்கள் பின்பற்றும் தொழுகை முறைகள், ஹஜ் சட்டங்கள் அனைத்தும் தவறானவது. இவைகளை பின் பற்றினால் நீங்கள் நரகத்திற்குச் செல்வீர்கள்.

இ) அல்லாஹ் என்னை நபியாக ஆக்கியுள்ளான். நீங்கள் பின்பற்றும் அனைத்தையும் மாற்றும் படி எனக்கு அறிவித்து உள்ளான். முஹம்மது சொன்னது அனைத்தும் பொய்யானவைகளாகும். அவைகளை பின் பற்றினால் நரகம் நிச்சயம்.

ஈ) எனவே, என்னை பின் பற்றுங்கள், நான் உங்களுக்கு நேரான வழியை காட்டுவேன்.

மேற்கண்ட விதமாக ஒருவர் மக்காவில் இன்று பிரச்சாரம் செய்தால், அவனை முஸ்லிம்களாகிய நீங்கள் என்ன செய்வீர்கள். மேலும் இந்த மனிதர், ஒரு நல்லவராக நீதியுள்ளவராக இதுவரை வாழ்ந்துள்ளார் என்று வைத்துக்கொள்வோம். இதர மக்கள் சொல்வதை எதையும் கேட்காமல், தான் சொன்னது தான் உண்மை என்று இவர் வாதிக்கிறார், மேலும், இவரது இறைச்செய்தியைக் கேட்டு சிலர் இவரை நபி என்று நம்பி, இவரை பின் பற்றுகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம்.

இப்போது இவரைப் பற்றி மக்கா முஸ்லிம்கள் என்ன செய்வார்கள்? என்னைக் கேட்டால், இவர் கூடிய சீக்கிரமே முஸ்லிம்களால் கொல்லப்படுவார் என்றுச் சொல்வேன். இது தானே உங்களின் பதிலாகவும் இருக்கும், சரி தானே!

இப்போது சொல்லுங்கள், இவருக்கு முஸ்லிம்கள் செய்வது தவறு இல்லையா? அநீதி இல்லையா?

**அன்று குறைஷிகள், இன்று முஸ்லிம்கள்:**

இன்று இவருக்கு முஸ்லிம்கள் என்ன செய்வார்களோ, அதே செயலை அன்று குறைஷிகள் முஹம்மதுவிற்கு செய்ய முடிவு செய்தார்கள். இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் ஒன்று தான். அன்று முஹம்மது, இன்று இந்த புதிய நபி. அன்று குறைஷிகள், இன்று முஸ்லிம்கள். அன்று குறைஷிகளின் புனித ஸ்தலம், இன்று முஸ்லிம்களின் புனித ஸ்தலம்.



**கேள்வி 54: இன்று முஹம்மதுவின் கார்ட்டூனை காட்டியதால் கொலை செய்யப்பட்டது சரியென்றால், அன்று மக்காவின் மக்களை முஹம்மதுவை கொலை செய்ய முயற்சித்தது சரையானது என்று முஸ்லிம்கள் ஒப்புக்கொள்வார்களா?**

**பதில் 54**: முந்தைய கேள்வியின் பதிலை முதலாவது படித்துக்கொள்ளுங்கள்.

முதலாவது குறைஷிகளை தன் வார்த்தைகளால் தாக்கியது முஹம்மது. அவர்களின் தெய்வங்களை கேவலப்படுத்தியது முஹம்மது. அவர்களின் மனதிற்கு துக்கத்தைக் கொடுத்தது முஹம்மது. முஹம்மது சொன்னது உண்மையோ, பொய்யோ அதுவல்ல பிரச்சனை, மக்களின் நம்பிக்கையை தாக்கி நாம் பேசும் போது, எதிர்ப்புக்கள் வரத்தான் செய்யும். பல நூற்றாண்டுகளாக உண்மை என்று நம்பிக்கொண்டு வாழும் மக்களிடம் வந்து, உன் மூதாதையர்கள் செய்தது எல்லாம் வீண், அவைகளால் உங்களுக்கு நன்மையில்லை என்றுச் சொன்னால், எந்த மனுஷன் தான் சும்மா

இருப்பான்? இப்படி எதிர்ப்பு வேண்டாமென்று விரும்புகிறவர்கள், வாயை மூடிக்கொண்டு சும்மா இருக்கவேண்டும்.

ஆக, முஹம்மதுவின் விஷயத்திற்கு வந்தால், தேன் கூட்டின் மீது முதலாவது கல்லெறிந்து அதை கலைத்தது முஹம்மது ஆவார். மக்காவினர் அனேக வழிமுறைகள் மூலமாக முஹம்மதுவோடு சமாதானம் செய்துக்கொள்ளலாம் என்று விரும்பினார்கள், அபூ தலிப் அவர்களிடம் முறையிட்டார்கள், ஆனால், நன்மை ஒன்றும் ஏற்படவில்லை, முஹம்மது, அவர்களின் தெய்வங்களை தாக்கி பேசுவதை நிறுத்திக்கொள்ளவில்லை. எனவே, இன்று முஸ்லிம் செய்யும் வேலையை அன்று குறைஷிகள் செய்தார்கள். இன்றுள்ள முஸ்லிம்களும், அன்று இருந்த குறைஷிகளும் ஒரே படகில் தான் பிரயாணப்பட்டுக் கொண்டு இருந்தார்கள்.

எனவே, முஹம்மதுவின் செயல்கள் தான், குறைஷிகளை வன்முறையில் ஈடுபடவைத்தது. எனவே, இங்கு குற்றவாளி முஹம்மது தானே தவிர குறைஷிகள் அல்ல.

இதனை முஸ்லிம்கள் ஒப்புக்கொள்வார்களா? அவர்களுக்கு நேர்மையிருந்தால்!



**கேள்வி 55: குர்ஆனின் 98:6ல், யூத கிறிஸ்தவர்களை கேவலமாக விமர்சித்ததால், யாருடையை கழுத்தை வெட்டலாம்?**

**பதில் 55:** இஸ்லாமை நிராகரிக்கின்ற யூத கிறிஸ்தவர்கள் (மற்ற மக்கள் கூட - முஷ்ரிக்குகள்- இறைவனுக்கு இணைவைப்பவர்கள்) உலக படைப்புக்களில் மிகவும் கெட்டவர்கள் என்று அல்லாஹ் கூறுகின்றான்.

குர்ஆன் 98:6. நிச்சயமாக **வேதக்காரர்களிலும் முஷ்ரிக்குகளிலும்** எவர்கள் **நிராகரிக்கிறார்களோ** அவர்கள் நரக நெருப்பில் இருப்பார்கள் - அதில் என்றென்றும் இருப்பார்கள் - **இத்தகையவர்கள்தாம் படைப்புகளில் மிகக் கெட்டவர்கள் ஆவார்கள்**.

உலக படைப்புக்களில் பன்றிகள் மிகவும் கீழ்தரமானவைகள் என்று முஸ்லிம்கள் கருதுகிறார்கள், இவைகளைக் காட்டிலும் கெட்டவர்கள் யூதர்கள், கிறிஸ்தவர்கள் மற்றும் இந்துக்கள் என்று அல்லாஹ் சொல்கின்றான். எப்படி முஹம்மதுவை விமர்சித்தால், முஸ்லிம்களின் மனது புண்படுவோமோ அதே போன்று உலக மக்களின் மனம் குர்ஆனின் இந்த வசனத்தினால் புண்பட்டுள்ளது.

இப்போது முஸ்லிம்கள் என்ன செய்யப்போகிறார்கள்? குர்ஆனிலிருந்து இப்படிப்பட்ட விமர்சன வசனங்களை நீக்குவார்களா? அல்லது இதனை இறக்கிய அல்லாஹ்வின் கழுத்தை வெட்டுவார்களா? இதற்கு சாத்தியமில்லை, எனவே அவனது தூதரின் கழுத்தை வெட்டியிருக்கவேண்டுமா? இன்று முஸ்லிம்களின் வழியில் அன்று யூத கிறிஸ்தவர்களும் நடந்துக்கொண்டு இருந்திருந்தால் என்ன நடந்திருக்கும்?

ஒருவேளை மேற்கண்ட வசனத்தை புத்தகங்களில் பதிக்கும் முஸ்லிம்களின் கழுத்துக்களை முஸ்லிம்களைப் போன்று மற்றவர்கள் வெட்டவேண்டுமா? இப்படி வன்முறையில் ஈடுபடுங்கள் என்று நான் மற்றவர்களுக்குச் சொல்லவில்லை, அதற்கு பதிலாக முஸ்லிம்களில் சிலர் செய்யும் காட்டுமிராண்டித் தனத்தை அவர்களுக்கு விளக்குகிறேன் அவ்வளவு தான்.

முஸ்லிம்களுக்கு ஒரு நியாயம், மற்றவர்களுக்கு வேறு நியாயமா?



**கேள்வி 56: இயேசுவின் கார்ட்டூன்களை கிறிஸ்தவர்கள் எப்படி பார்க்கிறார்கள்? கிறிஸ்தவம் விமர்சனத்திற்கு அப்பாற்பட்டதா?**

**பதில் 56**: உண்மையாகவே, இயேசுவைப் பற்றி தவறான விமர்சனங்கள் செய்தால் நமக்கு துக்கம் தான் வரும்,இதில் எந்த சந்தேகமும் இல்லை. ஆனால், கிறிஸ்தவர்கள் இயேசு கற்றுக்கொடுத்த விதத்தில் பதில் அளிப்பார்கள்.

அமைதியான முறையில் பதில் கொடுப்பார்கள், எதிர்ப்பை தெரிவிப்பார்கள், சட்டத்தின் உதவியுடன் போராடுவார்கள் ஆனால், உயிரை எடுக்கும் "அமைதி மார்க்கம் என்றுச் சொல்லிக்கொள்ளும் மார்க்கத்தை பின்பற்றும் காட்டுமிராண்டிகளின் செயலை" மட்டும் செய்யமாட்டார்கள்.

**கிறிஸ்தவமும் விமர்சனத்திற்கு அப்பாற்பட்டதல்ல.**

பைபிளையும், இயேசுவையும் விமர்சிப்பவர்களை கிறிஸ்தவர்கள் கொலை செய்வதில்லை. பைபிளின் மேன்மையை உயர்த்துவதற்கு கிடைத்த வாய்ப்பு என்று கருதி, விமர்சனங்களுக்கு சான்றுகளோடு பதில்களைச் சொல்வார்கள் கிறிஸ்தவர்கள்.

கேள்வி கேட்டால் பதில் சொல்லப்படும், சந்தேகம் எழுப்பினால், சந்தேகம் தீர்த்து வைக்கப்படும். டாவின்ஸிகோட் போன்ற படம் எடுத்தால், புத்தகங்கள் மூலமாகவும், நேர்க்காணல் மூலமாகவும் பதில் சொல்லப்படும்.

முஸ்லிம்களைப் போன்று கிறிஸ்தவர்கள் கொலை செய்வதோ, தற்கொலை தாக்குதலில் ஈடுபடுவதோ, வன்முறைகளில் ஈடுபவதோ கிடையாது.

கிறிஸ்தவர்களுக்கு இயேசு எப்படி கற்றுக்கொடுத்தாரோ அதையே கிறிஸ்தவர்கள் செய்கிறார்கள்.

ஒருவர் உங்களை ஏற்கவில்லையென்றால், அவர்களை விட்டுச் செல்லுங்கள், அப்படி செல்லும் போது, உங்கள் கால்களில் படிந்துள்ள தூசியையும் உதரி தள்ளிவிட்டுச் செல்லுங்கள். இது தான் இயேசு கற்றுக்கொடுத்த வழி.

**இயேசுவின் கட்டளை:**

மத்தேயு 10:14 எவனாகிலும் உங்களை ஏற்றுக்கொள்ளாமலும், உங்கள் வார்த்தைகளைக் கேளாமலும்போனால், அந்த வீட்டையாவது பட்டணத்தையாவது விட்டுப் புறப்படும்போது, உங்கள் கால்களில் படிந்த தூசியை உதறிப்போடுங்கள்.

**சீடர்களின் கீழ்படிதல்:**

அப்போஸ்தலர் 13:51 இவர்கள் தங்கள் கால்களில் படிந்த தூசியை அவர்களுக்கு எதிராக உதறிப்போட்டு, இக்கோனியா பட்டணத்துக்குப் போனார்கள்.

**பிரான்ஸ் சார்லி ஹெப்டு பத்திரிக்கையில் கிறிஸ்தவ கார்ட்டூன்கள்:**

2015ம் ஆண்டு முஹம்மதுவின் கார்ட்டூனை வெளியிட்ட சார்லி ஹெப்டு என்ற பிரான்ஸின் பத்திரிக்கை "நாத்தீகவாதிகளால் நடத்தப்படும் பத்திரிக்கையாகும்". இவர்கள் பல முறை யூத கிறிஸ்தவர்களின் கார்ட்டூன்களை வெளியிட்டுள்ளார்கள். பைபிளைப் பற்றியும், இயேசுவைப் பற்றியும் பல கேலிச்சித்திரங்களை வெளியிட்டுள்ளார்கள்.

இப்படி அவர்கள் செய்யும் போது கிறிஸ்தவர்கள் கண்டிப்பார்கள், தவறாக கார்ட்டூன் வரைந்தால் சரியான பதில்களைக் கொடுப்பார்கள், அவ்வளவுதான், ஆனால் கொலை செய்யமாட்டார்கள்.



**கேள்வி 57: விமர்சனங்களை இயேசுவும் முஹம்மதுவும் எப்படி கையாண்டார்கள்?**

**பதில் 57**: ஒரு முறை, தங்கள் செய்தியை ஏற்காதவர்களை தண்டிக்கலாமா என்று சீடர்கள் கேட்டபோது, இயேசு சீடர்களை கடிந்துக்கொண்டார். முஹம்மதுவைப் போன்று மக்களை தண்டிக்கவில்லை.

லூக்கா 9:53. அவர் எருசலேமுக்குப் போக நோக்கமாயிருந்தபடியினால் அவ்வூரார் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை.

54. அவருடைய சீஷராகிய யாக்கோபும் யோவானும் அதைக் கண்டபோது: ஆண்டவரே, எலியா செய்ததுபோல, **வானத்திலிருந்து அக்கினி இறங்கி இவர்களை அழிக்கும்படி நாங்கள் கட்டளையிட உமக்குச் சித்தமா என்று கேட்டார்கள்**.

55. அவர் திரும்பிப்பார்த்து: **நீங்கள் இன்ன ஆவியுள்ளவர்களென்பதை அறியீர்கள் என்று அதட்டி,**

56. **மனுஷகுமாரன் மனுஷருடைய ஜீவனை அழிக்கிறதற்கு அல்ல, இரட்சிக்கிறதற்கே வந்தார்** என்றார். அதன்பின்பு அவர்கள் வேறொரு கிராமத்துக்குப் போனார்கள்.

**போர் - பகைவர்களை எதிர்கொள்ளுதல்**

இயேசு, லூக்கா 9:54,55 ல், அவரை நிராகரித்த நகரத்தை நிர்மூலமாக்க விரும்பிய தமது சீஷர்களைக் கடிந்து கொண்டார். மேலும் லூக்கா 22:52 ல், சீஷர்கள், இயேசுவைக் கைது செய்ய வந்தவர்களுடன் சண்டையிட்ட போது அவர்களைத் தடுத்து அந்த கைகலப்பில் காயமுற்ற ஒரு மனிதனைக் குணப்படுத்தினார்.

முஹம்மது, ஸூரா 9:5 மற்றும் 9:29 ல், இஸ்லாமியரல்லாதவர்கள் மீது கடும் போர் புரியும்படிச் சொல்லியுள்ளார். ஸூரா 9 என்பது முஹம்மது இறுதியாகக் கொடுத்த ஸூராக்களில் ஒன்றாகும். ஆரம்பகாலத்தில் முஹம்மதுவின் கூட்டத்தினர் மிகவும் பலவீனமாக இருந்தபோது, அவர் மற்றவர்களுடன் இசைந்து வாழும்படி கட்டளையிட்டு இருந்தார். ஆனால் பிற்காலத்தில் முஸ்லீம்கள் பலமடைந்தபோது, இஸ்லாமை, பலாத்காரத்தின் மூலம் பரப்ப ஆணையிட்டார். அபுபக்கர், உமர் மற்றும் உத்மான் ஆகியோர் அவரது ஆக்கிரமிப்புப் போர்களைத் தொடர்ந்து நடத்தினர். முஹம்மதுவின் நடவடிக்கைகளில் சில:

800 யூத ஆண் போர்க் கைதிகளை படுகொலை செய்தது (ஸூரா 33:26 ல் குறிப்பிடப்பட்டுள்ளது):

33:26. இன்னும், வேதக்காரர்களிலிருந்தும் (பகைவர்களுக்கு) உதவி புரிந்தார்களே அவர்களை (அல்லாஹ்) அவர்களுடைய கோட்டைகளிலிருந்து கீழே இறக்கி, அவர்களின் இருதயங்களில் திகிலைப் போட்டுவிட்டான்; (அவர்களில்) **ஒரு பிரிவாரை நீங்கள் கொன்று விட்டீர்கள்; இன்னும் ஒரு பிரிவாரைச் சிறைப்பிடித்தீர்கள்.**

மெக்காவைக் கைப்பற்றியபோது, அவர், 10 பேர்களை சிரச்சேதம் செய்யும்படி ஆணை பிறப்பித்தார். அதில் மூவர், முன்பு முஹம்மதுவைக் கேலி செய்த அடிமைப் பெண்கள். (பார்க்க: "முஹம்மதுவின் வாழ்கை - The Life of Muhammad" பக்கங்கள் 551, 52)

அவர் யூதப் பட்டணமான கைபர் மீது தாக்குதல் நடத்தியபோது, யூதத்தலைவர்களில் ஒருவரை எங்கோ புதைக்கப்பட்டிருந்த பணத்தின் இருப்பிடத்தைச் சொல்லுமாறு சித்திரவதை செய்தார். அந்த மனிதன் அதைச் சொல்ல மறுத்தபோது அவன் மரணிக்கும் தருவாயில் அவனது தலையை வெட்ட ஆணையிட்டார். "முஹம்மதுவின் வாழ்க்கை, (The Life of Muhammad)" பக்கம் 515 ஐப் பார்க்கவும்

**விளக்கம்**

பல ஆண்டுகளுக்கு முன்பு, தம்மைக் கேலி செய்த பெண் அடிமைகளைக் கொல்லும் காரியத்தில், இயேசுவை நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. அவர் மிகவும் மேலான செய்திகளையும் நலமான வாழும் முறையினையும் கொண்டு வந்தவர். புதைக்கப்பட்ட பணத்தை வெளிக்கொணர ஒரு மனிதனை

சித்திரவதை செய்பவரென இயேசுவை ஒருவரும் கற்பனை கூட செய்துப்பார்க்க முடியாது. அவரது வாழ்க்கை பேராசைகள் அற்ற ஒரு வாழ்க்கையாக இருந்தது.

முஹம்மது ஒரு மூர்க்க குணமுடைய நபராக இருக்கக் கூடும். தம்மைக் கேலி செய்த பெண்ணடிமைகளைக் கொலை செய்தல் நியாயமானதா? அவர்களைக் கொலை செய்வித்தல் ஏற்புடையதா? அது நாகரீகமானதா அல்லது அறிவுடமைதானா? வெறும் பணத்தை அடைவதற்காக ஒரு மனிதனைச் சித்திரவதை செய்தார் முஹம்மது. இப்படிப்பட்ட நபரை ஒரு சமுதாயம் கீழ்படியவும், அவரை ஒரு முன்னோடியாக ஏற்றுக்கொள்ளவும் இவர் தகுதியுடையவராக இருப்பாரா?

**மேலதிக விவரங்களுக்கு கட்டுரைகள்:**

- **இயேசுவின் அரசும் முஹம்மதுவின் அரசும் (ISIS இஸ்லாம் அங்கீகரிக்கும் ஒன்றா?) பாகம் - 1**
- **இயேசுவா முஹம்மதுவா? உலகின் இரு பெரிய மார்க்கங்களின் ஸ்தாபகர்களைக் குறித்த ஒரு ஒப்பீடு**

**முஹம்மதுவும் தீவிரவாதமும் (வன்முறைகளும்)**

- **முஹம்மது ஒரு தீவிரவாதியா?**
- **ஓமன் நாட்டு மக்களுக்கு நபி அனுப்பிய செய்தி**
- **2013 ரமளான் நாள் 2 – முஹம்மதுவும் வழிப்பறி கொள்ளைகளும்**
- **2013 ரமளான் நாள் 3 – தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது யார்? முஹம்மதுவா? மக்காவினரா?**
- **2013 ரமளான் நாள் 7 – இஸ்லாமிய தாவா அழைப்பிதழ் நீ இஸ்லாமை ஏற்றுக்கொண்டால், இறைத்தூதர் உன்னை கொல்லமாட்டார்**
- **முஹம்மதுவும் அபு அஃபக்கின் கொலையும்**
- **முஹம்மதுவும் பத்து மெக்கானியர்களும்**
- **முகமதுவின் கொலைகள் மற்றும் இஸ்லாமின் பயமுறுத்தல்**
- **முகமதுவும் மற்றவர்களை கொடுமைபடுத்துதலும்**



**கேள்வி 58: லட்சக்கணக்கான முஸ்லிம்கள் ஒடுக்கப்படும் போது, பட்டினியால் சாகும் போது "எதிர்வினை" காட்டாத முஸ்லிம்கள், ஒரு முஹம்மதுவின் கார்ட்டூனுக்கு மட்டும் ஏன் இந்த "எதிர்வினை", இது நியாயமா?**

**பதில் 58**: சீன அரசு முஸ்லிம்களை ஒடுக்குகிறது என்பதைக் கேட்டும் முஸ்லிம்கள் ஒன்றும் சொல்வதில்லை, முக்கியமாக துருக்கி அதிபர் ஒன்றும் சொல்லவில்லை, சீனாவோடு நல்ல உறவையே பேணுகின்றார். ஆனால், முஹம்மதுவின் கார்ட்டூன்களை நாம் தடை செய்யமுடியாது என்று பிரான்ஸ்

அதிபர் சொன்னவுடன், இவருக்கு கோபம் வந்துவிட்டது. லட்சக்கணக்கான முஸ்லிம்கள் சாவதைக் காட்டிலும், முஹம்மதுவின் கார்ட்டூன் தான் இவருக்கு முக்கியமாகத் தோன்றுகிறது. இதில் அரசியலும் உள்ளது, உலக முஸ்லிம்களின் தலைமை இடமாக சௌதி அரேபியா இருக்கவேண்டும் என்று சௌதி விரும்புகிறது, அந்த இடத்தை துருக்கி பிடிக்கவேண்டும், "தாம் தான் உலக முஸ்லிம்களின் தலைமையகம்" என்ற தோரணையில் துருக்கி அதிபர் செயல்படுகின்றார் என்ற செய்தியும் பல மாதங்களாக அடிபடுகிறது.

சீனா முஸ்லிம்களை ஒடுக்குகிறது, எனவே சீனாவின் பொருட்களை நாங்கள் புறக்கணிக்கிறோம் என்று சௌதி அரேபியாவும், துருக்கியும் சொல்லவேண்டாமா? ஏன் சொல்வதில்லை? இந்த பைத்தியக்காரத் தனத்தை உலக முஸ்லீம்கள் சிந்திக்கவேண்டாமா?

**இதைப் பற்றிய செய்திகள்:**

- **சீனாவில் 3 வருடத்தில் 16,000 மசூதிகள் இடிக்கப்பட்டுள்ளது! வெளிவந்த ஆய்வு அறிக்கை! இஸ்லாமியர்களின் புனித தலம் 30% அழிக்கப்பட்டுள்ளது!**
- **China Wants the World to Stay Silent on Muslim Camps. It’s Succeeding.**



**கேள்வி 59: அறியாமலும் நீ முஹம்மதுவை விமர்சிக்கக்கூடாது?**

**பதில் 59**: இஸ்லாமில் உள்ள பல தீய காரியங்களில் ஒன்று என்னவென்றால், "ஒருவர் அறியாமல் ஒரு முஹம்மது பற்றி தவறாக பேசிவிட்டாலும், அதன் பிறகு மன்னிப்பு கோரினாலும்" தண்டனை நிச்சயம் உண்டு.

பாங்களாதேஷ் நாட்டில் ஒரு குறிப்பிட்ட செய்தித்தாளில் ஒரு சிறிய கார்ட்டூன் மற்றும் ஒரு நகைச்சுவை செய்தி வந்தது. இஸ்லாமியர்கள் தங்கள் பெயர்களுக்கு முன்னால் "முஹம்மது" என்ற வார்த்தையை சேர்த்துக்கொள்வது அங்கு வழக்கமாக இருந்தது. ஒரு சின்ன பையனிடம் ஒரு முதியவர் (இஸ்லாமிய இமாம்) உன் பெயர் என்ன என்று கேட்டார். அவன் "முஹம்மது" என்ற வார்த்தையை விட்டுவிட்டு, தன் பெயரை மட்டும் சொன்னான், உடனே அந்த முதியவர், பெயருக்கு முன்னால் இருக்கும் "முஹம்மது" என்ற வார்த்தையை விட்டுவிடாதே, அதோடு சேர்த்து பெயரைச் சொல்லவேண்டும் என்று அறிவுரை கூறினார். அதன் பிறகு அந்த பையனிடம் உன் கையில் இருப்பது என்ன என்று கேட்க, அந்த பையன் தன் கையில் பூனையை வைத்து இருந்ததினால், இப்போது கேட்ட அறிவுரையின் படி, "முஹம்மது பூனை" என்று சொல்கிறான். இது தான் கார்ட்டூன் சொல்லும் செய்தி.

**en.wikipedia.org/wiki/2007_Bangladesh_cartoon_controversy**

**news.bbc.co.uk/2/hi/7006528.stm**

www.islam-watch.org/Assets/Aalpin_Muhammad_Cartoon.jpg

இந்த கார்ட்டூனை வரைந்தவனும் ஒரு இஸ்லாமியன் தான். இஸ்லாமியர்கள் கொந்தளித்தார்கள், மிகப்பெரிய கலவரம் நடந்தது. பூனைக்கு முன்னால் எங்கள் நபியின் பெயரைச் சொல்வதா? இது மிகப்பெரிய அவமானம் என்று கலவரத்தில் ஈடுபட்டார்கள். அதை வரைந்தவன் இப்படியெல்லாம் நடக்கும் என்று நான் நினைக்கவில்லை, நான் அறியாமல் இதை செய்துவிட்டேன் என்று மன்னிப்பு கேட்டான், செய்தித்தாளின் முதலாளியும் மன்னிப்பு கோரினார், இஸ்லாமியர்கள் கேட்டபாடில்லை. எனவே, அரசாங்கம் அந்த வாலிபனை கைது செய்து பாதுகாப்பிற்காக சிறையில் அடைத்தது. மேலும் என்ன நடந்தது என்பதை மேலேயுள்ள தொடுப்புகளை சொடுக்கி அறிந்துக்கொள்ளுங்கள்.



**கேள்வி 60: உலக நாடுகளில் இஸ்லாமியர்கள் அமைதியாக வாழவேண்டுமென்றால், முஸ்லிம்கள் என்ன செய்யவேண்டும்?**

**பதில் 60**:

**முதலாவதாக**, முஸ்லிம்கள் சீக்கிரமாக கோபம் கொள்வதை தவிர்க்கவேண்டும், ஆத்திரகாரனுக்கு புத்தி மட்டு என்பதை மறக்கக்கூடாது.

**இரண்டாவதாக**, தாங்கள் வாழும் நாட்டிலிலுள்ள சட்டதிட்டங்களுக்கு ஏற்ப தங்கள் கோபத்தையும், எதிர்ப்பையும், அமைதியான போராட்டங்கள் மூலமாக வெளிப்படுத்தவேண்டும்.

**மூன்றாவதாக**, இஸ்லாமை விமர்சிக்கிறார்கள் என்பதற்காக கொலைகளில், வன்முறைகளில் ஈடுபடுபவர்களுக்கு ஆதரவு அளிக்கக்கூடாது.

**நான்காவதாக**, இஸ்லாம் ஒரு அமைதி மார்க்கம் என்று வாயில் வடை சுடுவதை விட்டுவிட்டு, செயல்களில் "இஸ்லாம் ஒரு அமைதி மார்க்கம்" என்பதை உலகிற்கு காட்டவேண்டும்.

**ஐந்தாவதாக**, 7ம் நூற்றாண்டு பழக்கவழக்கங்களை உங்கள் வீட்டுக்குள்ளேயே நடைமுறைப்படுத்தவேண்டும், ரோட்டுக்கு கொண்டுவரக்கூடாது, உலக மக்கள் சுதாரித்துக்கொண்டார்கள், இனியும் பருப்பு வேகாது.

**ஆறாவதாக**, சகிப்புத் தன்மையையும், பொறுமையையும் கடைபிடிக்க முயலவேண்டும்.

**ஏழாவதாக**, உலக மக்களுக்கு கேலிக்கூத்தாக இருக்கும் விஷயங்களை மிகவும் சீரியஸாக எடுத்துக்கொள்ளக்கூடாது, ஒரு கார்ட்டூனுக்காக உயிரை எடுப்பதை உலக மக்கள் எப்படி ஒப்புக்கொள்வார்கள்?

இன்னும் சொல்லிக்கொண்டே போகலாம், அடுத்த கட்டுரையில் சந்திக்கும் போது வேறு கேள்விகளுக்கு பதில் சொல்லும் போது மேலதிக விவரங்களை பகிர்ந்துக்கொள்கிறேன்.



## தலைப்பு: ஹதீஸ்கள்/சீரா (30 கேள்வி பதில்கள்)

**கேள்வி 1:** ஹதீஸ்கள் என்றால் என்ன?

**பதில் 1:** இஸ்லாமிய நபி முஹம்மதுவின் சொல்லும் செயல்களும் அடங்கிய தொகுப்பை ஹதீஸ்கள் என்பார்கள். சன்னி முஸ்லிம்களுக்கும் ஷியா முஸ்லிம்களுக்கும் தனித்தனி ஹதீஸ் தொகுப்புக்கள் உள்ளன.



**கேள்வி 2:** ஹதீஸ்கள் கூட அல்லாஹ்வின் வஹியா?

**பதில் 2:** இஸ்லாமின் படி ஹதீஸ்களும் அல்லாஹ்வின் மூலமாக முஹம்மதுவிற்கு கொடுக்கப்பட்டதே (வஹியே) ஆகும். முஹம்மது முஸ்லிம்களின் வழிகாட்டி, அல்லாஹ்விடமிருந்து பெற்றுத்தான் அவர் முஸ்லிம்களுக்கு வழிகாட்டினார் என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள்.




**கேள்வி 3:** ஹதிஸ்கள் அல்லாஹ்வால் பாதுகாக்கப்பட்டுள்ளதா?

**பதில் 3:** இல்லை, ஹதீஸ்களை பாதுகாப்பேன் என்று அல்லாஹ் வாக்கு கொடுக்கவில்லை, இதைப் பற்றி குர்ஆனில் வசனமில்லை. மேலும் முஹம்மதுவிற்கு பிறகு, குர்ஆனை தொகுத்த உஸ்மான் கலீஃபா அவர்களும், இதர சஹாபாக்களும் ஹதிஸ்களை புத்தக வடியில் எழுதிவைக்க முயற்சி எடுக்கவில்லை.

**கேள்வி 4:** ஹதிஸ்கள் அல்லாஹ்வினால் பாதுகாக்கப்படவில்லையென்றால், அது அல்லாஹ்வின் வஹி இல்லையா?

**பதில் 4:** ஹதீஸ்களும் அல்லாஹ்வின் வஹி என்று தான் இஸ்லாமும் சொல்கிறது, முஸ்லிம்களும் இதைத் தான் நம்பிக்கொண்டு இருக்கிறார்கள். தன் வஹியை

பாதுகாப்பதா? அல்லது அழிந்து தொலைந்து போகட்டும் என்று விட்டுவிடுவதா? என்று அல்லாஹ் தான் முடிவு செய்யவேண்டும்.

சரி, அல்லாஹ் தன் ஹதீஸ் வஹியை பாதுகாத்தானா? இல்லையா? என்று கேட்டால், "ஹதீஸ்கள் பாதுகாக்கவில்லை" என்று இஸ்லாம் பதில் கூறும்.

முஹம்மது உயிரோடு இருக்கும் போது, தனக்கு இறக்கப்பட்ட குர்-ஆன் வசனங்களை (வஹியை) அவ்வப்போது, தோல்களிலும், எலும்புகளிலும், இலைகளிலும் எழுதும் படி செய்தார். இருந்தாலும், முஸ்லிம்கள் அதிகமாக மனப்பாடம் செய்துக்கொள்வதையே அதிகமாக நம்பினர். முஹம்மது உயிரோடு இருக்கும் போது இன்று நம்மிடம் உள்ள (114 அத்தியாயங்கள் அடங்கிய) முழு குர்-ஆனையும் அவர் கண்களால் காணவில்லை.

ஆனால், முஹம்மது பெற்றுக்கொண்ட இதர வஹியை தன் பேச்சிலும், செயலிலும் காட்டினார். இவ்வஹி புத்தகமாக முஹம்மதுவின் காலத்தில் எழுதப்படவில்லை. முஹம்மதுவிற்கு பிறகு 200+ ஆண்டுகளுக்கு பிறகு தான் பேச்சு வழக்கில் உலாவிய கதைகளை (அல்லாஹ்வின் வஹியை) சில முஸ்லிம் அறிஞர்கள் தொகுத்து புத்தகமாக்கினார்கள், அவைகளைத் தான் நாம் ஹதீஸ்கள் என்கிறோம். ஒரு கதை 200 ஆண்டுகளுக்கு மேலாக வாய்வழியாக பரவினால் என்னவாகும்? அக்கதையின் உண்மைக்கரு சிதையும், பல பொய்கள் சேர்க்கப்படும்.

பார்க்க: **அல்லாஹ் எப்படி தன் ஹதீஸ் வஹியை கறைபடுத்தப்பட விட்டுக்கொடுத்தான்**




**கேள்வி 5:** எத்தனை ஹதீஸ்கள் ஆரம்பத்தில் தொகுக்கப்பட்டன, அவைகளில் எத்தனை உண்மையென ஒப்புக்கொள்ளப்பட்டன.

**பதில் 5:** ஒரே வரியில் சொல்லவேண்டுமென்றால், ஹதீஸ்களில் 1.5% சதவிகிதத்திற்கும் குறைவான ஹதீஸ்கள் உண்மையென்றும், மீதமுள்ள 98.5%

சதவிகிதத்திற்கும் அதிகமான ஹதீஸ்கள் பொய்யானவை என்றும் இஸ்லாமிய அறிஞர்கள் கூறுகிறார்கள்.

இஸ்லாமிய சமுதாயம் பெரிய அளவில் இரண்டாக பிரிந்துள்ளது, ஒன்று சன்னி (சுன்னி) முஸ்லிம்கள், அடுத்தது ஷியா முஸ்லிம்கள்.

சன்னி முஸ்லிம்கள் தான் பெரும்பான்மை என்பதால், அவர்கள் நம்பும் புத்தகங்களை மட்டுமே கருத்தில் கொள்ளப்படுகின்றது. ஷியா முஸ்லிம்களின் புத்தகங்களை நாம் அதிகமாக ஆய்வு செய்வதில்லை.

சன்னி முஸ்லிம் சமுதாயம் 6 வகையான ஹதீஸ்கள் அதிகார பூர்வமான ஹதீஸ்கள் என்று நம்புகிறார்கள். இவைகளில், முதலாவது புகாரி என்பவரால் தொகுக்கப்பட்ட ஹதீஸ்கள், இரண்டாவதாக, முஸ்லிம் என்பவரால் தொகுக்கப்பட்ட ஹதீஸ்கள். இப்படி, குர்-ஆனுக்கு அடுத்தபடியாக இவ்வதீஸ்கள் முஸ்லிம்களுக்கு வழிகாட்டிகளாக உள்ளன.

கீழ்கண்ட அட்டவணையில் இவ்வதீஸ்கள் பற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன (புகாரி, முஸ்லிம், நஸயி, அபூதாவுத், திர்மிதி, இப்னு மாஜா).

**படம்: சன்னி பிரிவினரின் அதிகாரபூர்வமான 6 ஹதீஸ் தொகுப்புக்கள்**

| ஹதீஸ் | தொகுத்தவை | பொய்யானவை | உண்மையானவை | உண்மை சதவிகிதம் (%) | பொய் சதவிகிதம் (%) |
|---|---|---|---|---|---|
| புகாரி | 600000 | 592603 | 7,397 | 1.23% | 98.77% |
| முஸ்லிம் | 300000 | 296000 | 4,000 | 1.33% | 98.67% |
| நஸயி | 500000 | 494730 | 5,270 | 1.05% | 98.95% |
| அபூ தாவுத் | 500000 | 495200 | 4,800 | 0.96% | 99.04% |
| திர்மிதி | 400000 | 396044 | 3,956 | 0.99% | 99.01% |
| இப்னு மாஜா | 400000 | 395659 | 4,341 | 1.09% | 98.91% |

முஹம்மதுவிற்கு பிறகு, 200 – 250 ஆண்டுகள்வரை, வாய் வழியாக முஹம்மது பற்றிய கதைகள் உலாவந்தபடியினால், அல்லாஹ்வின் வஹியில் பல புதிய பொய்யான விவரங்கள் மக்களின் வாய்வழியாக பரப்பப்பட்டது.

**உதாரணம்:**

புகாரி:

புகாரி (கி.பி. 810 - 870) என்ற இஸ்லாமியர் ஹிஜ்ரி 194ல் பிறக்கிறார். பல ஆண்டுகள் பாடுபட்டு, பல இடங்களுக்குச் சென்று ஹதீஸ்களை சேகரித்தார்.

- அவர் சேகரித்த ஹதீஸ்களின் எண்ணிக்கை: 6,00,000 (ஆறு லட்சம்).
- இவைகளில் ஆதாரபூர்வமான, உண்மையான ஹதீஸ்கள் எவைகள் என்று அவர் ஆய்வு செய்து கண்டுபிடித்த எண்ணிக்கை: 7,397
- அப்படியானால், மூதமுள்ள 5,92,603 ஹதீஸ்கள் பொய்யானவை, இட்டுக்கட்டப்பட்டவை, கறைப்படுத்தப்பட்டவை என்று அவர் ஒதுக்கிவிட்டார்.
- இதனை சதவிகிதத்தின் படி பார்த்தால், அவர் சேகரித்தவைகளில் 1.23% தான் உண்மையானவை, 98.77% பொய்யானவையாகும்.

இதே போல, சன்னி முஸ்லிம்கள் நம்பும் ஆறு ஹதீஸ் தொகுப்புக்கள் பற்றி மேற்கண்ட அட்டவணையில் நான் பதித்துள்ளேன்.



**கேள்வி 6:** ஹதீஸ்களில் பலவீனமான, உண்மையான ஹதீஸ்கள் இருப்பதாகச் சொல்கிறார்களே? உண்மையா?

**பதில் 6:** நாம் மேலே கண்ட விவரங்களின் படி, 1.5% ஹதீஸ்கள் தான் உண்மையானவை, மீதமுள்ளவை பொய்யானவை.

மொத்தமாக ஹதிஸ்களை நான்கு வகையாக முஸ்லிம்கள் பிரிக்கிறார்கள் (இந்த நான்கிற்குள்ளும் உப பிரிவுகள் உள்ளன).

**1) ஸஹீஹ் (ஆதாரப்பூர்வமானவை):**

இந்த விவரத்தை நிச்சயம் முஹம்மது கூறியிருப்பார், செய்திருப்பார் என்று இஸ்லாமிய அறிஞர்கள் வகைப்படுத்தியவைகள், உண்மையான (ஸஹீஹ்) ஹதீஸ்கள் என்று கூறுகிறார்கள்.

**2) மவ்ளூவு (இட்டுக்கட்டப்பட்டது):**

முஹம்மது சொல்லாத, செய்யாத விவரங்களை அவர் சொன்னார்/செய்தார் என்று பொய்யாக பரப்பப்பட்ட கதைகள் இந்த வகையைச் சார்ந்தவைகளாகும். யார் மூலமாக ஹதீஸ் கிடைத்ததோ, அந்த சங்கிலித்தொடரில் வருபவரில் ஒருவர் பொய்யராக இருந்தால், அவர் சொல்லும் ஹதீஸ்கள் பொய்யானவை என்று கருதப்படுகின்றது. ஏன் இப்படி பொய்கள் ஹதீஸ்களில் கலந்துள்ளன என்பதற்கு பல காரணங்கள் உள்ளன, அவைகளை வேறு கேள்வியில் பார்ப்போம்.

**சில உதாரணங்கள்:**

- கத்திரிக்காய் சாப்பிடுவது எல்லா நோய்களுக்கும் மருந்தாகும்.

- உங்கள் உணவில் கீரைகளைச் சேர்த்துக் கொள்ளுங்கள்! ஏனெனில் அது ஷைத்தானை விரட்டியடிக்கும்.
- ஆகாயத்தில் உள்ள பால் வெளி, அர்ஷின் கீழ் இருக்கும் பாம்பின் வியர்வையினால் படைக்கப்பட்டது.
- தர்மம் செய்ய ஏதும் கிடைக்காவிட்டால் யூதர்களையும் கிறிஸ்துவர்களையும் சபியுங்கள்! அது தர்மம் செய்ததற்கு நிகராக அமையும்.
- சாக்கடையில் விழுந்த ஒரு கவள உணவை யாரேனும் கழுவிச் சாப்பிட்டால் அவரது பாவங்கள் மன்னிக்கப்படும்.
- முட்டையும் பூண்டும் சாப்பிட்டால் அதிகமான சந்ததிகள் பெற முடியும்.
- பெண்களிடம் ஆலோசனை கேளுங்கள்! ஆனால் அதற்கு மாற்றமாக நடங்கள்.
- 160 ஆண்டுகளுக்குப் பிறகு குழந்தைகளைப் பெற்று வளர்ப்பதை விட நாயை வளர்ப்பது மேலாகும்

**3) மத்ரூக் (விடப்படுவதற்கு ஏற்றது):**

அறிவிப்பாளர்களில் பொய்யர் என்று சந்தேகிக்கப்பட்டவர் இடம் பெறுவது மத்ரூக் ஹதீஸ்கள் எனப்படும். முந்தைய பிரிவில் அந்த அறிவிப்பாளர் பொய்யர் என்று நிரூபிக்கப்பட்டு இருக்கும். ஆனால், இந்த பிரிவில் உள்ளவர் 'பொதுவாக பொய்யர், என்று சந்தேகத்து உட்பட்டவராக இருப்பார்'.

**4) ளயீப் (பலவீனமானது):**

முஹம்மது இந்த விவரத்தை (ஹதீஸை) கூறினார்களா இல்லையா என்ற சந்தேகத்தை ஏற்படுத்தக் கூடியவை ளயீப் ஹதீஸ்கள் எனப்படும். ஏன் இந்த சந்தேகம் வருகிறது? இவைகளுக்கு காரணங்கள் என்னவென்பதை தனி கேள்வியில் காண்போம்.



**கேள்வி 7:** இஸ்னத்(Isnad/Sanad - சங்கிலித்தொடர்) என்றால் என்ன?

**பதில் 7:** இஸ்னத் என்றால் சங்கிலித்தொடர் என்றுச் சொல்லலாம். ஸனது என்பது இஸ்னத் என்பதின் பன்மையாகும். முஹம்மது கூறியவைகளையும், அவரிடம் பார்த்த செயல்களையும் எழுத்துவடிவில் தொகுத்த புத்தகங்களை (செய்திகளை) ஹதீஸ்கள் என்கிறோம்.

அவைகள் புத்தகங்களாக எப்போது தொகுக்கப்பட்டன, என்று கேட்டால், முஹம்மதுவின் மரணத்திற்கு 200 ஆண்டுகளுக்கு பிறகு அவைகள் புத்தகங்களாக எழுதப்பட்டன. அதுவரை அவைகள் வாய் வழியாக பரப்பப்பட்டன.

முஹம்மது ஒரு செய்தியை தம் சஹாபா என்கிற நண்பருக்குச் சொல்கிறார், அல்லது அவரது மனைவி ஆயிஷா அவர்களிடம் சொல்கிறார், அல்லது அவர்கள் அவருடைய செயல்களைப் பார்க்கிறார்கள். இந்த செய்தியை அவரது தோழரோ, மனைவியோ மற்றவர்களுக்குச் சொல்கிறார்கள். இவர்களிடம் செய்தியை கேட்ட மற்றவர்கள் வேறு நபர்களுக்குச் சொல்கிறார்கள். இப்படி 200+ ஆண்டுகள் முஹம்மது சொன்ன ஒரு செய்தி வாய் வழியாக பல நபர்கள் மூலமாக பரப்பப்படுகின்றது. கடைசியாக, கி.பி. 810க்கு பிறகு பிறந்த புகாரி, முஸ்லிம் மற்றும் திரிமிதி போன்ற இஸ்லாமிய அறிஞர்கள் பல ஆண்டுகள் பல நாடுகளுக்கு சுற்றித்திரிந்து அனைவரிடமிருந்து செய்திகளை சேகரித்தார்கள்.

முஹம்மதுவின் தோழர்கள் மற்றும் குடும்பத்தார்கள் தான் நேரடியாக முஹம்மது சொல்ல அல்லது அவர் செய்யக்கண்டு செய்திகளை அறிந்தார்கள்.

மற்றவர்கள் அனைவரும் முஹம்மதுவை கண்டவர்கள் அல்ல, அவர்கள் வாய்வழியாக செய்திகளை கேட்டவர்கள். முஹம்மதுவின் தோழர்கள் முதற்கொண்டு, புகாரி/முஸ்லிம்/திர்மிதி போன்ற அறிஞர்களுக்கு முன்பு வரை யார் காதுவழியாக கேட்டார்களோ, அந்த தொடரைத் தான் இஸ்னத் என்பார்கள், அதாவது முஹம்மது தொடங்கி ஒரு சங்கிலி போன்று செய்தி, ஒருவர் மாறி ஒருவருக்கு சொல்லப்பட்டு கடைசியாக புத்தகமாக 200 ஆண்டுகளுக்கு பிறகு எழுதப்பட்டது.

இதனை சுருக்கமாக கீழ்கண்ட படத்தில் தமிழில் கொடுத்துள்ளேன்.




இந்த படத்தை பெரிய அளவில் பார்க்க **இந்த தொடுப்பை** சோடுக்கவும்.

கீழ்கண்ட இஸ்லாமிய தளத்தில் இதே விவரங்களை வெறு வகையான படத்தின் மூலமாக விவரித்துள்ளார்கள், அதனையும் க்ளிக் செய்து பார்க்கவும்:

**www.islamic-awareness.org/hadith/ayyubchain.gif**

இந்த கீழ்கண்ட வீடியோவில், ஸனது (சங்கிலித் தொடர்) இல்லாத ஹதீஸ்களை எப்படி கையாளுவது என்பதைப் பற்றி விவரிக்கப்பட்டுள்ளது:

**புகாரியில் சனது இல்லாத ஹதீஸ்களை எப்படி அறிந்துகொள்ளவது?**



**கேள்வி 8:** ஒரே நிகழ்ச்சி அல்லது விவரம் பல ஹதீஸ்களில் வருவது ஏன்?

**பதில் 8:** இந்த கேள்வியை படிப்பதற்கு முன்பாக, முந்தைய கேள்வியின் பதிலையும்,படங்களையும் (இஸ்னத்/ஸனது - சங்கிலித்தொடர்) படித்துக்கொள்ளவும்.

- எந்த செய்தியாக இருந்தாலும், அது ஒருவரிடமிருந்து அதாவது முஹம்மதுவிடமிருந்து மட்டுமே வரும்.
- முஹம்மதுவிடமிருந்து அது பல பேருக்கு வந்து சேருகிறது. முஹம்மதுவின் தோழர்கள், மதினாவில் இருந்த அன்ஸாரிகள், மற்றும் அவரது மனைவிகள் என்று அனைவரிடமும் செய்தி வந்து சேருகிறது.
- இவர்களிடமிருந்தும் அந்த ஒரே செய்தி இன்னும் பலருக்கு சேருகிறது, இப்படி 200+ ஆண்டுகள் வாய்வழியாக பரவுகிறது.
- கடைசியாக, புகாரி மற்றும் மூஸ்லிம் போன்ற அறிஞர்கள் செய்திகளை சேகரிக்கும் போது, ஒரே நிகழ்ச்சி பல அறிவிப்பாளர்களின் மூலமாக வந்ததாக ஹதீஸ்களில் பதிவு செய்கிறார்கள்.



**கேள்வி 9:** குர்ஆனில் சொல்லப்பட்டவைகளோடு ஹதிஸ்கள் முரண்படுமா?

**பதில் 9:** ஹதீஸ்களில் சொல்லப்பட்டவைகள் குர்ஆனோடு முரண்படும்.

முஸ்லிம் அறிஞர்கள், ஹதீஸ்களின் தரத்தை பரிசோதிக்கும்போது, அவர்கள் முன்வைத்த ஒரு நிபந்தனை என்னவென்றால், 'எந்த ஒரு செய்தி/ஹதீஸ், குர்ஆனில் சொல்லப்பட்டவைகளோடு நேரடியாகவோ மறைமுகமாகவோ முரண்படுமானால், அந்த ஹதீஸை பொய்யான/பல்வீனமான ஹதீஸாக கருதவேண்டும்' என்பதாகும்.

மேலே கண்ட பதில்களில் படித்ததின் படி, 98.5% ஹதீஸ்கள் பொய்யானவை என்று முஸ்லிம்கள் கண்டறிந்து தரம் பிரித்துள்ளார்கள். புறக்கணிக்கப்பட்ட ஹதீஸ்களில் குர்ஆனுக்கு எதிராக உள்ள ஹதீஸ்களும் அடங்கும் என்பதை கவனிக்கவும்.



**கேள்வி 10:** முஹம்மதுவின் தோழர்களில்/உறவினர்களில் ஹதிஸ்களை அதிகமாக சொன்னவர்கள் யார்?

**பதில் 10:** இஸ்லாமிய அறிஞர்கள் கீழ்கண்ட பட்டியலைத் தருகிறார்கள்:

1. அபூ ஹுரைரா = 5374
2. அப்துல்லா இப்னு உமர் (உமரின் மகன்) = 2630
3. அனஸ் இப்னு மாலிக் = 2286
4. ஆயிஷா அவர்கள் (முஹம்மதுவின் மனைவி) = 2210
5. அப்துல்லா இப்னு அப்பாஸ் = 1660
6. ஜபீர் இப்னு அப்துல்லாஹ் = 1540
7. அபூ சையத் அல்துத்ரி = 1170

Source: **questionsonislam.com/article/companions-who-narrated-most-hadiths**



**கேள்வி 11:** ஹதீஸ்களை அறிவித்தவர்களில் அபூ ஹுரைரா முதலிடம் வகிக்கிறாரே! இவர் முஹம்மதுவோடு நபித்துவ தொடக்கம் முதல் இருந்தாரா?

**பதில் 11:** அபூ ஹுரைரா ஹிஜ்ரி 7ம் ஆண்டு இஸ்லாமை ஏற்றுக்கொண்டார் என்று இஸ்லாம் சொல்கிறது. அதாவது முஹம்மதுவோடு அபூ ஹுரைரா வெறும் இரண்டு ஆண்டுகளுக்குள் மட்டுமே வாழ்ந்திருக்கிறார் (சிலர் இரண்டு ஆண்டுகள் மூன்று மாதங்கள் என்றும் சொல்கிறார்கள்).

ஆனால் இவர் மட்டும் 5000க்கும் அதிகமான ஹதீஸ்களை எப்படி சொல்லமுடியும் என்ற சந்தேகம் வருகிறது. இந்த கீழ்கண்ட பட்டியலைப் பாருங்கள்:

- 1. அபூ ஹுரைரா = 5374 (முதல் இடம்)
- 4. ஆயிஷா = 2210 (நான்காவது இடம்)
- 10. உமர் = 537 (பத்தாவது இடம்)
- 11. அலி = 536 (பதினோராவது இடம்)
- 31. அபூ பக்கர் = 142 (முப்பத்தி ஒராவது இடம்)

முஹம்மதுவோடு 23 ஆண்டுகள் இருந்தவர், ஹிஜ்ரி செய்தவர், நெருக்கமானவராகிய அபூ பக்கர் அவர்கள் வெறும் 142 நிகழ்ச்சிகளை (ஹதீஸ்களை) கூறியுள்ளார்கள், ஆனால், அதிகபட்சம் இரண்டாண்டுகள் மட்டுமே இருந்த அபூ ஹுரைரா மட்டும் முதல் இடத்தில் 5000க்கும் அதிகமான செய்திகளைச் சொல்லியுள்ளார். இதுமட்டுமல்ல, முஹம்மதுவிற்கு பிரியமான மனைவியாகிய ஆயிஷா அவர்களும், உமர், அலி போன்ற சஹாபாக்களும் மிகவும் குறைவான ஹதீஸ்களை சொல்லியுள்ளார்கள்.

அபூ ஹுரைரா பொய் சொல்லக்கூடியவர் என்றும், கலீஃபாக்களுக்காக ஹதீஸ்களை இட்டுக்கட்டி பேசுபவர் என்றும், இவரை உமர் பெஹ்ரைன்

நாட்டிக்கு ஆளுநராக நியமித்ததாகவும், அதன் பிறகு இவர் பணத்தில் உண்மையாக இல்லாமல் ஏமாற்றியதால், இவரை வேலை நீக்கம் செய்ததாகவும் கீழ்கண்ட இஸ்லாமிய தளம் கூறுகிறது. இரண்டாம் கலிஃபா உமர் அவர்கள் இவரை எச்சரித்த பிறகு, அவரது மரணம் வரைக்கும் இவர் ஹதீஸ்களைச் சொல்வதை விட்டுவிட்டாராம். உமர் மரித்த பிறகு மறுபடியும் ஹதீஸ்களை சொல்ல ஆரம்பித்தவிட்டாராம்.

**Abu-Hurayrah, the man who narrated thousands of Hadiths**

ஒருவேளை அபூ ஹுரைரா பொய் சொல்பவராக இருப்பாரானால், இவர் சொன்ன ஹதீஸ்களை எப்படி நம்புவது?



**கேள்வி 12:** முஹம்மது சென்றுவிட்ட பிறகு "அவரது சொல் மற்றும் செயல்களை ஹதீஸ் புத்தகங்களாக தொகுத்துக் கொள்ளுங்கள்" என்று குர்ஆனில் ஏதாவது வசனம் உண்டா?

**பதில் 12:** இல்லை, குர்ஆனில் முஹம்மதுவின் சொல் மற்றும் செயல்களை புத்தகங்களாக தொகுத்து, அது சொல்வது போல முஸ்லிம்கள் பின்பற்ற வேண்டும் என்று குர்ஆன் சொல்லவில்லை.

ஹதீஹ்களை விடுங்கள், அல்லாஹ் முஹம்மதுவிற்கு இறக்கிய குர்ஆன் வசனங்களையே ஒரு புத்தகமாக தொகுத்துக் கொள்ளுங்கள் என்று முஹம்மதுவிற்கும் குர்ஆன் சொல்லவில்லை, மற்றவர்களுக்கும் சொல்லவில்லை.

அப்படியானால் முஹம்மதுவின் மரணத்திற்கு பிறகு, அபூ பக்கர் அவர்களும், அதன் பிறகு உஸ்மான் அவர்களும் குர்ஆன் வசனங்களை புத்தகமாக தொகுத்தது குர்ஆனுக்கு முரணான செயலா? என்ற கேள்வி எழுந்தால், "ஆம்" என்பது தான் பதில்.

குர்ஆனை புத்தகமாக தொகுத்தது, மனிதனின் சமயோசித புத்தியாகும், அல்லாஹ்வின் ஞானமல்ல. அல்லாஹ்விற்கும் அவனது நபிக்கும் தோன்றாத ஐடியா, சஹாபாக்களுக்கு தோன்றியதின் விளைவே, இன்று முஸ்லிம்கள் குர்ஆனை படித்துக்கொண்டு இருக்கிறார்கள். An idea can change your life என்று சொல்வது போல, குர்ஆனை புத்தகமாக தொகுக்கவேண்டும் என்ற ஐடியா தான் குர்ஆனை முஸ்லிம்களிடம் சேர்த்துள்ளது.

அல்லாஹ்வின் ஐடியா படி செய்திருந்தால்(குர்ஆனை மனப்பாடம் மட்டும் செய்திருந்தால்), இஸ்லாம் உலகில் இன்று இருந்திருக்குமோ! இல்லையோ! சந்தேகம் தான்.



**கேள்வி 13:** குர்ஆன் வசனங்களின் பின்னணி ஹதீஸ்களில் கிடைக்கும் என்கிறார்களே, அனைத்து குர்ஆன் வசனங்களுக்கும் பின்னணியை ஹதீஸ்களில் காணலாமா?

**பதில் 13:** இல்லை, குர்ஆனில் 6236 வசனங்கள் உள்ளன, இவைகள் அனைத்திற்கான பின்னணி ஹதீஹ்களில் இல்லை.

உதாரணம்: நான் "(திருக்குர்ஆன்" என்ற வார்த்தையை புகாரி ஹதீஸில் தேடிப்பார்த்தேன், அதாவது ஒரு நிகழ்ச்சியை குறிப்பிட்டுவிட்டு, அதன் பிறகு 'இந்த குறிப்பிட்ட குர்ஆன் வசனம்' இறங்கியது என்று வருகின்ற இடத்தை கணக்கிட்டால், நமக்கு 605 இடங்கள் வருகின்றன.

குர்ஆனில் உள்ள வசனங்களில் ~10% வசனங்களுக்கு பின்னணியை புகாரியில் காணலாம். இதர ஐந்து ஹதீஸ்களையும் சேர்த்தால் இன்னொரு 10% வசனங்களுக்கு பின்னணி கிடைக்கலாம்(போனால் போகட்டும் பெரிய மனசு எனக்கு). மொத்தத்தை கூட்டினால் ~20% வசனங்களுக்கு பின்னணிகள் கிடைக்கலாம். மீதமுள்ள 80% வசனங்களுக்கு வேறு இஸ்லாமிய நூல்களிலிருந்தும், விளக்கவுரைகளிலிருந்தும், சீராக்களிலிருந்தும் கிடைக்கும். இன்னும் ஆழமாக ஆய்வு செய்தால், இந்த கேள்விக்கு இன்னும் சரியான பதில் கிடைக்கும்.



**கேள்வி 14:** முஹம்மதுவின் சரித்திர நூல்களில் சொல்லப்பட்டவைகளோடு ஹதீஸ்கள் முரண்படுமா?

**பதில் 14:** ஆம், ஹதிஸ்களும், முஹம்மதுவின் வாழ்க்கை சரித்திர நூல்களும் முரண்படும்.

**உதாரணம்:**

இப்னு இஷாக்கின் "சீரத் ரஸூலல்லாஹ்" என்ற சரித்திர நூல் தான், ஹதீஸ்களுக்கும் முந்தையது. இதில் சொல்லப்பட்ட பல விவரங்கள், ஹதீஸ்களில் இருப்பதில்லை. மேலும், பல தர்மசங்கடமான விவரங்கள் இந்த சீராவில் உள்ளன. அதாவது "சாத்தானின் வசனங்கள்" பற்றிய நிகழ்ச்சி சீராவில் உள்ளது, ஹதீஸ்களில் இல்லை.

குறிப்பு: ஹதீஸ்களில் இல்லை என்றுச் சொல்வதைக் காட்டிலும், மறைமுகமாக உள்ளது எனலாம்.



**கேள்வி 15:** சாத்தானின் வசனங்கள் பற்றி ஹதீஸ்களில் இல்லை என்றுச் சொல்வது உண்மையா?

**பதில் 15:** முஸ்லிம்களின் பிரதானமான ஹதீஸ் தொகுப்பு 'ஸஹீஹ் புகாரி' ஆகும். குர்ஆனுக்கு அடுத்தபடியான ஆதாரமாக புகாரி நூல் உள்ளது. இந்த நூலில், சாத்தானின் வசனங்கள் பற்றி குறிப்பு உண்டு. ஆனால், சீராக்களில் சொல்லப்பட்டது போன்று பின்னணி விளக்கம் அளிக்காமல் குறிப்பிடப்பட்டுள்ளது.

**பார்க்க: நூல் புகாரி, எண்கள்: 1071 & 4862**

**1071. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.**

நபி(ஸல்) அவர்கள் நஜ்மு அத்தியாயத்தை ஓதி ஸஜ்தாச் செய்தார்கள். அவர்களுடன் இருந்த **முஸ்லிம்களும் இணைவைப்பவர்களும் ஏனைய மக்களும் ஜின்களும் ஸஜ்தாச் செய்தனர்**.

**4862. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்**

நபி(ஸல்) அவர்கள் (53 வது அத்தியாயமான) 'அந்நஜ்கி' அத்தியாயத்தை ஓதி (ஓதலுக்கான) சிரவணக்கம் (சஜ்தா) செய்தார்கள். அவர்களுடன் இருந்த **முஸ்லிம்களும், இணைவைப்பாளர்களும், ஏனைய மக்களும், ஜின்களும் சஜ்தாச் செய்தனர்**. இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது. இப்னு உலைய்யா(ரஹ்) தம் அறிவிப்பில் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களை (அவர்கள் அறிவித்ததாக)க் குறிப்பிடவில்லை.



**கேள்வி 16:** சாத்தானின் வசனங்கள் பற்றிய பின்னணியை சுருக்கமாக விளக்கமுடியுமா?

**பதில் 16:**

இந்த ஹதீஸின் (சாத்தானின் வசனங்களின்) பின்னணி:

அனேக இஸ்லாமியர்கள் இப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சி (சாத்தானின் வசனங்கள்) நடைபெறவில்லை என்றுச் சொல்கிறார்கள். ஆனால், உண்மையில் "சாத்தானின் வசனங்கள்" நிகழ்ச்சி பற்றிய விவரங்கள் ஆரம்பகால இஸ்லாமிய நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இது மட்டுமல்ல, இந்த விவரங்கள் ஹதீஸ்கள் மற்றும் குர்ஆனில் உள்ள விவரங்களோடு ஒத்துப்போகிறது.

முஹம்மது தன்னை நம்புகிறவர்களின் துன்பங்களுக்கு ஒரு முடிவு கட்டவேண்டும் என்று விரும்பினார். அதே நேரத்தில் தன் ஊர் மக்களாகிய மக்காவினரோடு சமாதானமாக இருக்க விரும்பினார். இந்த பிரச்சனைகளுக்கு முடிவு கட்ட அல்லாஹ் ஒரு வெளிப்பாட்டை அனுப்புவார் என்று முஹம்மது நம்பினார்.

"இறைத்தூதர் தன் மக்களின் நலனில் அதிக அக்கரையுள்ளவராக இருந்தார் மற்றும் மக்காவினரோடு ஒற்றுமையடைந்து சமாதானமாக இருக்க விரும்பினார்..." Tabari vol 6, page 107, 108.

இந்த சந்தர்ப்பத்தை சாத்தான் பயன்படுத்திக்கொண்டு முஹம்மதுவின் வாயில் தன் வசனங்களை போட்டுவிட்டான். முஹம்மது சாத்தானின் வார்த்தைகளை அப்படியே அல்லாஹ்வின் வார்த்தையாக வெளிப்படுத்திவிட்டார் மற்றும் மக்காவினரின் தெய்வங்களுக்கு மரியாதையும் செய்ய அனுமதித்து விட்டார்.

குர்ஆன் 53:19-20 நீங்கள் (ஆராதிக்கும்) லாத்தையும், உஸ்ஸாவையும் கண்டீர்களா? மற்றும் மூன்றாவதான "மனாத்"தையும் (கண்டீர்களா?) **இவைகள் உயர பறப்பவைகள், இவர்களின் மத்தியஸ்தம் அங்கீகாரத்தோடு ஏற்றுக்கொள்ளப்படும்.**

முஹம்மதுவின் வார்த்தைகளை மக்கா மக்கள் ஏற்றுக்கொண்டனர், ஏனென்றால், இவர் அவர்களின் தெய்வங்களை அங்கீகரித்தார்.

"குரைஷிகள் இதை கேட்டதும், மட்டில்லா மகிழ்ச்சி கொண்டனர், மற்றும் அவர் தங்கள் தெய்வங்கள் பற்றி சொன்ன விதம் அவர்களுக்கு அதிக சந்தோஷத்தை கொடுத்தது..." Tabari vol 6, page 108.

இந்த இடத்தில் நடந்த நிகழ்ச்சியைத் தான் மேற்கண்ட ஹதீஸ்கள் கூறுகின்றன, அதனை இன்னொரு முறை இங்கு படியுங்கள்:

**புகாரி 1071. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.**

நபி(ஸல்) அவர்கள் நஜ்மு அத்தியாயத்தை ஓதி ஸஜ்தாச் செய்தார்கள். அவர்களுடன் இருந்த முஸ்லிம்களும் இணைவைப்பவர்களும் ஏனைய மக்களும் ஜின்களும் ஸஜ்தாச் செய்தனர்.

கவனிக்கவும், முஸ்லிம்களோடு சேர்ந்து இணைவைப்பாளர்கள் ஸஜ்தா (சிரம் பணிந்து தொழுதுக்கொள்வது) செய்தனர். இந்த ஹதீஸின் படி, முஸ்லிம்கள், இணைவைப்பாளர்களாகிய மக்கா மக்கள், ஜின்கள் என்று எல்லோரும் ஸஜ்தா செய்தனர்.

இதுவரை தங்கள் தெய்வங்களை திட்டிக்கொண்டு இருந்த முஹம்மது, இப்போது அவைகள் பற்றி நன்றாக கூறி குர்ஆன் வசனங்களை ஓதியுள்ளாரே என்ற மகிழ்ச்சியில், இணைவைப்பாளர்கள் ஒன்றாக சேர்ந்து தொழுதார்கள்.

**பிறகு நடந்ததென்ன?**

எல்லோரும் ஒன்றாக ஸஜ்தா செய்துவிட்டு, வீட்டிற்குச் சென்றுவிட்டனர். அதன் பிறகு காபிரியேல் தூதன் முஹம்மதுவை கடிந்துக்கொண்டு அவரின் தவறை திருத்தினார். இதனால், முஹம்மது குர்ஆனில் இருந்த அந்த சாத்தானின் வசன

பகுதிக்கு பதிலாக வேறு வசனத்தைச் சொன்னார், மறுபடியும் இது மக்காவினரின் மனதை வேதனைக்குள்ளாக்கியது. முஹமம்து தன் பாவத்திற்காக அதிகமாக வேதனையடைந்தார், ஆகையால், காபிரியேல் முஹம்மதுவிடம் "அல்லாஹ் உன் தவறை லேசாக எடுத்துக்கொண்டார்" என்றுச் சொன்னார், அதாவது சாத்தானின் பொய்யான வசனத்தை குர்ஆனோடு சேர்த்த முஹம்மதுவின் பாவத்தை அல்லாஹ் அவ்வளவு பெரிய பாவமாக கருதவில்லை. இதோடு நின்றுவிடாமல், முந்தைய நபிகளும் இதே போல சாத்தானால் தூண்டப்பட்டு, இதே பாவத்தை செய்தார்கள், அதாவது சாத்தானின் வசனத்தை இறைவனின் வசனமாகச் சொன்னார்கள் என்றும் அல்லாஹ் கூறினார்.

**சாத்தானின் வசனத்தை சொல்லிவிட்டோமே என்று துக்கப்பட்ட முஹம்மதுவை தேற்றும் அல்லாஹ்:**

**டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்:**

குர்ஆன் 22:52. (நபியே!) உமக்கு முன்னர் நாம் அனுப்பி வைத்த ஒவ்வொரு தூதரும், நபியும், (ஓதவோ, நன்மையையோ) நாடும்போது, அவர்களுடைய அந்த நாட்டத்தில் **ஷைத்தான்** குழப்பத்தை எறியாதிருந்ததில்லை; எனினும் ஷைத்தான் எறிந்த குழப்பத்தை அல்லாஹ் நீக்கியப் பின்னர் அவன் தன்னுடைய வசனங்களை உறுதிப்படுத்துகிறான் - மேலும், அல்லாஹ் யாவற்றையும் அறிந்தவனாகவும், ஞானம் மிக்கோனாகவும் இருக்கின்றான்.

**அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:**

குர்ஆன் 22:52. (நபியே!) உங்களுக்கு முன்னர் நாம் அனுப்பிய ஒவ்வொரு நபியும், தூதரும் (எதையும்) ஓதிய சமயத்தில் அவருடைய ஓதுதலில் **ஷைத்தான்** குழப்பத்தை உண்டு பண்ண முயற்சிக்காமல் இருக்கவில்லை. (அவர்களுடைய ஓதுதலில்) ஷைத்தான் உண்டுபண்ணிய (தப்பான)தை அல்லாஹ் நீக்கிய பின்னர்தன்னுடைய வசனங்களை உறுதிப்படுத்தி விடுகின்றான். அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவனும் ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்.

இன்று நம்மிடமுள்ள குர்ஆனில், கீழ்கண்ட வசனத்தில், கடைசி பாகம் இருப்பதில்லை.

குர்ஆன் 53:19-20 நீங்கள் (ஆராதிக்கும்) லாத்தையும், உஸ்ஸாவையும் கண்டீர்களா? மற்றும் மூன்றாவதான "மனாத்"தையும் (கண்டீர்களா?) ~~இவைகள் உயர பறப்பவைகள், இவர்களின் மத்தியஸ்தம் அங்கீகாரத்தோடு ஏற்றுக்கொள்ளப்படும்~~.

சாத்தனின் வசனங்கள் பற்றிய விவரங்களை நமக்கு கீழ் கண்ட ஆரம்ப கால இஸ்லாமிய மூலங்களிலிருந்து (Early Muslim Resources) கிடைக்கின்றன:

(1) Ibn Ishaq, (இபின் இஷாக்)

(2) Wakidi, (வாகிடி)

(3) Ibn Sa'd, (இபின் சத்)

(4) al-Tabari, (அல்-தபரி)

(5) Ibn Abi Hatim, (இபின் அபி ஹடிம்)

(6) Ibn al-Mundhir, (இபின் அல்-முந்திர்)

(7) Ibn Mardauyah, (இபின் மர்டவ்யா)

(8) Musa ibn 'Uqba, and (மூசா இபின் அக்பா)

(9) Abu Ma'shar.[6] (அபு மஷர் )

இப்போதைக்கு இந்த விவரங்கள் போதும், இதைப் பற்றி விவரமாக வேறு கேள்வியில் காண்போம்.



**கேள்வி 17:** சன்னி ஹதீஸ்கள் ஆறும் தமிழாக்கம் செய்யப்பட்டு இணையத்தில் கிடைக்குமா?

**பதில் 17:** இல்லை, வெறும் இரண்டு தமிழாக்கங்கள் மட்டும்தான் முழுவதுமாக தமிழில் கிடைக்கிறது.

- ஸஹீஹ் புகாரி
- ஸஹீஹ் முஸ்லிம்

**தொடுப்பு:** [www.tamililquran.com](http://www.tamililquran.com)



**கேள்வி 18:** தபரி என்ற இஸ்லாமிய சரித்திர ஆசிரியர் பற்றி சிறிது விளக்கவும்.

**பதில் 18:** அபூ ஜபர் முஹம்மத் இப்னு ஜரீர் அத்தபரி என்பது இவரது முழு பெயராகும். இவர் கி.பி. 839ம் ஈரானிலுள்ள அமோல், தபரிஸ்தானில் பிறந்தார். இவர் ஈராக்கில் உள்ள பாக்தாத்தில் கி.பி. 923ம் ஆண்டு காலமானார். இவர் ஒரு முக்கியமான இஸ்லாமிய அறிஞராவார். இவர் இஸ்லாமின் ஆரம்ப கால விவரங்களை பல அறிஞர்களிடமிருந்து சேகரித்து தொகுத்தார்.

இவருக்கு பிறகு வந்த இஸ்லாமிய அறிஞர்கள் தபரியின் இந்த தொகுப்பை அதிகமாக பயன்படுத்துகின்றனர். இவரது தொகுப்பிலிருந்து தான், அல்பிரட் குல்லேம் (Alfred Guillaume) இப்னு இஷாக்கின் "முகம்மதுவின் சரிதையிலிருந்து" தொலைந்து விட்ட பகுதிகளை மீட்டு எடுத்தார். இப்னு ஹிஷாம் தம்முடைய சரிதையில் அவ்விவரங்களை வேண்டுமென்றே நீக்கி இருந்தார்.

இஸ்லாமின் சுன்னி பிரிவு முஸ்லிம்களின் கோட்பாடுகளுக்கு தபரியின் தொகுப்பு ஒரு முக்கியமான மூலமாக இருந்துள்ளது.

இவர் குர்ஆன் விளக்கவுரையையும் முஹம்மதுவின் வாழ்க்கை சரிதையையும் எழுதினார்:

- Tafsir al-Tabari ('Commentary of al-Tabari'); Qur'anic commentary (tafsir).
- Tarikh al-Rusul wa al-Muluk (History of the Prophets and Kings), historical chronicle, often referred to as Tarikh al-Tabari.

**Source: en.wikipedia.org/wiki/Al-Tabari**

**முக்கிய குறிப்பு:** தபரி என்று பெயர் பெற்ற இன்னொருவர் இருக்கிறார், அவரோடு மேலே குறிப்பிட்ட தபரியை சம்மந்தப்படுத்தி குழப்பிக்கொள்ளவேண்டாம்.

இவரது பெயர் "அலி பி. இரப்பான் தபரி, (Ali b. Rabban at-Tabari) ஆகும், இவர் கி.பி. 855ம் ஆண்டு காலமானார். இவர் "Firdaws al-Hikma (கி.பி. 850)" மற்றும் "The Book of Religion and Empire" என்ற புத்தகங்களையும், இதர நூல்களையும் எழுதியுள்ளார். இவர் கிறிஸ்தவ பின்னணியைக் கொண்டவர், இவர் இஸ்லாமை தழுவியிருந்தார். மேலும் கிறிஸ்தவர்களுக்கு எதிராகவும் இவர் எழுதியிருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.



**கேள்வி 19:** முஹம்மது தமது மரணத்தருவாயில் யூத கிறிஸ்தவர்களை சபித்ததாக வரும் ஹதீஸ் எது?

**பதில் 19:** முஹம்மது மரிக்கும் போது, மற்றவர்களை சபித்தார், பார்க்க:

**புகாரி நூல் எண்கள்: 435, 436:**

435. ஆயிஷா(ரலி) அறிவித்தார். நபி(ஸல்) அவர்கள் மரண வேளை நெருங்கியபோது தங்களின் போர்வையைத் தம் முகத்தின் மீது போடுபவர்களாகவும் மூச்சுத் திணறும்போது அதைத் தம் முகத்தைவிட்டு அகற்றுபவர்களாகவும் இருந்தனர். இந்த நிலையில் அவர்கள் இருக்கும்போது '**தங்கள் நபிமார்களின் அடக்கஸ்தலங்களை வணக்கத் தலங்களாக ஆக்கிய**

**யூத கிறிஸ்தவர்களின் மீது அல்லாஹ்வின் சாபம் ஏற்படட்டும்!**' எனக் கூறி அவர்களின் செய்கை பற்றி எச்சரித்தார்கள்.

இயேசு தன்னை சிலுவையில் அறைந்தவர்களை மன்னித்தார். இவ்விருவருக்கும் இடையே இருக்கும் வித்தையாசத்தை கவனித்தீர்களா?

லூக்கா 23: 34. அப்பொழுது இயேசு: பிதாவே இவர்களுக்கு மன்னியும், தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே என்றார்...



**கேள்வி 20:** "ஸஃபியுர் ரஹ்மான் முபாரக்பூரி" எழுதிய “ரஹீக்” புத்தகத்தின் முக்கியத்துவம் என்ன?

**பதில் 20:** முஹம்மதுவின் வாழ்க்கை வரலாறு ஹதீஸ்களில் முழுவதுமாக இல்லை. குர்-ஆனில் முஹம்மதுவின் வரலாறு 1% கூட இல்லை என்றுச் சொல்லலாம். ஆரம்ப கால இஸ்லாமிய அறிஞர்கள் முஹம்மதுவின் வாழ்க்கை வரலாற்றை ஒரு கோர்வையாக எழுதினார்கள், அதில் முக்கியமானவர் இப்னு இஷாக் என்பவர் ஆவார். இவர் எழுதிய கையெழுத்துப் பிரதிகள் இப்போது நம்மிடம் இல்லை, ஆனால், இவரைத் தொடர்ந்து இப்னு இஷாம், மற்றும் தபரி போன்றவர்கள், இவருடைய புத்தகத்திலிருந்து முழுவதுமாக மேற்கோள் காட்டியுள்ளார்கள். அதாவது, அழிந்துவிட்ட இப்னு இஷாக்கின் சரித்திரம் முழுவதும் இவ்விருவரின் புத்தகங்களில் கிடைத்துவிடும். தமிழ் முஸ்லிம்களின் துரதிர்ஷ்டம் என்னவென்றால், இந்த சரித்திரங்கள் அனைத்தும் இதுவரை தமிழில் மொழியாக்கம் செய்யப்படவில்லை என்பதாகும் [ஆங்கிலத்தில் உண்டு].

”அர்ரஹீக்குல் மக்தூம்” அல்லது ரஹீக் என்ற பெயரில் ஒரு புத்தகம் தமிழில் முஸ்லிம்களால் மொழியாக்கம் செய்யப்பட்டது. இதில் சொல்லிக்கொள்ளும் அளவிற்கு முஹம்மதுவின் சரித்திரம் ஒரு கோர்வையாக எழுதப்பட்டுள்ளது.

இப்புத்தகத்துக்கு ஒரு சிறப்பு உண்டு. ”உலக இஸ்லாமிய லீக்” என்ற இயக்கம் மக்காவை தலைமையிடமாகக் கொண்டு செயல்பட்டுக்கொண்டு இருக்கிறது. 1976ம் ஆண்டு, முஹம்மதுவின் வாழ்க்கை வரலாற்றை இஸ்லாமிய சரித்திரத்தின் அடிப்படையில் சிறப்பாக எழுதுபவர்களுக்கு பரிசுகள் வழங்கப்படும் (மொத்தம் 1,50,000 சௌதி ரியால்கள்) என்று அறிவித்தது. உலகமனைத்திலும் இருந்து 1182 ஆய்வுகள் பல மொழிகளில் பல இஸ்லாமிய அறிஞர்கள் எழுதி அனுப்பினார்கள். அதில் கடைசியாக 183 ஆய்வுகள் ஏற்றுக்கொள்ளப்பட்டு, முடிவாக 5 ஆய்வுகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. இதில் முதல் பரிசை தட்டிச்சென்றது இந்த “ரஹீக்” என்ற புத்தகம். இதனை தமிழிலும் மொழியாக்கம் செய்து வெளியிட்டார்கள். முஹம்மதுவைப் பற்றிய விவரங்களை கோர்வையாக படிக்க இந்த புத்தகம் பேருதவியாக உள்ளது.

- இப்புத்தகத்தின் இதர விவரங்களை அறியவும், PDFல் மற்றும் ஆடியோவில் பதிவிறக்கம் செய்யவும் இந்த தொடுப்பிற்குச் செல்லவும்: **இஸ்லாம் கல்வி**
- இணையத்தில் படிக்க இங்கு சொடுக்கவும்: **தமிழில் குர்-ஆன் - முஹம்மதுவின் வரலாறு**

ஆக, பாகிஸ்தானும், சௌதியும் (உலக முஸ்லிம் தலைவர்கள்) ஒன்றாக சேர்ந்து ஆய்வு செய்து, இது தான் உண்மையான ஆதார பூர்வமான முஹம்மதுவின் சரித்திரம் என்று பாராட்டி, பரிசுகள் வழங்கிய புத்தகம் தான் ரஹீக் (அர்ரஹீக்குல் மக்தூம் என்றால், முத்திரையிடப்பட்ட உயர்ந்த மதுபானம் என்று பொருள்). இதன் இன்னொரு சிறப்பு, இப்புத்தகத்தின் ஆசிரியர் ஒரு இந்தியர் (உத்திர பிரதேசம்) என்பதாகும்.



**கேள்வி 21:** முஹம்மது பாவங்கள் செய்யவில்லை என்று முஸ்லிம்கள் சொல்கிறார்கள், ஆனால் அவர் அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கோரியதாக ஹதீஸ்களில் உள்ளது என்கிறார்கள், இது உண்மையா?

**பதில் 21:** முஹம்மது சொன்னதை நம்பவேண்டுமா? அல்லது முஸ்லிம்கள் சொல்வதை நம்பவேண்டுமா?

முஹம்மது செய்த விண்ணப்பத்தை முஸ்லிம்களின் நம்பகமான ஸஹீஹ் (புகாரி) ஹதீஸ்களில் காண்போம்.

**a) நான் (முஹம்மது) பாவங்கள் புரிந்துள்ளேன்:**

பாகம் 6, அத்தியாயம் 80, எண் 6306

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

'அல்லாஹும்ம! அன்த்த ரப்பீ. லா இலாஹ இல்லா அன்த்த. கல்க்த்தனீ. வ அன அப்துக்க. வ அன அலா அஹ்திக்க, வ வஅதிக்க மஸ்தததஅத்து. அஊது பிக்க மின் ஷர்ரி மா ஸனஅத்து. அபூ உ லக்க பி நிஅமத்திக்க அலய்ய, வ அபூ உ லக்க பி தன்பீ. ஃபஃக்பிர்லீ. ஃபஇன்னஹு லா யஃக்பிருத் துன}ப இல்லா அன்த்த' என்று ஒருவர் கூறுவதே தலைசிறந்த பாவமன்னிப்புக் கோரலாகும்.

(பொருள்: அல்லாஹ்! நீயே என் அதிபதி. உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. நீயே என்னைப் படைத்தாய். நான் உன் அடிமை நான் உனக்குச் செய்து கொடுத்த உறுதி மொழியையும் வாக்குறுதியையும் என்னால் இயன்ற வரை நிறைவேற்றியுள்ளேன். நான் செய்தவற்றின் தீமைகளிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். நீ எனக்கு அருட் கொடைகளை வழங்கியுள்ளாய் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். மேலும், நான் பாவங்கள் புரிந்துள்ளதையும் உன்னிடம் (மறைக்காமல்) ஒப்புக்கொள்கிறேன். எனவே,

என்னை மன்னிப்பாயாக! ஏனெனில், பாவத்தை மன்னிப்பவன் உன்னைத் தவிர வேறெவரும் இல்லை.) …. என ஷத்தாத் இப்னு அவ்ஸ்(ரலி) அறிவித்தார்

**b) எனக்கும் என் தவறுகளுக்குமிடையே நீ இடைவெளியை ஏற்படுத்துவாயாக**

பாகம் 6, அத்தியாயம் 80, எண் 6368

ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்' …

(பொருள்: இறைவா! உன்னிடம் நான் சோம்பலிலிருந்தும், தள்ளாமையிலிருந்தும் பாவத்திலிருந்தும், கடனிலிருந்தும், மண்ணறையின் சோதனையிலிருந்தும், அதன் வேதனையிலிருந்தும், நரகத்தின் சோதனையிலிருந்தும், அதன் வேதனையிலிருந்தும், செல்வத்தின் தீமைகளிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், நான் உன்னிடம் வறுமையின் சோதனையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். (பெருங்குழப்பவாதியான) மஸீஹுத் தஜ்ஜாலின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் என் தவறுகளை என்னிலிருந்து கழுவுவாயாக! மேலும், அழுக்கிலிருந்து வெண்மையான ஆடையை நீ தூய்மைப் படுத்துவதைப் போன்று தவறுகளிலிருந்து என் உள்ளத்தைத் தூய்மைப்படுத்துவாயாக! கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையே நீ ஏற்படுத்திய இடைவெளியைப் போன்று எனக்கும் என் தவறுகளுக்குமிடையே நீ இடைவெளியை ஏற்படுத்துவாயாக)

**c) நான் வேண்டுமென்றே அறிந்து செய்த பாவங்களையும் மன்னிப்பாயாக:**

பாகம் 6, அத்தியாயம் 80, எண் 6398

அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பின்வருமாறு பிரார்த்திப்பது வழக்கம்: ரப்பிஃக்ஃபிர் லீ கத்தீஅத்தீ, வ ஜஹ்லீ, வ இஸ்ராஃபி ஃபீ அம்ரீ குல்லிஹி, வமா அன்த்த அஉலமு பிஹி மின்னீ, அல்லாஹும்மஃக்ஃபிர்லீ கத்தாயாய, வ அம்தீ, வ ஜஹ்லீ, வ ஜத்தீ வ குல்லு தாலிக்க இந்தீ. அல்லாஹும்ம ஃக்ஃபிர் லீ மா கத்தகித்து, வ மா அஉலன்த்து, அன்த்தல் முகத்திமு, வ அன்த்தல் முஅக்கிரு, வ அன்த்த அலா குல்லி ஷையின் கதீர்.

(பொருள்: என் இறைவா! என் குற்றங்களையும், என் அறியாமையையும், என் செயல்கள் அனைத்திலும் நான் மேற்கொண்ட விரயத்தையும் மன்னித்திடுவாயாக. மேலும், என்னை விட நீ எவற்றையெல்லாம் அறிந்துள்ளாயோ அவற்றையும் மன்னித்திடுவாயாக. இறைவா! நான் தவறுதலாகச் செய்ததையும், வேண்டுமென்றே செய்ததையும், அறியாமல் செய்ததையும், அறிந்து செய்ததையும் மன்னித்திடுவாயாக. இவை யாவும்

என்னிடம் இல்லாமலில்லை. இறைவா! நான் முன்னால் செய்ததையும், பின்னால் செய்ததையும், இரகசியமாகச் செய்ததையும் பம்ரங்கமாகச் செய்ததையும் மன்னித்திடுவாயாக. நீயே முன்னேற்றம் அடையச் செய்பவன். பின்னடைவு ஏற்படச் செய்பவனும் நீயே! நீ அனைத்தின் மீதும் ஆற்றல் பெற்றவன்.

**d) என்னிடம் பாவம் இல்லாமல் இல்லை, மன்னித்திடு:**

பாகம் 6, அத்தியாயம் 80, எண் 6399

அபூ மூஸா அல் அஷ்அரீ(ரஹ்) அவர்கள்கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) பிரார்த்தித்துவந்தார்கள். அல்லாஹும்ம ஃக்ஃபிர் லீ கத்தீஅத்தீ, வ ஜஹ்லீ, வ இஸ்ராஃபீ ஃபீ அம்ரீ, வமா அன்த்த அஉலமு பிஹி மின்னீ, அல்லாஹும்ம ஃக்ஃபிர் லீ ஹஸ்லீ, வ ஜித்தீ, வ கத்தயீ, வ அம்தீ, வ குல்லு தாலிக்க இந்தீ.

(பொருள்: இறைவா! என் குற்றங்களையும் என் அறியாமையையும், என் செயல்களில் நான் மேற்கண்ட விரயத்¡யும், மேலும், என்னை விட நீ எவற்றையெல்லாம் அறிந்துள்ளாயோ அவற்றையும் மன்னித்திடுவாயாக! இறைவா! நான் விளையாட்டாகச் செய்ததையும், வினையாகச் செய்ததையும், தவறுதலாகச் செய்ததையும், வேண்டுமென்றேச் செய்ததையும் மன்னித்திடுவாயாக! இவை யாவும் என்னிடம் இல்லாமலில்லை.)

இந்த பாவமன்னிப்பின் ஜெபத்தில் அவர் "பாவம்" என்பதற்கு வேறு ஒரு வார்த்தையை பயன்படுத்துகிறார். அவர் "தன்ப்" என்ற வார்த்தைக்கு பதிலாக "**க்ஹடிய – khati'a**" என்ற வார்த்தையை பயன்படுத்துகிறார்.

இஸ்லாமிய கலைக் களஞ்சியம் (The Encyclopedia of Islam [9]) "க்ஹடிய – khati'a" என்ற வார்த்தையின் பொருளை கீழ்கண்டவாறு விவரிக்கிறது:

"Moral lapse, sin, a synonym of dhanb. The root means "to fail, stumble", "make a mistake", "of an archer whose arrow misses the target".

"நற்குண குறைபாடு, பாவம், 'தன்ப்' என்ற வார்த்தைக்கு சுமமானது". இதன் மூல வார்த்தையின் பொருள் "தவறுவது, தடுமாறுவது", "தவறு செய்வது", "குறி தவறிய அம்பை எய்தவன்" என்பவைகளாகும்.

முஹம்மது தன்னுடைய விண்ணப்பத்தில் (ஜெபத்தில்), பாவத்தின் அனைத்து விதங்களையும் அங்கீகரிக்கிறார்:

**அதாவது:**

- தீய செயல்கள்,
- தவறுகள்,

- தெரியாமல் செய்த தவறுகள்,
- பிழைகள்,
- தற்செயலாக செய்த பிழைகள்,
- வேண்டுமென்றே தெரிந்தே செய்த பாவங்கள்,
- கடந்த கால பாவங்கள்,
- எதிர்கால பாவங்கள் மற்றும்
- பெரிய பாவங்கள்

என்று அனைத்து விதமான பாவங்கள் பற்றியும் கூறுகிறார். இந்த செயல்கள் அனைத்தும் வெறும் சிறிய "தவறுகள்" அல்ல, அதற்கு பதிலாக இவைகள் அனைத்தும் "தண்டனைக்கு உகந்த பாவங்கள்" ஆகும், இதனை முஹம்மதுவின் விண்ணப்பத்தை கவனித்தால் புரிந்துக்கொள்ளலாம்.

முஹம்மது ஒரு பாவி என்று அவரே அங்கீகரித்து விட்டார். அவர் செய்த பாவ மன்னிப்பின் விண்ணமானது, அவர் தன்னுடைய பாவத்தின் தீவிரத்தை அறிந்திருக்கிறார் என்பதை நமக்கு காட்டவில்லையா? அல்லாஹ் பாவங்கள் செய்யும் மனிதர்களை தண்டிக்கிறார் என்பதை அறிந்திருந்தார், அதனால் தான் அவர் பாவமன்னிப்பிற்காக அல்லாஹ்விடம் வேண்டினார். தன்னுடைய குற்றங்களுக்காக நரகத்தில் எரிய முஹம்மது விரும்பவில்லை.



**கேள்வி 22:** ஹதீஸ்களில் விஞ்ஞான பிழைகள் உண்டா? நிலவு பிளந்த அற்புதத்தை முஹம்மது செய்தாரா?

**பதில் 22:** சந்திரன் பிளக்கப்பட்டதைப் பற்றி முஸ்லிம் ஹஹீஸில் பதிவுசெய்யப்பட்டுள்ள விவரங்கள்:

5395. அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நான் இறைவனின் தூதர் என்பதற்கு) நீங்கள் சாட்சிகளாக இருங்கள்" என்று சொன்னார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

மேலும் பார்க்க: ஸஹீஹ் முஸ்லிம் ஹதீஸ் எண்கள்: 5396, 5397, 5398, 5399, 5400

இந்த ஹதீஸ்களை மேலோட்டமாக படிக்கும் போதும், அவைகளில் தவறுகள் இருப்பதை காணமுடியும்.

**கேள்விகள்:**

- யாரிடம் முஹம்மது “(நான் இறைவனின் தூதர் என்பதற்கு) நீங்கள் சாட்சிகளாக இருங்கள்” என்று கூறினார்? முஹம்மதுவின் தோழர்கள்

ஏற்கனவே அவரை நபி என்று நம்பிவிட்டார்களே! அவர்களிடம் ஏன் மறுபடியும் நீங்கள் சாட்சிகளாக இருங்கள் என்று கேட்கிறார்?

- சந்திரனின் விட்டம் எவ்வளவு என்று இந்த ஹதீஸை அறிவித்த அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் என்பவருக்குத் தெரியுமா?
- சந்திரன் இரண்டாக பிளந்து ஒரு துண்டு ஹிரா மலைக்கு மேற்பகுதியில் காணப்பட்டதாம், இன்னொரு துண்டு ஹிரா மலைக்கு கீழ்பகுதிக்கு சென்றதாம்.
- பூமியில் அளவில் நான்கில் ஒரு பாகம் சந்திரனின் அளவு ஆகும் (27%).
- சந்திரனின் விட்டம் 1737 கிலோ மீட்டராகும்.
- பூமியில் நின்றுக்கொண்டு சந்திரனை பார்ப்பவர்கள் (அக்கால அரேபியர்கள்), சந்திரனின் அளவு நம் இரண்டு கைகளால் பிடிக்கக்கூடிய அளவிற்கு இருக்கும் ஒரு பந்து போல என்று நினைத்துக்கொண்டு மேற்கண்ட ஹதீஸை சொல்லியுள்ளார்கள். ஆனால், 1737 கிமீ விட்டம் கொண்ட ஒரு பந்தை இரண்டாக பிளந்தால், அதன் பின்னால், ஹிரா மலையென்ன, அரேபியாவின் பாதி அப்படியே மறைந்துவிடும்.

மேற்கண்ட ஹதீஸ் ஒரு பொய்யான ஹதீஸ் என்பது இதிலிருந்து நமக்குத் தெரிகின்றது. ஒருவர் கனவு கண்டால், அதில் மேற்கண்ட விதமாக பார்த்தார் என்றுச் சொன்னால், அதனை ஏற்கலாம், ஏனென்றால் கனவில் (கற்பனைப்போன்று) எல்லாம் சாத்தியம். ஆனால், இங்கு நாம் ஆய்வு செய்துக்கொண்டு இருப்பது, உண்மையான நிலவு இரண்டாக பிளந்தது பற்றியதாகும். எனவே, முஹம்மது சந்திரனை பிளந்து அற்புதம் செய்தார் என்பது பொய்யான கூற்று மேலும், குர்-ஆனின் போதனைக்கு எதிராக ஒன்று.



**கேள்வி 23:** ஷியா முஸ்லிம்கள் எத்தனை ஹதீஸ் தொகுப்புக்களை பின்பற்றுகிறார்கள்

**பதில் 23:** சன்னி முஸ்லிம் பிரிவினர் ஆதாரபூர்வமான ஹதீஸ்கள் என்று "ஆறு தொகுப்புக்களை" வைத்துள்ளார்கள் என்பதை வேறு ஒரு பதிலில் கண்டோம் (புகாரி, முஸ்லிம், நஸயி, அபூதாவுத், திர்மிதி, இப்னு மாஜா).

இதே போன்று ஷியா முஸ்லிம்கள் தங்களுக்கென்று நான்கு ஹதீஸ் தொகுப்புக்களை அதிகாரபூர்வமானதாக கருதுகிறார்கள். இதனை “அல்-குதுப் அல்-அர்பா (al-Kutub al-ʾArbaʿah)” என்பார்கள். குதுப் என்றால் புத்தகங்கள், அர்பா என்றால் நான்கு என்று பொருள்.

அவைகள்: (நூல், தொகுத்தவர், எண்ணிக்கைகள்)

1. கிதாப் அல்-காஃபி (முஹம்மது இப்னு யாகூப் அல்-குலேனி அல்-ராசி, 16,199)
2. மன் லா யஹதுருஹு அல்-ஃபாகிஹ் (முஹம்மது இப்னு பாபாவே, 9,044)
3. தஹ்திப் அல்-அஹ்கம் (ஷேக் முஹம்மது துசி, 13,590)

4. அல்-இஸ்திப்சர் (ஷேக் முஹம்மது துசி, 5,511)

மூலம்: **https://en.wikipedia.org/wiki/The_Four_Books**



**கேள்வி 24:** முதலில் எழுதப்பட்டவைகள் எவை? ஹதீஸ்களா அல்லது முஹம்மதுவின் சீரா என்கின்ற வாழ்க்கை சரிதை நூல்களா?

**பதில் 24:**

ஸஹீஹ் ஹதீஸ்களான புகாரி, முஸ்லிம் தொகுப்புக்களை விட இப்னு இஷாக்கின் சீரா (வாழ்க்கை சரித்திரம்) தான் முந்தையது.

இப்னு இஷாக் - முஹம்மதுவின் வாழ்க்கை சரித்திரம்

முஹம்மதுவின் வாழ்க்கை சரித்திரத்தை முதன் முதலாக தொகுத்து எழுதிய இப்னு இஷாக் என்பவர், ஹிஜ்ரி 85ல் பிறந்தவர். இவருடைய சரித்திரம் தான் சஹீஹ் ஹதீஸ்களை விட முந்தையது. ஆனால், முஸ்லிம்கள் இவரது சரித்திரத்தை ஆதார பூர்வமானதாக கருதமாட்டார்கள், ஏனென்றால், சில தர்மசங்கடமான விவரங்கள், இந்த சரித்திரத்தில் இருப்பதினால் தான் (உதாரணத்திற்கு, சாத்தானின் வசனங்களை முஹம்மது அல்லாஹ்வின் வஹியாக சொன்ன நிகழ்ச்சியைச் சொல்லலாம்).

**படம்: இப்னு இஷாக்கின் மற்றும் ஹதீஸ்களின் காலவரிசை**



ஹிஜ்ரி 100க்குள் இப்னு இஷாக்கின் பிறப்பு, ஹிஜ்ரி 200க்குள் புகாரியின் பிறப்பு. முஸ்லிம்கள் இப்னு இஷாக்கின் சரித்திரத்தை ஆதாரமாக எடுத்துக் கொண்டு இருந்திருந்தால், இன்னொரு 100 ஆண்டுகளில் நுழைந்த பொய்களை தவிர்த்து இருந்திருக்கலாம்.

(குறிப்பு:இப்னு இஷாக்கின் சரித்திரம், புத்தகமாக நம்மிடம் இப்போது இல்லை, ஆனால், அவரது மாணவர்களாகிய இப்னு இஷாம், மற்றும் தபரி போன்றவர்கள், அவரது புத்தகத்திலிருந்து பல மேற்கோள்களை சுட்டிக் காட்டியுள்ளார்கள். அவைகளை வைத்துத் தான், இப்னு இஷாக்கின் சரித்திர விவரங்கள் கிடைத்துள்ளன.)



**கேள்வி 25:** அல்லாவிற்கு 99 பெயர்கள் உள்ளன என்றுச் சொல்லும் ஹதீஸ் எது?

**பதில் 25:** புகாரியிலும், முஸ்லிம் ஹதீஸ் தொகுப்பிலும் இரண்டு ஹதீஸ்கள் கிடைத்துள்ளன.

ஸஹீஹ் புகாரி எண்கள்: 6410 & 7392

புகாரி எண் 6410. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். **அல்லாஹ்விற்கு தொண்ணூற்று ஒன்பது நூற்றுக்கு ஒன்று குறைவான - பெயர்கள் உண்டு**. அவற்றை (நம்பிக்கை கொண்டு) மனனமிட்டவர் யாரும் சொர்க்கம் நுழையாமல் இருப்பதில்லை. அல்லாஹ் ஒற்றையானவன். ஒற்றைப்படையையே அவன் விரும்புகிறான்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புகாரி எண் 7392. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்: நிச்சயமாக அல்லாஹ்விற்கு **தொண்ணூற்று ஒன்பது - நூற்றுக்கு ஒன்று குறைவான - பெயர்கள் உள்ளன**. அவற்றை (நம்பிக்கை கொண்டு) மனனமிட்டவர் சொர்க்கத்தில் நுழைவார். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். (இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள) 'அஹ்ஸா' எனும் சொல்லுக்கு 'மனனமிடல்' என்று பொருள்.

**ஸஹீஹ் முஸ்லிம் எண்கள்: 5198 & 5199**

முஸ்லிம் எண் 5198. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வுக்குத் **தொண்ணூற்று ஒன்பது** பெயர்கள் உள்ளன. அவற்றை (நம்பிக்கை கொண்டு) மனனமிட்டவர் சொர்க்கம் செல்வார். மேலும், அல்லாஹ் ஒற்றையானவன். ஒற்றைப்படையையே அவன் விரும்புகிறான். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் இப்னு அபீஉமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("அவற்றை மனனமிட்டவர்" என்பதைக் குறிக்க "மன் ஹஃபிழஹா" என்பதற்குப் பகரமாக) "மன் அஹ்ஸாஹா" என இடம்பெற்றுள்ளது.

முஸ்லிம் எண் 5199. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: **அல்லாஹ்வுக்குத் தொண்ணூற்று ஒன்பது (நூற்றுக்கு ஒன்று குறைவான) பெயர்கள் உள்ளன**. அவற்றை (நம்பிக்கை கொண்டு) மனனமிட்டவர் சொர்க்கம் நுழைவார். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ் ஒற்றையானவன். ஒற்றைப்படையையே அவன் விரும்புகிறான்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

முஸ்லிம்கள்/கிறிஸ்தவர்கள் சிந்திக்க சில கேள்விகள்:

1. அல்லாஹ்வின் 99 பெயர்களை மனனம் செய்தால் சொர்க்கம் செல்ல அனுமதி கிடைத்துவிடுமா?
2. முஸ்லிம்கள் சொர்க்கம் செல்வதற்கு ஐந்து வேளை வாழ்நாள் முழுவதும் தொழுவதும், தான தர்மங்கள் செய்வதும், மற்ற காரியங்களைச் செய்வதும் தேவையில்லை தானே?
3. கிறிஸ்தவர்களே! எங்கேயாவது பைபிளில் "இந்த வசனங்களை அல்லது தேவனின் பட்டப்பெயர்களை மனப்பாடம் செய்யுங்கள், அப்போது பரலோகம் நிச்சயம்" என்று சொல்லப்பட்டுள்ளதா?
4. முஸ்லிம்களே! இந்த ஹதீஸில் முஹம்மது சொல்லியுள்ளவைகள்(99 பெயர்களை மனனமிட்டவர் சொர்க்கம் நுழைவார்), குர்ஆனின் மற்றும் இஸ்லாமின் இதர சட்டங்களுக்கு எதிராக உள்ளதல்லவா?



**கேள்வி 26:** ஹதீஸ்களை தொகுத்தவர்கள் யார்? (முஹம்மதுவா? சஹாபாக்களா?)

**பதில் 26:** ஹதீஸ்களை முஹம்மது தொகுக்கவில்லை, சஹாபாக்கள் கூட தொகுக்கவில்லை. முஹம்மதுவிற்கு 200 ஆண்டுகளுக்கு பிறகு வந்த முஸ்லிம்கள் தொகுத்தார்கள்.



**கேள்வி 27:** இப்னு இஷாக்கின் "ஸீரத் ரஸூல் அல்லாஹ்" புத்தகத்தை எங்கு வாங்கலாம்?

**பதில் 27:**

ஹதீஸ்களுக்கு முன்பாக எழுதப்பட்ட ஸீரத் ரஸூல் அல்லாஹ் சரித்திர புத்தகத்தை கீழ்கண்ட அமேஜான் தளத்தில் வாங்கலாம்:

- **https://www.amazon.in/Life-Muhammad-Translation-Ishaqs-Jubilee/dp/0195778286**

இணையத்தில் இலவசமாக பதிவிறக்கம் செய்துக்கொள்ள கீழ்கண்ட தொடுப்பை சொடுக்கவும்:

- **Ibn Ishaq's Sirat Rasul Allah - The Life of Muhammad Translated by A. Guillaume**



**கேள்வி 28:** முஹம்மதுவின் காலத்தில் ஒரு கிறிஸ்தவன் முஸ்லிமாக மாறி, முஹம்மதுவின் வஹியை எழுதுபவனாக இருந்து, மறுபடியும் இஸ்லாமை விட்டுவிட்டதாகச் சொல்கிறார்களே, இதைப் பற்றிய ஹதீஸ் இருந்தால் கொடுக்கமுடியுமா?

**பதில் 28:** கீழ்கண்ட ஹதீஸை படிக்கவும்:

நூல் புகாரி எண்: 3617

3617. அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் கிறிஸ்தவராக இருந்தார். பிறகு, அவர் இஸ்லாத்தைத் தழுவினார். 'அல்பகரா' மற்றும் 'ஆலு இம்ரான்' அத்தியாயங்களை ஓதினார். அவர் நபி(ஸல்) அவர்களுக்காக (வேத வெளிப்பாட்டை) எழுதி வந்தார். அவர் (மீண்டும்) கிறிஸ்தவராகவே மாறிவிட்டார். அவர் (மக்களிடம்) 'முஹம்மதுக்கு, நான் அவருக்கு எழுதித் தந்ததைத் தவிர வேறெதுவும் தெரியாது' என்று சொல்லிவந்தார். பிறகு அல்லாஹ் அவருக்கு மரணத்தையளித்தான். அவரை மக்கள் புதைத்துவிட்டனர். ஆனால் (மறு நாள்) **அவரை பூமி துப்பிவிட்டிருந்தது**. உடனே, (கிறிஸ்தவர்கள்), 'இது முஹம்மது மற்றும் அவரின் தோழர்களின் வேலை. எங்கள் தோழர் அவர்களைவிட்டு ஓடி வந்துவிட்டதால் அவரின் மண்ணறையைத் தோண்டி எடுத்து அவரை வெளியே போட்டுவிட்டார்கள்' என்று கூறினார். எனவே, அவருக்காக இன்னும் அழகாக ஒரு புதை குழியைத் தோண்டினர். (அதில் புதைத்த பின்பு) மீண்டும் பூமி அவரை (வெளியே) துப்பி விட்டிருந்தது. அப்போதும், 'இது முஹம்மது மற்றும் அவரின் தோழர்களுடைய வேலைதான். நம் தோழர் அவர்களைவிட்டு வந்துவிட்ட காரணத்தால் அவரைத் தோண்டி எடுத்து மண்ணறைக்கு வெளியே போட்டுவிட்டனர்' என்று கூறினர். மீண்டும் அவர்களால் குழியை அவருக்காகத் தோண்டி அதில் அவரைப் பூமி அவரை முடிந்த அளவிற்கு மிக அழமான குழியை அவருக்காகத் தோண்டி அதில் அவரைப் புதைத்தனர். ஆனால், அவரை பூமி மீண்டும் துப்பி விட்டிருந்தது. அப்போதுதான் அது மனிதர்களின் வேலையல்ல. (இறைவனின் தண்டனை தான்) என்று புரிந்து கொண்டனர். அவரை அப்படியே (வெளியிலேயே) போட்டுவிட்டனர்.

முஹம்மதுவிற்கு பிறகு எழுதப்பட்ட கட்டுக்கதைகளில் இதுவும் ஒன்று.



**கேள்வி 29:** ஹதீஸ்களில் இந்தியா பற்றி ஏதாவது விவரங்கள் உள்ளன?

**பதில் 29:** ஒரு குறிப்பிட்ட இந்திய குச்சிக்கு மருத்துவ குணம் உள்ளது என்று முஹம்மது கூறியதாக, ஹதீஸ்கள் உள்ளது.

**நூல் புகாரி 5692, 5713, 5715 & 5718:**

5692. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நீங்கள் இந்த **இந்திய (கோஷ்ட)க் குச்சியை** அவசியம் பயன்படுத்துங்கள். ஏனெனில், அதில் ஏழு நிவாரணங்கள் உள்ளன. அடிநாக்கு அழற்சிக்காக அதை(த் தூளாக்கி எண்ணெயில் குழைத்து) மூக்கில் சொட்டு மருந்தாக இடப்படும். (மார்புத் தசைவாதத்தால் ஏற்படும்) விலா வலிக்காக அதை வாயின் ஒரு பக்கத்தில் சொட்டு மருந்தாகக் கொடுக்கப்படும்.

என உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன்(ரலி) அறிவித்தார்.



**கேள்வி 30:** "கஜ்வா ஈ ஹிந்த்(Ghazwa-e-Hind - Battle of India)" என்ற பெயரில் முஹம்மது “இந்தியாவின் மீது முஸ்லிம்களின் யுத்தம்” பற்றி முன்னறிவித்தார் என்று சொல்கிறார்களே, இது என்ன?

**பதில் 30:** சன்னி முஸ்லிம்களின் ஆறு ஹதீஸ்களில் ஒன்றான "நஸயி" என்ற ஹதீஸ் தொகுப்பில் "இந்தியாவை முஸ்லிம்கள்" வெல்வார்கள் என்று முஹம்மது கூறியதாக ஹதீஸ் வருகிறது.

இது பலவீனமான ஹதீஸ்(Da'if) என்று கீழ்கண்ட தொடுப்பும், சில முஸ்லிம்களும், இது உண்மையான ஹதீஸ் என்று **வேறு சிலறும்** கூறுகிறார்கள்.

**41) Chapter: Invading India**

It was narrated that Abu Hurairah said:

"The Messenger of Allah (ﷺ) promised us that we would **invade India**. If I live to see that, I will sacrifice myself and my wealth. If I am killed, I will be one of the best of the martyrs, and if I come back, I will be Abu Hurairah Al-Muharrar." [1] [1] Al-Muharrar: The one freed (from the Fire).

நாங்கள் **இந்தியா** மீது படையெடுப்போம் என்று அல்லாஹ்வின் தூதர் (ﷺ) எங்களுக்கு வாக்குறுதி அளித்தார். அதைப் பார்க்க நான் வாழ்ந்தால், நானும் எனது எனது செல்வத்தையும் தியாகம் செய்வேன். நான் கொல்லப்பட்டால், நான்

தியாகிகளில் மிகச் சிறந்தவனாக இருப்பேன், நான் அந்த போரில் வெற்றிப்பெற்று திரும்பி வந்தால், நான் (அபு ஹுரைரா) அல் முஹர்ராக இருப்பேன்(நெருப்பிலிருந்து - நரகத்திலிருந்து விடுபட்டவானாக இருப்பேன்).

- Grade : Da'if (Darussalam)
- Reference : Sunan an-Nasa'i 3173
- In-book reference : Book 25, Hadith 89
- English translation : Vol. 1, Book 25, Hadith 3175

Source: **sunnah.com/nasai/25**

## தலைப்பு: பெண்கள் (30 கேள்வி பதில்கள்)

**கேள்வி 1:** கிறிஸ்தவம் மற்றும் இஸ்லாம், இதில் எந்த மார்க்கம் பெண்களை கௌரவப்படுத்துகிறது?

**பதில் 1:** ஒரே ஒரு வரியில் இதற்கு பதில் சொல்ல நான் விரும்பவில்லை. நான் நம்புவதை உங்கள் மீது திணிக்கவும் விரும்பவில்லை.

பைபிள் மற்றும் குர்ஆனில் பெண்கள் பற்றி சொல்லப்பட்டுள்ள விவரங்களை ஆழமாக நாம் ஆய்வு செய்யப்போகிறோம். அவைகளை புரிந்துக்கொள்ளுங்கள், இந்த தலைப்பில் கொடுக்கப்படும் அனைத்து பதில்களையும் படித்து, ஆய்வு செய்து அதன் பிறகு முடிவு செய்யுங்கள்.

"கௌரவம்" என்ற வார்த்தை இடத்தைப் பொருத்து, கலாச்சாரத்தைப் பொருத்து, மனிதர்களைப் பொருத்து மாறுபடும்.

உச்சந்தலை முதற்கொண்டு, உள்ளங்கால் வரை பெண்களை ஆடைகளால் மூடும் ஒரு கலாச்சாரத்தை பின்பற்றுகிறவர்கள், இப்படி மூடுவது தான் பெண்களுக்கு கௌரவம் என்கிறார்கள். இன்னொருவர், பெண்களுக்கு நாகரீகமான உடைகள் அணிய அனுமதி கொடுப்பது தான் அவர்களை கௌரவப்படுத்துவது ஆகும் என்கிறார்கள்.

இதில் யார் சரி? யார் தவறு? இந்த முடிவை யார் எடுப்பது?

வாசகர்களிடமே இந்த முடிவை விட்டுவிடுவோம். அறிவுடமையோடு சிந்தித்து முடிவு எடுப்பவர்கள் எடுத்துக்கொள்ளட்டும்.



**கேள்வி 2:** குர்ஆனில் வரும் ஒரே பெண்ணின் பெயர் என்ன? இப்படி குர்ஆனை அமைத்த அல்லாஹ் எதனை சொல்ல வருகின்றான்?

**பதில் 2:** குர்ஆன் முஹம்மதுவிற்கு 23 ஆண்டுகள், சிறிது சிறிதாக கொடுக்கப்பட்டது என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள். குர்ஆனில் 6236 வசனங்கள் உள்ளன, இவைகளில் மனித தொடக்கம் முதற்கொண்டு, உலக முடிவு வரை பல நிகழ்ச்சிகள், விவரங்கள் சொல்லப்பட்டுள்ளன.

நூற்றுக்கணக்கான உரையாடல்கள், நிகழ்ச்சிகள் அலசப்பட்டன. ஆனால், ஒரே ஒரு பெண்ணின் பெயர் மட்டும் தான் குர்ஆனில் குறிப்பிடப்பட்டது?

அல்லாஹ் பெண்களின் பெயர்களை தன் வேதத்தில் பயன்படுத்த விரும்பவில்லை. இயேசுவின் தெய்வீகத்தை எதிர்க்கவேண்டுமென்பதற்காக, "மர்யமின் மகன் ஈஸா" என்று குறிப்பிட விரும்பி, மரியாளின் பெயரை மட்டுமே முழு குர்ஆனிலும் குறிப்பிட்டுள்ளான்.

இயேசுவின் தாய் மரியாளின் பெயர் உள்ளதே, இது உங்களுக்கு (கிறிஸ்தவர்களுக்கு) மகிழ்ச்சி இல்லையா? என்று கேட்கவேண்டாம், இது எங்களுக்கு மகிழ்ச்சி இல்லை. மரியாளின் பெயர் குர்ஆனில் வந்தாலும், அவர்களுடைய நம்பிக்கைக்கு எதிரான விவரங்கள் குர்ஆனில் சொல்லியிருப்பதினால், கிறிஸ்தவர்களுக்கு எந்த ஒரு மகிழ்ச்சியும் இல்லை. அவர்களுடைய வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகளை தலை கீழாக மாற்றி குர்ஆனில் பதிவு செய்யப்பட்டு இருப்பதினால், அது மரியாளுக்கு அவமரியாதை ஆகும்.

பெண்களின் பெயர்களை குர்ஆனில் பயன்படுத்துவதா? இல்லையா? என்பது அல்லாஹ்வின் விருப்பம் என்று சிலர் சொல்லக்கூடும். ஆமாம், அது அல்லாஹ்வின் விருப்பம் தான். ஆனால் ஏன் அல்லாஹ் பெண்களின் பெயர்களை குர்ஆனில் பயன்படுத்தவில்லை? இதற்கு ஏதாவது உள்நோக்கம் இருக்குமா? பெண்கள் பற்றிய தவறான எண்ணம் கொண்டவன் தான் குர்ஆனை கொடுத்தானா? போன்ற கேள்விகள் நமக்கு எழுவது நியாயமே! இதற்கான பதிலை தெரிந்துக்கொள்ளவேண்டுமென்றால், இந்த தொடரில் உள்ள அனைத்து கேள்விகளையும் படித்து, நீங்களே ஆய்வு செய்துப் பாருங்கள், உண்மை விளங்கும்.



**கேள்வி 3:** பெண்களை அடிப்பதற்கு குர்ஆன் அனுமதியளிக்கிறது என்றுச் சொல்வது பொய் தானே!

**பதில் 3:** இல்லை, உண்மையாகவே முஸ்லிம் ஆண்கள் தங்கள் மனைவிகளை அடிக்க குர்ஆன் அனுமதி அளிக்கிறது.

குர்ஆனின் இந்த வசனத்தை தமிழில் மொழியாக்கம் செய்தவர்களுக்கு இது தர்மசங்கடமாக இருந்துள்ளது, எனவே, தான் "**லேசாக அடியுங்கள்**" என்றும், "**காயம் ஏற்பாடாதவாறு அடியுங்கள்**" என்றும் குர்ஆனில் இல்லாத வார்த்தைகளை போட்டு மொழியாக்கம் செய்துள்ளார்கள்.

**டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்:**

4:34. . . .; எந்தப் பெண்கள் விஷயத்தில் - அவர்கள் (தம் கணவருக்கு) மாறு செய்வார்களென்று நீங்கள் அஞ்சுகிறீர்களோ, அவர்களுக்கு நல்லுபதேசம் செய்யுங்கள்; (அதிலும் திருந்தாவிட்டால்) அவர்களைப் படுக்கையிலிருந்து விலக்கிவிடுங்கள்; (அதிலும் திருந்தாவிட்டால்) **அவர்களை (இலேசாக) அடியுங்கள்.** அவர்கள் உங்களுக்கு வழிப்பட்டுவிட்டால், அவர்களுக்கு எதிராக எந்த வழியையும் தேடாதீர்கள் - நிச்சயமாக அல்லாஹ் மிக உயர்ந்தவனாகவும், வல்லமை உடையவனாகவும் இருக்கின்றான்.

**அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:**

4:34. . . .. எவளும் கணவனுக்கு மாறு செய்வாளென்று நீங்கள் அஞ்சினால் அவளுக்கு நல்லுபதேசம் செய்யுங்கள். (அவள் திருந்தாவிடில்) படுக்கையில் இருந்து அவளை அப்புறப்படுத்தி வையுங்கள். (அதிலும் அவள் சீர்திருந்தாவிடில்) **அவளை (இலேசாக) அடியுங்கள்**. அதனால் அவள் உங்களுக்கு கட்டுப்பட்டு விட்டால் அவள் மீது (வேறு குற்றங்களைச் சுமத்த) யாதொரு வழியையும் தேடாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் மிக மேன்மையானவனும் மிகப் பெரியவனுமாக இருக்கின்றான்.

**இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:**

4:34 . . .மேலும், எந்தப் பெண்கள் குறித்து அவர்கள் (தம் கணவருக்கு)மாறு செய்வார்கள் என்று நீங்கள் அஞ்சுகின்றீர்களோ அந்தப் பெண்களுக்கு நல்லறிவு புகட்டுங்கள்; படுக்கைகளிலிருந்தும் அவர்களை ஒதுக்கி வையுங்கள்! **மேலும் அவர்களை அடியுங்கள்!** ஆனால் அவர்கள் உங்களுக்குக் கீழ்ப்படிந்துவிட்டால், பிறகு அவர்களுக்கு எதிராகக் கை நீட்ட எந்த சாக்குபோக்குகளையும் தேடாதீர்கள்! திண்ணமாக நம்புங்கள்: அல்லாஹ் மேலே இருக்கின்றான்; அவன் உயர்வானவனும் பெரியோனுமாய் இருக்கின்றான்.

**மன்னர் ஃபஹத் வளாகம் (சவூதி) தமிழாக்கம்:**

4:34 . . .இன்னும், (அப்பெண்களாகிய) அவர்களில் (தம் கணவனுக்கு) எவர்களின் மாறுபாட்டை அஞ்சுகிறீர்களோ, அப்போது அவர்களுக்கு நல்லுபதேசம் செய்யுங்கள், (அவர்கள் திருந்தாவிடில்) படுக்கைகளிலும் அவர்களை வெறுத்து

(ஒதுக்கி) விடுங்கள், (அதிலும் அவர்கள் சீர்திருந்தாவிடில்) **அவர்களை (காயமேற்படாது) அடியுங்கள்,** அதனால் அவர்கள் உங்களுக்குக் கீழ்ப்பட்டுவிட்டால், அவர்கள் மீது (இதர குற்றங்களைச் சுமத்த) யாதொரு வழியையும் தேடாதீர்கள், நிச்சயமாக அல்லாஹ் மிக உயர்வானவனாக, மிகப் பெரியவனாக இருக்கின்றான்.

**பீஜே தமிழாக்கம்:**

4:34 . . .பிணக்கு ஏற்படும் என்று (மனைவியர் விஷயத்தில்) நீங்கள் அஞ்சினால் அவர்களுக்கு அறிவுரை கூறுங்கள்! படுக்கைகளில் அவர்களை விலக்குங்கள்! **அவர்களை அடியுங்கள்!** அவர்கள் உங்களுக்குக் கட்டுப்பட்டு விட்டால் அவர்களுக்கு எதிராக வேறு வழியைத் தேடாதீர்கள்! அல்லாஹ் உயர்ந்தவனாகவும், பெரியவனாகவும் இருக்கிறான்.66

இரண்டு பேர் மட்டும் "அவர்களை அடியுங்கள்" என்று குர்ஆனில் உள்ளது போன்று தமிழாக்கம் செய்துள்ளார்கள். மற்றவர்கள் "லேசாக, காயமில்லாதவாறு" என்று சொந்த வார்த்தைகளை எழுதி, முஸ்லிம் பெண்களை காப்பாற்ற முயன்றுள்ளார்கள். ஆனால், முஸ்லிம் ஆண்கள் இவர்களுடைய வார்த்தைகளை கேட்பார்களா?



**கேள்வி 4:** பெண்களை திருத்தமுடியாது என்று முஹம்மது கூறியுள்ளாரா?

**பதில் 4:** முஹம்மது கீழ்கண்ட விதமாக ஒட்டுமொத்த பெண்கள் பற்றி கூறியுள்ளார். தன் குடும்ப பெண்களைப் பற்றியோ, அல்லது சஹாபாக்கள் குடும்ப பெண்களைப் பற்றியோ கூறியிருந்தால், அது அவருடைய தனிப்பட்ட கருத்து என்று விட்டுவிடலாம். ஆனால்,பொதுவாக உலக பெண்கள் அனைவர் பற்றியும், எல்லா காலத்துக்கும் பொருந்தும் என்ற கருத்து வரும் வண்ணமாக இப்படி கூறியுள்ளார். இதனை எப்படி ஏற்றுக்கொள்வது?

**ஸஹீஹ் புகாரி நூல், எண்: 5184 (மேலும் பார்க்க: 3331)**

5184. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

பெண், (வளைந்த) விலா எலும்பைப் போன்றவளாவாள். **அவளை நீ நிமிர்த்த நினைத்தால் அவளை ஒடித்தேவிடுவாய்**. (அதற்காக அப்படியே) அவளை நீ அனுபவித்துக்கொண்டே இருந்தால், **அவளில் கோணல் இருக்க அனுபவிக்க வேண்டியதுதான்**. என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் முஸ்லிம் நூல், எண்: 2913 (மேலும் பார்க்க: 2912 & 2914)

**2913. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

பெண் (வளைந்த) விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்டிருக்கிறாள். **ஒரே (குண) வழியில் உனக்கு அவள் ஒருபோதும் இணங்க மாட்டாள்**. அவளை நீ அனுபவித்துக் கொண்டே இருந்தால், அவளில் **கோணல் இருக்கவே அனுபவிக்க வேண்டியதுதான்**. அவளை நீ (ஒரேயடியாக) நிமிர்த்தப்போனால் அவளை ஒடித்தேவிடுவாய். அவளை "ஒடிப்பது" என்பது, அவளை மணவிலக்குச் செய்வதாகும். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஆண்கள் மட்டும் உலகத்தில் நல்லவர்கள் போலவும், பெண்களை திருத்தமுடியாது போலவும் முஹம்மது கூறியுள்ளார். இது அவரது குறும்புத்தியைக் காட்டுகிறது, இது ஒரு தீர்க்கதரிசிக்கு அழகல்ல. பெண்களை அவர் எப்படி பார்க்கிறார் அல்லது இஸ்லாம் பெண்களை பார்க்கிறது என்பதைத் தான் இது காட்டுகிறது.

இதே போன்று அவர் ஆண்கள் பற்றி சொல்லியிருக்கலாம் அல்லவா? அவர் சொல்லமாட்டார், அவரால் சொல்லமுடியாது, உள்ளத்தின் நிறைவினால் வாய் பேசும்.



**கேள்வி 5:** அதிக சாபமிடுபவர்கள், அறிவு மற்றும் மார்க்க கடமை குறைவு உள்ளவர்கள், கணவனுக்கு நன்றி கெட்டவர்கள், நரகத்தில் அதிகமாக உள்ளவர்கள் பெண்கள் என்று கூறியது யார்?

**பதில் 5:** உலகத்தின் மேன்மைக்காக அல்லாஹ் அனுப்பிய கடைசி தீர்க்கதரிசி மற்றும் முஸ்லிம்கள் அணுவணுவாக பின்பற்றும் முஹம்மது தான் இப்படி சொல்லியுள்ளார்.

முஹம்மது மற்றும் அல்லாஹ்வின் பார்வையில் பெண்கள் - புகாரி நூல் ஹதீஸை படமாக காட்டியுள்ளேன் காணுங்கள்:




**புகாரி நூல் எண்: 304**

304. 'ஹஜ்ஜுப் பெருநாளன்றோ நோன்புப் பெருநாளன்றோ தொழும் திடலிற்கு நபி(ஸல்) அவர்கள் சென்று கொண்டிருந்தபோது சில பெண்களுக்கு அருகே அவர்கள் சென்று, 'பெண்கள் சமூகமே! தர்மம் செய்யுங்கள்! ஏனெனில், **நரக வாசிகளில் அதிகமாக இருப்பது நீங்களே** என எனக்குக் காட்டப்பட்டது' என்று கூறினார்கள்.

'இறைத்தூதர் அவர்களே! ஏன்' என்று அப்பெண்கள் கேட்டதற்கு, '**நீங்கள் அதிகமாகச் சாபமிடுகிறீர்கள்; கணவனுக்கு நன்றி கெட்டவர்களாக இருக்கிறீர்கள்; மார்க்கக் கடமையும் அறிவும் குறைந்தவர்களாக இருந்து கொண்டு** மன உறுதியான கணவனின் புத்தியை மாற்றி விடக்கூடியவர்களாக உங்களை விட வேறு யாரையும் நான் காணவில்லை' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியபோது 'இறைத்தூதர் அவர்களே! எங்களுடைய மார்க்கக் கடமையும் எங்களுடைய அறிவும் எந்த அடிப்படையில் குறைவாக உள்ளன' என்று பெண்கள் கேட்டனர்.

'ஒரு பெண்ணின் சாட்சி ஓர் ஆணின் சாட்சியில் பாதியாகக் கருதப்படவில்லையா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டததற்கு, 'ஆம்' என அப்பெண்கள் பதில் கூறினர். 'அதுதான் அவர்கள் அறிவு குன்றியவர்கள் என்பதைக் காட்டுகிறது; ஒரு பெண்ணிற்கு மாதவிடாய் ஏற்பட்டால் அவள் தொழுகையையும் நோன்பையும்விட்டு விடுவதில்லையா?' என்று நபி(ஸல்)

அவர்கள் கேட்டதற்கும் 'ஆம்!' எனப் பெண்கள் பதில் கூறினர். 'அதுதான் பெண்கள் மார்க்கக் கடமையில் குறைவானவர்களாக இருக்கின்றனர் என்பதற்கு ஆதாரமாகும்' என்று நபி(ஸல்) கூறினார்கள்' என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) அறிவித்தார்.

**வன்மையாக கண்டிக்கப்படவேண்டிய விவரம்:**

தனிப்பட்ட முறையிலே, அக்காள் தங்கை, அண்ணன்களோடு ஒரு பெரிய குடும்பத்தில் பிறந்து, கூட்டுக்குடும்பத்தில் வளர்ந்த ஒரு நபராக, முஹம்மதுவின் மேற்கண்ட கூற்றை நான் வன்மையாக கண்டிக்கிறேன். பெரியம்மா, சின்னம்மா, அண்ணி என்று பல உறவுகளில் வாழ்ந்து, என்னைச் சுற்றியுள்ள பெண்களை கவனித்து பார்த்ததில், முஹம்மதுவின் கூற்றில் உண்மையில்லை என்று சொல்லமுடியும்.

பொதுவாக சில பெண்களிடத்தில் ஓரிரு கெட்ட குணங்கள் இருக்கும், இதே போன்று சில ஆண்களிடத்திலும் சில கெட்ட குணங்கள் இருக்கும். ஆனால், "உங்களில் சிலர் இப்படி உண்டு" என்றுச் சொல்வதை விட்டுவிட்டு, ஒட்டுமொத்த பெண் இனத்தை விமர்சிப்பது நபிக்கு அழகல்ல.

ஆண்கள் அனைவரும் வக்கிர புத்தி கொண்டவர்கள், பெண்களை மோகப்பொருளாகவே ஆண்கள் பார்க்கிறார்கள் என்று ஒட்டுமொத்த ஆண் இனத்தின் மீது குற்றம் சுமத்தினால் 'அது சரியான கூற்றாக இருக்குமா'?

ஒருவேளை முஹம்மதுவைச் சுற்றியிருந்த அவரது மனைவிகள், சொந்தங்கள், தாய்மார்கள், அக்காமார்கள், அண்ணிமார்கள், பெரியம்மா, சின்னம்மா மற்றும் சஹாபாக்களின் மனைவிகள் போன்ற பெண்கள் அவருடைய கண்களுக்கு மேற்கண்ட குணங்களை உடையவர்களாக இருந்திருக்கலாம். அதற்காக, அவர் உலகத்தில் பிறக்கும் எல்லா பெண்களும் இப்படி இருப்பார்கள் என்று எண்ணுவது அறிவுடமையன்று.

இதனை முஸ்லிம் பெண்கள் வன்மையாக கண்டிக்கவேண்டும். முஹம்மதுவின் கூற்றில் உண்மையில்லை என்று நம்புகிற முஸ்லிம் ஆண்களும் கண்டிக்கவேண்டும்.



**கேள்வி 6:** பெண்கள் அறிவில் குறைவு - இதற்கு காரணம் குர்ஆனின் கட்டளை என்று முஹம்மது கூறியிருக்கும் போது, முஹம்மதுவை ஏன் குற்றப்படுத்தவேண்டும்?

**பதில் 6:** பெண்கள் பற்றிய தவறான கருத்தை முஹம்மது சொன்னதற்கு காரணம் அல்லாஹ் என்றுச் சொல்ல வருகின்றீர்களா?

2:282. . . . தவிர, (நீங்கள் சாட்சியாக ஏற்கக் கூடிய) உங்கள் ஆண்களில் இருவரை சாட்சியாக்கிக் கொள்ளுங்கள்; ஆண்கள் இருவர் கிடைக்காவிட்டால், சாட்சியங்களில் நீங்கள் பொருந்தக்கூடியவர்களிலிருந்து ஆடவர் ஒருவரையும், **பெண்கள் இருவரையும் சாட்சிகளாக எடுத்துக் கொள்ளுங்கள்; (பெண்கள் இருவர்) ஏனென்றால் அவ்விருவரில் ஒருத்தி தவறினால், இருவரில் மற்றவள் நினைவூட்டும் பொருட்டேயாகும்**; . . ..

- ஒரு பெண்ணின் சாட்சி ஒரு ஆணின் சாட்சியில் பாதி என்று குர்-ஆன் 2:282ல் சொன்னதால், பெண்கள் அறிவில் குறைவுள்ளவர்களா?

அல்லது

- பெண்கள் பிறப்பிலிருந்தே அறிவில் குறைவுள்ளவர்கள் என்று அல்லாஹ்வும் முஹம்மதுவும் கருதிவிட்டார்களா?

இதில் எது உண்மை. இது ஒரு தவறான, நடைமுறைக்கு ஒவ்வாத ஒரு வசனமாகும்.

இதை உலகத்தில் யார் சொல்லியிருந்தாலும், போகட்டும் நாக்கிலே எலும்பு இல்லை என்பதால் மனிதன் எதையானாலும் பேசுவான் என்று விட்டுவிடலாம். ஆனால், எல்லாம் அறிந்த இறைவன் என்றுச் சொல்லக்கூடிய "அல்லாஹ்" இதைச் சொன்னதால் மனதுக்கு கஷ்டமாக உள்ளது.

பிறக்கும்போது யாரும் புத்திசாலியாக பிறப்பதில்லை, மற்றும் முட்டாளாக பிறப்பதில்லை. நாம் அந்த மூளைக்குத்தரும் பயிற்சி, படிப்பு, சூழ்நிலை மற்றும் நண்பர்கள் முலமாக மனிதன் (ஆண், பெண்), அறிவாளியாகவோ அல்லது சிறிது அறிவில் குறைவுள்ளவனாகவோ மாறுகிறான். இதில் ஆண்கள் அறிவில் எப்போதும் சிறந்து விளங்குவார்கள், பெண்கள் முட்டாள்களாக இருப்பார்கள் என்றுச் சொல்வது மிகப்பெரிய தவறாகும். பிறக்கும்போது மூளைவளர்ச்சி குன்றியவர்களை நாம் இதில் செர்த்துக்கொள்ளக்கூடாது. அப்படி சேர்த்துக்கொண்டாலும் இதிலும் இருவர் ஆண் பெண் உண்டு.

என் மனைவி, அல்லது சகோதரி அறிவில் சிறிது குறைவுள்ளவள், பக்தியில் அதிக ஈடுபாடு காட்டுவதில்லை என்றுச் சொல்ல முஹம்மதுவிற்கு உரிமை உண்டே தவிர, உலகத்தில் உள்ள பெண்கள் அனைவரும், அறிவில் குறைவுள்ளவர்களாக இருப்பார்கள், எனவே அவர்களின் சாட்சி ஆணின் சாட்சியில் பாதி என்றுச் சொல்ல அவருக்கும் உரிமையில்லை, அல்லாஹ்விற்கும் உரிமையில்லை.

பகுத்தறிவு, நேர்மை, நீதி, நியாயம், உண்மை, பொய், கடமை இவைகளின் இனம் (Sex) என்ன இருக்கிறது? ஆண்கள் எப்போதும் நேர்மையாகவே இருப்பார்கள், பெண்கள் நேர்மை தவறுவார்கள் என்றுச் சொல்லி, இவைகளுக்கு ஒரு இனத்தை(Sex) கொடுத்த பெருமை இஸ்லாமையேச் சாரும்.

இதனை படிப்பவர்களில் யாராவது, என் தாய், மனைவி, அக்காள், தங்கை, மகள் இவர்கள் எல்லோரும் அறிவில் குறைவுள்ளவர்கள் என்றுச் சொல்லமுடியுமா?

குர்ஆன் பெண்களுக்கு எதிரானது என்பதற்கு இதைவிட பெரிய சான்று வேண்டுமா?



**கேள்வி 7:** ஆட்சியதிகாரத்தை ஒரு பெண்ணிடம் ஒப்படைத்த சமுதாயம் ஒருபோதும் உருப்படாது என்று முஹம்மது கூறினாரா?

**பதில் 7:** பெண்களை தலைவர்களாக நியமித்தால், அந்த நாடு அல்லது நிறுவனம் முன்னேறாது என்று முஹம்மது சொல்லியிருப்பது இப்போதுள்ள மனிதனுக்குத் தெரிந்தால், அவன் எவ்வித கஷ்டத்தில் இருந்தாலும், ஒரு நிமிடம் தன்னை மறந்து சிரித்துவிடுவான்.

**புகாரி நூல், எண் 4425:**

4425. அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்

ஜமல் போர் சமயத்தில், அதில் ஈடுபட்டவர்களுடன் நானும் சேர்ந்துகொண்டு (ஆயிஷா(ரலி) அவர்களுக்கு ஆதரவாகப்) போரிட முனைந்தபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்றிருந்த ஒரு சொல் எனக்குப் பயனளித்தது. பாரசீகர்கள் கிஸ்ராவின் மகளைத் தங்களுக்கு அரசியாக்கிவிட்டார்கள் எனும் செய்தி இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, அவர்கள் '**தம் ஆட்சியதிகாரத்தை ஒரு பெண்ணிடம் ஒப்படைத்த சமுதாயம் ஒருபோதும் உருப்படாது**' என்று கூறினார்கள். (இதுதான் எனக்குப் பயனளித்த நபி(ஸல்) அவர்களின் சொல்.)

இது எவ்வளவு பெரிய முட்டாள்தனமான வாதம் பாருங்கள்! இது நடைமுறைக்கு ஏற்ற வாதமாக உள்ளதா? முஹம்மதுவின் இந்த கூற்று தவறு என்பதை உலக பெண்கள் நிரூபித்துக்கொண்டு இருக்கிறார்கள்.

## இதோ உலகத்தின் சரித்திரத்தில் நீங்கா இடம்பிடித்த சில பெண் முத்துக்கள்:

**1. 1901 லிருந்து 2019 வரை 53 பெண்கள் நோபல் பரிசுகள் பெற்றுயிருக்கின்றனர்.**

அமைதிக்கான நோபல் பரிசை பதினேழு பெண்கள் வென்றுள்ளனர், பதினைந்து பேர் இலக்கிய நோபல் பரிசை வென்றுள்ளனர், பன்னிரண்டு பேர் மருத்துவத்துக்கான நோபல் பரிசை வென்றுள்ளனர், ஐந்து பேர் வேதியியலுக்கான நோபல் பரிசை வென்றுள்ளனர், மூன்று பேர்

இயற்பியலுக்கான நோபல் பரிசை வென்றுள்ளனர், மற்றும் இரண்டு, எலினோர் ஆஸ்ட்ரோம் மற்றும் எஸ்தர் டுஃப்லோ, பொருளாதார அறிவியலுக்கான நோபல் நினைவு பரிசை வென்றுள்ளனர்.

(Source: **https://en.wikipedia.org/wiki/List_of_female_Nobel_laureates**)

**2. சரோஜினி நாயுடு, அன்னை தெரேசா, இந்திய பிரதம மந்திரியாக** இருந்த இந்திரா காந்தி, இலங்கை பிரதமர் பண்டாரநாயகே, தமிழ்நாட்டின் முன்னால் உயர்நிதீ மன்றத்தின் நீதிபதி பாத்திமா பீவி அவர்கள், இந்தியாவின் முதல் ஐ.பி.எஸ் கிரன் பேடி அவர்கள், இமயமலை சிகரத்தை அடைந்த முதல் ஜப்பானிய பெண் "ஜுன்கோ டெபை - ஆண்டு 1975" இன்னும் பலர்.

**3. இஸ்லாமிய சட்டம் நடைபெறும் சவுதி அரேபியாவில்** பெண்கள், கார் ஓட்டுவதற்கு முன்பாகவே , காபிர் நாடாகிய (என் அருமை தாய் நாடு) இந்தியாவின் அருமை புதல்வி "கல்பனா சாவ்லா" வின்னிற்கு ராக்கெட்டில் சென்று விட்டாள். உம்முடைய சட்டம் நடைபெறும் நாட்டின் பெண்கள் தேர்தலில் ஓட்டுரிமை பெறுவதற்குள், காபிர் நாடுகளில் பெண்கள் முதலமைச்சர்கள், பிரதமமந்திரிகள் ஆகிவிடுகின்றனர். இவர்களின் அறிவு குறைபாடுள்ளதா? அல்லது நீங்கள் சொன்னது இஸ்லாமிய பெண்களுக்கு மட்டும் தானா?

**4. சரித்திரத்தில் முதன்முறையாக ஒரு இஸ்லாமிய பெண்ணிற்கு "2003 அமைதி நோபல் பரிசு"** கிடைத்தது. அவர் தான் "ஷீரின் எபாடி(Shirin Ebadi)". இந்த பரிசு இப்பெண்மனிக்கு எதற்காகத் கிடைத்தது தெரியுமா? இவர் ஈரானில் உள்ள பெண்களுக்கு எதிராக நடக்கும் இழி செயல்களிலிருந்தும், கொடுமைகளிலிருந்தும் காப்பாற்றும்படியாக அதிகமாக உழைத்ததால் தான்.

இவர் வழக்கறிஞராக பல ஆண்டுகள் பெண்களுக்கு சேவைசெய்தார். இவருக்கு நீதிபதியாக பதவி உயர்வு கிடைக்கும்போது, ஈரானின் இமாம்கள், இது இஸ்லாமிற்கு எதிரானது, ஒரு பெண்ணின் அறிவுரையை ஆண்கள் கேட்கக்கூடாது என்றும், பெண்களை ஆளுகை செய்கிறவர்களாக நியமிக்கக்கூடாது என்றும் ஹதீஸில் முஹம்மது சொல்லியிருக்கிறார், எனவே இது செல்லாது என்றுச் சொல்லி, இவரை நீதிபதி பதவியிலிருந்து நீக்கிவிட்டார்கள்.

இவர் தன் முயற்சியை விடாது போராடிக்கொண்டிருந்தார். 15 ஆண்டுகளுக்கு பிறகு இதே இமாம்கள், இதே இஸ்லாம், “இது செல்லும்” என்றுச் சொல்லி மறுபடியும், இவரை நீதிபதி செய்தார்கள். இவருடைய 15 ஆண்டுகளின் சேவை இஸ்லாம் சட்டத்தால் வீணாக்கப்பட்டது. எத்தனை பெண்களின் வாழ்க்கை மலர்ந்திருக்குமோ! இதற்கெல்லாம் காரணம். அல்லாஹ்வும், முஹம்மதுவும் தான்.



**கேள்வி 8:** பெண் தீர்க்கதரிசிகள் இல்லை என்று குர்ஆன் சொல்கிறதா?

**பதில் 8:** ஆண்களை மட்டுமே நபிகளாக (தீர்க்கதரிசிகளாக) அனுப்பியதாக குர்ஆன் சொல்கிறது. மூன்று தமிழாக்கங்களில் இந்த வசனத்தை படியுங்கள்.

**அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:**

21:7. (நபியே!) உங்களுக்கு முன்னரும் (மனிதர்களில்) **ஆண்களையே** தவிர வேறொருவரையும் நாம் நம்முடைய தூதராக அனுப்பவில்லை. (உங்களுக்கு அறிவிப்பது போன்றே நம்முடைய கட்டளைகளை) அவர்களுக்கும் வஹீ (மூலம்) அறிவித்தோம். ஆகவே, (இவர்களை நோக்கி நீங்கள் கூறுங்கள்: இது) உங்களுக்குத் தெரியாதிருந்தால் முன்னுள்ள வேதத்தை உடையவரிடத்தில் கேட்டு அறிந்து கொள்ளுங்கள்.

**மன்னர் ஃபஹத் வளாகம் (சவூதி) தமிழாக்கம்:**

21:7. மேலும், (நபியே!) உமக்கு முன்னரும் (மனிதர்களிலிருந்து) **ஆடவர்களையே** அன்றி, வேறெவரையும் நாம் நம்முடைய தூதராக அனுப்பவில்லை, (உமக்கு அறிவிக்கிற பிரகாரமே) அவர்களுக்கு நாம் வஹீ அறிவித்தோம், ஆகவே, (இவர்களிடம் நீர் கூறுவீராக! இதனை) நீங்கள் அறியாதவர்களாக இருந்தால் (வேதத்தை) அறிந்தோரிடம் கேட்டுக் கொள்ளுங்கள்.

**பிஜே தமிழாக்கம்:**

21:7. (முஹம்மதே!) உமக்கு முன் **ஆண்களையே** தூதர்களாக அனுப்பினோம். அவர்களுக்கு தூதுச்செய்தி அறிவித்தோம். நீங்கள் அறியாதிருந்தால் அறிவுடையோரிடம் கேளுங்கள்!

மேற்கண்ட வசனத்தில் "நீங்கள் அறியாதவர்களாக இருந்தால் (வேதத்தை) அறிந்தோரிடம் கேட்டுக் கொள்ளுங்கள்" என்று அல்லாஹ் அறிவுரை கூறுகின்றான். அதாவது குர்ஆனில் சந்தேகம் வந்தால், முஸ்லிம்கள் யாரிடம் சென்று தெரிந்துக்கொள்ளவேண்டும்? முந்தைய வேதங்கள் கொடுக்கப்பட்ட யூதர்களிடமும், கிறிஸ்தவர்களிடம் சென்று தெரிந்துக்கொள்ளவேண்டும். முஹம்மதுவிற்கும் சந்தேகம் வந்தாலும் சரி, அவர் யூத கிறிஸ்தவர்களிடம் வரவேண்டியது தான்.



**கேள்வி 9:** பெண் தீர்க்கதரிசிகள் உண்டென்று பைபிள் சொல்கிறதா?

**பதில் 9:** முந்தைய வேதங்கள் என்ன சொல்கின்றன? யெகோவா தேவன் பெண் நபிகளை அனுப்பியுள்ளாரா?

இந்த பதிலை படிப்பவர்கள், ஒரு விவரத்தை தெளிவாக புரிந்துக்கொள்வார்கள், அது என்னவென்றால், குர்ஆனின் அல்லாஹ்வும், பைபிளின் யெகோவா

தேவனும் வெவ்வேறானவர்கள் என்பதைத் தான். அல்லாஹ் மூன்று இடங்களில், நான் ஆண்களை மட்டுமே தூதர்களாக அனுப்பினேன் என்று கூறுகின்றான், ஆனால் பைபிளின் தேவனோ, அனேக பெண் தீர்க்கதரிசிகளை, தூதர்களை அனுப்பியுள்ளார். இவ்விருவர்களும் எப்படி ஒருவராக முடியும்? ஒருவேளை, அல்லாஹ்விற்கு கடந்த கால நிகழ்ச்சிகளை மறந்துபோகும் வியாதி இருந்ததா? என்று கேட்கத்தோன்றுகிறது. அப்படி இல்லையென்றால், ஏன் அல்லாஹ் குர்ஆனில் வெறும் ஆண்களையே தூதர்களாக அனுப்பினேன் என்றுச் சொல்லமுடிந்தது? அல்லாஹ் மறந்தானா? அல்லது மறைத்தானா?

பைபிளிலிருந்து சில பெண் தீர்க்கதரிசிகளை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அவைகளுக்கான வசன ஆதாரங்களையும் தருகிறேன், இவைகளை படித்த பிறகு குர்ஆன் 21:7ஐ படியுங்கள். உண்மையை புரிந்துக்கொள்ளுங்கள்.

- அல்லாஹ் இறைவன் என்றால் அவனால் மறக்கமுடியுமா? முடியாது
- அல்லாஹ் தான் யெகோவா என்றால், எப்படி தான் பெண் தீர்க்கதரிசிகளை அனுப்பியதை மறைத்து, குர்ஆனில் எழுதமுடியும்?
- இதுவும் இல்லை, அதுவும் இல்லையென்றால், என்ன தான் பதில்?

இதற்கு பதில் சொல்வது மிகவும் சுலபம், அதாவது அல்லாஹ் யெகோவா தேவன் இல்லை என்பது தான் அது. இவ்விருவரும் நேர் எதிர் துருவங்கள். இது சரியான பதில் இல்லையென்றுச் சொல்லும் முஸ்லிம்களிடம் வேறு பதில் உண்டா?

- பெண் நபி 1: மிரியாம் - யாத்திராகமம் 15:20
- பெண் நபி 2: தெபொராள் - நியாயாதிபதிகள் 4:4
- பெண் நபி 3: உல்தாள் - II இராஜாக்கள் 22: 13 -15 & 2 நாளாகமம் 34:21-22
- பெண் நபி 4: ஏசாயாவின் மனைவி ஒரு தீர்க்கதரிசி - ஏசாயா 8:3
- பெண் நபி 5: அன்னாள் - லூக்கா 2:36-38

இதைப் பற்றி மேலும் அறிய இந்த கட்டுரையை படிக்கவும்: **குர்ஆம் 21:7 அல்லாஹ் ஆண்களை மட்டுமே நபிகளாக அனுப்பினானா? மொழியாக்கங்கள் ஏன் உண்மையை மறைக்க முயலுகின்றன?**



**கேள்வி 10:** முதல் மனைவியின் அனுமதியுடன் தான் முஸ்லிம்கள் இரண்டாவது திருமணம் செய்துக் கொள்கிறார்களா?

**பதில் 10:** இஸ்லாமின் படி ஒரு முஸ்லிம் ஆண் நான்கு திருமணங்கள் செய்துக்கொள்ளலாம். மேலும் முதல் மனைவியின் அனுமதி இல்லாமல், முஸ்லிம் ஆண் இரண்டாம் திருமணம் செய்யலாம்.

**குர்-ஆனின் வரையறை: குர்-ஆன் 4:3**

அனாதைகள் விஷயத்தில் நேர்மையாக நடக்க மாட்டீர்கள் என்று அஞ்சினால் உங்களுக்குப் பிடித்த பெண்களை **இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நான்கு நான்காக மணந்து கொள்ளுங்கள்!** (மனைவியரிடையே) நீதியாக நடக்க மாட்டீர்கள் என்று அஞ்சினால் ஒருத்தியை அல்லது உங்களுக்கு உடைமையாக உள்ள அடிமைப் பெண்களை (போதுமாக்கிக் கொள்ளுங்கள்!). இதுவே நீங்கள் வரம்பு மீறாமலிருக்க நெருக்கமான வழி. (பீஜே தமிழாக்கம்)

இந்த வசனத்தின் படி, ஒரு இஸ்லாமிய ஆண் நான்கு திருமணம் செய்துக்கொள்ள அனுமதி பெறுகிறான். இந்த வசனத்திலோ அல்லது குர்-ஆனின் இதர வசனங்களிலோ, எங்கும், முதல் மனைவியின் அனுமதி பெற்று தான் ஒரு முஸ்லிம் இரண்டாவது, மூன்றாவது அல்லது நான்காவது திருமணம் செய்யவேண்டும் என்று சொல்லப்படவில்லை.

குர்-ஆன் அனுமதிக்காத ஒன்றை, முஸ்லிம்கள் செய்யமாட்டார்கள். அதாவது நான்கு திருமணங்கள் பற்றி அல்லாஹ் கட்டளையிட்டு இருக்கும் போது, அதைச் செய்யலாமா செய்யக்கூடாதா என்று மனிதர்களிடம் முக்கியமாக தன் முதல் மனைவியிடம் கேட்டு செய்யமாட்டார்கள் இஸ்லாமியர்கள்.

ஆக, இதன் அடிப்படையில் பார்த்தால், ஒரு முஸ்லிமுக்கு அடுத்தடுத்து திருமணம் செய்ய, முதல் மனைவியின் அனுமதி தேவையில்லை என்பது விளங்கும்.

இதைப் பற்றி மேலும அறிய இந்த கட்டுரையை படியுங்கள்: **முதல் மனைவியின் அனுமதியுடன் தான் முஸ்லிம்கள் இரண்டாவது திருமணம் செய்துக் கொள்கிறார்களா?**



**கேள்வி 11:** நரகத்தில் பெண்கள் அதிகமாக இருக்கிறார்கள் என்று முஹம்மது கண்டாரா?

**பதில் 11:** தனக்கு அல்லாஹ் நரகத்தை காட்டினான், அதில் அதிகமான பேர் பெண்கள் இருப்பதாக தாம் கண்டதாக முஹம்மது கூறுகின்றார்.

**புகாரி நூல் எண்: 304**

304. 'ஹஜ்ஜுப் பெருநாளன்றோ நோன்புப் பெருநாளன்றோ தொழும் திடலிற்கு நபி(ஸல்) அவர்கள் சென்று கொண்டிருந்தபோது சில பெண்களுக்கு அருகே அவர்கள் சென்று, 'பெண்கள் சமூகமே! தர்மம் செய்யுங்கள்! **ஏனெனில், நரக வாசிகளில் அதிகமாக இருப்பது நீங்களே என எனக்குக் காட்டப்பட்டது**' என்று கூறினார்கள்.

'இறைத்தூதர் அவர்களே! ஏன்' என்று அப்பெண்கள் கேட்டதற்கு, 'நீங்கள் அதிகமாகச் சாபமிடுகிறீர்கள்; கணவனுக்கு நன்றி கெட்டவர்களாக

இருக்கிறீர்கள்; மார்க்கக் கடமையும் அறிவும் குறைந்தவர்களாக இருந்து கொண்டு மன உறுதியான கணவனின் புத்தியை மாற்றி விடக்கூடியவர்களாக உங்களை விட வேறு யாரையும் நான் காணவில்லை' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியபோது . . .

**முஹம்மது சொன்னது உண்மையாக இருந்தால்?**

உண்மையாகவே அல்லாஹ் முஹம்மதுவிற்கு நரகத்தை காட்டி, அதில் அதிகமாக பெண்கள் இருப்பதாக முஹம்மது கண்டுயிருந்தால், இதன் அர்த்தமென்ன? உலகத்தில் உள்ள பெரும்பான்மையான பெண்கள் முஹம்மது சொன்ன அந்த நான்கு குணங்களை உடையவர்கள் என்பதை நாம் ஒப்புக்கொள்ளவேண்டும்.

இதனை நான் ஒப்புக்கொள்ளமாட்டேன், முஹம்மது பொய் சொன்னார் என்பதைத் தான் நடைமுறையில் நாம் பார்க்கிறோம். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

**முஹம்மது சொன்னது பொய்யாக இருந்தால்?**

முஹம்மது தனக்கு தோன்றியபடி, தன் சொந்த கருத்தைத் தான் சொன்னார், ஆனால் அதற்கு அல்லாஹ்வின் மதச்சாயம் பூசிவிட்டார் என்று நினைத்தால். முஸ்லிம்கள் இஸ்லாமையும், முஹம்மதுவையும் புறக்கணிக்கவேண்டும்.

கிறிஸ்தவமும் நரகம் இருப்பதை நம்புகிறது, ஆனால், எந்த ஒரு இடத்திலும், அதில் "இந்த குழு மக்கள்(ஆண்களோ, பெண்களோ)" அதிகமாக இருப்பார்கள் என்றுச் சொன்னதில்லை.

வெளி 21:8 பயப்படுகிறவர்களும், அவிசுவாசிகளும், அருவருப்பானவர்களும், கொலைபாதகரும், விபசாரக்காரரும், சூனியக்காரரும், விக்கிரகாராதனைக்காரரும், பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள் என்றார்.



**கேள்வி 12:** முஸ்லிம்களின் வலக்கரத்திற்கு சொந்தமான பெண்கள் அவர்களுக்கு என்ன உறவு?

**பதில் 12:** குர்ஆனின் படி ஒரு முஸ்லிம் ஆணுக்கு வலக்கரத்திற்கு சொந்தமானவர்கள் என்றால், அவர்களுக்கு போரில் கிடைத்த அடிமைகள், முக்கியமாக அடிமைப்பெண்கள். பணம் படைத்தவர்கள் மார்கெட்டுக்குச் சென்று ஒரு அடிமைப்பெண்ணை விலைக்கு வாங்கி வீட்டில் வைத்துக்கொள்வதும் வலக்கரங்களுக்குச் சொந்தமானவர்கள் என்று பொருள்.

வலக்கரத்துக்கு சொந்தமான ஆண்களை (அடிமை ஆண்களை) வீட்டு வேலை செய்வதற்கு பயன்படுத்துக்கொள்வார்கள். வலக்கரத்துக்கு சொந்தமான பெண்களை (அடிமை பெண்களை) முஸ்லிம் ஆண்கள், திருமணம் செய்துக்கொள்ளாமல், அவர்களுடன் உடலுறவு கொள்ளலாம். இந்த உரிமையை குர்ஆன் முஸ்லிம்களுக்கும், முஹம்மதுவிற்கும் கொடுத்துள்ளது.

கீழ்கண்ட குர்ஆன் வசனங்களை கவனமாக படித்துப் பாருங்கள்:

**a) திருமணம் செய்யாமல் அடிமைப்பெண்களோடு உடலுறவு கொள்ளலாம் (குர்ஆன் 4:3):**

குர்ஆன் 4:3. அநாதை(ப் பெண்களைத் திருமணம் செய்து அவர்)களிடம் நீங்கள் நியாயமாக நடக்க முடியாது என்று பயந்தீர்களானால், உங்களுக்குப் பிடித்தமான பெண்களை மணந்து கொள்ளுங்கள் - இரண்டிரண்டாகவோ, மும்மூன்றாகவோ, நன்னான்காகவோ; ஆனால், நீங்கள் (இவர்களிடையே) நியாயமாக நடக்க முடியாது என்று பயந்தால் ஒரு பெண்ணையே (மணந்து கொள்ளுங்கள்), **அல்லது உங்கள் வலக்கரங்களுக்குச் சொந்தமான (ஓர் அடிமைப் பெண்ணைக் கொண்டு) போதுமாக்கிக் கொள்ளுங்கள்** - இதுவே நீங்கள் அநியாயம் செய்யாமலிருப்பதற்குச் சுலபமான முறையாகும்.

இந்த வசனத்தை கவனிக்கவும், "அல்லது உங்கள் வலக்கரங்களுக்குச் சொந்தமான (ஓர் அடிமைப் பெண்ணைக் கொண்டு) போதுமாக்கிக் கொள்ளுங்கள் " என்ற வரியில் அல்லாஹ் சொல்ல வருவது என்ன?

விடுதலையான பெண்ணை திருமணம் செய்யவேண்டுமென்றால், மஹர் கொடுக்கவேண்டும். பெண்களுக்கு மஹர் பணம் கொடுக்க முடியாத ஆண்கள் என்ன செய்யவேண்டும்? அதற்கு அல்லாஹ் பதில் சொல்கிறான் "உன்னிடம் உள்ள அடிமைப்பெண்ணோடு நீ உடலுறவு வைத்துக்கொள்". திருமணத்திற்கு வெளியே உடலுறவு வைக்க அல்லாஹ் அனுமதி அளிக்கின்றான்.

**உலகம் இதனை விபச்சாரம் என்று அழைக்கிறது, ஆனால், முஸ்லிம்கள் இதனை அப்படி அழைப்பதில்லை.**

மேலும் இவ்வசனத்தை தமிழாக்கம் செய்த "முஹம்மது ஜான்" அவர்கள் "**ஓர் அடிமைப்பெண்**" என்று அடைப்பிற்குள் எழுதுகின்றார். ஆனால், அரபியில் ஒரு அடிமைப்பெண்ணோடு மட்டுமே நீ உடலுறவு வைத்துக்கொள்ளவேண்டும் என்றுச் சொல்லவில்லை. இவருக்கு இந்த குர்ஆன் வசனத்தை தமிழாக்கம் செய்ய வெட்கமாக இருந்துள்ளது, தர்மசங்கடமாக இருந்துள்ளது, எனவே "ஓர் அடிமைப்பெண்" என்று எழுதுகின்றார்.

இவ்வசனத்தை மொழியாக்கம் செய்த மற்றவர்களும் எப்படி தர்மசங்கடத்தில் மூழ்கி இதனை மொழியாக்கம் செய்துள்ளதைப் பாருங்கள்.

**அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:**

. . .அல்லது நீங்கள் வாங்கிய அடிமைப் **பெண்ணையே** (போதுமாக்கிக்) கொள்ளுங்கள். நீங்கள் தவறு செய்யாமலிருப்பதற்கு இதுவே சுலபமா(ன வழியா)கும்.

**இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:**

. . .அல்லது உங்கள் கைகள் சொந்தமாக்கிக் கொண்ட **பெண்களையே** மனைவியாக்கிக் கொள்ளுங்கள். நீதி தவறாமலிருப்பதற்கு இதுவே மிக நெருக்கமானதாகும்.

**மன்னர் ஃபஹத் வளாகம் (சவூதி) தமிழாக்கம்:**

. . .அல்லது உங்கள் வலக்கரம் சொந்தமாக்கிக்கொண்ட **(அடிமைப்பெண்ணில் உள்ள)தை(க்கொண்டு போதுமாக்கிக்கொள்ளுங்கள்)**. நீங்கள் அநீதி செய்யாமலிருப்பதற்கு, இதுவே சுலப(மான வழியா)கும்.

**பீஜே தமிழாக்கம்:**

. . .அல்லது உங்களுக்கு உடைமையாக **உள்ள அடிமைப் பெண்களை**107 (போதுமாக்கிக் கொள்ளுங்கள்!). இதுவே நீங்கள் வரம்பு மீறாமலிருக்க நெருக்கமான வழி.

இந்த வலக்கரம் சொந்தமாக்கிக்கொண்டவர்கள் பற்றி மேலும் அறிய படிக்கவும்: குர்ஆன் 4:25, 23:6, 33:50, 33:52, 70:30

இந்த சட்டம் இன்னும் குர்ஆனில் உள்ளது, இன்றைய முஸ்லிம்களும் இதனை செய்கிறார்கள். ஆனால் அடிமைகளை விற்பது நாகரீகமடைந்த நாடுகளில் தடை செய்யப்பட்டு இருப்பதினால், நம் முஸ்லிம் ஆண்களுக்கு வலக்கரத்துக்கு சொந்தமானவர்கள் யாருமில்லை. இஸ்லாமிய ஆட்சி நடக்கும் சில நாடுகளில் இன்றும் இந்த அவலம் உண்டு, நம் முஸ்லிம் நண்பனும் செய்வான்.

இதை ஒருவேளை படிப்பவர்கள் இந்திய முஸ்லிம்களாக இருந்தால், உங்கள் தகப்பனாரும், அண்ணனும், தம்பியும் இதை செய்வான், ஏனென்றால் இது அல்லாஹ்வின் படி ஹலால் ஆகும். உலகத்தின் படி ஹராம் - விபச்சாரம் ஆகும்.



**கேள்வி 13:** போரில் பிடிபட்ட பெண்கள் பற்றி பழைய ஏற்பாடும் சொல்கிறதல்லவா? ஏன் குர்ஆனை மட்டுமே குற்றப்படுத்துகிறீர்கள்?

**பதில் 13:** அடிமைப்பெண்களை வாங்கி அல்லது போரில் பிடிபட்ட பெண்களை திருமணம் செய்துக்கொள்ளாமல், அவர்களை கற்பழிக்க உரிமை கொடுத்த குர்ஆனை குற்றப்படுத்தாமல் என்ன செய்யமுடியும்?

இன்றிலிருந்து 3000 ஆண்டுகளுக்கு முன்பாக இருந்த உலகத்தை கண்டால், பல இனக்குழுக்கள், அரசர்கள் போர்கள் புரிந்து, மக்களை சீரழித்துக்கொண்டு இருந்தார்கள் என்பதை அறியலாம். ஆனால், அந்த அடிமை மனிதர்களையும் படைத்த இறைவன் அவர்களை எப்படி பார்த்துக் கொள்ள்வேண்டும் என்று சொல்லும் விவரங்கள் தான், அவன் உண்மையான இறைவனா, அல்லது பொய்யான இறைவனா என்பதை அறியமுடியும்.

கி.பி. 610ல் வந்த குர்ஆன் சொல்வது போன்று அல்லாமல், கி.மு. 1500ல் கொடுக்கப்பட்ட மோசேயின் சட்டத்தில் இதைப் பற்றி யெகோவா தேவன் என்ன சொல்லியுள்ளார் என்பதை கவனித்தால், எந்த ஒரு முஸ்லிமும் குர்ஆனின் பக்கம் தலைவைத்து கூட படுக்கமாட்டார்கள்.

சுருக்கமான விவரங்களை இங்கு தருகிறேன், மேலதிக விவரங்களை கீழ்கண்ட கட்டுரையில் படியுங்கள்.

1. ஒரு யூதன் அடிமைப்பெண்ணை திருமணம் செய்யாமல் அவளைத் தொடக்கூடாது(உடலுறவு கொள்ளக்கூடாது).
2. அந்த பெண்ணுக்கு 30 நாட்கள் தன் குடும்ப நபர்களை நினைத்து துக்கம் கொண்டாட தன் வீட்டிலேயே அனுமதி அளிக்கவேண்டும்.
3. இந்த 30 நாட்களிலும் அவளை தொடக்கூடாது.
4. அதன் பிறகு திருமணம் செய்துக்கொண்டு, அவளுக்கு புருஷனாக அவளோடு வாழவேண்டும், அவள் அவனுக்கு மனைவியாக இருப்பாள்.
5. மேலும், அவளை மறுபடியும் விற்க இந்த யூதனுக்கு அனுமதி இல்லை, அந்தப் பெண் விடுதலையான பெண்ணாக வாழ விட்டுவிடவேண்டும்.

**உபாகமம் 21:10 லிருந்து 14ம் வசனம் வரை:**

10. நீ உன் சத்துருக்களுக்கு எதிராக யுத்தத்திற்குப் புறப்பட்டு, உன் தேவனாகிய கர்த்தர் அவர்களை உன் கையில் ஒப்புக்கொடுக்கிறதினால், அவர்களைச் சிறைபிடித்துவந்து,
11. சிறைகளில் ரூபவதியான ஒரு ஸ்திரீயைக்கண்டு, **அவளை விவாகம்பண்ண விரும்பி**,
12. அவளை உன் வீட்டிற்குள் அழைத்துக்கொண்டு போவாயானால், அவள் தன் தலையைச் சிரைத்து, தன் நகங்களைக் களைந்து,
13. **தன் சிறையிருப்பின் வஸ்திரத்தையும் நீக்கி**, உன் வீட்டிலிருந்து, **ஒரு மாதமட்டும் தன் தகப்பனையும் தாயையும் நினைத்துத் துக்கங்கொண்டாடக்கடவள்**; அதன்பின்பு நீ அவளோடே சேர்ந்து, **அவளுக்கு புருஷனாயிரு, அவள் உனக்கு மனைவியாயிருப்பாள்**.
14. அவள்மேல் உனக்குப் பிரியமில்லாமற்போனால், நீ அவளை பணத்திற்கு விற்காமல், **அவளைத் தன் இஷ்டப்படி போகவிடலாம்**; நீ

அவளைத் தாழ்மைப்படுத்தினபடியினால் அவளாலே ஆதாயம் பெறும்படி தேடவேண்டாம்.

மேலும் அறிய இக்கட்டுரையை படிக்கவும்: **போரில் பிடிபட்ட பெண் கைதிகளுக்கு நல்வாழ்வு தரும் நல்லவர்**

யெகோவா தேவன் எங்கே, அல்லாஹ் எங்கே! நீங்களே ஒப்பிட்டுப்பாருங்கள்.



**கேள்வி 14:** முஸ்லிம் பெண்கள் மாதவிடாய் நேரத்தில் குர்ஆனை தொடக்கூடாது, மசூதிக்குள் வரக்கூடாது, தொழுகையும் செய்யக்கூடாது என்கிறார்களே, இது உண்மையா?

**பதில் 14:** ஆம், இஸ்லாமின் படி பெண்கள் இப்படிப்பட்ட நேரங்களில் மசூதிக்குள் வரக்கூடாது, குர்ஆனை தொடக்கூடாது, அவர்கள் தொழக்கூடாது. அவர்கள் இஸ்லாமிய மத சடங்கின்படி தீட்டுப்பட்டவர்கள் ஆவார்கள்.

முஸ்லிம் பெண்கள் "மார்க்க கடமையை நிறைவேற்றுவதற்கு தடையாக இருப்பது", பெண்களின் மாதவிடாய் என்று முஹம்மது கீழ்கண்ட ஹதீஸில் கூறியுள்ளார்.

புகாரி நூல் எண்: 304

. . .'இறைத்தூதர் அவர்களே! எங்களுடைய மார்க்கக் கடமையும் எங்களுடைய அறிவும் எந்த அடிப்படையில் குறைவாக உள்ளன' என்று பெண்கள் கேட்டனர்.

. . . **ஒரு பெண்ணிற்கு மாதவிடாய் ஏற்பட்டால் அவள் தொழுகையையும் நோன்பையும்விட்டு விடுவதில்லையா?'** என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டதற்கும் 'ஆம்!' எனப் பெண்கள் பதில் கூறினர். '**அதுதான் பெண்கள் மார்க்கக் கடமையில் குறைவானவர்களாக இருக்கின்றனர் என்பதற்கு ஆதாரமாகும்**' என்று நபி(ஸல்) கூறினார்கள்' என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) அறிவித்தார்.



**கேள்வி 15:** கிறிஸ்தவ பெண்கள் மாதவிடாய் நேரத்தில் பைபிளை படிக்கலாமா? சர்சுக்குச் சென்று தேவனை ஆராதிக்கலாமா?

**பதில் 15:** பெண்கள் மாதவிடாய் நேரத்தில் பைபிளை படிக்கலாம் மற்றும் சர்சுக்குச் சென்று தேவனை ஆராதிக்கலாம்.

இயேசுவின் கூற்றின் படி நம் மனதிலிருந்து வருகின்றவைகளே நம்மை தீட்டுப்படுத்தும். உடலிலிருந்து வருகின்ற வியர்வையானாலும் சரி, வேறு எதுவானாலும் சரி, அது நம்முடைய உடலை மட்டுமே அழுக்காக்கும், நம் மனதை அழுக்காக்காது. நாம் பைபிளை படிப்பதிலிருந்து எதுவும் நமக்கு தடை விதிக்காது.

சில நேரங்களில் சில கிறிஸ்தவர்கள் (ஆண்களானாலும், பெண்களானாலும்) கழிவறையில் உட்கார்ந்துக்கொண்டு மற்ற குடும்ப நபர்களுக்கு தெரியாமல் பைபிளை படிக்கிறார்கள். பைபிளை படித்தால் அடி உதை கிடைக்கும், வீட்டில் சண்டை நடக்கும் என்று பயப்படும்போது, இப்படி சிலர் பைபிளை படிப்பதுண்டு. எந்த இடம் என்பது முக்கியமில்லை, முழு மனதுடன் ஆர்வத்தோடு பைபிளை படித்து, புரிந்துக்கொண்டு, அதற்கு கீழ்படிவதையே இயேசு விரும்புகிறார்.

என்னைப்போன்று முஸ்லிம் குடும்பத்திலிருந்து பெற்றோருக்குத் தெரியாமல், இயேசுவை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டவர்கள், பைபிளை மறைந்து இருந்து படிக்கிறார்கள், எந்த இடம் என்று பார்ப்பதில்லை.

குர்ஆனைப் போன்று பைபிள் தேவையில்லாத சட்டங்களை கொடுப்பதில்லை.



**கேள்வி 16:** கிறிஸ்தவ பெண்கள் மாதவிடாய் நேரத்தில் பைபிளை படிக்கலாம், சர்சுக்குப் போகலாம் என்பதை புதிய ஏற்பாட்டிலிருந்து நிருபிக்கமுடியுமா?

**பதில் 16:** பைபிளிலிருந்து ஒரு அருமையான உதாரணத்தை எடுத்துக்காட்டுவதற்கு முன்பு, உங்கள் பகுதியில் உள்ள திருச்சபைகளை சிறிது கவனித்துப் பாருங்கள். திருச்சபைக்குச் செல்லும் பெண்களை நிறுத்தி இந்த கேள்வியை கேட்டுப் பாருங்கள் (கேட்கின்ற நீங்கள் பெண்களாக இருக்கவேண்டும்). உங்களுக்கு இதற்கான பதில் கிடைக்கும்.

பெண்கள் திருச்சபைக்கு வரும் போது, அவர்களின் மாதவிடாய் கணக்குப்படி, நாப்கின் கூட தங்கள் பைகளில் கொண்டுச் செல்கிறார்கள். தேவனை ஆராதிக்கும் நேரத்தில் ஒருவேளை, மாதவிடாய் ஏற்படுமானால் அமைதியாக ரெஸ்ட் ரூமுக்குச் சென்று வருகிறார்கள், அதன் பிறகு தேவனை ஆராதிக்கிறார்கள். திருச்சபை போதரும் ஒன்றும் சொல்வதில்லை, இயேசுக் கிறிஸ்துவம் இதற்கு மறுப்பு தெரிவிப்பதில்லை. (இதை ஏன் இப்படி வெளிப்படையாக எழுதுகிறீர்கள் என்று சில கிறிஸ்தவர்கள் என்னிடம் கேட்கக்கூடும். என்ன செய்வது முஸ்லிம்களுக்கு நம் வேதத்தின் மேன்மையை கற்றுக்கொடுக்க இப்படி எழுதவேண்டியுள்ளது, மன்னிக்கவும்)

கிறிஸ்தவம் உடல் சுத்தத்திற்கு முக்கியத்தும் கொடுப்பதில்லை, மனது சுத்தமாக இருப்பதையே விரும்புகிறது.

**பன்னிரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ள ஸ்திரீ:**

இந்த கீழ்கண்ட நிகழ்ச்சி மட்டும் பைபிளில் இல்லாமல் இருந்தால், சில கிறிஸ்தவர்கள் மாதவிடாய் பெண்கள் சபைக்கு வரக்கூடாது என்று கூட சொல்லியிருப்பார்கள்.

மத்தேயு 9:20. அப்பொழுது, **பன்னிரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ள ஸ்திரீ**: 21. நான் அவருடைய வஸ்திரத்தையாகிலும் தொட்டால் சொஸ்தமாவேன் என்று தன் உள்ளத்தில் எண்ணிக்கொண்டு, அவர் பின்னாலே வந்து, அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாள். 22. இயேசு திரும்பி, அவளைப் பார்த்து: **மகளே, திடன் கொள், உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது என்றார். அந்நேரம்முதல் அந்த ஸ்திரீ சொஸ்தமானாள்**.

யூத மார்க்கத்தின் மத சட்டங்களின் படி மாதவிடாய் பெண்கள் ஆலயத்திற்கு வரக்கூடாது, யாரையும் தொடக்கூடாது. ஆனால், இந்த பெண்ணுக்கு 12 ஆண்டுகளாக பெரும்பாடு நிற்கவில்லை. இருந்தபோதிலும், இயேசுவைத் தொட்டு சுகமானாள். இயேசு திரும்பி பார்த்து, இந்த நிலையில் இருக்கும் நீ தீட்டுள்ளவள், எப்படி என்னைத் தொடலாம் என்று கேட்கவில்லை, அப்பெண்ணின் விசுவாசத்தை மெச்சிக்கொண்டார்.

இயேசு தான் தேவனுடைய வார்த்தை, நம்முடைய கையில் இருக்கும் பைபிளும் தேவனுடைய வார்த்தை, இயேசுவை பெரும்பாடுள்ள பெண் தொடும் போது, கோபம் கொள்ளாதவர், எப்படி நாம் அவரை தொட்டால் கோபம் கொள்வார்?

**கிறிஸ்தவர்கள் பைபிளை தொடும் போதெல்லாம் அவர்கள் இயேசுவையல்லவா தொடுகிறார்கள்!**

புதிய ஏற்பாட்டில் எங்கும், மாதவிடாய் உள்ள பெண்கள் பைபிளைத் தொடக்கூடாது என்றோ, ஜெபிக்கக்கூடாது என்றோ, சபைக்கு வந்து மற்றவர்களோடு சேர்ந்து ஆராதிக்கக்கூடாது என்றோ கட்டளையிடவில்லை.

மருத்துவர்கள் கூற்றுப்படி, மாதவிடாய் என்பது 'கர்ப்பப்பையை சுத்திகரிக்கும் ஒரு நிகழ்ச்சி' ஆகும். மாதவிடாய் என்பது பிள்ளை பெருவதற்கு உடலை தயார்படுத்தும் ஒரு நிகழ்ச்சியாகும். பெண்களை தேவன் படைத்த போது, இந்த ஒரு விஷயத்தை அவர் தெரிந்தே வைத்திருக்கிறார். உலக நன்மைக்காகவும், பெருக்கத்திற்காகவும் அவர் இப்படி செய்துள்ளார் என்பதை நாம் மறக்கக்கூடாது.



**கேள்வி 17:** முஹம்மது தம் மனைவியை அடித்துள்ளாரா?

**பதில் 17:** முஸ்லிம் ஹதீஸில் முஹம்மது ஆயிஷா அவர்களை நெஞ்சில் அடித்ததாக ஒரு நிகழ்ச்சி வருகிறது.

தமிழில் இந்த ஹதீஸை "முஹம்மது நெஞ்சில் கையை வைத்து தள்ளினார்கள்" என்று மொழியாக்கம் செய்துள்ளார்கள். முஹம்மது அடித்தார் என்று தமிழாக்கம் செய்தால் தங்கள் நபிக்கு அவமானமாக இருக்கும் என்று எண்ணினார்களோ என்னவோ!

ஸஹீஹ் முஸ்லிம் நூல், எண்: 1774

1774. . . . அவர்கள் "ஓ நீதான் எனக்கு முன்னால் நான் கண்ட அந்த உருவமா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்" என்றேன். **உடனே அவர்கள் என் நெஞ்சில் கையை வைத்துத் தள்ளினார்கள். எனக்கு வலித்தது**.. . .

ஆங்கிலத்தில் "முஹம்மது என் நெஞ்சில் அடித்தார், அதனால் என் நெஞ்சில் வலி உண்டானது" என்று வருகிறது.

Sahih Muslim, 2127

. . .He said: Was it the darkness (of your shadow) that I saw in front of me? I said: Yes. **He struck me on the chest which caused me pain**, . . .

Source: **hadithcollection.com/sahihmuslim/Sahih%20Muslim%20Book%2004.%20Prayer/sahih-muslim-book-004-hadith-number-2127.html**

மனைவியை அடிக்க குர்ஆன் அனுமதிக்கும் போது, அதனை முஹம்மது பின்பற்றும் போது, ஏன் முஸ்லிம்களுக்கு உள்ளதை உள்ளதுபடியே தமிழாக்கம் செய்ய தர்மசங்கடமாக உள்ளது?

முஹம்மது முஹம்மதுவை அடித்தாரா? அல்லது தள்ளினாரா? என்பதைப் பற்றி மேலும் அறிய கீழ்கண்ட ஆய்வுக்கட்டுரையை படிக்கவும்: **Muhammad and Wife Beating: Catching Muslims In Another Lie Pt. 3**



**கேள்வி 18:** சஹாபாக்கள் தம் மனைவிகளை அடித்துள்ளார்களா? முஹம்மது இதற்கு அனுமதி அளித்தாரா?

**பதில் 18:** ஆம், சஹாபாக்கள் தங்கள் மனைவிகளை அடித்துள்ளார்கள். இதற்கு முஹம்மதுவும் அனுமதி கொடுத்துள்ளார்.

**இப்னு மாஜா ஹதீஸ்: (நம் தமிழாக்கம்)**

அல்லாஹ்வின் தூதர் கூறியதாக “இயாஸ் இப்னு அப்துல்லா இப்னு அபு துபாப் “ அறிவித்தார்:

**அல்லாஹ்வின் வேலைக்காரிகளை(பெண்களை) அடிக்காதீர்கள்**, ஆனால் உமர் அல்லாஹ்வின் தூதரிடம் வந்து கூறினார்: பெண்கள் தங்கள் கணவர்களிடம் தைரியமாகிவிட்டார்கள், **அவர் (நபி) அவர்களை அடிக்க அனுமதி அளித்தார்**. பின்னர் பல பெண்கள் அல்லாஹ்வின் தூதர் அவர்களின் குடும்பத்தை சுற்றி வந்து தங்கள் கணவர்களுக்கு எதிராக புகார் கூறினர். எனவே அல்லாஹ்வின் தூதர் அவர்கள் கூறினார்கள்: பல பெண்கள் முஹம்மதுவின் குடும்பத்திடம் வந்து தங்கள் கணவர்களுக்கு எதிராக புகார் அளித்துள்ளனர். **புகார் அளித்தவர்கள் உங்களில் சிறந்தவர்கள் அல்ல**.

ஆங்கிலத்தில்:

(709) Chapter: Regarding Hitting Women

Iyas ibn Abdullah ibn Abu Dhubab reported the Messenger of Allah (ﷺ) as saying:

Do not beat Allah's handmaidens, but when Umar came to the Messenger of Allah (ﷺ) and said: Women have become emboldened towards their husbands, he (the Prophet) gave permission to beat them. Then many women came round the family of the Messenger of Allah (ﷺ) complaining against their husbands. So the Messenger of Allah (ﷺ) said: Many women have gone round Muhammad's family complaining against their husbands. They are not the best among you.

Grade : Sahih (Al-Albani)

Reference : Sunan Abi Dawud 2146

In-book reference : Book 12, Hadith 101

English translation : Book 11, Hadith 2141

Source: **sunnah.com/abudawud/12/101**

முஸ்லிம் கணவர்கள் தங்களை அடிக்கிறார்கள் என்று புகார் செய்த பெண்கள் "முஸ்லிம் பெண்களில் சிறந்தவர்கள் இல்லை" என்று முஹம்மது கூறியுள்ளார். இது என்ன கொடுமை? பெண்களை அடிக்க அனுமதி கேட்கும் போது, அப்படிப்பட்ட ஆண்களுக்கு அறிவுரை கூறி தடுக்காமல், அனுமதி கொடுத்துவிட்டு, கடைசியாக பெண்களை முஸ்லிம் ஆண்கள் அடிக்க ஆரம்பித்தார்கள். புகார் செய்த பெண்களை "கெட்டவர்கள்" என்று முஹம்மது குற்றம் சாட்டுகின்றார். இந்த அநியாயத்தை வேறு எங்கேயாவது பார்க்கமுடியுமா?

**மகளுக்கு திருமணமான பிறகும் மகளை அடித்த அபூ பக்கர்:**

புகாரி நூல்: 6845 - ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(என் கழுத்தாணியை நான் தொலைத்துவிட்டதால் அந்தப் பயணத்தைத் தொடர முடியாமல் நீர் நிலைகள் இல்லாத ஓரிடத்தில் நாங்கள் தங்கநேரிட்டபோது என் தந்தை) அபூ பக்ர்(ரலி) அவர்கள் வந்து என்னை வேகமாக ஓர் அடி அடித்தார்கள். மேலும், 'ஒரு கழுத்தணிக்காக மக்களை (செல்ல விடாமல்) தடுத்துவிட்டாயே!' என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் மடிமீது தலைவைத்துக் கொண்டிருந்தால் நான் அசையாதிருந்தேன். **அபூ பக்ர்(ரலி) அவர்கள் (என்னை அடித்த அடியில்) எனக்கு ஏற்பட்ட வலியினால் எனக்கு மரணம் வந்துவிட்டதைப் போன்று இருந்தது...** (தொடர்ந்து) முந்தைய ஹதீஸைப் போன்றே அறிவிக்கப்பட்டுள்ளது.

பெண்களை அடிப்பதை ஒரு பெரிய குற்றமாக சஹாபாக்கள் கருதவில்லை, ஏனென்றால் முஹம்மது அனுமதியளித்தார், குர்ஆனும் அனுமதி அளிக்கிறது.

**முஸ்லிம் ஆண்களிடம் பெண்கள் படும் பாடு சொல்லி மாளாது என்கிறார், ஆயிஷா அவர்கள்:**

ஒரு முஸ்லிம் தம் மனைவியை அடித்த அடியினால், அப்பெண்ணின் தோல் பச்சைநிறமாக மாறியுள்ளது. இதனை அறிந்து முஹம்மதுவின் மனைவி ஆயிஷா வேதனைப்படுகிறார்.

புகாரி 5825. இக்ரிமா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ரிஃபாஆ அல்குறழீ(ரலி) அவர்கள் தம் மனைவியை மணவிலக்குச் செய்துவிட, அந்தப் பெண்ணை அப்துர் ரஹ்மான் இப்னு ஸபீர் அல்குறழீ(ரலி) அவர்கள் மணந்தார்கள். (பிறகு நடந்தவற்றை) ஆயிஷா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

(ஒரு முறை) அந்தப் பெண்மணி பச்சை நிற முகத்திரை அணிந்துகொண்டு என்னிடம் (வந்து தம் கணவர் அப்துர் ரஹ்மான் தம்மை துன்புறுத்துவதாக) முறையிட்டார். தம் கணவர் தம்மை அடித்ததால் தம் மேனியில் (கன்றியிருந்த) பச்சை நிற அடையாளத்தை எனக்குக் காட்டினார். (இக்ரிமா கூறுகிறார்:) பெண்கள் ஒருவருக்கொருவர் உதவுவது வழக்கம் தானே?) அந்த வழக்கப்படி (நபி(ஸல்) அவர்கள் வந்தபோது, 'இறைத்தூதர் அவர்களே!) நான் (ஆயிஷா) **இறைநம்பிக்கையுடைய பெண்கள் சந்திக்கும் துன்பத்தைப் போன்று எங்கும் பார்த்ததில்லை. இவருடைய மேனி (இவருடைய கணவர் அப்துர் ரஹ்மான் அடித்ததால் கன்றிப்போய்) இவரின் (பச்சை நிற முகத்திரைத்) துணியைவிடக் கடுமையான பச்சை நிறமுடையதாக உள்ளது**' என்று சொன்னேன்.



**கேள்வி 19:** ஒரு முஸ்லிம் ஆணிடம் அவன் ஏன் தன் மனைவியை அடித்தான் என்று கேட்கக்கூடாது என்று முஹம்மது கூறியுள்ளாரா?

**பதில் 19:** முஹம்மது கூறியதாக இப்னு மாஜா ஹதீஸில் ஒரு நிகழ்ச்சி வருகிறது.

உமர் ஒருமுறை தம் மனைவியை அடித்துள்ளார். அதனை மற்றொருவர் பார்த்து உமரை சமாதானப்படுத்தியுள்ளார். அந்த நேரத்தில், "ஒரு ஆண் தன் மனைவியை அடிப்பதை, ஏன் என்று கேள்வி கேட்கக்கூடாது?" என்று முஹம்மது கூறியுள்ளார் என்று உமர் சொன்னார்.

இப்னு மாஜா ஹதீஸ்:

It was narrated that Ash'ath bin Qais said:

"I was a guest (at the home) of 'Umar one night, and in the middle of the night he went and hit his wife, and I separated them. When he went to bed he said to me: 'O Ash'ath, learn from me something that I heard from the Messenger of Allah" **A man should not be asked why he beats his wife**, and do not go to sleep until you have prayed the Witr."' And I forgot the third thing."

Grade: Hasan (Darussalam)

English reference : Vol. 3, Book 9, Hadith 1986

Arabic reference : Book 9, Hadith 2062

இது ஹஸன் ஹதீஸ் ஆகும், அதாவது இது பலவீனமான ஹதீஸ் அல்ல, எனவே இதனை பின்பற்றலாம் என்பதாகும்.



**கேள்வி 20:** மனைவியை முகத்தில் அறையக்கூடாது என்று ஆண்களுக்கு இஸ்லாம் கட்டளையிடுகிறது, மிகப்பெரிய வரப்பிரசாதம் அல்லவா? அல்லாஹ்வின் அருள் அல்லவா?

**பதில் 20:** முஹம்மதுவிடம் "ஒரு மனைவிக்கு தன் கணவரிடம் என்னென்ன உரிமைகள் உள்ளன?" என்று கேட்டார்கள்.

இதற்கு முஹம்மது நான்கு காரியங்களைச் சொன்னார், அதில் ஒன்று "தன் கணவன் தன் முகத்தில் அறையாமல் இருக்கும் உரிமை அந்த மனைவிக்கு உண்டு" என்றார்.

இதன் அர்த்தமென்ன? ஒரு முஸ்லிம் கணவன் தன் மனைவியை எங்கு வேண்டுமானாலும் அடிக்கலாம், ஆனால் முகத்தில் மட்டும் அறையக்கூடாது. இது முஸ்லிம் பெண்களுக்கு இஸ்லாம் கொடுக்கும் மிகப்பெரிய உரிமையைப் பாருங்கள்.

**அபூ தாவுத்:**

(708) Chapter: The Rights Of A Woman Upon Her Husband

Narrated Mu'awiyah al-Qushayri:

Mu'awiyah asked: Messenger of Allah, what is the right of the wife of one of us over him? He replied: That you should give her food when you eat, clothe her when you clothe yourself, **do not strike her on the face**, do not revile her or separate yourself from her except in the house. Abu Dawud said: The meaning of "do not revile her" is, as you say: "May Allah revile you".

Grade : Hasan Sahih (Al-Albani)

Reference : Sunan Abi Dawud 2142

In-book reference : Book 12, Hadith 97

English translation : Book 11, Hadith 2137

### இப்னு மாஜா ஹதீஸ்:

It was narrated from Hakim bin Muawiyah, from his father, that:

a man asked the Prophet(ﷺ): “What are the right of the woman over her husband?” He said: “That he should feed her as he feeds himself and clothe her as he clothes himself; **he should not strike her on the face nor disfigure her**, and he should not abandon her except in the house (as a form of discipline).” (Hassan)

English reference : Vol. 3, Book 9, Hadith 1850

Arabic reference : Book 9, Hadith 1923

அடுத்த கேள்வியையும் படித்துவிடுங்கள்.



**கேள்வி 21:** அடிமைகளை மற்றும் காளையை அடிப்பது போன்று பெண்களை அடிக்கக்கூடாது? ஏன் அடிக்கக்கூடாது என்பதற்கு முஹம்மது சொல்லும் காரணம் என்ன?

**பதில் 21:** முஹம்மதுவின் சஹாபாக்களும், ஆரம்ப கால முஸ்லிம்களும், அடிமைகளை கொடுமையாக அடித்துள்ளார்கள், காளைகளையும் அடங்கவில்லையென்றால், அதிகமாக அடித்துள்ளார்கள். இது முஹம்மதுவிற்கு தெரிந்திருக்கிறது, மேலும் இவர் பார்த்தும் இருந்திருப்பார். முஸ்லிம்கள் அடிமைகளையும், மிருகங்களையும் அடிப்பது போன்று பெண்களையும் அடித்துள்ளார்கள்.

அடிமைகளை அடிக்கிறீர்கள் பிரச்சனையில்லை, காளைகளை அடிக்கிறீர்கள் பிரச்சனை இல்லை, மனைவிகளை இப்படி அடிக்கவேண்டாம் என்று முஹம்மது கூறியுள்ளார். ஏன் இப்படிப்பட்ட அருமையான ஆலோசனையை முஹம்மது கொடுத்தார் என்று பார்த்தால், அவர் சிறப்பான காரணத்தைச் சொல்லியுள்ளார்.

"முஸ்லிம்களே, நீங்கள் அடிமைகளை, காளைகளை அடிப்பது போன்று மனைவிகளை அடித்தால், அதே நாள் இரவில் எப்படி அவர்களோடு நீங்கள் உடலுறவு கொள்ளமுடியும்?". முஹம்மது இங்கு முஸ்லிம் பெண்களைப் பற்றி கவலைப்படுவது போன்று தெரியவில்லை, முஸ்லிம் ஆண்கள் அன்று இரவு உடலுறவு கொள்ளவேண்டுமென்றால், என்ன செய்வது? உடலில் காயங்களோடு உங்கள் மனைவி உங்களோடு உடலுறவு கொள்ளமுடியுமா? என்னே இறைத்தூதர், ஆண்களின் உடலுறவுக்காக மனைவியை மிருகங்களை அடிப்பது போன்று அடிக்கவேண்டாம் என்று அறிவுரை கூறுகின்றார்.

**பார்க்க ஸஹீஹ் புகாரி எண்கள்:4942, 5204 & 6042**

**4942. அப்துல்லாஹ் இப்னு ஸம்ஆ(ரலி) கூறினார்**

(ஒரு சமயம்) நபி(ஸல்) அவர்கள் உரையாற்றியதை செவியுற்றேன். . . . மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பெண்க(ளின் உரிமைக)ள் குறித்து பின்வருமாறு குறிப்பிட்டார்கள். **உங்களில் ஒருவர் தம் மனைவியை, அடிமையை அடிப்பது போல் அடிக்க முற்படுகிறார். (ஆனால்,) அவரே அந்நாளின் இறுதியில் (இரவில்) அவளுடன் (தாம்பத்திய உறவுக்காக) படுக்க நேரலாம். (இது முறையா?**). . . ..

5204. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: **நீங்கள் உங்கள் மனைவியரை அடிமையை அடிப்பது போன்று அடிக்க வேண்டாம். (ஏனெனில்,) பிறகு அதே நாளின் இறுதியில் (இரவில்) அவளுடனேயே (நாணமில்லாமல்) உறவுகொள்வீர்கள்**. என அப்துல்லாஹ் இப்னு ஸம்ஆ(ரலி) அறிவித்தார்.

6042. அப்துல்லாஹ் இப்னு ஸம்ஆ(ரலி) அறிவித்தார்: உடலில் இருந்து வெளியேறும் ஒன்(றான வாயுக் காற்)றைக் கேட்டு எவரும் சிரிப்பதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். மேலும், (பெண்கள் தொடர்பாக) '**நீங்கள் உங்கள் மனைவியை ஏன் காளையை அடிப்பது போல் அடிக்கிறீர்கள்? பிறகு நீங்களே அவளை (இரவில்) அணைத்துக் கொள்ள வேண்டிவருமே!**' என்றும் கூறினார்கள். ஹிஷாம் இப்னு உர்வா(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் 'அடிமையை அடிப்பது போல் (ஏன் அடிக்கிறீர்கள்?)' என்று காணப்படுகிறது.

நாணமில்லையா? இது இது முறையா? என்று ஹதீஸ்களில் நாம் பார்க்கும் வார்த்தைகள், அதனை தமிழாக்கம் செய்த முஸ்லிம்கள் எழுதியவை. முஹம்மதுவின் அறிவுரைகள் மிகவும் கீழ்தரமாக இருப்பதால், அதனை நியாயப்படுத்த இப்படிப்பட்ட வார்த்தைகளை முஸ்லிம்கள் சுயமாக எழுதுகிறார்கள்.

பெண்களுக்கு தீமையை விளைவிக்கும் அறிவுரைகளை கொடுப்பதற்கு பதிலாக, "முஸ்லிம் ஆண்களே, உங்கள் மனைவிகளை அடிப்பதை முழுவதுமாக தடுத்துவிடுங்கள், மனைவியை அடிப்பவன் நல்ல முஸ்லிமல்ல" என்றுச் சொல்லியிருந்தால், முஸ்லிம் பெண்களுக்கு நிம்மதி கிடைத்திருக்கும்.

**சுருக்கமாகச் சொல்வதென்றால்:**

- மனைவியை திருத்த குர்ஆன் முஸ்லிம் ஆண்களுக்கு உரிமை தருகிறது.
- முஹம்மது தம் மனைவியை அடித்துள்ளார்.
- சஹாபாக்கள் தங்கள் மனைவிகளை அடித்துள்ளார்கள்.
- அடிமைகளை முஸ்லிம்கள் மிகவும் கொடுமையாக அடித்துள்ளார்கள், அதாவது மிருகங்களை அடிப்பது போன்று அடித்துள்ளார்கள்.
- சஹாபாக்கள், முஸ்லிம்கள் தங்கள் மனைவிகளை அடிமைகளை/காளைகளை அடிப்பதுப் போன்று அடித்துள்ளார்கள்.

முஸ்லிம் ஆண்களின் உடலுறவுக்கு தடையாக இருக்கும் என்பதற்காக காளைகளை/அடிமைகளை அடிப்பதுபோன்று அடிக்கவேண்டாம் என்று முஹம்மது அறிவுரை கூறியுள்ளார். இப்படிப்பட்ட அறிவுரை யாரை காப்பாற்றும் முஸ்லிம் பெண்களையா? அல்லது ஆண்களின் உடல் பசியையா? கொடுமையிது!

இப்படிப்பட்ட முஹம்மதுவைத் தான் முஸ்லிம் ஆண்களும், பெண்களும் உயிருக்கு மேலாக நேசிக்கிறார்கள், பின்பற்றுகிறார்கள்.



**கேள்வி 22:** கணவன் உடலுறவுக்கு அழைத்தால், மனைவி வரவில்லையென்றால் காலைவரை மலக்குகள் அவளை சபித்துக்கொண்டு இருப்பார்களா?

**பதில் 22:** இஸ்லாம் ஆண்களின் மார்க்கம் என்றுச் சொன்னால் மிகையாகாது. ஆண்களுக்காக, ஆண்களால் உருவாக்கப்பட்ட மதம் இஸ்லாம் என்பது எவ்வளவு உண்மையாக இருக்கிறது. ஒரு பெண்ணிடம் அவளின் கணவன் உடலுறவு கொள்ள அழைக்கும்போது அவள் சம்மதிக்கவில்லையானால், வானத்திலிருந்து தேவதூதன் வந்து அவளை சபித்துக்கொண்டே இருப்பானாம். காடுகளில் வாழும் காட்டுமிராண்டி சமுதாயத்தில் கூட இப்படிப்பட்ட போதனைகள் இருக்காது என்று நம்பலாம். தேவத்தூதர்களுக்கு வேறு வேலையே இல்லையா? உலகில் உள்ள முஸ்லிம் வீடுகளில் இரவில் என்ன நடக்கும் என்று பார்த்துக்கொண்டே இருப்பது தான் அவர்களின் வேலையா? பொதுவாகவே ஆண்கள் தங்கள் மனைவிகள் மீது ஆதிக்கம் செலுத்துபவர்கள், இந்த இலட்சணத்தில், இப்படி மதத்தை சம்மந்தப்படுத்தி தீய போதனைகள் செய்தால், ஆண்களுக்கு சொல்லவா வேண்டும்? இதனால் தான் இஸ்லாமிய சமுதாயம் இன்னும் உருப்படாமல் பிந்தங்கியே இருக்கிறது. ஆண்களில் சரி பாதியாக இருக்கும் பெண்களை இழிவுப்படுத்தினால், நம்மை நாமே அழித்துக் கொள்வதற்கு சமம் ஆகும். மேலும், இப்படி பெண்களுக்கு எதிராக போதனை செய்த முஹம்மது ஒரு கள்ள நபி என்று கிறிஸ்தவர்கள் நம்புவது சரியே!

ஸஹீஹ் முஸ்லிம் எண்கள்: 2829 & 2830

**2829. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

ஒரு பெண் (தாம்பத்தியத்தைப் பகிர்ந்து கொள்ள மறுத்து) தன் கணவனின் படுக்கையை வெறுத்து (தனியாக) இரவைக் கழித்தால், **பொழுது விடியும்வரை அவளை வானவர்கள் சபித்துக் கொண்டிருக்கின்றனர்.** இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. **அதில், "அவள்(கணவனின் படுக்கைக்குத்) திரும்பும்வரை (சபிக்கின்றனர்)"** என இடம் பெற்றுள்ளது. Book : 16

2830. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! **ஒருவர் தம் மனைவியை அவளது படுக்கைக்கு அழைத்து, அவள் அவருக்கு (உடன்பட) மறுத்தால் வானிலுள்ளவன் அவள் மீது கோபம் கொண்டவனாகவே இருக்கிறான்; அவள்மீது கணவன் திருப்தி கொள்ளும்வரை**.

**ஒரு முஸ்லிம் ஆண் முதல் மனைவிக்கு தன் 100% அன்பை கொடுக்காமல், இரண்டாவது திருமணம் செய்துக்கொண்டால், அவன் அந்த இரண்டாவது மனைவியை விவாகரத்து செய்து, தன் முதல் மனைவியை நேசிக்கும் வரை வானவர்கள் அந்த முஸ்லிம் ஆணை சபித்துக்கொண்டு இருப்பார்கள் என்று முஹம்மதுவோ, குர்ஆனோ சொல்லியிருந்தால் இன்று இஸ்லாமை தூக்கி பிடித்திருக்குமே உலகம்!**



**கேள்வி 23:** மனைவியை அடிப்பதாக யோபு (பழைய ஏற்பாட்டு பக்தன்) அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்தாரா?

**பதில் 23:** குர்ஆனும் முஹம்மதுவும் பெண்களை அடிப்பதைப் பற்றி பல கேள்வி பதில்களை மேலே கண்டோம்.

யோபு என்ற பக்தன் தன் மனைவியை அடிப்பதாக அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்தாராம், எனவே அதனை நிறைவேற்றும்படி அல்லாஹ் யோபுவிற்கு கட்டளையிட்டான். பார்க்க குர்ஆன் 38:44.

குர்ஆன் 38:44. **“ஒரு பிடி புல் (கற்றையை) உம்கையில் எடுத்து, அதைக் கொண்டு (உம் மனைவியை) அடிப்பீராக;** நீர் (உம்) சத்தியத்தை முறிக்கவும் வேண்டாம்” (என்று கூறினோம்). நிச்சயமாக நாம் அவரைப் பொறுமையுடையவராகக் கண்டோம்; அவர் சிறந்த நல்லடியார் - நிச்சயமாக அவர் (எதிலும் நம்மை) நோக்கியவராகவே இருந்தார்.

இதே யோபு தான் பழைய ஏற்பாட்டிலும் வருகின்றார், ஆனால், அவர் இப்படி மனைவியை அடிப்பதாக எதையும் சொல்லவில்லை, மற்றும் மனைவி தவறு செய்யும் போது, கணவன் அவளை அடிக்கவேண்டும் என்றுச் சொல்லி பைபிளில் கட்டளை எதுவும் இல்லை.

**பெண்கள் பற்றி முஹம்மது கொண்டிருந்த வெறுப்புணர்வை, முந்தைய கால நபிமார்கள் பெயர்களில் இட்டுக்கட்டியுள்ளார் என்பதைத் தான் இது காட்டுகிறது.**

யோபுவின் மனைவிக்கு வலிக்கக்கூடாது என்றுச் சொல்லி, அல்லாஹ் ஒரு கைப்பிடி அளவு புல் எடுத்து அடிக்கச்சொல்கிறான், இது தான் அல்லாஹ்வின் அன்பு என்று முஸ்லிம்கள் கூறுவார்கள். உண்மையில் தன்னுடைய பக்தன் இப்படிப்பட்ட சத்தியத்தை செய்யும் போதே, அது தவறு என்று அல்லாஹ் எச்சரிக்க வேண்டும். தீய மற்றும் தவறான பொருத்தனைகளை செய்யவேண்டாம் என்று அல்லாஹ் யோபுவை கண்டித்து இருக்கவேண்டும். இதனை அல்லாஹ் செய்யவில்லை, எனவே முஸ்லிம்கள் பெண்களை அடிப்பதைப் பற்றி குற்ற உணர்வு இல்லாமல் இருக்கிறார்கள்.

**சத்தியங்களை முறித்துக்கொள்ள முஹம்மதுவிற்கு அனுமதி, யோபுவிற்கு ஏன் இல்லை?**

சில முஸ்லிம்கள் "ஒரு முறை சத்தியம் செய்தால், அதனை நிறைவேற்றியே ஆகவேண்டும், எந்த பரிகாரமும் செய்யமுடியாது" என்றுச் சொல்வார்கள். ஆனால், இவர்களுக்கு குர்ஆனில் 66:1-2ம் வசனங்களில் உள்ள விவரம் தெரியாது.

பார்க்க குர்ஆன் 66:1-2

66:1. நபியே! உம் மனைவியரின் திருப்தியை நாடி, அல்லாஹ் உமக்கு அனுமதித்துள்ளதை ஏன் விலக்கிக் கொண்டீர்? மேலும் அல்லாஹ் மிகவும் மன்னிப்பவன், மிக்க கிருபையுடையவன்.

66:2. **அல்லாஹ் உங்களுடைய சத்தியங்களை (சில போது தக்க பரிகாரங்களுடன்) முறித்து விடுவதை உங்களுக்கு ஏற்படுத்தியிருக்கிறான்;** மேலும் அல்லாஹ் உங்கள் எஜமானன். மேலும், அவன் நன்கறிந்தவன்; ஞானம் மிக்கவன்.

முஹம்மதுவிற்கு பரிகாரம் இருக்கும் போது, யோபுவிற்கு இல்லையா என்ன?

யோபுவிடம் அல்லாஹ் "இந்த ஒரு பரிகாரம் செய்துவிடு, மனைவியை அடிக்காதே, ஏற்கனவே பிள்ளைகளை இழந்து நீயும் உன் மனைவியும் வேதனையில் இருந்தீர்கள்", எனவே இந்த பரிகாரம் செய் என்று சொல்லியிருக்கலாம் அல்லவா?

இதிலும் பாருங்கள், முஹம்மதுவிற்கு எது லாபமோ, அதற்காக பரிகாரம் செய்யச்சொல்லி அல்லாஹ் கட்டளையிடுகின்றான். அது என்ன லாபம் முஹம்மதுவிற்கு? என்று கேள்வி எழுமானால், குர்ஆன் 66:1-2ம் வசனங்களின் பின்னணியை படித்துப் பார்க்கவும், அது என்ன லாபம் என்று புரியும்.



**கேள்வி 24:** முஹம்மதுவிற்கு ஒரு யூதப்பெண் விஷம் வைத்த மாமிசத்தை கொடுத்தாளாமே இது உண்மையா?

**பதில் 24:** உலகில் 750 கோடிக்கும் அதிகமான மக்கள் இன்று இருக்கிறார்கள். இவர்கள் அனைவரையும் ஒரு வரிசையில் நிற்கவைத்து, கீழ்கண்ட கேள்வியை கேட்டால், அவர்கள் ஒரே பதிலைத் தான் சொல்வார்கள்.

“நீங்கள் ஒரு பெண்ணின் தகப்பனையும் மற்ற குடும்ப நபர்களையும் மற்றும் அவளின் கணவரையும் கொன்றுவிட்டீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அதன் பிறகு தன் குடும்பத்தை இழந்த அந்தப்பெண் உங்களுக்கு ஒரு விருந்து வைக்கிறேன், வந்து சாப்பிடுங்கள் என்று சொன்னால், அந்த விருந்தை நீங்கள் ஏற்றுக்கொள்வீர்களா?”.

இந்த கேள்விக்கு, 750 கோடிக்கும் அதிகமாக உள்ள உலக ஜனத்தொகை, "எனக்கு நீ கொடுக்கின்ற உணவோ விருந்தோ வேண்டாம்" என்ற ஒரே பதிலைச் சொல்வார்கள்.

ஆனால், ஒரே ஒருவர் மட்டும், " ஒரு கட்டு கட்டலாம் என்று எண்ணி, அந்த விருந்தை சாப்பிடச் செல்வார்".

அவர் யார் தெரியுமா? அவர் தான் இஸ்லாமிய நபி முஹம்மது.

யாராவது மற்றவரின் குடும்பத்தை கொலை செய்துவிட்ட பிறகு, அந்த குடும்பத்தில் மீதமுள்ள ஒரு நபர், விருந்துக்கு அழைத்தால், அறிவுள்ளவர்கள் போவார்களா? உலகிலேயே இப்படிப்பட்ட முட்டாள்தனமான முடிவை எடுத்த பெருமை ஒருவருக்கே உண்டு.

விஷம் தோய்க்கப்பட்ட உணவை சிறிது உண்ட முஹம்மது:

**பார்க்க புகாரி எண்: 2617**

2617. அனஸ்(ரலி) அறிவித்தார். **யூதப் பெண் ஒருத்தி நபி(ஸல்) அவர்களிடம் விஷம் தோய்க்கப்பட்ட ஓர் ஆட்டை அன்பளிப்பாகக் கொண்டு வந்தாள்**. நபி(ஸல்) அவர்கள் அதிலிருந்து (சிறிது) உண்டார்கள். 'அவளைக் கொன்று விடுவோமா?' என்று நபி(ஸல்) அவர்களிடம்) கேட்கப்பட்டது. அவர்கள், 'வேண்டாம்' என்று கூறிவிட்டார்கள். நபி(ஸல்) அவர்களின் தொண்டைச் சதையில் அந்த விஷத்தின் பாதிப்பை நான் தொடர்ந்து பார்த்து வந்தேன்.

மேலும் இதைப் பற்றி அறிய படிக்கவும்: மாற்கு 16ன் சவால் - **https://www.answering-islam.org/tamil/authors/sam-shamoun/16.html**



**கேள்வி 25:** இயேசுவின் சீடர்களில் ஏன் ஒரு பெண் சீடரும் இல்லை?

**பதில் 25:** இந்த கேள்வியே தவறானது, இயேசுவிற்கு பெண் சீடர்களும் இருந்தார்கள் என்பதைத் தான் பைபிள் சொல்கிறது. அந்த காலத்தில் இருந்த யூத ரபீக்களுக்கு பெண் சீடர்கள் இருக்கமாட்டார்கள், ஆண்கள் மட்டுமே அவர்களுடைய சீடர்களாக இருப்பார்கள். ஆனால், இயேசு இந்த சுவரை இடித்துப்போட்டார், இயேசுவிற்கு அனேக பெண் சீடர்களும் இருந்தார்கள் என்பது தான் உண்மை.

**1) இயேசு கரங்களை நீட்டி "ஆண் மற்றும் பெண் சீட்ர்களை" குறிப்பிடுகிறார்**

ஒரு முறை இயேசு சீடர்களுக்கு (ஆண் மற்றும் பெண்) உபதேசித்துக் கொண்டு இருந்தார். அப்போது அவரது தாயாரும், சகோதரரும் அவரோடு பேசவேண்டும் என்று விரும்புகிறார்கள் என்று அவரிடம் சொல்லப்பட்டபோது, தம் கரங்களை தம் சீடர்களிடம் நீட்டி, "இதோ, என் தாயும் என் சகோதரரும் இவர்களே!" என்று சொன்னார்கள். இந்த இடத்தில் "தாயும்" என்ற பெண்பாலையும் அவர் குறிப்பிட்டுச் சொல்லி தம்முடைய சீடர்களில் பெண்களும் இருக்கிறார்கள் என்பதை குறிப்பிட்டார். இது மட்டுமல்லாமல், அடுத்த வாக்கியத்தில், "அவனே எனக்குச் சகோதரனும் சகோதரியும் தாயுமாய் இருக்கிறான்" என்று இரு பெண்பாலரை குறிப்பிடுகின்றார்.

**மத்தேயு 12:46-50**

46. இப்படி அவர் ஜனங்களோடே பேசுகையில், அவருடைய தாயாரும் சகோதரரும் அவரிடத்தில் பேசவேண்டுமென்று வெளியே நின்றார்கள். 47. அப்பொழுது, ஒருவன் அவரை நோக்கி: உம்முடைய தாயாரும் உம்முடைய சகோதரரும் உம்மோடே பேசவேண்டுமென்று வெளியே நிற்கிறார்கள் என்றான். 48. தம்மிடத்தில் இப்படிச் சொன்னவனுக்கு அவர் பிரதியுத்தரமாக: என் தாயார் யார்? என் சகோதரர் யார்? என்று சொல்லி, 49. தம்முடைய கையைத் தமது சீஷர்களுக்கு நேரே நீட்டி: இதோ, என் தாயும் என் சகோதரரும் இவர்களே! 50. பரலோகத்திலிருக்கிற என் பிதாவின் சித்தத்தின்படி செய்கிறவன் எவனோ அவனே எனக்குச் சகோதரனும் சகோதரியும் தாயுமாய் இருக்கிறான் என்றார்.

**2) ஒரு ரபீயின் பாதத்தில் உட்கார்ந்து கற்றுக்கொள்ளும் பெண் சீடர்கள்:**

ஒரு யூத ரபீ (ஆசிரியரின்) பாதத்தில் உட்கார்ந்து ஒரு ஆண் மாணவன் கற்றுக்கொள்வது போன்று, பெண்களுக்கு இயேசு உரிமை கொடுத்தார். இது யூத முறையிக்கு எதிரானதாகும்.

லூக்கா 10:39

39. அவளுக்கு **மரியாள்** என்னப்பட்ட ஒரு சகோதரி இருந்தாள்; அவள் இயேசுவின் பாதத்தருகே உட்கார்ந்து, அவருடைய வசனத்தைக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

இதுமட்டுமல்லாமல், இப்படிப்பட்ட போதனையை கேட்டுக்கொண்டு இருந்த மரியாளை ஆதாரித்தும் அவர் பேசினார் (பார்க்க லூக்கா 10: 40 - 42).

**3) இயேசு கிராமம் கிராமமாக சென்று ஊழியம் செய்யும் போது, பெண் சீடர்கள் இருந்தார்கள்:**

இயேசு ஊழியத்தின் காரணமாக, ஊர் ஊராக செல்லும் போது, 12 சீடர்களோடு கூட அனேக பெண் சீடர்களும் அவரோடுச் சென்று அவருக்கு ஊழியமும் செய்தார்கள்.

பார்க்க லூக்கா 8:1-3 (சில ஸ்திரீகளும், மகதலேனாள் மரியாளும், யோவன்னாளும், சூசன்னாளும்):

1. பின்பு, அவர் பட்டணங்கள்தோறும் கிராமங்கள் தோறும் பிரயாணம்பண்ணி, தேவனுடைய ராஜ்யத்திற்குரிய நற்செய்தியைக் கூறிப் பிரசங்கித்துவந்தார். பன்னிருவரும் அவருடனேகூட இருந்தார்கள். 2. அவர் பொல்லாத ஆவிகளையும் வியாதிகளையும் நீக்கிக் குணமாக்கின சில **ஸ்திரீகளும்**, ஏழு பிசாசுகள் நீங்கின **மகதலேனாள்** என்னப்பட்ட மரியாளும், 3. ஏரோதின் காரியக்காரனான கூசாவின் மனைவியாகிய **யோவன்னாளும்**, **சூசன்னாளும்**, தங்கள் ஆஸ்திகளால் அவருக்கு ஊழியஞ்செய்துகொண்டுவந்த மற்ற அநேகம் **ஸ்திரீகளும்** அவருடனே இருந்தார்கள்.

அந்த காலத்தில் யூத கலாச்சாரத்தில், பெண்கள் வீட்டைவிட்டு வெளியே சென்று யூத ரபீக்களிடம் கற்றுக்கொள்வது அனுமதிக்கப்படாமல் இருந்தது, ஆனால், இயேசு அந்த சூழ்நிலையை மாற்றி அமைத்தார்.

இதுவரை கண்ட விவரங்களிலிருந்து அறிவது என்னவென்றால், இயேசுவிற்கு அனேக பெண் சீடர்கள் இருந்தார்கள், அவரோடு அவர்கள் சென்று ஊழியம் செய்தார்கள், அவரிடம் மார்க்க விஷயங்களையும் கற்றுக்கொண்டார்கள். இயேசுவிற்கு பெண் சீடர்கள் இல்லை என்பது தவறான கூற்றாகும்.



**கேள்வி 26:** கேள்வியை மாற்றி கேட்கிறேன், இயேசுவிற்கு இருந்த உள்வட்ட 12 சீடர்களில் ஏன் ஒரு பெண் சீடர் இல்லை?

**பதில் 26:** இப்போது தான் சரியான கேள்வியை கேட்டு இருக்கிறீர்கள்.

இதற்கு முன்னால் கேட்ட கேள்விக்கான பதிலில், இயேசுவிற்கு ஆண்கள் மற்றும் பெண்களில் சீடர்கள் இருந்தார்கள் என்பதைக் கண்டோம். இயேசு ஆண் பெண் பேதம் பார்க்கிறவர் அல்ல என்பதைக் கண்டோம்.

ஆனால், தம்மோடு எப்போதும் இருந்து கற்றுக்கொள்ள 12 உள்வட்ட சீடர்களை தெரிவு செய்தார். இவர்கள் அனைவரும் ஆண்கள், இவர்களில் ஒரு பெண்ணும் இல்லை (மத்தேயு 10:2-4, மாற்கு 3:13-19, லூக்கா 6:12-16).

இயேசுவோடு கூட இருந்த அந்த 3.5 ஆண்டுகள், இவர்கள் தனிமையில் இயேசுவோடு இருந்தார்கள். இயேசு சொன்னது போன்று, இயேசுவிற்கு தலைசாய்க்க ஒரு நிரந்தரமான வீடு இல்லை.

13 பேர் அடங்கிய ஒரு ஆண் கூட்டத்தில், ஒரு பெண்ணை நாம் சேர்த்தால், அந்த பெண்ணுக்கென்று கீழ்கண்ட வசதிகளை அல்லது சௌகரியங்களை செய்துத் தரவேண்டும். மேலும், சில நடைமுறை சிக்கல்கள் இதில் உண்டு அவைகளைப் பாருங்கள்.

1) இயேசுவும் சீடர்களும் இரவு பகல் என்று பார்க்காமல், ஊருக்கு ஊர் சென்றார்கள். காட்டுபகுதியில் மனித நடமாட்டமில்லாத இடங்களில் தேவைப்பட்டால் இவர்கள் ஓய்வு எடுத்துக்கொண்டு இருப்பார்கள்.

2) ஒரு பெண் சீடர் கூட இருந்தால், அவளுக்கென்று தூங்க, ஓய்வு எடுக்க ஒரு வீடோ அல்லது வேறு ஒரு வசதியோ செய்து தரவேண்டியிருந்திருக்கும். இவர்கள் நாடோடிகள் போன்று வாழ்ந்தபடியினால், ஒரு பெண் சீடர் கூட இருப்பது, ஒரு சங்கடமாக இருந்திருக்கும்.

3) மாதவிடாய் போன்று பெண்களுக்கென்று இருக்கின்ற தனிப்பட்ட அசௌகரியங்களினால், சில பயணங்கள் தடைபட்டு இருந்திருக்கும். இயேசுவின் சீடர்கள் வெறும் ஆண்களாக இருந்தபடியினால், தேவைப்பட்ட நேரங்களில் இயேசு பிராயாணங்களை மேற்கொண்டார். ஒரு சீடர் பெண்ணாக இருந்திருந்தால், இந்த திடீர் பயணங்களில் சில தாமதங்கள் உண்டாகியிருக்கும்.

4) இயேசு தம் உள்வட்ட சீடர்களாக வெறும் ஆண் சீடர்களை தெரிவு செய்தபடியினால், அவரது எதிரிகள் அவர் மீது பெண்கள் சம்மந்தப்பட்ட வேறுவகையான குற்றச்சாட்டுக்களை வைக்கவில்லை. ஒரு வேளை பெண்கள் உள்வட்ட சீடர்களாக இருந்திருந்தால், அனேகர் இப்படிப்பட்ட குற்றச்சாட்டுகளை முன் வைத்திருப்பார்கள்.

இப்படி அனேக காரணங்களை நாம் சொல்லமுடியும்.

இது மட்டுமல்லாமல், இதற்கு ஒருஆவிக்குரிய அர்த்தமும் உள்ளது. இயேசுவின் 12 ஆண் சீடர்கள் என்பது இஸ்ரேலின் 12 வம்சங்களுக்கு நிழலாட்டமாக இயேசு

தெரிவு செய்தார். யாக்கோபின் 12 மகன்கள் தான் யூத 12 வம்சங்களாக கருதப்பட்டது. மேலும், ஆவிக்குரிய இஸ்ரவேலாகிய தேவனுடைய சபையை மேய்க்க 12 சீடர்களை அப்போஸ்தலர்களாக இயேசு நியமித்தார். இதைப் பற்றி மேலதிக விவரங்களை தேவைப்படும் பதில்களில் காண்போம்.



**கேள்வி 27:** ரோமன் கத்தோலிக்கர்களில் '(பெண்) துறவிகள்' இருக்கிறார்களே! கிறிஸ்தவம் இதனை அனுமதித்துள்ளதா?

**பதில் 27:** இல்லை, துறவரம் கிறிஸ்தவத்தில் இல்லை.

திருமணம் என்பது கனமுள்ளது என்று பைபிள் சொல்கிறது (எபிரேயர் 13:4) மற்றும் ஆதாமை ஏவாளை படைத்து, அவர்கள் கணவன் மனைவியாக இருக்க அவரே முதல் திருமணத்தையும் செய்து வைத்தார்.

ரோமன் கத்தோலிக்கர்கள் போப் என்றுச் சொல்லக்கூடியவர் திருமணம் புரியக்கூடாது என்றுச் சொல்கிறார்கள், ஆனால் முதல் போப் என்றுச் சொல்லக்கூடிய இயேசுவின் சீடர் பேதுரு திருமணம் ஆன ஒரு மனிதரே ஆவார்.

மேலும் இயேசுவின் சீடர் பேதுரு தம் மனைவியோடு கூட தான் ஊழியம் செய்தார் மற்ற சீடர்களும் இதனையே செய்தார்கள் (1 கொரிந்தியர் 9:5). இதில் வேடிக்கை என்னவென்றுச் சொன்னால், திருமணமான நபராகிய பேதுருவை சபைக்கு தலைவராக இயேசு நியமித்தார். இதற்கு எதிராக கத்தோலிக்க போதனைகள், அவருக்கு அடுத்தபடியாக வருகின்ற தலைவர்கள்(போப்) மற்றும் பாதியார்கள் துறவரம் இருக்கவேண்டும் என்றுச் சொல்வதில் என்ன நியாயம் இருக்கிறது.

கிறிஸ்தவம் ஆண் அல்லது பெண் துறவரம் பற்றி கட்டளை கொடுப்பதில்லை. ஒருவேளை ஊழியத்துக்கு வந்த பிறகு தம் துணை மரித்துவிட்டால், மறுபடியும் திருமணம் செய்வதும் செய்யாமல் அப்படியே இருந்துவிடுவதும், அவரவர் விருப்பம், ஆனால் கட்டாயமில்லை.



**கேள்வி 28:** பைபிளில் வாக்குபண்ணப்பட்ட ஆசீர்வாதங்கள் பெண்களுக்கும் பொருந்துமா?

**பதில் 28:** பைபிளில் தேவன் வாக்கு கொடுத்த ஆசீர்வாதங்கள் இரு பாலாருக்கும் கொடுக்கப்பட்டதாகும். சில வாக்குறுதிகள் ஆண்களுக்காக தனிப்பட்ட முறையில் இருக்கும், இதே போன்று பெண்களுக்கும் தனிப்பட்ட வாக்குறுதிகள் உள்ளன.

ஆனால், பொதுவாக சொல்லப்பட்ட ஆசீர்வாதங்கள், வாக்குறுதிகள் இருவருக்கும் பொருந்தக்கூடியதாகும்.

இதுமட்டுமல்ல, பைபிளில் ஒரு குறிப்பிட்ட நபர் பற்றி சில தீர்க்கதரிசனங்கள் கொடுக்கப்பட்டு இருக்கும்,அவைகள் அந்த நபருக்கு மட்டுமே கொடுக்கப்பட்டது, அது நமக்கல்ல.

லூக்கா 2:35ல் மரியாளுக்கு மட்டுமே ஒரு தீர்க்கதரிசனம் சொல்லப்பட்டது "உன் ஆத்துமாவையும் ஒரு பட்டயம் உருவிப்போகும் என்றான்". இயேசுவை சிலுவையில் அறையும் போது மரியாளின் துக்கத்தைப் பற்றி இது சொல்லப்பட்டது. இது நமக்கு அல்ல.

இஸ்ரவேலருக்கு சொல்லப்பட்ட அனேக ஆசீர்வாதங்கள், வாக்குத்தத்தங்கள் அவர்களுக்குச் சொல்லப்பட்டவைகள். ஆனால் பரிசுத்த ஆவியானவர் நமக்காக அவைகளை இன்று பயன்படுத்துகிறார்.

உதாரணம்:

**ஏசாயா 54:10**

10. மலைகள் விலகினாலும், பர்வதங்கள் நிலைபெயர்ந்தாலும், என் கிருபை உன்னைவிட்டு விலகாமலும், என் சமாதானத்தின் உடன்படிக்கை நிலைபெயராமலும் இருக்கும் என்று, உன்மேல் மனதுருகுகிற கர்த்தர் சொல்லுகிறார்.

இந்த வாக்குறுதி இஸ்ரவேலருக்குத் தான் கொடுக்கப்பட்டது, ஆனால் இதனை பரிசுத்த ஆவியானவர் நமக்காகவும் எழுதி வைத்திருக்கிறார் என்பதை நாம் மறக்கக்கூடாது.

தேவனிடத்தில் பட்சபாதமில்லை (ரோமர் 2:11). அவருக்குள் ஆணும் பெண்ணும் சமமே.



**கேள்வி 29:** ஒரு முஸ்லிம் பெண்ணும், அவளது குடும்பமும் இயேசுவை பின்பற்றினால், கிறிஸ்தவம் அவர்களுக்கு எவைகளைத் தரும்?

**பதில் 29:** இந்த கேள்விக்கான பதிலை பெண்களின் கண்ணோட்டத்தின் பார்க்கலாம். ஒரு முஸ்லிம் பெண் குடும்பத்தோடு இயேசுவை பின்பற்றினால்:

1) தன் கணவன் தன்னை அடித்தால், அவனை கேள்வி கேட்கலாம், சட்டத்தின் உதவியும் கேட்கலாம். இஸ்லாமில் இதற்கு வாய்ப்பு மிக மிக குறைவு.

2) தன் கணவன் இரண்டாவது திருமணம் செய்துக்கொள்ள அவனுக்கு அனுமதி சட்டத்தின் படி மறுக்கப்படும். இது இஸ்லாமிய பெண்களுக்கு கிடைக்காது, மனைவியின் அனுமதியின்றி, நான்கு பெண்களை ஒரு முஸ்லிம் ஆண் திருமணம் செய்யலாம்.

3) புர்கா என்ற உடையை அணியாமல் இருக்க உரிமை கிடைக்கும்.

4) படிப்பு, வேலை விஷயங்களில் முஸ்லிம் பெண்களுக்கு கிடைக்காத உரிமையும், அதிகாரமும் கிடைக்கும்.

5) அற்பமான காரியங்களுக்கு முஸ்லிம்கள் கொடுக்கும் தலாக்கிலிருந்து (விவாகரத்திலிருந்து) விடுபடலாம். இந்திய சட்டத்தின் உதவியை பெறலாம்.

6) அரபியில் குர்ஆன் வசனங்களை மனப்பாடம் செய்து, தினமும் ஐந்து வேளை அவைகளை மனப்பாடமாக சொல்லி தொழுகை நடத்தவேண்டிய அவசியமில்லை. இதற்கு பதிலாக, நமக்கு தெரிந்த மொழியில் தேவனை முழு இருதயத்தோடும், பலத்தோடும் தொழுதுக்கொள்ள வாய்ப்பு கிடைக்கும்.

7) நம்மை படைத்த தேவனை அப்பா என்றுச் சொல்லி அழைத்து உரையாடவும் (ஜெபிக்கவும்), அவரது வார்த்தைகளை தமிழில் படிக்கவும் புரிந்துக்கொள்ளவும் வாய்ப்பு கிடைக்கும். அரபியில் படித்தால் தான் நன்மை அதிகம் என்று முஸ்லிம்கள் சொல்வது போன்று, கிறிஸ்தவத்தில் இல்லை.

8) இஸ்லாமிய மூடபழக்கவழக்கங்கள், கட்டுக்கதைகளை நம்பவேண்டிய அவசியமில்லை.

9) ஜின்களைப் பற்றி பயப்படவேண்டிய அவசியமில்லை, தாயத்துக்கள் கட்டுவது, கண்திருஷ்டி பற்றி கவலைப்படுவது போன்ற தவறான கோட்பாடுகள் கிறிஸ்தவத்தில் இல்லை.

10) பரலோகத்தில் தனக்கு அனுமதி கிடைக்குமா? என்ற சந்தேகத்தோடு வாழாமல், இப்பூமியில் வாழும்போதே, இரட்சிப்பின் நிச்சயத்தோடு வாழலாம்.

11) பைபிளில் உள்ள வாக்குத்தத்தங்களை படித்து, தியானித்து உரிமை பாராட்டி மன நிம்மதியோடு வாழலாம். பரிசுத்த ஆவியானவரின் உதவியுடன் பிரச்சனைகளை, சவால்களை தைரியமாக எதிர்க்கொள்ளலாம்.

இயேசு உங்களுக்காக என்ன செய்வார் என்பதைப் பற்றி இன்னும் சொல்லிக்கொண்டே போகலாம், தேவைப்படும் போது மேலதிக விவரங்களைக் காண்போம்.



**கேள்வி 30:** இயேசு தனிப்பட்ட முறையில் பெண்களுக்காக என்ன செய்தார்?

**பதில் 30:** இயேசுவின் காலக்கட்டத்தில் இருந்த கலாச்சாரம் ஆண்கள் குடும்ப தலைவர்களாக இருந்த கலாச்சாரமாக இருந்தது. மேலும் யூத கலாச்சாரத்தில், பெண்களுக்கு எதிராக யூத ரபீக்கள் பல கட்டுப்பாடுகளை விதித்து இருந்தனர்.

யுத ஆண்கள் பெண்களை பொதுவில் வாழ்த்து கூறமாட்டார்கள், பெண்கள் ரபீக்களிடம் மாணவர்களாகச் சேர்ந்து தோராவை கற்கமுடியாது. முதல் நூற்றாண்டின் ஒரு யூத ரபி "தோராவை ஒரு பெண்ணுக்கு பாதுகாக்கும்படி கொடுப்பதைக் காட்டிலும், அதனை எரித்துவிடுவது நன்றாக இருக்கும்" என்றார். யூத ரபீக்கள் இப்படி பல சொந்த கட்டளைகளை உருவாக்கி வைத்திருந்தார்கள்.

இப்படிப்பட்ட சூழலில் தான் இயேசு வந்தார். இறையிலைப் பற்றி சிந்திக்காமல், உலக பிரகாரமாக இயேசு பெண்களுக்காக என்ன செய்தார் என்பதை சுருக்கமாக காண்போம்.

### 1) ஆபிரகாமின் குமாரத்தி: யூத தலைவர்களின் திமிருக்கு மரண அடி கொடுத்தார்:

ஒரு நாள் தேவாலயத்தில் ஒரு கூனியான பெண் இருந்தாள். இயேசு அவளை அழைத்து ஓய்வு நாளில் சுகமாக்கினார். ஓய்வு நாளில் இப்படி சுகமாக்கியது தவறு என்று யூத தலைவர்கள் குற்றம் சாட்டும் போது, இயேசு கீழ்கண்ட பதிலை கொடுத்தார்.

**லூக்கா 13:14-16**

14. இயேசு ஓய்வுநாளிலே சொஸ்தமாக்கினபடியால், ஜெபஆலயத்தலைவன் கோபமடைந்து, ஜனங்களை நோக்கி: வேலைசெய்கிறதற்கு ஆறுநாள் உண்டே, அந்த நாட்களிலே நீங்கள் வந்து சொஸ்தமாக்கிக்கொள்ளுங்கள், ஓய்வுநாளிலே அப்படிச் செய்யலாகாது என்றான். 15. கர்த்தர் அவனுக்குப் பிரதியுத்தரமாக: மாயக்காரனே, உங்களில் எவனும் ஓய்வுநாளில் தன் எருதையாவது தன் கழுதையையாவது தொழுவத்திலிருந்து அவிழ்த்துக் கொண்டுபோய், அதற்குத் தண்ணீர் காட்டுகிறதில்லையா? 16. இதோ, சாத்தான் பதினெட்டு வருஷமாய்க் கட்டியிருந்த **ஆபிரகாமின் குமாரத்தியாகிய இவளை** ஓய்வுநாளில் இந்தக்கட்டிலிருந்து அவிழ்த்துவிடவேண்டியதில்லையா என்றார்.

இதில் விசேஷம் என்னவென்றுச் சொன்னால், "**ஆபிரகாமின் குமாரத்தி**" என்று இயேசு கூறியதாகும். இவ்வார்த்தைகள் பைபிளில் இந்த ஒரு இடத்தில் மட்டுமே வருகிறது. பொதுவாக யூதர்கள் நாங்கள் "ஆபிரகாமின் குமாரர்கள்" என்றுச் சொல்லிக்கொள்ள பெருமைப்படுவார்கள். ஆனால் அந்த பெருமையை எடுத்து ஒரு பெண்ணுக்கு இயேசு கொடுத்தார், மட்டுமல்லாமல் ஓய்வு நாளில் அப்பெண்ணுக்கு அற்புத சுகத்தைக் கொடுத்தார். இதனால் யூததலைவர்களின் கோபத்துக்கு இயேசு ஆளானார்

**2) பொது இடங்களில் இயேசு பேசினார்:**

பொது இடங்களில் பெண்களோடு யூத தலைவர்கள் வாழ்த்து கூறமாட்டார்கள், பேசமாட்டார்கள். ஆனால், இயேசு இந்த நிலையை மாற்றினார், பெண்களுக்கு எதிராக நடந்துக்கொண்டு இருக்கும் கலாச்சார குறைபாடுகளை நீக்கினார்.

ஒரு விதவையின் மகன் மரித்துவிட்டான், அவனை புதைக்கச் சென்றுக்கொண்டு இருந்தார்கள். அந்த பெண்ணுக்கு வேறு துணையாரும் இல்லை, மகன் இல்லை என்பதை இயேசு அறிந்து, அவராகச் சென்று, மரித்த அந்த மகனை உயிரோடு எழுப்பி, தன் தாயிடம் ஒப்புவித்தார். இந்த அற்புதம் செய்யுங்கள் என்று அந்த பெண் இயேசுவிடம் கேட்கவில்லை என்பதை கவனிக்கவும்.

**லூக்கா 7:12-15**

12. அவர் ஊரின் வாசலுக்குச் சமீபித்தபோது, மரித்துப்போன ஒருவனை அடக்கம்பண்ணும்படி கொண்டுவந்தார்கள்; அவன் தன் தாய்க்கு ஒரே மகனாயிருந்தான். அவளோ கைம்பெண்ணாயிருந்தாள்; ஊராரில் வெகு ஜனங்கள் அவளுடனேகூட வந்தார்கள். 13. கர்த்தர் அவளைப் பார்த்து, அவள்மேல் மனதுருகி: அழாதே என்று சொல்லி,14. கிட்டவந்து, பாடையைத் தொட்டார்; அதைச் சுமந்தவர்கள் நின்றார்கள்; அப்பொழுது அவர்: வாலிபனே, எழுந்திரு என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார். 15. மரித்தவன் எழுந்து உட்கார்ந்து, பேசத்தொடங்கினான். **அவனை அவன் தாயினிடத்தில் ஒப்புவித்தார்**.

யூதர்கள் வெறுக்கும் சமாரியர்களின் ஒரு பெண்ணோடு இயேசு சுயமாகச் சென்று பேசினார்.

சீடர்களும் இதனைப் பார்த்து, என்ன செய்வதென்று புரியாமல் இருந்தனர். ஒரு பெண்ணோடு அதுவும் சமாரிய பெண்ணோடு ஏன் பேசுகின்றீர்கள்? என்று அவர்களுக்கு கேட்கத்தோன்றியது, இருந்தபோதிலும் அவர்கள் அமைதியாக இருந்துவிட்டார்கள்.

யோவான் 4:27. அத்தருணத்தில் அவருடைய சீஷர்கள் வந்து, **அவர் ஸ்திரீயுடனே பேசுகிறதைப்பற்றி ஆச்சரியப்பட்டார்கள். ஆகிலும் என்ன தேடுகிறீரென்றாவது, ஏன் அவளுடனே பேசுகிறீரென்றாவது, ஒருவனும் கேட்கவில்லை**.

**3) சுயமரியாதையும் இரக்கமும்:**

அந்த காலப்பெண்கள் மாதவிடாய் நேரங்களில் 'சுத்தமில்லாதவர்கள்' என்று கருதப்பட்டார்கள். அவர்கள் தொடுகின்றவைகளும் சுத்தமானவை அல்ல என்று சடங்குகள் யூத மார்க்கத்தில் இருந்தது.

லூக்கா 8:43-48ல் ஒரு அருமையான நிகழ்ச்சி பற்றி சொல்கிறது. 12 ஆண்டுகள் இரத்தபோக்கு உள்ள ஒரு பெண் இயேசுவைத் தொட்டு சுகமானாள். மேலும்,

இயேசு அவளை திட்டவில்லை, பதிலாக நீ சுகமானாய், உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது என்றார்.

லூக்கா 8:48. அவர் அவளைப் பார்த்து: மகளே, **திடன்கொள், உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது, சமாதானத்தோடே போ** என்றார்.

ஒரு யூத ரபியை இரத்தப்போக்கு உள்ள பெண் தொட்டாள், அவள் பல அவதூறுகளுக்கும், தண்டனைக்கு ஆளாகி இருப்பாள்.

இன்னொரு இடத்தில் விபச்சாரத்தில் பிடிபட்ட பெண்ணை இயேசு காப்பாற்றிய நிகழ்ச்சியிலும் பெண்களை இயேசு கனப்படுத்தினார். விபச்சாரத்தில் கையும் களவுமாக பிடிபட்ட பெண் என்று அழைத்து வந்தவர்கள், அந்த ஆணை மட்டும் ஏன் விட்டுவிட்டார்கள்? இதிலிருந்து அந்த யூதர்களின் உள் நோக்கம் புரிகின்றது.

இன்னும் பெண்களின் வேண்டுகோளுக்கு இணங்க இயேசு அற்புதங்கள் செய்ததைச் சொல்லலாம்.

**4) இயேசுவிற்கு இருந்த பெண் சீடர்கள்:**

யூத ரபீக்கள் பெண்களுக்கு வேதங்களை கற்றுத் தரமாட்டார்கள், ஆனால் இயேசு ஆண்கள் மற்றும் பெண்களுக்கு வேதத்தை கற்றுக்கொடுத்தார். இயேசுவிற்கு பெண் சீடர்கள் என்ற தலைப்பில் கொடுத்த பதிலையும் படித்துக்கொள்ளவும்.

**5) மேசியா, உயிர்த்தெழுதல்:**

ஒரு சமாரிய பெண்ணிடம் "நான் தான் மேசியா என்று நேரடியாக சொன்னார் இயேசு". லாசருவின் சகோதரியிடம் "நானே உயிர்த்தெழுதலும் ஜீவனுமாயிருக்கிறேன்" என்றார். மேலும் தாம் உயிர்த்தெழுந்த பிறகு முதலாவதாக 'ஒரு பெண்ணுக்கே தம்மை வெளிப்படுத்தினார்'.

இவைகள் மேலோட்டமாக எழுதினேன். இன்னும் பெண்களுக்கு கிறிஸ்தவம் கொடுத்தவைகள் பற்றி எழுதினால் அதிக பக்கங்கள் தேவைப்படும்.

முஹம்மது பெண்களை மிகவும் கேவலமாக பார்த்தார், நரகத்தில் அதிகமாக இருப்பவர்கள், தங்கள் கணவர்களுக்கு நன்றிகெட்டவர்கள், அறிவு குறைந்தவர்கள், என்று பலவாறு முஹம்மது பெண்களை சாடினார். இயேசுவோ, ஒரு பெண்ணுக்கு அற்புதம் செய்து, அவளை முன்னிட்டு "ஆபிரகாமின் குமாரத்தி" என்று தலைக்கனம் கொண்ட யூதர்களிடமே சாட்சி சொன்னார்.

இயேசுவின் நற்செய்தி நூலை நீங்கள் ஒருமுறையாவது படித்து இருக்கிறீர்களா? இயேசு என்ன பேசினார், யாருக்காக பேசினார்? இயேசு என்ன செய்தார்?

போன்றவைகளை அறிந்துக்கொள்ள நீங்களே நற்செய்தி நூல்களை படித்து தெரிந்துக்கொள்ளுங்கள்.

இயேசுவின் வாழ்க்கை வரலாறு (நற்செய்தி நூல்கள்): **மத்தேயு**, **மாற்கு**, **லூக்கா** & **யோவான்**

மூலம்: https://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/2020ramalan.html & http://isakoran.blogspot.com/